T. K. Soma.sunda

# பொருளடக்கம்.

# நூன்முகம்.

---

தமிழ்ப் பாஷையிலுள்ள நூல்கள் பெரும்பான்மையும்
செய்யுள் ரூபமாகவே யிருத்தலின் அவை கற்றோர்க்கே
பன்றி மற்றையோர்க்குச் சிறிதும் பயன்படா வாயின. ஆயி
னும் அந்நூற்களுட் பொதிந்துள கருத்தும், பொருள் நல
னும் அறிவை விருத்திசெய விரும்புவோர் யாவரும் அறி
ந்து ஆனந்தத்துடன் அநுபவிக்க வேண்டியனவாகும். ஆகை
பால் அவை எளிதில் அறியக்கூடிய வசன நடையிலிருப்பின்
பலர்க்கும் பயன்படுமெனக் கருதிச் சென்னைத் துரைத்தன
வித்தியா சாலையில் சென்ற நூற்றாண்டின் இடைக் காலத்
தில் திராவிடாந்திர பாஷா போதகரா யிருந்த போஸிவல்
துரையவர்களுடைய அனுமதிகொண்டு, அவ்வித்தியா சாலை
யில் பிரதம தமிழ்ப் பண்டிதரா யிருந்த அஷ்டாவதானம்
வீராசாமிசெட்டியா ரவர்கள், ஆடவரும் மகளிரும் ஆவசி
யமாக அறியவேண்டிய நூற்களிலுள்ள கருத்துக்களைத் தெய்
வங் கொள்கை, கற்பு நிலைமை, கற்றாய்ந் தொழுகல், நன்றி
மறவாமை முதலிய வகுப்பினுட்படுத்தி யெடுத்து விளக்கி
யும், அவற்றின் இடையிடையே சமயோசிதமும் சாதுரியமு
மாகிய பற்பல பழமொழிகளைச் சேர்த்தும், வாசிப்பவர்களு
டைய நாவிற்கு நயமும், செவிக்கின்பமும், மனதிற்கு மகிழ்
சியும், அறிவுக்கு விருத்தியும், பொழுது போக்கற்கு
விலாசமும் தரத்தக்க இனிய செந்தமிழ் நடையில் அவ்
விஷயங்களை ஒன்றன்பின்னொன்றாக அக்காலத்தில் இந் நகரில்
பிரசுரிக்கப் பட்டுவந்த தினவர்த்தமானி என்னும் பத்திரி
கையில் வெளிப்படுத்தி வந்தார். பத்திரிகையில் அவ்வாறு
பற்பல காலங்களில் வெளிப்பட்ட விஷயங்கள் பிறகு ஓரே
காலத்தில் அவற்றை விரும்புவோர்க்குப் பயன்படுவது அரு
மை யாகலின், அவற்றை யெல்லாம் தொகுத்து வேறு சில
விஷயங்களையும் நூதனமாகச்சேர்த்து அவையனைத்தையும்

# நூன்முகம்.

ஒரே புத்தகமாய் அச்சிட்டு அப்புத்தகத்திற்கு விநோத ரச மஞ்சரி என்னும் பெயருமிட்டார். இப்புத்தகம் அப்போதைக் கப்போது பதிப்பிக்கப் பட்டுவந்தகாலத்தில் பலவகையினும் திருத்த மடைந்துகொண்டே வந்தது. ஆயினும் இக்காலத்து வெளிவந்துலவும் பதிப்புக்களிற் காணப்படும் பலவித வழுக்களைக் களைந்து, விஷயங்கள் முனைபின நிற்கவேண்டிய முறையையு மனுசரித்து வேறு விநோதக் கதைகளையுஞ் சேர்த்து ஒரு நூதனப்பதிப்பு வெளிக்குக் கொண்டுவரவேண்டுமென்று விரும்பிய பல நண்பருடைய விருப்பத்திற் கிணங்க இது இப்போது வெளிப்போந்தது. இப்பதிப்பில் 'தமிழறியும் பெருமாள் கதை' என்னுமொரு விநோதக் கதையும் புதிதாகச் சேர்க்கப்பட்டுளது.

இம்மஞ்சரியிலுள்ள மலர்கள் பெரும்பான்மையும் அவற்றிற் கியற்கையாயுள்ள மணம் வீசுவதே யன்றியும், அவற்றைச் சுவைக்கப் புகும் ஆடவர் மகளிராகிய இருதிறத்தினர்க்கும் கரும்பின் ரசத்தினு மினிய ரசத்தைத் தந்து அவர்களைக் களிக்கச்செய்யு மென்பதற் கையமில்லை.

தென்மொழி ஆராய்ச்சிக் கழகம், சென்னை.
15-12-05.

கல்குளம். குப்புசாமிமுதலியார்

உ

கடவுள் துணை.

# விநோதரசமஞ்சரி.

## தெய்வங்கொள்கை.

இஃது,

"ஆஸ்திக" "நாஸ்திக" சம்வாதமாகச் செய்யப்பட்டது.

ஆஸ்திகன்.—"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்னும் குறள் வெண்பாவினால் "எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன, அதுபோல உலகு ஆதிபகவனாகிய முதலையுடைத்து" என்னும் கருத்தைத் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் வெளியிட் டருளியபடி, இம்மலை நெருப்புடைத்து புகையினா லென்பது போலவும், குடமுதலிய காரிய முண்டாவதற்குக் குயவனாகிய நிமித்தகாரணன் ஒருவன் உண்டாயிருத்தல் போலவும், இந்தப் பிரபஞ்சம் சிருஷ்டி, திதி, சங்காரம் என்கிற முத்தொழில் படுதலால் அக்காரியம் உண்டாவதற்கு நிமித்த காரணனாகிய ஈஸ்வரன் ஒருவன் உண்டென்றும், மண் போல் மாயையாகிய முதற்காரணம் உண்டென்றும், தண்ட சக்கரம்போல நல்வினை தீவினைகளாகிய துணைக் காரணம் உண்டென்றும், ஆன்மாக்கள் பந்தமோக்ஷத்தை அடையும்படி இவ்வாறு காரியப்படுமென்றும் அநுமானப் பிரமாணத்தாற் கொள்ளவேண்டும்.

நாஸ்திகன்.—அப்படியாயின் மூலப் பிரகிருதியாகிய மாயையினாலும் பரமாணுக்களினாலும் இவ்வுலகம் காரியப் படமாட்டாதா? சற்றே விவரணமாகச் சொல்லவேண்டும்.

ஆஸ்திகன்.—மாயையும் பரமாணுக்களும் அறிவில்லாத சடமாகையால் அறிவுடையவனாலே யல்லாமல் அவைகளால் உலகம் காரியப்படமாட்டா தென்பது நிச்சயம்.

நாஸ்திகன்.—ஆனால் அறிவுடைய ஜீவர்களால் உலகம் உண்டாகலாமே அதற் கென்ன தடை?

ஆஸ்திகன்.—ஒருதேரைச் செய்வதற்குப் பற்பலவேலைக் காரர் வேண்டியிருப்பினும் ரதாசாரியனாகிய ஒருவனாலேயே அந்த ரதம் உண்டாகிறதினாலும், உலகத்தை உண்டாக்குகை யாகிய காரியம் மிகவும் பெரிய காரியமாகையினாலும், அச்சீவர்களிடத்தில் கிஞ்சிஞ்ஞத்துவம் (அதாவது சிற்றறிவுடைமை) முதலிய தோஷம் உண்டாயிருக்கையாலும் அச்சீவர்களால் உலகம் காரியப்பட மாட்டாது. ஆகையால் பிரபஞ்சத்திற்குச் சர்வஞ்ஞனாகிய ஈசுவரன் ஒருவனே கர்த்தாவாகின்றான் என்பது நிச்சயம் என அறியக்கடவாய். மேலும் சாதாரணமாய் சூரியனால் அன்றி மலர்கின்றவை மலரவும், குவிகின்றவை குவியவும், உருகுகின்றவை உருகவும், இறுகுகின்றவை இறுகவுங் கூடுமோ? கூடாதே; அதுபோல, அகில லோகங்களுக்கும் தாமே காரணமாகித் தமக்கொரு காரணமும் இல்லாது விளங்கிய கடவுளாலன்றி, எல்லா உயிர்களும் அபிவிர்த்தி யடைவதற்கு உபயுக்தமாக மழைபெய்யும் பருவத்திற் பெய்யவும், வெயில்காயும் பருவத்திற் காயவும், காற்று வீசும்பருவத்தில் வீசவும், பொழுது விடியும் பருவத்தில் விடியவும், அஸ்தமிக்கும் பருவத்தில் அஸ்தமிக்கவும் கூடுமோ? ஏரி, குளம் முதலானவைகளை மனிதர்கள் உண்டாக்குகின்றார்களே; அளவிடப்படாத அகலமும் நீளமும் ஆழமும் உடைய கடலை அவர்களுண்டாக்க முடியுமா? அதை யாருண்டாக்கினார்கள்? ஏரி முதலானவைகளுக்குக் கரை யிருக்கின்றதே, கடலுக்குக் கரையுண்டா? அது எப்படித் தடைபட் டிருக்கின்றது? ஏரி முதலானவைகள் வற்றிப்போகின்றனவே, கடல் ஏன் வற்றவில்லை? சாமானியமாகிய ஓரேரி உடைந்தால் அநேக கிராமங்கள் முழுகிப் போகின்றனவே, பெரிய கடல் பொங்கி வந்தால் உலகம்

நிலைநிற்குமா? அதை அப்படி வராமல் தடுக்கின்றவர்க ளார்? ஒருகாலத்தில் காற்று விசையாக வீசினால் குன்றுகள், கோபுரங்கள், கோட்டைகள், கொத்தளங்களெல்லாம் நீர்த் தூளியாக அண்டபிண்டமுங் கலங்குகின்றனவே; அது பின் னும் கொஞ்சம் உக்கிரமாய் வீசுமானால் எது எப்படி யாகாது? சித்திரை, வைகாசி மாதங்களில் சூரியனுடைய கிரணத்தின் வெப்பம் சிறிது அதிகப்படுவதினால், உலகி னர்க்கு மிக்க சங்கடங்கள் உண்டாகின்றனவே; அது அந்த மிதத்திற்குச் சிறிது மேற்படுமானால் எவராலே சகிக்கக் கூடும்? அவைகளை அவ்வாறு அதிக்கிரமிக்க வொட்டாமல் அடக்குகின்றவர்களார்? மழைக்கு அதிவிருஷ்டி, அநா விருஷ்டி என்று இரண்டு தோஷமுண்டு; அவைகளில் அதி விருஷ்டி அதிக மழை, அநாவிருஷ்டி மழையின்மை; அதிக மழை பெய்தால் உலகம் நாசமாய்ப்போம், மழை யில்லா விட்டாலும் பயன்படாது; அப்படிப்பட்ட தோஷம் சம்பவி யாமல் சமவிருஷ்டியாய் மழை பெய்விக்கின்றவர் யார்?

"மாரி
வறப்பிற் றருவாரு மில்லை யதனைச்
சிறப்பிற் றணிப்பாரு மில்"

என நாலடி நானூற்றில் முனிவரருங் கூறினர். சூரியனும் சந்திரனும், பகலும் இரவும், வெயிலும் மழையும், உஷ்ண மும் சீதமும், கோபமும் பொறுமையும், ஜனனமும் மரண மும், நரகமும் மோட்சமும், ஒன்றற்கொன்று எதிரிடை யாக அமைக்கப்பட்டது யாராலே? பிணிகளை உண்டாக்கி அவைகளைத் தணிக்கும்பொருட்டு ஔஷதங்களைக் கற்பித்த வர் யார்? அறுகம்புல் நுனியில் தங்கிய பனித் துளியளவா கிய சுக்கிலமானது, சுரோணிதத்தோடு கூடி கரசரணாதி அவயவங்களாகத் திரிந்து உயிர்பெற்று எண்சாணுடம்பில் ஒரு சாணளவாகிய தாய் வயிற்றில் இரைப்பை, சலப்பை, மலப்பை முதலியவைகளுக்குரிய பல விடங்களுந் தவிர, மிகவும் சிறிதாகிய கருப்பாசயப் பையினிடத்திற் கட்டுண் டிருந்து, அதனால் உறுத்தப்பட்டு, உதராக்கினியில் வெந்து

அவ்விடத்தில் பூரிக்கும் சலத்தில் அமிழ்ந்து, பிரசூதவாயு முறித்துத்தள்ள, அதோமுகமாய்த் திரும்பி நெருக்குண்டு சிசுவாக உற்பவிக்கின்ற அதிசயத்தை என்னென்று சொல்லுகின்றது! இப்படிச் செய்கின்றவர் யார்? மனிதர் முகம் ஒன்றுபோல மற்றொன் றிருக்கலாகாதா? ஒவ்வொன்றும் வெவ்வேறு சாயலா யிருக்கின்றதே; மேலும் மனிதர்கள் தத்தங் குணம், ஓசை, செய்கை முதலியவைகளாலும் பல் வேறு வகைப்பட் டிருக்கின்றார்களே; அல்லாமலும் ஒரு உதரத்திற் றோன்றிய பல பிள்ளைகளில் ஒருவரேனும் உருவம், குணம், தொனி, செய்கை முதலியவைகளால் மற்றொருவரோடு ஒன்றுபட் டிருக்கக் காணோமே; இதெப்படிப் பட்ட ஆச்சரியம்? விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன வாகிய சாதிகளிலும், மரங்கள் செடிகள் கொடிகளிலும், அவைகளிலுள்ள மலர் காய் கனிகளிலும், மண் கல் முதலியவைகளிலும் எத்தனையோ பேதங்களும் குணரூப விசித்திரங்களும் இருக்கின்றனவே; இவை எவ்வாறு தோன்றின? மண்ணானது இறுகவும், நீரானது பரவவும், தீயானது சுடவும், காற்றானது சஞ்சரிக்கவும், ஆகாயமானது இவைகளுக்கெல்லாம் இடந்தரவும் செய்தவர் யார்? உய்த்துணருமிடத்தில் மேற்கூறியவை கடவுளின் செயலென்றே தோன்றுகின்றன வல்லவா?

• நாஸ்திகன்—விளங்காய் திரண்டிருப்பதும், களம்பழம் கறுத்திருப்பதும், பால் வெளுத்திருப்பதும் இயல்புதானே; மீன் குஞ்சுக்கு நீச்சும் மான்குட்டிக்கு வேகமும் பயிற்றினவர்க ளார்? ஒருவரும் இல்லையே. அந்தப்படி அனைத்தும் சுபாவமென் றெண்ணக்கூடாதா? இதைவிட்டு 'மொட்டந் தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுவது' போல இவையெல்லாம் கடவுள் செயலென்பதென்னை?

ஆஸ்திகன்.—காரணத்திலிருந்து காரியம் தோன்றுவதல்லது யாதொன்றும் நிஷ்காரணமாய்த் தோன்றாமையால், சுபாவமென்பது சரியன்று; குலாலன் நிமித்தத்தாலன்றிக் குடம் உதிக்கின்றதா? சூத்திரி யில்லாமற் பிரதிமை ஆடு

கின்றதா? மீகாமன் இல்லாமல் மரக்கலம் ஓடுகின்றதா? சாரதி யில்லாமல் தேர் நடக்கின்றதா? எங்கேயாவது சுக்கிலசுரோணித சம்பந்தமில்லாமல் கரு உற்பத்தியாகின்றதா? எந்தக்காலத்திலாகிலும் வித்தில்லாமல் விளைவுண்டாகுமா? "வித்தில்லாத சம்பிரதாயம் மேலுமில்லை கீழுமில்லை" என்று சொல்லக் கேட்டதில்லையோ? மேலும் "அவனன்றி யோரணுவுமசையாது" எனவு மிருக்கின்றதே; ஆதலால் எல்லாம் தெய்வச் செயலென்பதே சரியென்று ஒப்புக்கொள்ள வேண்டும்.

நாஸ்திகன்.—ஆ! ஆ! "வலியா னெடுத்ததே வாய்க்கால், வல்லவ னாடியதே பம்பரம்" என்பதுபோல, சூட்சும புத்தி யுடையவர்கள் அசுவ தாட்டியான தங்கள் வாக்கு வல்லமையால் வேண்டியபடிக்கெல்லாம் பேசுவார்கள்.

"சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கு மரிது"

என்பதுபோலச் சொல்லுகின்றீர், அஃதிருக்கட்டும். தெய்வமிருப்பது மெய்யானால் கண்ணுக்குப் புலப்பட மாட்டாதா? புலப்படாமையால் தெய்வம் உண்டென்பது பொய்யென்று தானே நினைக்கவேண்டியது.

ஆஸ்திகன்.—அது ஒருபோதும் பொய்யாக மாட்டாது. கண், அகக்கண் புறக்கண் என இரண்டாகும். அகக்கண் அறிவாகிய கண், புறக்கண் முகத்திலிருக்குங் கண். புறக்கண்ணினாற் கடவுளை நிஜஸ்வரூபமாய்க் காணவே கூடாது, அகக்கண்ணினால் ஒருவாறு காணலாம். அநேகர் அஞ்ஞான விருள்சூழ்ந்து அகங் குருடாயிருப்பதனால், அவர்களுக்கு அகக்கண்ணிலும் புலப்படுகிறதில்லை; ஆயினும் அவர்கள் தத்தமது உள்ளமாகிய தகளியில், அன்பாகிய நெய்யைப்பெய்து, அருளாகிய திரியையிட்டு, அறிவாகிய விளக்கை யேற்றினால், அவர்களுக்கும் கடவுள் புலப்படலாம்.

"முகத்துக் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்துக் கண்கொண்டு பார்ப்பதே யாநந்தம்"

எனவுஞ் சொல்லப்படுகின்றதே. அது மெய்யா யிராவிட்டால், வேத சாஸ்திரங்கள் பயில்வதும், ஆலயங்களுக்குச் செல்வதும், தெய்வத்தை வணங்குவதும், தீவினைக் கஞ்சுவதும், தாய்தந்தையைப் பேணுவதும், குருவின் உபதேசத்தை நம்புவதும், செங்கோலாணைக் கடங்குவதும், சத்தியந்தவறு திருப்பதும், மற்றும் பற்பல நற்கருமங்களைச் செய்வதும் எதற்கு? யாதோர் ராடங்கமுமில்லாமல் நிர்ப்பயமாய் அவரவர்கள் நினைத்தவண்ணமெல்லாம் நடக்கலாமே.

நாஸ்திகன்.—அப்படியா! இது "திண்ணைக்குத் தேள் கொட்ட மிடாவுக்கு நெறி கட்டினதாகவும்" "பாம்புக்கு மருந்துகேட்கத் தேளுக்கு மந்திரித்ததாகவும்" இருக்கிறது. தெய்வபயத்தைக் காண்பிக்கிற கருத்து வேறே, அது நீவிர் அறிந்திரில்லை. அப்படிக்காட்டாவிட்டால், ஒருவன் பொருளை மற்றொருவன் அபகரிப்பான்; ஒருவன் பெண்டிரை மற்றொருவன் இச்சிப்பான்; மாதா பிதா சொற்படி புத்திரர் நடவார்கள்; கணவனிஷ்டப்படி மனைவி இணங்காள்; அரசர்க்கு அதிகாரஞ் செல்லாது; பகைவர் மேலிடுவார்கள்; சண்டை, வழக்கு, சூது, வாது, கொலை முதலானவைகளை விலை கொடுத்து வாங்குவார்கள்; பெரியோர் சிறியோரென்னும் வரம்பு தவறிப்போம்; அப்புறம் உலகம் ஒருவழிப்படாது. தன்னரசு அச்சுக்கெட்டுத் தச்சுமாறிப்போம்; துக்கமன்றிச் சுகஞ் சனிக்கமாட்டாது; ஆனதுகொண்டு விவேகிகள் உலகம் கட்டுப்படுகிற நிமித்தமே "கௌபீன சம்ரட்சணார்த்தம் அயம் படாடோபஃ" என்பதுபோல, இந்த ஆடம்பரங்களையெல்லாம் உண்டாக்கிவைத்தார்களென்று வெட்ட வெளிச்சம் பட்டம்பகலாய்க் காண்கின்றதே; இதை விட்டு, "அப்பமெப்படி சுட்டாளோ அதற்குள் தித்திப்பை எப்படி நுழைத்தாளோ" என்பதுபோல எல்லாம் தெய்வச் செயலென்று பிரமிப்பானேன்? இதைவிட மனிதர் செயலென்று சந்தேகமில்லாமற் சொல்லலாமே.

ஆஸ்திகன்—இவ்வாறு பேசுகின்றவர்களுக்கும், போகமே மோட்சமும் துன்பமே நரகமும் என்கின்ற உலோகாய

தனுக்கும் என்னபேதம்? ஆயினும் இஃதென்ன விபரீதம்? "உள்ளக் கருத்து வள்ளலுக் கல்லவோ தெரியும்;" வாய் கூசாமல் மனிதர் செயலென்றால் ஒக்குமா? மனிதர் கிணறு தோண்டுவார்கள், தண்ணீர் சுரக்கச் செய்வார்களா? பயிர் செய்வார்கள், மழை பெய்விப்பார்களா? அவை தெய்வச் செயலாற்றானே ஆகின்றன; ஆதலால், தெய்வபலமே பலம்; மனுஷ பலமென்ன துர்ப்பலந்தானே? கல்லுக்கு ளிருக் கின்ற தேரையையும், முட்டைக்கு ளிருக்கின்ற பறவைக் குஞ்சையும் ஊட்டி வளர்க்கின்றவர் யாவர்? பாலிற் சுவை போலவும், நீருட் குளிர்ச்சிபோலவும், தீயிற் சூடுபோலவும், பூவில் மணம்போலவும், மணியுள் ஒளிபோலவும், சகல ஆத்துமாக்களுக்குள்ளும் கடவுள் அந்தரியாமியா யிருந்து பரிபாலிக்கின்றதை அறியாதவராய், "தெய்வந் தொழு" என்று ஔவையார் சொன்னதையும் மறந்து, கேவலம் நிரீசுரவாதியாய் வாது செய்வது என்னே?

நாஸ்திகன்.—வாது செய்தால் தெய்வம் கண்ணைக் குத்துமோ? நாவெழ வொட்டாதோ? இதெல்லாம் வீண் மனோராச்சியமே.

ஆஸ்திகன்.—ஐயோ கர்த்தாவே! "தெய்வ மிகழேல்" என்பதையும், "தெய்வஞ்சீறிற் கைதவமாளும்" என்பதையும் ஓராமல், அகங்காரத்தாற் கெடுமதி கண்ணுக்குத் தோற்றாமல், அஞ்சாத நெஞ்சு படைத்து, "வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ" என்று எளிதாக வாய்மதம் பேசலாமா? அபசாரமல்லவா? "அரசன் அன்றுகொல்லும் தெய்வம் நின்றுகொல்லும்" என்று பழமொழியும் இருக்கின்றதே.

நாஸ்திகன்.—ஏன் சும்மா பூச்சி காட்டுகிறீரே, இந்த வீண் பட்டிமிரட்டு எதுக்கு? "பனங்காட்டுநரி சலசலப்புக் கஞ்சுமா?" இதெல்லாம் "ஆயிரம் காலேயரைக்காற் பணந்தானோ?" என்ன செப்பிடுவித்தையும் காரடவித்தையு மாடவருகிறீர்? "உள்ளங்கை நெல்லிக்கனிபோல"

உண்மையாகக் கண்ணிலே கண்டதை விட்டு, என்றும் காணாததும் ஆரோ வேலையற்ற பைத்தியக்காரர் சொல்லக் கேட்டதுமாய், சொப்பனம்போலவும் இந்திரசாலம் போலவும் இருக்கிற உண்மையல்லாத பேய்ச் சமாசாரத்தையா நம்புகிறது?

ஆஸ்திகன்—அடடா! இதேது? தொண்டையும் மண்டையும் போம்படிப் போராட வேண்டிவந்ததே! கண்டதைத்தானா மெய்யென்று கொள்ளுகிறது? கண்டதைக் கொண்டு காணாததையும் உண்டென்று நிச்சயிக்கிறதில்லையா? அப்படியானால் தர்க்கம் மீமாஞ்சை முதலாகிய சாஸ்திரங்களில் அநுமானம், அர்த்தாபத்தி முதலிய சில பிரமாணங்களை முக்கியமா யெடுத்துரைப்பதென்ன? தாய் தந்தையர்களை யறியாத மைந்த னொருவன் தன்னைப் பெற்றவர்களைத் தானறியாததனால், நான் அந்தரத்தில் முளைத்து வந்து குதித்தே னென்பானோ? காட்சிப்பொருள், கருத்துப்பொருளென இருவகையாய்ச் சொல்வதுதானென்ன? மலை இலக்கா யிருக்க இல்லையென்னலாமோ? கடவுள் அருவாகியும், உருவாகியும், அணுவாகியும், மேருவாகியும், அணுவுக்கணுவாகியும், மேருவுக்கு மேருவாகியும், ஒரு சிறிய புல் நுனியையும் விட்டொழியாமல் மாதர் புருஷர், பாலர் விருத்தர், மூடர் விவேகிகள், பாதகர் புண்ணியர்களும், மற்ற பசு, பட்சி, மிருகங்களும், விருட்ச பாஷாணாதிகளும், யானைமுதல் எறும்பீறாகச் சொல்லப்பட்டனவும் ஆகிய ஸ்தாவர சங்கமங்கள் எல்லா வற்றிற்குள்ளும் பரிபூரணமா யிருக்கின்றார்; அவரில்லாத இடம் ஒன்றும் இல்லை.

நாஸ்திகன்.—நீர் சொல்லுகிறபடி கடவுள் எங்கும் பரிபூரணமா யிருக்கிறது மெய்யாகுமானால் அவர் பாவிகளுக்குள்ளும் இருக்கின்றார் என்பது சரியல்லவே.

ஆஸ்திகன்.—அவரெங்கு மிருக்கிறா ரென்பது சத்தியம்; ஆனால் அவர் நல்லோர் இருதயத்தில் மெல்லிய பூவின்மேல்

இருக்கிறது போலவும், தீயோர் மனத்திற் கடோமாகிய முள்ளின்மே லிருக்கிறது போலவும் இருக்கின்றா ரென்பதே அதன் கருத்து. இப்படியாகக் கொள்ளாவிடின் அவரைப் பூரணரென்பது பொய்யாய் முடியும். அன்றியும் கடவுளின் அபார சக்தியை யாரறிவார்? அவர் அண்டத்தை அணுவாகவும், அணுவை அண்டமாகவும், பகலை இரவாகவும், இரவைப் பகலாகவும், ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும் மாற்றுவார். ஒரு சிறிய கடுகுக்குள் பெரிய மலையை அடக்குவார். புலியைப் பசுப்போலச் சாதுவாக்குவார். ஆகாயத்தை ஒரு சுண்டு விரலால் மறைப்பார். பூமி முழுதும் அவருக்கொரு சிறுதுகள். கடல்நீரெல்லாம் அவருக்கொரு சிறு துளி. ஊழித்தீயோ அவருக்கொரு சிறு பொறி. சண்டமாருதமோ அவருக்கொரு சிறிய சுவாசம். அவர் ஆணாய்ப் பெண்ணாய் அலியாய், அவையன்றாய், ஒன்றாய், பலவாய், சத்து சித்து ஆநந்தமாய், நித்திய நிரஞ்சன நிர்க்கொந்த நிஷ்களமா யிருப்பவர். அவருக்குப் பிறப்பு இறப்பு, விருப்பு வெறுப்பு, ஒப்பு உயர்வு, இன்பம் துன்பம், பந்தம் மோட்சம் இல்லை. அவர் மகிமையைச்சொல்ல ஆர் தரம்? அவர் மனத்துக்கும் வாக்குக்கும் காரியத்திற்கும் அதீதமானவர். இப்படி எல்லாமிருக்க, இன்னமும் நம்பிக்கை யடையாதிருக்கலாமா?

நாஸ்திகன்.—"எல்லா மிருக்கிறது பெட்டியிலே, இலைக்கறி கடையச் சட்டியிலே" என்பதுபோல, கடவுளினிடத்திற் சகல அற்புதங்களும் உண்டாயிருந்தும், அவர் காட்சிக்கந்நியமா யிருப்பதனால், அவரைக் குறித்துச் சந்தேகப்பட வேண்டியதாய்த் தானே யிருக்கிறது. அதை நிவர்த்தித்துக் கொள்வதற்குத் தகுதியாகிய சாதநமும், சாட்சியும், ஆட்சியும் வேண்டாமா?

ஆஸ்திகன்.—அவசியம் வேண்டியதுதான்.

நாஸ்திகன்.—கடவுளைக் குறித்து உண்டான சாதநம் யாது?

ஆஸ்திகன்.—வேதமே; அதாவது தத்துவங்களை அறிவிப்பது என்பதாம்.

நாஸ்திகன்.—வேதம் எத்தன்மைத்து?

ஆஸ்திகன்.—வேதம் ஒருவராலும் உண்டாக்கப்படாமல் அநாதியாயிருந்து கடவுளால் பிரமாவுக்கு உபதேசிக்கப்பட்டு வழிவழியாய் உலகத்திற்பரவினது என்பதனால் அபௌருஷேயம் எனவும், சிலர் கடவுளது திருவாக்கிலிருந்து உண்டானது என்பதனால் பௌருஷேயம் எனவுஞ் சொல்லப்பட்டு, சகலமான பொருளையும் தனக்குள் மறைத்துவைத்திருப்பதனால் மறை என்றும், பல தர்மங்களையும் அறிதற்குக் கருவியாயிருப்பதனால் வேதம் என்றும், ஓதப்படுதலால் ஓத்து என்றும், கேட்கப்படுதலாற் சுருதி என்றும், எல்லா நூல்களுக்கும் ஆதியாதலால் ஆதிநூல் என்றும், மெய்ப்பட்டிருத்தலால் மெய்ந்நூல் என்றும், இன்னும் பற்பல காரணங்களால் ஆரணம் என்றும், எழுதாக்கிளவி என்றும், நிகமம் என்றும் பெயர் பெற்றதும் அல்லாமல், இராஜ கட்டளைக் கொப்பானதுமா யிருக்கின்றது.

நாஸ்திகன்.—வேதத்தை யாதுகாரணத்தால் இராஜ கட்டளைக்கு ஒப்பிடுவது?

ஆஸ்திகன்.—ஒரிராஜாவின் கட்டளைப்பத்திரம் வரக்கண்ட மாத்திரத்தில் அவனது செங்கோலின்கீழ் வாழுங்குடிகள் அந்நிருபத்தை இருகையினு மேந்திச் சிரசிற்றாங்கிக் கண்ணி லொற்றிக்கொண்டு, மனம் நடுங்கி அதிற் குறித்த வண்ணம் அக்கணமே ஆய்ந்தறிந்து தாமதியாமல் அம்முறையே செய்வதுபோல, எப்பொருட்கும் இறைவனாகிய கடவுள் அருளிய கட்டளைப்பத்திரம் என்னும் வேதத்தை அக்கடவுளாகவே பாவித்து, அதிற் சொல்லியபடி யாவருந் தடையின்றிச் செய்யவேண்டி யிருப்பதனால் அதை இராஜகட்டளைக்கு ஒப்பிடலாயிற்று.

நாஸ்திகன்.—வேதம் என்ன சொல்லுகின்றது?

ஆஸ்திகன்.—அது சீவாத்தும பரமாத்தும ஸ்வரூபம் இப்படிப்பட்டதென்றும், அவ்விரண்டிற்கும் அநாதியாயுள்ள சம்பந்தம் இப்படிப்பட்டதென்றும், அச்சம்பந்தத்திற்கு இடையே சம்பவித்த விரோதம் இன்னதென்றும் அந்த விரோதத்தை நிவர்த்திப்பதற்கு உபாயம் இன்னதென்றும், அவ்வுபாயத்தைச் செய்தவழி அடையும் பலன் இதுவென்றும் சொல்வதுமன்றி, சகல புவன சராசரங்களின் உற்பத்தி ஸ்திதி நாசங்களைக்குறித்தும், கர்ம பக்தி ஞான யோக முதலியவைகளைக் குறித்தும், சாங்கோபாங்கமாகச் சொல்லுகின்றது. அவை விரிக்கிற் பெருகும். மேலும், சகலரும் கடவுளைத் தேடியடைந்து அவருக் கடிமை பூண்டு அவரைத் தொழுது அவராணையை அதிக்கிரமிக்காமல் நம்பிக்கை கொண்டு அவர் சொன்னவண்ணம் அகப்பற்றுப் புறப்பற்றுக்களை ஒழித்துப் பக்தி வைராக்கியத்தோடு நடக்கவேண்டுமென்றும், அவ்வாறு நடந்தவர்கள் நோயாளியானவன் நல்ல மருத்துவனைத் தேடியடைந்து, அவன் சொல்லினிடத்தில் நம்பிக்கைவைத்து, அவன் கொடுத்தமருந்தை யுண்டு, அவன் வைத்த பத்தியபாகந் தவறாதிருந்தால், நோய்நீங்கிச் சரீரம் சௌஸ்தமாய் ஆரோக்கியம் பெறுவதுபோல பிறவித்துன்பம் அற்றுச் சுகமுற்றுப் பெரும்பேறு பெறுவார்களென்றும், ஆணவத்தால் தெய்வ கட்டளையைமீறி அந்தத் தெய்வத்தையே நிந்தித்து, அங்குசமில்லாத யானையும் கடிவாளமில்லாத குதிரையும்போல, ஒருவரையு மதியாமல் நினைத்தபடியெல்லாம் தன்னிஷ்டமாய் நடப்பவர்கள் யுக்தாயுக்தந் தெரியாமல் பாவச்செய்கையே பயின்று யாவராலும் இகழப்பட்டு இகபரார்த்தங்களை யிழந்து பற்றுக்கோடின்றி எரிவாய் நரகத்தில் வீழ்ந்து காலதத்துவ முள்ளவரைக்கும் மாறாத கொடிய வேதனையையே அநுபவிப்பார்களென்றும் சொல்லுகின்றது.

நாஸ்திகன்.—சாட்சி யார்?

ஆஸ்திகன்.—சான்றோரே.

நாஸ்திகன்.—சான்றோரைச் சாட்சி குறித்தீரே, அவர்களெத்தன்மையோர்?

ஆஸ்திகன்.—அவர்கள் காமமாகிய காட்டை அழித்து, வஞ்சனையாகிய வேரை அகழ்ந்து, பொய்யாகிய புதரை யெரித்து, கடினமாகிய கரம்பு திருத்தி, உண்மையாகிய எருவிட்டு, நெஞ்சமாகிய வயலில் தெய்வபத்தியாகிய விதை விதைத்து, பக்குவமாகிய நீர்பாய்ச்சி, விடயமாகிய பட்டிமாடு முதலியன மேயாமல் சாந்தமாகிய வேலி கோலிக் காத்து, பரமஞானமாகிய பயிர் தழைத்து, கருணையாகிய கதிர் தோன்றி, முத்தியாகிய முழுப் பலன் வாய்க்கப்பெற்றவர்கள்.

நாஸ்திகன்.—சான்றோர் கடவுளைப்பற்றி என்ன சொல்லுகின்றார்கள்?

ஆஸ்திகன்.—அவர்கள் அவர் சர்வஞ்ஞர், சர்வேச்சுரர், சர்வ நியந்தரர், சர்வாந்தரியாமி, சர்வகற்பிதர், சர்வசக்தர் என்றும், கோடை காலத்தில் கானலில் வருந்தி இளைத்து வெயர்த்துத் தாகித்துச் சோகித்து வந்தவர்களுக்குக் குளிர்ந்த தாமரையோடையும் அதனருகில் வடநிழலும்போல, தன்னால் பிறரால் தெய்வத்தால் வருவனவாகிய மூவகைத் தாபாக்கினியால் தகிக்கப்பட்டு, சனன விடாய்கொண்டு மூர்ச்சித்து, வேறு கதியின்றித் திருவுளமே தஞ்சமென்று உண்மையாய் நட்பிவந்து ஆசரித்தவர்களுக்குத் தாமே ரட்சகராய், கருணாநிதியாய், ஆபத்பாந்தவராய், தீனசகாயராய், இளங்கன்றுக் கிரங்கும் பசுப்போலவும் அருங்குழந்தைக் குருகும் அன்னைபோலவும் திருவுளமிரங்கி, அவர்கள் பாவித்தவண்ணம் அப்பொழுதே தோன்றி, அவர்களைக் கைநழுவவிடாது அஞ்சேலென்று ஆதரித்து, இம்மையிற் சகல பாக்கியமுந் தந்து, மறுமையில் ஈடுமெடுப்பு மில்லாத மோட்ச சாம்பிராச்சியத்தையும் அருளிச்செய்வார் என்றும் சொல்லுகிறார்கள்.

நாஸ்திகன்.—ஆட்சி என்ன?

ஆஸ்திகன்.—தொன்றுதொட்டு நெடுங்காலமாக எவ்வகையோரும் கடவுளின் கட்டளைக் குடன்பட்டு, அவரை யாசரித்து ஆராதித்து வருவதே.

நாஸ்திகன்.—"குத்தாத காதுக்கு ஊனமில்லையே". அது போலப் பரமாத்மாவானவர் ஜீவாத்மாவுக்கு விதிவிலக்குகளைக் கற்பிக்காமலிருந்தால், அவ்வாத்துமா துக்கமின்றித் தன்னிஷ்டமா யிருக்குமே. "சும்மாகிடக்கிற சங்கை ஊதிக் கெடுத்தான் ஆண்டி" என்பதுபோல, அதற்கு அவைகளைக் கற்பித்ததனு லல்லவோ "கொப்பத்தில் வீழ்ந்த யானையும், வலையிற் சிக்கிய மானும்" போல வினைவசப்பட்டுச் சங்கடப் படவேண்டிவந்தது.

ஆஸ்திகன்.—ஒரு மண்டலாதிபதி தன் னிராச்சியத்தார் தன தாணைக்கமைந்து நடக்க விரும்புவானே யல்லாமல், அவர்களை அவர்களிஷ்டப்படி விடமாட்டானல்லவா? அது போலக் கர்த்தாவும் சீவாத்துமாக்கள் தமது கட்டளைக் கமைந்து நடக்கவேண்டுமெனத் திருவுளங்கொண்டு, அவைகளுக்கு விதிவிலக்குகளை ஏற்படுத்தி, மேற்கூறிய அரசனைப் போல விதிப்படி நடந்த ஆத்துமாக்களை இரட்சித்தும் நடவாதவைகளைத் தண்டித்தும் வருகின்றார்.

நாஸ்திகன்.—"சுமப்பவனல்லவோ அறிவான் காவடிப் பாரம்". எது எப்படியானுலும் கடவுளுக்கென்ன? அவர் முகவுல்லாஸமாகத்தான் பார்த்துக்கொண்டிருக்கிறார். அது ஆத்துமாக்களுக்கல்லவோ பெரிய தலைச்சுமையா யிருக்கிறது; இதனுல் அவருக்குத் தோஷம் சம்பவியாதா?

ஆஸ்திகன்.—அரசன் தீங்கு செய்வாரைத் தண்டிப்பதனுல் அவனுக்குத் தோஷமுண்டா? இல்லையே, அதுபோலக் கடவுளுக்குந் தோஷமில்லை. துஷ்டநிக்கிரகஞ் செய்வது பயிர்க்குக் களையெடுப்பதுபோ லல்லவா? நல்லது, ஒருவனுக்குப் பால் பழங்களுடனே அறுசுவை யுண்டியும் அமைத்து உண்ணென்றுல், அதை உண்டு பசி தணித்துக்கொள்வது தகுதியாயிருக்க, அவனுண்ணுமற் பசியால் வயிறெரிந்து

வருந்தவேண்டிய தென்னை? புதுக்குடத்திற் பூரித்து வா சனை யூட்டிக் குளிரவைத்து இளநீர்போல மதுரமாய்த் தெளிந்த நன்னீரைப் பருகக்கொடுத்தால், அதனைப் பருகித் தாகத்தைத் தீர்த்துக்கொள்ளாமல் நாவறழ்ந்து நெஞ்சுலர்ந்து உழலவேண்டியதென்னை? பூந்தேனொழுகிப் புது மணங்கமழ, வண்டினம் மொய்த்து மகிழ்ந்திசைபாட, நாண் மலர் பூப்பப் பால்நிலாக் காய, வெண்மணலார்ந்து தண்ணிழல் வாய்ந்து, தென்றல் வீசுஞ் செழும் பூஞ்சோலை இருக்க, அதன்கட் சேர்ந்து தாபத்தை நீக்கிக்கொள்ள நினையாமல், "உள்ளடி சிவக்க வெள்ளிடை வெயிலில் விதிர் விதிர்த்துடலம் வெயர்த்து வெதும்ப" ஓயாது நடந்து நாய்போல் அலையவேண்டியதென்னை? பரம காருணியராகிய கடவுள், ஜீவாத்மாவானது மோக்ஷமாகிய பரமலாபத்தைப் பெற்றுச் சுகிக்கும்பொருட்டு அதற்கு உபயுக்தமாக எல்லாப் பிறப்பினுஞ் சிறந்த மானிடப் பிறப்பையும், தியானிக்க மனதையும், தரிசிக்கக் கண்ணையும், அஞ்சலிக்கக் கையையும், வணங்கத் தலையையும், துதிக்க வாக்கையும் கொடுத்தது மல்லாமல், விதிவிலக்குகளைத் தெரிந்துகொள்வதற்குக் கருவியாக வேதத்தையும், அவ்வேதத்தை ஆராய்ந்துணர்வதற்கு உணர்வையும், உணர்ந்தபடி ஒழுகத்தக்க சத்தியையும் கடாக்ஷித்தும் இருப்பதனால், அந்தப்படிநடந்து அப் புருஷார்த்தத்தைப் பெறுவது யுக்தமா யிருக்க அவ்வாறு நடவாமல், ஆற்றைக்கடக்க ஓடத்தைக் கொடுத்தால் முகத்துவாரத்துக்கு நேரே அந்த வோடத்தை ஓட்டிக் கொண்டுபோய், ஆழமாகிய நடுக்கடலிற் பாய்ந்து, அவமே கவிழ்ந்து மாய்வாரைப் போல, கடவு ளாணையை மீறிப் பேராசையாகிய பேய் பிடித்தாட்ட, துக்கத்துக் கிடமாகிய மண் பெண் பொன் முதலியவைகளைப் பெரும் பொருளாகக் கருதி, தனக்குக் கடவு ளருளிய அகக்கரணமும் புறக்கரணங்களையெல்லாம் வியர்த்தமாய் அவ்விஷயத்திற்கே அநுகூலமாம்படி உபயோகப்படுத்தி, கடவுள் விஷயத்தில் மிகவும் அபசாரப்பட்டு மகா அபராதியாகி, "அடாது செய்தவர்

படாது படுவர்" என்றபடி அதோகதியி லாழ்ந்து கெட் டொழிந்தால், அது அந்த ஆத்துமாவின் குற்றமே யல்லா மல் கடவுளுக்கென்னை? குற்றமாமா? அவரோ இயல்பா கவே தோஷமில்லாதவர், அவர்மேல் தோஷஞ் சாட்டுவது பெருந்தோஷமே.

நாஸ்திகன்.—ஐயோ! நான் இடும்பைக் கீன்ற தாய் போன்ற குடும்பச் சேற்றி லாழ்ந்து, பெண்டு பிள்ளை பண்ட பதார்த்தங்களையே சதமென் றெண்ணி, விழலுக் கிறைப் பதுபோல, அவற்றிற்கே உள்ளநாளெல்லாம் உழைத்து, லௌகிக லோலனாய்த் தெய்வ நிந்தையேயன்றி நினையளவா வது தெய்வசிந்தை யில்லாமல் வியர்த்த னானேனே? பள்ள மிறைத்தவர்களுக் கல்லவோ பங்குண்டு? உழுகிறகாலத்தில் ஊர்திரிந்து அறுக்கிற காலத்தில் அரிவாளை யெடுத்துக் கொண்டு புறப்பட்டால் என்ன கிடைக்கும்? ஆயினும் இனிச் செய்வது என்னை?

ஆஸ்திகன்.—உனக் கிதுவரையிலும் இல்லாத அநுதா பம் இப்பொழுதுதா னுண்டாயிற்று; அதனாற் கடவுளுக்குச் சித்தந் திரும்பிற்றென்று விளங்குகின்றது; உனக் கநுகூல காலம் பிறந்தது; நீ ஒன்றுசெய்; நீர்க்குமிழிபோலவும் மின் னல் போலவும் அநித்திய மாகிய சரீர ஸ்திதியை நினைத்து,

"உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ
கழப்பின் வாராக் கையுற வுளவோ"

என்பதையும் உணர்ந்து, வறிதிராமல் இயன்ற அளவு விரைந் துமுயன்று, சற்குருவைக் கண்டடைந்து, அவர் சந்நிதியில் உனது குறைகளையெல்லாம் விண்ணப்பஞ்செய்து, அவரநுக் கிரகம் செய்யும்வண்ணம் நடந்துகொண்டு, நல்லுபதேசம் பெற்று,

"சிறுவரையே யாயினுஞ் செய்தநன் றல்லால்
உறுபயனோ வில்லை யுயிர்க்கு"

என்பதனையும் ஓர்ந்து, ஆசாரியர் நியமனப்படி தர்மந் தவ றாது நடப்பதே நன்மையைப் பெறும் வழியாகும் என்று

ஆஸ்திகன் சொல்ல, அது நாஸ்திகனுக்குப் பசுமரத்தி லறைந்த ஆணிபோல மனத்திற் றைத் துறுத்த, பள்ளமடையில் திருப்பிப் பாய்ச்சிய நீர்போல அக்கணமே அவன் அதற் குடன்பட்டு, மனந்திரும்பி, அவவண்ணமே செவ்வையா யொழுகிக் கிருதார்த்தனாகி, சிலநாட் சென்றபின்பு ஒருநாள் ஆஸ்திகனை வந்து கண்டான். அவன் இவனை உம்முடைய க்ஷேமம் என்னவென்று கேட்க, ஐயா ஆஸ்திகரே! பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெற்றதுபோலவும், பரிசவேதியைச் சேர்ந்த சகலமான பொருளும் பொன்னானாற் போலவும், உமது சேர்க்கையினால் எனது துர்க்குணமெல்லாம் நீங்கிச் சுகப்பட்டேன். நீர் எனக்குச்செய்த உதவியோ மேகம்போலக் கைம்மாறு கருதாது செய்த உதவியா யிருக்கின்றது. இதைக் குறித்து உமக்கு நானென்ன செய்யப் போகிறேன் என்றுசொல்ல ஆஸ்திகன் நீர் எனக்கொன்றும் செய்யவேண்டியதில்லை. மேகமானது கடல் நீரை யுண்டு அதன் உவரை மாற்றி அதனை நன்னீராக்கிப் பெய்ய, அந்நீர் மறுபடியும் கடலிற் போய் விழுந்து பழையபடி உவர் நீராய் விடுவதுபோல, ஏதோ தெய்வ கடாக்ஷத்தினால் நீர் இப்பொழுது அனுசரித்திருக்கிற நன்மார்க்கத்தை விட்டுக் குணபேதப்பட்டுப் பூர்வமிருந்த பாழ்ங்குழிக் கொப்பாகிய துன்மார்க்கத்திற்றானே பின்னும் பிரவேசித்துப் பதிதனாய் விடாமல், வைராக்கிய சித்தத்தோ டிருப்பீரானால் அதுவே எனக்குச் செய்யும் பிரதி உபகாரமென்ன, நாஸ்திகன் நல்லதென்று அந்தப்படியே மர்க்கட முஷ்டியாய்ப் பிடித்தபிடி விடாதிருந்து நெறிதவறாது வாழ்ந்தான்.

தெய்வங்கொள்கை முற்றிற்று.

---

## கற்பு நிலைமை.



இது, நிறைந்த கல்விப் பயிற்சியுடைய ஐரோப்பிய துரைசானிமார்களுக்காக எழுதப்படாமல் பெரும்பாலும் இந்துதேசத்துப் பெண்களைக்குறித்தே எழுதப்பட்டது.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்"

என்னும குறளில், 'ஒருவன் பெறுதற்குரிய பொருள்களுள் மனையாளினும் உயர்வாகிய பொருள் எவை இருக்கின்றன? அவளிடத்தே கற்பென்னும் கலங்கா நிலைமை இருக்கப்பெற்றால்' என்று திருவள்ளுவநாயனார் திருவுளம் பற்றினமையால், உலகத்தில் பெண்களாய்ப் பிறந்தவர்கள் தமக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நால்வகைக் குணங்களும் ஏதுவாக, மனத்தைப் பலவிடத்துஞ் செலவிடாது நிறுத்திக் கற்புநிலை கெடாதிருக்கவேண்டும்.

அந் நான்கு குணங்களில் நாணம் என்பது வெட்கம்; மடம என்பது எல்லாம் அறிந்தும் அறியாதுபோல் இருத்தல்; அச்சம் என்பது என்றும் காணாததைக் கண்டவிடத்து அஞ்சுதல்; பயிர்ப்பு என்பது கணவரல்லாதவருடைய கை மேற்படின் உடம்பு அருவருத்தலாம்.

விவாகமில்லாமல் கன்னிகைகளா யிருக்கும் பருவத்தில் தாய் தந்தையர் ஆதினத்திலும், விவாகமானபின் கணவா ஆதினத்திலும், கணவர்க்குப் பிற்காலம் புத்திரர் ஆதினததிலும், புத்திரரில்லாவிட்டால் சகோதரர் ஆதினத்திலும் இருக்கவேண்டுமே அல்லாமல் ஒருபோதும் பெண்கள் சுவாதினப்பட்டு இருக்கலாகாது.

கொண்ட கொழுநனை மேன்மையாகப்பாவித்து அவன் சொல்லைத் தடுக்காமல், அவனுக்குக் கீழ்ப்படிந்து பக்தி விநயத்துடனே "பொய்சொன்ன வாய்க்குப் போஜனங் கிடையாது" என்பதனல், பொய் பேசாமல், கறந்தபால் கறந்தபடி அவன்விஷயத்தில் உண்மையாய், ஊசியுஞ் சரடும்போல மனைவி அவன் கருத்தின்வழி ஒழுகல் வேண்டும்.

"பெண்ணுதவுங் காலை பிதாவிரும்பும் வித்தையே
யெண்ணில் தனம்விரும்பு மீன்றதாய் - நண்ணிடையில்
[illegible]ரிய சுற்றங் குலம்விரும்புங் காந்தனது
[illegible]பொழுகு தான்விரும்பும் பெண்"

என்றபடி, பெண்ணைக் கட்டிக் கொடுக்கும்பொழுது, பிதா வித்தியா சாதுரியமுள்ள பண்டிதனுக்குக் கொடுக்கவேண்டு மென்றும், தாயானவள் மகள் ஐசுவரியவானுக்கு வாழ்க்கைப்பட வேண்டுமென்றும், சுற்றத்தார் நல்ல குலத்தன் வந்து வாய்க்கவேண்டு மென்றும, அந்தப்பெண் அழகிற் சிறந்தவனை நாம்வரிக்கவேண்டு மென்றும் நினைக்கிறதுண்டு; ஆயினும், அது அப்படியே வாய்க்குமா? தெய்வச் செயலின் படி யல்லவோ சம்பவிக்கும்.

"குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்."

எனபதனால், தன் புருஷன் அழகிருந்த ஊரில் குடியிருந்தறியாத குரூபியா யிருந்தாலும் அவனை மன்மதனாகவும், என்றும் அசாத்திய ரோகமுடையவனா யிருந்தாலும் அரோக திட காத்திரனாகவும், அவன் தம்பி நான்தான் எனக்கொன்றும் வாராது என்றவனைப்போல வயிற்றைக் கிழித்துப் பார்த்தால் வாரடையுங் கிடையாத நிரட்சர குட்சியா யிருந்தாலும் கல்விக் களஞ்சியமாகவும், பாண்டவர்களை நானறியேனா கட்டிற்கால்போல மூன்று பெயரென்று வாயினாற் சொல்லி இரண்டு விரல்காட்டி நிலத்தில் ஒரு கோடு கிழித்தவனுக்கு இவன் குறைந்தவனா என்னும்படி கணக்கறியாத நிர்மூடனா யிருந்தாலும் சேஷசாயிபோல நிபுணனாகவும், உண்ணச் சோற்றுக்கும் கட்டக் கந்தைக்கும் கதியற்று, அடுப்பிற் பூனைதூங்க, கையில் அரைக்காசுக்கும் வழியில்லாத அஷ்ட தரித்திரனா யிருந்தாலும் குபேரசம்பத்துடையவனாகவும், கொக்குப்போல நரைத்துக் கண்குழிந்து பல் வீழ்ந்து வில்லைப்போல வளைந்த முதுகுடைய கூனற் கிழவனா யிருந்தாலும் நல்ல யௌவனமுடைய விடனாகவும் பாவனைசெய்து, அவனை அவமதியாமல், அநவரதமும் பேணி நடக்கவேண்டும். "கல்லென்றாலுங் கணவன் புல்லென்றாலும் புருஷன்" என்கின்றார்களே.

"அன்னை தயையு மடியாள் பணியுமலர்ப்
பொன்னி னழகும் புவிப்பொறையும் - வன்னமுலை

வேசி துயிலும் விறன்மந் திரிமதியும்
பேசி லிவையுடையாள் பெண்"

என்றபடி, மனைவியானவள் கணவனுக்குத் தாதிபோலப் பாதப்பணிவிடை செய்பவளும், மந்திரிபோலச் சமயோசித மறிந்து நல்ல ஆலோசனை சொல்பவளும், ஸ்ரீமகா லட்சுமி போலப் பெண்ணைப் பெண் இச்சிக்கத்தக்க அதிரூப சௌந்தரியவதியும், பூதேவிபோலச் சலியாத பொறுமை யுடையவளும், வேசைபோலப் பர்த்தாவைச் சரசகேளி விநோதத்தாற் பிரியப்படுத்துகின்றவளுமா யிருப்பதன்றி, அன்புள்ள தாய்போல இனிய உணவுகளால் போஷிக்கின்றவளுமா யிருக்கவேண்டும். இதனாலல்லவோ "தாய்க்குப்பின் தாரம்" என்று உலகம் சொல்லுகின்றது.

ஒருவேளை கணவன் கோபித்தால் தானுங் கூடக்கோபியாமல் அவன் தனக்கு அநுக்கிரகித்ததாகவும், அவன் வைதால் அவனைத் தானும் வைதிடாமல் தன்னை அவன் வாழ்த்தினதாகவும், அவன் கைச்சேஷ்டை முதலிய தீமைகளைச் செய்தாலும் அவைகளை அப்படி நினையாமல் புருஷன சரசத்தால் செய்யுந் தாடனங்களாகவும் நினைத்துச் சாந்தத்தோடும் அவனருகில் வந்து, "கை எப்படி நோகின்றதோ பாதம் எப்படி உளைகின்றதோ!" என்று அவனுக்கு இதநு சொல்லி அவன் கோபத்தைத் தணிக்கவேண்டும். அவ்வாறு செய்தால் அவன் பொல்லாத மூர்க்கனானாலும் அவனுடைய கல்லான நெஞ்சுங் கரைந்து பரம சாதுவாவான் அல்லவா?

"வல்லடி வழக்கைச் சொல்லடிமாமி" என்று மாமியுடனே வாதுசெய்யாமல் அவளைத் தாய்போலக் கருதி, அவள் காலிலே பட்டது தன் கண்ணிலே பட்டதாகக் குடும்ப பாரத்தையெல்லாம் ஏந்திக்கொண்டு, அவளும் "கண்மணியாகிய என் செல்வ மருமகளைப்போலத் தேடக் கிடைக்குமா" என்று சொல்லும்படி அந்நியோந்நியமாய் நடந்து "மாமியார் மெச்சிய மருமகள் இல்லை" என்னும் பழமொழியைப் பறக்கச் செய்யவேண்டும்.

"இவள் எங்களுக்கு மருமகளா! அல்ல; எங்கள் குல தெய்வமே இப்படி உருக்கொண்டு வந்தது" என்று மகிழும்படி மாமனாரைத் தந்தைபோலப் பூசிக்கவேண்டும்.

கணவனுடைய சகோதரர்களைப் பேதமாய் எண்ணாமல் பரிபாலிப்பதனால் அவர்களில் மூத்தவர்கள் "இவள்தான் எங்கள் புத்திரி" என்றும், இளையவர்கள் "எங்களைப்பெற்ற தாய்" என்றும் கொண்டாடும்படி நடக்கவேண்டும்.

அவர்களுடைய மனைவிமார்கள் தன்னுடைய உசித குணத்தைக் கண்டு "இவள் பெண்கள் நாயகம், பெண்பாத்திரம், பெண்கள் பூஷணம், பெண்கள் மாணிக்கம், பெண்ணாமுதம்" என்று துதிசெய்யும்படி அவர்களைச் சகோதரிகளைப்போலப் பாவித்து அவர்களுடனே நேசித்துக் கலகமில்லாமல் வாழ்நாள் கழிக்கவேண்டும்.

நாத்தன்மார்களையும் வரிசை வண்மை தவறாமல் அவர்கள் "இந்தப் பாக்கியவதிபோலப் பெண்கள் எங்கும் காணக் கிடையார்கள்" என்று சொல்லும்படி நன்றாய் உபசரிக்க வேண்டும்.

அடிக்கடி அண்டைவீடு அயல் வீட்டிற்குப் போகலாகாது. எவ்விடத்திற்காவது யாதொரு நிமித்தத்தால் அவசியம் போகவேண்டி யிருந்தால் சிறிய பெண் குழந்தையையாயினும் வழித்துணையாகக் கூட்டிக்கொண்டு போகவேண்டுமே யல்லது தனிவழி நடந்து தண்டொரியாய்த் திரியலாகாது.

"பெண்ணொருத்தி பேசில் பெரும்பூமி தானதிரும்
பெண்ணிருவர் பேசில்விழும் வான்மீன்கள் - பெண்மூவர்
பேசி லலைசுவறும் பேதையே பெண்பலர்தாம்
பேசிலுல கென்னாமோ பின்"

என்றபடி, ஒரு பெண் பேசினால் பூமி அதிரும், இரண்டு பெண் பேசினால் நட்சத்திரம் உதிரும், மூன்று பெண் பேசினால் கடல் சுவறும், நான்கு பெண் பேசினால் உலகம் யாதாகுமோ என்பதனால், யாருடனும் இடி யிடித்ததுபோல உரக்

கப் பேசாமல் குயில் கூவுதல்போல் இனிய குரலாகக் கிளி கொஞ்சுவதுபோல் மிருது பாஷியமாய் வசனிக்க வேண்டும். "பெண்டுகள் இருப்பிடம் பெரிய சண்டையாம்" என்கிறார்களே! ஏன் அப்படிச்சொல்ல இடந்தரல் வேண்டும்.

"தாயைப் பார்த்துப் பெண்ணைக் கொள்" என்பதை நினையாமல், "நான் வீணை பிண்டமும் துண்டமும் சேர்ந்து, பிடாரியைப் பெண்டுபிடித்துப் பேயனானேனே, இதுவும என் தலைவிதியா" என்று வியசனப் படாமல், "பழம் நழுவிப் பாலிலே விழுந்தது" போலவும், "சர்க்கரைப் பந்தலிலே தேன்மாரி பெய்தது" போலவும், ஏதோ பாக்கிய வசத்தால் எனது இல்வாழ்க்கைக்கு நல்லபெண் வந்து வாய்த்தாளென்று தலைவன் மகிழும்படி இங்கித மறிந்து நடக்கவேண்டும்,

"கணவனுடைய தேட்டத்தில் வரும் பொருளளவிற்குத் தக்கபடி மிதமாய்ச் செலவு செய்யாமல் கண்டபடிக்கெல்லாம் கைகொண்டமட்டும் செலவழிக்கிறாளே, இவள் இன்னம் சிலநாளில் அவன் தலையில் ஓட்டைக் கவிழ்ப்பாள்" என்று பிறரால் இகழப்படாமல் திறமையுடனே சிறுகச் செலவு செய்யவேண்டும்.

உலகத்தார் இராக்காலத்திற் குதவியாகப் பகற்காலத்திலும், மழைக்காலத்திற் குதவியாகக் கோடைக்காலத்திலும், முதுமைக் குதவியாக இளமையிலும், மறுமைக்குதவியாக இம்மையிலும், வேண்டியவைகளைத் தேடிவைத்துப் பாதுகாப்பதுபோல, இல்வாழ்கைக்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் தருணமறிந்து சேகரித்துப் பின்னுக்கு ஆகுமென்று சிக்கெனக் காப்பாற்ற வேண்டுமேயல்லது வீட்டிலுள்ள பண்டங்களை அநியாயமாய் அழிக்கலாகாது.

"தந்தையா யினும்விழைவிற் றன்னுடனே
யொருவயிற்றிற் சார்ந்தாரேனும்
மைந்தரா யினுமிகவும் வனப்புடைய ரெனி
லவர்மேன் மடநல்லார்தம்
சிந்தைநடந்திடும்"

"ஏந்தெழில் மிக்கா னிளையா னிசைவல்லான்
கார்மையர் கண்கவர் நோக்கத்தான் - வாய்ந்த
நயனுடை யின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம்"

என்றிருக்கின்றன வாதலால், ஆணாய்ப் பிறந்தவர் பிதாவானாலும், சகோதர ரானாலும் பெற்ற பிள்ளையானாலும், மற்றும் எவரானாலும் அவர் இருக்குமிடத்தில் அச்சமின்றி இருக்கலாகாது. ஐந்து வயது ஆண்பிள்ளையைக் கண்டால் ஐம்பது வயது பெண்பிள்ளையும் எழுந்திருக்கவேண்டு மென்கிறார்களே.

அன்னம்போலவும், பெண்யானை போலவும், மிருது நடையாகத் தலை இறங்கித் தன் பெருவிரலை அல்லது நிலத்தைப் பார்த்தவண்ணமாய் நடக்கவேண்டுமே யல்லாமல் பூமி அதிரும்படி விசையாய் நடக்கலாகாது.

ஆண்மக்களிலாவது, பெண்மக்களிலாவது, துஷ்டர்களா யிருக்கின்றவர்கள் தாரதம்மியம் பாராமல், அக்கிரமமாய்ப் பேசினால் "அதென்ன உடம்பிலே காய்த்துத் தொங்குகிறதா? நாய் குலைத்து நத்தம் பாழாகுமா" என்று நினைத்துச் சாதுவாய்ப் போகவேண்டுமே யல்லாமல் அவர்களை எதிரிட்டுப் பத்திரகாளிபோல் அஞ்சாது "தெருச்சண்டைக்கு இடுப்புக்கட்டல்" ஆகாது.

கணவனாவது மற்றவர்களாவது ஏதேனும் ஒன்றைக் குறித்துப் பேசிக்கொண் டிருந்தால், "கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்" என்று தன்பாட்டிற்குத் தானிராமல் அது என்ன சமாசாரமென்று அவர்களை நேரே விசாரிக்கவும், சாடையாய்க் கதவின் சந்தில் அல்லது சுவர்க்கோழி போலச் சுவரின் அருகில் ஒன்றியிருந்து கேட்கவுங் கூடாது.

மணஞ்செய்யப்பட்டு மாமிவீட்டிற்கு வந்தவுடனே, "வந்ததே சிறுக்கி பந்தடித்தாள், வரவரச் சிறுக்கி கழுதை மேய்க்கிறாள்" என்னுங் கதைபோல், ஆரம்ப சூரத்துவமாய்ச் சர்வ ஜாக்கிரதையுடனே செவ்வையாய் நடந்து, பின்பு

வரவரச் சோம்பலை மேற்கொண்டு, கபடத்தினால் "எவனோ செத்தான் அவளேன் அழுதாள்" என்பதாக எவ்வளவாவது சமுசாரக் கூர்மை யில்லாமல் கடனற்றதுபோல் இருக்கலாகாது.

புருஷனுக்குப் பொருள் வரவின்றி அவன் வறுமைப் படுங் காலத்தில், "வருமுகிறவன் என்னசெய்வான் பானை பிடித்தவள் பாக்கியம்" என்று நினைக்க வேண்டுமே யல்லாமல், அவன் சம்பாதிக்க வில்லையென்று மனஞ் சலிக்கும்படி அவனைச் செல்லரிப்பதுபோல எந்நேரமும் வருத்தப்படுத்தலாகாது.

பரபுருஷருடைய முகத்தைப் பாராமலும், அவர்களுக்கெதிரே பல்லைக்காட்டிச் சிரியாமலும், பரிகாசஞ் செய்யாமலும், பக்குவமா யிருக்கவேண்டும். "சிரித்தையோ சீரைக் குலைத்தையோ" என்று பழமொழியும் இருக்கின்றதே.

தாமரை யில்லாத தடாகமும், சந்திர னில்லாத ஆகாயமும், புலவர்க ளில்லாத சபையும், அரச னில்லாத நாடும், மந்திரி யில்லாத அரசாட்சியும், படைத்தலைவ னில்லாத சேனையும், தெய்வஸ்துதி யில்லாத நாவும், நற்சிந்தை யில்லாத நெஞ்சும், கிருபை யில்லாத கண்ணும், பயனில்லாத சொல்லும், மணமில்லாத மலரும்போலக் கற்புடைய மனைவி இல்லாத வீடு சிறப்பின்றி இடுகாட்டுக் கொப்பாகும்.

கண்டவர்கள் கேட்டவர்களெல்லாம் "இந்த உத்தமி கல்வியிற் கலைமாதோ! கற்பினில் அருந்ததியோ! கருணையில் பார்வதியோ! பரிசுத்தத்திற் பவானியோ!" என்று அதிசயிக்கும்படி விவேகமும், கற்பும், இரக்கமும், சுசியும் உள்ளவளா யிருக்கவேண்டும்.

பெற்ற பிதா முதலானவர்கள் தங்கள் பெண்ணைப் பார்க்கும்படிப் பெண்வாழும் ஊருக்கு வந்தால், திடீரென்று அந்த வீட்டிற்குள்ளே நுழையாமல் பெண்ணின் நடத்தையை அண்டை அயலில் விசாரிப்பதுமுண்டு. அப்படி விசாரிக்கு மளவில் "அது கெட்டது மூதேவி, அவள் ஆருக்கும்

அடங்காள், ஒருவர் பேச்சுங் கேளாள், தான் பிடித்த முயலுக்கு மூன்றேகாலென்று சாதிக்கிறவள், அவள் எல்லாருடனும் வில்லங்கமாக வல்லிடிவழக்குத் தொடுக்கிற ஜகஜண்டி, அவள் மூன்றுலோகமும் பூசைகொண்ட முழுச்சாமியார், அவள் மானிடவடிவு எடுத்துவந்த யமராட்சசி, அவள்கொண்டவனைத் துரும்பளவாவது மதியாள். கொஞ்ச நாளில் அவன் கழுத்துக்கே கயிறுகொண்டு வருவாள், அந்தக் கரிகாலி முகத்தில் விழித்தாலும் கஞ்சி கிடைக்காது; அவள் அரைநொடியில் குடும்பத்தைக் கலைத்துக் குடுவை வேறாக்குவாள். அவள் வெல்லச்சதுரி, வல்லாளகண்டி, அவள் எல்லாருடைய தலைப்பாகையும் தாழ இறக்கிவைப்பாள்; அந்தக் கொள்ளையை என்னென்று சொல்லுகிறது, எண்ணத்தொலையாது ஏடிடங்கொள்ளாது, ஐயோ! தர்மதேவதைபோ லிருக்கிற நீங்கள் ஜன்மாந்தரத்தில் என்னபாவம் செய்தீர்களோ ? இந்தச்சண்டாளி வந்து உங்கள் வயிற்றில் பெண்ணாய்ப்பிறந்தாளே! செத்தாலும் தோஷமில்லை, இவள் பெற்றார் பிறந்தார் பெயரையும் கெடுக்கவந்தவள், இந்தக் கொடும்பாவி சமாசாரத்தைக் கேட்கிறது புண்ணியமா புருஷார்த்தமா? இவள் சரித்திரத்தைப்பேசிய வாயை நெய்விட்டுச் சுத்திபண்ணவேண்டும்" என்று நாராசத்தைக் காய்ச்சிக் காதிலே சொருகுவதுபோலச் சொல்லக்கேட்டால், அந்த வீட்டில் எடுத்தடிவையாமல் முன்னிட்ட காலைப் பின்னிட்டபடியே திரும்பிப்போய்ச் செத்ததிலே ஒன்றாகப் பாலைவார்த்துத் தலை முழுகிவிடவேண்டுமே யல்லாமல், மறுபடி அந்தத்திசையை எட்டிப் பார்க்கலாமா என்னும்படி துன்மார்க்கியா யிராமல், "அம்மம்மா! இந்தப் புண்ணியவதிக்கொப்பாக யாரைச் சொல்லலாம்? இவளுடைய நன்னடக்கை மற்றப் பெண்களுக்குத் தவஞ்செய்தாலும் வருமா? பெண்ணுக்கு மெல்லியலென்றும் நல்லாளென்றும் சொல்லப்படும் பெயர் இவளுக்கே தக்கது. இவளோ மாமியார் மாமனார் முதலிய சகலருக்கும் கண்ணுக்குக் கண்ணா யிருக்கின்றவள், இவள் பத்தரைமாற்றுத் தங்கம். பதிவிரதா சிரோ

மணி. லட்சுமிக்கும் இவளுக்கும் என்னபேதம்? இவள்மேல் கிஞ்சித்தாவது தோஷஞ் சொல்லலாமா? இவள் தீண்டா நெருப்பு. இவளைக்குறித்துத் தோஷஞ் சொன்ன நா அழுகிப்போம். இப்படிப்பட்ட பதிவிரதைகள் எங்குங் கண்டதில்லை. இவள் மழை பெய்யென்றால் பெய்யும். வெயில் காயென்றால் காயும். பொழுது விடியென்றால் விடியுமே. இவளைப்பெறும்படி நீங்கள் செய்த புண்ணியமே புண்ணியம்'' என்று, செவியில் அமிர்தத்தைச் சொரிவதுபோலச் சொல்லக்கேட்டால், அப்பொழுது புத்திரசந்தோஷம் புத்திரியென்று நினைத்துச் சந்தோஷித்து அவர்கள் பெண்ணுக்கு மாமிவீட்டில் தாராளமாய்ப் பிரவேசிக்கும்படி அவள் வரன்முறை தவறு தொழுகவேண்டும்.

> "இல்லா ளகத்திருக்க வில்லாத தொன்றில்லை
> இல்லாளு மில்லாளே யாமாயின்"

என்பதனால் ஒருவனுடைய மனைவியிடத்தில் நற்குண நற்செய்கைகள் உண்டாயிருந்தால், அம் மனையினிடத்தில் ஒன்றும் இல்லாதிருந்தாலும் எல்லாம் உள்ளனவேயாம்; அவனிடத்தில் அவை இல்லாதிருந்தால் அங்கெல்லாம் இருப்பினும் ஒன்றுமில்லது போலாம்.

> "பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர்ப் பெருஞ்சிறப்புப்
> புத்தேளிர் வாழு முலகு"

என்பதனால், இம்மையில் கணவனைப் பூசித்த பெண்கள் மறுமையில் சுவர்க்கத்தில் தேவர்களால் பூசிக்கத்தக்க பெருஞ்சிறப்பு உடையராவர்; மேலும்,

> "சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
> நிறைகாக்குங் காப்பே தலை."

என்றிருத்தலால், பெண்கள் தமது கற்பினால் காக்குங் காவலே காவலாவதன்றி, அவர்களைக் கணவர் சிறையினால் காக்குங் காவல் என்ன பயனைச் செய்யும்? "அறைகாத்தான் பெண்டிழந்தான்" என்றுஞ் சொல்லப்படுகின்றதே.

"விலைமகட் கழகுதன் மேனி மினுக்குதல்"

என்பதனால், குலமகட்கு அது விரோதமென்று நினையாமல் ஜன்மாந்தர சுகிர்த முண்டாயிருந்தால், தன் கணவன் கண்டு களிக்கும்படி, தன்னை விலையுயர்ந்த வஸ்திர பூஷணங்களால் அலங்கரித்துக் கொள்ளலாம். அவை இல்லாவிடில் இல்லையே யென்று ஏங்கிச் சுமங்கலி தன்முகம் பாழடைய விடாமல், மஞ்சள் குங்கும மாவது முகத்தில் அணியவேண்டும்.

"மண்ணாங்கட்டி மாப்பிள்ளைக்கு எருமுட்டை பணியாரம்" என்பதாகத் தாறுமாறாய்ச் செய்யாமல், காலமறிந்து கிரமமாகப் புருஷனுக்கு ஸ்நானானுஷ்டானங்களுக்கு இடம் பண்ணி, வேளைக்கேற்ற பக்குவமான போஜன தாம்பூல வஸ்திர பூஷணாதிகளும் தடையில்லாது அமைக்கவேண்டும்.

மனைவியானவள் சகலவித பூஷணங்களையும் துறந்திருந்தாலும், மங்கல சூத்திரத்தை மாத்திரம் துறக்கக் கூடாதது போல, தந்தை தாய் முதலிய பந்துக்களை யெல்லாம் விட்டுப் பிரிந்தாலும் கணவனை மாத்திரம் பிரிந்திருக்கலாகாது. அற்பமாகிய பறவைகளில் அன்றிற் பெடையுமல்லவோ தன் சேவலைப் பிரிந்திருக்கச் சகியாது உயிர் விடுகின்றது.

"பாத்திரமறிந்து பிச்சையிடு கோத்திரமறிந்து பெண்ணைக்கொடு" என்பதனால், அறிவொழுக்கங்களில் சிறந்த சான்றோர்களை தானபாத்திரர்களாயினும், பெரிய வீடென்று பிச்சைக்குப்போனால் கரியை வழித்து முகத்திலே தடவினார்களென்று, எளியவர்கள் ஏளனஞ்செய்யாது அவர்கள் தேகியென்று வந்தால் நாஸ்தியென்று சொல்லாமல் ஸ்ராத்தாதிகளில் ராட்சதர்களுக்குப் பிரீதியாகச் செய்யும் பூரிதானம் போலவாவது, அவர்களுக்கும் தம்மால் இயன்ற மாத்திரம் பிச்சையிடவேண்டும், "இல்லையென்ற விடத்தில் பல்லியுஞ் சேராது" என்கின்றார்களல்லவா?

தாய்வீடு அருகி லிருக்கிறதென்று அருட்டனுஞ் சொல்லாமல், நினைத்த நேரமெல்லாம் அவ்விடத்திற்கு ஓடி 'இவள் ஓடுகாலி' யென்று பெயரெடுக்கலாகாது. அடிக்கடி "தாய்வீ

டோடிய பெண்ணும் பேயோடாடிய கூத்தும்" ஒக்குமல்லவோ?

மாமியார் மாமனார் முதலானவர்கள், பெரு வயிறுகொண்ட தறியாமல் சீமந்தத்திற்கு நாள்வைத்துக் கொள்வதுபோலத் தெரியாமல் இந்தப் பெண்ணைக்கொண்டால் சுகப்படலாமே யென்று நினைத்துப், பகீரதப் பிரயத்தினப்பட்டுத் தேடினதற்குத் தகுதியாய் வாய்க்காமல், "பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது" போல வந்து லபித்ததே, நம்முடைய துர்ப்பாக்கியம் என்னவென்று அவர்கள் விசனப்படும்படி ஏடாகூடஞ் செய்யலாகாது.

சமுத்திரம்போல வற்றாத செல்வத்திற் பிறந்தாலும் வறியவனுக்கு வாழ்க்கைப்பட்டால், அந்தச் செல்வப் பெருக்கையே பாராட்டிச் செருக்கினால் அவனை அசட்டைபண்ணாமல், "மலையிலே விளைந்ததானாலும் உறலிலே வந்து தானே மசிய வேண்டும்" என்பதற்கிசைய, அடங்கி நடக்க வேண்டும்.

"நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பேதை மைத்தே."

என்பதனால், தன்பேதைமை காரணமாக உலகத்தில் அந்நியராகிய செல்வரின் படாடோபங்கண்டு, நெய்க்குடத்தைத் தலையில்வைத்து எண்ணமிட்டவனைப்போல, நாம் இந்தச் சீயான் பக்ஷஞ் சேர்ந்தால் யாதொரு வருத்தமுமின்றி, எக்காலமும் வேளைதவறாது, பால் பழங்களுடனே நெய்யாரக் கையார நல்ல ராஜ போஜனம் உண்டு சுகித்து, வாசனைத் திரவியங்களால் நலங்கிட்டுக்கொண்டு, பனிநீரில் ஸ்நானஞ் செய்து, இருபக்கத்துமுள்ள கரைக்கும் முன்தானைக்கும் விலையுயர்ந்த முத்தும் பச்சை கெம்பு வயிரங்கள் வரிசைவரிசையாகக்கோத்து இடையிடையே நெருங்க மல்லிகை தாமரை குமுதம்போல விசித்திரமான பூச்சமைத்து, பிடித்தால் பிடிக்குள் அடங்கும்படி அதிக நாணயமாகிய இழையால் ஆயிரம் பொன்பெற்ற இந்திர வர்ணப் பட்டென்னும் பொற்சரிகைச் சேலையுடுத்து, முத்துக் கச்சுப்பூண்டு, மேகம்

நெய்த்து நெறித்து நெரிந்து சுரிந்து நீண்டு சுருண்டு கடை குழன்ற கூந்தலை வாசனைசேர்ந்த மயிர்ச்சாந்துபூசி தங்கச் சீப்புச் சிக்கங்கோல் கொண்டு சீவிச் சிக்கறுத்து வாரி வகிர்ந்து, திவ்விய பரிமள புஷ்ப மாலைகளை வைத்து முடித்து, நெற்றியில் ஜவ்வாது திலகமிட்டு, கண்ணுக்கு மையெழுதி, கழுத்துக்குக் கஸ்தூரி பூசி, மார்புக்குச் சந்தனத்தால் தொய்யில் வரைந்து, தோளுக்கு விற்கோலந் தீட்டி, காலுக்குச் செம்பஞ் சூட்டி, கன்னத்திற்குக் கறுப்பெழுதி, உலகமெல்லாம் விலைமதிக்கத் தக்க நவரத்ந கசிதமாகிய தலைப் பணி செவிப்பணி நுதற்பணிகளும் ஆரகேயூரங்களும் ஜாஜ்வல்லியமாய்ப் பிரகாசிக்க, கைகளில் பொற் சரி பொற் கடகங்கள் விளங்க, கால்களில் ரத்தினச் சதங்கை ரத்தினச் சிலம்புகள் கலீர் கலீரென்று ஒலிக்க, நாசியில வச்சிரநத்து வச்சிர மூக்கணிகள் கண்கூசும்படி தகதகவென்று ஜொலிக்க, கேசாதிபாத பரியந்தம் பொன்காய்த்த விருக்ஷம்போற் றோன்றுகின்ற, மெய்யிற்பூசிய சந்தன குங்கும கற்பூர கதம்பாதி பரிமளவர்க்கம் காததூரம் கமகமவென்று மணக்க, வலது முன்கையிற் பற்றிய பூங்கொத்தில் பஞ்சவர்ணக்கிளி கொஞ்ச, அண்டகோளத்தை அளாவப் பளிங்கினுல் கட்டப் பட்ட மலைபோலும் பெரிய ஏழடுக்கு உப்பரிகையில், மாணிக்க மயமான சித்திர மேடைமீது, தாதிமார் காம்பரிந்து பரப்பிய மெல்லிய புஷ்பத்தின்மேல் வடிவிற் சிறந்த சில பெண்கள் சாமரைபோட, சில பெண்கள் ஆலவட்டம்அசைக்க, சில பெண்கள் தாம்பூல மடித்து நீட்ட, சில பெண்கள் பவளக்காளாஞ்சி யேந்த, சில பெண்கள் ஆலத்தி யெடுக்க, சில பெண்கள் கைலாகுகொடுக்க, சிலபெண்கள் நிலப்பாவாடை விரிக்க, சில பெண்கள் பிடித்துவரும் ஆணிமுத்துப் பந்தலின் கீழ்ப் பூங்கொடிபோல் இடை யசைய, அன்னம் போல் அடி பெயர்த்து, மதரதிபோற் கைவீசி, கலாபத்தை விரித்து மயில் உலாவி நடிக்கிறதுபோல உடல் குலுங்கச் சொகுசாகச் சாரி யுலாவி, நாம் வைப்பாட்டியானுலும் கொண்ட பெண்டாட்டியாகிய கண்ணாட்டிபோ லிருந்து,

சம்பிரமத்துடனே சகல போகமும் அனுபவித்துக்கொண்டு நல்ல சிமாட்டியாய் வாழலாமே, இதைவிட்டு இந்தத் தரித்திரம் பிடித்த காமாட்டிப் படுவானைக் கட்டிக்கொண்டு அழுவானேனென்று வீண் எண்ணங்கொண்டு, கற்பழிய தன்னைக் கைப்பிடித்த வறியவனுகிய கணவனைக் கைவிடக் கருதி, அவன் மனம் வெறுக்க, கொள்ளிக்கொண்டு சுடுவதுபோலக்கடுஞ்சொற் சொல்லி, சீறுமாறு பண்ணலாகாது. அப்படிச் செய்தால் "அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்டவள்" கதையாய் முடியும்.

அன்றியும், அது "வாய்த் தவிடும் போய் அடுப்பு நெருப்பும் அவிந்தாற்போல்" ஆகும்; மேலும் வியபிசாரிப் பட்டமும் பழியும் விளையும்; மறுமையில் ரௌரவ நரகத்தில் வீழ்ந்து அளவிறந்த காலம் கொடிய வேதனையும் அனுபவிக்கவேண்டி வரும். அல்லாமலும்,

கணவனோடே எதிர்த்து நிற்பவள் யமன்; அவனுக்குக் காலமறிந்து உண்டி சமையாதவள் தீராநோய்; சமைத்தவுணவை அவனுக்குப் பரிமாறி அவன் உண்ணச் சகியாதவள் இல்வாழ்பேய்; அன்றியும் இம்மூவருங் கொண்டவன் கழுத்தை அறுக்கவந்த கூரரிவாளாவார்கள்.

"எறியென் றெதிர்நிற்பாள் கூற்றஞ் சிறுகாலை
அட்டிற் புகாதா ளரும்பிணி—அட்டதனை
உண்டி யுதவாதா ளில்வாழ்பே யிம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை."

மேலும் கணவனைக் கோபித்து உக்கிரமாய்ப் பார்த்தவள் வேங்கைப் புலியாவாள்; அவனை வரம்புகடந்து வைதவள் கொள்ளிவாய்ப் பிசாசமாவாள்; அவனைக்கண்டு எழுந்திராமற் கிடந்தவள் மலைப்பாம்பாவாள்.

சோழநாட்டில் ஓர் வேளாளன் ஒருநாள் தன் பெண்சாதியுடனே 'இன்றைக்குப் பெரியவர் ஒருவர்க்கு அமுது படைக்கவேண்டும்' என்று சொல்ல, அவள் 'இது நல்ல வேடிக்கைதான், "தன்னைப்பெற்ற ஆத்தாள் கிண்ணிப்

பிச்சை எடுக்கிறாள், தம்பி கும்பகோணத்திலே கோதானம் பண்ணுகிறான்'' என்பதுபோல, வீட்டிருப்பு அறியாத புருஷனைக் குறித்து என்ன சொல்லுகிறது? “அஞ்சு மூன்றும் அடுக்காக இருந்தால் அல்லவோ அறியாத பெண்ணும் கறியாக்குவாள்'' அமுது படைக்கிறதற்கு அரிசிவேண்டுமே? பதார்த்தம்வேண்டுமே? “வெறுங் கையைக்கொண்டு முழம்போடுவது எப்படி?'' என்று சொல்ல, அவன் சொற்படிச் சகலமுஞ் சேகரித்துக்கொடுக்க, வேண்டுமென்றால் வெண்ணெய் மொத்தைபோல நூற்கலாகாதா?''என்கிறபடி அவளுக்குச் சம்மதியில்லாமையால் பின்னும் அவள் “அரிசி ஆழாக்கானாலும் அடுப்பங்கட்டி மூன்றுவேண்டும்'' அல்லவோ! பானை, சட்டி, முதலாகிய ஏனமில்லாமல் எவ்விதத்தில் சமையலாய்விடும்? என்ன, அவைகளையுந் தருவித்துச் ‘சீக்கிரத்திற்சமை' என்ன, அவள் ‘நீபோ, உனக்கு என்ன, எனக்குத் தள்ளாது, என்னாலே முடியாது, தலைநோகிறது' என்று போக்குச்சொல்ல, இவன் ‘அடி! செக்குலக்கைபோல் இருக்கிற உனக்குவந்தகேடு என்ன' என்றுகேட்க, அவள் ‘ எருதுநோய் காக்கைக்குத் தெரியுமா? தலைநோயுங் காய்ச்சலும் தனக்கு வந்தாலல்லவோ தெரியும்' என்று பாயை விரித்து நெடுக்கே முக்காடிட்டுப் படுத்துக்கொள்ள, அவன் இவள் என்ன சண்டியா யிருக்கிறாள் என்று கோபத்தினால் மெல்லென ஓரடி அடிக்க, “ஆ ஆ அட சண்டாளா! என்னை அடித்துக் கொல்லவா ஏற்பட்டாய்? உரலிலே தலையை நுழைத்துக்கொண்டு உலக்கைக்குப் பயப்பட்டதனாலே விடுமா? சும்மா கொல்லு, இனி நான் உயிரோடு இருக்கிறதில்லை, ஊமத்தங்காயைத் தின்று பழி போடுகிறேன்'' என்று, தெருவிலே வந்து பெருங் கூச்சலிட்டுப் புருஷனைத் தூற்றினாள். இப்படிப்பட்டவளைக் குறித்துத்தானே,

“தூற்றும்பெண்டிர் கூற்றெனத்தகும்''

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தச் சரித்திரம் மணவாளநாராயண சதகத்தில் “ஐயருக் கமுதுபடை'' என்னும் அடியில்வரும் பாட்டினால் விளங்கும்.

"ஐயருக் கமுதுபடை யென்றுவந் தாய்ந்யு மாண்பிள்ளை யென்றெண்ணியோ, அரிசியெங் கேபானை சட்டியெங் கேயென்ப ளவள் சொன்ன வகைகளெல்லாம்,—பையவே கொண்டுவந் தானுஞ் சமைக்கப் படாதுதலை நோகுதென்று, பாயிற் கிடப்பள்சின மாயொன்று பேசினுற் பாருனக்கேற்றபுத்தி,—செய்யவல் லேனென்பள் சற்றடித் தானஞ்சு கூ தின்கிறேன் கூகூவெனத் தெருவீடு தோறுமுறை யிடு பெண்டிருண்டெனிற் நீயநமன் வேறுமுண்டோ,—வையகம் புகழ் சோலை மலையலங் காரனே மணவாள நாராயணன், மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே வரதவேங் கடராயனே."

தென்னாட்டிலே சாதுவான ஒருவனுக்கு வாய்ப்பட்டி ஆகிய ஒரு படுநீலிவந்து பெண்டு வாய்த்தமையால், அவன் அவளுடைய மூர்க்கத்துக்கு அஞ்சிச் சுயேச்சையாய் ஒன்றுஞ் செய்யக் கூடாமல், அவள் இட்டது சட்டமாக வருத்தத்தோடு காலம் கழித்து வருகையில், ஒருநாள் அவனுக்குக் கிரகசாரம் போதாமல் ஒளவை என்பவள் அவனிடத்திற்கு வந்து உணவு கேட்க, 'நல்லது' என்று சொல்லி, "பெண்ணின் குணமறிவேன் சம்பந்தி வாயறிவேன்" என்பதற்கு ஏற்க, தன் பெண்சாதி குணத்தைத் தான் அறிந்தவன் ஆகையால், ஒளவையை வீட்டிற்குள் அழைத்துப் போகாமல் தெருத்திண்ணையில் தானே இருக்கவைத்துத் தான்மாத்திரம் உள்ளேநுழைந்து, பெண்சாதிக்கு இதமுண்டாக இச்சகவார்த்தைகள் பேசி, தான் ஒரு பெண்போல அவளுக்குப் பேன் பார்த்து ஈர் உருவி சமயம் நோக்கி மெள்ள அந்தச்செய்தியை அவள் காதிலே போகவிட, "ஏனவாயனைக் கண்டாளாம், ஏணிப்பந்தம் பிடித்தாளாம்" என்பதுபோல, அவள் தன் புருஷன் மேதக குணத்தைப் பார்த்து பூதம்போல ஆர்ப்பரித்து 'உன் பவிஷுக்கு விருந்து ஒருகேடா? உனக்குத் தொலைக்கிறது அல்லாமல் ஊர்க்குந் தொலைக்கவோ?' என்று வாயில் வந்தபடிப் பேய்ப்பாட்டாகப் பேசி ஏசிக் கழுநீர்ப்பானையை ஏந்திவந்து அவன் தலையில் அபிஷேகம் செய்து, திருவலகு (துடைப்பக்கட்டு) கொண்டு வெண்சாமரை வீசி, சுளகு (முறம்) எடுத்து ஆல

வட்டம் பரிமாறி, பரிவேட்டை விடுவதுபோலத் தெருமுழு தும் அவனைத் துரத்தி அடித்தாள். அதுகண்டு ஔவை இந்தச் சரித்திரத்தை அவ்வாறு நடக்கும் பெண்களுக்குப் புத்தி வரும்படி,

"இருந்து முகந்திருத்தி யீரொடு பேன் பார்த்து
விருந்து வந்ததென்று விளம்ப—வருந்திமிக
ஆடினாள் பாடினா ளாடிப் பழஞ்சுளகாற்
சாடினா ளோடோடத் தான்."

என்று ஒரு பாடலாகப் பாடிப்போனாள். இவளும் பெண் பிறப்பிலே சம்பந்தப்பட்டா ளல்லவா? கற்புடையவர்கள் இத்தன்மையாகிய துஷ்டைகள் முகத்தையும் பார்ப்பார் களா? இவர்களுடனும் பேசுவார்களா? நேசிப்பார்களா?

வித்வ சிரேஷ்டராகிய பொய்யா மொழிப்புலவர் பூர் வம் மதுரையில் முழுகிப்போன தமிழ்ச் சங்கத்தைப் பரி பாலனம் பண்ணும்படி அக்காலத்தில் அரசாண்டிருந்த வணங்காமுடிமாறன் என்னும் பாண்டியனிடத்தில் பேசு தற்கு அவனைத் தேடிப் போனபொழுது அவன் கோயிலுக் குச் சுவாமி தரிசனஞ் செய்யப் போயிருக்கிறதாகக் கேள் வியுற்று, அவர் சொக்கநாதர் சந்நிதிக்குப் போனவிடத்தில் அவ்வரசன் சுவாமியைச் சாஷ்டாங்கமாகச் சேவித்துக் கொண்டு இருக்கக்கண்டு, புலவர் சிகாமணியானவர்,

"குழற்கா லரவிந்தங் கூம்பக் குமுத முகையவிழ்ப்ப
நிழற்கான் மதியமன் றோநின் றிருக்குல நீயவன்றன்
அழற்கா லவிர்சடை மீதே யிருந்துமவ் வந்திவண்ணன்
கழற்கால் வணங்குதியோ வணங்காமுடிக் கைதவனே"

என்னும் பாடலைப் பாட அரசன் அதைக் கேட்டு அவரை 'நீர்யார்?' என்ன, அவர் பொய்யாமொழி என்னும் தமது காரணப் பெயர் முதலிய பூர்வோத்தரத்தையும் தாம் கொண்ட கருத்தையும் வெளியிட, பாண்டியன் 'இவரோ சங்கத்தைப் பரிபாலிப்பவர்' என்று எளிதாக நினைத்து, அங்குச் சங்கத்தார்க்குப் பிரதியாகச் சிலையினால் செய்து வைக்கப்பட் டிருக்கின்ற விம்பங்களைக்காட்டி, 'நீர் பொய்

யாமொழி என்றது மெய்யர்குமாயின், இந்தவிக்கிரக ரூபமா யிருக்கும் சங்கப்புலவர் சிரக்கம்பம் கரக்கம்பம் செய்யப் பாடும்' என, அவர்

"உங்களிலே யானொருவ னொவ்வுவனோ வொவ்வேனோ
திங்கட் குலனறியச் செப்புங்கள்—சங்கத்தீர்
பாடுகின்ற முத்தமிழ்க்கென் பைந்தமிழு மொக்குமோ
ஏடெழுதா ரேயெழுவீ ரின்று"

என்று பாட, அந்த விம்பங்கள் அங்ஙனமே சிரக்கம்பம் கரக்கம்பம் செய்தன. பின்பு பொற்றாமரை என்னும் தீர்த் தத்தருகில் அவரை அழைத்துப்போய் 'இதில் முழுகிப்போ யிருக்கின்ற சங்கப்பலகை மிதக்கப்பாடும் பார்ப்போம்' என, அவர்

"பூவேந்தர் முன்போற் புரப்பா ரிலையெனினும்
பாவேந்த ருண்டென்னும் பான்மையாற்—காவேந்தன்
மாற னறிய மதுரா புரித்தமிழோர்
வீற்றிணையே சற்றே மித"

என்று பாடின மாத்திரத்தில் அது மிதந்தது. இப்படிப் பட்ட பல அற்புதங்களால் அவரது கல்வியின் அருமையும் பெருமையும் பெரும்பாலுங் கண்டு தெளிந்தும், இறுமாப் பினால் அவருக்குச் சம்மானஞ் செய்யாமையால் 'இவன் தக்கோனல்லன்' என்று, அவர் அங்கிருந்துதிரும்பித் தமது சுதேசத்திற்கு வருகையில், இந்தச் செய்தியைப் பாண்டி யன் மனைவி அறிந்து அவர் பொய்யாமொழியர் ஆதலால் அவர் சொல்வது நன்றாயினும் தீதாயினும் பொய்யாது பலி க்குமே என்று நடு நடுங்கிப் புலவர் பெருமான் கோபத்தை ஆற்றவேண்டும் என்று, தான் சிவிகை சுமப்பவரைப்போல வேடம் பூண்டுவந்து, அவரது சிவிகையைச் சிலதூரம் சும ந்து செல்ல, அவர் அது கண்டு, அவளை நோக்கிக் 'கற்புக் குத் தாயகம் போல்வாளே! நீயேன் இப்படிச் செய்தாய்' என, அவள் 'சுவாமீ! இராஜா தேவரீர் விஷயத்தில் அபசா ரப்பட்டதை மனத்திற்கொள்ளாது, தாம் கருணைகூர்ந்து அவரை வாழ்த்துதல் செய்யவேண்டும் என்னும் நோக்கத்

தால் இங்ஙனம் புரிந்தேன்' என, அவர் 'நன்று' என்று இராஜ பத்தினியை முன்னிட்டு,

"உமையாளு நீயு மொருங்கொப்பே யொப்பே
உமையாளுக் கங்குண்டோ வூனம்—உமையாடன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழந்தான் பாண்டியனின்
ஆகந்தோய்ந் தாண்டா னரசு"

என்னும் பாடலைப் பாடினார். இவ்வரசன் தேவிபோல மனைவி புருஷனுடைய குற்றத்தால் அவனுக்கு வரும் தீங்கினை ஆய்ந்துணர்ந்து வாராமற் காப்பதல்லவோ விசேஷம்.

தெய்வப்புலமைத் திருவள்ளுவர் தம், தேசுயரில்லாள் வாசுகி என்னும், மாசற்றொளிரு மணிவிளக் கொத்தவள், பொற்பு விளங்கிக் கற்புவழுவா, தில்லறம் நடாத்தி யின்புற்று வாழ்ந்து, மாண்டபின்பு மயானத்திற் கொடுபோய்த், தகன சமுஸ்காரம் தான் செயப்படுகையில், நெடுநாள் நகமுஞ் சதையும்போலவும், உடலும் உயிரும் போலவும் மனதொத்துப் பிரிவற்றிருந்த அருமை மனைவியைப் பிரிய வேண்டி வந்ததைபற்றி, அவர் துக்கசாகரத்தில் ஆழ்ந்து வேழமுண்ட விளங்கனியாகி கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருக சிற்பரால் எழுதரும் பொற்பாவை போல்வாளே! என் நாவிற்கினிய அறுசுவை உணவும் அமைத்து, என்னருகிலிருந்து என்னை உபசரித்து உண்பித்துப் போஷிக்கின்றவளே! என்னிடத்தில் அநவரதமும் மாறாத உள்ளன்புடையவளே! தெரு வாசற்படி கடவாதவளே! என் வாய்ச் சொல்லை மறுத் துரையாது, கடவுள் வாக்காகிய வேதம் போல உண்மையாகக்கொண்டு நடப்பவளே! இரவில் என் பாதத்தை நெடுநேரமாக வருடிக்கொண்டிருந்து நான் நித்திரை செய்தபின்பு என் கால்மாட்டிலேயே சிறிதுநேரம் நித்திரை செய்து, நான் விழிப்பதற்கு முன் விழித்து எழுந்திருப்பவளே! நீ இப்பொழுது என்னை விட்டுப் பிரிந்து போய் விடுகின்றையே, இனி நான் எப்படிக் கண்ணுறக்கம் கொள்வேன்' என்னும் கருத்தை உள்ளிட்டு,

"அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் கடவாத பாவாய்—அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ
என்றூங்கு மென்க ணிரா."

என்பது முதலாகிய சில செய்யுட்களைப் பாடி வியசனப்பட்டார். யோசிக்குமிடத்தில் தாமரையிலையும் நீரும் புளியம் பழமும் ஓடும்போல மனைவாழ்க்கையில், ஒட்டியும் ஒட்டாத மகாத்மாவாகிய அவரும் அந்த மாதர்க்கரசியின் நற்குண நற்செய்கைகளினு லல்லவோ சிநேகபந்தத்தில் அகப்பட்டவரைப்போல அப்படிப் பரிதபிக்கும்படி வந்தது. "மனையாலன்றோ தலை வெடித்ததாம்" என்றும் சொல்லப் படுகின்றதே.

பதிவிரதைகள் கணவனது பாதம் விளக்கிய நீரைக் கங்கா தீர்த்தமாகவும், அவன் உண்ட மிச்சிலைத் தேவதா பிரசாதமாகவும், அவன் பாதசேவையைப் பரமார்த்த தரிசனமாகவும், அவன் வாய்ச்சொல்லைக் குருவினது உபதேசமாகவும் கொள்வதே யன்றி, வேறே தீர்த்தம் பிரசாதம் தரிசனம் மந்திரோபதேசம் உண்டென்று மதிப்பதில்லை.

தங்கணவன் மற்றபுருஷர் அவனைக்கண்டு நாம் பெண்ணாய்ப் பிறந்தால், இந்த மகா புருஷனைத் தழுவலாமே யென்று விரும்பத்தக்க பேரழகுடையவனானாலும், இளங்காளைபோலும் அதிக யௌவன முடையவனானாலும், சுரபேத லயபேதந் தெரிந்து நரம்போசையும் குரலோசையும் வேறுபடாது நயமாகப் பாடுகின்ற சங்கீத சாமர்த்தியனானாலும், தன்னை நோக்கிய பெண்களின் பார்வைகளையெல்லாம் கவர்கின்ற விசாலமாகிய கமலதளம் போன்ற அழகிய பார்வையுடையவனானாலும், ஆண்சிங்கம்போலும் பெருமிதமான நடையுடையவனானாலும், மலைபோல அளவில்லாத பெருஞ்செல்வ முடையவனானாலும், தமக்குஅவன் அத்தை மகனானாலும், தாம் அவனுக்கு அம்மான் புத்திரிகளானாலும், பெண்களுக்குப் பெரும்பாலும் அந்நிய புருஷர் மேல் மனஞ் செல்லுமென்பதனால், சபலசித்தங்கொண்டு

கற்பழியாது அதனை யுறுதிப் படுத்தி நல்லொழுக்கத்தில் நீங்காது நிற்கவேண்டும்.

முன்காலத்தில், வேதம் ஓதுகின்றவர்களுக்கு ஒரு மழையும், செங்கோல் செலுத்துகின்றவர்களுக்கு ஒரு மழையும், கற்புடையவர்களுக்கு ஒரு மழையுமாக அல்லவோ மாதம் மும்மாரி பொழிந்தது.

"வேத மோதிய வேதியர்க் கோர்மழை
நீதி மன்னர் நெறியினுக் கோர்மழை
மாதர் கற்புடை மங்கையர்க் கோர்மழை
மாதமூன்று மழையெனப் பெய்யுமே."

கிரமந் தப்பிய வேதியர்களுக்கு ஒரு மழையும், கொடுங்கோல் மன்னவர்க்கு ஒரு மழையும், புருஷனைக் கொலை செய்யும் பெண்களுக்கு ஒரு மழையுமாக அல்லவோ வருஷம் மூன்றுமழை தூறுகின்றது.

"அரிசி விற்றிடு மந்தணர்க் கோர்மழை
வரிசை தப்பிய மன்னருக் கோர்மழை
புருஷ னைக்கொன்ற பூவையர்க் கோர்மழை
வருஷ மூன்று மழையெனப் பெய்யுமே."

முற்காலத்தில் கற்புடையவர்களில் சந்திரமதி காட்டுத்தியைக் குளிரச்செய்தாள். தமயந்தி தன்னை யிச்சித்த வனவேடனை எரித்தாள். அநசூயை தன் கற்பைச் சோதிக்க வந்த திரிமூர்த்திகளைக் குழந்தைகளாக்கி ஸ்தன்யபானம் பண்ணுவித்தாள். சாவித்திரி தன் நாயகன் உயிரை யமன் கொண்டுபோகிற தருணத்தில் அவனுடனே வாதாடி நாயகனைமீண்டும் பெற்றாள். நளாயனி அணிமாண்டவியர் சாபத்தால் தனக்கு வைதவியம் வாராது பொழுது விடியாதிருக்கப் பிரதி சாபமிட்டுத் தேவர்கள் வேண்ட விடிய அநுக்கிரகித்தாள். திருவள்ளுவநாயனார் மனைவி கணவனது பணிவிடையில் இருக்கையில், ஒரு தவசி வந்து பிச்சைகேட்கப் பிச்சையிடக் காலதாமதப் பட்டமையால், அவன் கோபங்கொண்டு அவளை எரிக்கும்படி உறுக்கிப் பார்க்க, அவள் அந்நினைவை யறிந்து "கொக்கென்று நினைத்தையோ கொங்

கணவா ?" என்றாள். இப்படியெல்லாம் இருப்பதனுலல்லவோ கற்புடையவர்களின் மகிமை தேவர்கள் முனிவர்களாலும் அளவிடற் கரிதென்று சொல்லப்படுகின்றது.

மரக்கலத்தை ஆதரவாகக்கொண்டு கடற்கரை ஏறுகின்றவர்களைப்போல், புருஷன் இல்வாழ்க்கைக்குத் துணையாகக் கற்புடை மனைவியைக்கொண்டு, பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி முதலியோரை உபசரித்தல் ஆதியாகிய அறங்களைச் செய்து மோட்சக்கரை யேறுதற்கு அவனுக்கு அவள் அநுகூலமாயிருந்து தெய்வ கடாட்சத்தால் நல்ல புத்திரர்களை பெற்றுப் புகழ்பெற வாழவேண்டும்.

கற்புநிலைமைமுற்றிற்று.

## கற்றுய்ந்தொழுகல்.

"கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக"

என்னும் குறளில், ஒருவன் கற்கவேண்டும் நூல்களைப் பழுதறக் கற்கக்கடவன், அப்படிக் கற்றபின் அக்கல்விக்குத் தகுதியாக அவைகளாலே சொல்லப்பட்ட வழியிலே நிற்கக் கடவன் என்று திருவள்ளுவநாயனர் அருளிச் செய்தமையால், உலகத்தில் அருமையும் பெருமையும் ஆனதாய், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப் பயனையும் அடைதற்குரிய மக்கட்பிறப்பிற் பிறந்தவர்கள் பிறவாதவராய், விவேக சூனியத்தால் தர்மா தர்மங்களை அறியாத வேடர்போலவும், மிருகம் பறவை முதலிய உயிருள்ளவைகளும், மண் கல் முதலிய உயிரில்லாதவைகளுமாகிய அஃறிணைபோலவும், நன் முயற்சியின்றி வறிதிருந்து வாழ்நாள் கழியாமல் பிரதானமாகிய கல்விப்பொருள் செல்வப்பொருளென்னும் இரண்டினில் முக்கியமாய்க் கல்விப்பொருளைத் தேடல்வேண்டும்.

கல்விப் பொருளாவது செல்வப் பொருள்போல வெள்ளங்கொண்டு போகாததும், நெருப்பில் வேகாததும், கள்வர் அபகரிக்காததும், காவல்செய்ய வேண்டாததும், அரசர்களால் வவ்வப்படாததும், தாயத்தாரால் பங்கிட்டுக்கொள்ள முடியாததும், விரும்பினவர்கட்கு எல்லாம் தடையின்றி வழங்கினலும் மேன்மேலும் வளர்வதன்றிக் குறைந்து படாததுமாய், அஞ்ஞானமாகிய பிணிக்கு மருந்துமா யிருப்பதனால் அதனைச் செல்வப்பொருளினும் சிறந்ததாகக் கருதி, "இளமையிற்கல்" என்று ஔவையார் சொன்னவண்ணம் இளமைப் பருவத்திற்றனே உறுதியாக அவசியம் அதனைத் தேடல்வேண்டும். தேடுங்கால் கல்வி வரையறைப் படாததனால், அதனை முற்றக் கற்பதற்கு ஆயுள் நீடித்திராமையானும், கற்பவர் சரீரமோ பிணிக்கெல்லாம் பிறப்பிடம் ஆகையாலும், முடியாமையால் கைவிட்டு விடாமலும், அல்லது "கண்டது கற்கப் பண்டிதனாவான்" என்பதோர் சாமானிய வாசகத்தை நம்பி, கண்டதெல்லாமாகிய மூடர்களுக்கேற்ற தந்தனப்பாட்டும் ரஞ்சனக்கூத்தும் உள்ளிட்ட புன் கல்வி கற்றுப் பொழுது போக்காமல், நீரைப் பிரித்துப் பாலைப் பருகும் அன்னப் பறவைபோலச் சாஸ்திரங்களில் விசேஷ சாமானியங்களை யூகித்துச் சாராம்சந்தெரிந்து, இகபரசாதனமாய் எவற்றினும் விழுமிதாகிய மெய்ம்மைக் கல்வியையே உயிர்போலப் பெரும்பொருளாக விரும்பி, இலக்கிய இலக்கண சம்பிரதாயந் தெரிந்த நல் லாசிரியரைத் தேடி அடைந்து, அவரது சந்நிதானத்திற் செல்வர்முன் வறியர் ஏக்கற்றிருப்பதுபோல் இருந்து குறிப்பறிந்து ஒழுகி அவர்கருணைகூர்ந்து கற்பிக்க, முறைவழுவாமலும், நெறிபிறழாமலும், பேய்போலப் பேருண்டியை இச்சியாமலும், பெரியம்மை பிரசன்ன மானுற்போலப் பெருந்தூக்கம் தூங்காமலும், அம்பலந் தீப்பட்டது என்றாலும் "அதைத்தான் சொல்வானேன் வாய்தான் நோவானேன்" என்று கெட்டொழிந்த மூழுச் சோம்பரைப்போலச் சோம்பியிராமலும், அனைவரும் தன்னைத் தம்பி பள்ளிக்கூடத்தானென்று சொன்னல்போது

மென்று நினைத்துப் பிரதிஷ்டைக்காகக் குழப்புவான்போல விளையாட்டினால் குழப்பி விடாமலும், பலகாலும் மிக முயன்று ஐயந்திரிபற அமையக் கற்கவேண்டும். அதன்மேலும் "கேள்விமுயல்" என்றமையால் உசிதமான பற்பல நற்கேள்வி கேட்கவேண்டும். அன்றியும், நுண்ணறிவுடையோர் நூல்கள் யாவையும் இனிதின் ஆராயவேண்டும். இவ்வாறு கற்றும் கேட்டும் ஆராய்ந்தும், பயின்ற பின்னர்க் குப்பையைச் சிந்து விலையுயர்ந்த மாணிக்கத்தை ஆய்ந்தெடுப்பது போல, உண்மை துணிந்து விலக்கத் தக்கவைகளை விலக்கிக் கொள்ளத்தக்கவைகளைக் கொண்டு அனுஷ்டிக்கவேண்டும்.

அநுஷ்டித்தலாவது, "பார்மினோ பார்மினோ" என்று தாயுமானவ ருரைத்தவாறு யாவரும் ஆ! ஆ! இவனைப் பாருங்கள் பாருங்கள், இவன் பாடிப் படித்துப் பிரசங்கிப்பது முக்கனியும், சர்க்கரையும், பாலும், தேனும் கலந்து ஊட்டுவதுபோல மிக இனிதாயும், அற்புதமாயும், விநோத சாதுரியமாயும், பகைவரும் வெறுக்கத்தக்கதன்றி வியக்கத் தக்கதாயு மிருக்கின்றதே. இவன் என்ன சாரதாபீடமோ! கல்விக்கடலோ! சற்பனைக் களஞ்சியமோ! ஞானமணிவிளக்கோ! அவதாரபுருஷனோ! உற்பாதபிண்டமோ! அம்மம்ம! ஆச்சரியம்! ஆச்சரியம்!! இவன் நிபுண சிரோமணியா யிருக்கிறனென்று, தனது வித்தியா சாமர்த்தியத்தை மெச்சவேண்டுமென்னும் வீண்புகழை விரும்பலாகாது; பின்னும் கல்வியில் தான் பிச்சையிட்டவர்களுக்கு உண்டென்று சொல்லும்படி பூரணமாகக் கற்றுணர்ந்தகாலத்தும், பிறரை இவன் நமக்கெவ்வளவு அஜகஜாந்தரமென்று அவமதித்துக் கர்வியாமல் "எந்தப்புற்றி லெந்தப்பாம்பிருக்குமோ" என்று எண்ணி, தன்னினும் அதிகமாகக் கற்றவர்களைக் கண்டால், நெய்யிட்டு விளக்கும் தீபத்தை நீர்விட்டு விளக்குவது போல இதுவரையில் நம்மை நாமே புகழ்ந்து வியந்தோமே சகலகலா வல்லவராகிய இவரது கல்விக்கு நமது கல்வி எம்மாத்திரம்? சதாம்ச ... ஏகாம்சங்காணுமா? கால்வாய் கடலாமா? அணு மேருவாமா ... துரும்பு தூணுமா? என்று

ம்பு யானையாமா? முட்டிக்காற் கழுதை பட்டவர்த்தனப் பரியாமா? என்று அஞ்சிப் பெட்டிப் பாம்புபோல அடங்கியிருக்கவேண்டுமே அல்லாமலும் ஒருவருடனும் குதர்க்கஞ் செய்யலாகாது. தன்னிடத்தில் கற்றவர்கள் கேட்டவர்களெல்லாம் அக்கல்வி கேள்விகளால் பெரும்பயனடைய, "குங்குமஞ் சுமந்த கழுதை" போலத் தானொரு பயனுமடையாமல் "குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வது" போலக் காமாந்தகாரத்தில் மூழ்கி, முறைப்படி கொண்ட மனைவியை உறங்கவைத்துப் பரஸ்திரீகளை இச்சித்துக் குலஸ்திரீகளைக் கற்பழிக்கலாகாது. 'உள்ளங்களிக்கக் கள்ளுண்டு கலங்கலாகாது.' பரதிரவியத்தை விஷமென்று நினைக்கவேண்டியதை விட்டு, "ஊராருடைமைக்குப் பேராசை கொண்டு" மிதமில்லாமல் கொள்ளையிட்டு, "தம்பி தெள்ளுமணி திருட்டுக்கு நவமணி" என்று இகழப்படலாகாது. தன்னுயிர்போல மன்னுயிரையும் நினைக்கவேண்டும் என்னும் ஜீவகாருண்ணியத்தை மறந்து கொலைசெய்து, பிரமஹத்தியாகிய மகாபாதகங்களைத்தேடி, அநேக கற்பங்கடந்தாலும் கரையேறப்படாத மீளாநரகத்திற்கு ஆளாகலாகாது. அப்பா! என் கலியாணப் பந்தலிலிருந்து புளுகாதேயென்ற பெரும்புளுகனும் இவனுக்கிணையல்லன். இவன் புளுகு அண்டகோளத்தையும் தூறிப்பாயும் ஆதலால், அண்டப்புளுகனென்று சொல்லும்படி பொய்யைப் பொருளாகக் கொண்டு மெய்யைக் கைசோர விடலாகாது. "கோபம் சண்டாளம்" ஆகையால் அது கிருஷ்ணசர்ப்பம் போலச் சீறியெழும்படி அதற் கிடங்கொடாமல், "பொறுமை கடலிற் பெரிது" என்பதனால் அதனைப் பூஷணமாகப் பூண்டுகொள்ளவேண்டும். சித்திரவதை செய்வதுபோல அடிக்கடி எவர்களென்ன தீங்கு செய்தாலும் எதிர்செய்யாமல், அவர்கள் நாணும்படி அவர்களுக்கு நன்மையே செய்யவேண்டும்.

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."

எவ்வகை அறங்களை அழித்தவர்க்கு[illegible]அப்பாவத்தில் நின்று நீங்கும் வழியுண்டு, ஒருவர்செ[illegible]ந்நன்றியை மறந்தவர்க்கோ

அல்லை. ஆதலால், அதனை மறவாது நினைக்கவேண்டும். எளியவர்களைத் திரணமா யெண்ணி அவர்களிடத்தில் வேம்புபோல் கடுஞ்சொற் சொல்லாமல், தாழ்மையாய் எவர்களிடத்தும் இன்சொல்லே சொல்லவேண்டும். பகைவர், சிநேகர், அயலாரென்னும் முத்திறத்தார்களில் ஒருவர் பட்சஞ் சார்ந்து ஓரஞ்சொல்லாமல் துலாக்கோல்போல நடுநிற்கவேண்டும். பறவைகளுக்குள் சண்டாளமென் றிகழப்படுகின்ற அற்ப ஜெந்துவாகிய காக்கைக்கும், காலையி லெழுந்திருத்தல், காணமற் புணர்தல், மாலையிற் குளித்தல், அயலிடைப் புகாது மனையிடைப் புகுதல், உற்றாரோ டுண்டல் உறவாடல் என்னும் இவ்வறுவகை நற்செய்கைக ளிருக்கின்றன.

"காலையெழுந் திருத்தல்காணமலேபுணர்தல்
மாலைகுளித்துமனைபுகுதல்—சால
உற்றாரோடுண்ணலுறவாடலிவ்வாறும்
கற்றாயோகாக்கைக்குணம்."

ஆதலால் அறிவினையுடைய நன்மக்களுக்கு எப்படிப்பட்ட நற்குண நற்செய்கைக ளிருக்கவேண்டும்? அவைக ளெவ்வள வதிகமாகவு மிருக்கவேண்டும்? பிரபஞ்சத்தில் மூடர் விவேகிகள்போலவும், விவேகிகள் மூடர்போலவும், கீழோர் மேலோர்போலவும், மேலோர் கீழோர்போலவு மிருப்பார்கள். அவர்களைக் கிளிஞ்சிலை வெள்ளியென்றும், மாணிக்கக் கல்லைக் கரட்டுக்கல்லென்றும் ஒன்றை மற்றொன்றாக மதிப்பதுபோல, காட்சிமாத்திரத்தால் அவ்வாறு நிச்சயிக்கலாகாது. கரும்பு கோணியிருந்தாலும் தித்திக்கும் அல்லால் கசக்காது என்றும், காஞ்சிரங்காய் சிவந்து கனிந்திருந்தாலும் கசக்குமல்லால் தித்திக்காது என்றும், அம்பு வளைவின்றி ஒழுங்காயிருந்தாலும் கெட்டசெய்கையே உடையதென்றும், வீணையொழுங்கின்றி வளைந்திருந்தாலும் நல்லசெய்கையே உடையதென்றும், பகுத்தறிவதுபோல, அவரவர்களுக்கு இயற்கையும் செயற்கையுமாயுள்ள குணங்களையும் செய்கைகளையும் பகுத்தறியவேண்டும். அங்ஙனம் பகுத்

றிந்து ஒருவனைக்கொட்டிவிட்டு அவனைப் பதைத்துத் துடி த்து வருத்தப்படச் செய்யும் தேள்போல, பிறனுக்குத் துன் பத்தை உண்டாக்கி அதை அவன் சகிக்கமாட்டாமல் வியச னப்படச் செய்கின்றவர்களும், ஒருவன் உண்ணுஞ் சோற் றில் விழுந்திறந்து அவனுடைய வயிற்றுக்குள்போய் அவ னுண்ட சோற்றை அவனுக்கு உதவாமல்போம்படி செய்யும் ஈயைப்போல, பிறனது செல்வங்கண்டு பொறாமைகொண்டு தாம் அவன்பொருட்டு இறந்தாவது அந்தச்சொத்தை அவன் அநுபவிக்கவொட்டாமல் செய்கின்றவர்களும், ஒருவனைக் கடித்து விஷம் தலைக் கேறுதலாய் அவன் இறந்துபோம்படி செய்யும் பாம்புபோல, பிறனைப் பகைத்து அவனுக்குத் தீங் குவிளைத்து அவனை முடித்துவிட்டு, மகிழ்கின்றவர்களு முத லாகிய தீயோரை நேசிக்கலாகாது.

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு."

ஆடை சோர்ந்தபோது உதவிசெய்கின்ற கைபோல நேசனு க்கு ஆபத்துவந்தபோது தாமேஅறிந்து உடனே உதவிசெய் கின்றவர்களும், கொல்லன் உலைக்களத்தில் வேகின்ற இரும் புடனே வேகும் உலையாணிக்கோல்போலச் சிநேகன் உபத் திரவப் படும்பொழுது நமக்கு என்னவென்றிராமல், அவ னுடனே தாமும் அவ்வுபத்திரவத்தை அநுபவிக்கின்றவர் களும், கண்டியூர்ச் சோழராஜனுடைய மந்திரியாகிய சிங் கன் முதலியாரை நேசித்து, அவர் இறந்து காஷ்டத்தில் வைக்கப்பட்டபொழுது, என் சிநேகரைப்பிரிந்து நான் இரு க்கச் சகியேன் என்று அவருடனேகூட அந்தக் காஷ்டத் தில் படுத்துக்கொண்டு சோழன் முதலானவர்கள் விலக்கி யுங் கேளாமல் நெருப்பில் வெந்து பிராணனை விடுத்துச் சிநேகதர்மத்தை நிலைநிறுத்திய பொய்யாமொழிப் புலவர் போல்வராகிய நல்லோரையே நேசிக்கவேண்டும். இன்னும் மனோவாக்குக் காயங்களை எக்காலும் நல் விஷயத்திலேயே பயிலும்படி செய்யவேண்டுமல்லாமல் துர்விஷயத்தில் பிர வேசிக்க ஒட்டலாகாது. இனி இப்படிக்கன்றி விபரீதத்தால்

அடபோ; இதென்ன பைத்தியம்! பாவமேது? புண்ணிய மேது? நரகமேது? சுவர்க்கமேது? நாம் செத்தால் சரீரம் பஞ்சபூத சம்பந்தப்பட்ட தாகையால், இது மண்ணோடு மண், நீரோடு நீர், நெருப்போடு நெருப்பு, காற்றோடு காற்று, வெளியோடு வெளியாய்ப் போய்விடுகின்றதே; அப்புறம் மோக்ஷம் நரகம் அடைவதேது? தெய்வமென்றது தா னேது? முயற்கொம்பும் மலடி புத்திரனும்போலச் சூனியமே யல்லாமல் கண்டவர்கள் ஆர்? இந்தக் கொள்ளைக்கு ஸ்நானமேன்? தியானமேன்? ஞானமேன்? தான தர்மங்களேன்? இவை எல்லாம் வீணாரவாரம்; கண்டதே காட்சி, கொண்டதே கோலம், மனம்போன போக்கே சரியென்று நாஸ்திகம் பேசிச் செருக்குற்றுப் பட்டிமாடாய் உழலாமல், அண்ட பிண்ட அகில சராசரங்களையும் படைத்துக் காத்து அழிக்கின்ற காரணக்கடவுள் ஒருவன் உண்டென்று அநுமான உபமான ஆகமப் பிரமாணங்களால் நிச்சயமாக நம்பி, அக்கடவுளை மனதாரச் சிந்தித்து, நாவார வாழ்த்தி, முடியார வணங்கி, ஆராதித்து, பெரியோரைப் பேணி, அரச ராணைக் கமைந்து, மாதா பிதா குரு முதலானவர்களைப் பூசித்து, மற்ற சுற்றத்தாரையும் தழுவி, வறியவர்க்கு இரங்கி வாசா கயிங்கரிய மாத்திரமாய்ப் போகவிடாமல் கூடிய அளவும் உபகரித்துச் சம்ரக்ஷணை செய்வதற்கு ஏதுவாகச் செல்வப் பொருளையுந் தேடல்வேண்டும்.

அதனைத் தேடுங்கால், தன்னைப்போன்ற பிறரிடத்துச் சென்று, அபிமானமாகிய பூஷணத்தைத் துறந்து எய்த்து நின்று இரத்தலும், பிறரை மோசஞ் செய்தலும், பொய்ச் சாட்சி சொல்லிப் புணைபட்டுக் கைக்கூலி வாங்குதலு முதலாகிய பாவத்தொழிலைச் செய்தாலன்றித் தேடக்கூடாதே யென்றெண்ணி அப்படிச் செய்யாமல் பழிக்கஞ்சி, நிலத்தைத் திருத்தி உழுது பயிரிட்டாவது, நானாவித பண்டங்களைக்கொண்டு அவைகளைமாறி வியாபாரஞ் செய்தாவது, "அறிவுடையொருவனை அரசனும் விரும்பும்" என்றதனால் சுயபாஷையே யன்றிப் பாஷாந்தரங்களையும் பயின்று, இரா

ஜாங்கத்தைச் சார்ந்து, அரசர்கள் தயைபெற்று, விவேக கோசரத்தாற் பலவித உத்தியோகங்களைச் செய்தாவது, மற்று மெவ்வித நன்முயற்சியாலாவது, மெய்வருந்திச் சம் பாதிக்க வேண்டும்.

அப்படித் தக்கவழியில் சம்பாதித்த கஷ்டார்ச்சிதமா கிய சுயார்ச்சிதத்தையாயினும், அதனோடு பிதிரார்ச்சிதத்தை யாயினும், அநியாயார்ச்சித மாம்படி "கூத்திக்கிட்டுக் குரங் காகாமலும்" சூதாடித் தோற்காமலும், துர்வியாச்சியத்தில் அழித்து விடாமலும், வறிதே புதைத்துவைத்துப் பின் இழந்து போகாமலும், இல்வாழ்க்கைக்கு நல்ல துணையா கிய கற்புடை மனையாளோடுகூடி, மனதொத்து,

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை."

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை"

"துறந்தார்க்குந் துவ்வாத வர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை"

என்பனவற்றிற்கிணங்கப் பதின்மருக்கும் பகிர்தலாகிய தான தருமங்களைச் செய்து தானுமனுபவித்து, இம்மை இன்பந் துய்த்துப் புகழ்பெற வாழ்ந்து, மறுமையின்ப மடைதற் கேற்கப் பொறி புலன்களை விஷயாகாரமாம்படிச் சுயேச் சையாக விட்டுவிடாமல் அடக்கி, வேதாகமங்க ளுரைத்த வண்ணம் நெறி வழாது ஒழிகல் வேண்டுமென்பதே.

இங்கிலீஷ்க்காரர் சிறுபிள்ளைகள் பாஷையின் எழுத்து முதலியவைகளை வருத்தமின்றி எளிதாக விளையாட்டில் தாமே உணர்ந்துகொள்வதற்குப் பலவித சித்திரப் படங் களை வேடிக்கையாகத் தீட்டிக் காட்டுவதுபோல, உலகத் தில் கல்விபயிலும் சிறுவர் முதலாயினோர் அருமையின்றி எளிதாக வாசித்துச் சிறந்த கல்வியைக் கற்பதும், அதனை ஆராய்வதும், கற்ற கல்விக்குத் தக்கவண்ணம் நடப்பது மாகிய கற்றுய்ந்தொழுகலை இவ்விதமாமென்று படமெழு

திக் காட்டாவிடினும், இதனை விடர்ப்படாமல் ஒருவாறுணர்ந்துகொள்ளும்பொருட்டு இது அச்சிறுவர் முதலாயினோர்க்குச் சிரிப்பும் பரிகாசமுமாய்த் தோன்றியே உபாயமாக மேற்குறித்த பெரும் பயனைத் தரும்படிச் சில பழமொழி முதலாகிய திருஷ்டாந்தங்களைக் கொண்டு வெளிப்படையாகவும் சுருக்கமாகவும் செய்யப்பட்டமையால், இது யாருக்குத் தெரியாதது, இதில் என்ன அருமை யிருக்கின்றது, இதுவும் ஒரு அதிசயமா என்று வரன்முறையே கற்றுணர்ந்த சான்றோர் ஒருபொழுதும் நினையாரென்னும் துணிவு பற்றி இதனை வெளிப்படுத்தலாயினேன்.

கற்றாய்ந்தொழுகல் முற்றிற்று.

## நன்றிமறவாமை.



"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று."

என்னும் திருக்குறளில், தனக்கு ஒருவன் முன் செய்த நன்மையை மறந்துவிடுவது அறமன்று, அவன் செய்த தீமையைச் செய்தபொழுதே மறந்துவிடுவது அறமாமென்று திருவள்ளுவ நாயனாராற் சொல்லப்பட்டமையால், தாய், தந்தை, குரு, தெய்வம், அரசன், பெரியோர் முதலானவர்கள் செய்த நன்றியை எந்நாளும் மறவாமற் சிந்தித்து ஒழுகல் வேண்டும்.

### தாய் செய்நன்றி.

தாயானவள் பத்துமாதம் கர்ப்பத்திற் சுமந்து வருந்திப் பெற்று, கண் திறவாமல் இறகு முளையாமல் இருக்கிற சிறு குஞ்சுகளைப் பறவைகள், தமது சிறகின்கீழ்ச் சேர்த்து அணைப்பதுபோல, ஈ மொய்க்காமலும், எறும்பு கடியாமலும், குருகு பறவாமலும், வெயில் படாமலும், காற்று வீசாமலும், பனி பெய்யாமலும், மார்பிலும் தோளிலும் வயிற்றிலும் அணைத்து,

"முன்னையின் னன்னை முலையூட்டி மையிட்டு மூக்குச்சிந்திக்
கன்னமுங் கிள்ளிய நாளல்லகா ணென்னைக் காப்பதற்கே

அன்னமு மஞ்ஞையும் போலிரு பெண்கொண்ட வாண்பிள்ளைநீ
இன்னமுஞ் சின்னவன்றானே செந்தூரி லிருப்பவனே."

என்ற பாட்டிற் சொன்னபடி முலையூட்டி, மூக்குச் சிந்தி, நாசியூதி, செவியுருவி, நீராட்டி, நெற்றிக்கு திலக்காப்பிட்டு, விழிக்கு அஞ்சனந்தீட்டி, பல பணிகளும் பூட்டி, கன்னங் கிள்ளி, உச்சிமோந்து, கண்ணோடு கண் வாயோடு வாய் முகத்தோடு முகம் வைத்துக் கொஞ்சி, முத்தாடி, அருந்தனம்போலப் பாவித்துப் பொற்றொட்டிலிட்டு,

"ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ
சீரார் பசுங்கிளியே தெவிட்டாத செந்தேனே
பேரார் குலக்கொழுந்தே பெருமானே ஆராரோ—ஆராரோ
இருகண் மணியே இலஞ்சியமே யென்னுயிரே
ஒருகுடைக்கீழ் நீயிவ் வுலகாள வந்தவனோ—ஆராரோ
தெள்ளமுத கும்பமே தித்திக்குஞ் செங்கரும்பே
பிள்ளைகலி தீர்த்த பெரியமத குஞ்சரமே—ஆராரோ
மாணிக்கக் கால்நாட்டி வஜ்ர வடம்பூட்டி [ஆராரோ
ஆணிப்பொற் றொட்டிலிட்டேன் அருமருந்தே கண்வளராய்—
அத்தை மடிமேலும் அம்மான்மார் தோள்மேலும்
வைத்துமுத் தாடும் மரகதமே கண்வளராய்—ஆராரோ"

என்று தாலாட்டிச் சீராட்டி, நாடோறும் வாயது கையது கொடுத்துப் போஷித்து, தன் கன்றுக் கிரங்குங் கறவை போல் நெஞ்சிரங்கி, நோயணுகாது மருந்தளித்துப் பத்திய மிருந்து, கண்ணை இமைகாப்பதுபோல் அபாயம் வராமற் காத்து, நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துப் பெற்ற தாயென்று குறியாமல், தன்னைக் கைப் பிடித்தலாகிய செய்தற்கரிய குற்றத்தைச் செய்தாலும் அதை அப்படி நினையாமல், பிறருடனுஞ் சொல்லாமல், தன் புருஷனுக்கும் தெரியவொட்டாமல், தானுந் தண்டியாமல், ஐயோ! மகனுக்குப் பித்தம் தலைமண்டை கொண்டுவிட்டதே யென்று துக்கப்பட்டு, பித்த சாந்திக்கேற்ற சாதனங்களை அடுத்துச் செய்து, பின்பு இப்படிச் செய்தானே என்பதையும் கடுகளவாவது நினையாமல் அன்பாய்ப் பாலிப்பதையும்,

## தந்தை செய்நன்றி.

தந்தையானவன் பசியாமல் ஊணும் உடையுந் தந்து, துஷ்ட சகவாசஞ் செய்பவாவது, ஓடி யொளித்துத் தூர்த்த னுய்த் திரியவாவது, சூதாடிப் பொய்பேசிப் புறங்கூறவாவது தாசிகாந்தனாய் வேசிவீடு நுழைபவாவது, துர்வியாச்சியந் தொடுக்கவாவது தன்னிச்சையாய் விடாமல் அடக்கி,

"அள்ளிக் கொடுக்கின்ற செம்பொன்னு மாடையு மாதரவாக்
கொள்ளிக்கும் பட்ட கடனுக்கு மென்னைக் குறித்தலல்லால்
துள்ளித் திரிகின்ற காலத்தி லேயென் றுடுக்கடக்கிப்
பள்ளிக்கு வைத்தில னேதந்தை யாகிய பாதகனே."

என்று நினைத்து, பின்பு தான் வியசனப்படுதற்கு ஏதுவாகத் தன்னை மூடனாய்ப் போகவொட்டாமல், இதங்தெரிந்து ஐந்து வயதிலே கல்விக்கழகத்தில் விடுத்துப் பூரண பண்டிதனாகக் கல்வி பயிற்றுவித்து, சபையாரெல்லாம் பூஜ்யதை பண்ணத்தக்க யோக்கியனும்படி செய்வதையும் மறவாமல்,

"அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்" என்பதனாலும் "தந்தைதாய்ப்பேண்" என்பதனாலும், அவர்களை இகழாமல் தெய்வமாக எண்ணி வணங்கி அவர்களுக்குக் கீழமைந்து, அவர்கள் குற்றங்களைப் பிறரறியாது மறைத்து, தாய்சொலிற்சிறந்த வாசகமில்லை" என்றும், "தந்தைசொன்மிக்க மந்திரமில்லை" என்றுஞ் சொல்வதனால், அவர்கள் சொல்லைக் கடவாமற் சிரசாவகித்து, மாதுரு பிதுருவாக்கிய பரிபாலகனும், தாய் தந்தையர் தன்னை அன்ன வஸ்திராதிகளிற் குறைவில்லாமல் போஷித்ததுபோல, ஒன்றுமொன்றுங் குறைவில்லாமல் அன்புடனே தானும் அவர்களைப் போஷிக்க வேண்டும். பெற்றவர்களுக்குப் புத்திரனன்றிப் போஷகன் வேறே யார்?

குழந்தைப் பருவத்தில் தானிச்சைப்பட்டுக் கேட்ட பதார்த்தங்களை யெல்லாம், தனக்கு அவர்கள் பிரியத்துடன் வழங்கியதுபோல, வார்த்திகத்தில் அவர்கள் ஆசைப்பட்ட பண்டங்களையெல்லாம், தன்னைக் கேளாததற்கு முன்

னமே குறிப்பறிந்து தான் அவர்களுக்கு வழங்கவேண்டு மன்றோ? "தாயிடப் பிள்ளையிடத் தானே மனமகிழ" என் கின்றார்களே.

தன்மேல் ஈப்பறவாமல் அவர்கள் தன்னைக் காத்தது போல, அவர்கள்மேல் தூசுபறவாமல் தானும் பாதுகாக்க வேண்டும்.

மாதுரு பிதுரு கைங்கரியம் தனக்கு லபிக்கவேண்டு மென்று, தான் கடவுளைப் பிரார்த்தித்து எதிர்பார்த்திருந்து, அவர்கள் தேகவியோக மானவுடனே அவர்களுக்குப் பிரே த சமுஸ்கார முதலாகிய கடன்களெல்லாம், லோபமில்லா மற் சிரத்தை யுடனே நடத்த வேண்டும். தாய்கடன் கழிப்ப தற்குச் சர்வசங்க பரித்தியாகஞ்செய்த சந்நியாசிகளும் காத் திருக்கின்றார்களே. இதற்குத் திருஷ்டாந்தம் — முற்றத் துறந்த பட்டினத்தார், தாய் இறக்குமளவும் காத்திருந்து அவள் மரித்த பின்பு, வாழைமரங்களைக் காஷ்டமாக அடு க்கி, அதன்மேல் அவளைக்கிடத்தி வாய்க்கரிசி யிட்டு,

"முன்னையிட்டதீ முப்புரத்திலே
பின்னையிட்டதீ தென்னிலங்கையில்
அன்னையிட்டதீ யடிவயிற்றிலே
யானுமிட்டதீ மூள்கமூள்கவே."

என்று சொல்லிக் கொள்ளி வைத்துக் குடமுடைத்துப் பா ல்தெளித்து உத்தர கிரியைகளும் செய்து முடித்துச் சென் றார் என்பதே.

தனது கல்வி, அறிவு, ஆண்மை, பொறுமை, உண்மை, ஒழுக்க முதலியவைகளைப் பார்த்து, இந்த மகானுபாவன் வித்தையில் அகத்தியனோ? அறிவில் ஆதிசேஷனோ? ஆண் மையில் விக்கிரமாதித்தனோ? சாந்தத்தில் தருமராஜனோ? வாய்மையில் அரிச்சந்திரனோ? நீதியில் மனுச்சக்கரவர்த்தி யோ? என்று அதிசயித்து, அம்மம்ம! இவனைப் பெறுவத ற்கு இவன் பிதா என்ன தவத்தைச் செய்தானோ என்று சகலமானவர்களும் சொல்லும்படி, நல்ல கீர்த்தியைப் பிதா வுக்குச் சம்பாதித்துக் கொடுக்கவேண்டும். பெரும்பாலும் தாய் தந்தையர் பெயரை விளக்குகிறதற்குத்தானே பிள்ளை பிறக்கிறது.

மேலும் தன்னைப் பெற்றபொழுது அடைந்த மகிழ்ச்சியிலும் அதிக மகிழ்ச்சியைப் பெற்றதாய் அடைய, உன் மகன் சகலகலை வல்லவன், சாதுரியகுண சம்பன்னன் என்று அறிவுடையோர் சொல்லும்படி அவள் செவியிற் கேள்விப்படச் செய்யவும் வேண்டும்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்."

இவ்வாறன்றித் தாய்தந்தையர் தன்னைப் பெற்று வளர்த்த அருமை பெருமைகளை எவ்வளவும் நினையாமல், அவர்களென்னைப் பெறுகிறதற்கு இரவும் பகலும் ஊண் உறக்கமின்றி உபவாசித்து, உடம்பை யொறுத்து, ஊசி முனையில் நின்று, அருமையாகத் தவம் செய்தார்களோ? ஆடு நனைகிறதென்று கோநாய் குந்திக்கொண் டழுமோ? எங்கள் அப்பன் மதப்பட்டான், ஆத்தாளெதிர்ப்பட்டாள், நான் வெளிப்பட்டேனே யல்லாமல் வேறென்ன? என்று வாய் கூசாமற் பிதற்றுகின்ற வம்பன் இவனென்றும்,

தன்குற்றத்தைக் கண்ட பிறனொருவன், வெட்கப்பட்டு நீ இப்படி அக்கிரமமாய் நடக்கலாமோ என்று தன்னைக் கேட்க, தான் நாணாமல் அடபோ! நீ என்ன கண்டாய், இஃது அவசியம் பிதுராசாரமென்று சொல்லி தன் பிதா முதலானவர்கள் செய்த குற்றத்தையும் வெளிப்படுத்திய பேதை இவனென்றும்,

உட்சுவரிருக்கப் புறச்சுவர் பூசுவார்போலத் தன்னைப் பெற்ற மாதா பிதா முதலானவர்கள் தங்கள் உதர போஷணைக்கு ஓர் ஏதுவுமில்லாமல், கொழுக்கொம்பில்லாத கொடி போல் அலைந்துகொண் டிருக்கையில், அவர்களை ஆதரியாமல், "மாதா மனமெரிய வாழா யொருநாளும்" என்பதையுமுணராமல், தனக்கு யாதொரு சம்பந்தமுமில்லாத அந்நியர் மேல் இரக்கங்கூர்ந்து, அவர்களைச் சம்ரட்சணை செய்கின்ற டம்பன் இவனென்றும்,

ஒரு பெண்சாதி போனால் அநேகம் பெண்சாதிமார் வருவார்கள்; பெற்றதாய் போனால் வருவாளா என்று பார

மார்த்திகமாக யோசியாமல், ஏடாகூடமாய், எந்தப் பெண்டு களையும் தாயென்றுற் குற்றம் பாராட்டார்கள். மனைவி யென்றுற் குற்றம் பாராட்டா திருப்பார்களா? ஆதலால், தாய் முதலானவர்களிலும் மனைவியே தேடக்கிடையாத திர வியமென்று பெரிதாக மதித்து, அவள் பாதம் பூமியிற்பட் டால் அபசாரமாமென்று நடுங்கி, அவளைப் பஞ்சகல்யாணி குதிரைமேல் ஏற்றி, பெற்றதாய் தலைமேற் புல்லுச் சுமை வைத்து, கொண்ட பெண்டாட்டிக்குக் குடை பிடித்துக் கொண்டு போகின்ற மாபாவி இவனென்றும்,

தாயைத் தாசியென்றும் வேசியென்று இழிவாகப் பேசி ஏசி, கொஞ்சமாவது பழிக்கஞ்சாது கொலைசெய்த பஞ்சமா பாதகன் இவனென்றும்,

விளக்கைச் கையிலே பிடித்துக்கொண்டு கிணற்றில் விழுவாரைப்போல, பாவமென்று தெரிந்திருந்தும் காம விகாரத்தாற் கண் தெரியாது மதிமயங்கி முறைபாராமல் மிருகம்போலப் பெற்றதாயைப் பெண்டாள நினைக்குஞ் சண்டாளன் இவனென்றும்,

தன் தகப்பனுக்குத் தான் பிச்சைக்கஞ்சி வார்க்கும் எச்சில் ஓடு காணுமற் போனதனிமித்தம், கொஞ்சமாவது பச்சாத்தாபமில்லாமற் பழியென்றும்பாராமல், தடிகொண்டு சாடித் தகப்பனைத் தண்டித்த தறுதலை இவனென்றும்,

பிதா புத்திரனைக் குறித்துச் சிரஞ்சீவி தம்பி இன்ன முதலியாருக்குச் சுவாமி கிருபையால் சகல போகபாக்கிய மும், சந்தான சமர்த்தியும், வாகனபிரதிஷ்டையும், அகண்ட சாம்பிராச்சியமும், லட்சுமிவிலாசமும், ராஜவசிகரமும், தீர்க் காயுளும், சதாகாலமும் வற்றாத சமுத்திரம்போலக் குறை வின்றி மேன்மேலும் பெருகவுண்டாகுக வென்று, உபசார மாகவும் பட்சமாகவும் எழுதியனுப்பிய கடிதத்தை வாசித் துப்பார்த்து, ஓ! ஓ! இவனென்ன சர்வ மூட்டாளா யிருக் கிறுன். ராஜமாநிய ராஜபூஜித மகாராஜ ராஜஸ்ரீ முதலியா ரவர்கள் வடிவில் மன்மதனும் நாணத்தக்கவராய், கல்வியிற்

சரசுவதிக்குக் குருபீடமாய், புஜபலத்தில் வாயுகுமாரனை ஜயிப்பவராய், தர்மத்தில் தருமபுத்திரன் தலையை மிதிப்பவராய், ஒழுக்கத்தில் அணுவளவும் பிசகாதவராய், சத்துருக்கள் நடுங்குஞ் சங்கிராம சிங்கமாய், பூவையர் மால்கொள்ளும் புருஷோத்தமனும், சற்சனர் மெய்ச்சும் சபாபூஷணமாய், ஒப்புயர்வில்லாத உத்தம சற்பாத்திரமாய் விளங்காநின்ற மிட்டாதாரராகிய இன்ன முதலியாரவர்கள் திவ்ய சமுகத்திற்கு, அடியேன் தங்கள் ஊழியனாகிய இன்னான் சத்வினய பயபக்தியுடனே, தாங்களிருக்குந் திக்குநோக்கிச் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து எழுதிக்கொண்ட விண்ணப்பமென்று, நமது உத்தியோக ஸ்திதிக்குத்தக்க மரியாதையாயெழுதாமல், எவனோ காமாட்டி யொருவன் காட்டுப்புறத்தானுக்கு எழுதுவதுபோல, இப்படியு மெழுதினான், பார்த்தையா வென்று முகங்கறுக்க, கண்சிவக்க, வாய் பதைக்க, பல்லை நெறநெறவென்று கடித்து, மீசை படபடவென்று துடிக்க, கலகலவென்று சிரித்து, உதட்டைப் பல்லால் அதுக்கி, கையோடுகை புடைத்து, வாய், கண், மூக்கு, செவிகளிலிருந்து குப் குப்பென்று புகையெழும்ப, திக் திக்கென்று நெருப்புப் பொறிபறக்க, பொள்ளென்று சரீரம் வெயர்க்க, பெருமூச் செறிந்து, புருவம் நெற்றிமேல் வில்லைப்போல் வளைந்தேற, கொடிய காலாந்தகனைப் போலக் கோபித்து, தன் பக்கத்தில் இருந்தவர்களெல்லாம் கிடுகிடென்று நடுநடுங்கி நாவறண்டு நெஞ்சுலர்ந்து தடுமாறித் தத்தளிக்க, உக்கிராகாரமாகக் கொக்கரித்து ஆர்ப்பரித்துத் தகப்பனை அக்கணமே கைப்பிடியாகப் பிடித்துவரச்சொல்லி அவனுள்ளீரல்கருகி இஃதென்னை கொள்ளையென்று குடர் குழம்ப, கண்களை உருட்டி விழித்து உறுக்கிப் பார்த்து, பிரளயகால ருத்திரனைப்போல அட்டகாசஞ் செய்து, ராஜாதிராஜ ராஜமார்த்தாண்ட ராஜ உத்தண்ட ராஜகெம்பீர ராஜ குஞ்சரமாகிய அகண்ட மண்டலேசுரனென்று, சக்கிரவர்த்திகளும் சரணாகதி செய்யத்தக்க கனம்பொருந்திய நாம், நத்தைக்குள் முத்துப் பிறந்ததுபோலவும், சேற்றிற் செங்கழு

நீர் பூத்ததுபோலவும், சுடுகாட்டில் வில்வமரம் முளைத்தது போலவும், எவ்வளவோ தாழ்ந்த நிலைமையிலிருக்கின்ற உனக்குப் பிள்ளையாய்ப் பிறந்ததைப்பற்றியும், பிச்சைக்காரன் பணப் புதையல் கண்டெடுத்தாற்போல, மூதேவி மூண்டை மகனாகிய நீ, லட்சுமி புத்திரனாகிய நம்மைப் பெற்றதைப்பற்றியும், இப்படிக்கெல்லாம் அவமானம் படுத்தலாமா? நாலுபேர் கேட்டால் நகைக்கமாட்டார்களா? என்று தகப்பனைத் தாட்சணியமின்றித் தாறுமாறாக வைது நீசெய்த குற்றத்திற்கு ஐம்பது ரூபாய் அபராதங் கொடுக்க வேண்டுமென்று கடுந்தண்டம் விதித்த துராங்காரி இவனென்றும், தானும் கெட்டபெயர் எடுக்கலாகாது, தாய் தகப்பன் பெயரையுங் கெடுக்கலாகாது.

குருவானவர் செய்நன்றி.

குருவானவர் ஆமை தானிட்ட முட்டைகளை இடைவிடாது நினைப்பதுபோல, சிஷனுக்குப் பரிபாக முண்டாக வேண்டுமென்று தமது திருவுளத்தில் நினைத்தும், மீன் தன் சினையை நோக்குவதுபோலச் சிஷனது அஞ்ஞானம் நீங்க அவனிடத்திற் கிருபாநோக்கம் வைத்தும், பறவை தானீன்ற அண்டத்தைச் சிறகினு லணைப்பதுபோலத் தேகபந்த மொழியக் கரத்தினால் அவனைப் பரிசித்தும், தமது சந்நிதானத்தில் இருக்கச்செய்து அவன் முகத்தை நோக்கிப் பின் வருமாறு தத்துவங்களைப் போதிப்பார்.

சித்து, அசித்து, ஈசுரன் என மூன்று தத்துவங்களுண்டு; அம்மூன்றனுள், சித்தென்பது ஆத்மா, அசித்தென்பது சரீரம், ஈசுரனென்பது கடவுளாம்.

மேற்படி ஆத்மா அணுவாய் நித்தியமாய்க் கிஞ்சிக்கியத்துவ முடையதாய்ச் சுதந்தரமில்லா திருப்பது; சரீரம் அநித்தியமாய் சடமாயிருப்பது; கடவுளோ நித்தியராய் சர்வஞ்ஞராய்ச் சர்வசுதந்தரராய்ச் சர்வசக்தராய்ச் சர்வபரிபூரணராயிருப்பவர்.

இந்தச் சரீரம், பிருதிவி முதலாகிய ஸ்தூல பூதங்களும் சப்த ஸ்பரிச முதலாகிய சூட்சும பூதங்களும், சேர்ந்தானது.

இச்சரீரம் நீ யன்று; ஆத்மாவே நீ; இச்சரீரமோ உனக்கு அந்நியமாயிருந்தும் உன்னைவந் தடைந்தது; அவிவேகத்தால் நீ யல்லாத தநுகரணங்களை நீ யென்றும், உனதல்லாத புவன போகங்களை உனதென்றும் அபிமானித்து முறையே நான் என்றும் எனது என்றும் அகப்பற்றும் புறப்பற்றுமுடையனாய் பல பாவங்களையுஞ் செய்து, உழல வேண்டி வந்தது. இதற்கு நிவர்த்தி எங்ஙனமெனில்,—

பொறிகளாகிய மதயானைகளைப் புலன்களின்மேற் செல்லவொட்டாமல் அறிவென்னும் அங்குசத்தால் அடக்கி, நெஞ்சமாகிய குதிரையைப் பகிர்முகமாகிய செண்டுவெளியில் ஓடவிடாது, பக்தியாகிய கடிவாளத்தை யிறுக்கி வைராக்கியமென்ற தளையைப் பூட்டி, அந்தர் முகத்தில் நிறுத்தி, பரமகாருணியராகிய கடவுளைத் தியானித்து, அவருக் கடிமை பூண்டு, "அற்றது பற்றெனி னுற்றது வீடு" என்ற வண்ணம், அகங்கார மமகாரமாகிய பற்றுக்களைக் கைவிட்டு, இனித் துஷ்கிர்த்தியங்களைச் செய்யாது, கடவுள் ஆணைக்கமைந்து அவருடைய திருவடித் தொண்டு செய்து, உனக்கொன்று மில்லையென்னும் உபாயபர தந்திரனாயொழுகினால், பந்தங்கெட்டு மோட்சங் காணியாட்சி யாகுமென்று அநுக்கிரகித்து, மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களாலும் காணப்படாத கடவுளைக் காட்டிக்கொடுத்த அவரது உபதேசத்தை மறவாது சிந்தித்து, சதாகாலமும் அவர் கிருபைக்குப் பாத்திரமா யிருக்கவேண்டும்.

குருவைச் சாமானியராக நினையாமல், மானைக்காட்டி மானைப் பிடிப்பதுபோல, மாநுட வுருக்கொண்டு வந்தவராகப் பாவித்து, அவர் வாக்கிலிருந்து வரும் மந்திரத்தைக் கேவலம் மனிதர் வாய்ச்சொல்லாக மதியாமல், கடவுளது திருவாக்கிலிருந்து தொன்றுதொட்டு பரம்பரையாய் வந்த பரமார்த்த மென்று உண்மையாக மதிக்கவேண்டும்.

எப்படிப்பட்ட மகாத்துமாக்க ளானாலும் குருவார்த்தைக்கு எதிர்வார்த்தை பேசாமலும், குரு வாய்மொழியைக்

கடவுள் திருவாய்மொழியாக நம்பினலல்லவோ அவர்களுக்கு அநேக கற்பங் கழிந்தாலும் அழியாது நித்தியமாயிருக்கின்ற மோட்சசித்தி யுண்டு. நம்பாதவர்களுக்கு என்ன வுண்டு?

குருவின் உபதேசமே காமக்குரோதாதி உட்பகையைச் சேதிக்கின்ற வாளாயுதமென்றும், குருப்பிரசாதமே கடவுள் வரப்பிரசாதமென்றுஞ் சிந்திக்கவேண்டும். எங்கும் குருவில்லாத வித்தையில்லை யாதலால், எப்பொழுதுங் குருவைத் தொடர்ந்து ஆச்ரயிக்க வேண்டுமல்லவோ? குரு பாதமே கதியென்று சமுத்திரத்தில் இறங்கினவனுக்கு, அச்சமுத்திரங் கணுக்கா லாழமா யிருந்ததென்றும், என் பாதமே கதியென் றிறங்கினவன், அதில் அமிழ்ந்து இறந்தானென்றுஞ் சொல்லக்கேட் டிருக்கிறோமே.

ஒருநாள் ஒரு சிஷன் குருவின் உபதேசத்தைக் கேட்டவுடனே, "சுண்ணும்பிலிருக்கிறது சூட்சம், சூட்சத்திலிருக்கிறது மோட்சம்" என்று அறியும் அறிவில்லாமையால், இஃதென்னை ஆச்சரியம்? ஆருக்குத் தெரியாது; அண்டை வீட்டுக்காரன் பெயர் என்று முன்னமே சொல்லலாகாதா? ஏன்காணும் இதற்காக இத்தனைபணம் செலவிடச்செய்தாய்? என்று சொன்னதாகவுஞ் சொல்லுகிறார்களே!

'கூரையேறிக் கோணற்சுரைக்காய் அறுக்காத குருக்களா, நாளை வானத்தைக் கீறி வைகுந்தம் காட்டப்போகிறார்' என்று, குருவைப் பரிகாசஞ்செய்த சிஷனு மிருந்தான் அல்லவா? இவ்விதமான அபக்குவர்களுக் கெல்லாம் பந்தம் நீங்குமா?

ஆசாரியர் சிஷனைத் தேடிவர, அவரைக் கண்டமாத்திரத்தில், "கும்பிடப்போன தெய்வங் குறுக்காக வந்தது" என்று எண்ணி, அதிசீக்கிரமாக எழுந்திருந்து எதிர்கொண்டுபோய்த் தீர்க்கதெண்டம் சமர்ப்பித்து, கைகட்டி வாய் பொத்தி உபசரியாமல், குந்தியபடி இருந்து ஏண்டா குருக்களே! எங்கடா வந்தாய்? சாமி! சாமி! தெண்டம் ஐயா!

என்ற கெர்வபுஞ்சமாகிய சர்வ மூடனைப்போலக் குருவை அசட்டை பண்ணினவன் அதோகதி யடைவான்.

## கடவுள் செய்ந்நன்றி.

கடவுளானவர் தமது நிரேதுக் கிருபையினாலே, மூலப் பிரகிருதியில் அழுந்திக் கட்டுப்பட்ட ஆத்மாவுக்கு, கரசரணாதி அவயவங்களைக் கொடுத்துப் பூமியில் ஜெனிப்பித்துப் போஷித்து, பரிபாலித்து, பரமாத்மாவாகிய தமக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள தாரதம்மியம் இவ்வகைப்பட்டதென்று வேதாகமங்களின் மூலமாக விளக்கி, பூனையானது தன்னைத் தழுவத் தெரியாத சக்தியற்ற குட்டியைத் தன் வாயினாற் கவ்விச் செல்வதுபோல, தம்மை ஆஸ்ரயித்து வழிபாடு செய்ய அறியாத சக்தியற்ற ஆத்மாவானது, அறிந்து வழிபடச் செய்தும், குளவியானது, அற்ப ஜெந்துவாகிய புழுவினைத் தன்னுரு வாக்குவதுபோல, தமது திவ்விய சொரூபத்தை அது மருவப் பண்ணியும், உலகத்தார் மேகத்திற்கு ஒரு நன்மையும் செய்யாதிருந்தும், அம்மேகம் அவர்களுக்கு க்ஷேமமுண்டாக மழையைச் சொரிவதுபோல கடவுளானவர் ஆத்மாவினிடத்திற் கைம்மாறு வேண்டாது, அடைதற்கரிய அசாத்தியமாய் ஒப்பற்ற பெரியவீட் டின்பத்தை அடையும்படி செய்யும் மகோபகாரத்தை, "வான் செய்த நன்றிக்கு வையகமென்செய்யுமதை மறந்திடாதே" என்றபடி எப்பொழுதும் மறவாது தியானிக்கவேண்டும்.

தெய்வபக்தியே தீவினையாகிய உளையைக் கடந்து செல்லும் ஊன்றுகோல்; தெய்வதரிசனமே பிறவிக்கடலைக் கரை காணும் நாவாய்; தெய்வத்தியானமே முத்தியாகிய மேல் வீட்டிலேறும் நூலேணி; தெய்வத்தின் அருளுதயமே அஞ்ஞான இருளையொழிக்கும் ஆதித்தியோதயம்; தெய்வவணக்கமே நரகவாசலை அடைக்கும் தாழ்; தெய்வத்தை வாழ்த்தும்வாழ்த்தே பாசவிலங்கைத்தறிக்கும் வெட்டிரும்பு. தெய்வபக்தி உதிக்காமல் உலகபாசம் ஒழியென்றாலும் ஒழியாது. தெய்வத்தைத் தொழாமற் பாவநிவாரண மாகிறது பிரயா

சம். தெய்வத்தை ஆராதிப்பதல்லவோ தவஞ்செய்கை? அதற்கு அந்நியமாகச் செய்வன வெல்லாம் அவஞ் செய்கையே. ஒரு நொடிப்பொழுதாவாது தெய்வத்தைத் துதியாத நாவுக்குப் பரிசுத்தமேது? தெய்வசிந்தனையினாலன்றிச் சித்தசுத்தி சொப்பனத்திலும் வருமா? சுயகாரிய துரந்தரனுஞ் சுவாமிகாரிய வழுவழுகனுமா யிருப்பவனுக்குத் தெய்வகடாட்சம் எவ்வாறு கிடைக்கும்? குழந்தையுந் தெய்வமுங் கொண்டாடுமிடத்தில் என்கிறார்களே.

சூரியரஸ்மி பாயாததும், காற்றுவீசாததுமாகிய இடமுமிருக்கலாம். கடவுளின் வியாகபத்திற்கு அந்நியமோ ஒன்றுமில்லை. ஆதலால், அவருக்கு அகம் புறம் எங்கும் முகம், சகலாண்ட சராசரமும் அவருடைய திருவுருவமாம். அதனால் அவர் காணாத காட்சியும், அவர் கேளாத கேள்வியும், அவர் பேசாத பேச்சும், அவர் அறியாத விஷயமு மில்லை. அதுபற்றி எவர்களும் அவராணையை மீறிக் குற்றஞ் செய்யவும், செய்த குற்றத்தை மறைக்கவும், ஒரு விதத்திலாவது அவரை வஞ்சிக்கவுங் கூடாது, என்றாலும், எக்காலமும் அவர் திருவுளத்திற்குப் பாங்காய் நடக்கின்ற பக்தர்செய்த குற்றத்தை மாத்திரம் அவர் கண்டும் காணாமலும், உணர்ந்தும் உணராமலு மிருப்பார்.

சிலர் தங்களுக்கு வருத்தம் சம்பவித்த காலத்தில், தாம் செய்தவெல்லாம் குறையாயிருக்க நானென்ன குறை செய்தேன் என்றும், தாம் செய்த சதியை நினையாமல் என்னளவில் தெய்வம் சதிசெய்ததே என்றும், அதை வணங்குகிறது தானேதுக்கு? அதற்கென்ன கண்ணில்லையா? என்றும், சாற்றுக் கில்லாத வாழைக்காய் பந்தலிலே கட்டித் தொங்கவிருக்கிறதோ? இப்படிப்பட்ட ஆபத்துக்கு உதவாமல் இனியென்னதான் சாதிக்க விருக்கிறது? என்றும், தெய்வத்தை நிந்திப்பார்கள்; அது நன்மையே யன்று.

குருட்டுக்கண் தூங்கியென்ன விழித்தென்ன? தெய்வபக்தி யில்லாதவர்கள் கங்காஸ்நானஞ் செய்தாலும், வனவா

சம் பண்ணினாலும், மலைக்குகைக்குள்ளே கண்ணைத்திறவாமல் யோகத்தி லிருந்தாலும், முக்தி யடையமாட்டார்கள். ஆமை, மீன், தவளை, முதலானவைகள் கங்கா நதியில் உற்பவித்து, அக்கங்கைக் குள்ளேதானே மூழ்கியிருந்தும், யானை, புலி, கரடி முதலியவைகள் காட்டில் உற்பத்தியாகி, அக்காட்டினிடத்திலேயே வாசஞ் செய்தும், பகற்குருடாகிய கோட்டான் மரப்பொந்துக் குள்ளேதானே கண்ணைமூடிக்கொண்டிருந்தும் என்ன பிரயோசனம்?

தத்துவவிசாரணை செய்து, தாடி சடை வளர்த்து, தலையை முண்டித்து, தண்ட கமண்டல மேந்தி, தவவேடம் பூண்டிருந்தும், தெய்வத்தியான மில்லாதவர்க்கு என்ன பயனுண்டு? அவர்கொண்ட கோலம் அலங்கோலமான பேய்க்கோலம், அல்லது பிணக்கோலமே!

தெய்வத்தை அஞ்சலியாத கை நெற்குற்றும் உலக்கை, அல்லது வீட்டு உத்திரக்கை. தெய்வத்தைப் பணியாத முடி கழனியில் நடும் நாற்றுமுடி, அல்லது கம்பள நார்முடி. தெய்வத்தைத் தரிசியாத கண் நுங்குக்கண், அல்லது பாம்புப் புற்றுக்கண். தெய்வத்தை வாழ்த்தாத வாய் மலஜலமோடுங் கால்வாய், அல்லது சுண்ணாம்புக் களவாய். தெய்வஸ்தலத்தைத் தேடிச்செல்லாத கால் கொல்லைப்பரண் கால், அல்லது பந்தலுக்கு நாட்டுங்கால். தெய்வஸ்துதியைக் கேளாத செவித்தொளை பருத்த நுகத்தொளை, அல்லது பாழான சாரத்தொளையாம்.

காற்றுக் கெதிரே ஏற்றிய விளக்கைப்போல, அடிக்கடி யலைந்து, ஓயாமலாடும் பம்பரம்போல இடைவிடாது சுழன்று, ஒரு வேலையு மில்லாவிட்டாலும் நிற்க நேரமில்லாமல் திரியும் நாய்போல அரைக்கணமுந் தங்காது, காடுமலை காறுக ளெல்லாங் கடந்து, லோகாலோகமெங்கும் ஓடியுழல்கின்ற பொல்லாத மனமென்னும் குரங்கு, அஞ்ஞானமாகிய வெறிகொண்டு, ஆணவமாகிய மரத்திலேறி, பலவகை யெண்ணமாகிய இலைகள் செறிந்த ஆசையாகிய கிளைக

ளைத் தாவி, தீவினையாகிய கனிகளைக் கொள்ளைகொண்டு, சேஷ்டை செய்யவொட்டாமல், அதனை நிராசையாகிய கயிற்றினுற் கட்டி, விடயவாதனை யில்லாமல் அடக்கிவைத்தாலும், தெய்வத்தை உணரும் ஞானமில்லாதவர்களுக்கும் மோட்சத்திற்கும் வெகுதூரமே.

"ஐயறி வறிந்தவை யடக்கினவ ரேனு
மெய்யறிவி லாதவர்கள் வீடது பெறுரே."

என்றுஞ் சொல்லி யிருக்கின்றதே.

தெய்வநிலை இத்தன்மைத்தென்று, அத்தெய்வத்தின் அருளைக்கொண் டறிந்தாலன்றி மற்றொரு விதத்தில் தெளியக்கூடாமையால், யானைகண்ட குருடர் போலவும்,

"தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரு மஃதே
வாள்கொண்ட கண்ணுர் யாரே வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத் தன்னு னுருவுகண் டாரை யொத்தார்."

என்றும் போலவும், உலகத்திலுள்ள பற்பல சமயத்தாரும் பற்பல அவசரமாகத் தாம்தாம் கண்டதையே பொருளென மதித்து, அதற்குத் தக்க யுக்தி சாதனங்களைக்கொண்டு சாதிப்பார்கள். அதை விரிக்கிற் பெருகுமாதலின் அது நிற்க.

ஔவையானவள், புகழேந்தியென்னும் புலவரை நோக்கி, தன் ஐந்துவிரலையு முடக்காமல் நெருக்கி உள்ளங்கையைக் குவித்தும், ஐந்துவிரலையு முடக்கிப் பிடித்தும், கடைவிர லிரண்டையும் முடக்கி, மற்ற மூவிரலையுங் கோணமாக நிறுத்தியும், நால்விரல் முடக்கிச் சுட்டுவிரலை ஊர்த்துவமுகமாக நிறுத்தியும், ஐந்துவிரலையுங் குவித்தும் காட்டி, இந்த ஐந்து சமிக்கையைக் குறித்து ஒரு வெண்பாப் பாடவேண்டும் என்ற மாத்திரத்தில், அவர்,

"ஐய மிடுமி னறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவே யாயினுநீ ரிட்டுண்மின்—தெய்வம்
ஒருவனே யென்று முணரவல் லீரேல்
அருவினைக ளைந்து மறும்."

என்று பாடிய பாடலுள்ளும்,

"எத்தேயத் தெத்திறத்தோ ரெவ்வருணத் தெவ்வுருவி னென்னையாய்ந்தார், அத்தேயத் தத்திறத்தோர்க் கவ்வருணத் தவ்வுருவி னவர்நே ராவன், முத்தேவர் முத்தொழிலு முக்கணமுங் கடந்துமறைமுடிவின், முத்தி வித்தாகித்தனிநின்ற பரப்பிரமப் பழம்பொருள்யான் மெய்க்கொள் வாயே."

என்ற செய்யுளுள்ளும், தெய்வ மொன்றென்று சொல்லுகின்றதனுலும், காரிய மாகிய பணியும் பாண்டமும் பலவாயினும், காரணமாகிய பொன்னும் ஒன்றாய் விளங்குவதனுலும், தெய்வ மொன்றென்றே தெளியவேண்டு மல்லது, பலவென்று பிரமிக்கலாகாது.

## அரசன் செய்ந்நன்றி.

அரசனுனவன் உலகத்திற்கு அன்பிற்சிறந்த தாய்போலத் தோன்றி மன்னுயிர் யாவையுந் தன்னுயிர்போலக் கருதி,

"மாநிலங்கா வலனென்பான் மன்னுயிர்காக் குங்காலை
தானதனுக் கிடையூறு தன்னுற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனே."

என்ற வண்ணம், தன்னுலாவது, தன் பரிசனத்தாலாவது, பகைவர்களாலாவது, திருடர்களாலாவது, மற்ற உயிர்களாலாவது, சிறிதுங் கொலை களவு கர்ப்பனை முதலாகிய உபத்திரவம் அணுகாமல், குடிகளுக்கு க்ஷேமமுண்டாகும்படி முறைதவருது செங்கோல் செலுத்தி, பிரஜைகளிடத்திற் கடுஞ்சொற் சொல்லாமலும், கடுந்தண்டம் விதியாமலும், அவரவர் தாரதம்மிய மறிந்து பட்சபாத மில்லாமல், தமையாட் பரிபாலனஞ் செய்கின்றதை மறக்கலாகாது.

ஆரைப் பகைத்தாலும் அரசனைமாத்திரம் பகைக்கலாகாது; அரசனவையி லிருந்து வறிதே அடிக்கடி நகைப்பதும், பரிகாசஞ் செய்வதும், ஒருவர் செவியி லொருவர் இரகசிய சமாசாரஞ் சொல்வதும், அரசனுக் கெதிரே அடக்கமில்லா

திருப்பதும், அரசனேடெதிர்த்து அவனை அலட்சியமாகப் பேசுவதும், வீண்போகாமல் திரவிய நஷ்டத்தையும், மான பங்கத்தையும், பிராண சேதத்தையும் வருவிக்கும். செங் கோலுக்கு முன்னே சங்கீதமா?

"செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து,"

என்றும் சொல்லுகின்றதே.

அரசனது தயையைப் பெற்று, அவனை அந்நியோந்நிய மாகச் சிநேகித்து, அவனுக்கு அநுகூலப்படாத விரோதிக ளையெல்லாம் ஜெயித்து, அவன் மனமகிழும்படி அநேக திர வியங்களைச் சம்பாதித்துக் கொடுத்து, அவனால் நன்குமதிக் கப்பட்டவர்க ளானாலும், அவன் விஷயத்தில் நெறிதவறி இலேசமாத்திரம் பிழைசெய்தாலும் குடிமுழுகிப்போம். வே ங்கைப்புலியும் ராஜாவும் சரியென்கிறார்களே! ஆதலால் அவனை விஷசர்ப்பம் போலவும், கடுநெருப்புப் போலவும் நினைத்து அவனுக்குப் பயந்து நடக்கவேண்டும்.

துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்கிற அரச னில்லாத நாடு, தன்னரசு நாடாய் உபத்திரவத்திற்கே உறை விட மாகும்.

"அரச னுடைமைக்கு ஆகாசவாணி சாட்சி" என்பத னால், அவனை வஞ்சித்து அவனுக்குச் செலுத்தத்தகும் இறைப்பொருளை அபகரிக்கலாகாது; அபகரிப்பது கர்த்துரு துரோகமாம். மாதுருதுரோகம், பிதுருதுரோகம், குருது ரோகம், சுவாமி துரோகம், சிநேகதுரோகங்கள் மறுமை யில் துன்பத்தை விளைக்கும். இஃது இம்மையிற்றானே துன் பத்தைச் செய்யுமாதலால், அவைகளிலும் இது மிகக்கொடி யதாம்; ராஜதரிசனமும் ராஜதயையும் ராஜாபிமானமும் ஒருவர்க்கு எளிதன்று.

அரசன், பொன் மணி நெல் முதலிய மிதமற்ற திரவிய பலமும், மலையரண் காட்டரண் மதிலரண் நீரரணுகிய நால் வகையரண்சூழ்ந்த ஸ்தானபலமும், அகண்டராச்சிய பலமும்

சமுத்திரம்போல் அளவிறந்த ரதகஜ துரக பதாதிகளென்னும் சதுரங்கபலமும், வில் கணை முதலிய எய்வனவும், சக்கிரம் தோமர முதலிய எறிவனவும், வாள் பரிசை முதலிய வெட்டுவனவும், சூலம் ஈட்டி முதலிய குத்துவனவுமாகிய ஆயுதபலமும், சத்துருக்களுக் கெதிரே மான்கூட்டத்திற் புகுந்த பெரும்புலி போலவும், யானைக் குழாத்திற்கு முற்பட்ட வீரசிங்கம் போலவும் கர்ஜித்து, நிர்ப்பயமாய் முன்வைத்த காலைப் பின்வையாமல் முதுகுகாட்டாமல் விழித்த கண் இமையாமல், காயமென்ன கற்கண்டா, உயிரென்ன தித்திப்பா, ஆறிலுமரணம் நூறிலுமரணம் என்பதை நிச்சயித்துப் பிராணனைத் துரும்புபோல அலட்சியம் பண்ணி, இறந்தால் வீரசொர்க்கம், வென்றால் ராச்சியலாபம் உண்டென்கிற நம்பிக்கையினால், முன்காயப்பட மூர்த்தன்னியமாய்ப் போர்செய்து, எதிரிகள் அதமாகக் கண்டதுண்டமாக்கி வெல்லுகின்ற உத்தண்டமான புஜபலமும், எந்தத் திக்குப் போனாலும் அபஜயப்படாமற் சாதித்து வரத்தக்க காலபலமும், மந்திரி பிரதானிமார்களுடைய ஆலோசனையின் பலமும், தானாபதிகள் நியாயாதிபதிகளுடைய விசேஷ பலமும், மெய்காப்பாளர் கடைகாப்பாளர்களுடைய காவற் பலமும், தன்னைவிட்டு நீங்காத உறுதிச் சுற்றத்தின் பலமும் தனது பூரணமான வித்தியா பலமும், விவேக பலமும், என்றுஞ் சலியாத மனோபலமும், எங்குங் கிள்ளாக்குச்செல்லாநிற்கும் வாக்கு பலமுமாகிய உப பலங்களைப் பிரபலமாகப் படைத்தமையால், தான் நினைத்தபடி யெல்லாம் முடிப்பதற்கு ஒரு விதத்திலுந் தடையில்லையே; அதுபற்றி, தனக்குள்ளே நாம் முறைதவறி நடந்தால் நம்மைக் கேட்பவனார்? நமக்கெதிர் ஒருவருமில்லை, நாம் அடித்தது ஆட்டம் பிடித்தது பெண்டு என்று கர்வித்தால்,

"மலையின்மிக் கானவ ரென்றாலுங் கர்வ மமதையுற்றால்
நிலைமைகெட் டோடுவ ரீடே றுவதில்லை நிச்சயமே
அலைகடற் றேங்குந் துரியோ தனன்செல்வ மத்தனையும்
தலைமுறைக் கும்வந்த கேடாகும் ரத்ன சபாபதியே."

என்றவண்ணம், அவசியங் கேடுவருமாதலால், அவன், "நமக்குமேலே தெய்வமிருக்கிறது. 'அரசன் அன்றொறுக்கும் தெய்வம் நின்றொறுக்கும்.' தெய்வம் பொறுத்தாலும் பூமி பொறுக்காது; அண்டமிடிந்து தலைமேல் விழும். அதனால், நெருப்பாறும் மயிர்ப்பாலமுமாக நடக்கவேண்டு" மென்று கருதி, மழையைத் தனக்காதாரமாக நோக்கியிருக்கும் பயிர்போல, குடிகள்தமக்கு ஆதாரமாகத் தனது செங்கோலையே நோக்கி யிருப்பதையும்; அச்செங்கோல் கோணினால் எங்கும் கோணுமென்பதையும், 'ஏழை யழுத கண்ணீர் கூறிய வாளொக்கும்' என்பதையும் உய்த்துணர்ந்து, தானே தன் மனத்தில் இரக்கங்கூர்ந்து நீதி பிசகாது நடக்கவேண்டும். அங்ஙனம் நடவாமல் அநீதியாய் நடந்தால் அவனை இஃது உனக்குத் தகாதென்று தண்டிக்கவாவது, அவனைத்தள்ளி வேறோரரசனை ஸ்தாபிக்கவாவது, ஆருக்குச் சாத்தியம்? வாழைத் தோட்டம் கரும்பந் தோட்டங்களிற் புகுந்து, வாழைகள் கரும்புகளை வேருடனே பிடுங்கி முறித்துச் சாடுகின்ற பெரிய மதம்பிடித்த யானையைச் சிறியகொசுருக் கூட்டம்போய்த் தடுக்கக் கூடுமா? மழைக்குக் குடைபிடிப்பதுண்டு. இடிக்குக் குடை பிடிப்பார்களா?

"படித்துச்செங் கோன்மன்னர் நீதிசெய்யாதுவெம் பாவஞ்செய்தால்
பிடித்துத்தள் ளத்தக்க பேருமுண் டோவிந்தப் பேருலகில்
அடித்துச் சொரியு மழைக்கேயல் லாம லதிர்ந்துவிழும்
இடிக்குக் குடையுமுண் டோவெள்ளை நாவ லிருப்பவனே."

என்று மிருக்கின்றதே.

ராஜாவைத் தந்தையாகவும், ராஜபத்தினியைத் தாயாகவும் பாவித்து வணங்கவேண்டும். தாய்மார் பாராட்டுந் தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் என ஐவராவர். அன்றியும் அரசன்தேவி, குருவின்தேவி, அண்ணன்தேவி, தன்தேவியை யீன்றாள், தன்னையீன்றாள் எனவுஞ் சொல்லப்படுவர். தந்தையர் பிறப்பித்தோன், கல்வி கற்பித்தோன், மணமுடிப்பித்தோன், அன்னந் தந்தோன், ஆபத்துக் குதவினோன் என ஐவகைப்படுவர். குரு

பானவர் வித்யாகுரு, உபதேசகுரு என இருவராவர். இவருங் காரணகுரு காரியகுரு என்று சொல்லப்படுதலுமுண்டு. அரசர் சிங்காசனாதிபதி, சேனாதிபதி என இருவகையாவர். தேசாதிபதி மன்னர்மன்னன் எனவும், மகாராஜன் யுவராஜன் எனவுஞ் சொல்லப்படுவர். தாய் தந்தை குரு அரசன் என்னும் இவர்களுக்குள் தாரதம்மியம் உண்டாயினும், அவர் அத்தன்மையர் இவர் இத்தன்மையரென அவரை ஒருவருக்கொருவர் வேறுபாடு உடையவராக எண்ணுவதும் பேசுவதும் யுக்தமன்று.

## பெரியோர் செய்நன்றி.

பெரியோர்கள் ஜீவகாருணியத்தால் யாம் பெற்றபேறு வையகம் பெறுக என்று எண்ணி, சகலரும் விதி விலக்குகளை அறிந்து நெறிவழாதொழுகி, இம்மை யின்பத்தையும் மறுமை யின்பத்தையும் அடையும்பொருட்டு லோகோபகாரமாகச் சகல தர்மங்களையும், ஆசாரம் விவகாரம் பிராயசித்தம் என மூன்றுவகையாகச் சாஸ்திர முகத்தால், உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்கி அநுக்கிரகித்ததனால், அந்த ஆப்தவசனத்தை மறவாது சிந்திக்கவேண்டும்.

மேற்கூறிய ஆசார தர்மமாவது, யாவரும் தங்கள் தங்களுக்கு விதிக்கப்பட்ட நிலைகளிலே நின்று, அவைகளைக் குறித்துச் சொல்லிய தர்மங்களில் வழுவாது நடத்தல்; விவகார தர்மமாவது, ஒரு பொருளையே ஒருவன் எனதென்றும் மற்றொருவன் தனதென்றும் சுதந்தரித்து அந்தப் பொருளின்மேல் வழக்குத் தொடுத்தல்; பிராயச்சித்த தர்மமாவது, மேற்குறித்துச் சொல்லிய ஆசாரவழியிலும் விவகார வழியிலும் பிசகி நடந்தவர்களை அவ்வழியிலே தவறாது நிலைக்கச் செய்யும்படி, பகைவர் சிநேகர் அயலோர் என்றும் பட்சபாதமில்லாமல், பொதுப்பட ஆராய்ந்து அதற்கேற்பத் தண்டித்தலாம்.

"பெரியாரைத் துணைக்கொள்" என்றதனால், என்றும் பெரியோரையே நேசிக்கவேண்டும். அவர்கள் நேசத்தை

ஒருபொழுதுங் கைவிடலாகாது. அநேகரது பகையைத் தேடிக்கொள்வதனால் வருந் தீமையிலும், ஒரு பெரியோரது நேசத்தை இழந்துவிடுவதனால் வருந் தீமை பதின்மடங்கு அதிகமாகும்.

"பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்."

என்று சாஸ்திரஞ் சொல்லுகின்றதே.

ருத்திராட்சப் பூனைபோலவும் கோமுக வியாக்கிரம் போலவும் வேஷதாரிகளாய்ப் பிரபஞ்சத்தாரை மயக்கும் படி நடிப்பவர்களையன்றி, "சேரிட மறிந்துசேர்" என்றதற்கு ஏற்கக் களங்கமில்லாத பொன்போலும் உண்மையாகிய பெரியோர்களை அறிந்து அவர்களிடத்திற் சேர்ந்து அவர்கள் சொற்படி நடக்க வல்லவர்களுக்கு, அறம் பொருள் இன்பம் வீடென்பவைகளில், எதுதான் அரிதாகும்? "கற்பகதருவைச் சார்ந்த காகமு மமுதமுண்ணும்" அல்லவோ?

"முருகுவிரி மலர்க்கொடிகண் மூங்கின்மிசைப் படர்ந்துபோய்ப்
பொருவரிய துறக்கத்துப் புகுந்துவளர் கற்பகமாம்
மரமுழுதும் படர்ந்துலவும் வளர்மதியின் மேலாய
பெரியவரை யடைந்தொழுகப் பெறிற்றுறக்கம் புகலரிதோ."

என்றுஞ் சொல்லி யிருக்கின்றதே.

தபோமகிமை, சாபாநுக்கிரக சாமர்த்தியம், அஷ்டாங்கயோகம், அஷ்டமாசித்தி முதலாகச் சொல்லி முடியாத தமது வல்லமைகளை யெல்லாம் நீறுபூத்த நெருப்புப் போலவும், கரித்துணியில் முடிந்த மாணிக்கம் போலவும் புறத்தில் தோன்றாமல் அடக்கி, கோபமாகிய நெருப்பை மூண்டு எழவொட்டாமற் கிருபையாகிய நீரினலவித்து சாந்தத்தையே மேற்கொண்டு பரம சாதுக்களாய் இருப்பதனாலும், "சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயிற் பொறுப்பது கடனே" என்பதனாலும், பெரியோர்களுக்குக் கோபம் வராதென்று எளிதாக நினைத்து நெருப்

மை முன்தானையில் முடிவதுபோலவும், விஷபரீட்சை பண்வதுபோலவும் அவர்கள் விஷயத்தில் அபசாரப்பட்டுக் கோப மூட்டலாகாது. மௌனம் மலையைச் சாதிக்குமல்லவோ?

துறவு மெய்யறிவு ஆசையில்லாமை முதலிய நற்குணமென்னும் அசைவற்றபெரிய மேருசிகரத்தில் ஏறியிருக்கின்ற சான்றோருடைய கடுங்கோபமாகிய நெடுங்கழியில் இறங்கினவர்கள், துக்கமாகிய முதலைவாயில் அகப்பட்டுக் கரை சேரமாட்டார்கள்.

மற்ற சுற்றத்தார்கள் சிநேகர் அயலார் முதலானவர்கள்செய்த நன்றியையும், சத்திரம், சாவடி, தோப்பு, தூரவு, ஏரி, வாவி, குளம், கோயில், சந்தி, சதுக்க முதலியவைகளை உண்டாக்கினவர்கள் செய்த நன்றியையும், மறக்கலாகாது. மேலும் பொருளினால் வாக்கினால் சரீரத்தினால் எவரெவர் எவ்வளவு சொற்பமான உதவியைச் செய்தாலும், இது எம்மாத்திரமென்று அற்பமா யெண்ணாமல், அவ்வுதவி செய்யப்பட்டகாலம் காரணம் முதலியவைகளைப் பற்றி மிகப் பெரிதாகவே கொள்ளவேண்டும்.

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்"

என்று வழங்குகின்றதே.

"ஆண்டியைக் கண்டால் லிங்கன் தாதனைக் கண்டால் ரங்கன்" என்பவரைப்போல, அவரவர்களுக்கு ஏற்றபடி நடித்து அவர்களால் தமக்குவேண்டிய வுதவிகளை வேண்டியபடிக்கெல்லாம் பெற்றுக்கொண்டு, அவர்களுக்குப் பிரதியுபகாரஞ் செய்யவேண்டு மென்ற எண்ணம் சிறிதுமின்றி, "அறுந்த விரலுக்குச் சுண்ணாம்பிடாமல்" லோபகுணத்தையே பெரும்பான்மையாகக் கொண்டு, "இடாள் தொடாள் மனுஷர்மேற் செத்த பிராணன்" என்ற பாவனையாக விசுவாச காதகர்களா யிராமல், யதார்த்தமாக ஒரு நன்றி செய்தார்க்கு ஆபத்து வந்தகாலத்தில் பெறுதற்கரிய தமது

உயிரையாவது கொடுத்து அக்கடனைக் கழிப்பதுமன்றி; அவ்வொரு நன்றியினிமித்தம் அவர் அநேகம் பிழைகளைச் செய்தாலும், அவைகளையெல்லாம் பாராட்டாமற் பொறுத்துக்கொள்ளவும் வேண்டும்,

"ஒருநன்றி செய்தாரை யுள்ளத்தே வைத்துப்
பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர்."

என்றுஞ் சொல்லுகின்றதே.

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

எந்த நன்றியை மறந்த பாவத்திற்கும் பிராயச்சித்தமுண்டு; ஒருவர் செய்த நன்றியை மறந்த பாவத்திற்கு மாத்திரம் பிராயச்சித்தமில்லை; நரகமே கதி.

சாரத்தை உட்கொண்டு சக்கையை உமிழ்ந்துவிடுவது இயல்புதானே யென்றெண்ணி ஒருவர் செய்த நன்றியை மாத்திரம் ஏற்றுக்கொண்டு அந்நன்றி செய்தாரை அவமதிப்பது தர்மமல்ல; பழத்தைக்குறித்து மரத்தைப் பாலிப்பதுபோலவும், பாலைக்குறித்துப் பசுவைப் போஷிப்பதுபோலவும், செய்த நன்றியைக் குறித்துச் செய்தாரையும் மறவாமல் நன்கு மதிக்கவேண்டும். "உப்பிட்டவர்களை உள்ளளவும் நினைக்கவேண்டும்" என்கிறார்களே.

நன்றிமறவாமை முற்றிற்று.

மகாபண்டிதனைச்

## சிறுபிள்ளை வென்றது.

பூமாதேவியின் முக திலகம்போன்ற செந்தமிழ்ப் பாண்டிநாட்டின் ராஜதானியாகிய மதுரைமா நகரத்தில் எழுநூறு வருஷத்திற்கு முன்பு அரசாண்ட பாண்டிய குலத்தரசன் ஒருவனுடைய சமஸ்தானத்தில் வித்வஜன கோலாகலன் என்று எண்டிசையிலும் பிரசித்தமாகப் பெயர்பெற்ற சமஸ்கிருத வித்வான் ஒருவனிருந்தான். அவன் தர்க்கம்,

வியாகரணம், மீமாஞ்சை, தர்ம சாஸ்திரமென்கிற நான்கிலும் பூரண பாண்டித்திய முள்ளவன். மற்ற வித்வ ஜனர்கள் யாவரும் அவனைக் காணுமிடத்திற் கருடனைக்கண்ட பாம்பு போலவும், யமனைக்கண்ட உயிர்போலவும் நடுங்குவார்கள். அவன் அத்தன்மையாகிய வித்தியா சாமர்த்தியமுடையவனாதலால், பாண்டியன் அவனைச் சன்மானித்துத் தன்னருகில் அதிக கௌரவமாக வைத்துச் சம்ரக்ஷணை செய்துவந்தான்; அவ்வித்வான் தனக்குண்டான வித்யா கர்வத்தினாலும், "கொண்டவன் பலமிருந்தாற் குப்பையேறிச் சண்டை செய்யலாம்" என்பதற்கிசைய, அரசன் தன்மேல்வைத்த தயையினாலும் ஒருவரையும் மதிக்கிறதேயில்லை. பச்சோந்தியைக்கண்டு பயந்து மயில் தன்கண்ணை அதனிடத்திற் கொண்டுபோய்க் கொடுப்பதுபோல, பல தேசங்களிலும் இருக்கின்ற கவிஜனர்களெல்லாம் அவனுக்கு அஞ்சி வருஷாந்தரம் கப்பம் கொடுத்து வந்தார்கள். கையில் ஏடுமெழுத்தாணியும் எடுத்தவர்களிடத்திலெல்லாம் அவன் கப்பம் வாங்கி வருகையில், ஸ்ரீவைஷ்ணவ சமயாசாரியர்களுக்குள் மகிமை தங்கிய யமுனைத் துறைவரென்றும், யமுனாரியரென்றும், ஸ்ரீ ஆளவந்தாரென்றும், திருநாமமுடைய அவதார புருஷரொருவர் ஏறக்குறையப் பத்துப் பன்னிரண்டு வயதுள்ள சிறுபிள்ளையாய்ப் பாஷியாசாரியரென்னும் உபாத்தியாயருடைய பள்ளிக்கூடத்தில் வாசித்துக்கொண்டிருந்தார். ஒருநாட் காலையில் ஏழெட்டு நாழிகைக்கு அப்பள்ளிக்கூடத்தில் இப்பிள்ளையைக் காவலாக வைத்துவிட்டு, மற்ற பிள்ளைகளும் உபாத்தியாயரும் போஜனத்திற்குப் போயிருந்தார்கள். அத்தருணத்தில் அந்த உபாத்தியாயர் நாலைந்து வருஷத்து வரி கொடுக்கவில்லையென்று அதைக் கேட்டு வாங்கிவர வித்வஜன கோலாகலன் அனுப்பிய தண்டற்காரன் வந்து 'உபாத்தியாயர் எங்கேபோனார்' என்று கேட்க, காவலாயிருந்த யமுனைத் துறைவர் 'எங்களுபாத்தியாயரைத் தேடுகிறவிதம் என்ன' என்று கேட்டார். அச்சேவகன் 'வித்வஜன கோலாகலனென்னும் எங்கள் வித்வ

சிரோமணி உங்க ளுபாத்தியாயரிடத்தில் கப்பம்வாங்கிவரச் சொன்னார். அதுநிமித்தம் அவரைத் தேடுகிறேன்' என்ன, யாமுனாரியர் 'வரிவாங்குவது எதுக்காக' என்ன, அவன் 'எங்கள் வித்வான் சகல பண்டிதர்களுக்கும் சிரேஷ்டராகை யால் அவருக்கு ஏடுமெழுத்தாணியும் பிடிக்கிறவர்களெல் லாம் கப்பங்கொடுக்கிறது வழக்கந்தான்' என்றான். அதைக் கேட்டு யமுனைத்துறைவர் 'இதென்ன வழக்கம், நியாய விரோதமா யிருக்கின்றதே. பிடித்தவருக் கெல்லாம் பெண்டுபோல உலகாள்பவர்களுக்கும் வரிகொடுக்கிறது, இவ னுக்கும் வரிகொடுக்கிறதா? நன்றாயிருக்கிறது' என்று அதிசயித்து 'வரிகொடுக்கிற தில்லையெனப் போய்ச் சொல்' என்றார். அச்சமயத்தில் உபாத்தியாயர் வந்து, அதை யறிந்து சிங்க சொப்பனங்கண்ட யானையைப்போலக் கை கால் விலவிலக்கக் 'குடிமுழுகிப் போயிற்றே, சுபாவத்தி லேயே அவன் கொடியவன், அப்படியிருக்க இதைக் கேட் டால் அவன் சும்மாவிடுவானா! வெறு வாய் மெல்லுகிற அம்மையாருக்கு ஒருவாய் அவலகப் பட்டதுபோலல்லவா? வாதுக்கழைப்பானே! அந்த யமகண்டனை ஆர் வெல்லுகி றது' என்று பயந்தார்; யாமுனாரியர், 'தேவரீர் அதைப் பற்றிக் கண்கலக்கங் கொள்ளவேண்டியதில்லை, வெந்நீரில் வீடுவேகுமா? இருப்புத்தூணைச் செல்லரிக்குமா? அப்ப டியே வருமானால் தாமொன்றும் சிந்தியாமல் அடியேனை யனுப்பினால் நான்போய் உமது கடாட்சத்தினால் ஜெயிக்கிறேன் என்று விண்ணப்பஞ் செய்தார். இவர் எத்தனைவிதத்திற் சொன்னாலும் அவைகளை உபாத்தியாயர், "கண்ணைப்பிடுங்கி முன்னே யெறிந்தும் கண்கட்டுவித்தை என்பார்போல்" நம்பவில்லை.

இப்படி வார்த்தை சொல்லிக்கொண் டிருக்கையில், அந்த ஆள்போய் இங்கே நிகழ்ந்தனவெல்லாம் சொல்ல, அவ்வித்வான் "கொட்டினால் தேளும் கொட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சியுமா?" என்று கோபித்துக்கொண்டு அந்தச் செய்தியை அரசனுக் கறிவித்து, அவனுடைய அனுமதிப்

படி வாதுக்கு வரச்சொன்னான். அதுகேட்டு உபாத்தியாயர் மனங்கலங்கி 'ஐயையோ! யாமுனாரியா? நீயென் தலைமேலே கல்லைப் போட்டாயே, இனி நானெப்படி தலை எடுப்பது' என்று துக்கித்தார். யமுனைத்துறைவர் அவருக்கு நிர்ப்பயமாகும்படி தைரியஞ் சொல்லிச் சேவகனைப்பார்த்து 'வாதுசெய்கிறதற்கு உங்கள் வித்வானை இங்கே வரச்சொல். அல்லவென்று நம்மை அவ்விடத்திற்கு அழைப்பிக்கிறதானால் மரியாதைப்படி நடந்துகொள்ளச் சொல்' என்றார். உடனே சத்திரசாமரமுதலிய பரிவட்டணைகளோடு பல்லக்கு வந்து, அதன்மேலேறிச் சென்று மதுரையின் ராஜவீதியிற் பிரவேசிக்கும்போது, உப்பரிகைமேல் உலாவிக்கொண்டிருந்த பாண்டிய ராஜன்கண்டு, மிகவும் ஆச்சரியங்கொண்டு, கைகொட்டிச் சிரித்தான். அவனருகிலிருந்த இராணியானவள் 'மகாப்பிரபு! நீர் நகைக்கின்ற காரணமென்ன?' என்றாள், மகாராஜன் 'பெண்ணே இதோபார் வீதியிற் பல்லக்கில் வருகிற இந்தக் குழந்தை நமது வித்வஜன கோலாகலனுடனே வாதுசெய்ய வருகிறதாம்' என்றான். இராஜபத்தினி அக்குழந்தையின் திருமுக தேஜஸை நன்றாயுற்றுப்பார்த்து அதிக மகிழ்ச்சி கூர்ந்து, 'இவர் வாதுசெய்வதன்றி நமது வித்வானையும் அவருக்கு மேலானவர்களையும் செயிப்பதும் அருமையல்ல' என்றாள். அரசனுக்கு அந்தச் சொல் புண்ணிலே கோலிட்டதுபோல வருத்தத்தை விளைக்க, அவன் 'போ போ நீயென்ன பேதையாயிருக்கிறாய், நமது வித்வானுக்கு மேலானவர்களும் உண்டென்று சொல்வது "பெட்டைக் குதிரைக்கு இரட்டைக்கொம்பு முளைத்தது" என்பதுபோ லிருக்கிறது. இச் சிறுபிள்ளையும் அவரை வெல்லுமா? "காலில்லாத முடவனுங் கடலைத் தாண்டுவானா?" "மண்பூனையும் எலி பிடிக்குமா? இது 'சொப்பனந்தான்' என்றான்; இராஜமஹிஷி, 'வித்வான் தோற்பது நிச்சயமே, இது இவர் முகக்குறியால் எனக்கு உள்ளங்கைப் பொருள்போல விளங்குகின்றது, சந்தேகமில்லை' என்றாள். இவ்வாறு இருவரும் சம்பாஷிக்கையில் அரசன் 'நீ இந்தப்பிள்ளையை

எவ்வளவு சிறப்பித்துச் சொன்னாலும் நான் நம்பமாட்டேன். "விரல் உரலானால் உரல் எப்படியாகமாட்டாது." நமது வித்வானே ஜயிப்பார். இவர் ஆரம்பத்திலேயே தோற்பார். தோற்றால் நீ யென்னசெய்வாய்' என, 'மெய்யாயிவர் தோற்றாரானால் நான் உமது தாசிக்குத் தாதியாகி, அவளிட்ட வேலை செய்வேன்' என்றாள். வேந்தன் பைத்தியக்காரி "மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்குவார்போல்" யோசியாமற் பேசுகிறாய், உன்சொற்படியே இவர் ஜயித்தால் நான் இவருக்கு எனது ராச்சியத்திற் பாதி பகிர்ந்து கொடுப்பேன்' என்றான்.

பின்பு யமுனைத் துறைவர் அவ்வரசன் சமுகத்தில் வந்தார். அப்பொழுது அங்குவந்த வித்வஜனகோலாகலன் அவர் வடிவைப்பார்த்து வயதைக்குறித்துக் குலுங்க நகைத்து நெடிய மகா மேருடனே அற்பமாகிய ஒரு திரணமானது எதிர்ப்பதுபோல, சுண்டுவிரலத்தனை சிறு பையல் நம்முடனே வாதுசெய்ய வந்தானேயென்று அலட்சியம்பண்ணி மிகவும் கர்வத்தோடே அவரை நோக்கி, 'ஓய் சிறுபிள்ளாய்! நீ ஹரிச்சுவடி வாசித்தையா? உனக்கு எழுத்துக் கூட்டத் தெரியுமா? உன்பெயரைப் பிழையில்லாம லெழுதுவையா? ஒரு பூனைக்குட்டியானது வேங்கைப் புலியை வெல்ல வருவதுபோலக் கவிச்சிங்கமாகிய நம்முடன் வாதுக்கு வந்தவன் நீதானா?' என்றான். யாமுனாரியர் இவன் ஆரம்ப சூரத்துவமாய்ப் பேசுகிறானென்று புன்சிரிப்புக்கொண்டு, 'நீர் பெரியவராயும் நாம் சிறுபிள்ளையாயு மிருப்பதைப்பற்றி நம்மை அவமதிக்கிறீர். யானை எத்தனைபெரிது, அதைக் கண்டவுடனே உக்கிரங்கொண்டு விசையாயெழும்பிப் பாய்ந்து அதன் மஸ்தகத்தைப் பிளக்கின்ற சிங்கக்குட்டி எத்தனை சிறிது. மலை பிர்மாண்டமானதா யிருந்தும் அதை ஒரு விரலளவான சிற்றுளி சக்கை சக்கையாகப் பெயர்த்தெறியவில்லையா? அறுகம்புல் நுனியில் தூங்கி நிற்கின்ற தினையளவாகிய பனித்துளி பெரிய பனையளவையும் தனக்குள் அடக்கிக் காட்டவில்லையா? ஒரு பயறளவாகிய நெருப்

புப்பொறியு மல்லவோ ஆகாசமளாவிய வைக்கோற்போரைச் சுட்டெரிக்கின்றது. சிறிய மீன்சினையிலும் அதி நுட்பமாகிய வித்திலிருந்து வெகுதூரமட்டும் கிளைத்து நன்றாய்த் தழைத்து ஓங்கி மேலெழுந்து வளர்ந்து பூமியின்கீழ் இரண்டு மூன்று புருஷபாகம் வேர்வீழ்ந்து அடர விழுது விட்டு மட்டற்ற யானைசேனைகளோடு அரசர்களுக்கு இருக்க நிழல் கொடுக்கின்ற ஆலவிருக்ஷம் உற்பத்தியாகின்றதே. பெருந்தாழி நிறையப் பூரிக்கப்பட்ட பாலைத் துளி மோர்ப் பிரையானது தயிராய்ப் பரிணமிக்கப் பண்ணுகின்றதே. உலகமெங்கும் வியாபிக்கின்ற சூரியனை ஒரு கைக்குடையு மல்லவோ மறைக்கின்றது. இருபத்தொரு நிலைக் கோபுரம்போ லுயர்ந்த தேரை நடத்துவது இறையத்தனை அச்சாணி யல்லவா? அன்றியும் அங்குஷ்ட பிரமாண தேகத்தையுடைய அகஸ்திய முனிவர் அண்டத்தை முட்டிய விந்திய பர்வதத்தை அடக்கி மகா சமுத்திரத்தையும் உட்கொள்ள வில்லையா? இவைகளையெல்லாம் ஆலோசியாமல் இளையரென்றும் முதியரென்றும் விவகரித்துக் கொண்டு வீண்காலம் போக்குவானேன்; எடுத்தகாரியத்தை நடத்தத் துணிவதே யுக்தம்' என்றார். வித்வான் அப்பொழுதும் இறுமாப்படங்காமல் அவரைக் கிள்ளு கீரையாக நினைத்து முட்டைப் பணியாரம்போலக் குதித்தெழும்பித் தன் அறிவின்மையால் ஆழமறியாமல், இவனுக்கும் சாஸ்திரத்திற்கும் எவ்வளவுதூரம்; "கிணற்றுத் தவளைக்கு நாட்டுவளப்பம் தெரியுமா?" நாம் அது வியாஜமாக வேறெதையாவது பேசி அரைக்கணத்தில் விரட்டித் துரத்திவிடலாமென்று அவருடனே தர்க்க முதலிய சாஸ்திர விஷயத்தைப்பற்றிச் சிலநேரம் சம்வாதித்து அதனால் அசைக்கக்கூடாமை கண்டு அவரைநோக்கிச் 'சாஸ்திரவாதம் செய்யத் தொடங்கினால் வெகுநாட் செல்லும். நீரும் சிறுபிள்ளை; "குருவியின் தலைமேலே பனங்காயை வைப்பதுபோல" உமக்கு அதிக பிரயாசத்தைத் தர நமக்குச் சம்மதியில்லை. ஆகையால் அது நிற்க, மற்றெந்த விஷயத்தையாவது நீரேபேசும் பார்ப்

போம்' என்று கபடமாகச் சொன்னான். யமுனைத் துறைவர் ஏதிவன் நம்மிடத்திற் பரிவுள்ளவன்போற் பேசுகிறான்; இது உண்மையா? "ஆடு நனைகிறதென்று கோநாய் குந்தியழுமா? ஜாலமேயல்லாமல் வேறல்லவென்று நினைத்துக் கொண்டு அவனை, 'நீர் பார்க்கிறதென்பதென்ன? உமது அனுமதிப்படியே செய்வோம். அதிகமாய்ப் பேசவேண்டுவதில்லை. நாம் "ஆம்" என்கின்ற மூன்று கேள்வியை மாத்திரம் "அல்ல" வென்று மறுப்பீரானால் நம்மை ஜயித்ததாக ஒப்புக்கொள்ளுகிறோம். உமக்குச் சம்மதிதானா?' என்றார். அதற்கு அவனும் அரசனும் சரிதானென்றுசம்மதித்து உடன்படிக்கை செய்தார்கள்.

முதற்கேள்வி:—சிறுகுழந்தையாகிய யாமுனாரியர் அவ்வித்வானையே குறித்து, 'ஐயா! உமது தாய் புத்திரவதியென்கிறோம். நீர் உம்முடைய வாக்கு வல்லமையால் அவள் புத்திரவதி யல்லவென்று மறுத்துவிடும் பார்ப்போம்' என்று கேட்டார். அதுகேட்டு வித்வான் நெடுநேரமாகப் பலவிதத்திலும் ஆராய்ந்து மறுக்கக் கூடாமையால், அவன் என்னைப் பெற்றதாய் மலடிதானென்று வீண்குதர்க்கம் செய்வேனானால், கேட்பவர்கள் பார்ப்பவர்கள் அனைவரும் என்னகாணும் நீ அவள் கர்ப்பத்திலிருந்து கொழுக்கட்டைபோலப் பிறந்து குட்டிச்சுவர்போல நட்டநடுவி லிருந்து கொண்டு வாய் கூசாமல் அவளை மலடி என்று பிரத்தியட்சவிரோதமாக விதண்டாவாதம் செய்கிறையே யென்பார்களே; அதற்கு என்ன உத்தரம் சொல்லுகிறது. இதேது முதற்கோணல் முற்றும்கோணலாய் முடிவதுபோலக் காண்கிறதே; இப்படி இறங்குந் துறையிலேயே நீச்சலா யிருந்தால் எதிர்கரை ஏறுவதெப்படியென்று மயங்கினான்.

இரண்டாவது கேள்வி:—யமுனைத் துறைவர் வித்வானைப் பார்த்துப் பாண்டியனைக் குறித்து, 'இந்த அரசர் தர்மவா னென்கின்றோம். எதோ! நீர் மறுக்கக் கூடுமானால் மறுக்கலாம்' என்றார். வித்வஜனகோலாகலன் அந்தக் கேள்

வியை மறுக்கவேண்டுமென்று தன் கருத்தினுற் கூடியவரை யில் எட்டிப் பார்த்தும் எட்டக்கூடாமற் கடினமா யிருந்தத னுல், அவன், 'ராஜா தர்மவானல்லன்' என்போமானுல் அர சனை நம்மைப் பகைத்து 'அடா நன்றிகெட்ட பாதகா, என்னுடைய சொத்தை உன் இஷ்டப்படி கைகொண்டமட் டும் கொள்ளைகொண்டு, ஆயுட்காலமெல்லாம் அநுபவித்து, இப்பொழுது என்னைப் பாவியென்று சொல்லி எனக்கே துரோகம் செய்கிறையா'வென்று உடைவாளை உருவி ஒரே வீச்சாக வீசிவிடுவானே என்னசெய்வதென்று தியங்கினுன்.

மூன்றுவது கேள்வி.—யமுனைத்துறைவர், 'இந்த இராஜ பத்தினி பதிவிரதை' என்றுர். அது வித்வான் செவியில் நுழைந்தவுடனே அடிவயிற்றில் இடிவிழுந்ததுபோல அவ னுக்கு யாதொன்றும் தோன்றுமையால், அவன் 'இவரை நீறுபூத்த நெருப்பென்று நினையாமல் எளிதாகச் சிறுபைய லென்று அவமதித்தோமே! நமக்கென்ன! கிரகசாரந்தான் போதாதோ! இத்தனைகாலமாய் மகா வித்வான்கள் அனை வரையும் அவர்கள் தலைக்குப் போட்டால் நாம் காலுக்கும், காலுக்குப் போட்டால் தலைக்கும் போட்டு ரசாபாசப்படுத் திப் பட்டிமிரட்டு மிரட்டிச் செயித்துவந்தோமே! இப்பொ ழுது ஒரு குழந்தையின் கேள்விக்கு உத்தரம் சொல்ல வகை தெரியாமற் கற்றறி மூடனுய்விட்டோமே! இனி நமக்கெ ன்னபெருமை! பண்டிதனென்னும் பட்டமும் பறந்துபோய்; முதற்கேள்வி ஒன்றுக்காவது உத்தரம் சொன்னுமா? இல் லையே! ஆயினும் அது ஒருவேளை "ஆனைக்கும் அடிசறுக் கும்" என்பதாகத் தவறியதென்று நினைக்கவுங்கூடும். ஆத லாற் பெரிதல்ல. இரண்டாவதற்காவது சொல்லவேண்டுமே, அதுவும் ஈடேறுமற் போயிற்றே! போனுலும் போகட்டும், மூன்றுவதற்காவது சொல்லலாமென்றுல், இராஜபத்தினி வியபிசாரி யென்றல்லவோ சொல்லவேண்டும். எவ்விதத்தில் நாவெழுந்து சொல்லுகிறது! சொன்னுற் பக்கத்தார் பல்லை உதிர்க்கார்களா! மேல்அரசனைக்குறித்துப்பிறந்த இரண்டாங் கேள்வியிலும் இம்மூன்றுங்கேள்வி பழியும், பாவமும், விரோ

தமும், விளக்கத்தக்கதா யிருக்கின்றதே! இதைக்குறித்து உத்தரஞ் சொல்ல வாயைத்திறக்கவுங் கூடுமா! இந்த விஷயம் கையுமெய்யுமாகக் கண்டுபிடிக்கப் பட்டாலும் வெளியிலே சொல்லத்தக்கதல்லவே! அரசன் மனைவி நிர்த்தோஷியா யிருக்க அவளைத் தோஷமுடையவளென்று சும்மா அவள் தலையில் வியபிசாரிப்பட்டம் கட்டலாமா! பெண்பாவமல்லவா! "மண்ணின்மேல் நின்று பெண்ணோரம் சொல்வது எப்படி!" ஒருவர் தலையில் மாணிக்கமிருக்கிறதென்று அவர் தலையை வெட்டலாமா! நிர்நிமித்தமாகக் கங்கை கொதித்ததென்றால் நம்புதற்கு இடமுண்டோ! நாம் ஓட மருந்துண்டு உறங்கி விழுந்தாற்போல் ஆனோமே! "தன்வினை தன்னைச் சுடும்" என்பதாக நம்முடைய மதமே நம்மை அழித்தது! நமக்கு அடக்கமென்பது சற்றுமில்லாமற் கல்வியில் நாமே பெரியமென்று அகங்கரித்துப் பிறரைப் பொருள்செய்யாமல், அரசனது சபையிலே அவர்களை அவமானப்படுத்திவந்த அந்தக் கொடுமையல்லவோ இப்படி விளைந்து நமது வாயைக்கட்டியது, என்று எண்ணாதது மெண்ணித் திப்பிரமைகொண்டு ஏங்கியிருந்தான். அதுகண்டு இராஜபத்தினி மனமுருகி, 'நான்செய்த பிரதிக்கினையை முடித்து, என் மூக்கை முன்னுக்குக் கொண்டுவந்தாரே' என்று பெருமகிழ்ச்சி கூர்ந்து, ஆனந்தக்கண்ணீர் பெருக, அக்குழந்தையாகிய யமுனைத்துறைவரைத் தன்னிருகையாலும் இறுகத் தழுவிக்கொண்டு, இவர் என்னை 'ஆளவந்தாரோ' என்று வியந்தாள். அன்றுமுதல் அவருக்கு ஆளவந்தாரென்ற திருநாமம் வழங்கத் தலைப்பட்டது. அத்தருணத்தில் ஆனைபோலிருந்த வித்வஜன கோலாகலன் பூனைபோலொடுங்கிச் சிவுக்கென்றெழுந்து "ஒட்டை நாழிக்குப் பூண்கட்டுவதுபோல" வித்வஜன கோலாகலன் என்னும் இத்தனை பெரியபெயர் எனக்கேன்? "அம்மாள் கெட்டகேட்டுக்கு முக்காடுகூட்வா" என்பதுபோல 'என் திறமைக்கு விருதுகளும் வேண்டுமா!' என்று சலிப்புற்றுத் தன் விருதுகளையெல்லாம் வாங்கி அவருக்கு முன்பாக வைத்து அவரை வணங்கிநின்றான்.

அரசன் இவையெல்லாம் கண்ணாரக்கண்டு காதாரக் கேட்டுப் பிரமிப்படைந்து ஆளவந்தாரை விழிகளிக்க நோக்கிச் 'சுவாமி! தேவரீர் கேட்ட மூன்றுகேள்வியில் ஒன்றையாவது நமது வித்வான் மறுக்கச் சக்தியில்லாமல் தோற்றது வாஸ்தவமே! அம்மூன்றில் ஒன்றேனும் இரண்டேனும் தேவரீரால் மறுக்கக் கூடுமோ?' என, அவர் 'மூன்றும் மறுக்கக்கூடும்' என்று உத்தரிக்கின்றார்.—

க—வது. "உமது தாய் புத்திரவதி" என்றதற்கு மறுப்பு—, 'வாழையானது ஒருகுலை ஈனுவதுபோல இந்த வித்வானுடைய தாய் இவரொருவரைமாத்திரம் பெற்றதனால் "ஒருபிள்ளையும் பிள்ளையல்ல ஒருமரமும் தோப்பல்ல" என்ற பழமொழிப்படியே அவள் வாழை மலடியாதலால் புத்திரவதியல்லள்' என்றார்.

உ—வது. "ராஜாதர்மவான்" என்றதற்கு மறுப்பு— "ராஜாராஷ்ட்ர கிருதம் பாபம்" என்ற நீதிவாக்கியப்படியே, தேசத்தார் செய்தபாவம் அரசனை அடையு மென்றதனால், ராஜா தர்மவா னல்லன் என்றார்.

௩—வது. "ராஜபத்தினி பதிவிரதை" என்றதற்கு மறுப்பு—, 'கரு உற்பத்தியாற் சந்திரனுக்கும், விளையாட்டாற் கந்தருவனுக்கும், தீபனவிர்த்தியால் அக்கினிக்கும், முன்பு சுவாதந்திரியப்பட்டும் பின்பு மணஞ்செய்து கொள்பவனுக்கு உரியவளாகின்ற காரணத்தால் நான்கு பதிகளையுடையவளாதலானும்,

"அன்றியுங் கனவிசான்ற யல்லது வதுவையாற்றற்
கொன்றுமோ வருணனெவ்வா றுதகமோ டளிக்குந்தூய
மன்றலெவ் வாறுமுற்றும் வானவ ரருளில்லாமற்
றுன்றுநீர்ப் புவியில்யார்க்குஞ் சூழ்வினை முடிக்கலாமோ"

என்றவாறே, மணஞ்செய்யுங்காலத்தில் அக்கினி, வருணன் முதலிய பஞ்சதேவர்களுக்கு அவள் சமர்ப்பிக்கப் படுதலானும் ஸ்திரீக்குப் பதிவிரதாபங்கம் வருகின்றதென்றார்.

இவ்வண்ணமாக ஆளவந்தார் வித்வஜன கோலாகலனை முன்பு கேட்ட மூன்று கேள்விகளையும் பின்பு தாமே சாஸ்திர சம்மதமாகவும், உலகத்தாருக்கு அங்கீகாரமாகவும் மறுத்துரைக்கக் கேட்டு, பாண்டியராஜனனவன் சிறுபாலகனுகிய இவர் இத்தனை அருமையும் பெருமையுமாகிய கேள்வி உத்தரங்களையெல்லாம் எப்படி உணர்ந்துரைத்தார், தாமுரைத்தவைகளைத் தாமே மறுக்கவும், மறுத்தவைகளை ஸ்தாபிக்கவுந் தக்க பரமசக்தி இவருக்கு எங்கிருந்து உற்பத்தியாயிற்று; மேலும் நமது வித்வான் தாய்க்கு ஏகபுத்திர விஷயமென்பது எவ்விதத்தில் தெரியவந்தது. அது ஜோதிஷத்தினல் அறியலாமென்றால் அவர் சாதகத்தையும் இவர் பார்க்கவில்லையே, ஆதலால் அசாத்தியம் அசாத்தியமென்று பலமுறையும் நினைத்து ஆச்சரியவெள்ளத்தில் மூழ்கி, பூர்வம் போஜராஜ சமஸ்தானத்திலிருந்த காளிதாசன், தண்டி, பவபூதி முதலாகிய சமஸ்கிருத வித்வான்களும், இந்த மதுரையில் தமிழ்ப்புலமை செலுத்திய தெய்வீகம் வாய்ந்த சங்கப்புலவர்களும் இவருக்கு ஒப்பல்லர். இவர் சரஸ்வதி விக்கிரகமாயும், அவதார புருஷராயும் இருக்கின்றாரென்று பிரமானந்த மடைந்து, ரகசியத்தில் தன் பத்தினிக்கெதிரே தான் நிருணயித்தபடி தன் இராச்சியத்திற் பாதி கொடுத்தான்.

ஸ்ரீ ஆளவந்தார் அந்த ராச்சியத்தை வகித்து நெடுநாள் அரசாண்டு வருகையில், இவருக்கு முன்னடியார் பின்னடியார் யாவருக்கும் பரமாசாரியராகிய ஸ்ரீமந் நாதமுனிகள் நியமனப்படி, ஸ்ரீ ராமமிசிரர் என்னும் மணக்கால்நம்பி வந்து ஆளவந்தாருக்கு மிக விருப்பமாயும், ஞானசாதனமாயு மிருக்கின்ற தூதுளங்கீரை எவ்விடத்தி லிருந்தாலும் தேடிக் கொய்து கொடுத்துக்கொண் டிருந்தார். அதை மடைப்பள்ளியில் தளிகைசெய்பவர்கள் வாங்கித் தூவைய லரைத்துப் பரிமாற, ஆளவந்தார் இஷ்டமாய்ப் புசித்துவந்தார். இப்படி ஐந்தாறுமாதம் நடந்தும் அவர் ஏதென்று கேளாமையால், பிறகு ஒருநாள் அந்த மணக்கால்நம்பி அதைக் கொண்டுவந்து கொடாதிருந்தார். அன்று ஆளவந்தார் 'தூதுளங்

கீரைத் துவையல் ஏன் பரிமாறவில்லை' என்றார். 'இன்றைக்கு அந்த வைஷ்ணவர் கொண்டுவந்து கொடுக்கவில்லை', என்று பாகஞ்செய்வோர் சொல்ல, ஓ! ஓ! அவர் ஆரோ? ஏது நிமித்தமோ தெரியவில்லை. அபசாரம் வந்ததே' என்று அநுதாபப்பட்டு, 'நாளைக்கு வந்தால் நம்மைக்கண்டு பேசிப் போகச் சொல்லுங்கள்' என்று நியமித்தார். மற்றை நாள் 'அவர் நாம் நேற்றுக் கொண்டுபோய்க் கொடாது நிறுத்தினதனால் யாமுனரியருக்குக் கேள்வியா யிருக்கலாம். இன்றைக்கு நமது மனோரதம் முடியும் என்று வழக்கப்படி தூதுளங்கீரை கொண்டுவந்தபொழுது, ஆளவந்தார் அவரைக்கண்டு 'எங்கிருந்து வந்தீர்? உமது திருநாமம் யாது? என்ன காரியார்த்தமாய் இங்ஙனம் நடத்திவருகிறீர்?' என்ன, அவர் 'நாம் மணக்காலென்னும் ஊரில் வசிக்கும் காரணத்தால் நமக்கு மணக்கால்நம்பி என்றுபெயர், நுமது பிதாமகனாகிய ஸ்ரீமந்நாதமுனிகள் தேகவியோக மாகுங்காலத்தில் அவரது ஆர்ச்சிதமாகிய திரவிய நிட்சேபத்தை எமது அடைக்கலத்தில் வைத்து, 'இதை நம்முடைய பேரனிடத்தில் நீர் ஒப்புவிக்கவேண்டுமென்று நியமித்துப்போனார். அதை உம்மிடத்திற் சேர்ப்பிக்கும்பொருட்டு நம்பெருமாள் கோயிலி லிருந்து வந்தோம்' என்றார்.

ஸ்ரீ ஆளவந்தார் 'அந்த நிட்சேப தனம் எப்படிப்பட்டது? எவ்வகையாற் காண்பது? என்ன உபாயத்தாற் கைவசமாம்? எவ்விடத்திலுள்ளது? வெளியிடவேண்டும்' என்ன மணக்கால்நம்பி அவரை நோக்கி, 'அரசர் முதலானவர்களிடத்திலுள்ள நிதிபோல வெள்ளம் முதலானவைகளால் அதற்கு அபாயமில்லாமையால் அது அழியாநிதி. நிரஞ்சன திர்ஷ்டியாலன்றி அஞ்சன திர்ஷ்டியாற் காணப்படாதது. மிருகபலி, நரபலி இடவேண்டுவதில்லை. வெறும் பச்சிலையைக் கிள்ளியிட்டு எளிதிற் கைப்பற்றிக் கொள்ளப்படும். இரண்டாற்றுக்கு நடுவே ஏழுசுற்றுக்கோட்டைக்குள் பிரணவ பீஜ யந்திரத்திலிருக்கிறது. அதை ஒரு பாம்பு சுற்றிக் கொண்டு நிற்கிறது. பன்னிரண்டு வருஷத்திற்கு ஒருமுறை

அவ்விடத்திற்குத் தென்சமுத்திர மத்தியிலிருந்து ஒரு ராட்சதன் வந்து அதைப் பார்வையிட்டுப் போவதுண்டு. இத்தன்மையா யிருக்கின்ற நமது பிதுரார்ச்சிதமாகிய க்ஷேம திரவியத்தை நாம் எத்தனை காலமாய்ப் பாதுகாத்து வருவோம், இனித் தாம் கிருபைசெய்துவந்து கைப்பற்றிக்கொள்ளவேண்டும்' என்றார்.

திரவியமென்ற மாத்திரத்தில் ஆளவந்தார் அரசாள்பவராகையாலும், பாட்டனுடைய ஸ்திதியாகிய பைதிருக தனத்துக்குப் பேரன் உரியவனென்பதனாலும், அதன்மேல் அபேட்சைகொண்டு, 'எதோ அதைக்காண்பியும் வருகிறோம்' என்று தமது பரிசனங்களுடனே பிரயாணப்பட்டார். மணக்கால்நம்பி 'இந்தக் கூட்டத்தை நிராகரித்து நீர்மாத்திரம் வந்தாற் காண்பிக்கிறோம்' என்ன அப்படியே அவர் தனித்து வர அழைத்துப்போய் அத் திருவரங்கம் பெரிய கோயிலிலே சயன திருக்கோலமா யெழுந்தருளிய எம் பெருமானைக் காட்டி, 'உங்கள் பாட்டனார் நம்முடைய அடைக்கலமாக வைத்து உமதுவசம் ஒப்புக்கொடுக்கும்படி நியமித்த பரம தனத்தைப் பாரும்' என்றார்.

ஆளவந்தார் திருவரங்கநாதனைச் சேவித்துப் பரவசமாய் 'இந்த மகானுபாவருடைய குணப் பிரபாவத்தை என்னவென்று வர்ணித்து ஸ்துதிசெய்கிறது' என்பதாய், மணக்கால் நம்பி தம் பக்கல் எழுந்தருளியது முதல் அவர் தமக்கு அரங்கநாதனைக் காட்டிக்கொடுத்ததுவரையில் நிகழ்ந்தவை யாவையும் ஒவ்வொன்றாக நினைவு கூர்கின்றார்.

'பங்கனிருக்கு மிடத்தைத்தேடிக் கங்கை வந்தது' போல இந்த ஸ்ரீ வைஷ்ணவசீலர் ஈஷணத்திரயமாகிய சேற்றில் அழுந்திக்கிடந்த அசேதனனென்னும் அடியேனைப் பொருள்செய்து தாமேவந்து சந்தித்து சீரும்புதின்னக் கூலி கொடுப்பதுபோலத் தூதுளங் கீரையைத் தேடிக் கொண்டுவந்து கொடுத்து, எனக்குத் தத்துவஞானம் உதய

மாகிப் பரிபாகம் வருமளவும் காத்திருந்து, "மண்தின்னும் பிள்ளைக்கு மருந்தூட்டத் தின்பண்டம் காட்டிச் செல்வத் தாய் அழைப்பது" போல உங்கள்பிதிரார்ச்சிதமாகிய பணப் புதையல் இருக்கின்றது வந்து கைக்கொள்ளுமென்றார். அதன் கருத்து நாயேனுக் கப்பொழுது சாதாரணமாகிய லோக திரவியமென்றே தோன்றிற்று. இப்பொழுதோ சகலபுவன கர்த்தாவாகிய சாட்சாது சுவாமியாய் விளங்குகின்றது. பின்பு பரமகாருணியராகிய இவரை நோக்கி அந்தத் திரவியம் பொன், வெள்ளி, ரத்தினத்தோடு சம்பந்தப் பட்டதோ, அல்லது நகை நாணயங்களா யிருப்பதோ வென்னும் கருத்துக்கொண்டு நான் அது எப்படிப்பட்டதென்ன, மற்ற நிதிபோல சேதப்படுவதல்ல, அழியாநிதி யென்றார். அதனால் அவ்வீசுரன் நிருபாதிகனும் நித்தியனுமா மென்று பொருள் படுகின்றது. அதன்பின்பு நான் மண்ணிற்புதைத்த திரவியம் கரைந்துபோகு மென்பதனால் அதை எவ்விதத் தாற் காண்பதென்ன, நிரஞ்சன திர்ஷ்டியாலன்றி அஞ்சன திர்ஷ்டியாற் காணப்படாது என்றார். என்றதனாற் சர்வாந்தரியாமியானவன் அஞ்ஞானிகளுக்கன்றி மெய்ஞ்ஞானிகளுக்கே பிரசன்னமாவனென்று விளங்காநின்றது. பிறகு புதைப் பொருளைப் பூதங்காக்கு மென்பதனால் அது எனக்கு என்ன உபாயத்தாற் கிடைக்குமென்ன, பலியிட வேண்டுவதில்லை பச்சிலையைக் கிள்ளியிட்டுப் பற்றிக்கொள்ளலா மென்றார். அக்குறிப்பு அந்தப் பரமாத்மன் திருத்துழாயால் அர்ச்சித்தவர்களுக்குச் சுவாதீனப் படாமற் போகானென்பதாயிற்று. மற்றும் காடோ மலையோ காணுறே அது இருக்குமிட மென்றெண்ணி நான் எவ்விடத்தி லுள்ளதென்ன, இரண்டாற்றுக்கு நடுவே யென்றார். அது தென் காவிரி வடகாவிரியாகிய உபயகாவிரிக்கு மத்தியமென்றும், ஏழு சுற்றுக் கோட்டையென்றார். அது சப்த பிராகாரங்களாற் சூழப்பட்ட அரங்கக் கோயிலென்றும், பிரணவ பீஜ யந்திர மென்றார். அது ஓங்கார விமானமென்றும், பாம்பு சுற்றி யிருக்கின்றதென்றார், அது சேஷசயன மென்றும், ஒரு

ராட்சதன்வந்து பார்வையிட்டுப் போகிறானென்றார், அங்கே விபீஷண ஆழ்வான் துவாதச வருஷத்திற்கு ஒருக்கால் வந்து சேவித்துப் போகிறானென்றும், இந்தத் தனத்தை உங்கள் பிதாமகனார் உமக்கு ஒப்புக்கொடுக்கச் சொன்னா ரென்றார். அது சுவாமி கைங்கரியத்தை உள்ளிட்ட பிர பத்தி நிஷ்டையைக் கைக்கொள்ளும்படி ஸ்ரீமந் நாத முனிக ளால் நியமிக்கப்பட்டதென்றும் குறிப்பித்தவைகளா யிருக் கின்றனவென்று நிச்சயித் துணர்ந்து, இவர் செய்த பரமோ பகாரம் ஆர்செய்வார்க ளென்றும், யாதொரு சாதனமுமில் லாமல் தாபத்திரயாக்கினியால் தகிக்கப்பட்டுக் கேவலம் அசக்தனா யிருக்கின்ற எளியேற்கு "முடவனுக்குக் கொம் புத்தேன் கிடைத்தது" போலப் பரமார்த்தம் சித்தித்ததே யென்றும், இது அநேக கோடிகாலம் அகோர தபசு, அஷ் டாங்கயோக முதலானவைகளைச் செய்தவர்களுக்குத்தான் வாய்க்குமோ வென்றும், இதற்கு மேலானவாழ்வு, அல்லது இகபரசாதனம் வேறென்ன இருக்கின்றனவென்றும், தேடி வந்த சீதேவியை வேண்டாமென்று விலக்கிவிடுவதுபோல இதைக் கைவிட்டு எத்தனை வருஷகாலம் அரசாட்சி பண்ணி னாலும், சஞ்சித, ஆகாமிய, பிராரப்த கன்மவசத்தனாகி உழல் வதேயல்லாமல் நித்திய பாக்கியமாகிய மோட்சத்திற்கு அரு கனாகக் கூடுமோ? கூடாது. ஆதலால், இதுதான் ஆத் மார்த்தம் என்றும் தமக்குள் உறுதியாகக்கொண்டு, இராச் சியத்தை வாந்தியசனம்போல அருவருத்துக் கைவிட்டு, கடல் நடுவில் அமிழ்கின்றவன் அங்கொரு தெப்பத்தைக் கண்டுபிடித்துக் கரையேறுவதுபோல, பகவத் கடாட்சத் தால் ஆசாரியரா யெழுந்தருளிய மணக்கால்நம்பி திருவடி களை ஆசிரயித்துப் பஞ்ச சமுஸ்கார சம்பன்னராய் ஸ்ரீ ஆள வந்தார் பிரபத்தி நிஷ்டையை நம்பி உபதேசிக்கப் பெற்று வாழ்ந்திருந்தார்.

மகாபண்டிதனைச் சிறுபிள்ளை வென்றது

முற்றிற்று.

# பயனிலுழவு.

இதன்பொருள் பயனில்லாத உழதொழில் என்பதாம்.

உலகத்தில் யாவரும் உச்சீவிக்கும்பொருட்டுக் கடவுளாற் கற்பிக்கப்பட்ட நாநாவிதத் தொழில்களிலும், உழுது பயிரிடுந்தொழிலே சிறந்த தொழிலாயும், எல்லாச் செல்வங்களிலும் உழவுச் செல்வமே குறையாத செல்வமாயும், ஒருவரிடத்திற் சேவித்துண்ணும் உணவிலும் உழுது பயிரிட்டுண்ணும் உணவே இனிய உணவாயும் இருக்கின்றனவென்று பண்டித பாமரர்களுக்கெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்கமாய்த் தெரிந்திருக்கின்றது. ஒளவையும் இந்தவிஷயத்தை, "பூமிதிருத்தியுண்" "பருவத்தே பயிர்செய்" "தொழுதூண் சுவையினுழுதூண் இனிது" என்பது போன்ற சில வாக்கியங்களால் விளங்கச் சொல்லி யிருக்கின்றாள். திருவள்ளுவரும்,

> "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
> தொழுதுண்டு பின்செல் பவர்"

என்னுங் குறளால், உழுதொழிலைச் செய்து உண்டு வாழ்பவர்களே சுவாதீனர்களாய் வாழ்பவர்களென்றும், மற்றவர்களெல்லாம் பிறரைத் தொழுது அவர் கொடுக்க வாங்கியுண்டு அவர் பின்சென்று அச்சுவாதீனம் இழந்திருப்பவர்களென்றும் சொன்னார். அன்றியும்,

> "ஏரு மிரண்டுளதா யில்லத்தில் வித்துளதாய்
> நீரருகே சேர்ந்த நிலமுளதாய் - ஊரருகே
> சென்று வரவெளிதாய்ச் செய்வாருஞ் சொற்கேட்கில்
> என்று முழவே யினிது"

எனவும் சொல்லப்படுகின்றதே.

இப்படியெல்லாம் இருந்தும் அக்காலத்தில் இந்து தேசத்தில் உத்தியோகஸ்தரல்லாத குடிச்சனங்கள் பயிரிட்டுச் சீவனஞ் செய்வதைப் பார்த்தால் மிகவும் பரிதாபமாயிருக்கின்றது; அதை என்னவென்று நாவெழுந்து சொல்

லுகின்றது. துணிந்து சொல்லப்புகுந்தால் "பன்னியுரைத்திடிலோ பாரதமாம்" என்பதாக விரியும்; ஆயினும் அதை இவ்விடத்திற் சுருக்கிச் சொல்லுகிறேன்:—

குடிகள் தங்கள் தேக போஷணைக்காகப் பயிரிடத் தொடங்கினால், முதல் முதல் இது பள்ளத்தாக்கு இதுமேட்டுப்பாங்கு இது சமநிலமென்றும், இது செய்கால் இது கரம்பு இது புறம்போக்கென்றும், நிலவள மறியவேண்டும். ஏரிப்பாய்ச்சல் ஆற்றுக்காற்பாய்ச்சல் முதலான நீர்வளம் பார்க்கவேண்டும். காடழித்துக் கரம்பு திருத்தவேண்டும். காறு, கலப்பை, நுகம், வடம், ஆள், குண்டை முதலிய பலவுந் தேடவேண்டும். ஏர்கட்டி நிலத்தை உழவேண்டும். அதற்குக் குப்பை, தழை முதலாகிய எருவிடல்வேண்டும். 'நன்செய்' நிலங்களைச் சேடையாக்கிப் பரம்படித்துப் பண்படுத்தவேண்டும். பிறகு அதில் சீரகச்சம்பா, சிறுமணிச் சம்பா, சின்னசம்பா, பெரியசம்பா, சன்னசம்பா, ஊசிச் சம்பா, இலுப்பைப்பூச் சம்பா, மல்லிகை சம்பா, கம்பன் சம்பா, கைவளச்சம்பா, குங்குமச்சம்பா, குண்டைச்சம்பா, கோடைச்சம்பா, ஈர்க்குச்சம்பா, புனுகுச்சம்பா, முத்துச் சம்பா, துய்ய மல்லிகைச்சம்பா, மோரன்சம்பா, மாலன் சம்பா, சீவன்சம்பா; செம்பிலிப்பிரியன், பிசினி, மலைகுலுக்கி, மடுவிழுங்கி, மோசனம், காடைக்கழுத்தன், செம்பாளை, பூம்பாளை, முட்டைக்கார், கறுப்புக்கார், மணக்கத்தை, பிச்சவாரி, ஈசர்கோவை, இரங்குமேட்டான், செந்நெல், வெண்ணெல் முதலான நன்செய்த் தானியங்களும்; கோதுமை, வாற்கோதுமை, வரகு, கேழ்வரகு, மஞ்சட்சோளம், செஞ்சோளம், முத்துச்சோளம், காக்காய்ச்சோளம்; கம்பு, சாமை, தினைமுதலிய புன்செய்த் தானியங்களும்; அவரை, துவரை, உழுந்து, கடலை, கறுப்புப்பயறு, பச்சைப்பயறு, வனிப்பயறு, மூரிப்பயறு, தட்டைப்பயறு, பெரும்பயறு, துலுக்கப்பயறு, கொள்ளு, எள்ளு முதலிய காய்த்தானியங்களும்; அவுரி, ஆமணக்கு முதலானவைகளும் விளைவிக்க விதை சம்பாதிக்க வேண்டும். அவைகளைக் கோட்டை

கட்டி முளைகிளம்பச் செய்தாவது, அப்படிச் செய்யாமல் சும்மாவாவது விதைக்கவேண்டும். அல்லது நாற்றங்காலுக்கு நாற்றுவிடவேண்டும். அது வளர்ந்தபின் பிடுங்கி நடவேண்டும். சற்சனரைப் பாலிக்கும்படித் துர்ச்சனரைப் பரிகரிப்பதுபோல அதற்கு விரோதமில்லாமற் களையெடுக்க வேண்டும். நீர்பாய்ச்ச வேண்டும். பயிர் வளருங்காலத்தில் ஆடு, மாடு, பன்றி முதலிய மிருகங்கள் அழிக்கவொட்டாமல் சுற்றி வேலியிடவேண்டும். பூச்சிகளாற் சேதப்பட்டுப் போகாமல் அடிக்கடி பார்வையிடவேண்டும். "பாராத வுடைமை பாழ்" அல்லவா? நன்றாய் விளைதற்கு வேண்டிய முயற்சிகளைச் சோம்பலில்லாமல் அடுத்தடுத்துச் செய்ய வேண்டும். கருக்கொண்டுவிளைந்து மணிமுற்றிக் கற்புடைமகளிர்போலத் தலைவணங்கி மடியுங்காலத்தில்,

> "ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின்
> நீரினு நன்றதன் காப்பு"

என்பதனால், களவுபோகாமற் கண்ணை இமைகாப்பதுபோலப் பத்திரமாய்க் காக்கவேண்டும். விளைந்து மடிந்தபின் அதை ஒப்படி செய்வதற்குப் பிரயத்தினப்பட்டு அறுக்கும் பருவமறிந்து அறுக்கவேண்டும். அறுத்த அரிகளைச் சுமைகட்டிக் கொண்டுபோய் மலைபோலப் பெரிய போர் போட வேண்டும். மாடுகளைத் தாமணியிற் பிணைத்து அதை மிதிப்பிக்கவேண்டும். மிதிப்பித்தபின் வைக்கோலைப் பிரித்துப் பதரைத் தூற்றி மணியை உடவாரம் கும்பலாகக் கூட்டிக் களத்தில் அம்பாரமாக்கிக் குறி முத்திரை செய்யவேண்டும். அதை அளந்து தொகையாக்கி, அதிற் கருமான் தச்சன் தட்டான் கணக்கன் குயவன் வண்ணான் அம்பட்டன் தோட்டி தலையாரி வெட்டியான் முதலானவர்க்குரிய களவாசம்போகத் துரைத்தனத்தாருக்குச் சேரவேண்டியதை யாதோ ராடங்கமு மில்லாமற் சேர்த்துவிடவேண்டும். எஞ்சிநிற்பதில் பிள்ளையார்கோயில் சிவன் கோயில் பெருமாள் கோயில் ஐயனார்கோயில் மாரி பிடாரி காளி கோயில்களுக்கும், நம்பியான் குருக்கள் புரோகிதன்

ஜோசியன் வைத்தியன் வாத்தியார் ஆண்டி தாதர்களுக்கும், இவ்வளவு இவ்வளவென்று பகுத்துக் கொடுத்துவிட்டு, மிகுந்த தானியத்தைத் தங்கள் வீட்டுக்குக் கொண்டுபோய் அதனாற் பெண்சாதி, பிள்ளை, தாய், தந்தை, தமையன், தம்பி முதலாகிய குடும்பத்தாரெல்லாம் ஜீவனம் பண்ணவேண்டும் என்றால், அது ஆருக்குத்தானாகும், எத்தனைநாளுக்குக் காணும், இது "கடன்வாங்கியும் பட்டினி, கலியாணம் பண்ணியும் சந்நியாசம்" என்பதாயிருக்கின்றதே.

பின்னும் வீட்டில் நடக்கின்ற கலியாணம், சோபனம், சீமந்தம் முதலாகிய சுபங்களையும், வீட்டில் நிகழக்கூடிய அசுபங்களையும், வரிசைவண்மை, தானதர்ம முதலானவைகளையும் அந்தச் சொற்பபலனைக் கொண்டே நடத்தவேண்டும். அவைகளெப்படித்தான் நடத்தப்படும், பனிபெய்தோ கடல்நிரம்பும் "பனியிலே கப்பலோட்டலாமா?" "சமுசாரமோ சாகரமோ" என்கின்றார்களே!

ஆற்றுக்காற் பாய்ச்சலில்லாத இடங்களிலே மேற்சொல்லிய பாடுகளெல்லாம் பட்டும், மழை பெய்யாமல் வானங் காய்ந்து போகுங்காலத்தில், ஏரியில் தண்ணீரில்லாமையால் அந்தச் சொற்பபலனுங் கிடையாது. உழைப்பெல்லாம் வீணுக்கே உழைத்ததாம். ஆகையால் அது "கல்லைக்குத்திக் கைநோவதாய் முடியும்" அல்லவோ?

ஏரிகளில்லாத சிலவிடங்களில் மானவாரிப் பயிர் செய்வதுண்டு. இந்த மானவாரிப்பயிரோ முழுதும் அநியாயம். ஏனெனில், அங்கே ஏரிநீர் பாய்வதற்கிடம் இல்லாமையால் வானத்தையே எதிர்பார்க்க வேண்டியிருக்கின்றது. இக்காரணத்தாலிதை வானம்பார்த்த பயிரென்றுஞ் சொல்வார்கள். இதில் வானம் பெய்தால்தான் சிறிது பலனுவது காணலாம். இல்லாவிட்டால், "வானஞ்சுருங்கிற் றானஞ் சுருங்கும்" என்றவாறே சூனியம். ஆதலால், இது "முதலே துர்ப்பலை அதிலுங் கர்ப்பிணி" என்பது போலாகும்.

எங்கும் மண்டல வருஷமாய்க் காலத்தில் மிதமழை பெய்யவேண்டும். இப்படிப் பெய்யாவிட்டாலும், அகாலத்திற் பெய்தாலும், குறைவாய்ப் பெய்தாலும், அதிகமாய்ப் பெய்தாலும், தக்கபடி முயற்சி செய்யாவிட்டாலும் நஷ்டமேயன்றி இலாபமில்லை.

சிலவூர் மிட்டாவும், சில்லூர் பட்டாவும், சிலவூர் அமானியும், சிலவூர் சுரோத்திரியமும், சிலவூர் சர்வமானியமுமாயிருக்கின்றன. அவைகளெல்லாவற்றிலும் பட்டாவைப் போலச் சில இடங்களில் குடிகளுக்கு அசௌக்கியத்தைக் கொடுப்பது வேறொன்றில்லை. நிலத்தை உழுது விதைத்தாலே போதும். விதைத்தது விளைந்தாலும், விளையாமற் சாவியாய்ப்போனாலும், "ஆர்கெட்டாலென்ன ஆர்வாழ்ந்தாலென்ன" எவ்விதத்திலும் சர்க்காருக்குக் கட்டவேண்டிய தீர்வைகட்டியே தீரவேண்டும். இந்நாளிலல்ல, சிலநாளுக்கு முன்பு, அது கட்டுகிறதற்குத் தாமசப்பட்டால், எள்ளளவாவது இரக்கமின்றிக் குடிகளை மிகவும் உபத்திரவப் படுத்துவார்கள். அவர்கள் ஆரென்றால், இந்துதேசத்திற்கும், மற்ற தேசங்களுக்கும் சாட்சாது ஈன்ற தாய்போல் தோன்றினவர்களாகிய மாட்சிமையுள்ள கவர்ன்மெண்டாரென்று சிலர் சொல்வார்கள். பெற்ற தாயே பிள்ளைக்கு நஞ்சிடுவதுபோல நீதிக்கு விரோதமாய்க் கவரன்மெண்டார் இரக்கமற்று அப்படிச் செய்வார்களென்று நான் சொல்லமாட்டேன். கலெக்டர்கள் தாம் அநியாயமாய் நடத்துவார்களென்று எப்படி நிச்சயிக்கலாம். கலெக்டர்கள் அரசிறைப்பணம் சேகரிக்கும்படி, துரைத்தனத்தாரால் நியமித் தனுப்பப்பட்டு வந்திருப்பதனால், அப்பொருளைச் சேகரம் பண்ணுவதற்கு ஏற்ற முயற்சிகளைச் செய்வது அவர்களுக்குக் கடமையாதலால், அவர்கள் சட்டத்தின்படி கட்டளையிட, அதுவே வியாஜமாக அவர்களிடத்தில் உத்தியோகஸ்தரா யிருக்கும் சிரெஸ்ததார் சொற்படியோ, அல்லது தாசில்தார் ஏவுதலினாலோ தங்கள் சுயசித்தத்தினாலோ ஜில்லாதார் முதலானவர்கள் 'தைநாத்துச்' சேவகர்களை அனுப்ப, அவர்

கள் பயிரிடும் குடிகளைத் திருடர்களைப் பிடிக்கிறதுபோலப் பிடித்துவந்து, கையையும் காலையுங் குண்டுருட்டாகக் கட்டிக் கிட்டிக்கோல் பாய்ச்சிக் கடுமையாய் வெயிலெறிக்கும் மத்தியானவேளையில் ஆற்றுமணலிற் பதைக்கப் பதைக்க உருட்டிவிடுகிறதும் † கழுத்துக்கும் காற்பெருவிரலுக்கும் கயிறு மாட்டி அண்ணாந்தாள் போட்டு நெற்றியின்மேற் பெரிய கல்லெடுத்துவைத்து வெயிலிலே நிறுத்திப் பலவிதத்திலும் கஸ்திப்படுத்திக் கிஸ்திகட்டச் சொல்லுகிறதும், வாய்க்கு வழங்காத சொற்களெல்லாம் சொல்லி ஏசுகிறதுமுண்டு; அந்த உபத்திரவம் பொறுக்கமாட்டாமற் பயிரிடுகிறவர்களில் அநேகர் கையிருப்பில்லாமையால் ஏர்க்குண்டை முதலானவைகளையும், வீட்டுத் தட்டுமுட்டுகளையும், துணி முதலியவைகளையும் விற்றுக் கொடுத்துவிட்டுக் கொஞ்சநாளில் ஏழைகளாய் விடுவார்கள். அவர்கள் தங்கள் வீடுமுதலானவைகளை விற்றுக் கொடுக்கச் சம்மதியில்லாமற் சற்றே முன்பின் பார்ப்பார்களானால், அதிகாரபுருஷர்களே தாங்கள் "நிமிர்ந்து போட்டதென்ன குனிந்தெடுத்ததென்ன?" அது ஒன்றுமில்லையே. ஆதலால், மனங்கூசாமல் அந்த வீடுவாசல் முதலானவைகளைத் தாராளமாய்த் தங்களுக்கு நேர்ந்தபடி ஏலம்போட்டுக் குடிச்சனங்கள் கண்ணீர்விட்டழும்படி அவர்களைப் பரதேசிகளாக்கிவிடுவார்கள். இதற்குத் திருஷ்டாந்தம் இதனடியிற்காண்க.

ஒரு கிராமத்தில் பத்தேர்ச் சமுசாரியொருவன் தீர்வைப் பணங்கட்ட வழியில்லாமையால், தன் காணி பூமி முதலாகிய ஆஸ்திகளையெல்லாம் தோற்று, உடுக்க வஸ்திரமுமில்லாமற் பரதேசம் போய்விடலாமென்று நினைத்திருக்கையில், "பனையேறி விழுந்தவனைக் கடாயேறித் துவைத்ததுபோல" பழமுதற் பாக்கிக்காகச் சர்க்கார் சேவகர் வருகிற செய்தியறிந்து அவர்களுக்கென்ன உத்திரஞ் சொல்லுகிறதென்று ஏக்கமுற்று, "சட்டி சுட்டது கைவிட்டது" என்

† இதைப்போன்ற செயல்கள் இக்காலத்திறந்து பட்டன என்ற் கிடனுண்டு—பதிப்பாசிரியர்.

பதுபோல அதுவே வியாஜமாகப் பெண்சாதி பிள்ளை முத லான குடும்பத்தையெல்லாம் துறந்து கோவணாண்டியாய் வெளிப்பட்டு வருகையில் நடுவழியில் வேறொரு சேவகனைக் கண்டு, "காலைச்சுற்றின பாம்பு கடியாமற் போகாது" என்ப தாக இந்தச் சனியன் இங்கும் தொடர்ந்து வந்ததே; இனி எப்படியென்று நடுநடுங்கி ஜைனகோயி லொன்றிற்போய் ஒளித்தான். ஒளித்தவன் அந்தக் கோயிலில் நிர்வாணமாயி ருந்த ஆள்மட்டமான ஜைன விக்கிரகத்தைப் பார்த்துத் தன் னைப்போலப் பயிரிட்டுக் கெட்டவனென்று நினைத்துக்கொ ண்டு, ஐயோ! நான் பத்தேர் வைத்துக் கெட்டுக் கோவண த்தோடாவது தப்பிவந்தேன்; அப்பா! நீ எத்தனை யேர் வை த்துக் கெட்டாயோ? உனக்கு இந்தக் கோவணமு மில்லா மற் போய்விட்டதேயென்று அதைக் கட்டிக்கொண்டு அழு தானென்பதே.

சில கிராமங்களில் ஏரிகளிருந்தும், "பேர் கங்காபவா னி, தாகத்திற்குத் தண்ணீர் கிடையாது" என்பதுபோல அவைகளுக்குத் தண்ணீர் வருவதற் கிடமில்லாமற் புனற் குளமாயிருப்பதனாலும், சில கிராமங்களில் உள்ளவைகளோ அதிக நீர்கொள்ளாத சிற்றேரிக ளாகையினாலும், "அம்மை யார் நூற்றநூலுக்கும் பையன் அரைஞாட் கயிற்றுக்கும் சரி" என்பதாக முதற் போகத்துக்கே யன்றி, இரண்டாம் போகம் மூன்றும்போகம் பயிரிடுவதற்கு ஏதுவில்லாம லிரு க்கின்றது. அந்த முதற்போகத்திலும் அறுபதுநாள், எழு பதுநாள், மூன்றுமாதம் விளையும் சொற்பப் பயிருக்குத் தான் உதவியாகும். ஆறுமாதம், பத்துமாதம், ஒரு வருஷத் தில் விளையும் பயிருக்கு எவ்வளவும் உபயோக மாகாது. "கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போல்" என்றுஞ் சொல்லப்படுகின்றதே.

சில இடங்களில் "எருமடைக்கு நீர் பாய்ச்சுகின்றது" என்கிற பழமொழிக் கிசையப் பள்ளமடையிலிருந்து மேட்டு நிலத்திற்குப் பாய்ச்சவேண்டி ஏரிநீரையே யல்லாமற் குள

த்துநீர் கிணற்றுநீரையும் கவலைபோட்டும் ஏற்றம்போட்டும் மார்பில் இரத்தம்விழ இடுப்பொடியக் கைசலிக்க இறைத்து வருத்தப்படுகிறார்கள். இது வரவு கொஞ்சமும் வலிப்பு அதிகமுமா யிருக்கிறது.

அன்றியும் குடிகளுக்குள் அவரவர் தங்கள் தங்கள் கழனிகளுக்கு ஏரித்தண்ணீரை மடைவழியே மாற்றிக் கொண்டு போய்ப் பாய்ச்சுதற்காக, இராத்திரியில் நஞ்சோடு நஞ்சுகலக்கின்ற நடுச்சாமத்தில் விஷ ஜெந்துவாகிய பாம்பு கடித்தாலும், துஷ்டமிருகமாகிய புலியடித்தாலும் ஏனென்று கேட்பாரில்லாமல் தனியேபோய் நித்திரையுமிழந்து வருத்தப்படுகிறதுமல்லாமல், இந்த விஷயத்தில் ஒருவருக் கொருவர் மாளாத பகைகொண்டு பிராணசேத மாகிறதையும் பாராமற் பெருஞ் சண்டையிட்டு மண்டையை உடைத்துக்கொண்டு மாண்டுபோகிற துண்டு. இது "காணிலாபம் கோடி கேடு". என்பதாகிறதே.

சிலவூர்களிற் காணி பூமியில்லாத * சுகவாசிகள் ஊர்க்காணியாட்சிக்காரராகிய மிராசுதாரருடைய நிலத்திற் பயிரிட்டுச் சர்க்கார் தீர்வையும் கிராமமேரையும் கொடுக்கிறதுண்டு. அப்படியானால் இவர்களுக்கென்ன கிடைக்கும். இது "பெருமைக்குப் பன்றி வளர்க்கிற" தாகவல்லவோ முடியும்.

அநேக கிராமங்களிற் பட்டி முதலானவைகளாலும் திருடர்களாலு மாத்திரமல்லாமல் "பத்துப்பெயர் மருத்துவிச்சிகள் கூடிக்கொண்டு குழந்தை கையை ஒடித்தார்கள்" என்பதாக நிலத்தைத் தரவாரி செய்கிறவர்களாலும், நிலத்தரம் ஏற்படுத்துகிறவர்களாலும், அடங்கல் பார்க்கிறவர்களாலும், 'அஜிமாஷ்' செய்கிறவர்களாலும், 'தொகம்' போடுகிறவர்களாலும் சில காலங்களில் அதிக நஷ்டம் வருகிறதுண்டு.

* நிலத்தைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பின்மைபற்றி இவர்கட்கிப்பெயர் வந்ததுபோலும்,—பதிப்பாசிரியர்,

முன் ஒருகாலத்தில் மதிப்பாளி ஒருவன் ஒரு கிராமத்தில் வந்து மதிப்புச் செய்யும்பொழுது கிராமத்தான்மேல் விரோதத்தால் இந்த நிலம் "ஆனைகட்டுந்தாள் வானமுட்டும் போர்"என்று மதித்த சமயத்தில், "மாற்றைக் குறைத்தான் தட்டான் வாயிலே வைத்தான் செட்டி" என்பதுபோல, அவனைக் கிராமத்தான் வைக்க நினைத்து, மதிப்பாளிக்குத் தந்திரமாகத் தன் மோதிரக் கையைக் காட்டிச் சைகை பண்ணக் கண்டு, அவன் தனக்கு மோதிரம் கிடைக்கும் என்று பேராசைகொண்டு முன்பு ஏற்றினதை "ஆறுகொண்டது பாதி தூறுகொண்டது பாதி" என்று பின்பு இறக்கினதாகவும் சொல்லுகின்றார்களே, இது பெருமோசமல்லவா? "மோசம் நாசம் கபள வேஷம்" என்று உலக வதந்தியும் இருக்கின்றதே!

துரைத்தனத்தைச்சார்ந்த உத்தியோகஸ்தர் முதலானவர்கள் இப்படிப் பயிர் செய்பவர்களையே யல்ல, மற்றவர்களையும் வஞ்சிக்கிறது அவர்களுக்குச் சுபாவ குணமா யிருக்கிறது. அவர்கள் * "தாம் கெட்டாலும் பிறர்க்குக் கேடு நினைக்கலாகாது" என்பதை அறியார்களோ?

துருக்கர் துரைத்தனத்தில் ஓராற்றினிடத்தில் ஆயிரம் பொதிமாட்டு வர்த்தகர் வந்திறங்கி யிருக்கையில், இரவிலே ஆற்றில் வெள்ளம் வந்து அங்கு இறங்கியிருந்த பொதிகளையும் மாடுகளையும் வர்த்தகர்களையும் அடித்துக் கொண்டு போக, விடிந்தபொழுது அவர்களில் தப்பிப் பிழைத்தவர்கள் விசனப்படுவதை ஆற்றுக்கு அடுத்த கிராமத்தில் இருந்த கணக்கன் கண்டு, தனக்குப் பகையாளியாகிய குயவன் குடியைக் கெடுப்பதற்கு இதுதான் சமயமென்று நினைத்து, வர்த்தகர்களை அந்தக் கிராமத்தார் இடத்தில் போய் முறையிட்டுக் கொள்ளச்சொல்லி, கிராமத்தார் இதற்கு நாங்கள் என்னசெய்கிறது என்றால், இந்தநஷ்டம் குயவன் கொடுக்க வேண்டியது, இதன் காரணம் ஊர்க்கணக்கனைக் கேட்டால்

* தான்கெடினுந்தக்கார் கேடெண்ணற்க-நாலடியார்.

தெரியவரும் என்று வர்த்தகர் சொல்லும்படி செய்வித்து, கிராமத்தார் தன்னைக் கேட்கையில் அப்படித்தான் வழக்கம் கணக்கைப் பார்க்கவேண்டும் என்று சொல்லி, வீட்டில் வந்து பின் வருகிறபடி ஒரு ஏட்டில் எழுதி அது பழமையாகத் தோற்ற நெல்லுப்பானையில் வைத்து வேவித்து அதை வெகுநாளைக் கணக்குக்கட்டின் நடுவிலே கோர்த்துக்கட்டிக் கட்டோடே எடுத்துவந்து கிராமத்தாருக்குமுன் அவிழ்த்து அதற்குள் தேடி எடுப்பதுபோல அந்த ஏட்டை எடுத்து, "காட்டெருமுட்டை பொறுக்கி, மட்கலஞ்சுட்ட புகைபோய், மேற்கே மேகங்கிளம்பி, மின்னிக் குமுறி மழைபொழிய, ஆற்றில் வெள்ளம் பெருகி அடித்துப்போன பலசரக்கை ஊரார் இழுப்பது வழக்கு குயவனிறுப்பது கணக்கு" என்று வாசித்துக் காட்டச் சரிதான் என்று கிராமத்தார் ஒப்புக்கொண்டு அந்த நஷ்டத்தை ஊர்க்குயவனைக் கொடுக்கச் சொல்லித் தீர்த்தார்கள். குயவன், ஐயையோ தெய்வமே இதுவும் தலைவிதியா! என்று உப்புச்சட்டி முதலியவற்றையும் விற்று வர்த்தகருக்குத் தொலைத்தான். இதுவே மேற்சொல்லப்பட்டதற்குத் தகுதியான சாதிருசம்.

"பூனைக்குக் கொண்டாட்டம் எலிக்குத் திண்டாட்டம்" என்பதுபோலத் தமக்குச் சௌக்கியமும் பிறருக்கு அசௌக்கியமுமாம் என்பதை யோசியாமல், சுஜாதி அபிமானமுமில்லாமல், தாம் தாம் ஜீவனஞ்செய்யும் நிமித்தத்தையே பெரிதாக நினைத்து, கிரமமான இந்த இங்கிலீஷ் துரைத்தனத்திலும் நெறிதவறி, "குலத்தைக் கெடுக்கவந்த * கோடரிக் காம்பு" என்கிறபடி நம்மவர்களே கெடுக்கத் தலைப்படுகின்றார்களே, இதைக்குறித்து இராஜாங்கத்தார் செவ்வையாய் ஆராய்ந்தறிந்து அத்தவறு வராமல் நடத்தவேண்டும் அல்லவோ? அவ்வாறு நடத்தாமல் நமக்கு என்னவென்று கண்சாடையாயிருந்தால் அந்தத் தோஷம் "ராஜா ராஷ்ட்ர கிருதம் பாபம்" என்றவாறாக, மேற்படி இராஜாங்கத்தாரைத்

---

* கோடரி—கோடாரி என வழங்கிவருகிறது.

தானே சாரும். அவ்வித தோஷத்திற்குத் துரைத்தனத்தார் இடங்கொடாமல் குடித்தனத்திற்கு க்ஷேமமுண்டாகும்படி செய்வார்களானால் தங்கள் துரைத்தனம் மென்மேலும் அபி விர்த்திக்கும் என்பதற்குச் சந்தேகமில்லை.

குலோத்துங்க சோழராஜனுக்கு மகுடாபிஷேகமான பொழுது வித்வஜனர்களெல்லாம் அவன்மேற் கவிபாடி அவனை வாழ்த்தினார்கள். அத்தருணத்தில் ஒளவை யென்பவள் அவ்விடத்திற்கு வந்தாள். அவளை நோக்கி அங்குள்ள பெரியோர்கள் 'அம்மா நீர் அரசனை வாழ்த்துதல் செய்ய வேண்டும்' என்று பிரார்த்திக்க, அவள் "வரப்புயர" என்று சொல்லிப் பேசாமலிருக்க, அவர்கள் அதன் கருத்தறியாமல் அவள் வாழ்த்தவில்லையென் றெண்ணி மறுபடியும் இரு முறை வினவ, அவள் முதன்முறை சொன்னபடி சொல்லி 'நான் முக்காலும் வாழ்த்தியும் என்னை நீங்களேன் அலட்டு கிறீர்கள்' என்று கேட்க, அவர்கள் 'எவ்விதமாக வாழ்த்தி னீர்' என்ன 'வரப்புயர' என்று வாழ்த்தினேனே நீங்கள் அறியவில்லையா' என்ன, அவர்கள் 'அதன் தாற்பரியமென்ன' என்று வினவ, ஒளவை 'வரப்புயர நீருயரும், நீருயர நெல் லுயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுயரக் கோனுயரும், கோனுயரக் கோனுயர்வான்" என வாழ்த்தியதாமென்றாள். இந்தச் சிறிய வாக்கியங்களினாலும் "குடித்தனஞ் செழித்தால் துரைத்தனஞ் செழிக்கும்" என்று விளங்குகின்றதே.

மழைபெய்து ஏரிநிறைந்தும் சற்றே அஜாக்கிரதையா யிருந்தால், அது உடைபட்டு அதிலுள்ள நீரெல்லாம் வியர்த் தமாய்ப் போய்விடுவது மல்லாமல், "செத்துங் கெடுத்தான் சீயபுரத்துக் கிராமணி" என்பதுபோல ஒரு நொடிப்பொழு தில் அடுத்த கிருக கிராமங்களையும் நாசமாக்கிவிடும். அத னாற் கடலலையி லகப்பட்ட சிறு துரும்பைப்போலக் குடிகள் அங்குமிங்குமாய் அவதிப்படுகையில், உடைந்த ஏரியைக் கம் புக்கழி வைக்கோல் செத்தை முதலானவைகளைத் தீவிரமா ய்த் தேடிக்கொண்டுபோய் உடைபட்ட வாயில் மரக்கூர்ச்சு

க்கீர் நாட்டி வைக்கோலைத் திரணை திரணையாகக் கட்டிக் குதிரைப்பாய்ச்சல் கொடுத்துத் தடுத்துக் கட்டுகிறதற்கு அக் குடிச் சனங்களே துரைத்தனச் சேவகரால் அமிஞ்சி பிடிக் கப்படுகிறார்கள். இப்படி அவர்கள் படும் சங்கடம் ஒருவித மல்ல.

தக்ஷிண திசையிற் பயிர்செய்பவனாகிய ஒரு வேளாளன் தன் வீட்டில் சினையாயிருந்த பசுத் தலையீற்றுக் கன்றுபோடு வதற்கு அதிக பிரயாசத்துடன் கதற, அதுகண்டு அவன் ஐயோ வாயில்லாத ஜீவனும் சாதுப்பிராணியுமா யிருக்கிற பசு வருத்தப்படுகிறதே, என்னசெய்வலா மென்று ஏங்கிநிற் கும் தருணத்தில், சோனைமாரியாக மழைபெய்ய, அதனால் அவனது இருப்பிடமாகிய வீடு அடியோடே நகர்ந்து இடிந் துவிழ, அந்த அவன் கட்டுகிறதற்கு வேண்டும் கருவிகளைச் சேகரிக்கும்படிக்கு நாலுதிக்கிலும் பாவும் குழலும்போல அலைச்சற்படும் வேளையில், இடிமேல் இடி யிடித்ததுபோல, அவன் மனையாள் பிரசவிக்கக் கூடாமற் சகித்தற்கரிதாகிய கர்ப்பவேதனைப்பட, "உகிர்ச் சுற்றின்மேல் அம்மிவிழுந்தாற் போல," அது ஒருபக்கத்தில் அவனை வெகுவாய் வாதிக்கிற சமயத்தில், அவனிடத்திற் படிவாங்கிக்கொண்டு சேவிக்கும் அடிமையாள் திடீரென்று இறந்துபோக, இனி நமக்குப் பயிர்வேலை செய்கிறதற்கு வேறொருவரும் உதவியில்லையே யென்று அவன் சிறகிழந்த பறவைபோலத் திகைக்கும்பொ ழுது, அவனுடைய உழுது பண்படுத்தப்பட்ட நிலம் ஈரம் வாடிப்போகிறதென்னும் எண்ணம் அவனுக்கு உதித்தமை யால், அதில் விதைக்கும்படி எத்தனப்படுத்திவைத்த தானிய விதைகளை அவசரமா யெடுத்துக்கொண்டோட, அவனோடு கிற வழியிற் பாம்பு குறுக்கிட்டதுபோல அவனுக்குப் பூர் வம் கடன் கொடுத்திருந்த கடன்காரர்கள் எங்களிடத்தில் நீ பட்ட கடனைச் செலுத்தினாலல்லது போகக் கூடாதென்று ஆணையிட்டு மறிக்க,

"விடன்கொண்ட மீனைப்போலும் வெந்தழன் மெழுகுபோலும்
படங்கொண்ட பாந்தள்வாயிற் பற்றிய தேரை போலும்

திடங்கொண்ட ராமபாணஞ் செருக்களத் தூற்றபோழ்து [ன்"
கடன்கொண்டார் நெஞ்சம்போலுங் கலங்கினு னிலங்கைவேந்த

என்றவண்ணமாக அவன் சித்தம் கலங்குகையில், "பட்டகாலிலே படும் கெட்டகுடியே கெடும்" என்பதற் கேற்கத் துரைத்தனத்தாருடைய தண்டற் சேவகர்கள் வந்து உழுது பயிரிட்டு அனுபவித்ததற்காகச் சேரவேண்டிய இறைப்பொருளைக் கட்டச்சொல்லி உபத்திரவப்படுத்த, அவனிதற்கென்ன உத்தரஞ் சொல்லுகிறதென்று ஒன்றுந் தோன்றாமல் ஆந்தைபோல் விழிக்குமளவில், அவனுடைய ஆசாரியர் வந்து தமக்குக் குருதட்சணை கொடுக்கவேண்டுமென்று கேட்க, இதேது தர்மசங்கடமா யிருக்கிறது கொடாவிட்டால் அபசாரத்திற்கு இடமாகிறதே யென்று அவன் பித்துக்கொண்டவன்போல் எண்ணுததும் எண்ணுகையில், வித்வஜனர்கள் அவன்மேற் கவிபாடிவந்து தியாகம் தரச்சொல்லிப் பீடிக்க, வித்வான்களாகையால் இவர்கள் மனம் நோகும்படி செய்யக்கூடாதே யென்று பலவிதத்தாலும் இடர்ப்பட்டு அவன் இருதலைக் கொள்ளிக்கு நடுவே அகப்பட்ட எறும்பைப்போல் முன்னும் போகாமற் பினனும் போகாமல் தடுமாறித் தத்தளித்தான். அப்பொழுது அந்த நிர்ப்பாக்கியன் பட்ட சங்கடத்தை யெல்லாம் மேற்சொல்லிய புலவர்களில் ஒருவர்,

> "ஆவீன மழைபொழிய வில்லம்வீழ அகமுடையாள் மெய்ந்நோவ அடிமைசாவ, மாவீரம் போவதென்று விதை கொண்டோட வழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ளக், கோவேந்த ருழுதுண்ட கடமைகேட்கக் குருக்கள்வந்து தட்சணைக்குக் குறுக்கே நிற்கப், பாவாணர் கவிபாடிப் பரிசுகேட்கப் பாவிமகன் படுந்துயரம் பார்க்கொணுதே"

என்று ஒரு பாடலாகப் பாடினர்.

உழுதொழிலைச் செய்வதற்கு வேண்டிய கருவிகளெல்லாம் அழியாத வச்சிரத்தினலே செய்யப்பட் டிருக்கின்றனவா? காட்டிலுள்ள செத்தமரங்களினுலும் துருப்பிடிக்கும் இரும்பினுலும் செய்யப்பட்டவைகள்தாமே. ஆதலால்

அடிக்கடி காறுகள் தேய்ந்துபோம். கலப்பைகள் முறிந்து போம். ஏரிலே கட்டப்படும் எருதுகள் கோமாரிமாரடைப்பான் கண்டு திடீரென்று செத்துப்போம். அல்லது கிழமாய்ப்போம். வேலையாட்களுக்கு வியாதி சம்பவிக்கும். அக்காரணங்களால் உழவுக்குத் தடையுண்டாகும். அந்தச் சமயத்தில் வேறே கலப்பைகள், காறுகள், எருதுகள், ஆட்கள் முதலானவைகளை நூதனமாகச் சம்பாதிக்கவேண்டி வரும். அவைகளைக் குறித்து அதிக பணம் செலவாகிறதும் சொல்லக்கூடாத கஷ்டம் நேரிடுகிறதும் உண்டு. இந்தச் செலவெல்லாம் எவ்விதத்திற் கட்டிவரும்.

இவ்வகைச் செலவுக்கும் சர்க்கார் தீர்வைக்கும் பணம் அவசரமாய் வேண்டியிருக்கிறதே. அதற்காகக் கட்டிலும் குதிரிலும் சேர்த்துவைத்த உசிதமான பழைய நெல் முதலியவைகளைக் காலவிலைக்குத் தக்கபடியன்றி எட்டுமரக்காலுக்குப் பத்துமரக்காலும் பத்துமரக்காலுக்குப் பன்னிரண்டு மரக்காலுமாக நேர்ந்தவாறு விற்றுக்கொடுத்துவிட்டுத் தாங்கள் அநுசிதமான வரகு சோளம் முதலானவைகளைச் சமைத்துப் புசித்தும் கம்பு கேழ்வரகுகளைக் காய்ச்சிக் குடித்தும் அவைகளுக்கும் வழியில்லாமல் வடித்த கஞ்சி புளித்த காடி தவிடு பிண்ணாக்குகளினால் வயிற்றை நிரப்பியும் உடம்பு வளர்த்துவர அவை சரீரத்திற்கு ஏற்றுக்கொள்ளாமல் சுரம், குளிர், தலைநோய், வயிற்றுநோய், காற்பிடிப்பு, கைப்பிடிப்பு, பித்தம், வாயு, மந்தம், வாந்தி, பேதி உண்டாகி அவஸ்தைப் படும்பொழுது "பாலஜோசியம் விருத்தவைத்தியம்" என்பதற் கேற்கச் சாஸ்திரமாத்திரம் அன்றிக் கைம்முறைகளிலும் நெடுநாட் பழகித் தாது முதலிய அஷ்டபரிகைஷயும் தெரிந்து நல்ல நிர்வாகத்தோடே "ஆயிரங் காக்கைக்கு ஒரு கல்" லெறிவது போலே பல பிணிக்கும் ஒரு மருந்தே கொடுத்துச் சீக்கிரத்தில் சௌஸ்தப் படுத்திப் பெரிய பெயர் பெற்ற மகா சமர்த்தனான பிரபல வைத்தியன் இந்த எளியவர்களுக்கு எங்கே கிடைக்கப்போகிறான். அந்நேரத்திற் கண்ணுக்கு எதிர்ப்பட்ட கற்றுக்குட்டியை அழைப்பித்து

அவனிடத்திற் கையைக் காட்ட, அவன் பார்த்து அம்மம்மா! இது பொல்லாத அசாத்திய வியாதி. இதற்குத் தகுதியான பரமௌஷதப் பிரயோகம் பண்ணவேண்டுமென்று பையிலிருந்து வீரம் பூரம் ரசபாஷாணங்களை எடுத்து இது நாராயணாஸ்திரம், இது பிரமாஸ்திரம், இது பாசுபதாஸ்திரம், இது வச்சிரகண்டன குடாரம், இது பைரவி, இது சிந்தாமணி, இது அமிர்தசஞ்சீவியென்று பெயர்களை மாத்திரம் பிரமாண்டமாகச் சொல்லிக் கைகொண்டமட்டும் இழைத்து மொத்தை மொத்தையாக வழித்து, "நாச்சேதி மாத்திரா வைகுண்ட யாத்திரா" என்பதாகக் கூசாமற் கொடுத்துச் சாந்திபண்ணத் தெரியாமல் உபத்திரவத்தை அதிகப்படுத்திவிட அப்படியும் சங்கடப்படுவார்கள். அது நிற்க,

முற்காலத்திற் சேரன் சோழன் பாண்டியன் முதலாக இந்துக்களில் ஆளுகை செய்த அரசர்களெல்லாம் புஷ்பமானது வாடாமல் அதிலுள்ள தேனை வண்டு மிருதுவாகக் கிரகிப்பதுபோலக் குடிகளுக்கு வருத்தமில்லாமல் அவர்களிடத்தில் ஆறிலொரு கடமைவாங்கி வந்தார்களென்று லோகபிரசித்தமா யிருக்கின்றது. ஆறிலொன் றென்பதன் விவர மென்னவெனில், பயிரிடப்பட்டு விளைந்த தானிய மொத்தத்தை ஆறு பங்காகப் பகுத்து அவைகளில்,

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லுனென்றாங்
ஐம்புலத்தா றோம்ப றலை"

என்றபடி பிதிரர்க்கு ஒன்றும், தேவர்க்கு ஒன்றும், விருந்தினருக்கு ஒன்றும், சுற்றத்தாருக்கு ஒன்றும், இல்வாழ்வானுக்கு ஒன்றுமாகப் பிரித்து, ஐந்து பங்கைக் குடிகளுக்குக் கொடுத்துவிட்டு, ஒரு பங்கை அரசர்கள் தமக்குச் சேரவேண்டிய கடமைக்காக எடுத்துக்கொள்கிறதே. இது எவ்வளவு சகாயம்.

இக்காலத்திலோ அப்படியில்லை. ஆயினும் காக்கையின் கழுத்திற் பனங்காயைக் கட்டினதுபோலக் குடிகள் பரிக்

கக்கூடாமல் அவர்கள்மேல் ஏற்றப்பட்ட அதிகபாரத்தை மனதிரங்கி ஒருவாறுகச் சுலபப்படுத்துவது துரைத்தனத்தாருக்கு அவசியமான கடமைதான்.

இலங்கைத்தீவின் துரைத்தனத்தார் பத்திலொரு கடமை வாங்கி வருகிறார்களே அது இரகசியமானதா? யாவரும் அறியத்தக்கதாய்த்தானே யிருக்கிறது. இப்படி ஓர ராசாட்சியிலேயே ஓரிடத்தில் ஒருவிதமும், மற்றோரிடத்தில் மற்றொருவிதமாய் நடந்துவருகிறதே இஃதென்ன! ஒன்றை இடுக்கிக்கொண்டு ஒன்றை நடத்திக்கொண்டுபோவதா யிருக்கிறதல்லவோ? இது தர்மமா? தாய்க்குப் பிள்ளைகளிடத்தில் பட்சபாத முண்டா? அவள் தான்பெற்ற பிள்ளைகளையெல்லாம் ஒரு சீராய் நடத்தவேண்டு மல்லவோ?

இந்தப் பிரதேசத்தில் கோதாவரி முதலிய ஆறுகளிற் பிரபலமான அணைக்கட்டுகளையும் பல விடங்களிற் பெரிய, சிறிய அளவிறந்த வாராவதிகளையும்,மழைபெய்கின்ற நீரெல்லாம் பாழ்க்கிறைப்பதுபோல வீணாய்ப் போகாமல் "பாழாய்ப் போகிறது பசுவின் வாயிலே" என்பதாக ஆற்றின் வழியே கால்களினூ லோடி அந்தந்தக் கிராமங்களுக்குப் போய்ப் பாய்ந்து பயன்படும்படி எண்ணத்தொலையாத கிளைக் கால்வாய்களையும், சீக்கிரத்தில் நினைத்த விடத்திற் சேர்கிறதற்கு இருப்புப்பாதைகளையும், தூரதேச சமாசாரங்களை எளிதிலறிகிறதற்கு ஆச்சரியமான மின்தபாற் கம்பிகளையும், வண்டி மாடு குதிரை மனிதர்கள் போக்குவரவு செய்வதற்கு விசாலமும் நெடுமையுமாயிருக்கிற பற்பல சாலைகளையும் உண்டாக்கி, அநேக ஜில்லாக்கள் தாலூக்காக்களில் தமிழ் தெலுங்கு முதலாகிய சுதேச பாஷைகளும் இங்கிலீஷ் பாஷையும் நானுசாதிப் பிள்ளைகளும் படிக்கும்படி பாடசாலைகளையும், அவரவர்களுக்கு வரும் வியாதிகளை மருந்துகொடுத்து நிவர்த்திசெய்து சொஸ்தப்படுத்தும்படி அங்கங்கே வைத்திய சாலைகளையும் ஸ்தாபித்து, அப்பாடசாலைகளிற் பல நூற் பயிற்சியுள்ள நிபுணர்களாகிய உபாத்தியாயர்களையும் வைத்திய சாலைகளில் தன்வந்திரிபோல மிகவும் திறமான வைத்தியர்

களையும் ஏற்படுத்திவைத்து, மோரீசு முதலான தீவுகளுக்குப்போய்வருகிற கூலிச்சனங்கள் அவ்வவ்விடங்களில் தமக்கேற்ற உதவிகளையும், மற்றும் தமது கோலின்கீழ் வாழ்வாரெல்லோரும் எவ்விதமான நன்மைகளையும் பெறும்பொருட்டுப் பொருளைப் பொருள் செய்யாமல் மிதமறச் செலவு பண்ணி, அதற்கு வேண்டிய முயற்சிகளைத் தாமதமில்லாமற் செய்துவருகிறது மல்லாமல் சிலர் சொல்லுகிறபடி இனி அங்குள்ள ஜில்லாவின் தாலூக்காக்களைத் தொகையிற்குறைத்துச் சிரெஸ்ததார் தாசில்தார் முதலானவர்களுக்குச் சம்பளத்தை அதிகப்படுத்தி, எங்கும் ஒரே சீராகப் பிரஜைகளுக்கு அதிக சௌக்கியத்தை உண்டுபண்ணக் கருத்துக் கொண்டிருக்கிற தரும துரைகளாகிய மாட்சிமை தங்கிய கவர்ன்மெண்டார் அல்லும்பகலும் ஓய்வில்லாமற் புருஷன் பெண்சாதி புத்திரன் புத்திரிகள் முதலாகக் குடும்பத்திலுள்ள ஆண் பெண் பாலர் விருத்தர் அனைவரும் படியாள் முதலிய வேலைக்காரரோடும், பள்ளத்திலும் மேட்டிலும் சேற்றிலும் தண்ணீரிலும் மழையிலும் வெயிலிலும் பனியிலும் குளிரிலும் காற்றிலும் மாறுமற் சரீரம் வருந்த உழைத்துப் பாடுபட்டும் செம்மையாய்ப் பலர் அனுபவிக்கப் பெறுமல்,

> "கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத்தான் கற்பித்தானு, இல்லைத்தான் பசியாம லிருக்கத்தான் பதுமத்தானெழுதினுனு, பல்லைத்தான் விரித்திரந்தால் நெல்லைத்தான் வரகைத்தான் பரிந்தாரீவார், முல்லைத் தாண்டவராய கங்கை குலம் விளங்கவந்த முதன்மையோனே"

என்ற வண்ணமாக உதர நிமித்தத்தினுல் மிகவும் துக்கிக்கின்ற மேற்படி எளிய குடிச்சனங்களை "நாட்டுக்கு நல்ல துரை வந்தாலும் தோட்டிக்குப் புல்லுச் சுமை போகாது" என்பதாக நினைத்துப் பாராமுகமாய்க் கைவிட்டிராமல், அன்பு கூர்ந்து தயையுடனே விசாரணை செய்து இவர்களும் மற்றவர்களைப்போலச் சுகமாய் ஜீவனம் பண்ணும்படி இப்பொழுது தாங்கள் செய்துவருகிறவைகளுடனே இன்ன மேதாவது சிறிது சகாய முண்டாகச் செய்தால், அது சகலத்திலும் பிரதானமான லோகோபகாரமா யிருக்கும் என்பதே.

பயணிலுழவு முற்றிற்று.

# காலபேதவியல்பு.

இது

சுபட்ச விபட்ச சம்வாதமாகச் செய்யப்பட்டது.

சுபட்சன்.—ஓய் விபட்சரே வாரும் உம்மைக் கண்டு நெடுநாளாயிற்று. சுகமாயிருக்கிறீரா ?

விபட்சன்.—சுபட்சரே இந்தப் பொல்லாத படுபாவி மகன் காலத்திற் சுகம் எப்படியுண்டாகும்.

சுபட்சன்.—ஓ ! ஓ ! 'பிள்ளையாரைப் பிடித்த சனி அரச மரத்தையுங் கூடப்பிடித்தது' என்பதுபோல உமது முயற்சியின்மையைக் காலத்தின் மேலேற்றி அதற்கும் தோஷம் கற்பிக்கின்றீரோ, இது "கணக்கன் கணக்கறிவான் தன் கணக்கைத் தானறியான்" என்பதா யிருக்கின்றதே. கால மென்ன செய்யும்.

விபட்சன்.—கல்லும் தேங்காயுஞ் சந்தித்ததுபோலப் பேசுகிறீரே, சகலத்திற்கும் காலமே மூலம். அது முன்போ லில்லை. வரவரப் பேதித்துவருகின்றது. இதை நீர் "கத்தரிக் காய் சொத்தை யென்றால் அரிவாள் மணைக் குற்றம்" என் பார்போல முயற்சியின்மை யென்கிறீர்.

சுபட்சன்.—புத்திமானாயிருந்தும் யோசியாமற் காலமா னது பேதிக்கிற தென்கிறீரே, இது "மலடி மகப்பெற்றாள்" என்பது போலவும், எக்காலத்திலும் அசையா திருக்கின்ற காரணத்தால் அசலமென்று பெயர் பெற்ற மலை அசைகின்ற தென்பது போலவு மிருக்கின்றதே, என்ன நியாயத்தைக் கொண்டு அப்படிச் சொல்லுகிறது.

விபட்சன்.—"கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டு மா?" அது கணம், விநாடி, நாழிகை, முகூர்த்தம், சாமம், பகல், இரவு, நாள், வாரம், பட்சம், மாதம், இருது, அய னம், வருஷம், வியாழவட்டம், யுகம், கற்ப முதலானவை

களாய்ப் பேதித்து நிகழ்வதைப் பற்றிச் சொல்ல வேண்டியிருக்கின்றது.

சுபட்சன்.—கணம் முதலாகிய பகுப்பாய் நிகழ்வது சகசமே; அப் பகுப்பும் தொன்றுதொட்டு அவ்வாறு ஒரு தன்மையாய் நிகழ்வதன்றிச் சிலமுறை குறைந்தும், சிலமுறை அதிகரித்தும், ஒன்று மற்றொன்றாக மாறியும் நிகழ்வதன்றே; அங்ஙனமாக, அது பேதிக்கிறதென்பதும் "மூக்கு மயிர் பிடுங்கி ஆள்பாரம் குறைந்தது" என்பதுபோ லிருக்கின்றதே?

விபட்சன்.—ஒருவித்து முளைத்துக் கிளைத்துத் தழைத்துப் பூத்துக் காய்த்து நசிப்பது ஏககாலத்திலேயா? அதற்குரிய பருவம் வாய்த்தாலல்லது அப்படியாகாதே. மேலும் அரும்பு, பூ, பிஞ்சு, காய், கனி, முதலானவைகளில் ஒன்றின் குணம் மற்றொன்றுக் கில்லையே. இவ்விகற்பமெல்லாம் காலத்தினாலே தானே அவைகளுக் குண்டாகின்றன. இவ்வாறு சகலமும் "சர்வசிய காரணங் கால" என்கிறகாலப்பிரமவாதப்படி வெவ்வேறாகிய காலமே காரணமாகப் படிப்படியாய் உற்பத்தி விர்த்தி நிவர்த்தியாகின்றதனால், காலம் பேதிக்கின்றதென்பதற்கு ஆட்டங்க மென்ன?

சுபட்சன்.—"பல வுமி தின்றால் ஓரவில் தட்டாதா?" என்று நினைத்துக்கொண்டு இவ்விதத்தாற் காலம் பேதிக்கிறதென்பது, "ஆகாயம் விழுந்துவிட்டது" என்றதுபோலிருக்கிறது. பொதுவாய் ஆராயுமிடத்திற் சகல புவன சராசரங்களும் தோன்றி, வளர்ந்து, அழிவது, அவற்றின் சுபாவ தர்மமே வேறல்ல என்றாலும், பனம்பழம் முதிர்ந்து தன்னியல்பாய் உதிர்ந்து விழுஞ் சமயத்திற் காக்கை தன் சுபாவப்படி அதன் மேலேற, உடனே அப்பழம் விழுந்தது கண்டோர், காக்கைத்தான் அதனைத் தள்ளியதென்று சொல்கின்ற 'காகதாலி' நியாயமாக அவை யெல்லாம் காலத்தோடு ஒத்து நிகழ்வதனாற் காலக்கிரமத்தினாலேயே அப்படி யாகின்றன வென்று உலகத்தாரால் விவரிக்கப் படுகின்றன?

விபட்சன்.—நீர் காகதாலி நியாயமென் றல்லவோ சொல்லுகிறீர். வையாகரணிகள் பெரும்பாலும் காலப்பெயர் அதனோடு சம்பந்தப்பட்டு நிகழும் பொருள் முதலியவற்றிற்கு ஆகுபெயராகிய பேதிப்பதைக் காலம் பேதிக்கின்றதென்றால் விரோதமென்ன ?

சுபட்சன்.—"சங்கிலே வார்த்தால் தீர்த்தமும், செம்பிலே வார்த்தால் தண்ணீருமா? ஒருவிதத்தில் இரண்டுமொன்றுதானே ? இது "நரகடு காசிபோயி நீள்ளு நாலுகுபாலு சேசிநாடுகதா" என்பதாயிருக்கின்றது. இருந்தாலுமிருக்கட்டும். பொருள்முதலிய பேதிப்பது உண்மையே. அவற்றைக் காலத்தின்மேலேற்றி அது பேதிக்கின்றதென்றுசொல்வதிலும் காலத்திற்குக்காலம் அப்பொருள் முதலியவை பேதிக்கின்றன வென்பதற்கு விரோதமென்றுமில்லை. அதை வேண்டுமானால் ஊரெங்குமறியப் பறையறைந்துக்கொண்டு பேசும்; அப்பொழுதும் 'உற்றது சொன்னால் தான் அற்றது பொருந்தும்.'

விபட்சன்.—இதுசரிதான். அப்படியே செய்வோம். முற்காலத்தில் வற்றாச் சமுத்திரம்போற் குறைவற்றிருந்த கல்வி செல்வம் கைத்தொழில் முதலானவைகள் கிருஷ்ணபட்சத்துச் சந்திரன்போல வரவரக் குறைந்து வருவதனால், அவை இன்னும் கொஞ்சகாலத்திற்குள்ளே தேரைவால்போலச் சுத்தசூனியமாய் விடுமென் றல்லவோ நினைக்க வேண்டியிருக்கின்றது ?

சுபட்சன்.—என்னசொன்னீர் ? முற்காலத்திற் குறைவற்றிருந்த கல்வி செல்வமுதலானவைகள் வரவரக் குறைகின்றன வென்றல்லவா ? இது ஓடிப்போன முயல் பெரிய முயல் என்பதா யிருக்கின்றதே. இப்படிக் கலவைக் கீரை பறிப்பதுபோலக் கல்வி செல்வ முதலிய எல்லாவற்றையும் கலந்தெடுத்துப் பேசுவது சரட்டுச் சீக்காய் மயக்கத்திற்கு இடமாகும். பட்டுக் கத்தரித்ததுபோல ஒழுங்கு பட ஒவ்வொன்றாக வகுத்து, துலைநிறைபோலே நிதானமாகச் சீர்

தாக்கி, "பேசப்போகிறையோ, சாகப்போகிறையோ?" என்பதையும் யோசித்து மிகப் பயன்படும்படி பேசவேண்டாமா?

விபட்சன்.—வெண்காயத்தை உரிக்க வுரிக்க "ஈரவெண்காயத்திற் கிருபத்தெட்டுப்புரை" என்றபடியே அது புரை புரையா யுரிவதே யல்லாமல் உள்ளே யொன்றுமில்லாததுபோலச் சிலர் சொல்வதைப் பருக்க ஒருபயனுமில்லாததாய் முடியும். அது தெரிந்தும் அப்படிப்பேசப் பைத்தியமா? நாமென்ன வேலையற்ற வீணர்களா? களங்கமற்ற கண்ணாடிபோலத் தெளிவுடைய தாகவும், மணலூற்றுப்போலப் பயன்விளைவதாகவும் முதல் முதற் கல்வியைக்குறித்து நான் பேசுகிறேன் பாரும்:—

## கல்வி.

வேதாகம புராணங்களும், தர்க்க வியாகரணாதி சாஸ்திரங்களுமாகிய இலக்கிய இலக்கணக்கல்வி குன்றின்மேலிட்ட விளக்குப்போலப் பிரகாசமாக முற்காலத்தில் எங்கும் பிரபலித் திருந்ததே; அது இக்காலத்தில் குடத்திலேற்றிய விளக்கைப்போ லல்லவோ மழுங்கி இருக்கின்றது.

சுபட்சன்.—நீர் "அதிக்கிரமமான வூரிலே கொதிக்கிற மீன் சிரிக்கிறது" என்பதாகப் பேசுகிறீர். கல்வி முற்காலத்திற் பெரும்பாலும் சமஸ்கிருத பாஷையிலும், அதற்கு ஒருவாறொப்பாகத் தமிழிலும், தெலுங்கிலும் சேனாறு பாய்ச்சலாயிருந்ததே யல்லாமல், இக்காலத்திற் கங்கை பிரவாகித்தாற்போலவும், கடல் மடைதிறந்தாற் போலவும் அநேக பாஷைகளிற் சாதாரணமாய்ப் பெருகியிருக்கின்றதே! முன் எப்படி இருந்தது?

விபட்சன்.—அதுமெய்யானால் "அகத்திலழகு முகத்தில் தெரியும்" என்பதாக அதைக்கற்றுக் கேட்டுணர்ந்த வித்வஜனர்கள் அக்காலத்தி லிருந்ததுபோல இக்காலத்திலும் அதிகரித் திருக்கவேண்டுமே.

சுபட்சன்.—ஏனில்லை யென்கிறீர்? "உலக்கை தேய்ந்து உளிப்பிடியாய் விட்டதோ?" அக்காலத்தில் வித்வஜனர்கள் சமஸ்கிருத பாஷையில் பாணினி, வரருசி, பதஞ்சலி, காளிதாசன், தண்டி, பவபூதி முதலானவர்களும்; தமிழில் அகத்தியர், தொல்காப்பியர், மதுரைச்சங்கத்தார், வேப்பத்தூர்ச் சங்கத்தார், ஔவை, திருவள்ளுவர், கம்பர், காளமேகம், புகழேந்தி, ஒட்டக்கூத்தன் முதலானவர்களும்; ஆந்திரபாஷையிற் பீமகவி, பொம்மன் போத்துராஜு, நன்னயபட்டு, திக்கன்னசோமயாஜி, ஸ்திரீநாதன் முதலானவர்களும்; இதரபாஷைகளிற் சிற்சிலருமே இருந்தார்கள், இக்காலத்தில் வைதிகக் கல்வியில் அவ்வளவு பூரண பாண்டித்திய முடையவர்களில்லை. ஒருவாறுனவர்கள் சிலரிருக்கிறார்கள், லௌகிகக் கல்விப் பயிற்சி யுள்ளவர்களோ வெகுபேய ரிருக்கிறார்கள். இவர்களைக்குறித்து நீரறியாததுபோல வினவுதல் "நிஜாமாலிதண்டில் நிஜாருகாரனைக்கண்டாயா?" என்பதுபோலிருக்கிறதே. தற்காலத்திற் பலசாதிப்பெண்களும் கல்வி கற்கின்றார்கள். பூர்வம் அத்திபூத்ததுபோலச் சில ராஜஸ்திரீகள் மாத்திரம் கல்வி பயின்றார்கள். அதுவும் "நிர்வாண பட்டணத்தில் நிர்ச்சீலை கட்டினவன் பைத்தியகாரன்" என்னப்படுவதுபோல அவர்களுக்குக் கௌரவத் தாழ்வா யிருந்தது.

விபட்சன்.—அந்நாளில் எத்தனையோ புஸ்தகங்கள் எழுதப்பட்டிருந்தன. இந்நாளில் "உள்ளதையுங் கெடுத்தான் கொள்ளிக்கண்ணன்" என்பதாக அவைகளை எவர்களும் எடுத்துப்படியாது கைவிட்டதனால் எல்லாமிறந்துபோயின.

சுபட்சன்.—முன்னாளில் ஒருபுஸ்தகமாவது அச்சிடப்படாமல் அருமருந்துபோலச் சிலமாத்திரம் பனையேடு முதலானவைகளில் எழுதப்பட்டிருந்தன. தற்காலத்தில் எழுதப்பட்டவைகளே யன்றி அச்சிடப் பட்டவைகளும் "கனமழை பெய்து காடுதளிர்த்தது" போல நாளுக்குநாள் அதிகரித்து உலகமெல்லாம் புஸ்தகமாய் நிறைந்திருக்கின்றன.

விபட்சன்.—முற்காலத்தைப்போல இக்காலத்தில் புஸ்தகங்களைப் படித்துக் கொடுக்கக் கேட்டால், அருக்காணி முருக்கம்பூப் போலச் சரக்குப் பிரியம் பண்ணுகிறதே யொழியச் சுலபத்திற் கொடுக்கிறதில்லை. ஒருவர்க்குக் கற்பிக்கிறதும் அதிக பிரயாசத்தி லிருக்கிறது.

சுபட்சன்.—"ஆலையில்லா வூருக்கு இலுப்பைப்பூச் சருக்கரை" என்பதுபோல அக்காலத்திலே தான் புஸ்தகங்களை எளிதாய்க் காட்டுகிறதும் கற்பிக்கிறது மில்லை. கற்பிக்கத் தொடங்கினாலோ கோப்பியமா யிருக்கிற வேதாகமங்களையல்ல, சாமானிய இலக்கணங்களையும் "கானாது கண்ட கம்பங்கூழைச் சிந்தாது குடியடி சில்லிமூக்கி" என்பதாக அபூர்வமாயும், வீட்டுக்கதவைச் சார்த்தி உள்ளேயிருந்து தீட்சை கொடுப்பதுபோல அதி ரகசியமாயும், ஆராவது இரண்டொருத்தருக்கு மாத்திரமே கற்பிக்கிறது. இக்காலத்திலோ தாய் தன் சிசுவைத்தேடிப் பாலூட்டுவதுபோல இன்னாரினையாரென்னும் பேதமில்லாமல் அனைவருக்கும் பிராட்டங்கமாகச் சகல புஸ்தகங்களும் கொடுக்கப்படுவதன்றிப் பகிரங்கமாகக் கற்பிக்கவும் படுகின்றன.

விபட்சன்.—பூர்வத்தில் வித்வான்களுக்கிருந்த மிக்க செல்வமும் சிறப்பும் பிரபுக்களுடைய அபிமான முதலியவைகளும் இப்பொழு தில்லையே.

சுபட்சன்.—அந்த வெட்கக்கேட்டை வெளியிலே சொல்லவேண்டுமோ? அக்காலத்தில் சில வித்வான்கள் மாத்திரம் செல்வமுதலானவைகளைப் பெற்றுச் சுகித்திருந்தார்கள். சிலவித்வான்கள் "எட்டாத பழத்தைப்பார்த்துக் கொட்டாவிகொள்வது" போலப் பெருஞ் செல்வமுடையவர்களைப் பார்த்துப் பெருமூச்செறிந்து, "குழிப்பிள்ளையை நரிசுற்றுவது" போல அவர்களை விடாதடுத் திருந்தும், அவர்கள் கொடாத லோபிகளாகையால், "கண்ணாடி நிழலிற் கண்ட பணம் கடனுக் குதவாததுபோல" அவர்கள் பொருள் இவர்கள் ஆபத்துக்கு உதவாமல் வருந்தினார்கள். பின்னும் சிலர்

மெத்தப் படித்தவர்களுக்கு "உண்கிற சோறு வெல்லம்" என்பதற்குச் சரியாய் ஊணுக்கு முடைக்குமே மிகவும் தரித்திரப்பட்டார்கள்.

"நாராய் நாராய் செங்கா ணாராய்
பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கா ணாராய்
நீயுநின் பெடையும்
தென்றிசைக் குமரியாடி வடதிசைக் கேகுவிராயின்
எம்மூர்ச் சத்திமுற்ற வாவியுட் டங்கி - எம்மில்ல
நனைசுவர்க் கூரைக் கனைகுரற் பல்லிப்
பாடுபார்த் திருக்குமெம் மனைவியைக் கண்டே
ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலே தழீஇப்
பேழையு ளடங்கும் பாம்பென வுயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டன மெனுமே"

என்பதனுள், சத்திமுற்றப் புலவர் வறுமையினல், இருக்க நல்லிடமும் உடுக்க ஆடையுமின்றி அலைந்தா ரென்பதும்,

"ஆடெரி படர்ந்த கோடிய ரடுப்பில்
ஆம்பி பூப்பத் தேம்பசி யுழல
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைதொறுஞ் சுவைதொறும் பால்காணுமற்
குழவிதாய் முகநோக்க மனைவி யென்முக நோக்க யானும்
உன்முக னோக்கி வந்தனன் குமுணா"

என்பதனுள் ஒரு வித்வானனவர் என்வீட்டில் அடுப்பு மூட்டவில்லை, என் வயிற்றிற் பசி துடிக்கிறது, பிரசவித்த என் மனைவிக்குத் தாரகப்பண்ண வழியில்லை, பிறந்த குழந்தைக்குப் பாலுமில்லை யென்று குமுணராஜனிடத்தில் விசனப்பட்டாரென்பதும் மேற்கூறியதை விளக்கும்.

"வணக்கம்வருஞ் சிலநேரங் குமரகண்ட வலிப்புவருஞ் சிலநேரம் வலியச்செய்யக், கணக்குவருஞ் சிலநேரம் வேட்டைநாய் போற் கடிக்கவருஞ் சிலநேரங் கயவர்க்கெல்லாம், இணக்கம் வரும்படித் தமிழைப் பாடிப்பாடி யெத்தனைநாடிரிந்து திரிந்த

லைவேனையா, குணக்கடலே யருட்கடலே யசுரரான குரைகடலை
வென்ற பரங்குன்றுளானே."

என்பதனுள், பொருளுடைய பிரபுக்களும் கல்வியை விரும்ப வில்லை, வித்வானைச் சன்மானிக்கவும் ஆதரிக்கவுமில்லை யென்பதும், திருஷ்டாந்தமாகத் தோற்றுகின்றன. இந்நாளிற் கற்றவர்களில் அனந்தம்பெயர் புஷ்களமான செல்வமும் சிறப்பும் பெற்றுப் பிரபுக்கள் முதலியோரால் அபிமானித்து ஆதரிக்கவும் பட்டுவருகிறது பிரத்தி யட்சத்திலேயே தெரியவருகிறதே.

விபட்சன்.—அப்படியா! "வீட்டிளக்காரம் வண்ணானறிவான்" என்பதாகச் சத்திமுற்றப்புலவர் வறுமைப்பட்டதை அறிந்தநீர் பின்பு அவர் பாண்டியனாற் சன்மானிக்கப் பட்டு அதிக சம்பத்தைப்பெற்று வாழ்ந்திருக்கும் நாளில் ஒருநாள் அவன் அவரைத் தன் சமுகத்தில் வரவழைத்துக் குசலம் விசாரிக்குமளவில், அப்புலவர்,

"வெறும்புற் கையுமரி தாற்கிள்ளை சோருமென் வீட்டில்வரும்
எறும்பிற்கு மார்பத மில்லைமுன் னாளென் னிருக்கலியாம்
குறும்பைத் தவிர்த்தெங் குடிதாங்கியைச் சென்று கூடியதால்
தெறும்பற்கொள்யானை கவளங்கொள்ளாமற் றெவிட்டியதே."

என்றுபாடித், தமது க்ஷேமத்தை அறிவித்தசெய்தி அறியாமற் போனதென்ன?

சுபட்சன்.—ஆயினும் அஃதென்னை ஏகதேசந்தானே, 'ஏகசாக்ஷியம் நகர்த்தவியம்' அல்லவோ?

விபட்சன்.—"நல்லகதை நீளமில்லை" என்பதாக நீர் ஏகதேசமென்பது அதிசயமாயிருக்கிறது. அஃது "ஒருபானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்பார்க்கிறது" என்னும் ஸ்தாலீபுலாக நியாயமாகக் கொள்ளப்படாதோ? அன்றியும் குமுணனைப்பாடிய புலவனும், அவனாற் கோடி பொன் பெற்று வாழ்ந்ததும் உமக்குக் கேள்வியில்லையோ?

சுபட்சன்.—முற்காலத்திற் படிக்காசனென்னும் வித்வானை மதுரைத் திருமலைநாயகர் கிளிக்கூட்டில் அடைத்த செய்தி உமக்குத் தெரியாதோ?

விபட்சன்.—அப்பிரபு சமுகத்தில் அந்தவித்வான் சமய மறியாமற் போய்க் குஜோத்தியமாய் வசனித்ததைப் பற்றி அவருக்குக் கோபமூண்டதனுற் கிளிக்கூட்டிற் பிடித்தடைத் தார். இது "வாய்க்கொழுப்புச் சீலையால் வடிந்தது" அல்ல வா ? பிறகு மூன்றுநாள் பிரபு வித்வானைப் பார்ப்போ மென் று எதிரே வர, அவரைக்கண்டு புலவன் உபாயமாய்த் தப் பித்துக்கொள்ள வேண்டுமென்று கூட்டிலிருந்தபடியே,

"நாட்டிற் சிறந்த திருமலை யாநல்ல நாகரிகா
காட்டில் வனத்திற் பிரிந்துழ லாமற் கலைத்தமிழ்தேர்
பாட்டிற் சிறந்த படிக்காச னென்னுமோர் பைங்கிளியைக்
கூட்டி லடைத்துவைத் தாயிரை தாவென்று கூப்பிடுதே."

என்பதாக, அவரைப்பாடி ஸ்துதி செய்தவளவிற் பிரபுவுக் குத் தயையுண்டாகிக் கூட்டைவிட்டு நீக்கிப் பரிசுகொடுத்து உபசரித் தனுப்பினர், இதிலே தாழ்ச்சியென்ன ? இதுநிற்க, முற்காலத்திற் கல்வி பயிலிடம் அநேக மிருந்தன, அவைக ளில் எத்தனையோ பெயர் வித்தியாப்பியாசம் செய்து வந் தார்கள். இக்காலத்தி லப்படி யில்லையே.

சுபட்சன்.—"பொரிமாவை மெய்ச்சினளாம் பொக்கை வாய்ச்சி" என்பதாக அதை நீர் தாம் மெய்ச்சவேண்டும். முன்னளில் வடக்கே சரசுவதி பீடமும், தெற்கே தமிழ்ச் சங்கமும், மற்றவிடங்களில் இரண்டொரு பாஷை வழங்கும் சில பள்ளிக்கூடங்களுமே இருந்தன. சங்கப்புலவர் முதலிய சிலர் தவிர, அப்பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்க ளெல்லாம் "சப்பாணிக்கு நொண்டி சண்டப்பிரசண்டன்" என்பதாக மற்றவர் களை நோக்குமிடத்து இவர்களும் வாசித்தவர்கள் தாமென் னும்படி கல்வியில் உபாயமானவர்களா யிருந்தார்களே யல் லாமல் நல்ல நிர்வாகிக ளல்லர். இந்நாளில் ஒரு கண்டத்தி லேயா ஒரு ராச்சியத்திலேயா? எங்கே பார்த்தாலும் இங் கிலீஷ், லத்தின், கிரேக், பாரசீகம், இந்துஸ்தானி முதலிய எத்தனையோ பாஷைகள் எத்தனையோ பள்ளிக்கூடங்க ளில் அப்பியசிக்கப் பட்டுவருகின்றன. விசேஷமாக இந்தி யாவிலெங்கும் ஜில்லாப் பாடசாலை, தாலுகாப்பாடசாலை,

கிராமப்பாடசாலைகள் ஏற்படுத்தி, சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துரைத்தன பாஷை முதலாகப் பற்பல பாஷைகளும் கற்பிக்கப்படுகின்றன. ஆங்காங்குள்ள உபாத்தியாயர்களும் கணிதம், பூகோளம், ககோளம், ரசாயன சாஸ்திரம், வைத்திய சாஸ்திரம், நியாய சாஸ்திரம், நீதிசாஸ்திரம், இலக்கண சாஸ்திரம, பலதேச சரித்திரமுதலானவைகளிலும், பாரத ராமாயணாதி காவியங்களிலும், சாரதாமிசம் என்னும்படி அதிக நிபுணர்களாயிருக்கிறார்களே! சர்க்கரையும் மாவும் சரியாமா? முன்னாளில் ஆரையாவது பூகோளத்தில் ஒருதேசத்தை, அல்லது ஜலசந்தி பூசந்திகளை நதிசங்கம முதலானவைகளைக் குறித்து எங்கிருக்கின்றன வென்றால், பசபசவென்று விழிப்பாரே யல்லாமல் வேறென்னசெய்வார்? பிறவிக் குருடனுக்குப் பணநோட்டந் தெரியுமா? இக்காலத்தில் இன்னகண்டத்தில் இன்னதிசையில் இன்னதேசத்திற்குச் சமீபத்தில் இத்தனை காதத்தில் இன்னாருடைய ஆளுகையில் அந்தத் தேசமிருக்கிறது. அதில் வசிப்பவர்களுடைய, வருணம், மதம், பாஷை, கைத்தொழில், வர்த்தகம் முதலானவைகள் இவை யிவையென்றும், குறித்த ஜலசந்தி, பூசந்தி, நதிசங்கமம் முதலியன இன்னவின்ன விடங்களி லிருக்கின்றனவென்றும், அத்தேசம் முதலானவைகளுக்குக் கரைவழியாய்ப் போனால் இத்தனை மாதத்தில், கப்பல்மேற் போனால் இத்தனைநாளிற் போய்ச் சேரலாமென்றும், கண்ணிலே கண்டதுபோல எந்தச் சிறு பிள்ளையும் சொல்லுவான். அவைகளைப் பூமி படத்திலும் பரிஷ்காரமாய்த் தெரியக்காட்டுவான்.

ஜில்லா பாடசாலை, தாலுக்காப் பாடசாலை, கிராம பாடசாலைகளில் வாசிக்கின்ற மாணாக்கர்களில் எவர்களையாகிலும் இலக்கண விஷயத்தைக் குறித்து வினவினாலோ, அவர்கள் இங்கிலீஷ் முதலிய பாஷாந்தரங்களில் மாத்திரமல்ல தமிழிலும் அஃது எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கணம், அணியிலக்கண மென ஐந்து வகைப்படுமென்றும், அவைகளிற் பொதுவிதி, சிறப்பு

விதி, வழாநிலை, வழு, வழுவமைதிகள் இவையிவை யென்
றும் அதிநுட்பமாக ஐயந்திரிபற உய்த்துணர்ந்து, பாலையும்
நீரையும் பிரிக்கின்ற அன்னத்தைப்போல நன்றாய்ப் பகுத்
துரைப்பார்கள். இவர்களே இவ்வளவு சாமர்த்தியர்களா
யிருப்பதனால் இனிச் சிறந்த சென்னை ராஜவித்தியா சங்கத்
தில் வாசிப்பவர்களுடைய திறத்தையும், அவர்களுக்குக் கற்
பிக்கும் ஆசிரியர்கள் திறத்தையும் எடுத்துச் சொல்லவேண்
டிய தென்னை? "சீரங்கத்திலே பிறந்த பிள்ளைக்குத் திரு
வாய்மொழி கற்பிக்க வேண்டுமோ?"

பலவிடங்களிலுமுள்ள பாலிகா பாடசாலைகளிற் படிக்
கின்ற சிறுபெண்களை நோக்கிக் கணிதத்தைப்பற்றிக் கேட்
டால், அது சங்கலனம் விபகலனமென்று இருவகையா
மெனவும், அவற்றோடு குணனமும் பாகஹாரமுஞ் சேர்ந்து
நால்வகையா மெனவும், அந்நான்கினோடு வர்க்கம், வர்க்க
மூலம், கனம், கனமூலம் நான்குஞ் சேர்ந்து எண்வகையா
மெனவும், மற்றும் அநேகவகையா மெனவும், அவற்றுட்
கூட்டல் சங்கலனம், கழித்தல் விபகலனம், பெருக்கல் குண
னம், பங்கிடல் பாகஹாரம், ஒரெண்ணை அதனால் ஒருமுறை
பெருக்க வருவது வர்க்கம், அவ்வர்க்கத்திற்கு மேற்படி
யெண் வர்க்கமூலம், ஒரெண்ணை அதனாற் பெருக்கவருவதை
மற்றொருமுறை அவ்வெண்ணினாற் பெருக்க வரும்பேறு
கனம், அக்கனத்திற்கு மேற்படி யெண் கனமூலமெனவும்
மற்றவைகளும் இன்னவை இன்னவையெனவும், ஒரு மயிர்
முனையும் பிசகாமல் "உள்ளங்கை நெல்லிக்கனி" போல
விளக்கமாகவும், அவுதானஞ் செய்வதுபோல முறைமை
யாகவுஞ் சொல்வார்களே. ஒழிந்த சாஸ்திர முதலானவை
களைக் குறித்து விசாரித்தாலும் வெகுபெயர் சம்பிரதாய
விரோதமில்லாமல் திட்டமாய்ச் சொல்வார்கள். கல்வியைப்
பற்றி இன்னமொரு புதுமை யிருக்கிறது, அதையும் சற்றே
கேளும். பூர்வம் சுதேசிகளுக்குள் அநேகர் இங்கிலீஷ்
பாஷையை ஏ, பி முதலிய எழுத்து மூலமாய்க் கற்காமல்
அவ்வார்த்தைகளை மாத்திரம் குருட்டுப் பாடமாகத் தெலு

ங்கு, அல்லது தமிழிலெழுதிக் "கம்" அண்டே ரம்மென மாட்டா, "கோ" எண்டே பொம்மென மாட்டா, "கெடப்" அண்டே லெய்யனெ மாட்டா என்று ஞாபகம் பண்ணிக் கொண்டு அங்கிலேய துரைகளிடத்திலும் உத்தியோகஞ் செய்துவந்தார்கள். இது சொன்னால் வெட்கமும் அழுதால் துக்கமு மில்லவா?

## கைத்தொழிலாளிகள்.

விபட்சன்.—"கல்வி கரையில" என்பதனால் இம்மட்டில் அதை நிறுத்தி, இனிக் கைத்தொழில் செய்யும் தொழிலாளிகளைக் குறித்துப் பேசுவோம்,

சுபட்சன்.—இதுவரையிற் கல்வியைக் குறித்துக் 'கல்வி கல்வியாகப்' பேசினீரே, இப்பொழுது தொழிலாளிகளைப் பற்றிப் பேச எத்தனித்தீரோ? "ஆராத்தாள் செத்தாலும் பொழுது விடிந்தால் தெரியும்" என்பதாக அந்த வள்ளலும் பேசினால் தெரியவருகிறது.

விபட்சன்.—கருமார், தச்சர், கல்தச்சர், கன்னார், தட்டார், கணக்கர், கொற்றர், குலாலர், கைக்கோளர், பாணர், செம்மார், ஒட்டர், உப்பரவர் முதலிய தொழிலாளிகள் முற்காலத்தில் அநேக ரிருந்தார்கள். இக்காலத்தில் "மூளைக்கதே மூன்று மயிர் அதிலும் இரண்டுமயிர் புழுவெட்டு" என்பதாகச் சிலரல்லது அதிகமில்லை. அவர்களும் திறமையுள்ளவர்களல்லர். அப்படிப்பட்ட வேலைக்காரரைத் தேடிப் பிடிக்கிறதும் வெகுகடினமா யிருக்கிறது.

சுபட்சன்.—"எறும்புக்குக் கொட்டாங்கச்சித் தண்ணீர் சமுத்திரம்" என்பதுபோல உம்மைப் போன்றவர்களுக்கு அந்தத் தொழிலாளிகள் அதிகந்தான். மற்றவர்களுக்கு அவர்க ளெவ்வளவு? "இட்டதெல்லாங் கொள்ளும் பட்டிமகன் கப்பரை" என்பதுபோல வரவு செலவல்லவே. இக்காலத்திலுள்ள பற்பல தொழிலாளிகளையும் எண்ணத் தொலையுமா? ஏடிடங்கொள்ளுமா? இவர்கள் கைத்தொழில்களும் அக்காலத்தி லுள்ளவைபோலப் 'பரும்படி' யானவை

களா? அதிக யுக்தி நுட்பமும் அழகும் விசித்திரமுமா யிருக்கின்றன. அவைகளைத் தாம் அளவிடல் ஆர் தாம்?

விபட்சன்.—"ஏத்தப் பாட்டுக் கெதிர்ப்பாட் டில்லை" என்பதாகப் பேசுகிறீரோ, இந்துதேசத்தின் தென்றிசையி லுள்ள காஞ்சிபுரம், ஸ்ரீரங்கம், மதுரை, திருநெல்வேலி, திருப்பெருந்துறை, திருக்குடந்தை முதலான தேவஸ்தா னங்களையும், வடதிசையி லிருப்பவைகளையும் பார்த்துப் பேசும். அந்நாளி லுண்டாக்கப்பட்ட அதியுன்னதமாகிய ஆலயங்களும், அவற்றின் கர்ப்பக்கிருகம், அந்தராளம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், நூற்றுக்கால் ஆயிரங் கால் மண்டபங்களும், ஸ்தூபி சிகர கோபுரங்களும், அவை களில் அமைந்த வேலைப்பாடுகளும் இந்நாளில் வேறெந்த இடங்களிலாவது உண்டா? எதோ விரலை நீட்டும்!

சுபட்சன்.—"தட்டிப் பேச ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப்பிர சண்டன்" என்பதாகப் பேசுகிறீரென்ன! அந்த மட்டில் அடிச்சட்டியிற் கரணம்போட்டுக் குண்டுசட்டியிற் குதிரைச்சவாரி பண்ணினதுபோதும்; நீர் இந்துதேசத்தை மாத்திரமே பற்றிப் பேசுகிறீர். உமது சொற்படியே அந் நாளில் இந்தேசத்தில் கோயில் குளம் கொஞ்சம் விசேஷ மாகவும் விசித்திரமாகவும் உண்டாக்கப்பட்டது மெய்யே. இந்நாளிலோ ஐரோப்பா, அமெரிக்கா, ஆபிரிக்கா, ஔஸ்தி ரேலியா கண்டங்களில் உண்டாயிருக்கின்ற நாநாவிதமான கைத்தொழில்களின் சித்திரத்தைக் குறித்துச் சொல்லக் கூடுமோ? இதற்கும் அதற்கும் ஏற்றக் கோலுக்கும் அரிவாட் பிடிக்குமுள்ள தாரதம்மியம் இருக்கின்றதே.

இந்த இந்துதேசத்திலேயே வண்டிகள் குதிரைகள் பல்லக்குகளின்மேல் ஜனங்கள் ஏறிப்போகும் ஏழெட்டு நாட் பிரயாண தூரத்தை வாயுவேகமாக இரண்டு மூன்று அல்லது நாலுமணி நேரத்திற்குள்ளே கடப்பதற்கு நாற்பது ஐம்பது ஒன்றாகத் தொடுக்கப்பட்ட புகைவண்டித் தொடர் களும், அவைகளை நடத்துவதற்கு அடிப்பாதை கிளைப்

பாதைகளாக எல்லை காணப்படாத இருப்புப் பாதைகளும் அசாத்தியமாக உண்டாக்கப் பட்டன. அநேகநாட் பிரயாண ஸ்தானங்களுக்கும் மனோவேகமாக நாலாறு நிமிஷத்திற்குட் செய்திகளை யறிவிப்பதற்கு ஆச்சரியமான மின்தபாற்கம்பிகள் வைக்கப்பட் டிருக்கின்றன. இவையென்ன சாமானியமா? மிகவுஞ் சுலபமாகப் பஞ்சைக் கொட்டையிற் பிரித் தெடுப்பதற்கும், அதிக விரைவாகப் பஞ்சு நூற்பதற்கும், பட்டு நூல் பருத்தி நூல்களால் நாணயமான வஸ்திரம் நெய்வதற்கும், பலவித கடிதங்கள் செய்வதற்கும், அச்சுப் பதிப்பதற்கும், மரம் அறுப்பதற்கும், தண்ணீ ரிறைப்பதற்கும், ஐரோப்பா முதலான தேசங்களில் விதம் விதமாகிய யந்திரங்களும், அஷ்டதிக்கிலும் அதிக விசாலமான ஆறுகளைத் தாண்டிச் செல்வதற்குச் சமுத்திரத்தில் வாரதி கட்டினதுபோல, பெரிய பெரிய பாலங்களும், ஆற்றுநீ ரத்தனையும் அவலமாய்ப் போகாமற் பயிர் முதலானவைகளுக்குப் பார்த்து உபயோகமாம்படி செய்வதற்கு நெடுங்கால்களும், அணைக்கட்டுகளும் மிதமில்லாமற் சமைக்கப்பட் டிருக்கின்றன. குதிரைகள் வண்டிகள் மாடுகள் மனிதர்கள் தடையின்றித் தாராளமாய்ச் செல்வதற்குக் கச்சித் தெருப்போல அகலமான நெடிய சாலைகள் எங்கெங்கும் செப்பனிடப்பட்டன. அச்சாலைகளின் இருபக்கங்களிலும் நிழலிடும்படி வரிசை வரிசையாகப் பற்பல மரங்கள் நாட்டப்பட் டிருக்கின்றன. மாலுமிகள் இருகாத தூரத்தில் வரும்பொழுதே துறைகண்டு கப்பல்களைச் செலுத்துவதற்கு அடையாளமாகத் தீபஸ்தம்பங்கள் கட்டப்பட் டிருக்கின்றன. அங்கங்கே இரவில் ஸ்தம்ப விளக்குகள் ஏற்றப்படுகின்றன. இப்பொழுது எண்ணெய்ச் செலவு முதலானவைக ளில்லாமல் வாயுதீபம் வைப்பதற்கும், இன்னும் பலவித அதிசய கிரியைகளை நடத்துவதற்கும் வரையறைப்படாத முயற்சிகள் செய்யப்படுகின்றன. இங்கிலாந்து, கல்கத்தா, பங்காளம், பம்பாய், சுவேஸ் முதலான பலதேசங்களுக்கும் போக்கு வரவு சீக்கிரமாகச் செல்வதற்கு நீராவி

மரக்கலங்களும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் எவ்வளவு திரவியம் விரயமாயிருக்கவேண்டும்? "அஞ்சு காசுக்குக் குதிரையும் வேண்டும் ஆறுகடக்கப் பாயவும் வேண்டும்" என்று பணச்செலவில்லாமற் சுளுவிலே நடத்த யத்தனித்தால் முடியுமா? நாரில்லாமல் மாலை தொடுக்கலாமா?

இனிமேற் காசியிலிருந்து புகைவண்டியில் வருகிறவர்கள் முன்பின்னாக ஒருபட்சத்துக்குள் * ராமேசுரத்திலிருக்கிறவர்கள் கண்டு பேசுவார்கள். இங்கிலாந்தில் அன்று நடந்த சமாசாரம் அன்றே மின் கம்பி மார்க்கமாகச் சென்னை ராஜதானியில் † விசதமாய்க் கேட்கப்படும். இப்பொழுது அத்தேசத்தில் உண்டாக்கப்பட்ட கிரேட் ஈஸ்டேர்ன் என்னும் ஆறு பாய்மரங்களையுடைய பிரமாண்டமாகிய கப்பலின் புதுமையான கைக்கிரியை வருத்துரைப்பது எளிதன்று. அஃது ஒன்றே நீராவி மரக்கலமும் பாய்விரித்தோடும் மரக்கலமுமா யிருக்கின்றது. அக்கப்பல் கடல் நடுவிலிருக்கின்றதனால் அதில் தங்குகிறவர்கள் தங்களை ஒரு தீபத்தில் வசிப்பவர்களாகவும் நினைக்கக்கூடும். ஒரு வீச்சில் இரண்டு பெயர், அல்லது மூன்றுபெயர்களைக் கரணை கரணையாக வெட்டி வீழ்த்தத்தக்க கூறிய கத்திகள், கொஞ்சங்குறைய ஒருநாழிகைவழியி லிருப்பவர்களையும் சுடுதற்கேற்ற பல வகைத் துப்பாக்கிகள், காததூரத்திலுள்ள கருங்கற் கோட்டைகளையும் ஊடுருவும்படி குண்டு பிரயோகிக்கும் அநேகவித பீரங்கிகள், விசித்திரமான படங்கள், கண்ணாடிகள், ஒளிச் சித்திரக் கருவிகள், கடிகாரமுதலானவைகளும் நவநவமாகச் செய்யப்படுகின்றன. அவைகளையும் மற்ற கருவிகளையும் ஒவ்வொன்றாகச் சொல்லப் புகுந்தாற் கடை பரப்புகிறதாக வல்லவோ காணப்படும்.

* ஒருபக்ஷம் வேண்டுவதில்லை. ஐந்துநாள் போதும். இது இப்போது அநுஷ்டானத்திற்கு வந்துவிட்டது.

† இதுவும் இப்போது வழக்கத்தில் வந்துவிட்டது.

விபட்சன்.—வாயிற் ககனகுளிகை போட்டுக்கொண்டு ஆகாய கமனஞ் செய்யுஞ் சித்தர்களைப்போல, முற்காலத்திற் சிலர் சூத்திர ரதத்தின்மேலேறி ஓரிடத்தி லிருந்து வேறோரிடத்திற்கு ஆகாச மார்க்கமாகப் போக்குவரவு செய்தார்களே, அப்படி இக்காலத்தி லில்லையே.

சுபட்சன்—"பகுத்தறியாமல் துணியாதே படபடப்பாகப் பேசாதே" என்பதைப் பகுத்தறியாது பேசவேண்டாம், நீர் குறித்துரைத்த சூத்திரரதம் பாரதம் சீவக சிந்தாமணி முதலிய புஸ்தகங்களிற் கண்டதே யல்லாமற் கண்ணிற் கண்டதல்லவே. இக்காலத்தில் அங்கிலேய பிராஞ்சியர்களிற் சிற்சிலபெயர் ஆகாயக் கப்பல்கள் உண்டாக்கி அவைகளின்மேலறிக் ககனத்தில் அதிக உயரத்தி லெழும்பி வேகமாய்ச் செல்லக் காண்கின்றோம்; என்றாலும், அவை இதுவரையிற் காற்றின் வழியேயன்றி ஒருவன் சுவாதீனமாக நடத்துவதற்கு இசையவில்லை. இதுதான் அவற்றிற்குக் குறை.

விபட்சன்.—சபாசு! கெட்டி கெட்டி, சாதுரியமாக வசனிக்கிறீர், இம்மட்டில் அதை நிறுத்தும். விவசாயத்தைப்பற்றிப் பேசுவோம்.

சுபட்சன்—"தம்பி கால்நடைப் பேச்சுப் பல்லக்கிலே" என்பதாக டம்பாசாரிபோல் மாத்திரம் பேசுகிறீர். ஆயினுங் கிணற்றி ழுமுங் கயிற்றி னீளமும் பார்க்கவேண்டாவா? வெகு நேரமாகத் தொழிலாளிகளையும் தொழில்களையுங் குறித்துப்பேசி, கன்றைவிட்டுக் கட்டுத்தறியைப் பிடித்தது போல இப்பொழுது அதைவிட்டுப் பயிர்ச் செய்கையைப் பற்றிப் பேசுவோ மென்கிறீர். பேசத் தலைப்பட்டால் இறக்கை கட்டிக்கொண்டுதான் பறப்பீர்.

## பயிர்ச் செய்கை.

விபட்சன்.—முற்காலத்திற் பயிர்ச் செய்கையானது சகலத்திலும் பிரதானமாயும், அபரிமிதமாயும் நடந்து வந்

தது. அதற்கு அக்காலத்தில் அகவிலை மாறுமற் செவ்வையா யிருந்ததே சாட்சி.

சுபட்சன்.—"செத்தவன் கண் செந்தாமரைக் கண், இருக்கிறவன் கண் கொள்ளேக் கண்" என்று பேசுகிறீரே. சிரிக்கப் போகிறார்கள். அஃது "ஆறுகலியாணம் மூன்று பெண்டுகள் மார்போடே மார்பு இடிபடுகிறது" என்பதாயிருந்தது ஒருவர்க்கும் தெரியாத தன்று. எப்போதும் பூமி நீண்டு, அகன்று, விசாலித் திருப்பதுதான். இருந்தும் அக்காலத்திற் கூடிப் பயிர் செய்தவர்கள் கொஞ்சம் பெயர்களே ஆசையால் அதிலெவ்வளவு சாகுபடி செய்யப்படும். அகிலே நுனி யளவு நிலந்தானே. இந்நாளி லதற்குப் பதினாயிரம் பங்கு அதிகமாக எந்தத் தேசத்திலும் சிறிதிடமாவது காடாய்க் கரம்பா யிருக்கவொட்டாமலும், புறம்போக்காய்ப் போகவிடாமலும், பள்ளத்தாக்கு மேட்டுப் பாங்காகிய சகல நிலங்களையும் திருத்தி "உண்பாரைப் பார்க்கலாம், உழுவாரைப் பார்க்கலாமா" என்று, யாவரும் ஏர்கட்டியுழுது நன்செய் புன்செய்ப் பலதானியங்களும் விதைத்து நாற்றுவிட்டு நட்டு, தோட்ட நிலங்களில் அபரிமிதமாகிய காய்கறி வர்க்கங்களும் ஓயா முயற்சியுடனே உண்டு பண்ணுகிறார்களே. எங்கே பார்த்தாலும் கழனிகள் கொல்லைகள் தோப்புகள், சோலைகள், தோட்டங்கள், துரவுகள், ஏரிகள், ஆறுகளா யிருக்கின்றன. எத்தனையோ ஊர்களில் விளைச்சல் அறுத்துப் போர்போட்டு ஒப்படிசெய்து தானியங்களைச் சேர்கட்டிக் குதிர்கள் கூடுகளிற் கொண்டுபோய் நிறைத்து வைப்பதுமன்றி, பூமியின் கீழும் புதைபோட்டு வைக்கிறார்களே. அகவிலைதான் என்ன வித்யாசமா யிருக்கின்றது. இவைகளுக்காக எவ்வளவோ தீர்வைகொடுத்து வருகிறார்கள். பட்டண முதலாகிய பற்பல தேசங்களிலும் நகக்கண்ணில் அழுக்குப் படாமற் சொகுஸாயிருந்து உத்தியோகஞ் செய்கிறவர்கள் பெற்றுவருஞ் சம்பளமெல்லாம், இடுப்பொடியக் கைசலிக்க மண்வெட்டி கொண்டு நிலத்தைக் கொத்தி, மேழிபிடித்து உழுது, மார்புநோவத் தண்ணீ

ரிறைத்துப் பயிரிட்டு உழைக்கிறவர்களுடைய கஷ்டார்ச்சி தந்தானே.

விபட்சன்.—"முன்னே பிறந்த காதைப் பார்க்கிலும் பின்னே முளைத்த கொம்பு வலியது" என்பார்களே; அது போலத் தற்காலத்தையே சிலாகித்துச் சொல்ல வருகிறீர். என்ன சொன்னாலும் அகவிலையைக் குறித்து நான் சம்மதிக்க மாட்டேன், அதுபோகட்டும். அக்காலத்தில் வர்த்தக விஷயமென்ன இலேசா யிருந்ததா? அஃது இக்காலத்திற் பூவிற்ற கடையிற் புல் விற்றதுபோலப் பீடழிந்திருக்கின்றதே,

வர்த்தகம்.

சுபட்சன்.—"மெல்லெனப் பாயுந் தண்ணீர் கல்லையும் உருவிச்செல்லும்" என்பதனால் அவசரப்படாமற் பொறுமையாய்ப் பேசவேண்டுமே. அந்த வழக்கம் உம்மிடத்திலில்லை. "முதலை நரியின்காலைவிட்டுப் புங்கமரத்து வேரைப் பிடித்தது" போல, பயிர்ச் செய்கைவிட்டு வர்த்தகத்தைப் பேசத் தலைப்பட்டீர். அந்நாளில் துறைமுகங்களை யுடைய சில ராஜதானிகளில் மாத்திரம், ஒருவிதமான சிறிய பெரிய சில பாய்மரக் கப்பல்களும், சுலுப்புக்களும், படவுகளும் சீமா மூலங்களிலிருந்து அபூர்வமாய்ச் சரக்கேற்றி வருவதுண்டு, அவை வெகுதூரத்தில் வரும்பொழுதே அச்செய்திகேட்ட வர்த்தகர்களுக்கு "வந்தது கப்பல் மலர்ந்தது தொப்பை" என்பதாக ஒரு புஜம் இருபுஜமாய்ப் பூரிக்கும். இக்காலத்தில் "மலைவிழுங்கு மாரியாத்தாளுக்கு உரல் சுண்டாங்கி" என்பதாக அவையெல்லாம் எவ்வளவு? காற்றுக்கா மழைக்கா?

கண்ட விடமெல்லாம் துறைமுகங்கள், அத்துறைமுகங்களி லெல்லாம் திரளாக வருவதும் போவதும் நங்கூரம்போட்டுத் தங்குவதுவாகிய ஒன்றிரண்டு, மூன்று நான்கு பாய்மரங்களையுடைய எத்தனையோ கப்பல்கள்; பல வகையான எத்தனையோ மற்ற உருக்கள்; அவைகள் எவ்வ

ளவோ ஏற்றுமதி இறக்குமதி செய்யும் சரக்குகள் சாமான்கள்; அச்சரக்குகள் சாமான்களைக் கொள்ளுகிறவர்கள் விற்கிறவர்கள் எத்தனையோ வர்த்தகர்கள்; அவர்கள் கொண்டு விற்கும் ஸ்தானங்கள் கடலுங் காவேரியும்போல அதிக விசாலமான எத்தனையோ கிடங்குகள், மண்டிகள்; அவ்வர்த்தகத்திற்கு வைத்த முதற்பணம் ரொக்கமாக எத்தனையோ கோடி ரூபாக்கள்; எத்தனையோ கம்பனிப் பத்திரங்கள் பாங்கி நோட்டுகள்; அம்முதற் பணத்திற்கு வட்டி விதமாக எத்தனையோ பணம் கொடுக்கல் வாங்கல்; அவ் வர்த்தகத்தில் எத்தனையோ பணம் லாபஞ் சம்பாதிப்பது நஷ்டமிருப்பது; அந்த லாபத்தில் எத்தனையோ பணஞ் செலவு; எத்தனையோ பணம் இருப்பு. "சோற்றிலே கிடக்கிற கல்லை எடுக்கமாட்டாதவன் மூகனைக் கல்லைத் தாங்குவானு" இத்தனை பிரபலமாகிய வர்த்தக விஷயத்தை வலமிடம் தெரியாத நாமா அளவிடுகிறது? நம்முடைய புத்தியைக்கொண்டு இதை ஆராய்வது "நரிவாலைக்கொண்டு கடலாழம் பார்க்கிறது" போலத்தான். மேலும் தூரதேசங்களுக்கு வர்த்தகர் முதலானவர்கள் பணம் ரொக்கமாக அனுப்பினுல் இடைவழியில் ராஜிகதெய்விகம் எப்படி யிருக்குமோ தெரியாதே. அதைப்பற்றிப் பயமின்றி அங்கங்கேதானே பெற்றுக் கொள்ளும்படி, எவ்வளவு தொகைக்கானாலும் உண்டிமுடித்துக் கொடுக்கப் படுகின்றது.

விபட்சன்.—"நின்றமரத்தில் நெடுமரம்போனால் நின்ற மரமே நெடுமரம்" என்பதாக இக்காலத்தின் வர்த்தகத்தையே பெருக்கிப் பெருக்கிப் பேசுகிறீர். அஃதிருக்கட்டும், அக்காலத்திலிருந்த நகரங்களைப்போல இக்காலத்தில் அவ்வளவு சிறப்புள்ள நகரங்க ளெங்கிருக்கின்றன?

சுபட்சன்.—"தனக்கழகு மொட்டை பிறர்க் கழகு கொண்டை" என்பதை யோசிக்கவில்லை. நீர் முற்காலத்து ஸ்திதியையே விடாமற் சிறப்பித்து "தடவிப்பிடிக்க மயிரில்லை அவன்பெயர் சவரிராஜப் பெருமாள்" என்பதாகப் பேசுகிறீர். இக்காலத்தில் ஐரோப்பா முதலிய கண்டங்களி

விருக்கிற நகர் வளங்களை உமக்குச் சொன்னால் நம்பமாட்டீர். இந்த ஆசியா கண்டத்திலேயே எத்தனையோ சிறப்பான நகரங்களிருக்கின்றன. நாம் பலநாளும் வசிப்பதும் காண்பதுமாகிய சென்னை முதலிய நகரங்களைக் குறித்துச் சிறிதுநேரம் நாவாரப் பேசுவோம் வாரும்.

விபட்சன்.—நீர் "சொன்னபடி கேட்டால் மாப்படைப்பேன் கேளாவிட்டால் மண்ணை வெட்டிப் படைப்பேன்" என்கிறீர். ஆயினும் சொல்லும் கேட்போம்.

சுபட்சன்.—ஆ! ஆ! சென்னை முதலானவைகளின் கோட்டைகள் கொத்தளங்களைப் பாரும். எவ்வளவு சித்திர விசித்திரமா யிருக்கின்றன. இவை அதிக அகலமும் நீளமுமில்லா திருந்தாலும் அழகும் அரணிப்புமாய் அகழ் சூழப்பட்டு, ஏற்றுமதி இறக்குமதிக்குத் தக்க துறைமுகங்களையுடையவைகளாய்க் கடலுக்கருகே இருக்கின்றன. வெள்ளி மலைகளைப்போல உன்னதமும் அற்புதமாகக் கட்டி வெண்சாந்து பூசப்பட்ட மூன்று நான்கு ஐந்தடுக்கு மெத்தைகளாகிய மாடமாளிகை கூடகோபுரங்களால் நிறைந்திருக்கின்றன. பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வருணத்தார் வாசஞ்செய்யும் வீதிகளோ விஸ்தாரம். கோயில் குளங்கள், மண்டபம் மதில்கள், சத்திரம் சாவடிகள், சந்தி சதுக்கங்கள் அளவிடப்படா. ஆலயங்கள் தோறும் நித்தியாராதன பஞ்சபர்வ பிரமோற்சவ மகோற்சவங்களும், வீடுகள் தோறும் கல்யாண சோபனங்களும் அதிக விநோதமாக நடக்கின்

யாகசாலை, கல்விச்சாலை, புத்தகசாலை, கைத்தொழில் அபிவிர்த்திசாலை, வர்த்தகசாலை, உத்தியோகசாலை பொக்கசசாலை, அச்சியந்திரசாலை, ஆயுதசாலை, ராணுவசாலை, காவற்சாலை, நீதிவிசாரணைச்சாலை, அரசிறைச்சாலை, தபாற்சாலை, வைத்தியசாலை, நூதன பொருட்காட்சிச்சாலை, முதலானவைகளை எங்கெங்கும் காணலாம். மேற்படி தபாற்சாலைகள் "சுண்டைக்காய் காற்பணம் சுமைக்கூலி முக்காற்பணம்"

என்பதாகச் செலவு அதிகப்படாமல், சென்னையிலிருந்து காசிக்குப் போகுங் கடிதமும் அதிசுலபமாக அரையணாவில் அனுப்பப்படுகிறதற்கு உபயோகமாக ஏற்படுத்தப்படிருக்கின்றன. வைத்தியசாலைகளில் வீரம், பூரம், லிங்கம், ரசபாஷாணாதி வைப்புச் சரக்குக்களினால் உண்டாக்கிய பஸ்ப சிந்தூரங்களுக்கும், சுக்குத் திப்பிலி மிளகு கோஷ்டமுதலிய கடைச்சரக்குகளினாற் செய்த தைல சூரண கிருத லேகியங்களுக்கும், வனமூலிகைகளினால் இறக்கப்பட்ட க்ஷாய முதலானவைகளுக்கும், அவைகளை வெவ்வேறாக நிரப்பி யிருக்கும் பலநிறப் பாத்திரங்களை நிரை நிரையாகச் சேர்த்து வைத்திருக்கும் விசித்திரமான அறைகளும், உசிதமான பற்பல வைத்தியக் கருவிகளுக்கும், அங்கிருக்கின்ற சாஸ்திர அநுபவ சாமார்த்தியமுடைய வைத்தியர் ரண வைத்தியர்களுக்கும், அவர்களிடத்தில் வந்து பிணிதீர்த்துக் கொள்பவர்களுக்கும் கணக்கேது? நூதனப் பொருட்காட்சிச் சாலைகளில் ஜெகத்தில் எட்டுத்திசைகளிலுமுள்ள நவலோகம் நவமணி முதலிய தாதுவர்க்கங்களையும், மரம் செடி கொடி முதலிய மூலவர்க்கங்களையும், பசு பட்சி மிருகமுதலிய சீவ வர்க்கங்களையும், ஒருமிக்க ஏககாலத்திற் காணலாமே.

நெல்லுமண்டி, அரிசிமண்டி, பலசரக்கு மண்டிகளும், இரும்புக்கிடங்கு, பஞ்சுக்கிடங்கு, மருந்துக்கிடங்குகளும், பலகைத்தொட்டி, பனைமரத் தொட்டிகளும், பட்டுக்கடை, புடவைக்கடை, மளிகைக்கடை, கன்னாரக்கடை, காசுக்கடை, ஆபரணக்கடை, அத்தர் புழுகு முதலிய விற்குங்கடை, புஷ்பக்கடை, மற்றக்கடைகளும், "கரடி தூத்தினாலுங் கைக்கோளர் தெருவில் ஒட இடங்கிடையாது" என்பதுபோலச் சிறிதிடமும் வறிதாயிராமல் எங்கும் அடர்ந்து நெருங்கி வரிசைவரிசையா யிருக்கின்றன. மற்றக் கடைத்தெருவில் "உப்பிருந்தாற் பப்பிராது பப்பிருந்தால் உப்பிராது.' இக்கடைத்தெருவிலோ எந்த வேளையிலும் எப்படிப்பட்ட வஸ்துக்களையும் வாங்கலாம். புலிப்பாலும் அகப்படும்.

விபட்சன்.—நகரவாசிகளுடைய பாஷை ஊண் உடை முதலியவைகள் அக்காலத்தி லிருந்ததுபோ லில்லையே. அவை இக்காலத்தி லொழுங்கற் றிருக்கின்றன.

## பாஷை.

சுபட்சன்.—"பேச்சுக்குப் பேச்சுச் சிங்காரந்தான்." அக்காலத்தில் வாசித்தவர்களல்லாத பெயர்களெல்லாம் குழந்தைகள் போலவும், கிளிப்பிள்ளை போலவும், குதலை வார்த்தையாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். கொஞ்சம் வாசித்தவர்களோ "ஊமைக்கு உளறுவாயன் உற்பாதபிண்டம்" என்பதாக ஒருவாறு சரியாய்ப் பேசுவார்கள். இக்காலத்திற் கீழ்க்குலத்தாரும் மேற்குலத்தாரைப்போலவே தமிழ் தெலுங்கு முதலிய தத்தமக்குரிய பாஷைகளில் திருந்திய உச்சரிப்புடனே மதுரமொழுக நயமாக வசனிக்கின்றார்களென்றால், மேற்குலத்தார் எவ்வளவு இலட்சணமாக உச்சரிக்கமாட்டார்கள்.

## ஊண்.

"அச்சையிலுமுண்டு பிச்சைக்காரன்" என்பதுபோல இங்கும் சில எளியவர்கள் உண்டெனினும் அவர்கள் தாமென்ன "பசித்தோம் பட்டினிகிடந்தோம்" என்கிறார்களா? அப்படியிருக்கச் செல்வமுடையவர்கள் காலந்தவறாமல் அறுசுவைக் கறியுடனும், பால் பழத்துடனும் திருப்தியாய்ப் பஞ்சபக்ஷ்ய பரமான்னம் புசித்து வருகிறார்களென்பதைச் சொல்லவேண்டுமோ? முன்னாளிற் சிலர் ஏகாதசி உபவாசம் போல ஒருபட்டினி இருபட்டினி கிடப்பார்கள், அவர்களுக்கு என்றைக்காவது சோறகப்பட்டாற் "காய்ந்தமாடு கம்பிலே விழுந்தாற்போல" "உண்கிற வயிற்றை ஒளிக்கிறதா" என்று அதிக ஆவலாய், "உப்பைத் தொட்டுக்கொண்டு உரலை விழுங்குவது" போல "ஊறுகாயைக் கடித்துக்கொண்டு ஒருபானைச் சோற்றை என்னதன்று" என்று பேய்போலத் திணிக்கத் தின்பார்கள். அவர்களிடத்தில் நாகரிகமில்லை.

## உடை.

"காசுக்கொரு புடவை விற்றாலும் நாயின்குத்து அம்மணந்தான்" என்பதுபோல முழுதும் நிர்வாணமா யிராவிட்

டாலும் அக்காலத்திற் சிலபெயர் கந்தைகளைக் கட்டிக் காலங்கழித்தார்கள். இக்காலத்தில் எவர்களும் நல்ல பட்டுப்புடவை, சரிகைப்புடவை, நாணய வேஷ்டி, உத்தரீயம், பாகை, சொக்காய், சால்வை முதலியவைகளையும் துரைமக்கள்போல நாகரிகமா யுடுக்கிறார்கள்.

## பூஷணம்.

அக்காலத்திற் சிலர்தவிர ஏனையோர்கள் "வெறுங்காதுக்கு ஓலைமேல்" என்பதாகச் சொற்பவிலைபெற்ற சிலபொன்னை வெள்ளி நகைகளும், பித்தளைப் பணிகளும், குறத்திக ளணிகின்ற பாலமணி கிரைமணிகளும், பூண்டிருந்தார்கள். அவை "காக்கையின் கண்ணுக்குப் பீக்கம்பூப் பொன்னிறம்" என்பதாக அவர்கள் பார்வைக்கு உசிதமாய்த்தானிருந்தன. தற்காலத்தில் அப்படிப்பட்டவைகளைப் பூணத் தலையெடுப்பதா? எல்லாரும் நவரத்னப் பிரதமைபோலவும், உள்ளங்கால்முதல் உச்சந்தலைவரையில் மாற்றிலும் விலையிலும் மிகுயர்ந்த தங்கத்தாற்செய்து, முத்துப்பச்சை வயிரம் கெம்புமுதலிய நவமணிகளிழைத்த அழகாகிய பற்பல ஆபரணங்களும் கண்ணுக்கு ரம்மியமாக இட்டனுபவிக்கிறார்கள்.

## வாகனாதிகள்.

ஆயிரம் பேர்களுள் ஆரோ சிலர் அந்நாளில் வாகனப் பிரதிஷ்டை யோடிருந்தார்களே யொழிய இதரமானவர்களெல்லாம் வெயிலில் உலர்ந்து மழையில் நனைந்து பனியில் உடல்விறைத்து உளையிற் கால்புதைந்து கட்டாந்தரையில் எலும்புதேய நடந்துதானே திரிந்தார்கள். இந்நாளிலோ ஒன்றிரண்டு மூன்று நான்கு குதிரைகள் கட்டப்பட்ட இரண்டு நான்கு சக்கிரங்களையுடைய அலங்காரமான பெரிய வண்டிகள் காடிகள் பல்லக்குகளேறி உல்லாசமாகச் சஞ்சரிக்கிறார்கள். நாநாவித சுகந்த கந்த பரிமள புஷ்பாதிகளும் தரித்துக் கொள்ளுகிறார்கள்.

அக்காலத்திற் சிலர்க்கு நல்ல கட்டில் மெத்தை தலையணை கிடையா. அவர்கள் கயிற்றுக்கட்டிலில், அல்லது ஓலை

ப்பாயில், அல்லது பிறற்பாயில், அவை சரீரத்தில் உறுத்து ம்படித் தூங்குவார்கள். மற்றுஞ் சிலர்க்கு அவையும் அகப் படாமையால் வெறுந்தரையிலே புழுதிபடியப் பனந்துண்டு போல் உருள்வார்கள். இக்காலத்தில் விந்தையான தந்தக் கட்டில், சித்திர ரத்னக்கம்பளம், பலவருணச் சமுக்காளம், பிரப்பம்பாய், பாலிகைப்பாய், மிருதுவான இலவம் பஞ்சு மெத்தை, முகமல்திண்டு தலையணைகளின் மேற்படுத்து ஆன ந்தமாக நித்திரை செய்கிறார்கள். மேசை, நாற்காலி, டீப்பா, ஸோபா முதலானவைகளையும் கையாண்டு வருகிறார்கள்.

அந்நாளில் நாகரிகத்தை அறியாத சிலபெயர் "நெய்கி றவனுக்கேன் குரங்குக்குட்டி" என்பதாக நிர்ப்பாக்கியர்க ளாகிய நமக்கு இந்த வாய்மதம் ஏனென்றெண்ணாமல், நாக ரிகமாக உடுக்கிறவர்கள் பூண்கிறவர்களைப் பார்த்து இவர்க ளெல்லாம் "வாதங் கெடுத்தது பாதி வண்ணான் கெடுத்தது பாதியாக" ஊதிக் கதித்த உடம்பில் வெள்ளையும் சள்ளையுமிட் டுப் பிறருக்குக் காட்டுகிறார்களென்றும், முன்ஜன்மாந்தரத்திற் செய்த பாபத்தினாற் காதிலும் கழுத்திலும் கண்டதையெல் லாம் வீணே சுமந்து திரிகிறார்களென்றும், தண்டிகை ஏறு கிறவர்களை நோக்கி, ஐயையோ! பிரேதம்போலச் சுமக்கப் படுகிறார்களென்றும் சொல்லிப் பரிகாசிப்பார்கள். அவைகள் தங்களுக் கில்லாமையினாலேயோ, அல்லது உள்ளவை உரிய வை யெல்லாம் ஆழவெட்டித் தாழப் புதைத்துவிட்டுத் தே டத்திசை யிருந்தும் அனுபவிக்க அதிர்ஷ்ட மில்லாமையால் "உண்ணாச் சொம்மு மண்ணாய்ப்போம்" என்பதையும் நினை யாமல் உலோபகுணத்தை வகித்துச் செவ்வையா யுண்ணா மல் உடுக்காமற் கட்டாமற் கழற்றாமற் பஞ்சை வேஷம் போட்டுக் கொண்டிருப்பதனாலேயோ, அல்லது பிறருடைய செல்வச்சிறப்பைக் கண்குளிரப் பார்க்கப் பொறாமையினாலே யோ அவர்களப்படிச் சொல்வது? இந்நாளிற் பெரும்பான் மையோர் அது அவரவர் அமைப்பென்று நினைப்பார்களே யல்லாமல் அவ்வாறு பேசமாட்டார்கள்.

விபட்சன்.—முற்காலத்தில் எத்தனையோ பெயர் நிறை செல்வ முடையவர்களா யிருந்தார்கள். அவர்கள் பணத்தைக்

குழித்து அவர்களுக்கே வரவு செலவு தெரியாது. இக்காலத்தில் ஆரைப்பார்த்தாலும் "கிடக்கிறது ஒட்டுத்திண்ணை; கனாக் காண்கிறது மச்சுமாளிகை" என்பதாகக்கையிலே காசில்லாமற் போனாலும், டம்பத்திற் குறைவில்லாம லிருக்கிறார்கள்.

## செல்வம்.

சுபட்சன்.—"தோற்பது கொண்டு சபையேறேல்" என்பதை உணராமற் பேசுகிறீர். முன்னாளில் சிறுபான்மையோர் தவிர ஒழிந்தவர்களெல்லாம் "வல்லார் கொள்ளை வாழைப்பழம்" என்பதாகப் பிறர்பொருளைத் திருடியும், பிறர்கையிற் பரிதானம் வாங்கியும், பிறருக்காகப் பொய்ச்சாக்ஷி சொல்லியும், பிறரைக் கணக்குப் புரட்டி ஏமாற்றியும், மற்றும் அடாதவைகள் பலசெய்தும், பெருந்தொகையாகப் பணம் சம்பாதித்து மகாராஜர்களானார்களே யல்லாமல் நியாயமாக வல்லவே. ஆதலால் ஒவ்வொருவன் இருபதுலட்சம் முப்பதுலட்சமுடைய சீமானாயிருந்தும், அச்செல்வம் நிலைத்திராமல் "வாசலிற் கட்டித் தாழ்வாரத்தில் அறுத்தது" போல அதிசீக்கிரத்தில் நிர்மூலமாயழிய, அவர்கள் ஒட்டாண்டிகளாய் விட்டார்கள். இந்நாளில் அநியாயத்திற்கு உடன்படாமலும் சத்தியம் தவறாமலும் சன்மார்க்கமாய்ப் பொருள்தேடி நீடித்த செல்வ முடையவர்களா யிருக்கிறார்கள்.

விபட்சன்.—முற்காலத்தில் அனந்தம் பெயர் பிரபலமாகத் தானதர்மம் செய்தார்கள். இக்காலத்தில் அச்செய்கை "பெருங்காய மிருந்த குடுக்கை வாசனைபோகாது" என்பதுபோலச் சிலரிடத்திலாவது சிறுபான்மை யாகவாயினும் இருக்கவேண்டும், அஃது எவ்வளவு மில்லையே.

சுபட்சன்.—அக்காலத்தார் பிரபலமாகத் தானதர்மஞ் செய்ததா யல்லவோ சொல்லுகிறீர்; அவ்வாறு செய்தது புண்ணியத்தின் பொருட்டா? "தகப்பனுக்குக் கட்டக்கோவணமில்லை மகன் தஞ்சாவூர் மட்டும் நடைபாவாடை போடச்சொன்னான்" என்பதாகத் தாய் தந்தையர் முதலானவர்கள் அன்ன வஸ்திராதிகளுக்கு ஏக்கற்றிருக்க அவர்களை

ஆதரியாமல், ஆபால கோபாலமும் தங்களைப் புகழவேண்டு மென்னும் பிரதிஷ்டைக்காகத் தானே? அவ்விஷயத்திற் செலவிட்ட பொருளும் ஆர் வீட்டுடைமை? தாங்கள் கஷ்டப்பட்டுத் தேடியதா? "தட்டானைத் தலையிலடித்து வண்ணானை வழிபறித்தது" அன்றி வேறல்ல. இது "கடைத்தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக் குடைத்ததுபோல்" இருக்கின்ற தன்றோ?

விபட்சன்.—"தேடாதழிக்கிற் பாடாய்முடியும்" என்பதனால் அது சரியன்று. அவ்வளவு ஆடம்பரமாகச் செய்யச் சொல்லி ஆரடித்தார்கள். தங்களுக்கு உள்ளமட்டில் தேகியென்று வந்தவர்களுக்கு நாஸ்தியென்று சொல்லாமல் ஒரு கவளம் அன்னமாவது, ஒருபிடி அரிசியாவது பிச்சை இடலாமே. பைபையாத் தூக்கிக் கொடுக்கச்சொல்லுகிறார்களா? தச்சனடித்த தலைவாசலெல்லாம் உச்சியிடிக்க உலாவித் திரிந்தாலும், எச்சிற்கையாலும் காக்கை யோட்டுவா ரில்லாமற் பிச்சைக்கார ரெல்லாம் பொச்சைவற்றி லச்சைகெட்டுப் போகிறார்களே! இஃதென்ன கொடுமை. "பிச்சையிட்டுக் கெட்டவர்களும் பிள்ளைபெற்றுக் கெட்டவர்களும்" உண்டோ?

## தானதர்மம்.

சுபட்சன்.—அக்காலத்திற் பணம் சம்பாதிக்கிற வகை தெரியாது. மேலும், "கணக்கனுக்கு உடற்பிறப்புப் பட்டினி" என்பதுபோல, வெகு பெயர்க்குச் சோம்பலும் கூடப்பிறந்ததா யிருந்தபடியினாலே, "குண்டாங்கரணம் போட்டாலும் பிண்டச்சோற்றுக்கு வழியில்லாமல்" உடம்பெடுத்தவர்களெல்லாம் ஓடெடுத்துத் திரிந்தார்கள். இக்காலத்திற் பொருள் தேடும் வழியைச் சிறுபிள்ளையும் அறிந்திருக்கிறான். சோம்பியிராமற் பற்பல தொழிலுஞ் செய்து "முப்பது நாளும் போகப் பொற்பணமே வா" என்றால் அப்பணம் வீடு தேடிவர யாவரும் சீமான்களா யிருக்கிறபடியினாலே, அவர்கள் மானங்கெட்டுப் பிச்சைக்குப் போவானேன் என்றாலும், "குபேரன் பட்டணத்திலும் விறகுக் கட்டுக்காரனுண்டு"

என்பதுபோலச் சில வழியவர்களுமிருக்கிறபடியினாலே அவர்களுக்குட் பாத்திரா பாத்திரமறிந்து பிச்சையிடுகிறது மன்றி, விசேஷமாக வெகுபெயர் தானதர்மமுஞ் செய்கிறார்கள்.

விபட்சன்.—பூர்வகாலத்தில் யஜமானர் வேலைக்காரருடைய கஷ்டமறிந்து பரிபாலித்தார்கள், அவர்களும் யஜமானர் சொற்படிகேட்டு உண்மையாய் நடந்துவந்தார்கள். இக்காலத்தில் அப்படி யில்லையே.

சுபட்சன்.—அந்நாளிலே தான் "உழவுக்கேற்றகொழு" என்பதுபோலக் கோபமில்லாத துரைக்குச் சம்பளமில்லாத சேவகராயிருந்து, சிலர்"கெட்டமாடு தேடுகிறதுமில்லை பேய்த்தகூலி கேட்கிறதுமில்லை" எஜமானர்களும் "சருகெரிக்க நேரமன்றித் தீக்காய நேரமில்லை" என்பதாக வேலையாட்கள் காலைதொடங்கி மாலைவரையில் வேலைசெய்தாலும் கால்நாழிகைப் பொழுதிருக்கக்கண்டாற் பால்கறக்கிற பசுவின் கன்றுக்குப் புல்லறுத்துவா வென்பார்கள். இந்நாளில் அப்படிப் பட்டவர்கள் நாணும்படி யஜமானர் பெரும்பாலும் வேலைக்காரரைப் பெற்றபிள்ளைகள் போலெண்ணி, "அடித்த வருக்கும் குடித்த கூழுக்கும் சரி" என்று சொல்லாமல், வருத்தமறிந்து அபிமானித்துச் சம்பளவிர்த்தி பண்ணிச்சம்ரட்சணை செய்துவருகிறார்கள்.

## வேலைக்காரர் யஜமானர்.

வேலைக்காரரும் அவர்களை அலட்சியம் பண்ணுமற் சாட்சாது பிதாவாகப் பாவித்து "குதித்துக்குதித்து மாவிடித்தாலும் குந்தாணிக்கொரு கொழுக்கட்டையுங் கிடையாது" என்பதாக எத்தனை பிரயாசப்பட்டாலும் சொற்ப வரும்படியும் இல்லையே யென்று கழப்பாமல், அவர்கள் காலினால் வழியவேலையைக் கையினாற் செய்து முடித்துத் தக்க சம்பளம் பெற்றுச் சீவித்து வருகிறார்கள்.

விபட்சன்.—முற்காலத்திற் கடன் கொடுக்கல் வாங்கல் கிரமமாய் நடந்துவந்தன. இக்காலத்தில் அவை மிகவும் சீர்கெட்டிருக்கின்றன.

## கடன்கோடல் முதலியன.

சுபட்சன்.—முற்காலத்திலேதான் கடன் படுகிறவர்களுக்குக் கடன் வாங்கும்பொழுதுள்ள சந்தோஷம் தீர்க்கும் பொழுதில்லை. "கொடுத்ததைக்கேட்டால் அடுத்ததுபகை" என்பதாக விரோதமுண்டாகிறது. அவர்களுக்குட் சிலர் வட்டியைச் சிலர் முதலைப் புறட்டுகிறது; சிலர் வட்டியுமுதலுமே புரட்டுகிறது; சிலர் ஆறுமாதத்திற்கு வட்டியில்லை. அப்புறம் முதலே யில்லை யென்கிறது. கடன் கொடுக்கிறவர்களும் தனம் இரட்டிப்புத் தானிய முத்திப் பென்பதற்கு மேற்பட்ட கடுவட்டி, அல்லது வட்டிக்கு வட்டி வாங்குகிறது. சிலர் இது விஷயத்தில் மண்டையில் துணியைக் கட்டிக்கொண்டு சண்டைக்கு மார் தட்டுகிறது; இவை பெருவழக்கமா யிருக்கின்றன. அவையெல்லாம் இப்பொழுது "கழுதைதேய்ந்து கட்டெறும்பாயிற்று" என்பதாக முக்காலே மூன்றுவீசம் ஒழிந்துபோயின.

விபட்சன்.—முற்காலத்தைப்போலத் துரைத்தனத்திற்குக் குடித்தனம் அமைந்து நடக்கிறதில்லை. கொஞ்சகாலத்திற்கு முன்பு வட இந்தியாவில் உள்ளவர்கள் "தடிக்கு மிஞ்சின மிடா" வாக ஏற்பட்டுத் துரைத்தனத் தாரைப் பகைத்தார்கள்.

## குடித்தனவளமை.

சுபட்சன்.—வட இந்தியாவிலுள்ளவர்கள் அன்று பட்டபாடு யாவரும் தெரிந்ததுதானே, யானை மதர்த்துத் தானே மண்ணைவாரிப் போட்டுக்கொள்வதுபோல அவர்கள் தங்களைத் தாங்களே கெடுத்துக்கொள்வதை அறியாமல் அகங்கரித்துத் "தூங்குகிற புலியைத் தட்டி யெழுப்புவது" போலச் சாதுக்களாயிருந்த துரைத்தனத்தாரைக் கோபமூட்டி, வளர்த்தகடா கையிற்பாய்ந்த விதமாக" எதிர்த்ததுகண்டு, துரைத்தனத்தார் அவர்கள்மேற் படை யெடுத்தபொழுது "முயலை யெழுப்பிவிட்டு நாய் பதுங்கினது" போல, அந்தத் துஷ்டர்கள் பதுங்க, இவர்கள் விடாது தொடர்ந்து அதம்

பண்ணிக் கருவறுத்தார்கள். அப்பொழுது "விளக்கில்வீழ்ந் திறக்கும் விட்டில்" போலத் துரைத்தனத்தார் கையிற் சிக்கி அநேகர் மாண்ட செய்தியை அறிந்த சிலர் இவர்கள் நம்மை யுங் கொல்வார்களென்று அஞ்சி நடுங்கிக் "கொல்லைக்காட்டு நரி பல்லைக் காட்டுவது" போலப் பல்லைக் காட்டிக் கெஞ்சிக்காலில் வந்து விழுந்து மன்னிப்புப் பெற்றார்கள். இக்காலத்தில் அப்படி ஆரும் கர்வப்பட்டு எதிர்ப்பாரில்லை. "நெருப்பை ஈமொய்க்குமா ?" துரைத்தன அதிகாரத்திற்குச் சகலமானவர்களும் பெட்டியிற் பாம்புபோல அடங்கி அபராதிகளாகாமற் சட்டப்படி தங்கள் குறைகளைச் சமயமறிந்து விண்ணப்பமெழுதிஅறிவித்து, மருத்துவர் கொடுக்கும் மருந்தினாற் பிணியாளிகள் சௌக்கியமடைவதுபோலத் துரைத்தனத்தார் செய்யும் நீதியால் தீமை மாறி வேண்டிய நன்மைகளைப் பெற்று வருகிறார்கள்.

விபட்சன்.—அக்காலத்திலிருந்த உத்தம அரசர்களைப் போலவும், அவர்களின் ஆளுகையைப் போலவும் இக்காலத்திலுண்டா ?

## பூர்வத்தரசர் குணபேதம்.

சுபட்சன்.—அக்காலத் தரசர்களிற் சிலபேபர் நிறை கல்வி கற்காமலும், அரசியற்று முறைமை இன்னதென்று அறியாமலும், சற்சன சகவாசஞ் செய்யாமலும், "துரியோதனன் குடிக்குச் சகுனியைப்போல" க்ருத்திரம குணமுள்ளவர்களையும், "குதிரைபிடிக்கச் சம்மட்டி அடிக்கக் கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்னத்" தக்கவர்களையும் சேர்த்துச் சிநேகித்துக் "குப்பையிற் கிரைமுளைத்தாற் கப்பலுக்குக் காலாமா" என்பதையும் நினையாமல், அவர்கள் துர்ப்போதனையைக் கேட்டு, விசுவசித்து நடந்து வாய் வயிற்றென்பது அறியாமல்தின்று கொழுத்து, "அறுப்புக்காலத்தில் எலிக்கு நாலு கூத்தியார்" என்பதுபோல, இவர்கள் பல கூத்தியாரைப்படைத்து அவர்கள் மோக வலையில் அகப்பட்டு மதிமயங்கி எந்நேரமும் கேளிக்கையிலும் சங்கீதத்திலும் சூது

விளையாட்டிலும் களியாட்டிலும் சிந்தை வைத்து வீண்காலம் கழிக்கிறதே யல்லாமல், இராச்சியத்தில் நினைவு கூர்கிறதில்லை. 'மயிலாப்பூர் ஏரி உடைந்ததென்றால் வருகிற கம்பிட்டிக்கு ஆகட்டும்' என்கிறதே யொழிய, இது தாமதத்திற் செய்யத்தக்கதன்றே யென்று, தீர்க்காலோசனை செய்கிறதில்லை. ஒருவேளை அதைக் கட்ட முயன்றாலும் விரைவாக வேலையை நடத்த மாட்டாமையால் இவர்கள் கட்டுகிறதற்குள்ளே "தேவடியாள் சிங்காரிக்கிறதற்கு முன் தேரோடி நிலையில் நின்றது" என்பதாக, ஏரி நீரெல்லாம் வியர்த்தமாய்ப் புறம் பாய்ந்து போய்விடும்; அப்புறம் "நாய் வாழ்ந்தாலென்ன பூனை தாலியறுத்தா லென்ன" என்பார்களே, அந்தப்படி ஆர்கெட்டாலும் ஆர் சுகப்பட்டாலும் நமக்கென்ன வென்றிருப்பார்கள். ஒருவரை யொருவர் குத்திக் கொலைசெய்தாலும் கேள்விமுறை யில்லை. இவர்களுடைய குற்றங்களை "மாமியாருக்கு உடைகுலைந்தால் வாயினாலும் சொல்லக்கூடாது, கையினாலும் காட்டக்கூடாது" என்பதாக யாவரும் இவர்களுக்கு அறிவிக்கக்கூடாது. ஒருவர் சொற்புத்தியும் கேளாமற் சுயபுத்தியு மில்லாமலிருக்கையிற் சத்துருக்கள் வந்து வளைத்துக்கொள்ள, இராச்சியத்தை அவர்கள் வசம் ஒப்பித்து விடுவார்கள்; அப்பால் அது "நந்தன் படைவீடும் நாயடித்த அம்பலமும்" ஆய் விடுகிறது.

## தற்காலத்தரசர் குணாதிசயம்.

இக்காலத்தரசர்கள் அத்தனை மௌட்டிய முடையவர்களல்லர். பிரான்சிய சக்கிரவர்த்தி, ருஷிய சக்கிரவர்த்தி, சீன்சக்கிரவர்த்தி, முதலானவர்களுடைய குணாதிசயங்களும் அரசுசெய்யு முறைமையும், அவர்களால் அந்தந்தத் தேசத்தரசர்களுக்கு உண்டாகும் சௌக்கியா சௌக்கியங்களும் சமாசாரப் பத்திரிகை மூலமாய்த் தெரியவருகின்றன. அவைகளைக்குறித்து நாம் வாதிக்கவேண்டிய ஆவசியகமில்லை.

நம்மைப் பரிபாலித்துவருகிற பிரித்தானிய துரைத்தனத்தாரைக் குறித்து நமக்குத் தெரிந்தமாத்திரம் பேசுவோம். மேற்படி துரைத்தனத்தாருடைய சுகுணங்களும், அவர்

கள் தங்களுக்கு நெடுநாளாகச் சுவாதீனப்பட்டிருக்கின்ற இங்கிலாண்டு முதலான தேசங்களை அரசாளு முறைமையும் என்னவென்று சொல்லுகிறது.

ஆங்கிலோ தேசத்தில் மகிமைதங்கிய பிருன்ஸ்விக் வமிசத்தில் வலம்புரிச்சங்கில் உற்பவித்த அழகான ஆணி முத்தைப்போலத் தோன்றி, விக்டோரியா என்று சிறந்த பெயர்பெற்ற அருமைத்துரைமகள் பட்டம் தரித்துக் கிரீடதாரியாய்ச் செங்கோல் ஏந்திச் சிங்காசனத்தில் வீற்றிருக்க, அவ்வரசிக்குப் பிரதான மந்திரியாகப் பல்மார்ஸ்டன் பிரபும், இந்திய மந்திராலோசனைச் சபைத்தலைவராக ஸ்ரீ கரோலஸ் ஊட் என்பவரும், அச்சிங்காசனத்தின் இருபக்கத்திலும் அடுத்திருக்க, பலவகைப் பார்லிமெண்டு சபையாரும், ஆங்கிலோ இந்திய மந்திராலோசனைச் சபையாரும் நிறைந்திருக்க, மாட்சிமைபொருந்திய கானிங்பிரபு என்னும் கவர்னர் ஜனரல் முதலானவர்களும் இசைந்திருக்க, இந்தியாவின் தலைப்பட்டணமாகிய கல்கத்தாவை உள்ளிட்டிருக்கின்ற பங்காளம், சென்னபட்டணம், பம்பாய் ஆகிரா வென்னும் நான்கு ராச்சியங்களின் தலைவர்களாகிய கவர்னர்களும், லெப்டினெண்டு கவர்னர்களும், நீதிபதிகளாய் அங்கங்குள்ள ஜட்ஜூகளும், அரசிறை விசாரணைக் கர்த்தர்களாகிய அக்கவுண்டண்டு ஜனரல்களும், பொக்கசத் தலைவர்களாகிய திரஷரர்களும், ஜில்லாக்கள் தோறும் அரசிறை சேகரிக்கும் கலெக்டர்களும், அதிகாரஸ்தர்களாகிய வெவ்வேறு போலீஸ் கமிஷனர்களும், மற்றும் உயர்வும் தாழ்வுமாகிய பற்பல துரைத்தன உத்தியோகம் பார்ப்பவர்களும் கிரமமாக ஏற்பட்டிருக்க, குதிரை ராணுவங்கள், ஒட்டகராணுவங்கள், பீரங்கி ராணுவங்கள், அவ்வவ் விராணுவங்களில் வெவ்வேறுயுள்ள சேனைத்தலைவர்களாகிய ஜனரல், கர்னல், மேஜர், காப்டன் முதலானவர்களும் ஒவ்வொரு ராச்சியங்களுக்கும் ஆங்காங்கு வகுப்பு வகுப்புகளாகக் காவலா யிருப்பதுமன்றி, ஆவசிகமான பொழுது யுத்த சந்நத்தராய் ஆயுத முஸ்

திப்புடனே போர்க்கோலங்கொண்டு அந்நிய தேசங்களுக்குத் தண்டெடுத்துப்போய், அரசர்க்குரிய சதுர்வித உபாயங்களிற் சாம தான பேதங்களாற் கைவசமாகாத பகைவர்கள், "சடையைப்பிடித்திழுத்தாற் சந்நியாசி கிட்ட வருவான்" என்பதாகத் தண்டோபாயத்தைச் செய்தால் இணங்குவார்களென்று அவர்களுடைய கோட்டைகளை முற்றுகைசெய்ய, அதுநோக்கி அவர்கள் கடற்கரைமணல்போல அளவிறந்த சேனைகளோடு திரண்டு எதிர்த்த சமயத்தில் "கீரைத்தண்டுபிடுங்க ஏலப்பாட்டும் வேண்டுமா? ஆயிரங் காக்கைக்கு ஒரு கல்லே போதும்" என்பதாக சில பீரங்கிகளைக் கொண்டு குண்டுப் பிரயோகஞ்செய்து நாசமாம்படி ஜயித்து ஜயபேரிகை முழக்கி, பல தேசங்களில் தங்கள் வெற்றிக்கொடியை நாட்டி, பல தேசத்தார் கையிற் கப்பம் வாங்கிவர, யாதொரு தவறும் வராமற் கட்டுக்காவலுடனே அரசாட்சி நடந்துவருகிறது.

மேலும் இந்தத் துரைத்தனத்தார் அச்சிட்டுப் பிரசித்தஞ் செய்யப்படும் பற்பல சமாசார பத்திரிகைகள் மூலமாய் அந்தந்த ராச்சியங்களில் நடக்கும் சகலமான செய்திகளையும் இருந்தவிடத்தி லிருந்தே அன்றன்று அறிந்துக்கொள்ளுகிறார்கள். இவர்கள் கோலின்கீழ் அமைந்திருக்கும் பிரஜைகளுக்குப் பலபல நன்மைகளை விளைவிப்பதற்கு நல்ல நல்ல சட்டங்கள் அப்போதப்போது உண்டாக்கப்படுகின்றன. இதற்காகவே கல்கத்தாவில் லெஜிஸ்லேட்டிவ் கௌன்ஸிலென்னும் சட்டநிரூபணச் சபையும், கவர்ன்மெண்டுகள் தோறும் மந்திராலோசனைச் சபைகளும் ஏற்பட்டிருக்கின்றன. இன்னும் நாநா விஷயங்களையும் நன்றாய் ஆராய்ந்து நடத்தும்பொருட்டு அதற்குத் தனித்தனியே எண்ணிறந்த சங்கங்களு மிருக்கின்றன. அந்நாளிலுள்ள துரைத்தனத்தார்கள் பெரும்பாலும் "அச்சில்லாமல் தேரோட்டுவதுபோலவும், புருஷனில்லாமற் பிள்ளைபெறுவது போலவும்" ஒரு சமாசார பத்திரிகையாகிலும், இப்படிப்பட்ட திறமான சட்டங்கள் சபைகளாகி

லும் இல்லாமலே நடத்தப்பட்டன. அம்மெதன்னை கண்தெரி யாமல் வழிநடக்கிற தாகவல்லவோ இருக்கும்? "சாட்டை யில்லாப் பம்பரத்தை ஆட்டவல்லவரு முண்டா?"

## உத்தியோகம்.

எல்லா விடங்களிலும் சாஸ்திரக் கல்விகளும், பலவி தத்தொழிற் கல்விகளும் கற்றுத் தேறினவர்களைப் பரிட் சித்து, பி. ஏ., யம். ஏ., முதலிய பட்டங்களும், தக்க உத் தியோகங்களும் இஷ்டமாய்க் கொடுக்கப்படுகின்றன. "கொட்டிக் கிழங்கு கிண்டி யெடுக்கிறவர்களுக்கு கோயி லில் வந்து ஆடத் தெரியுமா?" அதுபோல அக்காலத்தி லிருந்த சில உத்தியோகஸ்தரால் இவ்வித பரிட்சை கொ டுக்க முடியுமா? அங்கிலேயர் மாத்திரமல்ல, இந்துக்க ளும் ஈஸ்திந்தியரும் மகம்மதியருமாகிய அனைவரும் பிராட்டு விவாகமென்னும் சதரமீன், பிரன்சிபல் சதரமீன், நேட். டிவ் ஜட்ஜ், கமிஷனர், உபகலெக்டர், தாலூகா முன்சிப், கோர்ட்டுப் பண்டிதர், கோர்ட்டுத் துவிபாஷி, சிரெஸ்ததார், ஆபீசு மானேஜர், ராணுவசுபேதார், ஜமேதார், லிகிதர், திரா ன்சிலேட்டர் முதலிய உயர்ந்த உத்தியோகஸ்தர்க ளாக்கப் படுகிறார்கள்.

பிறவிக் குருடனுக்குத் தெய்வம் கண் கொடுத்தது போல ஏழைகளாகிய தொழிலாளிகளுக்கும் இருப்புப் பாதை முதலிய ஸ்தானங்களில் மாறுமல் வேலை கிடைத்து வருகிறது. அதுமுகாந்தரமாக அவர்கள் பணம் சம்பா தித்துச் சீராய்ச் சீவனம்பண்ணி வருகிறார்கள். அதனால் அரிசி விலை நெல் விலையும் விசாரிக்கிறதில்லை. குறைவா யிருக்கிறதே யென்று அவர்களுக்கு விசன முண்டாகிறது மில்லை. கூலிக்காரர்களுக்குள்ளும் எண்ணிறந்த பெயர் மோரீஸ் முதலிய பல தேசங்களுக்குப் போய்ப் பாடுபட் டுப் பொருள் தேடுகிறார்கள். "கெட்டவன் பட்டணஞ் சேரவேண்டும்" என்ற பழமொழிப்படி இந்தச் சென்னை முதலிய நகரங்களுக்குள்ளும் அநேகர் பிரவேசித்து வேலை

செய்து அதிக பிரயோசனம் பெறுகிறார்கள். இக்காலத்தில் எவர்களும் உத்தியோகத்திற்கு 'உமேது' செய்ய வேண்டியதில்லை. படித்து பரிட்சை கொடுத்தவர்கள் வலுவில் அழைத்து உத்தியோகம் செய்விக்கப்படுகிறார்கள். "அறிவுடை யொருவனை அரசனும் விரும்பும்" அல்லவா? மேலும் ராஜபட்ச முடையவர்களுக்குக் கவர்னர் ஜனரலானவர் 'கில்லத்துக்' கொடுப்பதன்றி மானியமும் விடுகிறார்கள்.

## சகித்தல்.

எளியவனாகிய இழிகுலஸ்தனும் சிறப்பாக உடுத்து வாகனப் பிரதிஷ்டையுடனே எங்கும் உல்லாசமாய்ப் போக்குவரவு செய்யலாம். அதைக் குறித்து ஆரும் ஏனென்று கேட்கக்கூடாது. கவர்னர் ஜனரல் முதலானவர்கள் எதிரே வந்தாலும் நம்மைக்கண்டு இவன் விலகவில்லையே யென்று சீற்றங்கொள்ளமாட்டார்கள். அவர்கள் மனதில் அணுவளவாவது மாச்சரியம் உண்டாகாது.

## சகியாமை.

கருநாடக துரைத்தனத்திலென்றாலோ ஒருவன் அப்படி வரக்கண்டால் எந்தச் சாமானிய துருக்கனும், ஹரே பக்ளோ பக்ளோ! மாறு மாறு! என்பானே யொழியச் சகிப்பானா? "உண்ணுமனூரெங்கும் திரியலாம். உடுக்காமலொருவீட்டுக்குப் போகலாகாது" என்பதனால் ஆராவது அவர்கள் பார்வைக்கு முன்பாகச் செவ்வையாய் உடுக்கவும், பெரியவீடு கட்டவுங் கூடுமா? பிச்சைக்கார வேஷம் பூண்டல்லவோ திரியவேண்டும். அவர்கள் துரைத்தனத்தில் ஏதுக்கும் உதவாத ஒருவனை உயர்ந்த உத்தியோகத்தில் ஏற்படுத்துவார்கள். அதிலவன் கொஞ்சம் தலையெடுத்தது கண்டால் "ஏறவிட்டு ஏணியை வாங்குவது போலவும்", "சோற்றைப்போட்டுத் தொண்டையை நெரிப்பதுபோலவும்", நிர்நிமித்தமாகக் குற்றஞ்சாட்டி உடனே அதைவிட்டு நீக்கிவிடுவார்கள். "கல்யாண வீட்டிலேயே பந்தற்காலைக்

கட்டி அழுகிறவள் கர்மாந்தர வீட்டில் அழாம லிருப்பாளா?" அதுபோலக் குற்றமில்லாதவர்களையே தண்டிக்கிறவர்கள் குற்றவாளிகளைத் தண்டியாம லிருப்பார்களா? அன்றியும் சாதி அபிமானமும் சமயாபிமானமும் சந்நியாசிக்குப் போமா?" என்பதை அவர்கள் நினைக்கிறதேயில்லை. அவரவர் "குலாசாரத்தைக் குழகரியாக்கி, மதாசாரத்தின் வாயில் மண்ணடிக்கவேண்டும்" என்பதே அவர்களுடைய நோக்கம்.

நாகப்பட்டணம், சதுரங்கபட்டணம், தூற்றுக்குடி, குழம்பு, யாழ்பாண முதலானவைகளைக் கட்டியாண்ட உலாந்தருடைய ஆளுகையில் இந்துமதஸ்தர் மகமதியமார்க்கத்தார் உரோம சமயத்தார் தங்கள் தங்கள் மதச்சடங்குகள் செய்யக்கூடாது. செய்தவர்களுக்கு அபராதம் போடுவார்கள்; முழங்காலுக்குக் கீழே தொங்கும்படியான சொக்காய் போடக்கூடாது. அந்தப்படி வேஷ்டியும் உடுக்கலாகாது. தங்கள் சபையிற் சேராதவர்களை உத்தியோகத்தில் நின்று விலக்கிவிடுவார்கள்.

பாளயக்காரர் காலத்தில் தேசத்தில் ஆராயினும் பச்சென்றிருக்கக் கண்டால், சிலர் "பச்சைகண்டால் ஒட்டடி மகளே" என்பதாகத் தங்கள் கையின்கீழிருக்கிற துஷ்டர்களாகிய பழம்பெருச்சாளிகளை உபாயமாய்ப் போய்க் கன்னமிட்டுத் திருடிவரச்சொல்ல, அவர்கள் ராத்திரியில் முகத்திற் கரும்புள்ளி செம்புள்ளி குத்திக்கொண்டு பந்தத்தைக் கொளுத்திப் பிலுபிலென்று சென்று குட்டிச் சுவரேறிக் குதித்து உள்ளே நுழைந்து வீட்டைக் கொளம்பறித்துக் கையில் அகப்பட்டமட்டும் சுற்றிக்கொண்டு தாண்டிவிடுவார்கள். "ஒருசந்திப் பானையை நாயறியாது" அதுபோல இந்த மூர்க்கர்கள் நல்லோர் பெரியோர்களை அறியார்கள். அற்பக்குற்றம் செய்தவர்களையும் சித்திரவதையாகக்கடுங்கொலை செய்வார்கள். குரங்கின் கையிற் கொள்ளி கொடுங்கோல்போல் இந்தப் பாவிமக்களுக்கு அதிகாரங் கொடுத்தவர்கள் ஆரோ தெரியவில்லை,

ஹைதராலியின் காலத்தில் நடந்த துன்மார்க்கத்தைச் சொல்லத் தொடங்கினாற் பெரிய பாரதமாக வல்லவோ விரியும். அக்கொடியன் தன் படை வீரர்களுக்குச் சம்பளம் கொடாமற் ராச்சியத்திற் கொள்ளையடித்துச் சீவனம் பண்ணுங்களென்று ஏவுவான். அவர்கள் ஏறக்குறைய எழுபதினாயிரம் எண்பதினாயிரம் பெயர்கள் தலைக்கொரு நாட்டுத்தட்டுத் தேடிப்பிடித்தேறி, பல திசையிலும் போய் ஆண்சிறை பெண்சிறை பிடிப்பார்கள். அநேகரை மரக்கிளையில் தலைகீழாகத் தூக்கி, அடியில் நெருப்பைப்போட்டுக் கொளுத்தி, மூக்கில் மிளகாய்ச்சாறு வார்த்து, கத்தியாற் சிலிர்க்கச் சிலிர்க்கவெட்டி, வைப்புச் செப்புக்களைக் காட்டச்சொல்லி, உள்ளதை யெல்லாம் செப்பனிட்டுக்கொண்டு கோயில்களுக்குள்ளும் புகுந்து, விக்கிரகங்களையும் ஆராதனைக் கட்டுமுட்டுகளையும் வாரி யெடுத்துக்கொண்டு, தாமதித்திருந்தால் ஆர்வந்து வளைத்துக்கொண்டு உதைக்கிறார்களோவென்கிற அச்சத்தினால், அவ்விடத்தில் நில்லாமல் அதிசீக்கிரத்தில் காற்றாய்ப் பரந்துபோய்விடுவார்கள். இப்படி நடப்பது கண்டு சிலசமயத்தில் அங்கிலேயரும் அவர்களைத் துரத்தி யடித்தார்கள். இக்காலத்திலோ அவ்வகையான உபத்திரவம் சொப்பனத்திலும் இல்லை. ஒன்றுகேளும், "தன் பெண்டாட்டியைத் தான் அடிக்கிறதற்குத் தலையாரி கையிற்சீட்டுகேட்டு வாங்கவேண்டுமோ?" அந்தப்படி இந்தத்துரைத்தனத்தார் தங்கள் ஆளுகையின் கீழிருப்பவர்களை அடக்க வேண்டுமானால் இவர்களுக்கு பிரயாசமென்ன? சகலமானவர்களும் தத்தம் குலாசார மதாசாரங்களைத் தழுவி நடப்பதைக்குறித்து இவர்கள் சிறிதும் அருமையைப் படாமலேயிருக்கிறார்கள்.

விபட்சன்.—இந்த ஆங்கிலேய துரைத்தனத்திலும் சாஸ்திரயுக்தமாகிய உடன்கட்டை யேறுவது, தீக்குளிப்பது, செடிலாடுவது முதலானவைகளும், மற்றும் சில சடங்குகளும் தவிர்க்கப்படவில்லையோ?

## கடூரவதை விலக்கல்.

சுபட்சன்.—கணவனிறந்தபொழுது மனைவி சாகமனம் [உடன்கட்டையேறல்] அல்லது அக்கினிப்பிரவேசம் பண்

ணுகிறது சாஸ்திரீயமா யிருந்தும், கரேவதையா யிருப்ப துபற்றி நிறுத்தப்பட்டது. வடக்கே பெற்ற பிள்ளைகளை இரக்கமின்றி மனந்துணிந்து தாய்மார் எடுத்துக் கங்கையி லெறிவதும், சில தேசங்களிற் பிராணபயத்திற்கு ஏது வாகியசெய்கை இதுவென்று நினையாமல் மனிதர்களுடைய உடம்பு பதைபதைக்க முதுகிலே இருப்புத் தூறடுகொண்டு உருவக்குத்தி உயரத்தூக்கிச் செடிலாட்டுவது முதலிய வழக்கமும் தவிர்க்கப்பட்டன. எவன் எப்படிப்பட்ட செய்த ற்கரிய குற்றஞ்செய்தாலும், "தலைக்கு மிஞ்சின ஆக்கினை என்ன இருக்கிற" தென்று அவனுக்குத் தூக்குக்கு மேற்பட்ட தண்டனை விதிக்கிறதற்குச் சட்டமேயில்லை. இவ்வித த்தினாலேயே இந்தத் துரைத்தனத்தார் ஜீவகாருணியமுடை யவர்களென்பது விளங்கவில்லையா? வெகுகாலமாய் ஒழி யாத வலங்கை இடங்கைக் கலகம், துஷ்டாத்துமாக்கள் கும்புகூடியிருந்து போகிறவர்கள் வருகிறவர்களைக் கண்ட விடத்தில் அடித்துப் பறிக்கிறது, காதை மூக்கை அறு க்கிறது, தலையை வெட்டிப் புதைக்கிறது, குடலைக் குத்திச் சரிக்கிறது, தீவட்டித் திருடர் உபத்திரவம், இவை முத லானசங்கடங்கள் அனைத்தையும் நாளாவட்டத்திலேதொ லைந்து போயின. தர்மம் தலையெடுத்தது. நீதி நிலைபெற் றது, சாந்தம் தழைத்து விளங்கியது. உண்மை உயர்ந்தோ ங்கியது. தேசாபிமானமுஞ் செழிக்கின்றது. இனித் "திரு க்கண்ணுக்குத் தீங்கேயில்லை" என்பதாக எந்த வேளைகளி லும் மலைகள் மரங்கள் புதர்கள் அடர்ந்து இருள்சூழ்ந்த ஜனசஞ்சார மில்லாத காட்டிலும் நிர்ப்பயமாக இருகையி லும் பொன்னேந்திக்கொண்டு போகலாம். ஆயிர நட்சத் திரங் கூடினாலும் ஒரு சந்திரனாகுமா? அதுபோல மற்றை துரைத்தனங்களெல்லாம் இந்தத் துரைத்தனத்திற்கு இ ணையாகுமா? இதுவே தர்ம துரைத்தனம். இதை வகுத் துரைக்க என் ஒரு நாவினாலே முடியாது. ஆதிசேஷனாலு மாகாது.

விபட்சன்.—இந்த அங்கிலேயருக்கு இத்தனை பிரபல மான கல்வியும், அதிசயிக்கத்தக்க யுக்தியும், அசாத்திய

மான வல்லமையும், சமயோசிதமான ராஜதந்திரமும், தகுதியான செல்வமும் மிகுதியான நாகரிகமும், பூர்வி கமாய் உண்டென்று எனக்குத் தோன்றவில்லை; சிலகால

சுபட்சன்.—அதற்கு ஐயமென்ன ! அங்கிலேயருக் குள் நல்ல பாரமார்த்திகரைக் கேட்டால் அவர்களும் ஆதி யில் எங்களுக்குச் சீர்திருத்த மில்லை; வெகுநாளுக்குப் பின்புதான் அதுமுளைத்து வரவரக் கிளைத்துக் காலக்கிர மத்திலேயே வளர்ந்து முந்நூறு வருஷமாக நன்றாய்த் தழைத்தோங்கி வருகின்றது. புராதனம் அல்லவென்றே ஒளியாமற் சொல்லுவார்கள். இந்த ஒரு விஷயத்தினாலா வது முற்காலமல்ல பிற்காலமே நல்லதென்பது தெரிய வந்ததா? நீர் இதுவரையில் முற்காலம் முற்காலமென்றே முறையிட்டு வந்தீரே, இப்பொழுது என்வழிக்கே வந்து விட்டீர் ; "குடலறுந்த நரி எவ்வளவு தூரம் ஓடும் ?"

விபட்.சன்.—உம்மைப்போல எனக்கு அதிக அனுபவ மில்லை. உம்மாலே பார சந்தேகமெல்லாம் நிவர்த்தியாகி அநேக விஷயம் விளக்கமாய்த் தெரியவந்தது. இன்னும் சில கேள்வி கேட்க விருப்பமா யிருக்கிறது. சற்றே முகம் கோணாமல் தயை செய்யவேண்டும்.

சுபட்சன்.—எவர்களும் தாயினுடைய கர்ப்பத்தி லி ருக்கும்பொழுதே கற்றுக்கொண்டு வருகிறதில்லை. "பட் டறிகெட்டறி பத்தெட்டுத்தறி" என்பதற்கிசைய உல கத்திற் பலவிடங்களிலும் உழன்று பயின்றுதானே அறிய வேண்டி யிருக்கிறது. ஆகையால், சுகமாய்க் கேளும் தெரிந்தமட்டும் சொல்லுகிறேன்.

விபட்சன்—ஆங்கிலேயர் இப்படிக்கெல்லாம் சர் வோத்தமரா யிருக்க, இவர்களைக்குறித்துக் "குயவனுக்குப் பலநாளையவேலை தடிகாரனுக்கு ஒரு நாழிகை வேலை" என்பதாகச் சிலர், அடா அப்பா ! இவர்கள் பார்த்தாற் பசுவும் பாய்ந்தாற் புலியுமா யிருக்கிற குளிர்ந்த கொள்ளி

கள், இவர்களை எப்படி நம்பி விசுவாசிக்கிறதென்கிறார்களோ அம்மெதன்னை?

சுபட்சன்.—உயர்ந்த மரத்தைக் காற்று மோதுகிறது வழக்கந்தானே. மேலும் "அடுக்குகிற அருமை உடைக்கிற பூனைக்குத் தெரியுமா?" "லோகோபின்னருசி" என்பதாகப் பலபெயரும் பலவிதமாகப் பேசுவார்கள்; ஆனாலும் இவ்வாறு பேசுகிறவர்கள் பொறாமை யுடையவர்களே. இதனால் ஆங்கிலேயருக்கு இழிவென்னை? இஃது "அக்கினி மலைமேற் கர்ப்பூர பாணம் பிரயோகித்ததுபோல்" அல்லவா? யாவரேனும் சுபாவத்தில் அடக்கமுடையவர்களாகவே யிருக்கவேண்டும். காரியத்தளவி லப்படி யிருக்கக்கூடுமா? கண்டிப்பா யிருக்கவேண்டியது நியாயந்தானே. இருந்தாலோ, "யதார்த்தவாதி வெகுஜன விரோதி" என்பதாய்த்தான் முடியும்; ஆதலால் "சொல்வளமில்லாத நற்கதை சொன்னாலு மதுவே துர்க்கதை" யென்பதை விட்டுவிட்டு வேறெதையாவது பேசும்.

விபட்சன்.—சுதேச ராஜாக்களுடைய ராச்சியங்களையெல்லாம் அங்கிலேயர் பேராசைக்கொண்டு அபகரித்துக் கொண்டார்களே, தர்மமா? இஃது "ஊராருடைமைக்குப் பேயாய்ப் பறக்கிற" கதையாய் முடியாதா?

சுபட்சன்.—சுதேச ராஜாக்கள் விஷயத்தைப் பற்றி முன்னமே சொன்னோமே; இன்னமுஞ் சிறிது சொல்லுகிறோம். மேற்படி ராஜாக்கள் அரசியற்றுந் திறமையில்லாமலே ராச்சியத்தை இழந்துபோனார்கள். அந்த நாட்டில் அவர்களை அங்கிலேயர் "சட்டிசுட்டது கைவிட்டது" என்பதாக மற்றத் துரைத்தனத்தாரைப்போல அநாதரணை பண்ணிக் கைவிட்டுவிடாமல், மனதிரங்கி அவர்களுக்குக் கூடியமாத்திரம் உதவிசெய்துதானே வருகிறார்கள்.

விபட்சன்.—"தோலிருக்கச் சுளைவிழுங்கி" என்பதுபோல அவர்களுடைய தேசங்கள் எல்லாவற்றையும் ஆங்கிலேயர் கைப்பற்றிக்கொண்டு, வியாஜத்துக்காக அவர்களுக்

ருக் கொஞ்சம்பொருளை மந்திரிக்கிறதுபோலக் கைகாட்டி வருகிறார்களே, இதுதானு உதவிசெய்கிறது?

சுபட்சன்.—"சும்மா இருக்கிற அம்மையாருக்கு அரைப்பணத்துத்தாலி போதாதா" என்பதாக முழுமையுங் கைவிட்டவர்களுக்குப் பிராண ஆதாரமாக அவ்வளவு கிடைத்துவருகிறது எவ்வளவு விசேஷம்? அதைவிடக் கூடை கூடையாக வாரிக் கொடுப்பார்களோ?

விபட்சன்.—இந்தக் கவர்ன்மெண்டார் இந்தியாவிற் சில எளியவர்கள் வெகுகாலமாய் இனுமாக அனுபவித்து வந்த மானியங்களைப் பிச்சைக்காரன் சோற்றிற் சனீஸ்வரனைப்போல அவர்களுக்குச் சிறிதும் சுதந்தரமில்லையென்பதாக நிறுத்திவிட்டார்களே, இஃதென்ன நியாயம்?

சுபட்சன்.—அப்படியல்ல, ஐம்பது வருஷத்திற்குக் குறையாத அனுபவமும், தக்க காரணங்களோடிசைந்த சாஸனங்களும் இல்லாதவைகளைத் தள்ளினார்கள். அன்றியும் ஒருவனுக்குரியது வேறொருவனுக்குச் சுவாதீனமாய் மாறுபட்டுச் சந்தேகத்திற்கும் சங்கடத்திற்கும் இடமாயிருந்ததனால் அவர்கள் தமது புத்தி விசேஷத்தால் அதைப் பூராயமாக ஆராய்ந்தறிந்து, அச் சங்கட முதலானவைகள் நிவாரணமாக இனும் சாஸனங்களைப் புதுப்பித்து ஸ்திரப்படுத்தினார்கள். இப்பொழுது ஆக்டுகளும் ஒழுங்குபடுத்தப்பட்டு வருகின்றன. அரசு நடத்துவதென்ன எளிதா? அதற்கு முக்கிய சாதனமாகப் பூரண வித்தியா சாமர்த்தியமும், சூட்சும புத்தியும், தொன்றுதொட்ட அனுபவ முதலியவைகளும் வேண்டுமே. இவ்விஷயத்தில் நமது சென்னைக் கவர்னரவர்களைக் குறித்துச் சொல்ல வேண்டியதேயில்லை.

விபட்சன்.—இந்தச் சென்னை ராஜதானிக்குக் கவர்னராய் வந்திருக்கிற ஸ்ரீ டிரிவெலியன் என்பவருடைய குணதிசயம் எப்படிப்பட்டது?

சுபட்சன்.—"அறநி ரம்பிய வருளுடை யந்தணர்க் கேனும்
பெறல ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்."

என்று சொல்லப்பட்டிருந்தும், மேன்மேலும் தனவானும் கனவானுமாகிய நமது சுவர்னரவர்களிடத்தில் எவ்வளவாவது அப்படிப்பட்ட வீணான பெருமிதகுணமிருக்கின்றதா? இவர் நிகர்வியாய்,

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம்."

என்பதை உணர்ந்து, தேசத்தார் சுலபமாகத் தரிசிக்கத் தக்கவராயும், ஏழைகளிடத்திலும் கடுமையில்லாமல் தாழ்மையாய் முகமலர்ந்து வசனிப்பவராயு மிருக்கின்றாரே, இஃது ஆச்சரியமன்றோ?

விபட்சன்—பிரான்சியர், ருஷியர், சீனர், ஔஸ்திரியர், அமெரிக்கர், உலாந்தர், போர்த்துகேசர், ஸ்பானியர், ஜர்மானியர், முதலானவர்கள் ஆளும் தேசங்களிலும் அங்கிலேயர் அரசாளும் தேசம் மிகவும் அதிகமல்லவா?

சுபட்சன்.—ஆம் ஆம்! ஆங்கிலேய ரவர்கள் எல்லாரைப் பார்க்கிலும் மகா பராக்கிரமசாலிக ளாகையால் "பலோராஜா பிருதிவீ" என்பதாக, இவர்கள் சுவாதீனத்தில் எண்ணிறந்த தேசங்கள் உட்பட்டிருக்கின்றன. பற்பல தேசங்களும் நமது ஆங்கிலேய மகாராஜாத்தியின் அழகிய வெண்கொற்றக் குடைநிழற்கீழ் அடங்கி யிருக்கின்றன வென்பதற்குப் பிரத்தியட்சமாக, அந்தப் பற்பல ராச்சியத்தாருடைய விசித்திரமான கொடிகள் யாவும் ஒவ்வொரு விசேஷதினங்களில் இங்கிலாண்டில் மாத்திரமல்ல, இந்தியாவிலும் கல்கத்தா முதலிய ராஜதானிகளின் உன்னதமாகிய கோட்டைக் கொடிகம்பங்களி லெல்லாம் தேர் சிங்காரித்தது போல அடுக்கடுக்காக ஏற்றி அலங்கரிக்கப்பட, அவையனைத்திற்கும் மேலாகத் தருமசெங்கோல் செலுத்திவரும் இந்தப் பிரித்தானிய துரைத்தனத்தாரின் மகிமைதங்கிய கொடி ஏற்றப்பட்டுப் பிரகாசிக்கக்கூடுமா? "சந்தையில் அடித்ததற்குச் சாட்சியேன்"?

விபட்சன்.—அப்படியா ! இத்தன்மையாகிய ஆங்கிலேய அரசாட்சியானது இடையூறின்றி நெடுங்காலம் நிலைபெற்றிருக்குமானால், இவர்கள் கோலின்கீழ் அமைவுற்றிருக்கும் சர்வ ஜனங்களுக்கும் பரம்பரை பரம்பரையாய் ஆச்சந்திரார்க்கம் விசேஷித்த நன்மை உண்டாகுமென்பதற்குச் சந்தேகமில்லையல்லவா ?

சுபட்சன்.—மெய்தான். அது சர்வஜீவதயாபரரும், ஜகத்காரணருமாகிய கடவுளின் சங்கற்பத்தா லல்லவோ அனுகூலிக்கவேண்டியது. தெய்வச்செய லில்லாமற் பொழுது விடியுமா ? அஸ்தமிக்குமா ?

விபட்சன்.—அப்படியே அனுகூலிக்கக்கடவுள் திருவுளம் பற்றுகிறதற்கு நாம் என்ன செய்யவேண்டியது சொல்லும்.

சுபட்சன்.—அவர் ஆபத்பாந்தவரும் பக்த பராதீனருமா யிருப்பவராகையால், அந்தப் பரமாத்துமாவை நோக்கிப் பிரார்த்தித்தால், நமது அபீஷ்டப்படியே திருவுளமிறங்கிக் கிருபை செய்யக்கூடும்.

விபட்சன்.—அப்படியே நாம் பிரார்த்தனைசெய்வோமென, பிறகு இருவரும் ஒருமனப்பட்டு அங்கிலேய அரசாட்சி தழைத் தோங்கி நீடூழியாய் அழியாது நிலைபெற்றிருக்கவேண்டுமென்று சச்சிதாநந்த நித்திய பரிபூரணராகிய கர்த்தாவை மனமொழி மெய்களால் தியானித்து வாழ்த்தி வணங்கி உய்ந்திருந்தார்கள்.

காலபேதவியல்பு முற்றிற்று.

## கீதவாத்தியவிநோதம்.

இது இங்கிலீஷ்வாத்தியம் ஆகையால் இதன் சாரம் எனக்குச் செவ்வையாய்ப் புலப்படாதாயினும் நான் கேட்டபொழுது என் கருத்திற்குத் தோற்றியபடி ஒருவாறு எழுதத் துணிந்தேன்.

சென்னைக் கெடிஸ்தலத்திற்கு ஆளுகைத் தலைவராகிய மாட்சிமைதங்கிய நமது கவர்னர்துரையவர்கள் வீட்டில் கஅ௬௯௵ ஜூலைமீ௴ உஅ௳ இரவில் அ·மணி நேரத்தில் ஐரோப்பாவி லிருந்துவந்த இங்கிலீஷ் சங்கீத வித்தியா சாமர்த்தியராகிய கனம்பொருந்திய மார்டின் சீமன்சன் துரையும், அவரைச்சார்ந்த மற்றும் சிலதுரைகள் துரைசாணிகளும் விதம்விதமாக வாசித்த கீதவாத்திய விநோதத்தைக் கேட்கும்பொருட்டு அநேகதுரைமார் துரைசாணிமார்களும், இந்துப்பிரபுக்கள் முதலானவர்களும் அவ்விடத்திற்குப் போனார்கள். அந்தச் சமயத்தில் நானும் என்னைச்சேர்ந்த சில கனவான்களுடனே அவ்விடத்தில் போயிருந்தேன்.

அப்பொழுது முதல் முதல் துரைத்தனத்தைச் சார்ந்த இராணுவ வாத்தியக்காரர் வந்து வாத்தியங்களைக் கிரமமாக வாசித்தார்கள். அந்த வாத்தியமுழக்கம் மேகமுழக்கம்போலவும், அங்குப் பிரகாசித்த நாநாவித தீபங்கள் மேகத்திலிருந்து நிரைநிரையாக மின்னல் மின்னுகிறதுபோலவும், அந்தத் தீபக் கருவிகளின் சுற்றுப்புறத்தில் அணியணியாகத் தொங்குகின்ற படிகமாலைகள் இடைவிடாது மழைத்துளி துளிக்கிறதுபோலவு மிருந்தன.

பின்பு மார்ட்டின் சீமன்சன் துரையவர்கள் வந்து கடவுள் வணக்கஞ்செய்து தமது கையில் ஓர் வீணையை மெல்லென எடுத்தார். அந்த வீணையோ அத்தனை விசேஷமானதாகக் காணப்படவில்லை. எங்குமுள்ள மற்ற வீணைகளைப் போலக் கேவலம் சாதாரணமானதாகவே யிருந்தும், அது அவர் கைக்கு "வல்லவனுக்குப் புல்லுமாயுதமாம்" என்பதாயிருந்தது. அவர் அதன் முறுக்காணியைப் பற்றித் திரித்து, நரம்பைத் தெறித்துப் பிரமாணமாகச் சுருதி கூட்டி, யாவரும் 'சபாஷ்' என்று சிரக்கம்பஞ் செய்ய அற்புதமாக வாசித்தார். அதிலிருந்து தோன்றிய நாதமோ அப்படிச் சாதாரணமா யிருக்கவில்லை. "வல்லவனுடியபம்பரம்போலச்" சாதுரியமும் மாதுரியமும் செவிக்குக் குளிர்ச்சியுமா யிருந்

தது. அந்த நாதம் அவ்வீணைக்கே இயல்பாயுள்ளதோ? அல்லது அதை வாசித்த மார்ட்டின் சீமன்சன் துரையின் கைவாசியோ? நமது கவர்ன ரவர்களுடைய சபாமண்டபக் கட்டுக்கோப்பின் வளமோ? என்னமோ தெரியாது. அந்த வீணை பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டியாழ் என்னும் நால்வகையாழில் ஒன்றுதானோ? அல்லது சரசுவதி, சித்திரசேனன், தும்புரு, நாரதர் ஆகிய நால்வருடைய கலாவதி, கச்சளா, மகதி, பிருகதி ஆகிய வீணையி லொன்றுதானோ? அல்லது வேறொன்றோ? அவ்வீணையின் இசை யாழுக்குரிய எழுவகை நரம்பிசையோ? அந்நரம்பிசைக்கு உவமையாகச் சொல்லப்பட்ட மயிலிசை முதலியனவோ? அவ்விசையின் சுவை கரும்பின் சுவையோ? கதலி பலா மா முதலிய கனிகளின் சுவையோ? பால் தேன் பாகு ஆகிய இவைகளின் சுவையோ? யாதென்று நிரூபிக்கிறது? அவர் அந்த வீணையைத் துருவம், மட்டியம், ரூபகம், ஜம்பை, திரிபுடை முதலிய சப்ததாள நவதாளங்களும், காலம், மார்க்கம், கிரியை முதலிய தச தாளப் பிரமாணங்களும், சுரங்களும், பேதியாமல், அந்தந்த ஸ்தானங்கள்தோறும் ஊசலாடுவதுபோல அவரது கைவிரல்கள் விசையாய்ச் சென்று உலாவ, அதிற் பலவித கானங்களும் நவநவமாய்த் தோன்றும்படி உசிதமாக வாசிக்குமளவில் யோசிக்கு மிடத்தில், அந்தக் கானம் இந்துக்களுக்குள் வழங்கும் குறிஞ்சி முதலிய ஐந்திணைக்குரிய ஐவகைப் பண்களிலும், பகற்பண் - கூ, இராப்பண் - கூ, பொதுப்பண் - ங, ஆகிய இருபத்தொரு பண்களிலும் பயிரவிமுதலாகிய முப்பத்திரண்டு ராகங்களிலும் சம்பந்தப் பட்டதாகச் சொல்வது சரியல்ல; சொன்னாலும் ரசமாயிராது. பின்னை என்னவெனில் தேவகானமே இதுவென்று மதிக்கத் தக்கதா யிருந்தது.

அவர் வாசித்தபிறகு மெஸ்ற்றர் கோல்துரை என்பவர் வந்து சிற்சில பண்கள் இராகங்களை அக்கினிப் பிரளயத்தில் உய்ந்திருந்த மனிதனுடைய சீர் நிர்வாகங்களைக் குறித்த புதுமையான ஒரு பாட லுடனே சம்பந்தப்படுத்தி,

"வயிறது குழிய வாங்க லழுமுகங் காட்டல் வாங்கும்
செயிரறு புருவ மேறல் சிரநடுக் குறல்கண் ணுடல்
பயிறறு மிடறு வீங்கல் பையென வாயங் காத்தல்
எயிறது காட்ட லின்ன வுடற்றொழிற் குற்ற மென்ப."

என்கிறபடி வயிறுகுழிதல், முகம் அழுகின்ற பாவனையாகத் தோன்றல், புருவம் நெளித்தல், தலை நடுக்கல், விழிபுரளல், தொண்டைவீங்கல், பைவிரித்தாற்போல வாயை ஆவென்று திறத்தல், அடிக்கடி பல்லைக் காட்டல் என்னும் அங்க விகாரங்கள் இல்லாமலும்,

"வெள்ளைகா குளிகீ ழோசை வெடிகுர னாசி யின்ன
வெள்ளிய வெழாலின் குற்ற மெறிந்துநின் றிரட்ட லெல்லை
தள்ளிய கழிபோக் கோசை யிழைத்தனெட் டுயிர்ப்புத்தள்ளித்
துள்ளலென் றின்ன பாடற் றொழிற்குற்றம் பிறவுந்தீர்ந்தே"

என்கிறபடி வெடிப்பாகக் காணுதல், மூக்கினால் ஒலித்தல் இரட்டை ஒலியாய்த் தோன்றல், அளவு கடந்து ஒலித்தல்; ஓசை இளைத்தல், பெருமூச்சு எறிதல் முதலாகிய தொழிற் குற்றங்கள் சாராமலும், எடுத்த விஷயத்திற் கேற்ற சில பாவங்களை மாத்திரம் காட்டி நயமாகப் பாடினார். அதனை அந்தச் சபையில் இருந்துகேட்டவர்கள் அநேகர் ஒருமிக்கப் பலமுறையும் கைகொட்டிப் புகழ்ந்தார்கள். நான் அதுபற்றி அவர்களில் சிலர் பஞ்சவர்ணக் கிளி கொஞ்சுகின்றது என்றும், சிலர் இளங்குயில் கூவுகின்றது என்றும், சிலர் கின்னரமிதுனம் பாடுகின்றது என்றும், பலவகையாக நினைத்து ஆனந்தமாகிய ஆவேசத்தால் தங்கள் சரீரத்தைத் தாங்கள் மறந்து அப்படி ஆரவாரித்தார்கள் என்று எண்ணி, அத்தருணத்தில் "சத்தியப்பலந்து சங்கீதம்" என்னும் பழமொழியை நினைந்து வியந்து சந்தோஷித்தேன்.

பின்னர் ஹேர் - ஏ. சீமான்துரை ஆனவர் நாகசுரம் போன்ற ஒரு தொளைக்கருவியை எடுத்து வாயில் வைத்து அதன் துவாரங்களைத் தமது விரல்களால் அடைத்தும் திறந்தும் லயை முதலானவை பிறழாமல் குரலை நெருக்கிப் பெருக்கி லகு, குரு, துரிதம், அநுதுரிதம் ஆகிய மாத்திரை

பிசகாமல் ஆரோகண அவரோகணமாகத் தீம்பால் தேம் பாகு முக்கனி சர்க்கரை கீற்கண்டுகளும் ஒக்கக் கலந்து ஊட்டுவதுபோல இன்பமாக வாசித்தார்.

அப்பொழுது நமது கவர்னர் அவர்களுடைய துணைவ ராகிய கப்டின் ராபர்ட்துரை அவர்கள் கரடிபிடிக்கும் புது மையான சிரிக்கத்தக்க ஒரு பாடலைப் பாடி, நர்த்தனஞ் செய்வதுபோலச் சிறிதுநேரம் அழகுடனே அபிநயித்தார். அந்த அபிநயத்தில் அவரது பூரண சந்திரன்போன்ற முக நயமும், செங்காந்தள் மலர்போன்ற கரநயமும், தாமரை மலர்போன்ற விழிநயமும், மற்ற அவயவ நயமும் மிகு நன்னயமா யிருந்தமையால், அங்குள்ளவர்கள் அனைவரும் தத்தம் கண்ணும் கருத்தும் இதர விஷயத்தில் செல்லாமல் பிரமித்தாற்போலப் பலகாலும் நோக்கிக் கைபுடைத்து அதிசயித்தார்கள். அவர் பாடும்பொழுது அவரது குரல் ஓசையானது மணி யோசையோ? மகுடிக்குழ லோசையோ? சிலம்போசையோ? சங்கோசையோ? என்று கருதும்படி இருந்தது.

அதன் பிறகு மெஸ்ற்றர் மேயர் துரைசானி யானவர் பியானோ என்னும் வாத்தியம் வாசித்தார். அந்தத் துரை சானியின் கை விரைவையும், வாசிக்கும் சாதுரியத்தையும் கண்டு எனக்குக் கண்களித்தது. அவ்வாத்திய ஓசையைக் கேட்டுச் செவி களித்தது. அவ்விரு திறத்தையும் ஓர்ந்து ஓர்ந்து மனம் களித்தது. எனது அங்கம் புளகாங்கம் ஆயிற்று. ஆதலால், அதை யாது என்று நிர்ணயிக்கிறது.

மறுபடியும் மார்ட்டின் சீமன்சன் துரைவந்து வீணை வாசித்தார். அதுகேட்டு, இது என்ன! புள்ளாங்குழல் இசைபோலவும், திருச்சின்னம் போலவும், குடமுழாப் போலவும், எக்காளம்போலவும், மற்றும் பற்பல விதமாக வும் இருக்கின்றது என்று நினைத்து, நான் ஆனந்தப் பிரவா கத்தில் மூழ்கினேன். மற்றவர்களும் அப்படியே சந்தோஷ சாகரத்தில் குளித்தார்கள் என்று நிச்சயிக்கின்றேன். இப்

படி இருக்கையில் அவர் ஓரறைக்குள் சடுதியிற்போய் மறைந்திருந்தார். அவர் திரும்பி வரும்படிச் சபையார் நெடுநேரம் ஓயாது கைகொட்டிச் சைகை செய்தார்கள். அவர்கள் இஷ்டப்படி அவர் திரும்பிவந்து வீணைவாசித்தார். அவ்வீணையின் சாரசத்திற்கு ஒவ்வாமையால் தானே சர்க்கரைப்பாகு இளகித் தோன்றுவது, பால் வெளுத்துக் காண்பது, கரும்பு கரணை கரணையாகக் கண்டிக்கப் படுவது, கனி கிளிகளின் மூக்கினால் கோதப்படுவது, வீணையில் வல்லவர்களாகிய கந்தருவர்கள் அந்தரத்தில்பரப்பது என்று நினைத்து மனம் உருகி நான் பரவசமாயினேன். அதைக்குறித்துச் சொல்வது என் தரமல்ல. அம்மட்டில் முதற்பகுதி முடிந்தது.

## இரண்டாம் பகுதி.

ஆரம்பத்தில், இராணுவ வாத்தியகாரர் * முன்போலவே வாத்தியம் வாசித்தார்கள். பின்பு மெஸ்றர் ஜீ-கரட் துரை, ஆர்கன் † என்னும் சுரமண்டலம் வாசித்தார். அவ்வாத்தியத்திலிருந்து தாளம், மிருதங்கம், வீணை, வேணு, தம்புரு, கின்னரி, சல்லரி, பல்லரி முதலாகிய பற்பல வாத்திய ஓசையும் அற்புதமாகத் தோன்றினமையால், அவ்வாத்தியத்தை, இது வாத்தியக் களஞ்சியமோ என்று நினைத்தேன். ஆயினும் நான் என்னவென்று சொல்லுகிறது. அந்த வாத்தியமோ சாத்தியமானதல்ல. அதுவே தேவதுந்துபி என்றும், தேவதுந்துபியை நானறியாதிருந்தும் அது இப்படித்தான் இருக்கலாமென்றும் எனக்கு மனமுருகியது.

அதன்பின்பு கோல்துரை யானவர் வாழ்த்துதலாகிய மங்கலப் பாட்டுப் பாடினார். அந்தப் பாட்டோ அதி உசிதமாயும் மிக நயமாயும் சிங்கார முதலிய நவரசாலங்காரமும் உடையதாயும் இருந்ததனால், அனைவர்க்கும் கர்ணாநந்தமாயிற்று. அதைக் குறித்துச் சொல்ல ஆராலாகும்.

---

* Military Band. † Organ.

பிறகு மேயர்துரையும் சீமாதுன்ரையும் குழல் வாசித்தார்கள். அவ்விருவரும் நேர்நேராக வாசித்தவளத்தைக் காணுமளவில் பாவுங்குழலும் இணங்கி நடப்பதுபோலவும், ஊசியுஞ் சரடும் ஒருவழிச் செல்வதுபோலவும், ஒரே இனமாகிய மணிகளை வரிசையாகக் கோத்ததுபோலவும் ஒன்றுக்கொன்று பேதப்படாமல் ஒற்றுமைப்பட்டிருந்ததுகண்டு, இப்படியும் இருக்கிறதல்லவா கல்வித்திறம் என்று நான் சிந்தித்து, அத்தருணத்தில் எனக்குண்டாகிய ஆச்சரியத்திற்கு என்னுள்ளத்தையும் உணர்வையும் திறைகொடுத்து விட்டேன்.

அப்பால் மேஸ்ற்றர் லவீல் துரையானவர் தனியே புள்ளாங்குழல் எடுத்து தமது மகிமைப் பிரதாபமுள்ள * காருணிய பரையாகிய ராக்கினி யவர்களின் வாழ்த்துப் † பாடலுக்கிசைய ஊதினார். அதற்கு நான் எங்கிருந்து தான் உபமானம் தேடிச் சொல்வேன். ஒருவேளை கார்த்திகைப் பிறை காண்பதுபோலவும், அத்தி பூத்தாற்போலவும், அபூர்வமாகச் சில உவமைகளைப் பிரயாசப்பட்டுந் தேடி எடுத்தாலும் அவைகளை,

"காணமலேபலவும் கத்தலாம் கற்றோர்முன்
கோணமல் வாய்திறக்கக் கூடாதே—"

என்பதனால், கற்றுணர்ந்த பெரியோர்முன் எப்படி வாய் கூசாமல் சொல்லுகிறது. இந்தக் குழலோசைக்கு நாணித்தானே குயில் மாமரத்தில் ஓடி ஒளிப்பது; கிளி மழலைச் சொல்லாக வாய் வழுக்கிப் பேசுவது. இதுநிற்க,

பின்பு நமது கவர்னரவர்களின் துணைவராகிய காப்டன் ருபாட் துரையவர்கள் முன் வந்து, "சேதப்பட்ட கப்பலில் தப்பிய ராபின்சன் குரூசோ" என்பவனைப்பற்றிப் பண்டித பாமரர்களனைவரும் நகைத்து மகிழத்தக்க ஒரு பாடலைப் பாடி அபிநயித்தார். அவர் பாடிய பாடலும், அதற்கிசைய அபிநயித்த அபிநயமும், அதிவிற்பன உற்பன விநோத சாதுரியமா யிருந்தன. அந்தச் சபையில், கண்டவர்கள் கேட்ட

* Queen Victoria. † National Anthem.

வர்கள் எல்லாம் அப்பாடலுக்காகச் செவிப்புலனையும், அபி நயித்ததற்காக விழிப்புலனையும் ஒப்பித்தார்கள்.

அதன்பிறகு, மார்ட்டின் சீமன்சன் துரையவர்கள் வந்து கரடி, புரவி, பறவை, விருஷபம் முதலியவைகளின் தொனிகளைக்காட்டி வீணை வாத்தியம் செய்தார். செய்யுமளவில், பருந்து பறக்குங்கால் அதன் உடலும் அவ்வுடற் சாயையும், ஒன்றை ஒன்று தொடர்ந்து செல்வதுபோல யாழிசை, குரலிசை இரண்டுந் தொடர்ந்து ஒன்றுபட்டு நடக்கும் பெற்றிமைகண்டு, இசைநூல் முழுதும் சம்பிரதாயமாகத் தேர்ந்து கானரசமாகிய கடலிற் சதாகாலமும் மூழ்கி விளையாடும் சாதுரியர்களும், வீணை நரம்போசை இதுவென்றும், அவர் குரலோசை இதுவென்றும் வேறுபாடு அறிதற்கு அரிதாயிருந்தது.

நல்லது, இப்படிக்கு எல்லாம் மார்ட்டின் சீமன்சன் துரையைக் குறித்துச் சங்கீத சாகித்தியத்தில் சமானரகிதராகச் சிலாக்கியப்படுத்திப் பேசுவது அவர் கையில் ஏந்திய வாத்திய வளத்தினால் அல்லாமல் அவரது சுயசக்தியினால் அல்லவென்று சிலர் நினைப்பார்கள். ஆனால் அதைப்பற்றி ஆரம்பத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும், சந்தேகமற இப்பொழுது வேண்டுமானாலும் அதனை நிதரிசனமாய் ஆராய்ந் தறியலாம். திருவள்ளுவர்,

"வாளோடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலோடென்
னுண்ணவை யஞ்சு பவர்க்கு"

என்கிறபடி ஓர் வீச்சில் அநேக யானைகள், குதிரைகள் வீரர்களை வெள்ளரிக்காய் போலக் கரணை கரணையாகத் துணித்தெறிகின்ற கூரியவாளானாலும், நல்ல சுத்தவீரன் கையிலன்றிப் பேடிகையில் அகப்பட்டால் என்னசெய்யும் அதனோடு அவனுக்கென்ன சம்பந்தமுண்டு? அதுபோல அவ்வீணைமுதலிய கருவிகள் பலவித உறுப்புகளாலும் மிகச் சிறந்தவையாயினும், இசைநூலின் விதிப்படி வாசிக்கத்தெரியாத பேதைகையி லகப்பட்டால் எப்படிப் பயன்படும்?

உள்ளபடியே மார்ட்டின் சீமன்சன் துரையவர்கள் வித்தியா விஷயத்தில் அதிக சாமர்த்தியபர ரென்பதற்கு எள்ளளவாயினுஞ் சந்தேகமேது? அவருக்குச் சபாகம்பமோ சிறிதுமில்லை. உலகத்திற் சிலர் பூரணபண்டிதர்களா யிருந்தும் நல்ல சமயத்தில் சபைக்கோழைகளாய் விடுகிறார்கள். அதனால் அவர்கள் கற்றகலை பெண்டுகள் அரையிற் சுற்றிய கலையே, அவர்கள் போடுந் தாளம் ஏகத்தாளமே, அவர்கள் பாடும் ராகம் அராகமே, அவர்கள் கொள்ளும் மாத்திரை நேர்வாள மாத்திரையே, அவர்கள் வாசிக்குங்குழல் அடுப்பூதுங் குழலே, அவர்கள் ஊதுங் காளம் ஓக்காளமே, அவர்கள் அடிக்கும் மத்தளம் தத்தளமே என்று சொல்லும்படி இருக்கின்றன. அதுநிற்க,

இப்பொழுது நானொன்றைச் சொல்ல நினைக்கிறேன். அது சிலர்க்குச் சம்மதியாயிராது. ஆயினும் எனக்குச் சந்தோஷ மேலிட்டதனால் நான் சொல்லாமல் விடேன். அது என்னவெனில், நமது கவர்னர்துரை யவர்களுடைய நந்தவனத்தைப் பார்த்தவிடத்தில், அது எனது காட்சிக்கு ஆகமப் பிரமாணமாகச் சொல்லப்பட்ட இந்திரனுடைய சிங்கார வனமாகிய கற்பகச் சோலைபோ லிருந்தது. அவ்விடத்திலுள்ள பசுக்கள் தெய்வப் பசுவாகிய காமதேனுக்கள்போ லிருந்தன. அவரது வெள்ளைப் புரவிகள் உச்சைசிரவ மென்னும் தெய்வப் புரவிபோ லிருந்தன. அங்குள்ள தடாகமோ இந்திர சரசுபோ லிருந்தது. கவர்னரவர்களுடைய அதியுன்னதாலங்கார சோபிதமான வீடோ, இந்திரனுடைய வசந்தமென்னும் மாளிகைபோ லிருந்தது. அச்சபாமண்டபமோ இந்திரனுக்குரிய சுதர்மமென்னும் மண்டபம்போ லிருந்தது. அன்று கூடிய சபையோ இந்திரசபை போலிருந்தது. நமது மகிமைப் பிரதாபராகிய கவர்னரவர்களோ போக தேவேந்திரனென்றே பாவிக்கும்படி யிருந்தார். அந்தச் சபையிலிருந்த துரைசானிமார்களோ கந்தர்வ ஸ்திரீகள்போ லிருந்தார்கள். கந்தர்வ ஸ்திரீகளுக்குச் சிறகுண்டே இவர்களுக்கு அது இல்லையே ஆதலால்,

அவர்களுக்கு இவர்களை எப்படி ஒப்பிடுகிறது என்று சந்தேகப்பட வேண்டுவதில்லை. ' இந்தத் துரைசாணிமார்கள் தங்கள் தங்கள் கையில் மெல்லிய இறகு விசிறி பிடித்துச் சொகுசாக அசைத்துக்கொண்டிருந்தார்கள். அவைகள் இவர்கள் சிறகசைப்பதுபோ லிருந்தன.

மார்ட்டின் சீமன்சன் துரையானவர் வீணை வாசிப்பது கந்தர்வராஜனாகிய சித்திரசேனன் இந்திர சந்நிதானத்தில் வந்து வீணைவாசிப்பதுபோல் இருந்தது.

மேயர்துரையும், சீமான்துரையும் எதிர் எதிராக வாத்தியம் வாசிக்கும்பொழுது சங்கீதப் புலவர்களாகிய ஆகா, ஊகூ என்னும் கந்தருவர்கள் தாம் வந்து வாசிக்கின்றார்களோ! அல்லது தும்புரு நாரதர்களே இப்படி உருவெடுத்து வந்தார்களோ! என்று சந்தேகிக்கும்படி யிருந்தது.

மேயர் துரைசாணியோ வித்தியா சாமர்த்தியத்தினால் மாத்திரமல்ல, தவள நிறத்தினாலும் வெள்ளைவஸ்திரம் உடுத்திருந்ததனாலும் சாக்ஷாத் சரஸ்வதிக்கொப்பா யிருந்தாள். அந்தச் சபாமண்டபத்தின் வாசலிலிருந்து அதற்கு வெளிப்புறத்தைப் பார்த்தபொழுது கவர்னரவர்கள் தோட்டத்திற்கு உட்பட்ட பூமியோ ஆகாசம்போலவும், பற்பல துரைகள் துரைசாணிமார்கள் அங்கேறிவந்து விட்டிருந்த விதம் விதமாகிய வண்டிகளெல்லாம் ஆகாசத்தில் தோற்றும் தெய்வவிமானங்கள் போலவும், அவ்வண்டிகளில் ஏற்றிய பலநிறமாகிய விளக்குகள் எல்லாம் சூரிய சந்திராதி நவக்கிரகங்கள்போலவும், அச்சுவினியாதி நட்சத்திரங்கள் போலவும் விளங்கின. நமது கவர்னர் முதலாக அந்தச் சபையில் வந்திருந்தவர்களெல்லாம் மார்ட்டின் சீமன்சன் துரையானவர் வாசித்த சங்கீத சாரத்தைக் கேட்டறிதற்கு முன்னமே அவர் இசை நூலில் பெரும்பாலும் பயின்றவர் என்று கேள்வியுற்று அபிமானித்து அவருக்குப் போதுமான பரிசு தந்தார்கள்.

ஒருநாள் ஒரு பிரபு இடத்தில் இசைப்புலவர் வந்து இசை பாடினார்கள். அவர்கள் முதல் ஒரு பதம் பாடின

மாத்திரத்தில் அப்பிரபு 'சபாஷ்' என்று மெச்சி அருகிலி ருந்த காரியஸ்தர்களை நோக்கி இந்த வித்வான்களுக்குச் சோடு சால்வை வெகுமதி கொடுங்களென்றார். அதுகேட்டு இசைபாடுவோர் சால்வைகிடைத்தது என்ற சந்தோஷத்தி னால் பின்பு உசிதமான ஒரு சிந்து பாடினார்கள். அப்பொ ழுது பிரபு சிரக்கம்ப கரக்கம்பஞ் செய்து இந்தச் சங்கீதப் புலிகள் கைக்குப் பொற்காப்பும், கொலுசும் கொண்டுவந்து போடுங்கள் என்றார். மறுபடியும் அவர்கள் அதிக மகிழ்ச் சியாய் ஒரு விசித்திரமான வண்ணம் பாடினார்கள். அத்தரு ணத்தில் பிரபு பளா பளா என்று கொண்டாடி இந்தப் புல வர் சிரோமணிகளுக்குக் கனகாபிஷேகம் பண்ணி விலை உயர்ந்த ரத்தினகண்டி வெகுமானம் செய்யுங்கள் என்றார். அவர்கள் ஆனந்தப் பிரவாகத்தில் அமிழ்ந்தவர்களாய் நவ மான ஒரு கீர்த்தனை பாடினார்கள். பிரபு தங்கச் சிவிகை பரிசு கொடுக்கச் சொன்னார். இந்தப்படி அவர் அடிக்கடி யானை, குதிரை, சீமை, பூமி முதலாகிய பல வெகுமதிகளும் ஓயாமல் கர்ணமிசமாய்க் கொடுங்கள் கொடுங்கள் என்று சொல்லச்சொல்ல, இவர்களுக்கு அளவில்லாத பிரமானந் தம் மேலிட்டு ஒப்பனையும், கற்பனையுமாகச் சலிப்பில்லாமல் நெடுநேரம் பாடிப்பாடிக் குரலும் கம்மி வாய்திறந்து வசனி க்கவும் கூடாமல் இனி இல்லாத இளைப்பும் களைப்பும் உண் டானபின்பு பாடுவதை நிறுத்தி, பின்பு கொடுக்கச்சொன்ன வெகுமதிகள் எல்லாம் நம்முடைய தரித்திரம் அதமாம்படி வரும் வரும் என்று காத்திருந்தார்கள். சும்மா வாயினால் சொன்னதே யொழியக் கையினால் ஒன்றும் கொடுக்க வில்லை. பின்பு பிரபு அவர்களை நோக்கி ஏன் வீணாகக் காத் துக்கொண்டு இருக்கிறீர்கள், செலவு வாங்கிக்கொள்ளுகி றதுதானே என்றார். வித்வான்கள் தாங்கள் அமிதமாகத் தயைசெய்த பரிசு ஒன்றும் எங்களுக்குச் சேரவில்லையே என்றார்கள். அந்தப் பரமலோபி எதுக்குக்காணும் உங்க ளுக்குப் பரிசுகொடுப்பது என்றான். அவர்கள் நாங்கள் பாடினதற்காக என்றார்கள்; அந்தக் கொடாதகண்டன் நீங்

கள் எனக்குச் சந்தோஷம் உண்டாகப் பாடினதற்கு நான் உங்களுக்குச் சந்தோஷ முண்டாகச் சொன்னதே ஒழிய மற்றபடியல்ல. நீங்கள் கொடுத்ததும், நான் கொடுத்ததும் ஓசைமாத்திரத்தில் ஒக்குமாகையால் போய் வாருங்கள் என்று கையை விரித்தான்.

அவன் தான் கொடாவிட்டாலும் கொடுக்கத்தக்கவர்களாகிய தன்னைச் சார்ந்தவர்களைக் கொண்டாவது, அவர்களால் இயன்றமாத்திரம் சிறிது சிறிது உதவும்படியாயினும் செய்யலாகாதா? அப்படிச் செய்தால் அதில் எவ்வளவு பிரயோசனமாம் என்று எளிதாக நினைக்க வேண்டுவதில்லை. "குளத்திற்குமழை குந்தாணி குந்தாணியாகப் பெய்கிறதா?" பலதுளி கூடித்தானே ஓராறுய்ப் பெருகுகின்றது. பல திரணங்கள் கூடியல்லவோ பெரிய பழுதையாகின்றன. அப்படியில்லாவிட்டாலும் திரித்தமட்டும் பழுதை யென்பதாகத் தன்னுற் கிடைத்தமட்டுமாவது வஞ்சனை யில்லாமல் செய்யலாமே, அந்த எண்ணமும் அவனிடத்திலில்லை. "இட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்" என்பதையும் அவன் தெளியவில்லை. அப்படிப்பட்ட ஓுத்தசிரோமணிக ளெல்லாம் நாணித் தலைசாய்க்கும்படி இந்தச்சபையில் வந்திருந்த செல்வர்கள் யாவரும் அபிமானத்தூடன் வெகுமான சம்மானஞ் செய்தமையாலும், நமது கவர்னரவர்களுடைய தயையினுலும், மேற்படி மார்ட்டின் சீமன்சன் துரைக்கும் அவரைச் சார்ந்தவர்களுக்கும் உற்சாகமும் தைரியமும் அதிகரிக்கத் தமது வித்தியா சாமர்த்தியத்தைக் குறைவறப் பூரணமாக விளக்கிக் காட்டும்படி யிருந்தது.

"அளவுக்கு மிஞ்சினுல் அமிர்தமும் நஞ்சாமல்லவோ?" அப்படி இது வெறுப்பாய்க்காணவில்லை. இன்னும் இவர்கள் வாத்தியம் வாசியார்களா, பாடார்களா, அபிநயிக்கார்களா, என்று அபேட்சித்து அவர்கள் ஆடல் பாடல்களை நிறுத்திய பின்னும் பிரஜைகளுக்கு அவ்விடத்தைவிட்டுப் போகக் காலெழாமையால், வெகுநேரம் தியங்கியிருந்து பிறகு சென்

றனர். அப்பொழுது நமது கவர்னரவர்களும் அந்த ஸ்தான த்திலிருந்து புறம்பெயரக் கூடாமல், அச்சபாமண்டபத்தில் சனநெருக்கத்தில் மெல்லென ஒதுங்கி நடந்தார். நான் அந் தச்சமயத்தில் அவரைத் தரிசித்து அவரது மிருது நடை யைக் குறித்தும், சாந்தகுணத்தைப் பூஷணமாகக்கொண்ட அவரது அடக்கத்தைக் குறித்தும் மிகவும் அதிசயித்து, மனமகிழ்ச்சிகூர்ந்து எளியவனாகிய எனக்கு இனி என்றை க்குச் செகதீசுரனாகிய இவர் தரிசனங் கிடைக்குமோ வென் றும், இந்தக் கீதவாத்திய விநோதம் மறுபடி எப்பொழுது கேட்க வாய்க்குமோ வென்றும், எண்ணி எண்ணிக் கட வுளை மனதில் தியானம் பண்ணிக்கொண்டே அங்கிருந்து என்னுடன் கூடவந்த தோழர்களாகிய கனவான்களுடனே மீள்வதற்கு அரிதாக மீண்டுபோய் என்னிருப்பிடஞ் சேர்ந் தேன்.

கீதவாத்திய விநோதம் முற்றிற்று.

---

## கம்பர் சரித்திரத்தின் ஒருபகுதி.

ஒருநாள் சூரியாஸ்தமன காலத்திற்கு முன்பு புஷ்பக் கொத்துகளில் பஞ்சவர்ணக் கிளிகள் கொஞ்ச, பூங்கொடி கள் பொற்றொடி மாதர்போல் அசைய, கிளைவிளக் கேற்றி னாற்போலச் சண்பகங்கள் பொன்னிறமாகிய அரும்பெடுக்க, குடமல்லிகைகள் வெள்ளிக்காளாஞ்சி ஏந்துவதுபோலத் தலையவிழ்ந்து மலர, அம்மலர்களிலிருந்து மடைதிறந்தாற் போலக் குபுகுபென்று குமிழியிட்டுப் பாயும் இனியதேனை யுண்டு கீதம்பாடுவதுபோல வண்டுகள் ஒலிசெய்ய, மத்தள முழங்குவதுபோல அங்குள்ள தடாகத்தின் அலைகள் குமி றிச் சப்திக்க, சுருதி கூட்டுவதுபோல மாங்குயில்கள் தீங்குர லாய்க் கூவ, கூத்தியர்போல அழகிய கலாபத்தை விரித்து மடமயில்கள் ஆட, குளிர்ச்சி பொருந்திய மந்தமாருதமா னது கமகமவென்று பரிமளிக்கின்ற மிருதுவான மகரந்தப் பொடிகளை வாரிக்கொண்டு வந்து கதம்ப மிறைப்பதுபோல,

வீசுகின்ற, திவ்வியமான கற்பகச் சோலைபோலும் அதிக ரம்மியத்தைத் தருகின்ற விசித்திரமாகிய ஓரிளம் பூங்காவில் விசாலமாகிய வெண்மணற்சாலையிற் குலோத்துங்க சோழ ராஜனும் வித்வஜன சிரோமணியாகிய கம்பரும் உல்லாசமாயுலாவிக் கொண்டிருக்கையில், சோழனானவன் கலகலவென்று உடல் குலுங்க நகைத்தான். கம்பர் அவனை நோக்கி, "மருமானே! ஏன் சிரிக்கிறீர்" என்ன, சோழன் கம்பரைப் பார்த்து, "அம்மானே! எனக்கு நகைப்பு வந்ததை என்னவென்று சொல்வேன்" என்றான். இவர் "அதை நாமறியக் கூடாதோ?" என்ன, அவன் "நீரறியாததும் உண்டோ, கேளும்:—இந்த ராச்சியமும் இதிலுள்ள சகல பிரஜைகளும் நமக்கு ஐக்கியமல்லவா வென்று எனக்குச் சிரிப்புவந்தது" என்றான். கம்பர் "எல்லாம் உமக்கு ஐக்கிய மென்பதற்கும், நீர் நமக்கு ஐக்கிய மென்பதற்கும் யாதொரு சந்தேகமுமில்லை" என்று தாமும் கூடச்சிரித்தார். சோழனுக்கு அந்தச் சொற் செவிபொறாமல் முகம் வாடிப்போக, இவரென்ன நம்மைப்போல மண்டலாதிபதியா? நமக்குக் கீழ்ப்பட்டிருந்து நாம் கொடுக்க வாங்கிச் சீவனம் பண்ணுகின்ற வித்வான் தானே, இவர் நம்மைக் கொஞ்சமாவது மதியாமல் தமக்கு ஐக்கிய மென்றாரே, இது தகுமா? இந்தச்சொல் மற்றவர்கள் சொன்னால் அவர்கள் அக்கணமே சிரச்சேதம் பண்ணப்படுவார்களல்லவா? என்று நினைத்துக் கம்பருடனே பேசாமற் கோபத்தோடே, திட்டி வாசலால் நுழைந்து அரண்மனைக்குட் போய்ச் சப்ரகோள மஞ்சத்திற் படுத்துக்கொண்டிருந்தான்.

அந்நேரத்தில் வழக்கப்படி அரசன் மனைவி சிற்றுண்டி கொண்டு வந்து வைத்துப் புசிக்கும்படி உபசரித்தாள். அரசன் வெறுப்பினால் அதைப் புசியாமல் அவளுடனும் பேசாமலிருக்க, அதுகண்டு ராஜபத்தினி அரசன் வைப்பாட்டியாகிய பொன்னி யென்னும் பெயருடைய தாசியை அழைப்பித்து ராஜாவைப் பலகாரம் பண்ணும்படி செய்யவேண்டு மென்றாள். அவள், அம்மா! இதோபாரும், ஒரு நொடிக்குள்ளே

உங்கள் அபீஷ்டப்படி நடக்கிறேன்" என்று, அவன் கிட்டப் போய்த் தட்டியெழுப்பினுள். அரசன் எழுந்திராதது கண்டு மறுபடி அவள் அவனுக்கு இதமாகிய லாலனைகளைச் செய்து அதி சுந்தரம் பாராட்டித் தூக்கி உட்காரவைத்து 'சர்வோத்தமியாகிய உமது பத்தினிமேல் உமக்குச் சலிப்பேன்? ஆயினும் எனக்கு இணங்காமற் பிணங்குகின்றது என்னகாரணம்' என்றாள். அவன் தனக்கும் கம்பருக்கும் நடந்த சம்பாஷணையை வெளியிட்டான், வாழ்வுதாழ்வு இரண்டுக்கும் தன்னோடொத்த அருமை மனைவிக்குச் சொல்லாமல் மனத்தில் வைத்த மறுதின செய்தியைத் தாசிக்குச் சொன்னவுடனே, தாசி 'இதற்குத்தானு இவ்வளவு யோசனை? உம்மைத் தமக்கு ஐக்கிய மென்று சும்மா வாயினாற்சொன்ன கம்பனை நான் மெய்யாய் எனக்கு அடிமையாக்கிக் கொள்ளுகிறேன். என் சாமர்த்தியத்தைப் பாரும். நீரெழுந்து பலகாரம் பண்ணும்' என்று சொல்லிவிட்டு, அந்த க்ஷணமே தன் வீட்டுக்குப் போய்த் தாதியை அழைத்துக் கம்பர் தெருவிலே வரக்கண்டால், நானழைக்கிறே னென்று உள்ளே அழைத்துவா வென்று வாசற்படியில் அவளை நிறுத்திவைத்துத் தான்போய்க் கட்டிலின்மேற் படுத்துக்கொண்டாள். அப்படியிருக்க, பூங்காவிலிருந்த கம்பர் தீபம் வைக்கிறவரையிலும் அரசன் வருகையை எதிர்பார்த்திருந்து அவன் வாராமையால், நாம் சொன்னசொல் அவன் மனத்தி லுறைத்திருக்கவேண்டும். அதனுற் சீற்றங்கொண்டு போய்விட்டான். எல்லாம் நாளைக்குத் தெரிய வருகிறதென்று தாம் பல்லக்கேறி வீட்டுக்குப் போம்பொழுது, தாதிகண்டு கும்பிட்டு, 'அம்மா அழைக்கிறுர்கள்' என்றாள். கம்பர் உள்ளே சென்றார். திகம்பரியாய்க் கட்டிலின்மேற் புரண்டுகொண்டிருந்த வேசையானவள் இவரைக் கண்டவுடனே எழுந்து ஓடிவந்து கட்டிக்கொண்டு 'நான் மோகங்கொண்டேன், என்மோகத்தைத் தீர்க்கவேண்டும்' என்றாள். கம்பர் "அம்மா! நீ அரசன் மனைவியா யிருப்பதனுல் எனக்கு மகளாகவேண்டும். இது தோஷத்திற்கு இடமாயிருக்கிறது. இதைவிட்டுப் பின்

எதைச்சொன்னாலும் தட்டாமற் செய்வேன்" என்ன, தாசி 'அப்படியே பிரமாணிக்கஞ் செய்யும்' என்ன, இவர் செய்த மாத்திரத்தில் அவள் 'நீர் எனக்கு அடிமை யென்பதாகச் சாதன மெழுதிக்கொடும், என்றாள். இவர் "நல்லது அதற் குத் தடையில்லை" என்பதாக உடனே ஏடுமெழுத்தாணி யுங் கொண்டுவரச் சொல்லித் தாசிப்பொன்னிக்குக் கம்ப ரடிமை யென்று வருஷம், மாசம், தேதி வைத்தெழுதிச் சாட்சிகுறித்துக் கையெழுத்திட்டுக் கொடுத்து விட்டுச் செலவு பெற்றுக்கொண்டு போய்விட்டார்.

பின்பு அவளந்தச் சாதனத்தை அரசன் கையிற்கொண் டுபோய்க் கொடுத்தாள். அவன் பார்த்துச் சந்தோஷித்துச் சூரியோதய மானவுடன் அனைவருக்கும் முன்பாகத்தான் அரசாட்சி மண்டபத்திற்கு வந்து சகலமானவர்களையும் அழைத்துவரச் சொல்லி, கம்பர் வந்து சேர்ந்தவுடனே மந் திரியை அனுப்பி அப்பத்திரத்தை எடுத்துவரச்செய்து அவ ருக்குக் காட்டி "இதில் வைத்திருக்கும் கையெழுத்து உம் முடையது தானா பாரும்" என்றான். கம்பர் பார்த்து "ஆம்" என்றார். அப்புறம் அதை வாசிப்போன் கையிற் கொடுத்து யாவரும் கேட்க வாசிக்கச் சொல்ல, வாசித்தபோது அதைக் கேட்ட சபையாரெல்லாம் இஃதென்னை அநியாயமென்று மனங் கலங்கிச் சரீரம் பதைபதைத்தார்கள். அரசன் கம்ப ரைநோக்கித் "தாசிபொன்னிக்கு நீர் அடிமைதானா" என் றான் ? கம்பர் "அதற்கு ஐயமென்ன" என்றார் ? அரசன் தன் சரீரங் குலுங்கப் பெருநகை செய்து "மகா வித்வானா கிய நீர் தாசிப் பொன்னிக்கு அடிமையென்பது உமக்கு வெட்கமல்லவா ?" என்றான். இவர் "நாமேதாவது திருடி னோமா ? செய்யாத காரியஞ் செய்தோமா ? ஒன்றுமில்லை யே, அதன் தாற்பரியத்தை உள்ளபடி அறிந்தவர்க்கு வெட்க மேது ?" என்றார். அரசன் "அஃதென்னை சொல்லும்" என் றான். இவர் "தாசிப் பொன்னிக்குக் கம்பர் அடிமை என் பது, ஆறுபதங்களால் முடிந்த ஒருவாக்கியம். இவ்வாக்கியத் தில் முதற்பதம் தா, இதனிறுதி யகரவொற்றுத் தொகுத்

தல் விகாரம்; உ-வது ழி - இது குறுக்கல் விகாரம்: ௩-வது பொன்னி, இது விகுதிபெற்றது; ௪-வது கு; ரு-வது கம்பர்; ௬-வது அடிமை-இவை சொற்பிரிப்பு; தாய்-அன்னை, ழி - மங்களகரம், பொன்னி - லட்சுமி, கு - நான்காம் வேற்றுமை உருபிடைச் சொல் பொருள்: உலகமாதாவாகிய ஸ்ரீ லட்சுமிக்குக் கம்பரடிமையென்பது தாற்பரியம். இங்ஙனம் புருஷகாரியாகிய ஸ்ரீ மகாலட்சுமிக்கு நாம் அடிமையென்று தானே எழுதிக்கொடுத்தோம். இதனால் நமக்கு இழிவுவருமா? நீரேன் வியர்த்தமாய் பரிகாசம் செய்கிறீர்" என்று கம்பர் சொன்னார்.

அதுகேட்டுச் சோழன் தனது இறுமாப்பும், தலைதெரியாத சந்தோஷமும் தடுமாறிக் கம்பரை "அணிலேற விட்ட நாய்போல" ஏற இறங்கப்பார்த்து அதிக உக்கிரங் கொண்டு நகைத்து, "இந்த வித்வான்களை நம்பலாகாது. பொருள் கொடுத்தவரை இந்திரன், சந்திரனென்று ஸ்துதிசெய்தாலும் செய்வார்கள். அது கொடாவிட்டால் எப்படிப்பட்டவர்களானாலும் அவர்களைப் பிரத்தியட்சத்திலேயே புத்தியில்லாதவனென்றும், தரித்திரவரக்காரனென்றும், இன்னும் அநேக விதமாகவும் தூஷித்தாலும் தூஷிப்பார்கள். இவர்கள் தூஷிப்பதைக் காதிற் கேட்டவர்கள் ஏன்காணும் தூஷிக்கிறீ ரென்றால் நான் தூஷித்தேனா? புத்தியில்லாதவனென்றது அறிவிற் சூரியனுக்குச் சமானமானவனென்றும், தரித்திரவரக்காரனென்றது மாறுபடாத நல்வரம் பெற்றவனென்று, சொன்னவைகளே யல்லாமல் வேறென்னவென்று தாம் சொன்னசொற்களை மாற்றினாலு மாற்றுவார்கள். பொல்லாதவர்கள், அம்மம்மா! யமனைப் பார்க்கிலும் இவர்கள் கொடியவர்கள்" என்று கூறி, இக்கருத்துக்கிசைய.

"போற்றினும் போற்றுவர் பொருள்கொ டாவிடில்
தூற்றினுந் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினு மாற்றுவர் வன்க ணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே,"

என்ற ஒரு பாடலைச் சொல்லி, சோழராஜன் கம்பரை "இன்றுமுதல் நீர் என் தேசத்தி லிருக்கவேண்டாம். நான் உமக்குக் கொடுத்திருக்கிற விருதுகள் முதலானவைகளையும் வாங்கி வைத்துவிட்டு எங்கேயாவது போய்விடும்" என்றான்.

கம்பரும் அப்படியே சகல விருதுகளையும் ஆடையாபரணங்களுடனே வாங்கி வைத்துவிட்டு அவனுக்கெதிரே நின்றுகொண்டு "ஏ அரசனே! என்னை உன் தேசத்தை விட்டுப் போய்விடச் சொன்னாயல்லவா, நல்லது, உன்னுடைய தேசம் எவ்வளவு, இருபத்துநாலு காததூரந்தானே, அதற்கப்பால் உனக்கென்ன சுவாதீன மிருக்கிறது? இந்த இருபத்துநாலு காதமொழிய மற்ற தெற்கிலுள்ள ஐம்பத்தாறு காததூரமாகிய பாண்டியதேசமும், மேற்கிலுள்ள எண்பதின் காததூரமாகிய சேரதேசமும், வடக்கிலுள்ள அநேக தேசங்களும் எங்கே போய்விட்டன? சமுத்திரங் கொண்டுபோய்விட்டதா? நீ கோபித்தால் எங்களுக்கு வேறு புகலிட மில்லையோ?" என்பதற்கேற்க,

"காத மிருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண் டொளித்ததோ – மேதினியில்
கொல்லிமலைத் தேன்சொரியுங் கொற்றவா நீமுனிந்தால்
இல்லையோ வெங்கட் கிடம்"

என்ற பாடலையும், "அன்றியும் பூர்வமிருந்ததிலும் இப்பொழுது உன்னுடையய தேசம் அதிக விசாலமாய்விட்டதோ? அல்லவென்று தேசத்திலுள்ள மலைகளை யெல்லாம் நீ பறித்தெடுத்துக் கடலி லெறிந்துவிட்டுக் காடு கரம்புகளெல்லாம் திருத்தி விசாலமாக்கிக் கொண்டாயோ? அஃது ஒன்றுமில்லையே!" என்பதற் கிணங்க,

"அன்றையிலு ஞால மகன்றதோ வல்லவென்று
குன்றெடுத்து நீதிருத்திக் கொண்டனையோ—"

என்ற பாடலையும், "உலகத்திலுள்ள அரசர்களுக்குளெல்லாம் நீதானா சிறந்தவன்? உன்னிலும் சிறந்தவர்களாகிய பாண்டியன், சேரன் முதலானவர்க ளில்லையா? உன்னுடைய நாடுதானா வளமுடைய நாடு? உன்னாட்டிலும் பாண்டிநா

சேரநாடு முதலானவைகள் அதிக வளமுடையவைக ளல்லவா? நான் உன்னைக் கண்டுதானா தமிழ்ப்பாடலைப் பாடினேன்? வேளாளனைப் பாடின வாயினால் வேந்தனைப் பாடுவதில்லை என்பது எனது சங்கேதமென்று உனக்குத் தெரியாதா? மரக்கிளைகளுக்குள் குரங்கைத் தாங்காத கொம்புமுண்டா? அதுபோல நான் தேடிப்போனால் என்னைக்கண்டவுடனே அங்கிகரித்துச் சம்ரக்ஷணைசெய்யாத அரசர்களுமுண்டோ?" என்னுங் கருத்தை உள்ளடக்கி,

"மன்னவனு நீயோ வளநாடு முன்னதோ
உன்னையறிந் தோதமிழை யோதினேன்-என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ வுண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு."

என்ற பாடலையுஞ்சொல்லி, இனி உன்னிடத்தி லிரோம், இக்கணமே செல்கின்றோம், இதோ பார், உன்னைவிட்டு நாம் போம்பொழுது கட்டிய கோவணத்தோடே போகின்றோம், திரும்பி வரும்பொழுதோ உன்னிடத்தில் கப்பம் வாங்கிவருகின்ற உனக்கு மேலாகிய அரசன் நமக்கு அடைப்பைக்காரனாகித் தாம்பூலம் மடித்துக் கொடுக்கத்தக்க ஸ்திதியுடனே வருகிறோம்'' என்று கம்பர் பிரதிக்கினைசெய்து சோழராஜனைவிட்டு நீங்கிப்போனார்.

அவர் சோழனைத் துறந்து போகும்பொழுது, தமது வீட்டாருடனுஞ் சொல்லாமல், வஸ்திரமும், வழிச்செலவுக்கு வேண்டும் பணம் காசுகளும், உணவுக்கு வேண்டும் சாமக்கிரியைகளும் கொண்டுபோகாமல், வெறுங் கையுடனே போய் ஓர் ஊரில் பெண்ணரசா யிருக்கும் வேளியென்பவள் ஒரு மண்சுவர் கட்டுவிக்க எத்தனித்து அந்தச் சுவரைக் கட்டி முடித்தவர்க்குக் குறுணிநெல் கொடுப்பே னென்று பிரசித்தம் பண்ணியிருந்தாள். அதைத் தினமொருவராக வெகுபெயர்வந்து கட்டித் திரும்புகையில், அங்குள்ள ஒரு பிரமராக்ஷசால் தள்ளப்பட்டு அது விழுந்துபோகிறது; அப்புறமவர்கள் கூலி வாங்காமற் போய்விடுகிறது; இப்படி அநேகநாளாய் நடந்துகொண்

டிருக்கையிற் கம்பர் அந்த மோசத்தை அறியாமல் அவ ளிடத்திற் போய்ப்பேசி மண்வெட்டி மேற்படி சுவரைக் கட்டிமுடித்து வேலியைக் கூலிகேட்க வந்தார். அவள் 'சுவர் வைத்தாயிற்றா?' என்றாள், இவர் "ஆயிற்று" என்று சொல்ல, 'அப்படியா அதைப் பார்ப்போம் வா' என்று சீக்கிரமாகவந்து பார்வையிடும்பொழுது அது விழுந்துகிடக்க, 'சுவர் விழுந்துபோனதினாற் கூலி கொடுக்கமாட்டேன், நாளைவந்து சுவரைக் கட்டி வேலையை எனக்கு ஒப்புக்கொடுத்தால்தான் கொடுப்பேன்' என்றாள். கம்பர் அன்றிரவு பட்டினியாயிருந்து மற்றைநாள் சாயங்காலவரையில் இடும்பொடியக் கஷ்டப்பட்டுக் கட்டிக் கூலிவாங்கி வருகிறதற்காக ஓரடி யெடுத்துவைக்கையில் சுவர் விழுகின்ற குறிப்பறிந்து,

"மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட் டிங்குவந்தேன்
சொற்கொண்ட பாவின் சுவையறிவா ரீங்கிலையே
விற்கொண்ட பிறைநுதலாள் வேலிதருங்கூலி
நெற்கொண்டு போமளவு நில்லாய் நெடுஞ்சுவரே."

என்று ஒரு கொச்சகக்கலிப்பாப் பாடினார். அதைக்கேட்டமாத்திரத்தில் அந்தப் பிரமராக்ஷசு இவர் மகா பண்டிதரா யிருக்கிறாரென்று பயந்து விலகிப் போய்விட்டது. சுவர் விழாமல் நின்றது. கம்பர் அந்தச் செய்தியை வேலிக்குந் தெரிவிக்க, அவள்பார்த்து அதிசயப்பட்டு 'நீரார்' என்று கேட்க, "நான் கூலியாள்தான், எனக்குச் சொன்னபடி நெல்கொடு" என்ன, அவளதைக் கொடுத்து 'இவ்விடத்தில்தானே இரும்' என்று உபசரித்தாள். அதை மறுத்துவிட்டு அத்தேசத்தைக் கடந்து சென்றார்.

அவர் அப்பால் வெகுதூரம் போகையில் அதிக பசியா யிருந்ததனால் ஒரு கோமுட்டி கடையிற் போய், "ஐயா செட்டியாரே! பசியாயிருக்கிறது, எனக்குக் கொஞ்சம் அவல் கொடும்" என்றார்; அவன் கோமுட்டியானதால் பொதிக் களக்கிறதற்குள்ளே சத்தத்திற்கு அளக்கச் சொல்லுகிறது போல, கடை போணி யாகாததற்கு முன்னே உனக்குக்

கொடுக்கச் சொல்லுகிறையோ, நல்லதாயிற்று, அட இல்லை போ' என்றான். அப்புறஞ்சில தூரம் போய்ச் செக்கான் எள்ளாடுவது கண்டு, "அப்பா ! பசிக்குக் கொஞ்சம் பிண்ணுக்குக் கொடு" என்றார். அவனும் கொடுக்கவில்லை. அதற்கப்பால் ஒரு பிராமணன் வீட்டைக்கண்டு "பிராணன் போகிறது தாகத்திற்குத் தண்ணீர் தரவேண்டும்" என்றார். "அவன் சூத்திரனுக்கு வார்த்த தீர்த்த சேஷம் பிராமணருக்கு அருகமாமோ போ போ' என்று துரத்தினான். இவரென்ன செய்வார்; பசியும் தாகமும் சகிக்கக் கூடாமையால் மிகவும் இளைப்புடனே வெயிலில் அலுத்துப்போய் ஒரு மர நிழலிற் சேர்ந்து படுத்திருந்தார். அங்கே ஏருழுகிற வேளாள னொருவனுக்குப் பழையது வந்தது. அவன் சாப்பிடப்போகிற சமயத்தில் இவர் போய்க் கையேந்தினார்; அவன் அந்தப் பழஞ்சோற்றை இவர்கையிலே போட்டு உண்ணச்சொல்லி உபசரித்தான். இவருண்டுபசிதீர்ந்தபிறகு,

> "செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்
> பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே—முட்டிபுகும்
> பார்ப்பா ரகத்தையெட்டிப் பாரோமே யெந்நாளும்
> காப்பாரே வேளாளர் காண்."

என்று ஒரு பாடல் பாடினார். பின்பு வேளாளன் அவருண்டு மீந்த கொஞ்ச உணவைத் தானுண்டு கையலம்பிக்கொண்டு மேழிபிடித்து முன்போல உழுகையில், அந்தக்கொல்லைக்குள் கலப்பைக்கொழுச் செல்லும் படைச்சாலிற் கணீர் கணீரென்று ஓர் ஓசை உண்டாயிற்று. அவனிது என்னவென்று சந்தேகித்து மண்வெட்டிகொண்டு நிலத்தை வெட்டிச் சோதிக்குமளவில், பூமிக்குள் பெரிய தவலையிருந்தது. அதை எடுத்துப் பார்த்தபொழுது, அதுநிறையத் திரவிய மிருக்கக்கண்டு, வேளாளன் பேரானந்தமடைந்து இவர் நான் பகிர்ந்திட்ட பழையதையுண்டு ஒரு கவி பாடினார், அந்த வாக்கு விசேஷத்தினாலே தலைமுறை தலைமுறையாய்த் தரித்திரப் பட்டுக்கொண் டிருந்த எனக்கு இந்தப் புதை பொருள் கிடைத்தது, இவராரோ மகாத்து

மாவா யிருக்கிறு ரென்று, அவரைத் தன் வீட்டுக்கு அழைத்துப்போய் ஷட்ரச பதார்த்தத்துடனே பஞ்சபட்சிய பரமான்ன மிட்டுப் போஜனஞ் செய்யச்சொல்லி உபசரித்து இரண்டு மூன்றுநாள் வைத்திருந்தான்.

பிறகு அவர், "நான் போகவேண்டும், எனக்குச் செலவுகொடு" என்றார். வேளாளன் 'ஐயா! உம்முடைய அதிர்ஷ்டத்தால்தானே எனக்குத்தனம் அகப்பட்டது; ஆகையால் நீரெங்கும் போகாமல் இவ்விடத்திலேயே இருக்கலாம்' என்ன, கம்பர் அதை மறுக்க, அவன் 'இந்தத் திரவியத்திலாவது பாதி கைக்கொண்டு போகலாம்' என்ன, இவர் 'எனக்குத் திரவியம் வேண்டியதில்லை, நந் நான்கு முழத்தில் இரண்டு வெள்ளைமுண்டு மாத்திரம் வேண்டும்" என்று கொடுக்கச்சொல்லி வாங்கி, அரையி லொன்றும் தலையி லொன்றுமாகக் கட்டிக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டுச் சேர தேசத்திற்குப் போய், ஒரு சிமானை அடுத்து, "ஐயா! நான் கம்பரிடத்தில் அடைப்பைக்காரனு யிருந்தவன்; அவருக்கும் சோழராஜனுக்கும் மனஸ்தாபம் உண்டானமையால் அவர் ஊரைவிட்டு எவ்விடத்திற்கோ போய்விட்டார்; அதனால் நான் பரதேசம்போய்ப் பிழைக்கலாமென்று இப்படி வந்துவிட்டேன். தாங்கள் தயை செய்து எங்கேயாவது எளியவனுகிய எனக்குக் கைகாட்டினுல் தங்கள் பெயரைச் சொல்லி சீவிப்பேன்" என்ன, அந்தப் பிரபு கம்பரிடத்தி லிருந்தவ னென்றதைப்பற்றி அபிமானித்து, அவரைச் சேரமகாராஜனிடத்தில் அழைத்துப் போய், அடைப்பைத் தொழிலில் வைத்தார். அன்றுமுதற் கம்பர் சேரனிடத்தில் அத்தொழில் செய்துவருகையில், சேரன் ஒருநாள் தனக்கு அவகாசமான வேளையில் தன் சமஸ்தான வித்வான்களைக் கம்பராமாயணப் பிரசங்கஞ் செய்யச்சொன்னுன்.

அவர்கள் பாலகாண்டத்தில் வேள்விப் படலத்தில்,

"எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை

மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்.''

என்ற பாடலைச் சொல்லி, அதற்குக் கௌசிகமுனிவன் தேவர்கள் பொருட்டு ஐந்துநாள், அல்லது ஆறுநாள் வரையில் எண்ணுதற்கும், செய்தற்கும் அருமையாகத் தொடங்கிய யாகத்தை உலகத்தைப் பரிபாலனம் பண்ணுகின்ற தசரத மகாராஜனுடைய புத்திரர்களாகிய இராமனும் இலக்குவனும் கண்ணைப் பாதுகாக்கின்ற இமைகளைப்போலச் சம்ரட்சணை செய்தார்களெனவும், மிதிலைக் காட்சிப்படலத்தில்,

''உமையா ளொக்கு மங்கைய ருச்சிக் கரம்வைக்கும்
கமையாண் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணார்
இமையா நாட்டம் பெற்றில மென்றா ரிருகண்ணால்
அமையா தென்றா ரந்தர வானத் தவரெல்லாம்.''

என்ற பாடலுக்கு, உமாதேவியை ஒத்த கலைமகள் முதலிய தெய்வப்பெண்கள் சிரமேற் கரம்வைத்து அஞ்சலி செய்யா நின்ற பரம சாந்தத்தையுடைய நிலமகளாகிய சீதாபிராட்டியாரது திருமேனி அழகைக்கண்ட தேவர் மாநுடர் யாவரும், தாம்தாம் கண்ட காட்சிச் சிறப்பிற்கு எல்லைகாணாதவரானமையால், அவர்களிற் பூமியிலுள்ள மாநுடர் நமது கண் அடிக்கடி இமைப்பதனால் எம்பிராட்டி திருவழகை எப்படிக் கண்டு களிப்பது, நாம் தேவர்களைப்போல இமையா நாட்டம் பெற்றோமில்லையே யென்றார்கள், அந்தரத்திலுள்ள தேவர்களெல்லாம் அத்திருவழகு இருகண்ணாற் காண அமையாதென்றார்கள், எனவும், மற்றும் சில பாடல்களுக்குத் தங்களுக்குத் தோற்றின பிரகாரமும் பிரசங்கித்தார்கள். அப்பொழுது அரசன் இப்பிரசங்கத்தை இந்தச் சபையிலுள்ளவர்கள் கருத்துடன் கேட்கிறார்களா வென்று அவரவர் முகத்தைக் குறிப்பாய்ப் பார்க்குமிடத்திற் கொஞ்சம் ஏறக்குறைய யாவரும் கருத்தோடே கேட்கிறதாகத் தெரியவந்தது. பின்பு தன் பக்கத்திலிருக்கிற அடைப்பைக்காரன் முகத்தைப் பார்க்க, அவன் வியக்கவேண்டிய விஷயத்தில் வியக்காமல், சந்தோஷிக்க வேண்டிய சமயத்தில் துக்கிக்கிறதும்,

துக்கிக்கவேண்டிய தருணத்திற் சந்தோஷிக்கிறதுங் கண்டு, அரசன் அவனை 'என்ன' என்று கேட்க, அடைப்பைக்காரன், "மகாராஜாவே! இந்தப் பிரசங்கம் கிரந்தகர்த்தாவாகிய கம்பர் கருத்துக்கு இசைந்திருக்கவில்லை" என்ன, சேரன் 'கம்பர் கருத்து உனக்கெப்படித் தெரியும்' என்ன, "கம்பரிடத்தில் நான் அடைப்பைக்காரனு யிருக்கையில் அருகில் நின்று அவர் பிரசங்கிக்கக் கேட்டிருக்கிறேன்" என்ன, 'அப்படியானல் நீயும் பிரசங்கிக்க மாட்டுவையோ?' என்ன, "கூடினமாத்திரம் பிரசங்கிப்பேன்" என்ன, அரசன் 'சற்றே பிரசங்கஞ்செய் பார்ப்போம்' என்ன, அடப்பைக்காரன் பிரசங்கிக்கத் தொடங்கினுன்.

"எண்ணுதற் காக்கரிது" என்ற பாட்டின் முதல் மூன்றடிக்கும் இவர்கள் சொன்ன பொருள் கொஞ்சங் குறையச் சரிபட்டிருக்கின்றது. முதலடியில் எண்ணுதற்கு, ஆக்குதற்கு அரிய வேள்வி என்றதனேடு சொல்லுதற்கும் அரியதென வருவித்துத் திரிகரணச் செயல்களையும் சுட்டிச்சொல்லவேண்டும். "கண்ணிணைக்காக்கின்ற விமையிற் காத்தனா்" என்னும் நான்காமடியிற் பொருள் சிறக்கவில்லை. அதைச் சிறக்கச்சொல்லுங்கால், மேலிமை கீழிமை என்னும் கண்ணிமை இரண்டில் மேலிமை பெரியது, கீழிமை சிறியது, அன்றியும் மேலிமை அசைந்துகொண்டிருப்பது, கீழிமை அசையாது நிற்பது, மேலிமைபோலப் பெரியவனுகிய இராமன் நிலைபெயர்ந்து கௌசிகமுனி ஆச்சிரமத்தின் நாற்றிசையிலும் இராக்கதர்கள் வந்து உபத்திரவஞ் செய்யாம லிருக்கும் பொருட்டுச் சக்கிரம் சுற்றுவதுபோலச் சுற்றித் திரிந்து காவல் செய்தான். கீழிமைபோல இளையவனுகிய இலக்குவன் உள்ளே ஒருவரும் பிரவேசியா திருக்கும் பொருட்டு ஆச்சிரமத்தின் வாசலில் அசையாது நின்றபடி காவல்செய்தான். இவ்விதமாகக் காவல்செய்யும் அவ்விருவரில் இராமன் ஆச்சிரமத்தின் புறத்திற் சுற்றி வரும்போதெல்லாம்மேலிமை கீழிமையை இமைத்திமைத்துத் தீண்டுவது போல வாசலிலிருக்கிற இலக்குவனைக் கையினுல் அடிக்கடி

தட்டித் தட்டி, லட்சுமணா ! சாக்கிரதை, என்று எச்சரித்துக்கொண்டே வந்தானென்றும், "உமையாள்" என்ற பாடலுக்கு இவர்கள் உரைத்த பொருள் பெரும்பாலும் சரிதான். ஆயினும், இதனுள் அனைத்தும் சுருங்கச் சொல்லாக உபசரிக்கப் பட்டமையால், முதலில் 'உமையாளொக்கு மங்கையர்' என்பதை உம்மைத் தொகையாகக்கொண்டு உமையாளும் அவளை ஒத்த மங்கையரு மென உரைப்பினும் அமையும். இறுதியில் "இருகண்ணால் அமையாதென்று ரந்தரவானத்தவ ரெல்லாம்" என்றதற்குத் தேவர்களில் அநேகர் நமதுவிழி இமைக்கவில்லையே, இது நமக்கொரு விசேஷந்தான் என்றாலும், மனிதர் விழிபோல இரண்டே யல்லாமல் அதிக மில்லாமையால் சானகி வடிவழகு நாம் காண்பதற்குச் சாத்தியப்படாது. பிரமன் முருகக்கடவுள் முதலானவர்கள் எண்கண், பன்னிருகண்ணுள்ளவர்க ளாகையால் அவர்களே காணுதற் குரியவர்களென்றும், அப்பிரமன் முதலியோர் மற்றவர்களைப் போலன்றி நமக்குக் கண் கொஞ்சம் ஏற்றமாயிருந்தும், அவை சீதை திருவழகைக்காணப் போதுமானவை யல்ல, இந்திரன் ஆயிரங்கண் படைத்தவனாதலால் அவன் தான் காணத்தக்க பாக்கியமுடையவனென்றும், அவ்விந்திரனோ 'கள்ளிச்செடிக்கு மகாவிருட்சம்' என்று பெயர் வந்திருப்பது போல எனக்குப் பிரதிஷ்டைக்கு ஆயிரங்கண்ணனென்று பெயர் வந்திருக்கிறதே யொழிய வேறொன்றுமில்லை. அவைகளைக்கொண்டு பார்க்கமுடியுமா ? முடியாமையால், வைதேகி திருவுருவைக் காண்பதற்கு நான் அருகனல்லேன்; ஆதிசேஷன் ஆயிரந்தலை இரண்டாயிரங் கண்ணுடையவனாகையால், அந்த மகானுபாவனே காணத் தவஞ்செய்தவனென்றும், அவ்வாதி சேஷனோ கடலிற் கரைத்த பெருங்காயம் மணக்குமா ? அதுபோல அந்த மகோத்தமியின் திவ்விய சுந்தரத்தை என திரண்டாயிரம் கண்களைக்கொண்டு தான் காணக்கூடுமா ? "ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷஸ்ஸஹஸ்ரபாத்" என்ற புருஷ சூக்தத்தின்படி அநேக சிரசு, அநேக நேத்திரமுள்ள பரந்தாமனை

காணப் பாத்திரமானவ னென்றும் "ஸஹஸ்ரம்" இவ்விடத்தில் ஆயிரமன்று அநேக மென்பதாய்ச் சொன்னதாகப் பிள்ளைக்கும் பேதைக்கும் விளங்கும்படி பொருள்விரித் துரைப்பது சிறப்பென்றும், அப்புலவர்கள் பிரசங்கித்த மற்றும் சில பாடல்களுக்கு அதனதன் விசேஷார்த்தங்கள் இன்ன இன்ன தென்றும் எடுத்துரைக்க வேண்டுமென்று சொல்லக் கேட்டு, அரசன் இந்தப் பிரசங்கம் நவரசாலங்காரத்துடனே அற்புதமாயிருக்கிறதே, இதற்கு ஒப்பாக ஆருடைய பிரசங்கத்தைச் சொல்லலாம். இதைவிட சாட்சாது அந்தக் கம்பருடைய பிரசங்கம் எத்தன்மையா யிருக்குமோ வென்று அதிசயப்பட்டு அதிக சந்தோஷமாகி அன்றுமுதல் அடைப்பைக்காரன் உயிரும் தானுடலுமாக அந்நியோந்நியமாய்ச் சிநேகித்து அவனை விட்டுப் பிரியாமல் அவன் தன்னுடனே கூடச் சமபந்தியாயிருந்து போஜனம் பண்ணும்படி மற்ற வித்வஜனர்களிலும் அவனைப் பதின்மடங்கு அதிக மேன்மையாய் வைத்திருந்தான்.

அதுகண்டு அவ்வித்வ ஜனர்கள் கம்பர் விஷயத்திற் பொறாமைகொண்டு நிர்நிமித்தமாகப் பகைத்தார்கள். கோழிக்காய்ச்சல் வேசைக்காய்ச்சல் போல வித்வக்காய்ச்சலினால் மூண்ட பகை தென்றல் முற்றிப் பெருங்காற்றானதுபோல நாளுக்குநாள் அதிகரித்ததனால், அவர்கள் நாம் அடைப்பைக்காரன் இழிகுலத்தானென்று ஓர் அபவாதத்தைத் உண்டாக்கி, அவன்மேல் அரசனுக்கு விரோத மூளும்படி செய்யலாமென்று எத்தனித்து ராஜாவுக்குச் சவரம் பண்ணும் அம்பட்டனை ரகசியமாக அழைத்து 'நீ அடைப்பைக்காரனை உங்கள் இனத்தானென்று எவ்விதத்திலாவது அரசனுக்கு உறுதியாகத்தோன்றும்படி செய்வாயானால், உனக்கு இரண்டாயிரம் வராகன் கொடுக்கிறோம், அதனால் உனக்கு வரும் தண்டனையையும் வரவொட்டாமல் தடுக்கிறோம், மேலும் எவ்வளவு பணச்செலவு நேரிட்டாலும் தருகிறோம்' என்று அவனுக்கு நம்பிக்கை உண்டாகச் சொல்லிச், சம்மதிக்கும்படி உடன்படிக்கை எழுதிப் பணமுங் கையிற் கொடுத்தார்

கள். கைம்மேல் ரொக்கத்தைக் கண்டமாத்திரத்திற் "பண மென்றாற் பிணமும் வாயைத் திறக்கு" மென்பதற்குச் சரியாக அவனுக்கு ஆசை மேலிட்டதனால் உடன்பட்டு, அடைப்பைக்காரனை மாத்திரமா, அரசன் குடியையும் கெடுக்கத் துணிந்து, ஏற்ற சமயம் பார்த்திருந்தான். ஒருநாள் சேரனுடைய சிங்காதனத்தின் பக்கத்திற் சமான ஸ்கந்தமாய் வீற்றிருந்த கம்பர் ஏதோ ஒரு நிமித்தத்தால் அதை விட்டிறங்கி ஆசாரவாசலின் அருகே வரும்பொழுது, அங்கே காத்திருந்த அம்பட்டன் அனைவருக்கும் முன்பாக அவரைக் கட்டிக் கொண்டு, 'அண்ணா இத்தனை காலமாய் உன் முகத்தை நான் பாராமலிருந்தேனே, நீ எங்கே போயிருந்தாய்' என்பதாகக் கோவென்று அலறி யழுதான். கம்பர் அந்தக் கற்பனையை அறிந்து "வைக்கற் கட்டுக்காரனை ஒக்கக்கட்டி அழுவது" போல அவனைத் தாமும் கூடக் கட்டிக்கொண்டு ஓயாமலழுதார். அம்பட்டன் தன்னைத்தானே தேற்றிக்கொண்டு கம்பர் கண்ணீரைத் தன் அழுக்குத் துணியால் துடைத்து 'அழாதே' என்ன, அவர் நடித்துக் காட்டிய பொய்த்துக்க மாறி அம்பட்டனை, "அடா தம்பி! நீ குடியிருக்கும் இடமெங்கே? உனக்குக் கலியாணமாயிருக்குமே, பிள்ளைகளெத்தனை? பார்ப்போம் வா" என்று அழைத்துக்கொண்டு சபையை விட்டுத் திரும்பினார்.

அடைப்பைக்காரனா யிருந்த கம்பர் திரும்பும்பொழுதே "அப்பா குழந்தைக ளிருக்குமிடத்தில் நான் சும்மாவரயாட்டேன். பெரியோர்கள் கோயிலுக்கும், ஆசாரிய சந்நிதானத்திற்கும், [illegible]சர் சமுகத்திற்கும், குழந்தைகளிடத்துக்கும் வெறுங்கையுடனே போகலாகா தென்கிறார்களே, ஆகையால், கடைக்குப்போய்ப் பிள்ளைச் சாதிகளுக்கு ஏதாவது தின் பண்டம் வாங்கிக்கொண்டு போவோம்" என்று ஒரு பணத்துக்குக் கடலை பட்டாணி வாங்கிக் கட்டிக்கொண்டு அவர் அம்பட்டன் வீட்டின் அருகிற் சென்றவுடனே, அவன் தன் குடிசைக்குள் முன்னே போய் நுழைந்து 'அடி அம்மைச்சி இங்கேவாடி.' என்று பெயரைச்சொல்லித் தன்பெண்

டாட்டியைக் கூப்பிட்டு 'உங்கள் மூத்தார் வந்தார்' அவருக்கு மணைகொடு' என்றான். அவள் ஒரு கட்டைமணையை எடுத்துப்போட்டு, அவர் உட்கார்ந்தபின் காலின்மேல் விழுந்து சேவித்தாள். அவளைக் கம்பர் "தீர்க்க சுமங்கலியா யிரு" என்று வாழ்த்திக் "குழந்தைகளெங்கே" என்ன, அம்பட்டன் தன் மூன்று பிள்ளைகளையும் 'உங்கள் பெரியப்ப னழைக்கிறான், வாருங்கள்' என்று அழைத்து வந்து எதிரே விட, அந்தப் பிள்ளைகளைக் வாரியெடுத்து மார்போடணைத்து, முகத்துடனே முகம்வைத்துக் கண்ணுடனே கண்ணொற்றி "என் அருமை மக்களே! நானுங்கள் மழலைவார்த்தையைக் கேட்கவும், நீங்கள் தத்தடியிட்டு நடக்கும் மடநடையைக் காணவும், உங்களைச் சீராட்டிப் பாராட்டி உங்களுடனே கொஞ்சவும், இதுவரையிற் பாக்கியஞ் செய்யாமற் போனேன் என்று கண்ணீர் விட்டு, ஆசையுடனே அடிக்கடி முத்தமிட்டுக் குலாவி, பிறகு நாவிதனைப்பார்த்து "எனக்குப் பசியாயிருக்கிறது" என்றார். அவன் பெண்சாதியைச் சீக்கிரம் சமையல் பண்ணச்சொல்லிக் கம்பரை 'அண்ணா, சாப்பிட எழுந்திரு' என்றான்.

இவர் ஒரு செப்புப்பாத்திரத்தை வாங்கிக் கிணற்றிலே தண்ணீர் மொண்டு ஸ்நானம் பண்ணிவந்து சாப்பாடு கொண்டுவரச் சொல்ல, அம்பட்டத்தி இலைபோட்டுச் சாதம் வட்டிக்க வர, கம்பர் "நானென்ன அன்னியனா, நீங்கள் சாப்பிடுகிற கிண்ணி எங்கே" என்ன, அம்பட்டனும் அவன் மனைவியும் கொஞ்சமாவது இது பாவமென்று அஞ்சாமல் எச்சிற்கலத்தைக் கொண்டுவந்து வைத்து, "அன்னம் பரிமாறி உண்ணும்படி யுபசரிக்க, கம்பர் அவனைப்பார்த்து தம்பி! உன்னுடனே ஒரு செய்தி, பேசவேண்டி யிருக்கிறது" என்ன, அவன் 'சாப்பிட்டுப் பேசலாம்" என்ன, இவர் அப்படிச்செய்தால் உன் சோற்றையுண்டு உனக்குத் துரோகம் செய்ததாய் முடியுமாதலால், இரண்டொருபேச்சு முன்னதாகவே பேசிவிட்டுப் போஜனம் பண்ணுவது யுக்தம்" என்றார். அவன் 'அஃதென்னை' என, இவர், "அடா தம்பி!

நம்முடைய முன்னோர்களுக்குத் தாயபாகம் பிரியவில்லை யென்பது உனக்குப் பரிஷ்காரமாய்த் தெரியுமல்லவா" என்ன, அவன் 'ஆம்' என்ன, இவர் "நாம் கலகத்தில் ஒருவரையொருவர் விட்டுப்பிரிந்து திக்குக்கெட்டுத் தடுமாறிப் போனபின்பு தெய்வகடாட்சத்தால் நீ தப்பிப் பிழைத்து இந்த ராஜாவை அடுத்துச் சுகப்பட்டிருக்கிறாய். "எட்டிமரமானாலும் பச்சென்றிருந்தாற் கண்ணுக்கழகு" தான். நான் கொழுகொம்பில்லாத கொடிபோல் அலைந்து திரிந்தேன், போகட்டும்; அதுமுதல் இதுவரையும் நீ சம்பாதித்ததென்ன, தெய்வசாட்சியாய் உண்மையைச் சொல்" என்றார். அவன் 'சத்தியமாய் நாலாயிரம் வராகனிருக்கும்' என்றான். இவர் "நல்லது, அதிலெனக்குப் பாதி சேரவேண்டியிருக்கிறதே அதைக் கொண்டுவந்து வை" என்றார். அவன் வித்வான்கள் கொடுத்த இரண்டாயிரம் வராகனையும் எடுத்துவைத்தான். இவர் "இருபதுவருஷகாலமாய் உன்முறையாக நீராஜாவுக்கு ஊழியஞ் செய்து வந்ததுபோல, நானிருபது வருஷகாலம் அந்தத் தொழில் செய்யவேண்டுமே, அதற்கென்ன சொல்லுகிறாய்" என்றார். அவன் "தடையென்ன, உன் இஷ்டப்பிரகாரம் ஆகட்டும்" என்றான். "அந்தப்படி நாட்டுக் கணக்கனைக் கொண்டு பாரிக்கத்தும் உடன்படிக்கையும் எழுதிவிடு" என்றார். எழுதுவித்தமாத்திரத்தில் கம்பர், "தம்பி! நீ சம்மதித்தாய், என்னிடத்தில் க்ஷௌரம் செய்துகொள்வதற்கு ராஜா சம்மதிப்பாரோ, மாட்டாரோ, இவ்வளவு தூரம் பகிரத பிரயத்தனஞ் செய்தும்வீணாய்ப்போனாலென்னவாகும். அரசனைக் கேட்டறியலாம்வா" என்று அவனை அழைத்துக்கொண்டு கம்பர் ராஜசமுகத்திற்கு வருகிறார்.

அம்பட்டன் முன்பு சபையிற் கம்பரை அண்ணாவென்று கட்டிக்கொண் டழுதபொழுது, அங்கிருந்தவர்களெல்லாம் அடைப்பைக்காரனை ராஜா பெரிய வித்வானாக மதித்துச் சன்மானித்து அவனுக்குச் சபையில் ஆசனங் கொடுத்தது மல்லாமல், அவனுடனே சமபோஜனமும் பண்ணிவருகிறாரே. இவனோ சாதியில் அம்பட்டனாயிருக்

கிறானே. இஃதென்ன கோரம்; இவனால் நமதரசனுடைய குலத்துக்கும், அவர் பெற்ற பெருமைக்கும், அளவிறந்த கீர்த்திக்கும் பங்கம் வந்ததே. ராஜா இனி இதற்கு என்ன பிராயச்சித்தம் செய்துகொள்வாரோ, அல்லது அவமானத்திற்கு இடமாயிற்றே யென்று ஒருவேளை பிராணத்தியாகமே பண்ணிக்கொள்ளுவாரோ, இஃது எப்படி முடியுமோ வென்று பரிதபித்தார்கள். அரசனும் அப்படியே எண்ணுதலு மெண்ணி நெஞ்சம் புண்ணாயினான். ஆயினும் நுண்ணறிவுடையவ னாதலால், இவன் அம்பட்டனாகிற் கம்பர் இவனைத் தம்மிடத்தில் அடைப்பைத் தொழிலில் வைத்துக்கொள்வாரா? அவசரப்படாமல் ஆய்ந்தோய்ந்து பார்க்கவேண்டுமென்று, வேவுகாரரைவிட்டுச் செய்தி தெரிந்துவரச் சொன்னான். அவர்கள் வேடமாறி உருத்தெரியாதபடி அம்பட்டனும் அடைப்பைக்காரனும் சபையை விட்டுத் திரும்பும்பொழுதே பின்தொடர்ந்துபோய், ஆதியோடந்தமாக நடந்த அதிசயங்களை யெல்லாம் அடிக்கடி யறிந்துவந்து அரசனுக்கு அறிவித்துக்கொண்டே யிருந்து கடைசியில் காதிலே நாராசத்தைச் செருகினதுபோல அடைப்பக்காரன் தங்களுக்குச் சவரம்பண்ண வருகிறானென்றும் சொன்னார்கள். அச்செய்தியை அரசன்கேட்டு அடைப்பைக்காரன் மெய்யாய் அம்பட்டன் தானென்று நிசயித்து, இந்த மானக்கேட்டுக்கு என்னசெய்யலாம், அரைக்காசுக்குப் போனமானம் ஆயிரம் பொன் கொடுத்தாலும் வாராதே" என்று ஏக்கங்கொண்டிருந்தான்.

இப்படி யிருக்கையில் "உகிர்சுற்றின்மே லுலக்கை விழுந்தாற்போல" பின்னும் அதிககலக்கமுண்டாக, அடைப்பைக்காரனும் அம்பட்டனும் அங்கே வந்து வணங்கி நின்றார்கள். அவர்களைப் பார்த்தபொழுது அரசன் மிகவும் நடுங்கித் ஐ[illegible]ம் விடாமல்" ஆனதாகிறது, இன்னமும் அறிவோமென்று கம்பரை நோக்கி, என்ன சமாசாரம் என்றான். அவர் தமக்கும் அம்பட்டனுக்கும் பாகம் பிரிந்த சமாசாரத்தைச் சொல்லி, அந்தப் பாரிக்கத்தையும் சேரன்

முன்பாக வைத்து, " ஐயனே ! என் தம்பி இருபது வருஷ காலம் தன் முறையாக ஊழியஞ்செய்துவந்தானே, இனி இருபது வருஷம் என் முறையாகத் தங்களுக்கு ஊழியஞ் செய்யும்படி உத்தரவுபெறவந்தேன்" என்றார். அதற்கு அரசன் நாவிதன் கருத்தை அறிந்துகொண்டு கம்பரை நோக்கி, "நல்லது உன்னிஷ்டப்படி யாகட்டும்" என்றார். அதுவரையில் வித்வான்களும் அம்பட்டனுக்கு 'நீ எடுத்த காரியத்தில் என்ன நஷ்டம் வந்தாலும் வரட்டும்; பயப்படாதே; சலியா முயற்சிகொண்டு சாதிக்கவேண்டும்' என்று ரகசியத்தில் உறுதிப்பாடு சொல்லிக்கொண்டே வந்தார்கள். அவனும் 'உங்கள் அபீஷ்டப்படி அடைப்பைக்காரனும் அரசனும் செய்த அதர்மத்தினாலும் உங்கள்தர்மத்தினாலும் என் அதிர்ஷ்டத்தினாலும் காரியம் கைகூடிவந்திருக்கிறது' என்று பிரதி சமாசாரஞ்சொல்லி யனுப்பிக்கொண்டே யிருந்தான். அது நிற்க,

அதன் பிறகு கம்பர் சரஸ்வதியை மனதிலே தியானித்து என் தாயே! கலைவாணி! இந்த ஆபத்துகாலத்தில் அடியேனைக் கைவிடாது ரட்சிக்கும்பொருட்டுத் திருவுளமிரங்கி உனது இடது பாதச்சிலம்பை அருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார். அவர் பிரார்த்தித்தபடி நாமகள் அனுக்கிரகித்ததனால் அவளுடைய வச்சிரச் சிலம்பொன்று கம்பர் அக்குட் சந்தில் வந்திருக்க, அதை எடுத்துச் சேரனுக்குக் காண்பித்தார், அது தகதக வென்று கண்கூசும்படி ஜொலிப்பதுகண்டு, அரசன் " இதேது" என்ன அவர் "மகாப்பிரபு ! ஒரு விண்ணப்பம்; இந்த நாவிதனும் நானும் தூரமல்ல, சிற்றப்பன் பெரியப்பன் பிள்ளைகள்; இவன் தகப்பனும் என் தகப்பனும் ஒரு தாய் வயிற்றிற் பிறந்த சகோதரர்கள்; இவர்களும் நாங்களும் பூர்வம் ஏக குடும்பஸ்தரா யிருந்தோம். அப்பொழுது எங்களுக்குள் பாகம் தீரவில்லை. சில காலத்திற்கு முன்பு அகஸ்மாத்தாய் சம்பவித்த கலகத்தில் இவர்களும் நாங்களும் பிரிந்துபோக வேண்டி வந்ததனால், வீட்டுத் தட்டு முட்டு முதலானவை

களைப் போட்டது போட்டபடி கைவிட்டுப்போகிற அவசரத்தில் எங்கள் பெரியவர்கள் அந்நாளில் தங்களைப்போன்ற பிரபுக்களுக்கு ஊழியஞ்செய்து சம்பாதித்த இந்த விலையுயர்ந்த சிலம்புகள் மாத்திரம் கைக்குச் சுளுவா இருந்ததனால் இவர்களொன்றும் நாங்களொன்றுமாகக் கையோடே காவலாய்க் கொண்டுபோய் விட்டோம்; இழிகுலஸ்தரும் எளியவர்களுமாகிய எங்களுக்கு இப்படிப்பட்ட சிலம்பேன்? இது சக்கிராதிபதியா யிருக்கின்ற தங்களுக்கே தக்கது. இதைத் தாங்கள் கிருபைசெய்து கைப்பற்றிக்கொண்டு எங்கள் தம்பி வசத்திலிருக்கிற இதன் ஜதையான மற்ற சிலம்பையும் வாங்கி இரண்டையும் ராஜமகிஷியாகிய அம்மாவுடைய அழகிய காலிலிட்டால் நாங்கள் கண்குளிரத் தரிசிப்போம்" என்றார்.

ராஜா அந்த ஒற்றைச் சிலம்பைக் கையிலே வாங்கிப் பார்த்து அதிசயப்பட்டு "அடா! உன்னிடத்தி லிருக்கிற சிலம்பையும் கொண்டுவா பார்ப்போம்" என்று அம்பட்டனுக்குக் கட்டளையிட்டார். அவன் இதைத்து "கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டாற் போல வந்துவிடிந்ததே" என்று திகில்கொண்டு கால்கைகள் உதறலெடுக்க, வாய்குழற, 'இல்லை சுவாமி!' என்றான். கம்பர், "அடா தம்பி! அது நமக்கேன், அம்மாவுக்காகும், சும்மாகொடுத்துவிடு" என்றார். அவன் 'இல்லை அண்ணா' என்றான். அத்தருணத்தில் அரசன் பக்கத்திலிருந்த ராணி, அதைத் தனக்கு வாங்கிக்கொடுக்கவேண்டுமென்று தன் நாயகனுக்குச் சமிக்கை காட்டினாள். சேரன் அதுபற்றி மறுபடி நாலைந்து ஆவர்த்தி "சிலம்பைக்கொண்டுவா" என்று வற்புறுத்திச் சொல்லியும், அவன் முன் சொன்னபடியே 'இல்லை' என்ன, கம்பர் "அடா தம்பி! "கள்ளிக்கு முள்வேலியும், கழுதைக்குக் கடிவாளமும்" எதுக்கு? அதுபோல மயிர் வினைஞராகிய நமக்கு வச்சிரச் சிலம்பேன்?" "குடிக்கிறது கூழ் கொப்புளிக்கிறது பன்னீரா!"? "எடுக்கிறது சந்ஜதக்தோபாளம் ஏறுகிறது தந்தப்பல்லக்கா?" வேண்டாம் எடுத்துக் கொடுத்துவிடு" என்ன, அவன் 'சத்தியமா யில்லை'

என்றான். ராஜா "இவன் பரிச்சேத மில்லையென்று ஆணையிடு கிறானே" என்ன, கம்பர் "சுவாமி! இவன் மிகவும் கையழுத்தக்காரன்; சிறுவயதிலேயே இவனுடைய சுபாவம் அஞ்சாமற் பொய்யாணை யிடுகிறது தான், பொய்ச்சத்தியம் இவனுக்குத் தயிருஞ் சோறும், இப்படி சாந்தமாய்க் கேட்டாற் கொடுப்பானோ? மிதித்துப் பிடுங்கினா லல்லாமல் "மயிலே மயிலே ஓர் இறகு கொடு" என்றாற் கொடுக்குமா? அது போல, இவனைக் கேட்கிறபடி கேட்கவேண்டும்" என்றார். தக்ஷணமே அரசனுணையால் வெட்டிப் புளிய * மலார்க் கட்டு வந்து விழுந்தது. அவனைப் பிடித்துக் கம்பத்தில் இறுகக்கட்டி அப்புளிய மலாரைக்கொண்டு உடம்பெல்லாம் உதிரமொழுகும்படி பொத்தினார்கள். அம்பட்டன் அடிபொறுக்க மாட்டாமல் 'கட்டவிழ்த்து விட்டால் உள்ளதைச் சொல்லுகிறேன்' என்றான்.

என்ற மாத்திரத்தில் அவனை அடியாமற் கட்டவிழ்த்து விட்டுக் கேட்க, அவன் அம்பலத்திற் பொதிய விழ்த்தது போல யதார்த்தத்தைச் சொல்லிவிட்டான். எப்படியெனில், 'இவரெங்கள் தமயனுமல்ல, நானிவர் தம்பியுமல்ல. இவருடைய பூர்வோத்தரமே எனக்குத் தெரியாது. "குரங்கு குட்டிகையைத் தோய்க்கிறது போல" இந்தச் சமஸ்தானத்து வித்வான்கள் இவர்மேற் பொறாமையால் என்னைக்கொண்டு இப்படி யெல்லாம் செய்வித்தார்கள்; எனக்கு அவர்களெழுதிக்கொடுத்த உடன்படிக்கை இதோ இருக்கிறது பாருங்கள்' என்று, அதை அரசன் சமுகத்திற் கொண்டுவந்து வைத்து, மற்று மவர்கள் செய்யத்துணிந்த துரோகங்களை யெல்லாம் பட்டோலை படிப்பதுபோலப் பகிரங்கமாகச் சொன்னான். சோரன் இது இவனால் விளைந்ததன்று, வித்வக் காய்ச்சலாற் சம்பவித்தது. "எய்கிறவனெய்தால் அம்பென்ன செய்யும்" என்று அம்பட்டன் மேல் மூண்ட கோபத்தை ஒருபடியாகத் தணித்துக்கொண்டு, அந்த வித்வான்களுடைய துரோக சிந்தையைக் குறித்து நெஞ்சுபுழுங்கி நம

* வளாரை மலார் என்பது மரூஉ.

மாலே பரிபாலிக்கப்பட்ட இவர்கள் நமக்கே தீங்கு செய்தார்களல்லவா வென்று அவர்களை யெல்லாம் கழுவேற்ற நிருணயித்தான்.

அதையறிந்து அவ்வித்வான்கள் இந்தப் பேரிடிக்கு எவ்விதத்தால் தப்புவது,



"அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்."

...றபடி யல்லவோ சம்பவித்ததென்று பயந்து, யாவரும் கூடி ஆலோசித்துத் தப்புவதற்கு வேறோர் உபாயமுங் காணாமையால், தங்கள் தங்கள் மனைவிமார்களை அடைப்பைக்காரன் காலிலேபோய் விழுந்து வேண்டிக் கொள்ளும்படி அனுப்பினார்கள். அந்த ஸ்திரீகள் தலைவிரிகோலமாய் வந்து புலம்பி முன்தானையை விரித்து 'மாங்கல்ய பிட்சை தரவேண்டும்' என்று கேட்க, கம்பர் அவர்களுடைய துக்கமுகத்தைக் கண்டு, நெஞ்சுருகி, அழுகுரலைக் கேட்கச் சகிக்காமல் இரக்கங் கூர்ந்து, "பாக்கியவதிகளே! அழவேண்டாம், உங்கள் நாயகன்மார்களுடைய பிராணனை நான் அவசியம் காப்பாற்றுவேன், நீங்கள் அஞ்சாதிருங்கள்" என்று அபயப்பிரதானம் பண்ணி, அவர்களை அனுப்பிவிட்டு மகாராஜனைப் பார்த்து, "ஓ! ராஜசேகரா! உலகத்தில் மாதா, பிதா, குரு, புரோகிதர், புராணிகர், வேதப்பிராமணர், தபசிகள், வித்வஜனர், விகடகவிகள், சுத்தவீரர், தானபதிகள், தூதர்கள், சுற்றத்தார், பிணியாளர், வழியவர், பாலர், அடைக்கலம் புகுந்தோர், போகமாதர் என்னும் இந்தப் பதினெட்டுப் பெயர்களும் செய்த குற்றத்தைப் பாராட்டி அதற்காக அவர்களைத் தண்டிப்பது அரசர்களுக்கு மனுநீதி யன்று ஆதலாலும், மேலும் அவர்களும் நானும் வித்வான்களா யிருப்பதனால், அவர்களுக்கு வந்த அவமானம் எனக்கும் வந்ததாம் ஆனையாலும், தாங்கள் கிருபைசெய்து அவர்கள் தெரியாமற் செய்த குற்றத்தை மன்னிப்பதே தங்கள் கௌரவத்திற்கும், தயைக்கும் தகுதி" என்று கோபம் தணியும்படி நயவசனமாகச் சொல்ல, அரசன் சீற்றமாறி விதித்த தண்டனையை

மன்னித்து விட்டுக் கம்பரை நோக்கி "இந்த வச்சிரச் சிலம்பு உமக்கெப்படிக் கிடைத்தது" என்றான்.

கம்பரானவர், "கேளீர் சக்கிரேசுரரே! இச்சிலம்பைத் தரிக்கின்ற உத்தமியைத் தாங்கள் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்பம் தங்களுக் குண்டாயிருந்தால் அழைப்பிக்கிறேன்" என்று சொல்லி, விசாலமாகிய ஒரு மண்டபத்தில் முத்துப் பந்தல் சிறப்பித்து, சந்தனத்தைப் பன்னீரிற் குழைத்து மெழுகி, நவரத்நப் பொடிகளாற் கோலமிட்டு, வாழை கமுகுகள் நாட்டி, மலர்மாலை தூக்கி, நெய்விளக்கேற்றி, முற்பக்கத்தில் முகமல்திரை போட்டு, அப்பந்தலுக்குள் மரகத விமானம் ஒன்றை அலங்கரித்து வைத்து, அதில் மாணிக்க பீடம் அமைத்து, அதன்மேல் தங்கக் கலச ஸ்தாபனஞ் செய்து, அக்கலசத்தில் ஜகன் மாதாவாகிய சாரதையை ஆவாகனம் பண்ணி, சங்க முதலிய வாத்தியங்கள் கோஷிக்க, கந்த புஷ்ப தூப தீப நைவேத்தியங்களைக்கொண்டு ஆகம விதிப்படி பக்தி விசுவாசத்துடனே அர்ச்சித்துப் பூசித்து அஞ்சலித்து, கலைமகள் மூலமந்திரத்தைப் பிரணவ நமக சகிதமாகப் பற்பல உருச்செபித்து, திரைப்புறத்திலிருந்து நாதனமாகச் சரசுவதி மேல் ஓரந்தாதி பாடியும், வசனரூபமாகத் தவளஸ்வரூபி! தவள பத்மாசனி! தவளபூஷணி! புவனகாரணி! புஸ்தகபாணி! என்றும் ஸ்தோத்திரித்த மாத்திரத்தில், அப்பந்தலின் திரைக்குள் அந்த ஞானசிரோமணியாகிய பரதேவதை சர்வாபரண பூஷிதையாய் எத்திசையிலும் மேக்கியமான மந்தார பாரிசாத திவ்விய பரிமள வாடை வீசும்படி எழுந்தருளித் தாம் தாமென்று தாள மத்தள முழுங்க, வலதுகை மகரவீணை வாசிக்க, இடதுகை அபிநயிக்க, ஒற்றைக்காற் சிலம்பு கலீர் கலீரென்று சப்திக்க, அடிபெயர்த்து அற்புத நடனஞ்செய்யத் தலைப்பட்டாள். அதை அரசன் முதலானவர்கள் அறிந்து சாஷ்டாங்கமாக விழுந்து பணிந்து பிரமானந்தத்தில் மூழ்கிப் பரவசமானார்கள்.

அப்பொழுது நாமகள், "எங்கடா கம்பா! சிலம்பு" என்றாள்; என்றவுடனே கம்பர் அரசன்கையிலிருந்த சிலம்

யை வாங்கிச் சாரதையின் இடது பாதத்திற்கு நேரே நீட்டினார், அஃது அந்தத் திருவடியிற் போயேறின மாத்திரத்திற் கலைவாணி அந்தர்த்தானமாய்ப் போய்விட்டாள்; பிறகு சேரன் கம்பரைப்பற்றிச் சமுசயித்து, "நீரார்? உம்முடைய பூர்வோத்தர மென்ன? உண்மையைச் சொல்லவேண்டும்" என்று வேண்ட, அவர் தாம் இன்னாரென்பதும் தமக்குஞ் சோழனுக்கும் விரோதமுண்டானதும், அவனுடைய தேசத்தை விட்டுத் தாம் வந்ததும், மார்க்கத்தில் நடந்த செய்தியும் சாங்கோபாங்கமாகச் சொல்லக்கேட்டு அதிக சந்தோஷமாய் ஆச்சரியப்பட்டு, மகாவித்வானாகிய அவர் தனக்கு அடைப்பைத் தொழில் செய்ததினிமித்தம் விசனமுற்று, அன்றுதொட்டு அவரை முன்னிலும் மிக்க செல்வமும் சிறப்புமாக வைத்திருந்தான்.

அவ்வண்ணமாக இவர் சேரனிடத்தி லிருக்க சோழன் நெடுநாளாகக் கம்பர் முகத்தைக் காணாமையால், தாய்முகத்தைக்காணாத சிசுப்போலவும், மழைமுகத்தைக் காணாத பயிர்போலவும், கணவர்முகத்தைக்காணாத கற்புடை மடவார்போலவும், போர்முகத்தைக் காணாத சுத்தவீரர்போலவும், கொடுப்போர் முகத்தைக் காணாத இரப்போர் போலவும், ஏக்கமுற்று, ஐயோ! நான் தீர்க்காலோசனை பண்ணாமலும், கொஞ்சமாவது தாட்சணிய மில்லாமலும், கண்டித்துப் பேசி என் தேசத்தைவிட்டுப் போய்விடும் என் மூதனலல்லவோ, வித்வரத்நமாகிய கம்பர் என் சமுகத்தைவிட்டு விலகிப்போனார். இனி என்றைக்கு அவர் முகத்தைநான் காண்பேன்? அவரில்லாத சபை தாமரையில்லாத தடாகமும், சந்திரனில்லாத வானமும், நதியில்லாத நாடும், துதியில்லாத நாவும், ஞானமில்லாத கல்வியும், கற்பில்லாத பெண்டிரும், தெய்வத்தியான மில்லாத நெஞ்சும், புத்திரபாக்கிய மில்லாத இல்வாழ்க்கையும் செங்கோலரச னில்லாத நகரமும் போலச் சிறப்பிழந்திருக்கின்றதே; அவரெங்கே போனாரோ? எவ்விடத்தி லிருக்கின்றாரோ? இன்ன தேசத்தி லிருக்கிறாரென்று

எந்த மகானுபாவனாவது வந்து சொல்லக்கேட்பேனோ? என்று தன் சபையாருடனே சொல்லித் துக்கப்பட்டு, அஷ்டதிக்கிலுள்ள அந்தந்தத் தேசங்களுக்குத் தூதர்களை அனுப்பிப் பலநாள் தேடியும் செய்திதெரியாமல் தடுமாறிப் பின்பு தெய்வகதியாய்ச் சேரமகாராஜனுடைய சமஸ்தானத்தி லிருக்கிறாரென்று சிலர் வந்துசொல்லக் கேள்விப்பட்டு அதை உள்ளபடிதெரிந்துகொண்டு, இந்த நிருபங் கண்ட நாழிகைக்குத் தயைசெய்து வரவேண்டுமென்று கம்பருக்கு ஒரு நிருபமும், தாமசமில்லாமல் எப்படியாவது தாம் கிருபைகூர்ந்து கம்பர் கவிச் சக்கரவர்த்தியை அனுப்புவிக்க வேண்டுமென்று சேரனுக்கு ஒரு விண்ணப்பமுமெழுதி ஓராள் வசம் அனுப்பினான்.

கம்பர், சோழன் தமக்கு எழுதிய நிருபத்தைச் சேரனுக்குக் காட்டி, "சோழராஜனிடத்திற்குப் போகும்படி நமக்கு உத்தரவுகொடுத் தனுப்பவேண்டும்" என்ன, சேரனும் தனக்குச் சோழன் அனுப்பிய கடிதத்தைக் கம்பருக்குக் காண்பித்து, "நீரிங்குச் சிலகாலம் வந்து வசிக்கும்படி நேரிட்டது நான்செய்த புண்ணியமோ" என்றும் "இப்பொழுது நீர் திடீரென்று பிரிந்துபோகவேண்டி வந்தது எனது நிர்ப்பாக்கியந்தானோ" என்றும், "நீர் சேர்ந்திருந்தமையால் என்சபை இந்திரசபை போலச் சிறப்புற் றிருந்ததே" என்றும் நீர் நீங்கிவிட்டால் இனி அது யானையாளில்லாத இல்லம்போல அழகிழந்திருக்குமே" என்றும், "உம்மைப்போல எனக்குச் சாதுரியமாகவும் செவிக் கின்பமாகவும் ராமாயணப் பிரசங்கம் செய்பவர்கள் வேறே யார் இருக்கின்றார்கள்" என்றும், எனக்கித்தனை கோரமான துக்கம் சம்பவித்ததே" என்றும் விசனப்பட்டான். கம்பர் அரசனைப்பார்த்து "விப்ரயோசகனாகிய என்னைக் குறித்துத் தாங்கள் இவ்வளவு கவலைப்பட்டால், மன்னுயிருந் தன்னுயிராகப் பாவித்து உலக பாரத்தை யெல்லாந் தாங்குவதன்றி, பரதேசத்திலிருந்து நிராதரவாய் வந்தடுத்த எளியேனையும் அன்ன வஸ்திராதிகள் தந்து பெற்ற தாய்

பிள்ளையைப் பரிபாலிப்பதுபோல ஆதரித்துவந்த பரமோ பகாரியாகிய தங்களைப் பிரிவதுபற்றி நா னெவ்வளவாய் விசனப்படவேண்டும், அல்லாமலும் உலகத்தில் விசனமில்லா திருப்பவர் ஒருவருமில்லை'' "விஷயம் சிறிதாயினும் பெரிதா யினும், அதனால் விளையும் காரியமாகிய துக்கமோ அவரவர் ஸ்திதியை நோக்குமிடத்தில் ஒரு தன்மையேயாம்'' என்றும் சொல்லி, அந்த அனைவர்க்கும் ஒரு தன்மையா மென்பதற் குத் திருஷ்டாந்தமாக,

"பாலுக்குச் சர்க்கரை யில்லையென் பார்க்கும் பருக்கையற்ற
கூழுக்குப் போடவுப் பில்லையென் பார்க்குங் குற்றித்தைத்த
காலுக்குத் தோற்செருப் பில்லையென் பார்க்குங் கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை யில்லையென் பார்க்கும் விசனமொன்றே."

என்ற பாடலையுங் கூறி, அவன் துக்கத்தை ஆற்றினார். அப்புறம் சேரன் கம்பரைப் பலவிதத்திலும் கொண்டாடி, அரசர்களுக்குச் செய்வதுபோல அவருக்குச் சகல வரி சைகளுஞ் செய்து, தன் மந்திரி பிரதானிமார்கள் சாமரம் போட்டுக்கொண்டு சம்பிரமத்துடனே அவரை அழைத் துப்போய்ச் சோழநாட்டில் விட்டுவரும்படி கட்டளையிட் டான்.

கம்பர் சேரன் கொடுத்த சித்திரப் பொற்பட்டாடை யை உடுத்து, நவரத்ந பூஷணங்களைத் தரித்து, ரத கஜ துரக பதாதிகள் புடைசூழ, யானைமேல் ஆரோகணித்து, தவளக்குடை கவிக்க, ஆலவட்டம் அசைக்க, அஷ்டாதச வாத்தியங்களும் முழங்க, விருதுகள் பிடிக்க, எச்சரிக்கை படிக்க, மந்திரி சாமந்தர்கள் சாமரைபோட, அரசர்கள் அஞ்சலிக்க, மோகனமாதர் பரதநாட்டியமாட, பாணர் கள் சங்கீதம் பாட, அநேகவித ஆடம்பரத்துடனே பிர யாணப்பட்டபொழுது, சேரமகாராஜன் சிலதூரம் கூட வந்து உபசரித்து வழிவிட்டுத் திரும்புகையில், கம்பரை நோக்கி, "நீர் சோழனைவிட்டுப் பிரியும்பொழுது செய்து வந்த பிரதிக்கினையை மறந்துவிட்டீர் போலக் காண்கிற தே'' என்று எச்சரிக்க, அவர், நான் மறக்கவில்லை, அங்கே

போய்ச் சேர்ந்தபிறகு சமயமறிந்து தங்களுக்குக் கடிதமெழுதுகிறேன், அப்பொழுது தாங்கள் தயை செய்யலாமே யொழிய இப்பொழுது அவசிகமில்லை" என்ன, அதற்கவன் "அந்தப்படி செய்வீராகில், முன்பு நீர் நமக்குச் செய்தது போலவே நாம் உமக்கு அடைப்பைக்காரனாக வந்து அந்தக் கடனைச் செலுத்துவோம்" என்ன, கம்பர் "நல்லது" என்றவனைப்பற்றிதுடைய அனுமதி பெற்று, அத்தேசத்தைவிட்டுத் திரம் பாடச்சென்ற சோழநாட்டுக்குச் சமீபமாய் வருமளவில் கம்பரையும் ஒட்டக் கூத்தனித் துறைவனாகிய சோழராயும் தனித்தனியே பாடக்கொண்டு அழைத்து வந்து சித்திரமயமாகிய ஒரு சிங்காசனத்தில் இருக்கச்செய்து, அவர் முகத்தைநோக்கிக் கண்களிக்க மனங்களித்து, [illegible] னைவிட்டுப் பிரிந்த பின்பு நடந்தவைகளை யெல்லாஞ் சொல்லக்கேட்டுத் துக்கித்தும் சந்தோஷித்தும் அதிசயித்தும் இரண்டொருநாள் சென்றபின்பு "நீர் இங்கிருந்து போம் பொழுது செய்த பிரதிக்கினை நிறைவேறுமற் போயிற்றே" என்று பரிகாசமாய்க் கேட்க, கம்பர் அஃது இன்றெட்டாம் நாள் நிறைவேறுமென்று சொல்லிச் சேரனுக்குக் கடிதமெழுதினார்.

அதுகண்டு அவன் அடைப்பைக்காரனாக வேடம்பூண்டு தன் பட்டத்துப் புரவிமேலேறி, அதி சீக்கிரமாக அந்த எட்டாம்நாள் வந்து, சோழன் சபையில் கம்பர் பக்கத்திற் சேர்ந்துநின்று, அவருக்குத்தாம்பூலம் மடித்துக்கொண்டிருந்தான். அவன் முகக்குறியைச் சோழன் மகள் உற்றுப்பார்த்து, இவன் [illegible]னென்று தெரிந்துகொண்டு, தன் பிதாவுக்குக் குறிப்பாகத் தெரிவித்தாள். அதையறிந்து கம்பர் சேரனுக்குக் குறிப்பிக்க, அவன் அந்தக்ஷணம் அவ்விடத்தைவிட்டு நீங்கிக் குதிரையேறித் தன் தேசம்போய்ச் சேர்ந்தான். பிறகு சோழன் "உம்முடைய பக்கத்திலிருந்தவன் ஆர்?" என்ன, கம்பர் "அவன்தான் சேரமகாராஜன்" என்ன, ஏன் [illegible]னை அனுப்பிவிட்டீர்?" என்ன, உமக்கு மேலாயிருந் [illegible]மிடத்தில் கப்பம் வாங்குகிற மன்னர்

மன்னன் உமதருகில் தனது பரிவாரங்களை விட்டுத் தனி யே வந்திருக்கையில் அவனை நீர் பிடித்துச் சிறைப்படுத்தி அவனுடைய ராச்சியத்தைக் கைப்பற்றிக் கொள்வது எளி தென் றல்லவோ அனுப்பிவிட்டேன்" என்ன, சோழன் "அப்படியா! நல்லது, அவன் உமக்கு மடித்துக் கொடுத்த வெற்றிலைச் சுருளை ஒவ்வொன்றாக வாங்கி விரற் சந்தில் அடுக்கிவைத்துக்கொண் டிருந்ததேயல்லாமல் நீர் தரித்துக் கொள்ளவில்லையே, அஃதென்ன தன்மையா" யென்ன, அவர் "அற்ப ருக்கு வாழ்வு வந்தால் ... டைபிடிப் பார், நானப்படி நடக்கிறேனென் பார்க்கும் பருக்கையற்ற ... அவர் என்னைக் கௌரவப்படுத்துமபொருட்டு அபிமானித்து அவ்விதமாகச்செய்ய நான் அது தெரியாமல் தலைவிரித் துக்கொண் டாடலாமா? வாங்கித் தரித்துக் கொள்வது மரியாதையா?" என்ன, சோழன் கம்பருடைய வித்தியா சாமர்த்தியத்தைப் பார்க்கிலும், ஒழுக்கத்தையும் பார மார்த்திக ... சாதுர்த்தியத்தையும், லௌகிக யுக்தியையுங் கண்டு மிகவும் கொண்டாடினன்.



## கம்பர் இராமாயணம்பாடி

### அரங்கேற்றியது.

மாட்சிமைதங்கிய திருவெண்ணெய் நல்லூரில் சுமார் ஆயிர வருஷத்துக்கு முன் வசித்திருந்த அந்தக் கிராமாதிப தியும் சனம்பொருந்திய பிரபுவுமாகிய சடையப்ப முதலியார் என்பவர் தமிழ் வித்துவான்களுக்குள் அதிசிரேஷ்டராகிய கம்பரை நோக்கி, "ஐயா! நீர் பிரபல கவிஞரா யிருக்கிற படியால் உமது பெயர் நெடுங்காலம் நிலைபெற்று நிற்கும் படி சமஸ்கிருத பாஷையிலிருக்கின்ற ஸ்ரீமத் ராமாயணம் என்னும் மகா காவியத்தைத் தமிழ்ச் செய்யுளாகச் செய் தால், லோகோபகாரமா யிருப்பதுமன்றி உமக்கும் கீர்த்தி மாம்" என்றுசொல்ல, கம்பர் "நல்லது அப்படியே செய் கிறோம்" என்று சொல்லி, அநேகநாளா பொன்னுஞ் செய் யாமற் காலஹரணம் பண்ணிக்கொண்டு வந்தது கண்டு

அவர் நாம் சொல்வது இவருக்குஉறைக்கவும் அக்கறை பிறக்கவுமில்லை; ஆதலால், "சடையைப் பிடித்திழுத்தாற் சந்நியாசி கிட்டவருவான்" என்கிறபடி குலோத்துங்க சோழனைக்கொண்டு சொல்லுவித்தால் ராஜாதிகாரத்திற்கு அஞ்சியாவது நமது அபிப்பிராயத்தை நிறைவேற்றுவா ரென்று நினைத்து அரசனுக்கதை அறிவித்தார்.

அரசன் அதைப்பற்றித் தனக்குள்ளே யோசித்து, நாம் கம்பரை மாத்திரம் பாடச்சொன்னால் எவ்விதத்திலுந் தாமதப்படும். கம்பரையும் ஒட்டக் கூத்தரையும் வரவழைத்து இருவரையும் தனித்தனியே பாடச்சொன்னால் அவர்கள் "கூழுக்கு மாங்காய் தோற்குமா?" என்பதாக ஒருவருக்கொருவர் முந்தவேண்டிச் சீக்கிரத்திற்பாடி முடிப்பார்களென்று அவ்விருவரையும் அழைப்பித்துச் சொல்ல, ஒட்டக்கூத்தர் பாலகாண்டமுதல் ஐந்து காண்டம்பாடி யுத்தகாண்டத்திற் கடல்காண் படலமட்டும் பாடினார். அதுவரையிற் கம்பர் தெய்வவணக்கமும்பாட ஆரம்பிக்கவில்லை யென்பதை முதலியாரறிந்து வேந்தனிடத்திற் போய்க் "கம்பரையும் ஒட்டக் கூத்தரையும் தாங்கள் இராமாயணம் பாடச்சொன்னபின்பு அவர்களை நாம் ஏனென்று கேளாதிருப்பது தர்மமா?" என்ன, சோழன் கவிஞரிருவரையும் வரவழைத்து "இராமசரித்திரம் எவ்வளவு பாடியாயிற்று?" என்ன, ஒட்டக் கூத்தரிலும் அதிகமாகப் பாடினதாய்ச் சொல்லவேண்டுமென்று நினைத்ததனால், அத்தருணத்திற் பொய் பேசுவது ஆவசிகமா யிருந்தது. அவர் நாமிப்பொழுது சொல்லும் பொய் பிறருக்குத் துன்பத்தைச் செய்யாதாதலால் நமக்குத் தோஷமில்லை.

"வாய்மை யெனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமையிலாத சொலல்"
"பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்றபடி யாமில்லாததைச் சொன்னாலும் மெய்யேயாகும் என்று குறித்துக் "கடல்காண் படலத்திற்கு அப்புறத்துள்ள திருவணைப் படலமட்டும் பாடினேன்" என்றார்.

"அப்படியா? அதைச் சற்றே பிரசங்கியும் கேட்போம்" என்று அரசன்சொல்ல, கம்பர் உடனே அதைமாத்திரம் எழுபது செய்யுளிற் பாடிப் பிரசங்கிக்கத் தொடங்கி, சமுத்திரத்தில் வாராவதி கட்டும்பொருட்டுச் சுக்கிரீவன் ஆஞை யால் வானர வீரரும் படைத்தலைவர்களும் காட்டிலுள்ள மலைகளைப் பிடுங்கிக்கொண்டு வருவதைப் பற்றிப் பேசுமிடத்தில்,

> "குமுத னிட்ட குலவரை கூத்தரில்
> திமித மிட்டுத் திரியுந் திரைகடல்
> துமித மூர்புக வானவர் துள்ளினார்
> அமுத மின்னு மெழுமெனு மாசையால்."

என்ற பாடலைச்சொல்லி, "குமுதனென்னும் படைத்தலைவனொருவன் பூமியினின்று வேரோடு பிடுங்கி அந்தரத்திற் பந்தாடிக்கொண்டே வந்து, மற்றவர்களைப்போலத் தெய்வத்தச்சனுகிய நளனென்பவன் கையிற்கொடாமல், தானே விட்டெறிந்த பிரமாண்டமாகிய மலையானது வந்து விழுந்து கூத்தாடிகள்போலத் திமிதம் என்று ஒலித்துச் சுழலுதலால் நுரைத்துத் திரைத்துக் குமிழியிட்டெழுந்த கடல் நீர்த்துளிகள் விசையாய்வந்து தங்களிருப்பிடமாகிய சுவர்க்கத்திற் பிரவேசித்ததை அங்குள்ள தேவர்கள் பார்த்து, பூர்வகாலத்தில் நம்மினத்தாராகிய தேவர்களும் ஸ்ரீ மகாவிஷ்ணுவும் கூடி ஒரு மலையைமாத்திரங் கொண்டுபோய்ப் போட்டு அமிர்தமெழும்படி பாற்கடலைக் கடைந்தார்கள். இப்பொழுது அந்த விஷ்ணுவே ஸ்ரீராமனுக அவதரித்தும் அத்தேவர்களே வானரர்களாகச் செனித்துவந்து அநேகமலைகளைப் பிடுங்கி இந்தத் தென் சமுத்திரத்திற் போடுகிறார்கள். இனி யிதையுங் கடைவார்கள். இதில் முன்போலச் சொற்பமாகவல்ல, அமிதமாக அமிர்தம் உண்டாகும், நாமெல்லாம் சலப்பிராயமாய் வேண்டியமட்டும் புசிக்கலாம் என்று ஆசைகொண்டு தலைதெரியாத சந்தோஷத்தை யுடையவர்களாய்த் துள்ளியாடினார்கள்" என்றார்.

அதுகேட்டு ஒட்டக்கூத்தர் கம்பரை நோக்கி "துளியைத் துமியென்றீரே, இது நீகண்டு திவாகரங்களில் வழ

ங்கி வருகிறதா? அல்லது ஏதாவது இலக்கிய பிரயோகங் கண்டதுண்டா?" என்ன, கம்பர் "அவைகளிலெல்லா மில்லை, உலகவழக்கு" என்ன, அவர் "கொடிகற்றவன் இடறி விழுந்தால் அதுவும் ஒரு வரிசை" என்பதுபோல இவர் துளியைத் துமியென்று வழுவாய்ச் சொல்லிச் சமாளிக்கும்படி உலக வழக்கெனச் சாதிக்கிறாரென்றெண்ணி, உலக வழக்கில் வருவது மெய்யானால் அவை மெய்ப்பிக்கவேண்டுமே" என்ன, "நல்லது" என்று பிரசங்க முடிந்த பிறகு கம்பர் வீட்டிற்குவந்து சரஸ்வதியைப் பிரார்த்திக்க, அவள் பிரசந்நமாகி "என்னவேண்டும்?" என, "தாயே! ஜகதாம்பா! பிரமாதி தேவர்களும், வஸிஷ்டர் பராசரர் வியாசர் முதலாகிய மஹாருஷிகளும் பிரார்த்திக்கும்படி அவர்களுடைய மேன்மைதங்கிய நாவினிடத்தில் வீற்றிருக்கின்ற நீ, எளியேனுடைய நாவினுமிருந்து அருளிச்செய்த வண்ணம், 'நானுமறியேன் அவளும் பொய் சொல்லாள்' என்பதாக, அடியேன் சொன்ன 'துமி' என்பதை ஒட்டக்கூத்தன் ஆக்ஷேபித்து மெய்ப்பிக்க வேண்டுமென்று போராடுகிறானே, அதற்கென்ன செய்கிறது? என, கலைமகள் நாளைக்குப் பொழுதுவிடியச் சாமநேரத்தில் அவனை இடைத்தெருவில் அழைத்துவா" என்று சொல்லிப்போனாள்.

கம்பர் அப்படியே ஒட்டக்கூத்தனையும் குலோத்துங்க சோழனையும் அவ்விடத்திற்கு அழைத்துப்போகையில், ஒரு வீட்டில் வேதமே தயிர்த்தாழியும், வேதாந்தமே தயிரும், சாஸ்திரமே தயிர்கடையும் மத்தும் கயிறும், இதிகாச புராணங்களே சிறுபிள்ளைகளுமாய் உருவெடுத்துவர, தான் இடைப்பெண்ணாக வடிவுகொண்டுவந்து அந்நேரத்தில் தயிர் கடைந்துகொண்டிருந்த வாணியானவள் அவர்கள் சமீபத்தில் வருகையில், அவர்களுக்குக் கேட்கும்படி தன் கிட்டவிருந்த சிறுவர்களைப் "பிள்ளைகளே! உங்கள்மேல் மோர்த்துமி தெறிக்கப் போகிறது, எட்டவிருங்கள்" என்று சொல்ல கம்பர் ஒட்டக்கூத்தரைக் "கேட்டீரா?" என்ன, அவர் "சரிதான்" என்று ஒப்புக்கொ

ண்டு, பிறகு " இந்த வீடு குடியில்லாத வீடென்று எனக்கு நன்றாய்த் தெரியுமே, இப்பொழுது ஆரிங்கே வந்திருக்கிற வர்கள் அறிவோம்?" என்று மடியிற் செருகியிருந்த ஜமு தாட்டை உருவிக்கொண்டு ஓடிப்பார்க்கையில், அங்கே ஒரு ஸ்திரீயும் சில சிறு பிள்ளைகளும் தயிர்த்தாழி முத லானவைகளும் பிரத்தியக்ஷமாகத் தமது கண்ணுக்குத் தோன்றினவுடனே மறைந்து போனமையால் " இது சார தையின் திருவிளையாட்டு" என்று கருதி ஆச்சரியப்பட்டுத் திரும்பினார்.

அப்புறம் கிட்டத்தட்ட ஆறு மாசத்துக்குட் கடல் காண் படலத்தினின்று மற்றதையும் ஒட்டக்கூத்தர் பாடி முடித்தார். முடித்தும் அவர்மனத்தில் "கம்பனுக்குச் சரஸ் வதி கடாக்ஷம் விசேஷமா யிருக்கிறது, அதனால் அவன் கவிக்கு முன்னே நமது கவி மகிமைப்படவில்லை" என்று வெறுப்புண்டாகி, ஒருநாள் தாம் பாடிய இராமாயண புஸ்த கத்தைச் சஞ்சிகை சஞ்சிகையாக உருவிக் கிழித் தெறிந்து கொண்டிருக்கையில், வேறோ ஒரு நிமித்தத்தாற் கம்பர் அவ்விடத்திற்குப்போய்ப் பார்த்துக் "கிழித்தெறியப் படு கின்றதே இஃதென்னை?" என, அவர் "நான் பாடின ராமா யணம்" என்ன, இவர் "ஏன் கிழித்தெறிகிறீர்?"என, அவர், "வரகவியேகவி, மற்றைக்கவி என்னகவி?" என்றுசொல்லி, மற்றதையுங் கிழிக்க எத்தனிக்கையில், இவர் அவர் கையி லெடுத்த ஏடுகளைச் சீக்கிரமாய்ப் பறித்துப் பார்த்து, உத் தரகாண்டம் என்று தெரிந்துகொண்டு, கிழிக்க வொட்டா மற் றடுத்து, இராக்கதர்களுடைய பிறப்புவளர்ப்பு முதலா னவைகளை யொழிய வேறொரு விசேஷமும் உத்தரகாண் டத்திற் சொல்லப்படாமையால், அதை நாம் பாடவேண் டுவதில்லை யென்றும், அதற்குப் பிரதியாக இவர் பாடின தையே வைத்துக்கொள்ளலாமென்றும், வைத்துக்கொண் டால் இவர் வாக்குக்கும் நமது வாக்குக்கும் உள்ள தாரதம் மியம் உலகத்தாருக்குத் தெரியவரலாம் என்றும் யோ சித்து ஒட்டக்கூத்தரை நோக்கி " ஐயா! அருமைப்பட்

டுப் பாடினதை ஏன் வீணாகக் கிழித் தெறியவேண்டும்? நான் ஆறு காண்டமாத்திரம் பாடி அதன்பின்னே நீர்பாடிய ஏழாவது காண்டமாகிய இந்த இரண்டாயிரம் பாடலையுஞ் சேர்த்துக்கொள்கிறேன்?" என்றார். "அவர், "அப்படியே செய்யும்" என்றார்.

உலகத்தில் யாராயினும் படித்தாலும் பிறர் கேட்கப் பிரசங்கித்தாலும் விக்கினமின்றி நிறைவேறுவதற்கும், தத்தம் மனோரதம் கைகூடுவதற்கும், பாரதத்தை விராட பர்வத்திலிருந்தும் இராமாயணத்தைச் சுந்தரகாண்டத்திலிருந்தும் ஆரம்பிக்கிறது சம்பிரதாய மாகையால், அவ்வாறே சுந்தரகாண்டத்திலிருந்து நல்லநாட் கொண்டு பாடத்தொடங்கி, அன்றுமுதல் சூரியாஸ்தமன காலத்தில் சந்தியாவந்தனக் கடன் கழித்துவிட்டு, சமஸ்கிருத வித்துவான்களாகிய பிராமணோத்தமர்களைக் கூடவைத்துக்கொண்டு, இராமுழுதும் வான்மீகம், வாசிஷ்டம், போதாயனம், என்னும் இராமாயணங்களையும், மற்ற புராணாதிகளையும் விசதமாகக் கிரமத்துடனே ஆராய்ந் தறிந்துகொண்டு சிறிது நேரம் நித்திரைசெய்து உதயத்திற் கெழுந்து நித்திய கர்மானுஷ்டான முடித்துக்கொண்டு, தம்மிடத்திலுள்ள கற்றுச் சொல்லிகளிற் சிற்சிலர் ஏடுமெழுத்தாணியு மெடுத்து எழுதும்படி ஆளுக்கு ஐம்பது அறுபது எழுபது எண்பதாக அஸ்தமன பரியந்தம் நாளொன்றுக்கு எழுநூறு செய்யுள் விழுங்காடு ஒரு பட்சத்திற்குள் சரஸ்வதியின் அநுக்கிரக விசேஷத்தால் ஸ்ரீராமர் மகுடாபிஷேக வரையிற் பதினாயிரம் பாட்டில் ஆறுகாண்டமும் பூரணமாகப் பாடினார். நாளொன்றுக்கு எழுநூறு கவிவீதம் பாடினாரென்பதைக் குறித்துச் சொல்லிய பாடல்,

"கழுந்த ராயுன கழல்பணி யாதவர் கதிர்மணி முடிமீதே
அழுந்த வாளிக டொடுசிலை ராகவ வபிநவ கவிநாதன்
விழுந்த ஞாயிற தெழுவதன் முன்மறை வேதிய ருடனாய்ந்
தெழுந்த ஞாயிறு விழுவதன் முன்கவி பாடின தெழுநூறே."

என்பதாம்.

இவ்விதமாகக் கம்பர் தாம் பாடின ஆறுகாண்டங்களுடனே ஒட்டக்கூத்தர் பாடிய உத்தரகாண்டமும் சேர்த்துப் பன்னீராயிரங் கவிகளையும் எழுதுவித்துச் சோழன் முதலானவர்களுக்கு இராமாயணம் பாடி முடித்த செய்தியை அறிவித்து, "இது விஷ்ணுபரமாகையால் இதை அவ்விஷ்ணுவின் திவ்ய தேசங்கள் பலவற்றினும் முக்கியமாகிய திருவரங்கம் பெரிய கோயிலில் அரங்கேற்றல் செய்யவேண்டும்" என்று அவர்களனுமதிப்பெற்று ஸ்ரீகோசத்தை (புஸ்தகத்தை) எடுப்பித்துக்கொண்டு ஸ்ரீரங்கத்திற்குப் போய், அக்காலத்தில் அந்த ஸ்தலத்திலிருந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் செய்தி தெரிவிக்க, அவர்கள் மேற்படி காவியத்தில் நரஸ்துதி பண்ணப்பட்டிருக்கிற தென்பதனாலும் மற்றுஞ் சில அபிப்பிராயத்தினாலும் அருவைகொண்டு, அக்கருத்தை வெளிப்படுத்தாமல், "சமஸ்கிருத பாஷையா யிருந்தால் ஒன்றும் யோசனை பண்ணவேண்டிய தில்லை, இது தமிழாதலால் எப்படி இருக்குமோ வென்று எங்களுக்கு சந்தேகமா யிருக்கிறது; நீரோ பிரபல வித்துவான், உமது பாண்டித்தியத்தைக் குறித்தும், யோக்கியதையைக் குறித்தும் சொல்லுகிறதற்கு நாங்கள் அருகர்க ளல்லேம், தமிழிலே மகாவித்துவான்களாக விருக்கிறவர்கள் தில்லை மூவாயிரவரென்னும் தீட்சிதர்களும், மற்றுஞ் சிற்சில பெயர்களு மாதலால், அவர்கள் குற்றஞ் சொல்லாதபடி கொஞ்சம் பிரயாசைப்பட்டாவது அங்கே போய் அவர்களுக்குக் காட்டி அவர்களுடைய கையொப்பம் வாங்கி வந்தால் உமது காவியத்திற்கும் உமக்கும் அதிக கௌரவமாயிருக்கும்" என்றார்கள்.

அவர்கள் சொற்படியே கம்பர் சிதம்பரத்திற்குப் போய்த் தில்லை மூவாயிரவர்களிற் சிலரைக்கண்டு இந்தச் செய்தியை அறிவிக்க, அவர்கள் "நாங்கள் மூவாயிரம் பெயரும் கூடினாலல்லாமல் ஏகதேசத்தில் இதற்கு உத்தரம் சொல்லுகிற தெப்படி ? நீர் இன்னாரின்னாரிடத்திற் போம்" என்று சிலரைக்குறித்து அவர்களிடத்தில் அனுப்ப, அங்கேபோன பொழுது அவர்களும் "மூவாயிரம் பெயர்களும் ஒன்றாகச்

சேர்ந்து ஆகவேண்டிய காரியத்திற்கு நாங்களென்ன செய்யலாம்?" என்று வேறு சிலரைக்குறித்து, "அவர்களிடத்திற் போம்" என்று அனுப்பினார்கள். அவர்களும் மற்றுமுள்ள யாவரும் இந்தப்படியே பலரிடத்திலும் போகச்சொல்ல, கம்பரும் அங்கங்கே பாவோடுங்காலாய் நாள்தோறும் போய்ப்போய்க் காலோய்ந்து போனதே யல்லாமல் ஒருபயனுமில்லை. எவர்களுடனே சொன்னாலும் "மூவாயிரம் பெயரும் ஏககாலத்திலே கூடினால் தான் உமது எண்ணம் முடியும், இல்லாவிட்டால் ஒரு யுகஞ் சென்றாலும் நீரெடுத்த காரியஞ் சித்தியாகமாட்டாது" என்று சொல்லக்கேட்டு, "இனித்தென்னை ஊர் கூடிச் செக்குத்தள்ள வேண்டியதா யிருக்கிறதே" என்று வெகுநாளாக விசாரங்கப்பட்டு, ஒருநாள் ராத்திரி போஜனஞ் செய்து சயனித்துக் கொள்ளும் பொழுது, தில்லைத் திருச்சித்திர கூடத்தில் எழுந்தருளிய ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமானைத் தியானித்து "ஓ ஜனார்த்தனா! பக்தபராதீனா! ஆபத்பாந்தவா! அநாதரட்சகா! எம்பெருமானே அடியேன் இலவுகாத்த கிளிபோல எத்தனை காலமாகத் தில்லை மூவாயிரவருடைய தலைவாசல் காப்பேன்? ஆரை யடுத்தாலும் நமக்கென்ன வென்று உபேட்சையா யிருக்கிறார்களே யல்லாமல், ஒருவர்க்காவது இதைப்பற்றி எள்ளளவும் சிந்தையில்லையே; இந்தக்காவியம் லோகப் பிரசித்தமாக வேண்டுமென்று திருவுள மில்லையோ? நீ சூத்திரதாரி, நான் சூத்திரப்பிரதிமை, ஆதலால், நீ அசைத்தபடி யல்லது நானாக இயங்க மாட்டுவேனோ? உன் சங்கற்பம் அப்படி யிருந்தால் எளியேன் என்னசெய்வேன்?" என்று அதிக விசனத்துடனே கண்ணுறக்கங்கொண்டார். அப்பொழுது அவருடைய சொப்பனத்தில் அந்தத் தீனதயாளன் எழுந்தருளி, "ஏன் பிள்ளாய் தூக்கிக்கிறாய்? நீ இராமாயணம் அரங்கேற்றவேண்டித் தில்லை மூவாயிரவரைச் சபை கூட்டுவிப்பதற்காக வெகு பிரயாசப்பட்டாய்; இனி உனக்கொரு வருத்தமுமில்லை; இதுவரையில் நீ பசியேப்பக்காரனாயிருந்தாய்; அவர்கள் புளியேப்பக்காரரா யிருந்தார்கள்; ஆகையால் உனக்கு

ண்டான அவசிகம் அவர்களுக் கில்லாமற் போயிற்று; நாளை உதயத்திலே அத்தில்லை மூவாயிரவரில் ஒருவருடைய பிள்ளை பாம்பு தீண்டி இறந்துபோகும்; அதைத் தகனசமுஸ்காரம் செய்வதற்காக அவர்கள் மூவாயிரம் வீட்டுக்காரரும் அந்தப் பிள்ளை இறந்த வீட்டினிடத்தில் வந்து கூடுவார்கள்; அத்த ருணத்திற் போய் நீ பாடின இராமாயணத்தில் நாகபாச படலத்தை எடுத்து இன்ன இன்ன பாடலை வாசித்தால் விஷ திருஷ்டமான பிள்ளை பிழைக்கும்; அதைக்கண்ட மாத்திர த்தில் அவர்கள் தடையின்றிக் கையொப்பம் கொடுப்பார் கள்'' என்று அருளிச்செய்தார்.

விடிந்தபொழுது பெருமாள் அருட்செயலின்படி கம் பர் எழுந்துபோய் மூவாயிரம் பெயருங் கூடியிருப்பது கண்டு "இராமாயணம் அரங்கேற்ற வேண்டும்'' என்ன, அவர்கள் "நாங்கள் குழந்தையைப் பறிகொடுத்துப் பரிதபிக்கிற சம யத்திற் 'கிடக்கிறதெல்லாங் கிடக்கட்டும் கிழவனை யெடுத்து மணைமேல் வையுங்கள்' என்பதாக உம்முடைய ராமாயணத் தை அரங்கேற்ற வேண்டு மென்கிறீர், இதுதானா ஏற்றசம யம் ?'' என்றார்கள். இவர் "நான் பன்னிரண்டு வருஷம் காத் ததற்காக இன்றைக்குத்தானே நீங்கள் மூவாயிரம் பெயரும் ஒருசேரக் கூடும்படி சம்பவித்தது; இது தப்பினால் இனி எந் தக்காலத்தில் இப்படிப்பட்ட சமயங் கிடைக்கும் ?'' என்று சொல்லி, "குழந்தை எவ்விதத்தா லிறந்தது ?'' என்ன, அவ ர்கள் "பாம்புகடித்து இறந்தது, விஷ மிறங்குதற்குத் தலை யிலே குடாரியிட்டும், மற்றும் எத்தனையோ மணிமந்திர ஔஷதங்களைச் செய்தும் அநுகூலப்பட வில்லை'' என்றார் கள். "கம்பர் அந்தப்பிள்ளையை நான் பார்க்கவேண்டும்'' என்ன, அவர்கள் எடுத்துவந்து காண்பிக்க, இவர் கடிவா யைப் பார்த்துப் "பல் ஒன்று இரண்டு மூன்று வரைக்கும் பதிந்தாற் பயமில்லை, இது பாம்புக்குள்ள காளி, காளாத்திரி, யமன், யமதூதன், ஆகிய நான்கு பற்களும் பதிந்தபடியால் அசாத்தியமென்றே சொல்வார்கள். பிரம்புகொண்டு அடிக்க உடம்பில் தழும்பு கண்டாற் சாத்தியமாகும். அப்படி ஏதா

வது செய்து பார்த்தீர்களா ?" என்ன, அவர்கள் "அதுவுஞ் செய்தோம், கொஞ்சமாவது தழும்புகாணவில்லை" என்றார்கள். அப்பொழுது ஊர்க்குடும்பி வந்து, "ஐயா ! இந்தக்குழந்தை எண்ணெய் தேய்த்துக்கொண்டு தலைமுழுகி வருமளவிற் கடித்தபடியினாலே விஷம் அதிசீக்கிரமாகத் தலைக்கேறிப் பற்கள் கருகக் கண் பஞ்சடைந்து போயிற்று. இனி என்ன பிரயத்தனஞ் செய்தாலும் பலிக்கிறது பிரயாசமே" என்றான். கம்பரும் "மெய்தான் அப்பியங்கனம் பண்ணியிருந்தாலும், மதுவுண்டிருந்தாலும் சீக்கிரமாக விஷஞ் சிரசுக்கேறிவிடும்; எப்படியிருந்தாலு மிருக்கட்டும்; இப்பொழுது பகவத் கடாட்சத்தால் இந்தப்பிள்ளை உயிர்பெற்று எழுந்திருக்குமானால் நமது அபீஷ்டப்படி நடத்துகிறீர்களா ?" என்ன, அவர்கள் "ஐயா ! நீர் செத்தவர்கள் பிழைப்பார்களென்று சொல்வது ஆச்சரியமா யிருக்கிறது; ஒருவேளை அந்தப்படி நடந்தால் உமது இஷ்டத்திற்கு ஏற்றீ ஆடம்பமின்றி நடந்து கொள்வோம்" என்றார்கள்.

அதுகேட்டுக் கம்பர் பகவானை மனத்தில் ஸ்மரித்துத் தாம் பாடிய ராமாயண புஸ்தகத்தை அவிழ்த்து, நாகபாச படலத்தை எடுத்து, லட்சுமணன் முதலானவர்கள் இந்திரஜித்து பிரயோகித்த நாகபாசத்தால் கட்டுண்டு மூர்ச்சையாய்க் கிடக்கையில், சகலபுவன கர்த்தாவாகிய ஸ்ரீமந்நாராயணன் பூர்வம் சங்கற்பித்த பிரகாரம் கருடன் வந்ததனால், அந்த ஆபத்து நிவாரணமான சந்தர்ப்பத்திற் சில பாடல்களை எடுத்து அவற்றுள்.

* "பல்லாயிரத்தின்முடியாதபக்கமவைவீசவந்தபடர்கால்
செல்லாநிலத்தின்ருளோடுசெல்லவுடனின்றவாளிசிதறுற் [ன்
றெல்லாமவித்துமுணர்வோடுமெண்ணியறனேவிளைக்குமுரவோ
வல்லானொருத்தனிடையேபடுத்தவடுவானமேனிவடுவும்"

* இதன்பொருள்—பன்னகவைரி யென்று சொல்லப்பட்ட கருடனுகிய ஆபத்சகாயன் திருப்பாற்கடலி லிருந்து கிருபையுடனே அநேகமாயிரகாலங் கழிந்தாலும் ஒரிறகேனும் உதிராது அழியாதிருக்கிற தனதுநெடிய சிறகைத் திகந்தமட்டும் விரித்து அசைத்துக்

†"வாசங்கலந்த மறைநாளநூலின் வகையென்ப தென்னைமழை யென், முசங்கைகொண்டகொடைநீளியண்ணல்சரராமன்வெண் ணெயணுகும், தேசங்கலந்தமறைவாணர்செஞ்சொலறிவாளரென்றி முதலோர், பாசங்கலந்தபசிபோலகன்ற பதகன்றுறந்தவுரகம்."

என்னும் பாடல்களையும், மற்றுஞ் சில பாடல்களையும் வாசித்து,

" ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—ஊழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட."

எனவும்,

---

கொண்டு அதிவேகமாய்ப் பறந்துவர, அந்தச் சிறகடிக் காற்றானது யுத்த பூமியிற் பிரவேசிக்க, அதனால் அங்குள்ளவர்களுடைய சரீரத்தை இறுக்கி ஒடுக்கி நிலைபெயரவொட்டாமற் கட்டியிருந்த நாகபாசங்கள் பட் பட்டென்று அற்றுப்போயின, அற்றவுடனே, சகல இந்திரியங்களையும் அடக்கி மூலாதாரசகளையும் பற்றறவிட்டு ஆத்ம உஜ்ஜீவனம் இதுவேயென்று விவேகத்தோடு நிச்சயித்து, எதியாச்சிரம தர்மத்தையே மேன்மேலும் வளர்க்கின்ற திடச்சித்தமுடைய ஒரு தத்துவஞானி விஷயத்தில், மூடாத்துமாக்கள் அகங்காரத்தில் விளைக்கும் பழிபாவங்கள் அவனை யணுகாது மாயுந்தன்மைபோல், அந்நாகபாசத்திற் கட்டுப்பட்ட இளையபெருமாள் முதலானவர்களுடைய திருமேனி வடுக்களுந் தோன்றாமற் மாறிப்போயின வென்பதாம்.

† இதன்பொருள்.—மகாபாதகனாகிய அந்த இந்திரஜித்து பிரயோகித்த நாகபாசந் தொலைந்தவகை எப்படியெனில், சிலர் தாமரைத்தாளி விருந்தெடுக்கும் மெல்லிய நூல்போல எளிதில் அற்றது என்பார்கள்; அஃது ஓர் ஆச்சரியமன்று, மேகம் மழை சொரிகின்றதென்று ஆசங்கிக்கும்படி அமிதமாகக்கொடுக்கின்ற பெருங்கொடைவள்ளலாகிய சடையப்பமுதலியாருடைய தம்பி கண்ணப்ப முதலியாருக்குப் பின்பிறந்த சரராம முதலியாரானவர், சதாகாலமும் பிரபலமாகச் செய்யும் அன்னதானத்திற் பற்பல தேசங்களிலிருந்து திருவெண்ணெய் நல்லூரை நாடிவரும் வைதிகப் பிராமணர்களும் வித்வஜனங்களும், அவர்களைச்சேர்ந்த பந்துவர்க்கத்தாரும், உசிதமான பஞ்சபட்சிய பரமான்னம் திருப்தியாகப் புசித்து, அவர்களுடைய பசி தொலைவதுபோலவே தொலைந்துபோயிற்றென்பதாம்.

"மங்கையொருபாகன் மணிமார்பி லாரமே
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே—திங்களையுஞ்
சீறியதன் மேலூருந் தெய்வத் திருநாணே
ஏறிய பாம்பே இறங்கு."

எனவும்,

"பாரைச்சுமந்த படவரவே பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கு மெல்லணையே—ஈரமதிச்
செஞ்சடையான் பூணுந் திருவா பரணமே
நஞ்சுடையாய் தூரநட."

எனவும் நூதனமாக மூன்றுவெண்பாக்கள் பாடி, அனந்தன், வாசுகி, சங்கரன், குளிகன், பதுமன், மகாபதுமன், தட்சகன், கார்க்கோடகன் என்னும் அஷ்ட மகாநாக முதலான சகல சர்ப்பங்களுக்கும் அதிபதியாகிய ஆதிசேஷனைப் பிரார்த்தித்தவுடனே, அங்கொரு புற்றிலிருந்து ஒரு சர்ப்பம் வெளிப்பட்டுவந்து, யாவரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே, அக்குழந்தையைக் கிட்டி முன்பு கடித்தவாயில் மறுபடி கடித்து, தலைக்கேறின விஷத்தை மீட்டுக்கொண்டு திரும்பிச் சிலதூரம்போய் இறந்தது. பின்பு பிரக்கினை தப்பிக்கிடந்த குழந்தைக்கு உயிர்வந்தது. அது நித்திரைசெய் தெழுந்ததுபோலக் கால் கைகளை அசைத்து உசுவாச நிசுவாசத்துடனே கண்விழித்தெழுந்தது. இதைக் கண்டவர்களெல்லாம் கம்பரை விஷகண்டனாகிய சாட்சாது பரமசிவனே இப்படி மானுடவுருவெடுத்து வந்தானென்று அதிசயித்து ஸ்துதிசெய்தார்கள். எக்காலத்திலும் எப்படிப்பட்டவர்களையும் லட்சியம்பண்ணாத தில்லை மூவாயிரவர்கள் கம்பரை உள்ளபடியே மகாத்மாவென்று மதித்துப் பயந்து "நாங்கள் இவர் மகிமை தெரியாமல் காலதாமசம் பண்ணி, இவர் விஷயத்தில் அபசாரப்பட்டோம்" என்று அநுதபித்து அவரை மிகவும் உபசரித்தார்கள்.

மறும் [illegible] இறந்த பிள்ளைக்காக மசானத்தில் அடுக்கிய வார' என்றின்மேல் அப்பாய்யைக்கொண்டுபோய் வைத்துத்

தகாத சஞ்சயனம் முடித்துவிட்டு, முன்பு "நமது காலின் மேல் வண்டியோடியதா என்ன" வென்று அசட்டையாயிருந்தவர்கள், தலையில் நெருப்பு விழுந்தவர்கள் போலப் பரபரப்பாக வந்து கம்பரிடத்திலிருந்த ராமாயணபுஸ்தகத்தை வாங்கித் தாங்களே அவிழ்த்துத் தனித்தனியே அனைவரும் பார்வையிட்டு, சொல்நடை பொருள்நடை கற்பனை கருத்து சுவை ஓசை முதலானவைகளையும் விசதமாக ஆராய்ந்தறிந்து, தமிழில் இந்தக் காவியத்திற் கொப்பாக வேறொரு காவியமும் இருக்கிறதாவென்று நினைத்து, மிகவும் வியந்து தங்களுக்குள்ளே பிரமாநந்த மடைந்தும், "குணத்தைமாற்றக் குருவில்லை" என்பதற்கேற்க அவர்கள் சுபாவம் போகாமற் கம்பரை நோக்கிச் சில கேள்விகள் கேட்கத் தலைப்பட்டார்கள்.

"நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறுவோர்க்கே."

என்னும் பாடலில், "நாடியபொருள் கைகூடுமென்ற முதல் வாக்கியத்திலேயே பின்னே சொல்வன வெல்லாம் அடங்கியிருக்க ஞானமும் புகழுமுண்டாமென்று மிகைபடக் கூறியதென்னை?" என, கம்பர் "பொருளென்பது, ஒருபொருள், இருபொருள், முப்பொருள், நாற்பொருள், ஐம்பொருள் முதலியவாகப் பலவகைப்படும். அவைகளுக்குள் ஒரு பொருள்—மோக்ஷம்; இருபொருள்—கல்வி, செல்வம்; முப்பொருள் - சித்து, அசித்து, ஈசுவரன்; நாற்பொருள்—அறம், பொருள், இன்பம், வீடு; ஐம்பொருள்—பரம், வியூகம், விபவம், அந்தரியாமி, அர்ச்சை என்னும் அர்த்த பஞ்சகமாம். உலகத்தார் யாவரும் பிரதானமாக நாடும் பொருள் கல்விப்பொருள் செல்வப்பொருள் இரண்டுமே. ஆதலால், இவ்விடத்தில் அவ் விருபொருளையுமே சுட்டி 'நாடியபொருள் கைகூடும்' என்றும், அவற்றுட் கல்வியால் ஞானமும், செல்வத்தாற் புகழு முண்டாகுமெனப் பற்றிச் சாதன சாத்திய முறையாக அவற்றின்பின் னிரு

மும், புகழு முண்டாம்' என்றும், ஞானத்தால் மோட்ச மும், புகழினுற் புருஷகாரியமாகிய இலக்குமி கடாட்சமு முண்டாவது பற்றி அவைகளின்பின் 'விடியல் வழியதாக் கும் வேரியங்கமலை நோக்கும்' என்றும் இப் பயனைத் தரும் எவர்க்குச் சித்திப்பதெனில், வாழையடிவாழையாக அநேகந் தலைமுறை அழிவின்றி அபிவிர்த்தியாய் வரும் இராக்கதசேனைகள் நீறாக நாசமடையும்படி வென்று வெற் றிமாலைசூடிய உக்கிரகோதண்டத்தைத் தாங்கிய ஸ்ரீராகவ னுடைய புயபராக்கிரமத்தைச் சொல்கின்றவர்களுக்கே யென்பது தோன்ற 'நீடியவரக்கர் சேனை நீறுபட்ட ழிய வாகை சூடிய சிலையிராமன் றோள்வலி கூறுவோர்க்கே' என்றுஞ் சொல்லியது'' என்றார். பின்னும் அவர்கள், "சகல கிரந்த கர்த்தர்களுடைய சங்கேதமும், கடவுள் திருவடி யைக்குறித்தே வாழ்த்துதல் செய்வதாயிருக்க, நீர் அத் திருவடியை வாழ்த்தாது 'தோள்வலி கூறுவோர்க்கே' என்று மாறுகொளக் கூறலாய்த் தோளைப்பற்றிச் சொல் லிய தென்னை?'' என்ன கம்பர், "தாடகையைச் சங்கரித்து, சுவாகுவைக் கொன்று, கௌசிகமுனி வேள்வியைக்காத்து, மிதிலையிற் சிவனதுவில்லை ஒடித்து, சீதையைத் திரு மணமுடித்து அயோத்திக்கு மீண்டுவரும் வழியிற் பரசு ராமனை வென்று, வனத்தில் விராதன் தோளைச் சிரித்து, கரதூஷணதியரை அதமாக்கி மாய மானைக் கொன்று, கவந்தனை மாய்த்து, மராமரத்தைத் தொளைத்து, வாலி யை வதைத்து, சுக்கிரீவனுக்கு அரசளித்து, மகராட்சனை மடித்து, கும்பகர்ணனைச் சேதித்து, மூலபலத்தை முடி த்து, ராவணுதி ராட்சதர்களை யெல்லாங் கருவறுத்து, விபீஷணனுக்கு முடிசூட்டியது இராகவனது புயபலமே யாதலால், ஆதிதொடங்கி அந்தமட்டும் அவன் தோளாண் மையைச் சொல்வதே இராமாயணமென ஆராய்வோர்க்கு நன்கு விளங்குதற்பொருட்டு 'இராமன் தோள் வலி' என்றும் ரவதபுண காலக்ஷேபஞ் செய்வோரைக் 'கூறு வோர்'என் ன 'குறிப்பித்ததாம்'' என்றார்.

அதற்குமேலும் அவர்கள் ஆங்காங்கு வினவிய வினாக்களுக்கெல்லாம் கம்பர் தக்கவாறு மறுமொழி சொல்லக் கேட்டு, அவருடைய வித்வ சாமர்த்தியத்தைக் குறித்து மெச்சி சந்தோஷப்பட்டு, "மேற்படி நாடிய பொருள்கை கூடும்' என்ற பாடலில், நீடியவரக்கர்சேனை நீறுபட்டழிய' என்றதற்கு, நீர் வேறெதைச் சொன்னாலும் சொல்லிக்கொள்ளும் அந்த ராட்சத சேனை எங்கள் சுவாமியின் நீறுபட்டுத்தான் அழிந்தது" என்று சாதுரியமாகச் சொல்லிச் "சரிசரி" என்று ஒப்புக்கொண்டு கையொப்பங் கொடுத்தார்கள். அதைக் கம்பர் பெற்றுக்கொண்டுவந்து ஸ்ரீரங்கத்தாருக்குக் காண்பிக்க, அவர்கள் அதிசயப்பட்டுப் பின்னும் "திருநறுங்கொண்டை என்னும் ஸ்தலத்திலுள்ள ஜைனர்களுக்குள் அநேகர் தமிழிற் பெயர்பெற்ற வித்வான்களும் சமய துவேஷிகளுமாகையால் இதைப்பற்றி ஏதாவது குற்றஞ்சொல்ல வகை தேடுவார்கள், அவர்கள் வாயை அடக்க அவர்களிடத்திலும் கையொப்பம் வாங்கி வந்தால் யுக்தமாயிருக்கும்" என்றார்கள்.

இவர் "நல்லது" என்று அவ்விடத்திற்குப் போனபொழுது, அவர்கள் இராமாயணம்பாடித் தில்லைமூவாயிரவர் சமூகத்தில் பாம்புதீண்டி இறந்த பிள்ளையை உயிர்ப்பித்து அரங்கேற்றிய கம்பர் வந்தார் என்கிற செய்தி கேள்விப்பட்டவுடனே, என்றுங்காணாத பொருளைக் கண்டவர்கள் போலப் பரம சந்துஷ்டியடைந்து எதிர்கொண் டழைத்துப்போய் உபசரித்து "எங்கே வந்தீர்கள்?" என்ன, கம்பர் "நாம் பாடின ராமாயணத்திற்கு உங்கள் கையொப்பம் வாங்கவந்தோம்" என்ன, அவர்கள் "தில்லைமூவாயிரவர்களுடைய கையொப்பம் வாங்கிய உமக்கு எங்கள் கையொப்பம் அத்தனை சிலாக்கியமானதோ? எங்களுக்குக் கௌரவமேயன்றி வேறல்ல" என்றுசொல்லி, இராமாயண காவியத்தை அவ்வவ் விடங்களில் ஒருவாறு பார்வையிட்டுத் தாங்களும் சில கேள்விகேட்க வேண்டுமென்று நினைத்துக் கம்பரை நோக்கி,

"உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே."

என்ற பாடலில், எப்பொருட்கு மிறைவன் செயலை விளையாட்டென்று என்னநிமித்தத்தாற் சொன்னது? ஒப்பாரும் மிக்காருமில்லாத கடவுள் விளையாடுவாராறுல் அவரைச் சிறுபிள்ளை யென்றல்லவோ நினைக்கவேண்டி யிருக்கின்றதென்றும் எல்லாம் வல்ல கடவுள் கிர்த்தியம், சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபம், அநுக்கிரகமென ஐந்துவகைப் படுமென்று ஆகமங்களிற் சொல்லியிருக்க முத்தொழிலென்றதென்ன வென்றும், மூன்று செய்யுளாற் கடவுள் வணக்கம் சொல்லவேண்டியதென்ன, ஒன்றே போதாதோ வென்றும் இம்மூன்று கேள்வி கேட்டார்கள். அம்மூன்றில் முதற்கேள்விக்குக் கம்பர்,—சகலாண்ட சராசரங்களையும் ஆக்கலும், காத்தலும், அழித்தலும், சர்வசக்தியுடைய அவர்க்குப் பாரமானவையல்ல, அலட்சியமாகிய விளையாட்டுச் செய்கை போல இச்சாமாத்திரத்தாற் சாதாரணமாய் நிகழ்வனவாதலால் விளையாட்டென்றும், அன்றியும் விளையாட்டாகச்செய்யும் செய்கையே இவ்வளவாக வியக்கத்தக்கதா யிருக்குமாயின், அவர் வேண்டுமென்று கண்ணூன்றிச்செய்யும் செய்கை எப்படிப்பட்டதாயிராது? அவாங்மன கோசரமாயிருக்கு மல்லவோ வென்றும், இரண்டாவதற்கு, பஞ்சகிர்த்தியங்களில் திரோபவம் சங்காரத்திலும், அநுக்கிரகம் ஸ்திதியிலும் அடங்குதலாலும், வேதத்திற் சொல்லப்படுவன முத்தொழிலே யாதலாலும் அவ்விருதொழிலும் வேறு பிரித்துரைக்க வேண்டாமென்றும், மூன்றுவதற்கு, வஸ்து நிச்சயம் பண்ணுமிடத்து நாமரூபகிரியைகளை ஆவசியமாகச் சொல்ல வேண்டுமாதலால், அவற்றுள் கடவுளின் கிரியை "உலகம் யாவையுந் தாமுளவாக்கலும்" என்றபாடலினுலும், ரூபம் "சிற்குணத்தர்தெரிவருநன்னிலை" என்றபாடலினுலும், நாமம் "ஆதியந்தமரியெனயாவையும்" என்றபாடலினுலும், சொல்ல

ப்பட்டனவென்றும் சமாதானமாக உத்தரம் சொல்லக்கேட்டு, அவர்கள் சரஸ்வதி யமிசமாகிய உமது வல்லமையை நாங்கள் என்னென்று சொல்லுவோ மென்று அதிசயித்துப் பின்பு பாரகாவிய மாதலால் இதில் எங்களுக்கு ஆதாரம் ஏதாவது உண்டோவென்ன, இவர் உண்டென்று யுத்தகாண்டத்தில் இந்திரஜித்து தலையறுபட்டு விழுந்தபோது, அவனால் முன்பு உபத்திரவப்பட்ட தேவர்கள் நிர்ப்பயமாய் ஆகாச வீதியிற் கூடிநின்று, வில்லெடுத்துப் போர்செய்யும் வீரர்களுக்கெல்லாம் மேலானவீரனாகிய இந்திரஜித்து இறந்தபடியினாலே இலங்காபதிக்கு நெடுங்காலம் அவிச்சின்னமாய்ச் சென்றுவந்த அரசாட்சியானது இனி ஒருபொழுதும் செல்லமாட்டாதென்று பெருங்களிப்புற்று, அரையில் உடுத்த உடையையும், தோள்மேலிட்ட உத்தரீய முதலானவைகளையும், ஒக்க உரிந்து பந்துபோலச்சுருட்டி மேலே வீசி எறிந்து கொல்லா விரதிகளென்னும் சமணர்களுடைய உபாசனா தேவர்களாகிய அருகர்கூட்டம் போல நிர்வாணிகளாய் ஆனந்தக்கூத்தாடினார்களென்னும் கருத்தை உள்ளிட்ட,

"வில்லாள ரானார்க் கெல்லா மேலவன் விளித லோடும்
செல்லாது விலங்கை வேந்தர்க் கரசெனக் களித்த தேவர்
எல்லாருந் தூசு நீக்கி யெழுந்தவ ரார்த்த போது
கொல்லாத விரதத் தார்தங் கடவுளர் கூட்ட மொத்தார்."

என்ற பாடலைச்சொன்னார் அதையவர் கேட்டு வியந்து கையொப்பம் கொடுத்தார்கள்.

அக்கையொப்பத்தைக் கொண்டுவந்து காட்டியும் ஸ்ரீரங்கத்து வைஷ்ணவர்கள் மாவண்டூரிற் பண்டித சிரேஷ்டனாகிய ஒரு கருமானிருக்கிறான். அவனுடைய கையொப்பமும் வாங்கி வாருமென்றார்கள். கம்பர் மாவண்டூருக்குப் போய் அந்தக்கருமானுக்குத் தமது வரவை அறிவிக்க, அவன் இதற்காகத் தாங்கள் இவ்வளவுதூரம் பிரயாசைப்பட்டு வரவேண்டுமா, அப்படிப்பட்ட தில்லை மூவாயிரவர்களும், திருநறுங் கொண்டையிலுள்ள சமணர்களும் அங்கீகரித்த நூலுக்குச் சங்கை யென்னவிருக்கிறது. மேலும் சார

தாவிக்கிரகமாயிருக்கிற தங்களுக்குச் சிற்றறிவுள்ள நானெ ம்மாத்திர மென்று சொல்லிப் புஸ்தகத்தை அவிழ்த்துச் சிற் சில சந்தற்பங்களிற் சோதித்து இரண்டொரு கேள்வி கேட் டுப் பிறகு, இந்த மகாகாவியத்தில் எங்களுக்கு ஆஸ்பதம் ஒன்றுமில்லையா வென்றுகேட்க, கம்பர் உங்களுக்கில்லாமற் போவானேனென்று ராமராவண யுத்தத்திற் பிரதாப லங் கேசுரன் ராமர்மேல் மாயாஸ்திர பிரயோகஞ் செய்தபொழு து அவர் விபீஷணுழ்வானை நோக்கி இதென்னவென, விபீ ஷணன் கேளுமையா! கருக்கொண்டு நிறைந்த கார்மேகம் போன்ற கரிய திருமேனியையுடைய ஸ்ரீராமா, திக்கஜங்க ளின் கொம்புகளை ஒடித்த ராவணன், இழைநுழையும் ஊசி யொன்றை உண்டாக்கி, அதைக் கருமாரிடத்திற் கொண்டு போய்க்காட்டி இவ்வூசி நல்ல வேலைபாடாகச் செய்யப்பட்ட து. அதைத் தக்கவிலை கொடுத்து வாங்கிக்கொள்ளுங்களெ ன்று கொல்லத்தெருவில் ஊசி விற்கிறவர்களைப்போல, மூல ப்பிரகிருதி மாயை, யோகமாயை, அதிரேகமாயை, மகாமா யை முதலான சகல மாயைகளுக்கும் உற்பத்தி ஸ்தானமா யிருக்கின்ற மாயனுகிய உன்மேலே தானே மாயாஸ்திரத் தைப் பிரயோகித்தானென்று சொன்ன இக்கருத்தை உள் ளிட்ட,

"இருப்புக் கம்மியர்க் கிழைநுழை யூசியொன் றியற்றி
விருப்பிற் கோடிரால் விலைக்கெனும் பதகரின் விட்டான்
கருப்புக் கார்மழை வண்ணவக் கடுந்திசைக் களிற்றின்
மருப்புக் கல்லிய தோளவன் மீளரு மாயை."

என்ற பாடலைச்சொன்ஞர். அதற்கவன் சந்தோஷப் பட்டுக் கையொப்பங் கொடுத்தான்.

அதைக் கொண்டுவந்து காண்பித்தபொழுது, ஸ்ரீரங்க த்தார் தஞ்சாவூரில் அஞ்சனுட்சி யென்ற ஒரு தாசி, பிரபல வித்துவாம்சையா யிருக்கிறுள், அவள் அதிக கர்வமுடையவ ளாகையால் ஏதாவது பிதற்றுவாள். அவள் கையொப்பமும் வாங்கிவந்தாற் சர்வோத்தம மாயிருக்குமென்று சொல்ல, கம்பர் ஆராயினுமென்ன,

"கடைநிலத்தோ ராயினுங் கற்றுணர்ந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்."

என்பதனால் தோஷமில்லை யென்று அவளிடத்திற்குப்போன பொழுது, அவள் உள்நடுங்கித் தேவரீர் இவ்வளவு தூரம் வந்தது ஆர் செய்த பாக்கியமோ, ஆயினும் என்ன காரியமென, இவர் தமது கருத்தை வெளியிட, இதற்குத்தானா இத்தனை பிரயத்தினம்? தாங்கள் இருக்குமிடத்திலிருந்தே அடியாளை வரும்படி நியமித்தால் தலையாலே நடந்துவாரேனா, இதென்னஅபசாரமென்றுவருத்தமுற்று மற்றும் தமது கல்விக்கு முன்னே எளியேன் கல்வி எம்மாத்திரம். சூரியனுக்கு முன்னே மின்மினியும், கடலுக்கு முன்னே கால்வாயும்போலவது தானே யென்று நைச்சியமாகச் சொல்லிப் பின்பு இந்தப் பெருங்காப்பியத்தில் எங்களுக் கெவ்வளவாவது பற்றுண்டோ வென்ன, கம்பர் அனேக விடங்களிலிருக்கிறது, அவற்றுள் ஒன்று சொல்லுகிறோம் கேளென்று, பாலகாண்டம் மிதிலைக்காட்சியில், மிதிலை நகரத்தின் ராஜவீதியிலுள்ள விசித்திரங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டே விசுவாமித்திர முனிக்குப் பின்னே சென்ற ராம லட்சுமணர்கள், அக்கங்கே அனந்தம் ஸ்திரீகள், ஆணிமுத்திழைத்த பந்துகளை எறிந்து விளையாடுகையில், அப்பந்துகள் சரீரசம்பந்தத்தால் உண்டாகும் போகசுகத்தைத் தங்களைத் தழுவும் புருஷர்களுடனே சமானமாய்த் தாமும் அனுபவிப்ப தல்லாமல், அதற்காக அவர்களிடத்தில் விலையும் பெற்றுக்கொள்ளும் சாமர்த்திய வதிகளாகிய வேசையருடைய துவிதப்பட்ட மனம்போலவும் அடுத்தபொருள் மயமாய்க்காண்கின்ற பளிங்குபோலவும், மைதீட்டிய கண்ணொளி பாய்ந்தபொழுது கறுத்து நீலப்பந்தாகவும், செங்காந்தள் மலர்போன்ற கையில்வந்து சேர்ந்தபொழுது சிவந்து பவளப்பந்தாகவும் காட்டும் அதிசயத்தைக் கண்டார்களென்னும் கருத்தை உள்ளமைத்துப் பாடிய,

"மெய்வரு போக மொக்க வுடனுண்டு விலையுங் கொள்ளும்
பையர வல்கு லார்த முள்ளமும் பளிங்கும் போல

மையரி நெடுங்க ணோக்கம் படுதலுங் கருகி வந்து
கைபுகிற் சிவந்து காட்டுங் கந்துகம் பலவுங் கண்டார்".

என்கிற பாடலைச்சொன்னார். அதுகேட்டு அவள் மனமகிழ்ச்சிகூர்ந்து தங்களுக்கு "நான் கையொப்பங் கொடுப்பது மரியாதையன்றோ" என்று ஸ்தோத்திரமாக,

" அம்பராவணிசடையரனயன்முதல்
உம்பரான்முனிவரால்யோகராலுயர்
இம்பராற்பிணிக்கருமிராமவேழஞ்சேர்
கம்பராம்புலவரைக்கருத்திருத்துவாம்."

என ஒரு பாடல் பாடிக்கொடுக்க, அதைக் கொண்டுவந்து நம்பெருமாள் கோயிலின் முதலிகளாகிய வைஷ்ணவர்களுக்குக் காட்டினார்.

அந்தக் கவியைப் பார்த்தும் ஸ்ரீரங்கத்தார்கள் வாய்கூசாமல் பின்னும் சிற்சிலரைக் குறித்துக் கையொப்பம் வாங்கி வரச்சொல்ல, கம்பர் அப்படியே வாங்கிவர, அவர்கள் "எல்லாம் சரிதான், இன்னம் அம்பிகாபதி என்பவருடைய கையொப்பம் ஒன்றுமாத்திரம் குறைவாயிருக்கிறது. அவர் சிறந்த வித்வானாகையால் அவருடைய கையொப்பமுமிருந்தால் உம்முடைய காவியத்திற்குச் சிறப்பென்று நினைக்கிறோம், அஃது உமக்குத் தெரியாததன்று, அப்புறம் உமதிஷ்டம்" என்றார்கள். கம்பர் "அம்பிகாபதி என் பிள்ளைதானே, அவனுடைய கையொப்பம் எனக்கு அத்தனை சிலாக்கியமானதா?" என்று நினையாமல், "முன்னே பிறந்த காதைப் பார்க்கிலும் பின்னே முளைத்த கொம்பு வலியுடையது அல்லவா?" என்றெண்ணி, தம்முடைய கற்றுச் சொல்லிகளில் இருவரை அனுப்பி, அம்பிகாபதியை அழைத்து வரச்சொல்லி, அவன் வந்தவுடனே, "அப்பா! ராமாயணத்திற்கு எல்லாரும்போல நீயும் கையொப்பங் கொடுக்க வேண்டாமா?" என்ன, அவன் "ஐயா! அதில் எனக்கென்ன ஆஸ்பதமிருக்கிறது?" என, கம்பர் தமக்கு அவன் பிள்ளையாகையால் அவனுடனே விளையாட்டாகவும் வித்வசாதுரியமாகவும் "உனக்கும் நான்கு அதிசயம் வைத்திருக்

கிறேன், அந்நான்கும் யாவையெனில் சளசள, களகள, கோளகோள, கிளுகிளு என்பனவாம்.

அவைகளுள், க-வது. சளசளப்பு, பாலகாண்டத்தில் திருவவதாரப் படலத்தில், ரோமபத மகாராஜனுடைய நாட்டிற்குக் கலைக்கோட்டுமாமுனி வந்தபொழுது, அதற்கு முன் பன்னிரண்டு வருஷகாலமாய் மழை பெய்யாமையால் அந்நாட்டிலுள்ள ஏரிகள் நதிகளுக்கு உண்டாகிய குறைவு தீரவும், மேற்படி ராச்சியத்தாரைப் பிடித்த துவாதச வருஷ க்ஷாமம் நீங்கவும், மேகமானது ஆகாயத்தில் தோன்றிச் சிவனது கண்டத்திலிருக்கும் விஷம்போலக் கறுத்துச் சந்தத தாரையாக மழைபெய்த தென்பதைச் சொல்லிய,

"வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருகி வான்மிசை
சளசள வெனமழை தாரை கான்றன
குளனொடு நதிகடங் குறைக டீரவே."

என்னும் பாடலினும்,

உ-வது. களகளப்பு, மேற்கூறிய காண்டத்தில் உண்டாட்டுப் படலத்தில், சீதா கலியாணத்திற்குப் பிரயாணப் பட்டுப்போன தசரத மகாராஜாவின் சேனையில் இரண்டு பெண்டுடைய புருஷனொருவன் இளையாளை வீட்டில் விட்டு மூத்தாளைக் கூட அழைத்துக் கொண்டுபோய் மார்க்கமத்தியில் ஒரு சோலையில் இறங்கிப் புனலாடி மதுவுண்டு களித்திருக்கையில், அம்மது மயக்கத்தால் மறந்து தன்னருகிலிருக்கின்ற மூத்தாளை அவ்விளையாள் பெயரைச் சொல்லி அழைத்ததனால், அவளுக்குத் தன்கணவன் தன்னை இளையாளுக்குச் சமானமாகப் பாவித்தானென்பதுபற்றிப் பிறந்த சந்தோஷத்தால் நகைப்பு வந்தது, அக்கணத்திலேயே தன் சக்களத்தியை அவன் வீட்டில்விட்டு வந்தவிடத்திலும், அவள்மேல் தனக்குள்ள மோகத்தால் அவள் பெயரை மறக்கவில்லையே யென்று ஜனித்த துக்கத்தால் கண்ணீர் வந்தது என்பதைச் சொல்லிய,

"வளையமர் முன்கையோர் மயில னுடனக்
கிளையவள் பெயரினைக் கொழுந னீதலும்
முளையெயி றிலங்கிட முறுவல் வந்தது
களகள வுதிர்ந்தது கயற்க ணாலியே."

என்னும் பாடலினும்,

ங-வது. கோளகோளப்பு, யுத்தகாண்டத்தில் கடல் சுட்ட படலத்தில், ஸ்ரீராமர் வருணன் வரவில்லையென்று கோபங்கொண்டு சமுத்திரத்தின்மேல் அக்கினி யஸ்திரப் பிரயோகஞ் செய்தபொழுது, பிரமாண்டத்திற்கு அப்புறத் திலுள்ள பெரும்புறக் கடலும் கொதித்தது என்றால், அதற்கு உட்புறத்திலுள்ள சப்த சமுத்திரமும் பட்டபாட் டைச் சொல்லவேண்டிய தென்னை? அன்றியும் சிவனது ஜடா மகுடத்தில் அநேககாலமா யிருக்கின்ற கங்கையுங் கொதித்தாள். அதுவும் அதிசயமன்று, பிரமனது கமண்ட லத்திலுள்ள கங்கா ஜலமும் அதிகமாகக் கொதித்ததென்று சொல்லிய,

"அண்டமூ லத்துக் கப்பா லாழியுங் கொதித்த தேழு
தெண்டிரைக் கடலின் செய்கை செப்புவ தெவனோ சென்னிப்
பண்டைநா ளிருந்த கங்கை நங்கையுங் கொதித்தாள் பார்ப்பான்
குண்டிகை யிருந்த நீருங் கொளகொள கொதித்த தன்றே."

என்னும் பாடலினும்,

ச-வது. கிளுகிளுப்பு, அக்காண்டத்திற் கும்பகருணன் வதைப்படலத்தில், இராவணன் அசோகவனத்திலிருக்கையிற் கும்பகருணன் மடிந்தானென்ற செய்தியைச் சுகசாரணர் ஓடிவந்து சொல்லக்கேட்டுத் தன் குரலோசை வானத்தள வும் எட்டும்படி அவனது பெயரைச் சொல்லிக் கூவியழை த்து அழுதான் முன்பு கைலாசகிரியை எடுத்த காலத்தில் அதை உமாபதியானவர் கண்டு திருவடியினால் அழுத்த அம் மலையின்கீ ழகப்பட்டு மூட்டுப்பூச்சிபோல நசுங்கித் தான் அழுத காரணத்தால் தனக்குண்டான ராவணனென்னும் பெயர்ப்பொருளைவெளியிட்டவன் [அழுதானென்றபடி; ராவ ணம்—அழுமோசை.]; அதுகண்டு சீதையானவள் ஆடுதாண்

டைக் கனிபோன்ற வாயிதழ் துடிக்க, சரீரம் மயிர்க்குச் செறியத் தனக்குள்ளே மிகவுஞ் சந்தோஷித்தா ளென்பதைச் சொல்லிய,

"அண்டத் தளவு மணையப் பகர்ந்தழைத்தான்
பண்டைத்தன் ஞமத்தின் காரணத்தைப் பாவித்தான்
தொண்டைக் கனிவாய் துடிப்ப மயிர்பொடிப்பக்
கெண்டைத் தடங்கண்ணு ளுள்ளே கிளுகிளுத்தாள்."

என்ற பாடலிலும் வருமாறு கண்டுகொள்ளலாம் என்றார்.

அவைகளை அம்பிகாபதி கேட்டுச் சந்தோஷித்து "நான் கையொப்பம் அல்லது சாற்றுகவி கொடுப்பது விசேஷமன்று" என்று ஸ்தோத்திரமாக,

"கம்ப நாட னுமைசெவி சாற்றுபூங்
கொம்ப னுடன் கொழுநனி ராமப்போர்
பம்ப நாடழைக் குங்கதை பாச்செய்த
கம்ப நாடன் கழறலை யிற்கொள்வும்."

என ஒருகவி பாடிக்கொடுக்க, அதைக் கம்பர் ஸ்ரீரங்கத்தாருக்கு அறிவிக்கப் போனவிடத்தில், வைஷ்ணவ சமயாசாரியர்களுக்குள்ளே பரமாசாரியராகிய ஸ்ரீமந்நாதமுனிகள் எழுந்தருளியது கண்டு, அவருடைய திருவடிகளிலே சாஷ்டாங்கமாக விழுந்து சேவித்துத் தமது கருத்தை விண்ணப்பஞ் செய்ய, அவர் கம்பர்பாடின ராமாயணத்தைக் கடாட்சித்தருளி, அது சொற்சுவை பொருட்சுவை செறிந்ததாயும் பகவத் விஷயமானதாயும் அற்புதமாயு மிருப்பது நோக்கி, இவருடைய புலமை கேவலம் மானுஷிகமாயிருக்கவில்லை என்று அதிசயித்து, இந்தக் காவியத்தை அவசியம் பிரசித்தம் பண்ணுவிப்பது நமது கடமையென்று திருவுளங்கொண்டு, கம்பரை மண்டப கைங்கரியம் ஒன்று செய்யச் சொல்லி நியமித்து, அதை அவர் செய்து முடித்தவுடனே சுபதினம் பார்த்து அரங்கேற்ற யத்தனமா யிருக்கையில், நம்பெருமாளாகிய ஸ்ரீரங்கநாதர் அர்ச்சகன் முகத்தால் ஆவிர்ப்பவித்துக் "கம்பா! நீ நம் சடகோபனைப் பாடினையோ? பாடினல்தான் நாம் உனது ராமாயணத்தைத் திரு

ளம் பற்றுவோம், இல்லாவிடில் அது நமக்கு அங்கிகாரமாகாது பிள்ளாய்" என்றார். அதைக் குறித்துப் பின்னடியார் பாடியபாடல்.

"நஞ்சட கோபனைப் பாடினை யோவென நம்பெருமாள்
விஞ்சிய வாதரத் தாற்கேட்பக் கம்பர் விரைந்துரைத்த
செஞ்சொலந் தாதிக் கலித்துறை நூறுந் தெரியும்வண்ணம்
நெஞ்சடி யேற்கருள் வேதந் தமிழ்செய்த நின்மலனே."

ஸ்ரீரங்கநாதர் அருளிச்செய்ததுகொண்டு கம்பர் ஆழ்வார் விஷயத்தில் நூறு கட்டளைக் கலித்துறையில் "வேதத்தின் முன்செல்க" என்று தொடங்கி ஆழ்வாரந்தாதி அல்லது சடகோபரந்தாதி என ஓரந்தாதி பாடினார்.

"வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந் தோர்விரிஞ் சன்முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின்முன் செல்க குணங்கடந்த
போதக் கடலெங்க டென்குரு கூர்ப்புனி தன்கவியோர்
பாதத்தின் முன்செல்லு மோதொல்லை மூலப் பரஞ்சுடரே."

இம் முதற்பாடலுக்குப் பொருள் வருமாறு:—புராதனமாயும், சர்வத்திற்கும் மூல காரணமாயும், மேலானதாயும், ஜோதிஸ்வரூபமாயும் விளங்கா நின்ற ஸ்ரீமந்நாராயணன் வேதசாஸ்திரங்களுக் கெல்லாம் அதீதனாகையால் அவன் அவைகளைக்கடந்து சென்றாலும் செல்லட்டும்; அன்றியும் உண்மை நிலைகண்ட பிரமன் முதலானவர்களுடைய குற்றமற்ற ஞானத்தின் முடிவைக்கடந்து சென்றாலுஞ் செல்லட்டும்; ஏயகுணமில்லாத ஞான சமுத்திரமாய்த் தென்திசைக்கண் தாமிரவருணி நதிதீரத்திலுள்ள திருக்குருகூரில் அவதரித்த பரிசுத்தனாகிய எங்கள் சடகோபன் அருளிச்செய்த கவியின் ஒருபாதத்தைக் கடந்து செல்வானோ? செல்லமாட்டான் என்பதாம்.

"குணங்கடந்த போதக் கடலெங்க டென்குருகூர்ப் புனிதன் கவியோர் பாதத்தின்முன் செல்லுமோ?" அதாவது ஸ்ரீமந்நாராயணன் சடகோபனுடைய கவியின் ஒருபாதத்தைக் கடக்கமாட்டான் என்பது என்னையெனில்: பாண்டிநாட்டிலுள்ள திருக்குருகூரென்னுந் திவ்விய தேசத்தில் ஆழ்

வாருக்குக் கோயிலிலும் வீதிப்புறப்பாட்டிலும் வெகுகால மாக "வேதந் தமிழ்செய்த மாறன் சடகோபன்" என்பது முதலாகப் பற்பல விருதுகூறித் திருச்சின்ன மூதிவருவதை யும் பிரமோச்சவங் கண்டருளப் பண்ணுவதையும் பற்றி ஒரு காலத்தில் மதுரைச் சங்கத்தார் கர்வத்தால் அசூயை கொண்டு, "இந்த ஆழ்வார் பக்தரே யல்லாமல் பகவானல்ல வே? இவருக்கு விருது கூறித் திருச்சின்ன மூதுவதும் உற் சவம் நடத்துவதும் வியர்த்தமே? இஃது 'அணிற்பிள்ளையின் தலைமேலே அம்மிக்கல்லை வைக்கிறதுபோல்' இருக்கிறது, இவர் பாடின திருவாய்மொழி யென்ன சங்கமேறிய செய் யுளா? அதை வேதத்தமிழென்று அவ்வளவாகச் சிலாகிப் பது தகுதியல்லவே?" என்று, வாய்மதம்பேசி அபசாரப் பட்டார்கள். அத்தருணத்தில் ஆழ்வார் திருநகரியிலிருந்த வை ஷ்ணவர்களுக்கு மனஞ்சகியாமல் பதைத்தமையால், குரு கைப்பிரான் சந்நிதியிற்போய்அவர்கள் சாஷ்டாங்கமாய் விழு ந்து, சேவித்து "ஆழ்வாரே! உம்மையும் உமது திருவாய் மொழியையும் அவமதித்த சங்கத்தாருக்குக் கர்வபங்கமாம் படி தேவரீர் ஏதாவது பிராயச்சித்தம் செய்வித்தாலொழிய அடியோங்கள் எழுந்திருக்கக் கடவோமல்லோம்" என்று தீர்த்த வைராக்கிய சித்தர்களாய் மூன்றுநாள் வரையில் ஸ்நா னம் அநுஷ்டானம் ஜபம் ஹோமம் வேதபாராயணம் பகவ தாராதனம் முதலானவைகளும் இல்லாமற் கிடந்த கிடையா யெழுந்திராதிருந்தார்கள்.

அதுபற்றி ஆழ்வார் ஒரு விருத்த பிராமணனாகி வந்து "ஆர்காணும்! மூன்றுநாளாக இந்தக் கோயிலின் வாசலிற் கிடக்கிறவர்கள்? என்ன நிமித்தத்தால் இப்படிச் செய்வது?" என்று கேட்க, அவர்கள் "நம்மாழ்வாரையும் அவரது திரு வாய் மொழியான திரவிட வேதத்தையும் சங்கத்தார் இகழ் ந்தபடியினாலே அவர்களுக்கு ஆழ்வார் யாதேனும் பிராயச் சித்தஞ் செய்விக்கவேண்டும் என்பது எங்கள் அபிமதம்" என்ன, பிராமணன், "இந்தக் கலிகாலத்திலும் அப்படி நட க்குமா? இஃதென்ன பைத்தியம்?" என, வைஷ்ணவர்கள்

"நடந்தால் எழுந்திருக்கிறோம், நடவாவிட்டால் இங்ஙனமே அன்னபானாதிக ளில்லாமலிருந்து பிராணனை விட்டு விடுகிறோம்" என, ஆழ்வார் அவர்கள் மனோ நிச்சயத்தை அறிந்து குறுநகைகொண்டு "நீங்கள் சடகோபர் அருளிச்செய்த திருவாய்மொழியில் இன்ன பாடலின் இந்த பாதத்தை ஒருசிறு நறுக்கில் எழுதிக்கொண்டுபோய்ச் சங்கப்பலகையின்மேல் வையுங்கள், உங்கள் அபீஷ்டப்படி நடக்கும் என்று சொல்லி அந்தர்தானமாய் விட்டார். வைஷ்ணவர்கள் திருக்குருகைப் பிரானே இத்தன்மையாக எழுந்தருளினாரென்று தெரிந்து அவரருளிச் செய்தபடி செய்தார்கள்.

அவர்கள் அந்தத் திருவாய்மொழிச் செய்யுளடியை எழுதிய ஒரு சிறுமுறியைக் கொண்டுபோய் வைத்தமாத்திரத்தில் சங்கப்புலவர்கள் ஏறியிருந்த பலகையானது பொற்றாமரைத் தடத்தில் ஆச்சரியமாய் மூழ்கிவிட்டது. அதிலிருந்த புலவர்களெல்லாம் நீரில் திடீரென்று விழுந்து அமிழ்ந்து தத்தித் தடுமாறி எழுந்து மெல்ல நீந்திக் கரைசேர்ந்து பார்க்கும்பொழுது, அமிழ்ந்த பலகை உடனே குபீரென்று கிளம்பித் தன்னிடத்தில் வைக்கப்பட்ட சிறுமுறியை மாத்திரம் ஏந்திக்கொண்டு மிதந்தது. அவர்களதை யெடுத்து அதில் எழுதியிருக்கின்ற ஆழ்வா ரருளிச்செய்த ஆயிரப்பிரபந்தத்தின் தொண்ணூற்றைந்தாந் திருவாய் மொழியில்,

"கண்ணன் கழலிணைகள், நண்ணு மனமுடையீர்
எண்ணுந் திருநாமம், திண்ண நாரணமே."

என்னும் முதற்கவியின் முதற்பாதத்தை வாசித்தறிந்து உலகெலாம் உள்ளடக்கிய கண்ணன் கழலிணைகளைத் தன்னிடத்தில் அடக்கிய இச்சிறு முறிக்கு இடங்கொடுத்த சங்கப்பலகை இதனோடு சமான ஸ்கந்தமாக நமக்கும் இடம் கொடுக்குமா? கொடாததலால் நம்மை அகற்றிவிட்டதென்றும், சகலவேத சாஸ்திரங்களையும் பிறரால் கற்பிக்கப்படாமல் தாமே யுணர்ந்த சாட்சாத் பகவதம்சமாகிய ஆழ்வாருடைய தெய்வீகமான பாண்டித்தியத்திற்கு நமதுபாண்டித்தியம் சதாம்சத்தில் ஏகாம்சமுங் காணாதே யென்றும்

நினைத்துத் தூக்கித்து, மற்றும் திருவள்ளுவர் குறள் செய்த காலத்தில் அவரும் ஔவையும் இடைக்காடரும் சந்தித்த சமயத்தில் வள்ளுவரை நோக்கி மற்றை யிருவரும் "நீர் செய்த நூல் எத்தன்மைத் தாகியது?" என்று வினவ, அவர் "அகஸ்தியராற் பிரசித்தம் பண்ணப்பட்ட இயல் இசை நாடகம் என முத்திறத்ததாகிய தமிழும், என்னாற் செய்யப்பட்ட குறளும் உடைய நங்கையின் திருக்குமாரராகிய சடகோபர் அருளிச்செய்த திருவாய்மொழியின் புத்திரஸ்தானமாகிய வழிநூலா மென்னுங் கருத்தை உள்ளமைத்து,

"குறுமுனிவன் முத்தமிழு மென்குறளு நங்கை
சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்."

என்று சொன்னதையும்,

அது கேட்டு ஔவை, "அர்த்த பஞ்சகத்தையும் சதுர்வித புருஷார்த்தத்தையும் அறப்பால் முதலிய முப்பாலுள் அடக்கி அமைக்கப்பட்ட உண்மைப்பொருளாகிய எவ்வகைப்பட்ட வேதங்களுக்கும் சம்மதமான மேலான பொருளைக் குளிர்ச்சி தங்கிய தாமிரபருணி தீரத்திலிருக்கும் திருக்குருகூரிற் காரிமுதலியார் புதல்வராய் அவதரித்த நம்மாழ்வாரது திருவாய்மொழியாகிய திராவிட வேதமென்று சிலர் சொல்லுவார்கள்; நான் அவர்கள் சொல்லை மறுத்து அக்குறளை இந்த உலகத்திற்குத் தாயாகிய ஸ்ரீமந்நாராயணனாற் பிரமனுக்கு உபதேசிக்கப்பட்டு வந்த கீர்வாண வேதமென்றே சொல்லுவேன்" என்னுங் கருத்தை உள்ளிட்டு,

"ஐம்பொருளு நாற்பொருளு முப்பொருளிற் பெய்தமைந்த
செம்பொருளை யெம்மறைக்குஞ் சேட்பொருளைத்-தண்குருகூர்ச்
சேய்மொழிய தென்பர் சிலரியா னிவ்வுலகின்
தாய்மொழிய தென்பேன் றகைந்து."

என்று சொன்னதையும்,

இடைக்காடர் "திரவிட வேதமாகிய சேய்மொழியையும் கீர்வாண வேதமாகிய தாய்மொழியையும் ஆராய்ந்து சொல்லுமிடத்தில் இரண்டும் ஒன்றேயாம்; திருவாய்மொழி

யை யாவரும் சங்கையின்றி வேதமென்றே சொல்லுவார்கள்; திருவாய்மொழியைப்போலச் சிறந்த நூல்கள் அநேகம் உண்டென்று சிலர் குதர்க்கஞ் செய்தாலும், நானவர்களை மறுத்து அவைகளும் இந்தக் குறளும் அத்திருவாய்மொழியினது சாயையா யிருப்பவைகளென்றே சொல்லுவேன்" என்னுங் கருத்தை அடக்கி,

"சேய்மொழியோ தாய்மொழியோ செப்பிலிரண்டு மொன்றவ்
வாய்மொழியை யாரு மறையென்ப - வாய்மொழிபோல்
ஆய்மொழிகள் சகல வுளவெனினு மம்மொழியின்
சாய்மொழியென் பேன்யான் றகைந்து."

என்று சொன்னதையும் நினையாமற் போனோமே? அவைகளை நினையாவிடினும்,

ஒரு *காலத்தில் தாமிரபருணி நதியின் வடகரையில் வசித்திருந்த யோகி யொருவர் வளர்த்த நாயொன்று தென்கரையிலுள்ள ஆழ்வார் திருநகரிக்குப் பிரதிதினமும் மத்தியானவேளையிற் போய் வீதியிலிருக்கும் வைஷ்ணவர்களுடைய உச்சிஷ்டத்தைத் தின்று வயிற்றை நிரப்பிக்கொண்டு வருகிற வழக்கப்படி ஒருநாள் போய்த் திரும்பிவர நேரப்பட்டதனால், யோகியானவர் நாய் இன்னும் வரவில்லையேயென்று ஆற்றோரத்தில் வந்து பார்க்கும்பொழுது, அந்நாய் நட்டாற்றில் வருகையில், அகஸ்மாத்தாய் வெள்ளம் வந்தமையால் நீந்திக் காலோய்ந்துபோய் நீரில் அமிழ்ந்து இளம்பிற்று. அத்தருணத்தில் அதன் கபாலம் வெடித்து, அந்த ரந்திரத்தின் வழியாய் நாயின் ஆத்மாவாகிய ஜோதியானது எழுந்து அமாவாசை இருளில் அநேகம் மத்தாப்புக்கொளுத்தினதுபோலப் பிரகாசித்ததை பிரத்தியட்சமாகப் பார்த்து "அசேதனமாகிய நாயும் பெறுதற்கரிய பேறு பெற்றதே: இஃதென்ன சாதனத்தை யுடைத்தா யிருந்தது? ஒன்றுமில்லாதிருந்தும் ஆழ்வார் திருநகரியின் உச்சிஷ்டத்தை உண்டதனாலல்லவோ இப்படிச் சம்பவித்தது? இது தபசிகள் யோகிகள் ஞானிகள் முதலானவர்களுக்குஞ் சித்திக்கமாட்டாதே?" என்று நினைத்து, மனமுருகிக் கண்ணீர்விட்டு அழுது அவர்,

"வாய்க்கும் குருகைத் திருவீதி யெச்சிலை வாரியுண்ட
நாய்க்கும் பரம பதமளித் தாயந்த நாயொடிந்தப்
பேய்க்கு மிடமளித் தாற்பழு தோபெரு மாள்மகுடம்
சாய்க்கும் படிக்குக் கவிசொல்லுஞானத் தமிழ்க்கடலே."

என்பது முதலாகச் சில பாடல்களால் ஆழ்வாரை ஸ்தோத் திரித்ததையாவது, அல்லது வல்லபதேவ னென்னும் பாண் டியன் சபையிற் பெரியாழ்வார் கிழியறுத்துப் பரத்துவ நிர் ணயஞ் செய்தபொழுது நாம் கர்வபங்கப்பட்டதையாவது நினைக்கவேண்டுமே ? அப்படியுஞ் செய்யாமற் செருக்கினால் ஆழ்வார் விஷயத்தில் அபசாரப்பட்டோமே ? அவர் திருவா ய்மொழியையும் அவமதித்தோமே ? என்று எண்ணி யெ ண்ணி அநுதாபப்பட்டுப் பின்பு அவர்களெல்லாம் நிகர்விக ளாய் அவ்வபசாரத்தை ஆழ்வார் க்ஷமிக்கும்பொருட்டு அவ ருடைய மகிமை தங்கிய பிரபாவத்தைக் குறித்து,

"சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசமோ நாரணமோ – தாமம்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும்
உளவோ பெருமா னுனக்கு."

என்று பாடி த்துதி செய்தார்கள்.

சங்கப் புலவர்கள் அதற்கு'ப்பயரும் ஆழ்வார் விஷத் திற் பாடிய பாடல்களெல்லாம் ஒன்றுக்கொன்று ஒரு சொ ல்லாவது ஓரெழுத்தாவது எழுத்தின் உறுப்பாவது அசை சீர் தளை முதலியவைகளில் ஏதாவது சிறிதும் பேதமில்லா மல் இவ்வொரு பாடலின்படியே இருக்கக்கண்டு, "இஃ தென்னை அற்புதம்?" என்று அதிசயப்பட்டு, பின்பு அவ ரது திருவாய்மொழியின் ஏற்றத்தைப்பற்றி,

"ஈயா டுவதோ கருடற் கெதிரே யிரவிக் கெதிர்மின் மினியா டுவதோ, நாயா டுவதோ வுறுவெம் புலிமுன் நரியாடுவதோ நரகே சரிமுன், பேயாடுவதோ வழகூர் வசிமுன் பெருமான் வகுளா பர ணன் னருகூர்ந், தோவா துரையா யிரமா மறையி னொருசொற் பொருமோ வுலகிற் கவியே."

"நீயேயறிவை நினதகத் தேசிற்கு நேமியங்கை
யாயே யறியுமற்றுர றிவாரடி யோங்களுக்குத்

தாயே பொருநைத் திருக்குருகூர்த்தமிழ்க் காரிபெற்ற
சேயே நின்று திருவாய் மொழியின் செழும்பொருளே."

என்பதும் முதலாக சிற்சில கவிகள்பாடி ஸ்தோத்திரஞ் செய்து, அவ்வாழ்வாருக்கு அன்றுமுதல் விருதுகூறல் முதலிய சகல விபவங்களும் முன்னிலும் விசேஷ கிராடம்கமாய் நடப்பிக்கும்படி செய்தார்கள் என்பதாம்.

இது நிற்க சடகோபரந்தாதி பாடி முடிந்தவுடனே ஸ்ரீரங்கநாதர் சந்நிதியிற் கடல்போல விசாலமும் மலைபோல உந்நதமுமாகிய பெரிய ஆயிரக்கால் மண்டபத்திற் சதுர்சாஸ்திர பண்டிதர்களாகிய சமஸ்கிருத வித்வான் பூரண பாண்டித்யமுள்ள தமிழ்க் கவிஞர்களிலும், உபய கவிகளிலும் வைதிக சம்பிரதாயத்தையுடைய ஸ்மார்த்தர் மாத்துவர் வைஷ்ணவர்களென்னுந் திரிமதஸ்தர்களிலும், ராஜாக்கள் பிரபுக்கள் முதலானவர்களிலும் வெகுபெயர்கள் திரண்டு நிறைந்திருக்க, பிரபத்தி நிஷ்டாபரராகிய ஸ்ரீமந் நாதமுனிகள் திருவோலக்கத்திற் கம்பர் தெய்வவணக்கஞ் செய்து அவையடக்கமுங்கூறிக் கிரமமாக இராமாயணத்தை அரங்கேற்றினார்.

அரங்கேற்றும்பொழுது ஆரணியத்திற் சூற்பநகை மூக்கறுபட்டு இராவணனை நினைத்துக்கொண்டு புலம்பினதைச் சொல்லிய பாடல்களில் ஒன்றாகிய,

" உருப்படிவ மன்மதனை யொத்துளரே யாயினுமுன்
செருப்படியிற் பொடியொவ்வா மாநுடரைச் சீறுதியோ
நெருப்படியிற் பொறிசிதற நின்றமதத் திசையானை
மருப்பொடியப் பொருப்பிடியத் தோணிமிர்த்த வலியோனே."

என்பதை வாசிக்கக்கேட்டு அதில் "உன் செருப்படியிற் பொடியொவ்வா மாநுடரைச் சீறுதியோ?" என்பதைக் குறித்து அவ்விடத்திலிருந்த வைஷ்ணவர்களில் ஒருவர் கம்பரை "ஏன்காணும் சாட்சாத் பரப்பிரமமாகிய சக்கரவர்த்தித் திருமகனையும் இளையபெருமாளையும் ராட்சதப் பட்டிமகனாகிய ராவணனுடைய செருப்புக்காலில் ஒட்டிக் கொண்டிருக்கின்ற பொடிக்கும் ஒவ்வாத மாநுடரென்று

சொல்லி அபசாரப்படுகிறீர்" என்ன, கம்பர் பக்கத்திலிருந்த அம்பிகாபதி அவருக்குத் தண்டம் சமர்ப்பித்து, "சுவாமி! ஒரு விண்ணப்பம், யுத்தத்திற் கும்பகருணன் இறந்த செய்தி அறிந்து இராவணன் அழுததைக் குறித்துச் சொல்லுமிடத்தில் அவன் சுத்த வீரனுகையால் அழுதானென்று சொல்வது கௌரவத்தாழ்வென்று நினைத்து, பூர்வம் தனக்கு உண்டாகிய ராவணனென்னும் பெயரின் காரணத்தை அவன் வெளியிட்டானென்று உபசார வழக்காகச் சொன்னவர் ஒப்பற்ற பகவான் விஷயத்தில் அபசாரப்படுவாரா?" என்ன, ஸ்ரீமந்நாதமுனிகள் நகைத்தருளி அவ்வைஷ்ணவரை நோக்கி, உன் செருப்படியிற் பொடியொவ்வா மாநுடர்" என்றது, கம்பர் தாம் சொல்வதாகச் சொல்லாமல், துஷ்ட ராட்சதியாகிய சூர்ப்பநகை கூறுங் கூற்றுகச் சொல்வதாதலால் ராமலட்சுமணர்கள் அவள் அபீஷ்டப்படி நடவாததனுலும், அவள் மூக்கை அறுத்ததனுலும் அவர்களை விரோதித்து அவ்வரக்கி தூஷிக்கையில் இப்படியே சொல்லுவாளாகையால், இவ் வாக்கியத்திற்கு இது ஒருகருத்தாகும், செருப்படி என்பதைசெரு-படி எனப்பிரித்து, உனது யுத்த பூமியில் ஒரு தூசுக்கும் ஒப்பாகாத மனிதரென வேறு ஒரு கருத்துங் கொள்ளும்படி சிலேடையால் இரட்டுற மொழிதலாகச் சொன்னமையால் இது வித்வ சாமர்த்தியமே யல்லது அபசாரமன்று" என, அதைப்பற்றிச் சகலமானவர்களும் பரமசந்துஷ்டி யடைந்தார்கள்.

அப்பால் யுத்தகாண்டத்திற் கடல்காண் படலத்திற் சீதையைப் பிரிந்த பின்பு, தனது திருக்கண்களுக்கு இனமாக அவளைப்போன் றிருக்கின்ற தாமரை மலர்களும் இகழாகிய இமை மூடி உறங்குகின்ற இராக்காலத்திலும் நெடுநாளாகக் கண்ணுறக்கங் கொள்ளாத ஸ்ரீராகவன் இராவணன்மேற் படையெடுத்துப்போய்த் தெனசமுத்திரத்தின் வடகரையிற் பாளயமிரங்கித், தனக்குத் துணைசெய்யும்பொருட்டுப் பொங்கியெழுந்து எங்கும் பரந்துவந்த பெரிய வானரசேனை தன் புறத்திலும் அகத்திலும் புடைசூழும்படி அச்சமுத்திரத்தைக் கண்டா னென்பதை உள்ளமைத்த,

"பொங்கிப் பரந்த பெருஞ்சேனை புறத்துமகத்தும் புடைசூழச்
சங்கிற் பொலிந்த கையானைப் பிரிந்த பின்பு தமக்கினமாம்
கொங்கிற் பொலிந்த தாமரையின் குழுவுந் துயிலுற் றிதழ்குவிக்கும்
கங்குற் பொழுதுந் துயிலாத கண்ணன் கடலைக் கண்ணுற்றான்."

என்னும்பாடலை வாசிக்கும்பொழுது, பெருஞ்சேனை புறத்துப் புடைசூழவென்றது சகஜமே, அகத்துப்புடைசூழ வென்றது விளங்கவில்லையே அது என்னவெனச் சிலர் ஆசங்கிக்க, ஸ்ரீமந்நாதமுனிகள், சுவாமியானவர் வானரசேனை வீரர்கள் தந்தம் தாய் தந்தை அண்ணன் தம்பி மாமன் மைத்துனன் முதலாகிய இனத்தாரை யெல்லாம் விட்டுப் பிரிந்து நம் பொருட்டாகப் படைத்துணை வந்திருப்பது பற்றி, அவர்களுக்கு ராட்சதர்களால் ஏதாவது அபாயம் நேரிடுமானால், அவர்களினத்தார் இந்தராமன் பகைவரைச் சண்டைசெய்து வெல்வதற்கு நம்முடைய குடும்பத்தாரை அழைத்துப் போனானே போனவிடத்தில் தன் னுயிரைமாத்திரம் தித்திப்பாக நினைத்து உபாயமாய் ரட்சித்துக்கொண்டு, அவர்களைச் செவ்வையாய் பராமரிக்காமல் ராட்சதப்பேய்களுக்கு அநியாயமாய்ப் பலிகொடுத்து விட்டானே பாவியென்பதாக நம்மைப் பலவிதத்திலும் நொந்துரைப்பார்களாதலாலும், ஒரு சிக்குச் சிலுக்கில்லாமல் அவர்களைப் பாதுகாத்து மறுபடி நிலையிலே கொண்டுபோய்ச் சேர்ப்பது நமது கடமையாதலாலும் எல்லாரும்வந்து சேர்ந்தார்களா? அவர்கள் க்ஷேமமாயிருக்கிறார்களா? என்று அவர் ஒரு நொண்டிக்குரங்கையும் தப்பவிடாமல் மதிப்பிட்டுத் தமது திருவுளத்தில் வைத்தாரென்பது கொண்டு, அகத்துப் புடைசூழவென்று சொல்லப்பட்டதெனக் கம்பரது கருத்தை வெளியிட்டருள, அவர்கள் அப்படியா வென்று அதிசயித்தார்கள்.

அதன் பிறகு இரணியவதைப் படலம் வாசிக்கையில், அங்குள்ளவர்களில் வேறு சிலர் இராமாயணத்தில் எங்கும் இரணியவதை சொல்லக்காணோமே, இதேது நவீனமாயிருக்கிறதென்று கேட்க, கம்பர் இது புராணாந்தர மென்ன,

அவர்கள் புராணாந்தரமாயினும், சமஸ்கிருதபாஷையில் இராமாயணம் செய்த வான்மீகி முதலானவர்களாற் சொல்லப்படாததை நீர் சொன்னமையால் எவ்விதத்தில் ஒப்புக்கொள்வது, இதற்கு ஏதேனும் ஒரு திருஷ்டாந்தம் காண்பிக்க வேண்டும். அதாவது, இது சிங்கப்பெருமாள் சரித்திரமாதலால், இதை இந்தத் திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளியிருக்கும் மோட்டழகிய சிங்கரானவர் சிரக்கம்ப கரக்கம்பஞ்செய்து திருவுளம் உவந்தருள்வதுதான். அப்படியவர் அங்கீகரிப்பாரானால் ஒப்புக்கொள்ளுகிறதற்கு எவ்வுளவும் சந்தேகமில்லை யென்றார்கள். அதைப்பற்றி, ஸ்ரீமந்நாதமுனிகள் ஒன்றும் வார்த்தை சொல்லாதிருக்க, கம்பர் ஆகாத பஞ்சாங்கத்திற்கு அறுபது நாழிகையும் தியாச்சியமென்பதுபோல இக்காவியத்தை ஆரம்பித்த நாள்முதல் இடையூறு சம்பவித்தபடி யிருக்கிறதே இதென்ன தவக்குறை, நல்லது தெய்வசங்கற்பம் உள்ளபடியாகிற தென்றெண்ணி, அவ்விரணிய வதைப்படலத்தில் பிரகலாதாழ்வானை நோக்கி நீ சொல்லிய அரியென்பவன் எவ்விடத்திலிருப்பானென்று இரணியன் கேட்டதற்குப் பிரகலாதன் அந்தப் பரமாத்மன் அகண்டிதனாகையால் அவனை இன்ன இடத்தில் இருப்பான் இரானென்று கண்டிதப்படுத்திச்சொல்லவும், அவனுடைய அணுத்துவ விபுத்துவ அதிசயங்களை இன்னபடி யென்றறியவும் முடியாது, ஆயினும் ஒருவாறு சொல்லுகிறேன். அவன் ஒருசாணளவாகிய சிறியதுரும்பிலுமிருப்பான். ஓரணுவைச் சதகூறு செய்துபார்த்தால் அக்கூறுகள் ஒவ்வொன்றிலும் தனித்தனி இருப்பான். அன்றியும் பெரிய மேரு மலையிலு மிருப்பான். இங்கே நிற்கின்ற தூணிலுமிருப்பான். அவனில்லாத இடம் எதுவுமில்லை இவ்வுண்மையை அறியவேண்டுமாகில், தாமதியாமற்சோதித்துப் பாரென்றான். அதுகேட்டு இரணியன் சொல்லத்தொடங்கினனென்ற கருத்தத்தைத் தன்னிடத்திற் கொண்ட,

"சாணிலு முளனோர் தன்மை யணுவினைச் சதகூ றிட்ட
கோணிலு முளன்மா மேருக்குன்றிலு முளனிந் நின்றக்

தூணினு முளனீ சொன்ன சொல்லினு முளனித் தன்மை
காணுதி விரைவி னென்று ளூன்றெனக் கனகன் சொன்னான்."

என்னும் பாடலையும்,

தேவர்களுக்கும் உனக்கும் ஒரு தன்மையாய் இவ்வுலகெங்கும் நிறைந்திருக்கின்ற அரியென்பவன் மற்ற விடங்களிலெல்லாம் இருப்பானென்பது அப்படியிருக்கட்டும். இத்தூணினிடத்திலுமிருக்கின்றானென்று நீ சொன்னமையால் இதனிடத்தில் நான் காணும்படி அவனைப் பிரத்தியட்சமாகக் காட்டவேண்டும். காட்டாமற் போவாயானால் மஸ்தகத்தையுடைய யானையைச் சிங்கமானது அறைந்து கொன்றாற்போல உன்னைக் கொன்று என் பசிதீர உன் உடலைத் தின்று உதிரத்தைக்குடித்து தாகத்தைத் தணித்துகொள்ளுகிறேனெனப் பிரதிக்கினை பண்ணினான். என்ற கருத்தை உள்ளிட்ட,

"உம்பர்க்கு முனக்கு மொத்திவ் வுலகெங்கும் பரந்து ளானைக்
கம்பத்தின் வழியே காணக் காட்டுதி காட்டாயாயிற்
கும்பத்தின் கரியைக் கொண்மா கொன்றென நின்னைக் கொன்றுன்
செம்பொத்த குருதி தேக்கி யுடலையுந் தின்பே னென்றான்."

என்னும் பாடலையும்,

அப்பிரதிக்கினியைக் கேள்வியுற்ற பிரமஞானியாகிய பிரகலாதனுழ்வான் ஐயா! இப்பொழுது என்னுயிரைக்கொள்ளுகிறதாகப் பிரதிக்கினை பண்ணினையே இது வீண்தான். முன்பு எண்ணெய்க்கொப்பரையில் தள்ளினாய், கற்பாறையோடு கட்டிக் கடலில் விடுத்தாய், வாள் வேல் முதலான ஆயுதங்களைக்கொண்டு வெட்டிக் குத்தி எய்து எறிந்தும் பார்த்தாய், நானிறக்கும்படி மரணயாகமும் செய்வித்தாய், என்மேல் அஷ்டதிக் கஜங்களையும் ஏவினாய், அஷ்டமாநாகங்களையும் விட்டுக் கடிப்பித்தாய் பைக்குள்ளே போட்டு இறுக்கிக் கட்டிச் சம்மட்டி கொண்டும் அடிப்பித்தாய், மற்றும் எத்தனையோ வதைகளும் செய்வித்தாய்,அவைகளினாலெல்லாம் நானிறந்தேனா? என்னுடைய உயிர் உன்னாலே கொல்லப்படுவதற்கு அத்தனை எளிதானதல்ல, உன்பிரதிக்கினை

ஒன்றும் கைகூடிவராது இதோ என் பிரதிக்கினையைக்கேள். உனக்கு நான் முன்பு சொன்ன சர்வவியாபகன் நீ தொட்ட தொட்ட இடந்தோறும் அவசியம் தோன்ற வேண்டும், தோன்றாமற் போவானானால் என்னுயிரை நானே மாய்த்துக் கொள்ளுவேன். அப்படிச்செய்யாமற் பின்னும் உயிரோடு வாழ்ந்திருக்க விரும்புவேனாகில் நான் அந்த லோகாராட்டியனுக்குத் தாசபூத னல்லேனென்றான் என்பதைச்சொல்லிய,

"என்னுயிர் நின்னாற் கோறற் கெளியதொன் றன்றி யான்முன்
சொன்னவன் றொட்ட தொட்ட விடந்தொறுந் தோன்றா னாயின்
என்னுயிர் யானே மாய்ப்பன் பின்னும்வாழ் வுகப்ப னென்னின்
அன்னவற் கடிய னல்லே னென்றன னறிவின் மிக்கான்."

என்னும் பாடலையும்,

இப்படிப் பிரகலாதன் செய்த பிரதிக்கினையை இரணியன் கேட்டவுடனே தன் பகுவாயைத்திறந்து நல்லது நல்லதென்று அதட்டித் தந்தங்களெல்லாம் குப்பென்று பிரகாசிக்கும்படி நகைத்து உக்கிரத்துடனே தனக்கெதிரே இருந்த நெடிய வச்சிரத்தூணிற் பெரிய பர்வதத்தின்மேற் பிரளயகால இடி இடித்து விழுந்ததுபோல, வெற்றிபெற்ற புகழ்விளங்கிய தன் கையினால் ஓங்கி விசைகொண்டு ஓரறை அறைந்தான். அறைந்தமாத்திரத்தில் சர்வாந்தரியாமி யென்னும் தைத்திரியானவன் சிங்க வடிவுகொண்டு ஆவிர்ப்பவித்து அந்தத் தூணைப்பிளந்து அதில் நின்று அஷ்ட திக்குகளையும் திறந்து, அண்டத்தையும் கீறி அப்புறத்திலும் ஓங்கி அகிலபுவன சராசரங்களும் திடுக்கிடும்படி கலகலவென்று சிரித்தானென்பதைச் சொல்லிய,

"நகைதிறந் திலங்கப் பொங்கி நன்றுநன் றென்னநக்கு
விசைபிதந் தூருமு வீழ்ந்த தென்னவோர் தூணின் வென்றி
இசைதிறந் தமர்ந்த கையா லெற்றினா னெற்ற லோடும்
திசைதிறந் தண்டங் கீறிச் சிரித்தது செங்கட் சீயம்."

என்ற பாடலையும், ஜெகத்ராட்சகன் சிங்கவடி வெடுத்துத் தூணைப்பிளந்து அதன் நடுவில் அவதரித்து பிரசன்னமாய்ச்

சிரித்ததுகண்டு, பிரகலாதன் ஆனந்தத்தால் ஆடிப்பாடித் தொழுததைச் சொல்லிய,

“நாடினன் றருவ னென்ற நல்லறி வாள னாலும்
தேடிநான் முகனுங் காணுச் சேயவன் சிரித்தலோடும்
ஆடினு னழுதான் பாடி யரற்றினன் சிரத்தான் செங்கை
சூடினன் றொழுதா னோடி யுலகெலாந் நுகைத்தான் றுள்ளி”

என்ற பாடலையும் வாசித்தார்.

வாசித்த மாத்திரத்தில் மோட்டழகிய சிங்கர் தமது திருக்கரங்களை நீட்டி திருமுடியைத் துளக்கிப் பவளம்போ லும சிவந்த வாயைத்திறநது கடகடவென்று அந்த மண்டப மும் அதிர அங்குள்ள சகல மகாஜனங்களும நடுங்கச் சிரி த்து ஆர்ப்பரித்தார். அப்பொழுது எல்லாரும் அதிசயித்து, சிதம்பரத்திற் பாம்புகடித்து இறந்த தில்லை மூவாயிரவர் பிள்ளை நாகபாச படலத்தை வாசிக்கப் பிழைத்தது. இங்கே இரணியவதைப்படலம் வாசிக்கச சுகைதவடிவா யெழுந் தருளியிருக்கின்ற மோட்டழகிய சிங்கர் திருவுளமுவந்து அவ்வுவப்பு யாவர்க்கும் தெரியும்படி சிரக்கம்ப கரக்கம்ப முடனே அட்டகாசமுஞ் செய்தார். ஆதலால் இந்தக் காவி யம் அதிக மகத்துவமுடையதென்றும், இம்மகத்துவம் சக லருக்கும் பகிரங்கமாக வேண்டுமென் றல்லவோ இந்நூலில் அநதந்தச் சந்தர்ப்பம் கண்டு அதற்குத் தக்கவாறு விசே ஷார்த்தம் சொல்லிச் சமர்ப்பித்து வந்த ஸ்ரீமந்நாதமுனிக ளும் இது விஷயத்தில் மாத்திரம் வார்த்தை சொல்லாமல் மௌனமா யிருந்தாரென்றும் எண்ணி கம்பரைக்குறித்து மிகவும் மெச்சிக்கொண்டாடினார்கள்.

அதற்கு மேலும் அச்சபையிலுள்ள அறிஞர்கள் ஆங் காங்குக் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் ஏற்றபடி சமாதா னஞ்சொல்லி இராமாயணம் முழுவதும் வாசித்து முடித்த பின்பு ஸ்ரீமந்நாத முனிகள் இந்தக் காவியம இவ்வளவு சிற ப்புடையதாக இயற்றப்பட்டும், பாலில் விஷம் கலந்தாற்போல இடையிடையே நரஸ்துதி பண்ணப்பட்டதனா லல்லவோ இங்கிருக்கும் வைஷ்ணவர்கள் அருளைக்கொண்டு தில்லை

மூவாயிரவர் முதலியோருடைய கையொப்பம் வாங்கிவரும்படி இவரைப் பல விடங்களிலும் ஒடியுழலச் செய்தார்களென்று உய்த்துணர்ந்து, கம்பரை நோக்கி இதிகாசமாயும் பகவத்சரிதமாயு மிருக்கின்ற இதில் என்ன நிமித்தத்தால் நரஸ்துதி செய்யவந்ததென்று வினவ, கம்பர் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பமுதலியார் சிறுவயதுமுதல் தமக்கு நெடுநாளாக அன்னவஸ்திரங்கள் கொடுத்து ஆதரித்ததையும் அவரது பிரயத்தனத்தால் அத்திருவெண்ணெய் நல்லூரிலே இந்நூல் செய்யப்பட்டதையும், அம்பிகாபதி விவாகத்திற் பாதபூஜைநடக்கும் சமயத்திற் சகல மகாஜனங்களும்வந்து நிறைந்திருக்கும் கலியாணவாசலில் மேற்படி முதலியார் வந்து, "ஆயிரம் பனைப்பனுக்குப் பல்லுக்குத்த ஈர்க்குக் கிடையா" தென்பதுபோல, கிராமாதிபதியாகிய அவருக்கு இருக்க இடமில்லாததனால் அங்கிருந்தவர்களெல்லாம் எழுந்து அவரை இங்கேவரலாம் இங்கேயிருக்கலாமென்று உபசரித்தபொழுது, அவர் நீங்கள் ஆரும் எழுந்திருக்கவேண்டாம் சும்மா யிருங்கள் எனக்கு இதோ இடமிருக்கிறதென்று சொல்லி அவர்களை அங்கிருக்கச் செய்து ஒருவரும் இருப்பதற்கு யோக்கியமன்றி ஒழிந்திருந்த சாக்கடை வரம்பின்மேல் நின்றுகொண்டிருக்க, தாம் அவரைப்பார்த்து அத்தான் அவ்விடத்திலேயா இருக்கிறீர்கள் நல்லதிருங்களென்ன, அதுகேட்டுத் தமது மனையாள் சகியாமற் பரிதபித்து இத்தனை ஜனங்களுக்கும் இங்கே இடமிருக்க எங்கள் அண்ணா அவர்களுக்குமாத்திரம் அந்தச் சாக்கடையா கிடைத்ததென்ன, அடி பைத்தியக்காரி! உங்கள் தமையனாரை இந்த இடத்திலேயா வைக்கிறது, நான் வைக்குமிடத்தில் வைக்கிறேனென்று தாம் சொன்னதையும் விவரணமாக விண்ணப்பம்செய்து, இக்காரணங்கள் அனைத்தையும் கருதித் தான் அந்தப் பிரபுவை அடியேன் இதிற் சொல்லிவைத்தேனென்றார்.

ஸ்ரீமந்நாதமுனிகள் இது உபகாரஸ்மிருதியென்று திருவுளங்கொண்டு கம்பரைநோக்கி நீர் சொல்வதெல்லாம் சரி

தான், உம்மாலே பாடப்பட்ட பதினாயிரம் பாடலுக்குள் நூற்றுக்கொன்று விழுக்காடு நூறுபாடலில் அவர் பெயரைச் சொல்லியிருக்கிறீரே, இப்படி மகா காவியத்தில் அடிக்கடி சொல்லுவது யுத்தமல்ல; அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சாமல்லவா? ஆயிரத்துக்கொன்றாகப் பத்துப் பாடலில் மாத்திரமிருந்தாற் போதுமென்ன. கம்பர் அதுகேட்டு அருமைப்பட்டுப் பாடிய தொண்ணூறுபாடல் வீணாய்ப் போய்விடுகிறதேயென்று மனவருத்தப்படாமல் சுவாமி மகாபாக்கியம். கற்பகமும் காமதேனுவும் நாணத்தக்க ஔதாரியமுடைய அந்தப் பிரபுவின் குணாதிசயம் அடியேனுடைய சிற்றறிவுக்கு எட்டாமையால் விலையுயர்ந்த மாணிக்கத்தைக் குருவிந்தக் கல்லுக்கு ஒப்பாக மதிப்பவரைப் போல அவரை நூற்றுக்கொன்றாக மதித்தேன். தேவரீர் ஆயிரத்துக்கொன்றாக மதித்தது விசேஷமே யென்று சாதுரியமாகச் சொல்ல, ஸ்ரீமந்நாதமுனிகள் திருவுளமகிழ்ந்து கிருபைகூர்ந்து கம்பருக்குக் கவிச்சக்கரவர்த்தியெனப் பட்டப்பெயர் கொடுத்து, அவர் பாடின ராமாயணத்திற்கு அச்சபையிலிருந்த வித்வஜனர்களிற் சிலர் சாற்றுகவி கொடுக்கவும், அதில் இரண்டு கவியை எடுத்துத் திவ்வியப் பிரபந்தத்தோடு சேர்க்கவும், அந்தத் திவ்வியதேசத்தில் நடக்கும் உச்சவாதிகளில் அழகிய மணவாளன் திருவீதிப் புறப்பாடாகித் திரும்பிக் கோயிலுக்குட் செல்லும்பொழுதெல்லாம், அப்பெருமானைக் கம்பர் கட்டுவித்த மண்டபத்தில் எழுந்தருளப் பண்ணி திருவந்திக்காப்பு நடப்பிக்கவும், சடகோபரந்தாதியில் இரண்டு பாடலைத் திருக்குருகூரில் ஆழ்வார்சந்நிதியில் நித்தியப்படியாகச் சேவிக்கவும் வேண்டுமென்று கட்டளையிட்டு, தமது கோஷ்டியிலுள்ள வைஷ்ணவர்களைக் கம்பர் கவிச்சக்ரவர்த்திக்குப் பெருமாள் சேவை பண்ணுவித்து ஸ்ரீசடகோப முதலானவைகளும் பிரசாதியுங்களென்பதாக நியமித்தார்.

அந்நியமனப்படி அவர்கள் கம்பரை அழைத்துப்போய் சுவாமிக்குத் திருமஞ்சன முதலானவைகளும் சமர்ப்பித்து

பிரணவாகார விமானத்திற் சேஷசாயியாய் எழுந்தருளிய அப்பிரணவப் பொருளான ஸ்ரீரங்கநாதனையும், ஸ்ரீரங்க நாயகியாரையும் அவர் சேவிக்கும்படி செய்து, அவருடைய இராமாயண புஸ்தகத்தைச் சுவாமி திருவடியிற் சமர்ப்பித்து அவருக்குத் திருமாலைதீர்த்தம் பிரசாதம் ஸ்ரீசடகோபம் முதலானவைகளும் சாதிப்பித்து விசேஷ மரியாதை நடப்பித்தார்கள். அவைகளைக் கம்பர் பெற்றுக்கொண்டு, "அன்று நான் பிறந்திலேன்" என்று திருமழிசைப் பிரான் அருளிச்செய்தபடி கீழ்ப்போன ஜன்மங்களனைத்தும் அறிவின்றி அவலமாய்க் கழிந்ததனால், அப்பொழுதெல்லாம் அடியேன் பிறந்தேனல்லேன். இப்பொழுது ஜென்மசாபல்யமாகிக் கிருதார்த்தனாம்படி சதாசாரியகடாட்சம் வாய்க்கப் பெற்றமையால் இந்த ஜன்மமே உத்கிருஷ்டமான ஜன்மம், என் பாக்கியமே மகாபாக்கியம்" என்று நெஞ்சு குழையச் சரீரம் புளகிக்கக் கண்களில் ஆநந்தபாஷ்பம் பெருகப் பரவசமானார்.

"எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளில்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே."

இஃது இராமாயணம் பாடின இடத்தையும், அரங்கேற்றிய ஸ்தலத்தையுங் காலத்தையுங் குறித்து ஸ்ரீரங்கத்தாரில் ஒருவர் பாடியது.

"அம்பிலே சிலையை நாட்டி யமரர்க்கன் றமுத மீந்த
தம்பிரா னென்னத் தானுந் தமிழிலே தாலை நாட்டிக்
கம்பநா டுடைய கோமான் கவிச்சக்ர வர்த்தி பார்மேல்
நம்புபா மாலை யாலே நரர்க்குமின் றமுத மீந்தான்."

இது கவிச்சக்ரவர்த்தி யென்னும் பட்டப்பெயரைக் குறித்து ஒருவர் பாடிய சாற்றுகவி.

"இம்பர் நாட்டிற் செல்வ மெல்லா மெய்தி யரசோ டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்கு நீழ லிருந்தாலும்
செம்பொன் மேரு வனையபுயத் திறல்சே ரிராமன் றிருக்கதையில்
கம்ப நாடன் கவிதையிற்போற் கற்றோர்க் கிதயங் களியாதே."

என்பது முதலாக மற்றுஞ் சிலர்பாடிய சாற்றுகவிகளை மேற்படி ராமாயண புஸ்தகத்திற் காண்க.

இப்படிச் சாற்றுகவி கொடுக்கப்பட்ட பின்பு, கம்பர் ஸ்ரீமந் நாதமுனிகளையும் மற்றுமுள்ள பிரபந்நர் முதலானவர்களையுஞ் சேவித்து, அவர்களிடத்தில் நியமனம் பெற்றுக்கொண்டு, நம்பெருமாள் கோயிலிலிருந்து திருவெண்ணெய் நல்லூருக்கு வந்து, சடையப்ப முதலியாரைக் கண்டுபேசி, அவருக்குத் தாம் அரங்கேற்றிய செய்திகளையெல்லாம் விவரித்து, அவர் உபசரிக்கப்பெற்று, அங்கிருந்து உறையூருக்குப் போய்க் குலோத்துங்க சோழனைக் கண்டார். அவன் கம்பரை நோக்கி "அரங்கேற்றப் போய் வெகுநா ளாகிறதே, இவ்வளவுகாலஞ் சென்றது என்னவிதத்தால்?" என, அவனுக்கு அங்கே நடந்தவைகளையெல்லாம் ஆதியோடந்தமாகச் சொல்ல, அரசன் "அப்படியா?" என்று ஆச்சரியப்பட்டு "இது விஷயத்தில் வெகு பிரயாசப்பட்டீர், பட்டாலும் உமக்கும் காவியத்திற்கும் மிகுந்த சிறப்புண்டா யிருக்கிறது" என்று சொல்லிச் சந்தோஷப்பட்டு, "நல்லது! இவ்விடத்தில் நானும் நம்முடைய முதலியாரும் மற்றுமுள்ளவர்களும் ஒருமுறை உமது வாக்கினாலே இராமாயணம் முழுவதும் கிரமமாகப் பிரசங்கிக்கக் கேட்கவேண்டாமா?" என்ன, கம்பர் "தடையென்னே? அப்படியே செய்யலாம்" என, அரசன், பாண்டியன், சேரன், முதலானவர்களுக்குப் பத்திரிகை மூலமாக இந்தச் சமாசாரந் தெரிவித்துச் சகலமானவர்களையும் தன் தேசத்தில் வரவழைத்துச் சபை கூட்டுவிக்க, அச்சபை நடுவிற் கம்பர் வந்திருந்து தமது கற்றுச்சொல்லி கையேடு பிடித்து வாசிக்கப் பிரசங்கிக்கத் தலைப்பட்டார்:—

"பாத்த யானையிற் பதங்களிற் பமெத நாறக்
காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப்
பூத்த வேழிலைம் பாலையைப் பொடிப்பொடி யாகக்
காத்தி ரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு"

என்னும் வரைக்காட்சிப் படலத்துப் பாடலைச் சொல்லி "மிதிலைக்குப் போன தசரத மகாராஜன் சேனையிலுள்ள

மிருகமதங்கம், ராஜமதங்கம், பத்திரமதங்கம் என மூவகை யாகப் பகுக்கப்பட்ட யானைகளுக்குள்ளே ஒரு யானையா னது, தான் செல்லும் வழிகளிலே ஏழிலைப்பாலைமரம் புஷ்பித்த யானைமதம் நாறக்காற்றின் வழியே மோப்பம் பிடித்து, அங்குசம் நிமிர்ந்து போம்படி பாகன் மஸ்தகத்திற் குத்திக்குத்தித் திருப்பியுந் திரும்பாமற் காட்டுக்குள் ஓடி, அவ் வேழிலைம் பாலையைப் பிடுங்கித் தரையுடனே மோதிப் பொடிப் பொடியாக முன்னங்கால்களால் தேய்த்தது'' என்று பிரசங்கிக்கக்கேட்டு, அங்கிருந்த குடகதேசாதிபதி கம்பரை நோக்கி, "ஐயா! அநேகம் தலைமுறையாக யானை களைப் பிடிப்பதும போஷிப்பதும் விக்கிரயிப்பதும் எங்கள் குலத்தொழிலா யிருப்பதனால் யானைகளின் சாதி குணம் செய்கை உற்பத்திஸ்தானம் முதலானவைகளையும் பலகாலும் ஆராய்ந்து அறிந்துவரும் பெரு வழக்கமுடைய எங்களுக்கு இந்நாள்வரையில் ஏழிலைம்பாலை யானை மதநாற் றம் நாறுகிறதென்றும் அது யானைக்கு விரோதமா யிருப்ப தென்றும் தெரியாது; இப்படிப்பட்ட அபூர்வமான விஷ யத்தையும் தாங்கள் அறிந்து சொன்னதைக்குறித்து நானெ ன்ன சொல்வேன்? ஆந்திரபாஷையில் "ரவிகெருகனிதாவு கவிகெருகுனு'' என்பது வாஸ்தவந்தான்'' என்று சொல்லிக் கம்பரை மெச்சி, அவருக்கு அதற்காக ஒரு * கடகம் யானை வெகுமதி செய்தான். அப்பால்,

"தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத் தோடி
இருண்ட கல்லையுந் தங்கமாக்கின விரதம்.''

என்னும் பாடலைக்குறித்து, "பல நூல்களையும் கற்றுத் தெளிந்த பெரியோர்கள் கல்லாத முழு மூடர்களைச் சேர்ந் தாலும் அவர்களுடைய மயக்கமாகிய பேதைமைப் புத்

* "கடகம்'' பன்னிரண்டுயானை. "ஏழிலைப்பாலை'' ஏழிலைம் பாலை என வல்லொற்று மெல்லொற்றாய் மருவியது. இதுவடமொழி யிற் சப்தபர்ணம் எனப்படும்.

தியையும் மாற்றித் தங்களைப்போல அறிவுடையவர்களாகச் செய்வார்களென்னுமிது •ஆன்றோர்வழக்காதலால், சந்திரசைலத்தின் சாரலிலே பொன்னாற் செய்யப்பட்ட தேர்ச்சக்கிரங்கள் உருண்ட இடங்கள்தோறும் அப்பொன்னுருளைகள் தேய்த்துத்தேய்த்து ஓடுதலால் அந்தத்தேர்கள் அங்குள்ள இருண்ட கருங்கற் பாறைகளையும் தங்கமாக்கிவிட்டன" என்று பிரசங்கித்தபொழுது; சோழன் "இந்தத் தர்மம் உம்மிடத்திலேதான் விளங்கக்கண்டேன்" என்ன, கருணாகர பாண்டியன் "அஃதென்னை?" என்று கேட்க, சடையப்ப முதலியார் சொல்லத் தொடங்கினார்:—

"பூர்வம் சோழராஜாவின்மேற் கவிபாடிப் பரிசுபெறும் புலவர்களை ஒரு விறகுதலையன் பெண்சாதி பார்த்து, இவர்களெல்லாம் ஒருவேலையும் செய்து கஷ்டப்படாமற் பாட்டுப்பாடி எளிதிற் பணஞ்சம்பாதித்துச் சுகமாகச் சீவனஞ்செய்துவர, நம்முடைய புருஷன்மாத்திரம் காட்டுக்குப் போய்க் காலிற் கடுமுள்தைக்க, கட்டைவெட்டிக் கைகால் கடுக்க, நாள்தோறும் மாடுபோ லுழைத்து விறகு விற்று அரைவயிற்றுக் கஞ்சிக்கு மில்லாமல் அவதிப்படவேண்டியதென்னை? இதுவரையில் இந்த உபாயம் தெரியாமற் போயிற்றே? என்று தனக்குள்ளே சிந்தித்து "காரிகைகற்றுக் கவிபாடுவதினும்பேரிகைகொட்டிப்பிழைப்பது நன்று" என்பதை அவள் சிறிதும் உணராமையால், அது சுளுவென்று நினைத்து, தன் புருஷனை "நீ சீக்கிரமாய்ச் சோழராஜனிடத்திற் பாட்டுப்பாடிக் கொண்டுபோ, நமக்கு நல்லகாலம் வந்தது" என்றாள். அவன் "எனக்கோ பாட்டுத் தெரியாது, ஆயினும் பெரிதன்று, இதோ கற்றுக்கொண்டு வருகிறேன்" என்று தெருவிலே புறப்பட்டு வருகிறபொழுது, சில சிறுபிள்ளைகள் மரப்பாவைகளை வைத்து விநோதமாக விளையாடுமிடத்தில் அவர்கள் "மண்ணுண்ணிமாப்பிள்ளையே" என்று சொல்லக்கேட்டு, அதை ஞாபகப்படுத்திக்கொண்டு அப்புறஞ் செல்லுகையில், ஒரு காக்கை "கா" என்று கத்தக் கேட்டுக் "காவிறையே" என்றும், ஒரு சோலையில் குயில்

கூவக்கேட்டுக் "கூவிறையே" என்றும், ஒரு பிள்ளையார் கோயிலில் பெருச்சாளி ஒடக்கண்டு, அதைக் கல்லெடுத்து அடிக்கப்போய் "உங்களப்பன் கோவிற் பெருச்சாளி" என்றும் பாடம் பண்ணிக்கொண்டு திரும்பும்பொழுது, தன் சிநேகன் ஒருவன் எதிர்ப்பட்டு "எங்கேபோய் வருகிறாய்?" என, இவன் "பாட்டுக்கற்றுக்கொண்டு வரப்போனேன்; நீயும் கொஞ்சம் கற்பிக்கவேண்டும்" என, அவன் "அடா! கற்பிக்கிறதென்ன? ஒன்று இரண்டு மூன்று நான்றென்று பாடுகிறதுதானே" என, இவன் அதையும் பாட்டென்றே நினைத்து முன்பு தான் விளையாட்டுப் பிள்ளைகளையும் காக்கையையும் குயிலையும் பெருச்சாளியையும் பார்த்துக் கற்றுக் கொண்டதனோடு சேர்த்துக்கொண்டு இந்தமட்டிற் போதும் என்று வீட்டிக்குப்போய், அதைத் தன் பெண்சாதியுடனே சொல்ல, அவள் கொஞ்சம் புத்திசாலியாகையால் "இதிற் சோழன் பெயரில்லை, அதவசிய மிருக்கவேண்டும்" என்று இவருக்குச் சொல்லிக்கொடுத்த "சோழங்கப்பெருமானே" என்பதையும் அந்தப் பாட்டுக்கு அங்கிதமாகக் கடைசியில் வைத்துக்கொண்டு, அச்சமில்லாமல் ராஜசபைக்கு வந்து கம்பரைக்கண்டு கும்பிட, அவர் இவனை "நீயார்?" என்ன, "நான் ராசாவின்மேல் பாட்டுப்பாடி வந்தேன்" என்ன, அவர் 'இவன் விறகுதலையன்' என்றும், 'நம்மைக்குறித்து ஆரோ சொல்லக்கேட்டு வந்து அடுத்தான்' என்றும், 'அடுத்தவனைக் கைவிடலாமா? ஆசிர்வாத சம்ரட்சணை செய்ய வேண்டுமெல்லவோ' என்றும் எண்ணி அபிமானித்து, அவனுக்கு ராஜாவைக்காட்டிக் 'கும்பிடு' என்று குறிப்பித்து, அரசன் முதலானவர்களைப் பார்த்துப் ',பெரியோர்கள் இப்படித் தான் நீறுபூத்த நெருப்புப்போ லிருப்பார்கள். அவர்களை ஆதரிக்கத்தக்கவர்கள்" என்று சொல்லிச் சிவுக்கென்றெழுந்து, தாமிருந்த ஆசனத்தில் அவனை "இரு மிரும்" என்று உபசரித்து, பிறகு "நீர் பாடின பாடலைச் சொல்லும்" என்றார்.

அவன் எள்ளளவும் அச்சமில்லாமல் தைரியத்துடனே "மண்ணுண்ணிமாப்பிளையே, காவிறையே, கூவிறையே, உங்

களப்பன் கோவிற்பெரிச்சாளி, கன்னு, பின்னு, மன்னு, தென்னு, சோழங்கப்பெருமானே" என்று தான் கற்றுவந்த பாட்டை அசுவநாட்டியாய்ச் சொல்லக்கேட்டுச் சபையிலிருந்தாருள்ளவர்கள் யாவரும் "இது நல்ல பாட்டு" என்று சிரித்துச் சிமெய்ப்பித் கம்பரானவர் ஒட்டக்கூத்தர் முதலான வித்வசிரோமணிகள் முகத்தையம் நோக்கி "இது வெண்பா முதலிய பாக்களிலாவது எந்த விகற்பமான பாக்களிலாவது எதனோடு சம்பந்தப்பட்டது? நாம் போகிற விறகு யாதென்று அறிந்து சொல்வதல்லவோ வித்துவானுக்கு முறைமையழிந்ததை அதைவிட்டு நகைப்பதென்னை? பாடினவனாக நட்பித்துப் சொன்னாற் பிரயாசமில்லாமற் சாதுரியபாவமுள்ளவர்கள் ஏற்றியாவது அவ சொல்லுவார்; ஆயினும் நூல்செய்தவரே உரைசொல்லுவது ஒருவனுக்குச் சகல சம்பிரதாயமன்றோ? அதுபற்றி இவரைச் சொல்லும்" என்றார் கம்பர் "நாம் லுகிறது நியாயமன்று. அன்றியும் நாம் வித்துவான்களாயிருந்து சொல்லி, ருந்து பிறரைப் பொருள் சொல்லுமென்று கேட்டால் நமக்கென்ன பெருமை யிருக்கிறது? நம்மிலே ஆருவது ஒருவர் சொல்வதே யுக்தம்" என்றார். அவர்கள் இவனெவனோ வைத்தியக்காரன், தன் வாயிலே வந்தபடி தாறுமாறாக எதையோ குழறினால் அதைப் பாடலென்றும், அதற்குப் பொருள் சொல்லவேண்டுமென்றும் சொல்லுகிறாரே, இவர் அவனிலும் பெரியவைத்தியக்காரரா யிருக்கிறாரே யல்லாமல் வேறல்லர்; பொருள் சொல்லுங்களென்று பரீக்ஷிக்கிறதுபோல நம்மைக் கேட்கிறதென்னை? சொல்லத்தக்கதா யிருக்குமானால் இவரே சொல்லலாகாதோ?" என்று கம்பரை நோக்கித் "தாங்களே சொல்லலாம்" என்றார்கள். அவர் "உங்களுக்குள் நானு மொருவனாகையால் நானும் சொல்லலாம்; உங்கள் அபீஷ்டம் அப்படியிருக்கிறபடியினாலே நானேசொல்லுகிறேன்" என்று பொருள் சொல்லத் தொடங்கினார்:—

"இப்பாடல் இடையிடைச் சில சீர் குறைந் தியல்வதனால் இணைக்குறளாசிரியப்பா வாகும். இதன்பொருள், மண் - பூமியை, உண்ணி - உண்டவனே, மா-இலக்குமியின், பிள்ளையே - புதல்வனே, கா - கற்பகத்திற்கு, இறையே - தலைவனே, கூ - பூமிக்கு, இறையே - அரசனே, உங்களப்

பன் - உங்கள் தந்தை, கோ - இராசன், வில் - விற்போரில், ஒப்பரிசு - பெரிதாகிய, ஆளி - சிங்கம்போல்வாய், கன்னு - அடிக்கட னே, பின்னு - தருமனே, மன்னு - நிலைபெற்றவனே, றும் பாட - பாண்டியனை ஒத்தவனே, சோழங்கம் - சோழ சிநேகன் ஒரு அங்கத்தையுடைய, பெருமானே - பெருமை என, இவன் என்பதாய்; இது பதவுரை, மகாவிஷ்ணு பிருதி நீயும் கொஞசம் உலகாள்பவனுதலால் நீ விஷ்ணு அமிசம் கற்பிக்கிறதென ர், மண்ணுமணி யென்றும, குறைவற்ற பாடுகிறதுதானே யென்பார், மிக்க செல்வமுடையோனை லட் நினைத்து முன்பு றும் உலகவழக்குப்பற்றி மாப்பிள்ளையே யையும் குயிலே ாகத்தாற் தேவேந்திரனை ஒப்பாயென்பார் கொண்டா யென்றும, மக்களாய்ப் பிறந்தவர்களில் மிகச் என தானுதலால் நரேந்திரனே யென்பார் கூவிறையே யென்றும், நீயேயன்றி உன் தந்தை முதலியோரும் அரசா ளப் பெற்றவர்தா மென்பார் உங்களப்பன் கோ வென்றும், விற்போரிற் சிங்கம்போலப் புறங்கொடாது பகைவரைவெ ல்வாயென்பார் விற்பெரிச்சாளியென்றும், பெருங்கொடை வள்ளலே யென்பார் கன்னுவென்றும், பொறுமையிற் கன்ன னுக்குப் பின்னேனுகிய தருமனே யென்பார் பின்னுவென் றும், நெடுங்காலம் இழிவின்றி வாழ்வா யென்பார் மன்னு வென்றும், தமிழ்ப்புலமையிற் பாண்டிய ராசனைப்போல்வா யென்பார் தென்னுவென்றும், மலை கடல் நாடு முதலிய தசா ங்கத்தில் ஒன்றுகிய நாட்டிற் பெரியோ யென்பார் சோழங் கப்பெருமானே யென்றும் கூறினர்; இது பதசாரம். உங்க ளப்பன் - எழுவாய். கோ - பயனிலை. அன்றியும் நீ - தோ ன்று எழுவாயும், விற்பெரிச்சாளி-பயனிலையுமா மென்றும், இச்செய்யுளில் இடை இடையே உவமை உருவகமுதலிய சில அலங்காரங்களும் அமைக்கப்பட்டன வென்றும், அவை களையெல்லாம் எடுத்துக்காட்டி வீரமுதலிய எண்சுவைகளுந் தோன்றி அனைவர்க்குங் காணந்தத்தை விளைக்கும்படி அற்புதமாகப் பிரசங்கித்துச் சயர்த்தித்தார்" என்றனர்.

குலோத்துங்க சோழராஜன் முதலானவர்கள் அதைக் கேட்டு மிகவும் ஆச்சரியப்பட்டு, "இந்தப்பாட்டுப் பாடின

வன் மூடனும், பாடல் அரைக்காசு பெறாததுமா யிருந்தும், அவனை வித்வானென்றும், அதைப் பாடலென்றும் ஸ்தாபித்து அதற்கு இலக்கணத்தோடு பொருந்தப் பதப்பொருள் சொல்லிப் பதசாரங்கூறி மேற்கோளுங் காட்டி மெய்ப்பித்தாரே; இவருடைய வித்யாசாமாத்தியமே சாமர்த்தியம். இவரைச் சாரதாபீடமெனறே சொல்லவேண்டும்" என்று வியந்தார்கள். சோழராஜாவானவர், வழியேபோகிற விறகுதலையனுக்காகப் பாத்தியப்பட்டு அவன் குழறிவழிந்ததையும் பாடலாகக்கொண்டு அதற்கு இவ்வளவாக நட்பித்துப் பொருள்சொல்லிச் சமர்த்திக்த இவரைப் போற்றியாவது அவனைப் பெருமைப் படுத்தவேண்டுமென்று அவனுக்குச் சகல வெகுமதியுஞ் செய்தனுப்பினார். அதுகண்டு கம்பர் "நாம் முழுமூடனை ராஜசபையில் மகாவித்வா னென்றுசொல்லி, அவன் குழறலையும் பாடலென்று வற்புறுத்திப் பிரசங்கித்ததுபற்றிச சனமானத்துடனே அவனுக்கு வெகுமானஞ் செய்தனுப்பின அரசன் இனி யொருகாலத்தில அன்று கவி பாடிவந்த வித்வான் வெகுநாளாகியும் மறுபடியும் வரவில்லையே அவரை அழைப்பியுங்கள் அவரது வாக்கைக் கேட்க வேண்டுமென்றால், அப்பொழுது அவன் பண்டோலம் வெளிப்பட்டுப்போம். அதனால் நம்முடைய கௌரவத்திற்கும் குறைவுவரும்" என்று அந்த நாள்முதல் தமது கற்றுச் சொல்லிகளை விட்டு அவனுக்கு இலக்கண விலக்கியத்துடனே கல்வி பயிற்றி அதிசீக்கிரத்தில் மகா சமர்த்தனும்படி செய்து அப்புறம் ஒருநாள் அவனைச் சோழமகாராஜாவின் சபைக்கு வரவழைத்து, வேந்தனைக்கொண்டு சமிசை கொடுப்பித்துக் கவிபாடச்சொல்லி, அதை அவன் வாக்கினாலேயே பிரசங்கிக்கும்படி செய்தார். அதைப்பற்றித்தான் சோழமகாராஜா இந்தத் தர்மத்தைத் தங்களிடத்திலேயே கண்டோமென்பதாகக் கம்பரைக் குறித்துச் சொன்னார்" என்று சடையப்பமுதலியார் சொல்லக்கேட்டு, பாண்டியன் அதிக சந்தோஷப்பட்டு "இப்படிப்பட்ட வித்வசிரோமணியானவர் நாள்தோறுங் கால்நடையாய்ப் போக்குவரவு பண்ணப் பார்ப்பது நமக்கழகல்லவே. இவரை இனறுமுதலாவது

வாகன பிரதிஷ்டையோடிருக்கச் செய்யவேண்டும்" என்று அபிமானித்து, அவருக்கு யானைத்தந்தத்தால் விசாலமான தொட்டு சமைத்து, கணைக்குப் பொற்றகடு சித்திரித்து வேய்ந்து அடியிலே நீலத்தாற் கால்கடைந்து பொருத்தி,மரகத ரத்தினத்தாற் குமிழ் நிரைத்து, மேலுக்கு விசித்திரமாகிய சரிகை முகமற் பன்னுங்கு விரித்து, நெருங்க முத்துக் குச்சுத் தூக்கி, கணையின் இருபுறமும் தங்கத்தால் சிங்க உரு வமைத்து, அதற்கு அதிபுசிதமாகக் கொத்துவேலை செய்து கண்ணுக்கு நீலமும் பல்லுக்கு வச்சிரமும் வாய்க்குப் பத்மராகமும் அழுத்திய சிங்க லலாடம் அமைந்த விலையுயர்ந்த பல்லக்கொன்று வெகுமதியாகக் கொடுத்தான். பின்பு,

"தீயவரோ டொன்றிய திறத்தரு நலத்தோர்
ஆயவரை யந்நிலே யறிந்தனர் துறந்தாங்
கேயவரு நுண்பொடி படிந்துட னெழுந்தே
பாய்பரி விரைந்துதறி நின்றன பரந்தே."

என்ற பாடலைக் குறித்து, "துர்ச்சனருடைய குணதோஷங்களை ஆராயாமல் அவருடனே நட்புச்செய்த சற்சனர்கள் அந்தத் தோஷங்களைப் பழகியறிந்தபொழுது, அவைகளை தங்களுக்குச் சகிக்க முடியாமையால் அவரது நட்பைச் சீக்கிரத்திற் கைவிட்டதுபோல, சந்திரசைலத்தின் அடிவாரத்தில் தசரத மகாராஜாவின் சேனைபோ யிறங்கினபோது அங்கே வரிசையாகக் கட்டப்பட்ட சிந்துஜம், வனயுஜம், காம்போஜம், ஆரட்டஜம், பாரசீகம், பாஹ்லீகம் முதலான குதிரைகள் நிலத்திற்படுத்துப் புழுதியிற் படிந்து புரண்டு உடனே எழுந்து தத்தம் உடலை அசைத்து அதில் ஒட்டிய அப்புழுதிகளைப் பற்றற உதறிவிட்டு நின்றன" என்று பிரசங்கிக்கக்கேட்டு, அருகிலிருந்த சிந்து தேசாதிபதி "இந்த உபமானம் ரசமாயிருக்கின்றது" என மனமகிழ்ந்து, "இவருக்கு சித்தமாக நாமென்ன கொடுக்கப்போகிறோம்" என்று, எடுத்தமுகமும் நெறித்தசெவியும் நீண்டவாலும் நெற்றிமுதலிய ஸ்தானங்களில் நற்சுழிகளுமுடைய நூறு உத்தமஜாதிக் குதிரைகள் வெகுமதிசெய்தான்.

இந்தக் காவியத்தில் ஒவ்வொரு நயங்கண்டு குடகுதேசத்திற்கும் பாண்டியதேசத்திற்கும் சிந்துதேசத்திற்கும் அதிபதிகளானவர்கள் மெய்ச்சி அவரவர் தனித்தனியே யானை, குதிரை, பல்லக்குகள் வெகுமதிசெய்ததைப் பார்த்திருந்த கூர்ஜர தேசத்தரசன், அதற்கு முன் கம்பர்,

"தள்ளரும் பாரந் தாங்கிய வொட்டகம்
தெள்ளு தீங்கரும் பியாவையுந் தின்கில
உள்ள மென்னத்தம் வாயு முலர்ந்தன
கள்ளுண் மாந்தரிற் கைப்பன தேடியே."

என்ற எழுச்சிப்படலப் பாடலைக்குறித்து, "தசரதன் சேனையில், அநேகர் கூடித் தள்ளினாலும் தள்ளக்கூடாத அதிக பாரமாகிய சுமைகளை ஏந்திச்செல்லும் ஒட்டகங்கள், தாம் செல்லுகின்ற மார்க்கத்திற் கண்டகண்ட இடங்கள்தோறும் தொடையளவு பருமனாய்க் கமுகுபோல நெடுக வளர்ந்து மிக முதிர்ந்து கணுக்களின் இடையே வெடித்துத் தேனொழுகுகின்ற தீங்கரும்புகள் அபரிமிதமா யிருக்கக்கண்டும், அவைகளைத் தின்னுமல் கள்ளுண்பவர்கள் தங்களுக்குச் சுவைதங்கிய நல்ல பால் தயிர் முதலானவைகள் விசேஷமாகக் கிடைத்தாலும் அருந்தாமல் வயிற்றிற் பசிதுள்ள, தாகத்தால் நெஞ்சு வறளக் கள்ளு எங்ஙனம் விற்கின்றதென்று அதை நாடிச் செல்வதுபோல, கசப்பாகிய வேப்பிலை எங்கிருக்கிறதெனத் தேடிப்போய்த் தம்முள்ளம்போல வாயும் அடிக்கடி அசைபோடுவதினால் உலர்ந்துபோயின" என்று பிரசங்கித்தது கேட்டிருந்தும் அப்பொழுது, அதைப்பற்றித் தான் அவருக்கு ஒன்றுஞ் செய்யாமற் போனதைக் குறித்து லஜ்ஜையடைந்து, "இவர்களைப்போல நாமும் ஏதாவது செய்வதல்லவோ நமக்குக் கௌரவம்" என்றெண்ணிப் பிறகு தன் தேசத்திலுண்டாகிய ஒட்டகங்களில் இருபது ஒட்டகங்கொடுத்தான்.

"அமிழ்திமைத் துணைகள் கண்ணுக் கணியென வமைந்த மாபோல்
உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப நோரார்
அமிழ்தினைச் சுவைசெய் தன்ன வழகினுக் கழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞால மேழைமை யுடைத்துமாதோ."

என்று கோலங்காண் படலப் பாடலைக் குறித்து, "பிரமதேவன் ஸ்திரீ புருஷர்களுடைய கண்களுக்கு மேலிமை கீழிமை இரண்டும் அழகென்று நினைத்து அவை பார்வையை மறைக்குமெனபதை நினையாமற் படைத்தது போல, வண்ணமாதர்கள் குற்றமற்று ஒளிவீசுகின்ற மாணிக்கம் மரகதமுதலிய முழுமணிகள் இழைத்துச் சமைத்த நானாவித திவ்வியாபரணங்களைக்கொண்டு அவை சீதையின திருவுருவத்தைமறைக்குமெனபதை யோசியாமல், சுவையுடைப் பொருள்கள் எல்லாவற்றினும் மிக்க சுவையுடைய தேவாமிர்தத்திற்கு இயல்பாயுள்ள அச்சுவை போதாதென்று பால் பழம் சீனி தேன் என்னும இவைகளின் றற் சுவை கற்பித்ததுபோல, ஜானகியின் இயற்கை அழகுக்கு ஏற்றத்தை உண்டாக்க வேண்டுமென்று செயற்கை அழகு செய்தார்கள்; இங்ஙனம கடல்சூழ்ந்த உலகமானது அறியாமையை யுடையதாயிருக்கின்றது" என்று பிரசங்கித்தபொழுது, காஸ்மீர தேசாதிபதி கம்பரை நோக்கி, "உலகம் அறியாமையுடைய தென்பதற்குச் சாதாரண வழக்கத்தில் திருஷ்டாநதம சொல்லவேண்டும்" என, கம்பர் "அநேக மிருக்கின்றன; அவற்றுள் ஒன்று கேளுங்கள், ஆடி மாதத்தில மாமி வீட்டில வாழ்கின்ற பெண்ணைத் தாய்வீட்டுக்கு அழைத்துவந்து விடுகிறதும, தாய் வீட்டிலிருக்கிற பெண்ணை மாமி வீட்டுக்கு அனுப்பாம லிருக்கிறதும. இது நெடுநாளைய வழக்கமா யிருக்கின்றது. இதன காரண மென்னவெனில், ஆடிமாசத்திற கர்ப்பம தரிக்குமெனறும, பத்தா மாதம் பிள்ளை பிறக்குமென்றும், அப்பத்தாமாதம சித்திரைமாதமென்றும, 'சித்திரை மாதத்திற் செல்வன் பிறந்தால் அனகுடிக்கு அநாத்தமாம்' என்றும் நினைக்கின்ற பிராந்தியே. இவர்கள் ஸ்ரீராமர் அவதரித்தது சித்திரைமாதமென்று அறியார்போலும். அந்த ஆடி மாதத்திலேயே கர்ப்பம் தரிக்குமென்ற நிச்சயநதா னெனனை? 'ருஷிபிண்டம் ராத்தங்காது' எனபதோ? அப்படியன்றி, ஆவணி புரட்டாசிகளிற் கர்ப்பந் தரிக்கிறதில்லையா? நல்லது கர்ப்பந் தரித்த பத்தாமாதத்தில் தானு பிள்ளை பிறக்கிறது? பத்துக்கு

மேல் பதினோராமாதம் பன்னிரண்டா மாதம் பிறக்கிற தில்லையா ? அல்லாமலும் ஒன்பதாமாதம் எட்டாமாதங்களி லும் பிறக்கின்றதே. கோசலைப் பிராட்டியானவள் கர்ப்பம் தரித்த பன்னிரண்டாமாதத்தி லல்லவோ பிரசவித்தாள். இத்தனை கொள்ளையும் பிரவிடையான பெண்ணுக்குத் தானே? பிரவிடையாகாத பெண்ணுக்கு வந்த விதியென்ன? அவளையும் தாய்வீட்டுக்கு அழைத்து வந்து விடுகிறார்களே, இதுவும் விவேகமா ? பூ மலர்ந்தபின்பல்லவோ மணம் வீசும் ? மலராத பூவுக்கு மண மேது ? இஃதென்னை பேதைமை" என்று சொல்லக்கேட்டு, "இவருக்கு உலக வழக்கங்களும் விசேஷமாய்த் தெரிந்திருக்கின்றன" வென்று அதிசயித்து, அவ்வரசன் தன்தேசத்தில் நெசவுசெய்யப் பட்டு ஒவ்வொன்று ஆயிரம் இரண்டாயிரம் விலையேறப் பெற்ற சால்வைகளில் மிகவும் உயர்ந்த பத்துச்சால்வை வெகுமானம் பண்ணி, அவற்றுள் ஒன்றை எடுதது விரித்து தன்கையாற் கம்பருக்குப் போர்த்துவிட்டான்.

பின்னும் அப்படலத்தில்.

"கோனணி சங்கம் வந்து குடியிருந் தனைய் கண்டத்
தினமில் கலன்க டம்பி லியைவன வணிதல் செய்தார்
ம னணி நோக்கி னார்த மங்கலக் கழுத்திற் கெல்லாம்
தானணி ய ய போது தனக்கணி யாது மாதோ."

என்ற பாடலைக்குறித்து, "சீதைக்கு மணக்கோலஞ் செய் வோர், மான்போன்ற அழகிய பார்வையையுடைய பெண் களின் மங்கலமாகிய கழுத்துக்கெல்லாம் சீதை பிரதான பூஷணமா யிருக்கும்பொழுது, அவளுக்குப் பூஷணமேதுக் கென்று நினையாமற் பூஷணத்திற்குப் பூஷணமிடுவதுபோல, ஸ்ரீமந்நாராயணன் கரத்தில் ஏந்துவதும் ஆயிரஞ் சலஞ்சலச் சங்கம் புடைசூழ, அவைகளின் நடுவே அரசு வீற்றிருப்பது மாகிய மாட்சிமைதங்கிய பாஞ்சசன்னியம் வந்து குடிபுகுந் ததுபோன்ற அவளது திருக்கழுத்தில் ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் என்னும் நால்வகைப் பொன்னிற் மளங்க ரகிதமாய் மாற்றுயர்ந்த ஓர்வகைப் பொன்னாற்

செய்து, மாசற்ற மணிபதித்த பூஷணங்களுக்குள் கழுத்துக்கிசைந்து சிறந்தவைகளாகிய பல பூஷணங்களையும் அணிந்தார்கள்" என்று பிரசங்கிக்கக் கேட்டு, கூர்ச்சர தேசத்து ரத்நவர்த்தகனொருவன் "பெண்கள் கழுத்திற்குச் சிறைதை ஆபரணமாயிருக்கிறதென்பது என்னை?" என, கம்பர் "மாதர்கள் கழுத்திற்கு மங்கலக் குறியா யிருப்பது தாலி; அது திருவாகிய லட்சுமி விலாசம் பெற்றமையால் அதற்குப்பெயர் திருவென்றும், இச்சிறைதயே இத்திருவாதலால் இவளை அப்பெண்கள் கழுத்திற்கு ஆபரணமாயிருப்பவளென்றும், இங்ஙனம் கூறியது" என்றார். அதற்காக அவ்வர்த்தகன் சந்தோஷமுற்றுக் கம்பருக்குப் பச்சை செம்பு வச்சிரம் நீலமுதலான நவரத்னமிழைத்த பற்பல ஆபரணங்கள் வெகுமதி செய்தான்.

ஆரணியகாண்டத்திற் சரபங்கபடலத்தில், சரபங்கர் ஆசிரமத்துக்குச் சென்று அவரிடத்தில் தான் குறித்துப் போன செய்தியைப்பற்றிப் பேசிப் பயன்படாமையால் திரும்பிவரும் இந்திரன் தனக்கெதிரே ஸ்ரீராசவர்வரக்கண்ட மாத்திரத்தில் ஆநந்த பரவசமாய் அவரை ஸ்துதிசெய்கையில்,

> "நாழிகைவை நீருலகெலாமாக நளினத்துநீதந்த நான்முகனுர்தாமே, ஊழியலபலவு நின்றளந்தாலொன்று முலவாப்பெருங்குணத்த வுத்தமனேமேனுள், தாழிதரையாகத் தண்டயிர்நீராகத் தடவரையேமத்தாகத் தாமரைக்கைந்நோவ, ஆழிகடைந்தமுதமெங்களுக்கேயீந்தா யவுணர்கடாமுனக் கடிமையல்லாமையுண்டோ."

என்ற பாடலைக்குறித்து, "குற்றமற்ற அண்டங்களெல்லாம அளவு கருவிகளாக, திருநாபிக் கமலத்தின் வழியாக நீயீன்றருளிய சதுமுகப் பிரமன் அளவுகாரனுக, அவன் தன் வாழ்நாளாகிய ஒரு கற்பகாலமேயன்றி அநேக கற்பகாலம் உன் கடாட்சத்தால் முடிவின்றி யிருந்து, உனது கல்யாண குணங்களைத் தானிய ராசிகளாகக்கொண்டு அளந்தால் அவற்றுள் ஒரு ராசியாயினும் மாளாது; அப்படி மாளாத

திருக்கின்ற அனந்தமாகிய பெருங்குணத்தையுடைய புருஷோத்தமனே! பூர்வம் பூமியே தயிர்த்தாழியாக, தண்ணீரே தயிராக, பெரிய மந்தரகிரியே மத்தாக, தாமரை மலர்போன்ற உன் திருக்கைகள் நோவ, கடலைக்கடைந்து அமுதத்தை எடுத்து "பள்ளமிறைத்தவனுக்குப் பங்கு" என்ற பழமொழிப்படி, எங்களுடனேகூடப் பாடுபட்ட அசுரர்களுக்குப் பகிர்ந்துகொடுக்க நியாயமுண்டா யிருந்தும், அவர்களுக்குக் கொடாமல் எங்களுக்கு மாத்திரமே கொடுத்தருளினாய்; அப்படிச்செய்தது உனக்கு நாங்கள் அடிமையாயிருப்பது பற்றியோ, வேதாகமங்கள் ஆத்மாக்களெல்லாம் அநாதியே ஈஸ்வரனுக்கு அடிமையென்று பிரதிபாதிக்கிறதை நோக்குமிடத்தில் அவ்வசுரர்கள் தாம் உனக்கடிமையாகாது ஒழிந்திருப்பதுண்டோ" என்பதாகப் பிரசங்கிக்கக்கேட்டு, சடையப்பமுதலியார் "பரமாத்துமனுடைய சுகுணங்களைத் தானிய ராசியாகவும், பல்லாயிரகோடி அண்டங்களையும் படிமரக்கால்களாகவும், பிரமனை அளவுகாரனாகவும் உருவகப்படுத்தினது மிகவும் அழகாயிருக்கின்றது" என்று பரம சந்துஷ்டியடைந்து, கம்பருக்கு அன்றுமுதல் அவருடைய ஆயுள்வரையிற் பிரதிவருஷமும் ஊசிபோன்ற நல்ல சன்னசம்பா நெல் பப்பத்துக் கரிசைக்குக் குறையாமற் கொடுத்துவந்தார்.

கிஷ்கிந்தா காண்டத்தில் வாலிவதைப் படலத்தில், இராமபாணம் வந்து மார்பில்தைத்த சமயத்தில்,

"அரக்கரோ ரழிவு செய்து கழிவரே லதற்கு மாறோர்
குரக்கர சதனைக் கொல்ல மனுநெறி கூறிற் றுண்டோ
இரக்கமெங் குகுத்தா யென்பா லெப்பிழை கண்டா யப்பா
பரக்கழி விதுநீ பூண்டால் புகழையார் பரிக்கற் பாலார்."

என்ற பாடலைக்குறித்து, வாலி ராகவனைப்பார்த்து, "அப்பா ரகுநாயகா! இராக்கதர்கள் வந்து உன் மனைவியை அபகரித்துக்கொண்டு உனக்குக் குற்றஞ்செய்துபோனால், உன் விஷயத்தில் அப்படி அபராதிகளானவர்களைச் சிட்சியாமல், 'அடுப்பெரியாத கோபத்தை அம்மையார்மேல் காட்

டுவது' போலக் காட்டிலே நிரபராதியாயிருக்கின்ற குரங்குகளுக்கு ராஜாவாகிய என்னைக் கொல்லும்படி நீ வாசித்தறிந்த மநுநீதி ஏதாவது சொல்லியிருக்கின்றதுண்டோ? உங்கள் வமிசத்திற்கு இயற்கையா யிருக்கின்ற சீவகாருணியத்தை எங்கே சிதறிவிட்டாய்? என்னிடத்தில் என்ன தோஷங் கண்டாய்? கௌரவத்தாழ்வாகிய பழிக்கு நீ உட்பட்டாயேயானால் இனிப் புகழெனபதைப் பரிக்கத் தக்கவர்கள் ஆரிருக்கிறார்கள்?" என்று சொல்லக்கேட்டு ஸ்ரீராமன் அவனை முன்னிட்டு, "அடாவாலி! அரக்கா செய்த குற்றத்தைக்குறித்து நானுன்னைக் கொன்றதாக நீ தவறாய்ச சொல்லுகிறாய்; உன்னைக்கொன்றது அதைப்பற்றி யன்று, மேலும் நான இரக்கத்தைக் கைவிட்டதாய்ப் பேசினாய்; நல்லது துர்ச்சனாகளுககு இரக்கங் காட்டலாமா? என்னிடத்திலே நீ எனன பிழை கண்டாயென்று கேட்டாய்; சுக்ரீவன் மனைவியை அபகரிததனை மறந்து போயினையே? பழியை நான் தேடிக்கொண்டதாய்ச் சொல்லவந்தாய்; துஷ்டநிக்கிரகஞ் செய்வது பயிர்க்குக் களையெடுக்கிறதுபோலல்லாமல் ஒருபொழுதும பழிபாவ மாகாதெனறு அறியாயா?" எனச் சொன்னதாகப் பிரசங்கித்தார்.

சபையிலிருந்தவர்கள் கம்பரைநோக்கிச் "சுவாமி பின்புறத்திற் பதுங்கி யிருந்து வாலியின்மேற் பாணப்பிரயோகஞ் செய்தது வீரதர்மமா?" என, கமபர் "இநதக்கேள்வி வாலியே கேட்டிருக்கிறான" என, அவர்கள் "அவையெவை" என, வாலி சுவாமியை எதிரிட்டு, "ராமா! நான் சுக்ரீவன் மனைவியை அபகரித்ததாகச் சொன்னையே, தம்பி பெண்சாதியை அண்ணன் சுதந்தரிப்பதறகுப் பாத்தியமில்லாமற் போயிற்றா? அதற்காக நீ என்னைக் கொல்ல ஏற்பட்டது அநியாயந்தானே" என, சுவாமி, "இஃதென்ன முறைக்கேடான பாத்தியம்? நீ என்ன சொன்னாலும் அக்கிரமஞ் செய்தவர்களை அரசர்கள் தண்டியாமல் விடமாட்டார்கள்" என, வாலி "மிருகங்களுக்கு முறையென்பதும், முறைக்கேடென்பதும் உண்டோ? இல்லையே, ஆதலால்

இஃது அக்கிரமம் அன்று" என, சுவாமி மிருகம் இப்படிச் சொல்லாம் நியாயங் கேட்குமா? கேளாதாகையால் நீ சொல்வது சரியன்று" என, வாலி "அஃதிருக்கட்டும், நாங்கள் இருவரும் தொந்த யுத்தஞ் செய்கையில் நீ என்னைக் கொல்வது தாமமா?" என, சுவாமி, "தன் கன்றைப் புலியடிக்க வரும்பொழுது பசு அப்புலியைப் பாயாமல் அதனிடத்திற் கன்றைக் காட்டிக்கொடுத் திருக்குமோ?" என, வாலி "தமையன் தம்பிகளாயிருக்கும் எங்கள் இருவருக்குள் நீ ஒருவன் பட்சத்தில் நட்பும் மற்றவன் பட்சத்திற் பகையும் பாராட்டலாமோ?" என, சுவாமி, "சுக்ரீவன் வந்து என்னை அபயமென் றடைந்தபடியினாலே உதவிசெய்து அவனை ரட்சித்தேன்; நீ அவனுக்குத் தீங்கு செய்ததனால் உன்னைச் சிட்சித்தேன்" என, வாலி "செங்கோல் முடி முதலான ராஜசின்னங்களையும் அதிகாரத்தையும் பரதனுக்குக் கொடுத்துவிட்ட நீ என்னைத் தண்டித்தது எவ்விதத்தால்" என, சுவாமி "என் அதிகார முதலானவைகளையும் பரதனுக்கு நான் கொடுத்துவிட்டாலும் அவன் சித்திரகூட பர்வதத்திற்கு வந்து என்னைக் கண்டபொழுது வனத்தில் ராட்சதர் முதலிய துஷ்டாத்மாக்களைக் கண்டாற் சிட்சியாமல் விடவேண்டாமென்று எனக்கு ஆக்யாபித்திருக்கிறான்" என, வாலி "அப்படியானால், எனக்கெதிரே வந்து போர்செய்யலாமே, பின்னிருந்து அம்பெய்தது என்னை?" என, சுவாமி "திருடனைப் பதுங்கிப் பிடித்தாலல்லவோ அவனகப்படுவான்?" என, மற்றும் இவ்வாறு அநேகங் கேள்விகள் வாலி கேட்க, அவைகளுக்கெல்லாம் சுவாமி தக்கபடி உத்தரஞ் சொல்லியிருக்கிறார்" என்று சொல்ல, யாவரும் சந்தோஷித்தார்கள்.

"ஆழ நீர்க்கங்கை யம்பி கடாவிய
ஏழை வேடனுக் கெம்பியுன் றம்பிநீ
தோழ னங்கை கொழுந்தி யெனச்சொன்ன
ஆழி நண்பினை யுன்னி யழுழுகுவாள்:"

என்கிற சுந்தரகாண்டம் காட்சிப்படலப் பாடலைக்குறித்து "ஆஞ்சநேயர் அசோகவனத்தில் எழுந்தருளியிருக்கும் பிரா

ட்டியை ஒரு மரத்தின்மேலேறி இவர் எப்படிப்பட்ட ஸ்திதியிலிருக்கிறரோ அறிவோம் என்று பார்த்துக்கொண்டிருக்கையில், அவள் வேறொரு எண்ணமுமின்றிச் சார்வதா சுவாமியினிடத்திற் சிந்தை வைத்தவளாய் அவரைச் சொப்பனத்திலும் மறவாமல் உலகத்தில் யாவராயினும் ஒருவரையொருவர் நேசிக்குங்கால், குலம் கல்வி செல்வம் ஈகை வீரம் புகழ் ஞானம் ஒழுக்கம் முதலியவைகளில் மிக்குயர்ந்தவர்களையே நேசிக்க வேண்டுமென்பது முக்கிய தர்மமாயிருக்க, உத்கிருஷ்டமாகிய க்ஷத்திரிய குலமும் சரஸ்வதியுங் நாணத்தக்க பூரணமான கல்வியும், குபேரசம்பத்திலும் அதிகமாய் அளவிடப்படாத சம்பத்தும், கற்பகம்போன்ற மாறாத ஈகையும், எவர்களாலும் வெல்லப்படாத வீரமும், அண்டமுற்றும் அளாவிய புகழும், திவ்விய ஞானமும், இடையறாத நல்லொழுக்கமு முடையவராகிய சக்கிரவர்த்தி திருமகனார் ஆழமாகிய நீரையுடைய கங்காநதியிற் படவு ஓட்டுகின்றவனும், மேற்சொல்லிய கல்வி முதலானவைகளில் ஏழையுமாகிய குகனென்னும் வேடனைக் கங்கைக்கரையிற் கண்டு தமது மேன்மையையும் அவனது கீழ்மையையும் பொருள் செய்யாமல் நேசித்தகாலத்தில் அவனுக்கும் தமக்கும் வேறுபாடில்லாமல் என் தம்பி உன் தம்பி என்றும், நீ என்தோழன் என்றும், என் பெண்சாதி உன் மைத்துனி என்றுஞ் சொல்லி அன்பு பாராட்டிய அந்தக் கடல்போலும் பெரிய நட்பை நினைத்து வருந்தத் தலைப்பட்டாள்" என்று பிரசங்கித்தார்.

அதுகேட்டு, அங்கிருந்தவர்களிற் சிலர் "சுவாமியானவர் சகல விபவத்தையுங் கைவிட்டு வனத்திற் பிரவேசித்த சமயத்தில் மிகவுந் தாழ்ந்த ஸ்திதியி லிருந்தபடியினாலே 'காலத்திற்கேற்ற கோலம்' என்பதாக, அங்கே வந்த கிராதனைத் தாரதம்மியம் பாராமற் சமானஸ்கந்தமாக நேசித்தார்; அப்படியன்றி மண்டலாதிபத்தியம் பெற்று அகண்ட சாம்பிராச்சியத்தை அனுபவிக்குங் காலத்தில் அவன் வருவானானால் இவ்வண்ணமே நடப்பாரா?" என்ன, கய்யர் அவர்களைநோக்கி, "அந்த அதிசயத்தைச் சற்றுக் கேளுங்

கள்; ஸ்ரீராகவன் பிதுர்வாக்கிய பரிபாலனம் பொருட்டுப் பதினாலாண்டுங் கழித்துத் திருவயோத்திக்கு மீண்டுபோய் மகுடாபிஷேகம் பெற்று, மகுடவர்த்தனர் பட்டவர்த்தனர் முதலாகிய பல அரசர்களும், பிரமசாரியர் கிருகஸ்தர் வானப்பிரஸ்தர் சந்நியாசிகளாகிய பற்பல முனிவர்களும், சுக்ரீவன் அங்கதன் அநுமான் முதலானவர்களும், வானரசேனைகளும் மற்றுமுள்ள சகல மகா ஜனங்களும் புடைசூழ, பிரமபுத்திரராகிய வசிஷ்டரென்னுங் குலகுருவும், சுமந்திரன் முதலாகிய அநேக மந்திரிமார்களுஞ் சேர்ந்திருக்க உந்நதாசநத்திற் சீதாசமேதனா யெழுந்தருளியிருக்கும் பிரபலமான அந்த மகாவைபவத்தைப் பார்த்துப் பிராட்டியானவள் பிரமித்து 'இப்படிப்பட்ட தருணத்திற் கங்கைக்கரையிற் கண்டு சிநேகித்த வனசரனாகிய குகன்வந்தால் சுவாமியானவர் பழையபடியே அவனிடத்தில் அந்நியோந்நியமாக நட்புப் பாராட்டுவாரோ? அல்லது சத்தியந் தப்பிப் போவாரோ? இவர் நிலைமை எங்ஙனமாமோ என்று திருவுளத்தில் ஐயமுற்றிருக்கையில், தெய்வயத்தினமாய்க் "குபேரன் பட்டணத்திலும் விறகுக்கட்டுக்காரனுண்டு" என்ற பழமொழிப்படி, அயோத்தியில் நித்திய தரித்திரனாய்ப் பிச்சையெடுத்துச் சீவிப்பவ னொருவன் ரகுநாயகனைக் குழந்தைப் பருவத்தில், வீதியிற் காணுந்தோறும் ஆசையுடனே எடுத்து அணைத்து முத்தமிட்டுக் கொஞ்சுவான். அவ்வறியவன் இராமன் காட்டுக்குப்போன நாள்முதல் அழுதகண்ணுஞ் சிந்திய மூக்குமா யிருந்து, அவன் வந்த செய்தி அறிந்தமாத்திரத்தில் அதிசீக்கிரமாக ஓடிவந்து, சபாரத்நமாய்ச் சிங்காதனத்தின்மே லிருக்கும் ராமசந்திரனைக்கண்டு வாயிற் காவலாளிகள் ஆரங்கே போகிறவன் என்று கேட்குங் கேள்விக்கும் உத்தரஞ் சொல்லாமல் உட்சென்று, அச்சபை நடுவே புகுந்து, தன் அசுத்தமாகிய காலினால் அனைவரையும் மிதித்துத் துவைத்துக்கொண்டு, சுவாமிக்கு அருகிற் கிட்டிச்சேர்ந்து, "அடா ராமா! நீ எப்போது வந்தாயடா?" என்று கட்டிக்கொண் டழுதான். சுவாமியும் அவனைக் கட்டிக்கொண்டழுது தூக்கித்தார்.

இவ்வாறு அவனழத் தாமழக்கண்ட அரசர் முதலானவர்களும் "இஃதென்னகாரணம்? ஆ! ராமைபத்தியம்பிடித்த பிச்சைக்காரன் திடுதிடென்று ஓடிவந்து கட்டிக்கொண்டழுதாற் சுவாமியும அவனைக் கட்டிக்கொண் டழுகிறாரே, அவனைத்தொடர்ந்த பைத்தியம் இவரையுந் தொடர்ந்ததோ?" என்று பிரமிக்குஞ் சமயத்தில, அவன், "அப்பா! ஏன் சுமமா அழுகிறாய்; இனி அழவேண்டாம; முகம் வீங்கிப் போகிறது" என்று சொல்லித் தன் அழுக்குப் பற்றிய பீற்றற்றுணியினாற் சுவாமி கண்ணைத் துடைக்க, பிறகு அவர் துக்கமாறி எல்லாரையும் பார்த்துப் "பதினைகு வருஷத்திற்கு முன்பு இறந்த எங்கள் பிதாவாகிய தசரதமகாராஜாவை இன்று கண்டேன்" என்றார். அது கேட்டு யாவரும் "இஃதென்ன அசசரியம்! பிசசைக்காரனைத் தமது பிதாவென்கிறாரே, இவருககுப் பைத்தியம் பிடித்ததுமெய்" என்றே நிச்சயித்தார்கள். சுவாமி, அவர்களை நோக்கிக "கேளுங்கள், என்னை முனிவர்கள் பிரமஸ்வரூபமென்றும், தேவர்கள் நாதனென்றும, பரதுவாக்கத்தார் ரகுநாதனென்றும், உலகாள்வோர் தாசரதியென்றும், எங்கள் மாமியார் வீட்டார் எனபெபரைச் சொலலக்கூடாதாகையால் சீதாபதியென்றும, சிநேகாகள் ராமபத்திரனென்றும், மற்றுஞ் சிலர் ராமசநதிரனென்றுஞ் சொல்வார்கள்; எங்கள் பிதா மாத்திரம் அடா ராமா என்று அழைப்பதுண்டு; அந்தப் படியே இந்த மகாராஜனும் அழைத்தபடியினாலே எங்கள் பிதாவை இன்று நான கண்டேனெனபதாகச சொன்னேன்" என்றார். இப்பொழுது யாவரும் "இவருக்குள்ள சௌலப்பிய குணம் மற்றாருக்குண்டு!" என்று பலகாலுஞ் சொல்லி ஆநந்தித்தார்கள். பிராட்டியார் திருவுளத்தி லுதித்த சந்தேகமும் நிவர்த்தியாயிற்று" என்று சொல்லிப் பின்னுங் கம்பர் "சுவாமி தமது திருநாமங்களைக் குறித்து அருளிச்செய்தபடியே முன்னோர்களால்,

"ராமாய ராம பத்திராய ராமசந்திராய வேதஸே
ரகுநாதாய நாதாய சீதாயப் பதயே நம."

எனச் சுலோகபூர்வகமாய் அவர் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டு மிருக்கிறார்" என்றார்.* அதற்காகச் சேரசோழபாண்டியர் முதலானவர்களும் அதிக சந்தோஷப்பட்டார்கள்.

யுத்தகாண்டத்திற் கடல்காண்படலத்தில்,

"நென்னற் கண்ட திருமேனி யின்று பிறிதாய் நிலைதளர்வான்
தன்னைக் கண்டு மிரங்காதே தானே கதறுந் தடங்கடல்வாய்
பின்னற் றிரைமேற் றவழ்கின்ற பிள்ளைத் தென்றல் கள்ளுயிர்க்கும்
புன்னைக் குறும்பூ நறுஞ்சுண்ணம் பூசா தொருகாற் போகாதே."

என்றபாடலைக்குறித்து "ஸ்ரீராமன் வானர சைனியங்களுடனே ராவணன்மேற் படையெடுத்துப்போய்த் தென்சமுத்திரத்தின வடகரையில இறங்கி யிருக்கும்பொழுது பிராட்டியின் பிரிவாற்றாமையால் தனக்கு இராமுழுவதும் நித்திரை வராததுகண்டு, திருப்பள்ளி எழுதானதை விட்டெழுந்து கடற்கரை யோரத்தில் உலாவிக்கொண்டிருக்க சீதையைப் பிரிந்ததுமுதல் ஒவ்வொரு நாளும நேற்றுக்கண்ட தன் திருமேனி இன்று வேறுபட்டுக் காணுதலால் உருத்தெரியாமல் அழிந்து பழகினவர்களும் மயங்கும்படி உயிர்நிலை தளர்கின்ற அவனைக்கண்டும் இரங்காமல, தானே கூச்சலிட்டுக்கொண்டிருக்கின்ற விசாலமாகிய கடலினிடத்திற் பின்னி விழுகின்ற நீர்த்திரைகளின்மேல் தவழ்கின்ற இளந்தென்றலானது, தேனைசசொரிகின்ற மணமபொருந்திய புன்னைப்புஷ்பத்தின் மகரந்தப்பொடிகளை வாரிக்கொண்டு வந்து அவ் விராகவன்மேற் பலகாலும பூசத்தலைப்பட்டது" என்று கம்பர் பிரசங்கித்தார்.

ஒட்டக்கூத்தர், "ஒலிக்கிறது கடலுக்கு எனறுஞ் சுபாவமாகையால் நீர் அது கதறுகின்றதென்பது மெய்தான், ஆயினும் இராமனைக்கண்டும் இரங்காமல் தானே கதறுகின்ற தென்றீரே, கடலுக்கும் இராமனுக்கும் என்ன சம்பந்தம்" என, கம்பர் "சீதையானவள் அச்சமுத்திரத்திற் பிறந்தமையால் அதற்கு அவள் மகளும், அவளுக்கு அது தாயும், அவளது கணவனாகிய ராமனுக்கு மாமியாரும், அவன் அதற்கு மருமகனுமாதலால், அம்முறைபற்றி மரும

கன் மாமியார் வீட்டுக்கு அழைக்கப்படாமல் வருவது தரு மமன்றாயினும், அதை இராமன் நினையாமல் வலிய வந்ததைக்குறித்து இந்த மாமியார் எவ்வளவோ சந்தோஷத்தோடு ஆசார உபசாரஞ் செய்யவேண்டுமே, அதுவுஞ் செய்யாமல், இவன் தன் மனைவியை இழந்து ஏக்கம் பிடித்து உடல் மெலிந்து சோகங்கூர்ந்து வந்ததைப்பற்றியாவது 'என் செல்வ மருமகனே! வந்தையா? வா' என்றழைத்து 'உடலும் உயிரும்போல உன்னுடன் மருவிப் பிரியாமலிருந்த உன்னுடைய கண்ணாட்டி எங்கே போனாள்? உனக்குப் பெண்டுபாக்கிய மில்லாமற் போய்விட்டதா?' என்று வினவித் துக்கத்தோடு ஓடிவந்து மேல்விழுந்து அலறி யழவேண்டுமே அப்படியுஞ் செய்யாமல் தன்னருமைத் திருமகளை ராட்சதன் வஞ்சித்துக்கொண்டு போனதனால் அவளைப் பெற்றவயிறு பற்றியெரிய, அக்கடலானது நீராயுருகிக் கரைந்து பிரக்கினை யில்லாமல் தன்னுடன்கூட அழுவார் ஒருவருமின்றி ஒற்றைக்குரலாய்த் தானே அழுதுகொண்டிருப்பதுபற்றி, 'நிலை தளர்வான் தன்னைக் கண்டு மிரங்காதே தானே கதறுந் தடங்கடல்' என்றோம் என்று சொல்லி, "பின்னும் அந்தச்சமுத்திரம் அவ்வாறு கத்திக்கொண்டிருக்கையில் அலைகளாகிய கைகளின்மேல் தவழ்ந்து விளையாடும் இளந்தென்றலாகிய அந்தப் பிள்ளையானது, 'இதென்ன அமரியாதை? தற்காலத்தில் நமது தாய் தன் சொந்தமருமகன் வந்தவிடத்தில் விசாரியாம லிருக்கிறாள்; நமது அக்காளுக்கும் அத்தானுக்கும் விவாகமான தருணத்தில் நாம் அருகிலிருந்து அவ்விவாகச் சிறப்பைக்கண்டு அக்காலத்தில் நடத்தவேண்டிய மரியாதையை நடத்தப் பாக்கியம் பண்ணாமற் போனோம்: அப்பொழுது நடத்தாமற் போனாற் போகட்டும், இப்பொழுதாவது அதை நடத்தி அத்தானைச் சந்தோஷப் படுத்த வேண்டுமே; இத்தருணத்திலும் அப்படிச் செய்யாதிருந்தால் இதை ஆராவது கேட்பவர், "அக்காளோடே போயிற்று மைச்சான் உறவு" என்றல்லவோ சொல்லுவார்கள்; ஆதலால் சும்மாவிருக்கலாகாது' என்று, "இளம் பிள்ளை பயமறியாது" என்பதற் கேற்கச் சமயாசமயந் தெரி

யாமல், புன்னைப் புஷ்பராகப் பொடியாகிய கந்தப்பொடியை அடிக்கடி வாரிக்கொண்டு வந்து தலைகால் தெரியாமல் அத்தான்மேல் வீசிப் பூசிக் கந்தப்பொடி வசந்தமாடி மைத்துனங் கொண்டாடத் தலைப்பட்டது" என்றும் விரித்துரைத்தார். கேட்டவர்களெல்லாம் இது நல்ல வேடிக்கை யென்று ஆச்சிரியப்பட்டார்கள்.

யுத்தகாண்டத்தில் இரணியவதைப் படலத்தில், பிரகலாதன் குறித்த தூணில் அகண்ட பரிபூரணனாகிய பக்தவற்சலன் ஆவிர்ப்பவித்து இரணியனை வதைத்த பொழுது இந்திராதி பிரமாதி தேவர்களும் முனிவர்களும் வந்து ஸ்துதிசெய்யுஞ் சமயத்தில்,

"தன்னைப் படைப்பதுவுந் தானே யெனுந்தகைமை
பின்னைப் படைத்ததுவே காட்டும் பெரும்பெருமை
உன்னைப் படைத்தாய்நீ யென்றா லுயிர்படைப்பான்
என்னைப் படைத்தா யெனுமிதுவு மேதாமே"

என்ற பாடலைக்குறித்து, "கலைமகள் கணவனாகிய பிரமன் சுவாமியை நோக்கித் தன் மனமானது வெயிலிடு வெண்ணெய்போ லுருகி நெகிழ, சர்வலோக சரணியனாகிய எம் பெருமானே! புகைக்குக் காரணம் அனலென்பது போலப் பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரணம் ஈஸ்வரன் என்பதே யல்லாமல் அவ்வீஸ்வரனுக்குக் காரணம் சொல்லக்கூடாமையால் அவனைத் தோற்றுவித்தவர் வேறில்லை என்றும், அநாதியிற் பரமாத்மன் தன்னைத் தானே படைத்துக்கொண்டான் என்றும் வேதஞ் சொல்வதை இப்போது நீ இந்த ஸ்தம்பத்தினிடத்தில் அழகிய சிங்கனாக உன்னைப்படைத்துக் கொண்டதே பிரத்தியட்சமாகக் காட்டாநின்றது; இவ்வாறு மகத்தாகிய பெருமை தங்கிய உன்னையே நீ படைக்கத்தக்க அற்புதமாகிய பரமசக்தியை உடையவனா யிருக்கின்றாயென்றால், இந்தச் சராசரங்களாகிய உயிர்களைப் படைக்கின்ற சக்திதான் உனக்கில்லாமற் போயிற்றோ? இவைகளைப் படைப்பதற்காக என்னை நீ படைத்தாயென்று சொல்லப்படும் இஃது எத்தன்மைத்தாம்" என்று ஸ்தோத்திரஞ் செய்தான்

என்பதாகக் கம்பர் பிரசங்கிக்கக் கேட்டவர்கள், "இக்கருத்துக் கடவுளில்லையென்று வாதிக்கும் நாஸ்திகர் நாவை அடக்குவதற்குத் தக்க கருவியா யிருக்கிறது" என்று மிகவும் வியந்து பேசினார்கள்.

மேற்சொல்லிய படலத்தில் அழகிய சிங்கனாக வந்து அவதரிக்கச் சர்வேஸ்வரன், பிராட்டி புருஷகாரத்தால் உக்கிரந்தணிந்து கிருபைகூர்ந்து பிரகலாதனை நோக்கி, "அப்பா குழந்தாய்! என்னைப்பற்றி ஜன்ம சத்துருக்களாகிய இரணியன முதலானவர்களால் படாதபாடெல்லாம் பட்ட உனக்கு நானென்ன செய்யப்போகிறேன்? வேண்டிய வரத்தைக்கேள்" என்ற சமயத்தில்,

> "முன்பு பெறப்பெற்ற பேறே முடிவில்லை
> பின்பு பெறும்பேறு முண்டோ பெறுவெனேல்
> என்பு பெறாத விழிபிறவி யெய்திடினும்
> அன்பு பெறுகை யரும்பே றெனக்கென்றான்."

என்ற பாடலைக்குறித்துக் கம்பரானவர், "பிரகலாதன் சுவாமிக்கு முன்பு அஞ்சலியஸ்தனாய் நின்று, 'ஓ பக்தரட்சகா! பரமதயாளா! அடியேனுக்கு வேண்டிய பேறெல்லாம் இப்பொழுது நீ அருளிச் செய்வதாகக் கேட்கச் சொன்னமையால், என்னபேறு பெறவேண்டுமென்று கேட்பேன்? அநாதியில் நான் மூலப் பிரகிருதியில் அழுந்தி ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபமும், அவ்விரண்டுக்கும் உள்ள சம்பந்தமும், அச்சம்பந்தத்தைத் தடுக்கும விரோதமும், அவ்விரோதத்தை நிவர்த்திக்கும் உபாயமும், அவ்வுபாயத்தைச் செய்து விடத்து அடையும் பரமார்த்தமும் இன்னவென்று விளங்காமல் நாசத்தை அடைந்திருக்கையில், நிர்ேதுக் கிருபையினாலே கரசரணாதி அவயவங்களைத் தந்து, வேதாகமங்களைக்கொண்டு மேற்சொல்லிய ஸ்வரூப முதலானவைகளையுந் தெளிய விளக்கி, உன் திருவடியிற் சரணாகதி பண்ணுவதற்கேற்ற சேஷத்துவம் தலையெடுத்துப் பாரதந்திரனாகி உன் கைங்கரியத்தை இப்பிறப்பில் இடைவிடாது செய்து உச்சிவிக்கும்படி நீ அனுக்கிரகிக்க, அவ்வாறு அடியேனுமுன்

மே பெற்ற பேறுகளுக்கோ முடிவொன்று மில்லை; அவை யன்றி இனிப்பெறும் பேறுகளும் வேறே யுண்டோ? அப்படியே பெற விரும்புவேனாகில், விசித்திரமாகிய பூர்வகர்ம சேஷத்தால் இன்னும காலசக்கிரத்தில் அகப்பட்டு இவ்விருள்தரு மாஞாலத்தில் எண்ணிறந்த ஜன்மமெடுத்து உழலவரினும் அஞ்சுவேனல்லேன்; எல்லாப் பிறப்பினும் மிகவும் தாழ்வாகிய சாக்கடைச்சேற்றிற் கிடந்து நெளியும் புழுவாம் பிறப்பைப் பெற்றாலும் உன் திருவடிக்கண் மாறாத அன்பு செலுத்தப் பெற்றால் அப்பேறு சத்பக்தியை யுண்டாக்கும்; சத்பக்தி சத்கர்மத்தை யுண்டாக்கும; சத்காமம் சத்போதத்தையுண்டாக்கும; சத்போதம வீட்டைக்கொடுக்கும்; அது பற்றி, இயமநியமாதிகளாகிய அஷ்டாங்கயோகமும், அணிமா மகிமா முதலாகிய அஷ்டமகாசித்தியு மற்றுமுள்ளபலவகைப் பேறுகளும் வேண்டுவனவல்ல; அவ்வவையொன்று பெறுவதே நாயேனுக்கு அரிய பெரிய பேறாம்; அதையே அருளிச் செய்யவேண்டும்" எனப் பிரார்த்தித்தார் எனப் பிரசங்கித்தார்.

"வானுளளித்திமுடியாமனிபின்வருநாளிறத்திம்மையாய்
பேறுயுனக்கொரபொருள்வேண்டுமென்றுபெறுவானநத்திபிடியாய்
ஊனுயுயிர்க்குமுயிராகிசிற்றியுணர்வாதிபெண்ணினுருவாய்
ஆணுதிமற்றைபலியாதியாரிவ்வதிரேகமாயையறிவார்"

என்ற நாகபாசபடலம் பாடலைக் குறித்துக் கம்பரானவர், இந்திரஜித்து பிரயோகித்த நாகபாசத்தாற் கட்டுண்ட இளையபெருமாள் முதலானவர்களை நோக்கிப் பிரலாபிக்கின்ற ஸ்ரீராகவனைக் கருடன் கண்டு வேதஸ்வரூபியாகிய ஜானகிமனோகரா! எவ்வகைப் பற்றுக்களையும கைவிட்டு உன் திருவடியே தஞ்சமென்று பற்றிய சேதனர்கள் உன்னைப்போல நித்தியராம்படி அவர்களுக்கு அப்பிராகிருதமாகிய திவ்விய சரீரத்தையே யன்றி உனது வாழ்நாளையும் அளிக்கின்றாய்; நீ அங்ஙனம் அளித்துப் பின்பு உன் திருவுருவுக்கு அழிவும் வாழ்நாட்கு அவதியுமின்றிக் காலவரையறை கடந்து நிற்கின்றாய்; உன் தேகபோஷணைக்காகத் தானியம் தனம் வஸ்தி

ரம் பூஷணம் காணி பூமி முதலிய பலவகைப் பொருள்களு ள்ளும் ஒன்றையாயினும் முன்னுக்காவது பின்னுக்காவது வேண்டுமே யென்று தேடிவைத்துப் பாதுகாக்கின்றாயில்லை; அல்லது யாதேனும் ஒன்றைப் பெறும்பொருட்டு அதனிடத்தில் இச்சையும் வைக்கின்றாயில்லை; இப்படிப் பசையற்றிருந்தும், பல்லாயிரங்கோடி யண்டங்களிலுமுள்ள அகில சராசரங்களுக்கும் நீயே தாரகபோஷகமாகி, அவ்வாத்மாக்களுக்குள் அந்தரியாமியுமா யிருக்கின்றாய்; மெய்யினாற் பரிசத்தை யுணர்தலும், நாவினாற் சுவையை யுணர்தலும் கண்ணினால் உருவத்தை யுணர்தலும், மூக்கினாற் கந்தத்தை யுணர்தலும், செவியினால் ஒலியை யுணர்தலுமாகிய ஐம்புல உணர்வும், அவற்றிற் காதியாகிய மனவுணர்வும்; அதற் கதிஷ்டானமாகிய உயிருணர்வும், அவ்வுயிர் இத்தன்மைத் தாயதெனவும், இவை அனைத்திற்குங் காரணமாய் அதீதப்பட்டிருக்கின்ற பிரமசாட்சாத்காரமானது அகண்டபரிபூரண சச்சிதாநந்த ஸ்வரூபமா யிருக்கின்ற தெனவும், தத்துவ நியதிபண்ணிச் சுருதி குரு சுவாநுபவங்களால் ஐயந்திரிபற உணரும் மெய் யுணர்வுமாகி விளங்குகின்றாய்; சர்வலோகங்களையும் சகல உயிர்களையும் திருவுதரத்துள் அடக்கி வெளியிடுகின்றமையாற் பெண்ணுருவாகியும், புருஷோத்தம னெனப் பெயர் பூண்டமையால் ஆணுருவாகியும், அவை இரண்டுமல்லாத அலியுருவாகியும், அதிசயிக்கத் தக்க அதிரேக மாயைக் கொண்டு இங்ஙனம் நடிக்கின்றாய்; உலகத்திலே இந்த அகடித கடனா சாமர்த்தியத்தை அறிந்து ஆநந்திக்கு மவர்கள், கர்த்தா போக்தா ஜநார்த்தன னென்று சாஸ்திரஞ் சொல்லுகிறபடி, உன்னை வேறில்லாமையாற் சித்திரக்காரன் பலவகைச் சித்திரங்களையுந் தானே எழுதித் தானே பார்த்துத் தானே களிப்பதுபோல, நீயே இயற்றி நீயே பார்த்து நீயே சந்தோஷிக்கவேண்டி யிருக்கின்றது என்று ஸ்துதிசெய்தான்'' எனப் பிரசங்கிக்கக் கேட்டுச் சேரமகாராஜன் முதலானவர்கள் பிரமாநந்த மடைந்தார்கள்.

ஜானகி களங்காண் படலத்தில், சீதையைப் புஷ்பவிமானத்தின்மேல் ஏற்றி யுத்தகளத்திற்குக் கொண்டுவந்து அவ

ளுக்குப் பிரமாஸ்திரத்தால் இறந்த இளையபெருமாள் முத லானவர்களையும், அவர்கள் இறந்தது கண்டு துக்கித்து மெய்ம்மறந்து மூர்ச்சைபோயிருக்கின்ற பெரியபெருமாளை யும் பாரென்று ராட்சதிகள் காண்பித்தபொழுது,

"மங்கை யழலும் வானாட்டு மயில்க ளழுதார் மழவிடையோன்
பங்கி லுறையுங் குயிலழுதாள் பதும மலர்மேன் மாதழுதாள்
கங்கை யழுதா ளுமகளு மழுதாள் கமலத் தடங்கண்ணன்
தங்கை யழுதா ளிரங்காத வரக்கி மாருந் தளர்ந்தழுதார்."

என்பதைக் குறித்து, "பிராட்டியானவள் பிரமாஸ்திரத் தால் மற்றவர்களைப் போலச் சுவாமியும் பிராண வியோக மானாரென் றெண்ணித் தன் கனிவாயைத்திறந்து அழுத மாத்திரத்தில், சுவர்க்கத்திலுள்ள இந்திராணி முதலான மயில்போன்ற மாதர்களும் அழுதார்கள்; இடபவாகனத் தையுடைய சிவபிரானது வாமபாகத்தில் வசிக்கும் குயி லையொத்த உமாதேவியும் அழுதாள்; தாமரைப் புஷ்பா சனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீமகாலட்சுமியும் அழுதாள்; சத்திய லோகத்திலுள்ள கங்கையும் அழுதாள்; பிரமன் நாவிலிருக்கும் வாணியும் அழுதாள்; கமலதளம்போலும் விசாலமாகிய விழிகளையுடைய நாராயணன் தங்கையா கிய துர்க்கையும் அழுதாள்; இரக்கமிலாத ராட்சதிக ளும் தளர்ச்சி கூர்ந்தழுதார்கள்" என்று கூறி, பின்னும் "சீதையானவள் தன்னமிசமாகையால் அவள் படும்பாடு தான் படுவதாகத் தோன்றக்கண்டு இலக்குமி துக்கித்த தும், சுபாவத்திலேயே நீராந்தன்மைய ளாதலாற் கங்கை துக்கித்ததும் சகஜமே, இந்திராணி முதலானவர்கள் துக் கமென்பதன் பெயரையும் அறியாமற் போகத்திலேயே சுகித்திருப்பவர்க ளாகையாலும், உமாதேவி மலைபெற்ற மகளாகையாலும், அன்றியும் சேதனகோடிகளை ரட்சிக் கும் பொருட்டு ஸ்ரீமகாவிஷ்ணுவின் கருணையே சீதை யாகத் திருவுருக்கொண்டு இங்ஙனம் நடிக்கின்ற தென் னும் உண்மையை அவளறிந்தமையாலும், சரஸ்வதி சீதை க்கு மருமகளும், சீதை அவளுக்கு மாமியுமாகிய முறை

மைபற்றி, "மாமியார் செத்த ஆறுமாதம் மருமகளுக்குக் கண்ணிலே தண்ணீர் வந்தது" என்று சொல்லுகிறபடி வாணிக்குச் சீதை விஷயத்தில் விரோதஞ் சம்பவிக்கலாமாகையாலும், திர்க்கை சயமகளும் நீலியுமா யிருப்பவளாகையாலும், அவ்விந்திராணி முதலானவர்களுடைய மனத்தில் இரக்கமென்பது மருந்துக்குங் கிடைக்கமாட்டாதென்று நிச்சயிக்கப் படுதலால் இவர்களுக்குத் துக்கம் ஜனித்தது அதிசயமே; ஆராயுமிடத்து அதுவுமோ ரதிசயமன்று; ராட்சதிகள் தர்மாதர்மம் பாராதவர்களும் மிகவும் கடினசிந்தை யுடையவர்களும், நரமாம்ச பட்சணிகளும், ராவணனாகிய ராட்சதனால் ஏவப்பட்டு சீதையைச் சித்திரவதை செய்கிறோமென்று நெஞ்சுதுணிந்து எந்நேரமும் அவளை மொய்த்துச் சுற்றி உபத்திரவப் படுத்திக் கொண் டிருப்பவர்களு மாகையால் அவர்கள் அழுததே உள்ளபடி அதிசயம்" என்றுங் கம்பர் பிரசங்கித்தார்.

பாண்டியராஜன், "சர்வோத்தமியாகிய ஜானகியுடனே ஜகத்காரணனாகிய சுவாமியும் இத்தனை ஈடுபாடுகள் படவந்ததெல்லாம், மேற்படி தேவஸ்திரீகளுக்கும் அவர்கள் நாயகன்மார்களுக்கும் ராவணனியரால் நேரிட்ட உபத்திரவத்தை நிவர்த்திக்கும் பொருட்டே யாதலால், அவர்கள் அக்காரணத்தை நினைப்பார்களாயின் அவர்களைத் துக்கிக்க வேண்டாமென்று தடுத்தாலும் கேட்கமாட்டார்கள்; இந்த அரக்கிமார்களுக்கோ அப்படிப்பட்ட ஆபத்து சம்பவிக்கவுமில்லை; அதனிமித்தம் ராமராவது சீதையாவது சகாயஞ் செய்யவுமில்லை. இப்படி ஒரேதுவும் இல்லாதிருந்தும் இவர்கள் துக்கித்தது வைதேகி துக்கம் சகிக்கமுடியாமையினாலேயே யாதலால் அதிலும் இஃது உசிதமாமென்றது மெய்தான்" என அதுகேட்டு அச்சபையிலிருந்தவர்கள் அசேஷமும் "எம்பெருமாட்டியாகிய ஜானகியைக் கொல்லத் துணிந்த யமராட்சசிகளே அவளது துக்கங் கண்டு சகிக்காமல் உள்ளுருகி அழுதார்களானால் அவளுடைய திருமேனி எப்படிப் பதைத்திருக்கவேண்டும்? அவள் எவ்வளவு கண்

கலக்கங் கொண்டிருக்கவேண்டும்? ஏதேது நினைத்திருக்க வேண்டும்? என்னென்று புலம்பியிருக்க வேண்டும்?" என்று பலவாறாக எண்ணி, அப்பிராட்டி விஷயத்தில் விசேஷபக்தி சிரத்தை யுடையவர்களாதலால், தங்கள் மனங் குழைய முகம்வாட மெய்சோரக் கண்ணீர் ஆறுய்ப்பெருகத் தென்றல் முற்றிப் பெருங்காற்றானதுபோல அவர்களுக்குத் துக்கம் வரவர அதிகரிக்க அலறியழுதார்கள். அஃதறிந்து சடையப்பமுதலியார் "இஃதேது மதுபிந்து கலகமாய் முடிந்தது" என்றார். கம்பர் விரைவாகக் கற்றுச் சொல்லியை மருந்துப் படலத்தை எடுத்து வாசிக்கச் சொல்லி, "அனுமான் சஞ்சீவிகொண்டு வந்தான்" என்றும் "அந்த வாடைபட்டு இறந்தவர்களெல்லாம் உயிர்பெற்றெழுந்தார்கள்" என்றும் பிரசங்கித்தார். பிறகு அழுதவர்கள் அவ்வியசனமாறிச் சந்தோஷித்தார்கள்.

சோழராஜன், "இவ்வதிசயம் குலசேகராழ்வார்க்குமுன்னர் இராமாயண காலட்சேபஞ் செய்தவாறாயிற்று" என்று சொல்லி நகைத்தான். கஜபதி என்னும் அரசன் "அஃதெவ்வாறு" என்று வினவ, கம்பர் 'பகவத் பக்தர்களாகிய பன்னிரண்டாழ்வார்களுக்குள் சேரர்பிரானாகிய குலசேகராழ்வார் என்பவர் ஸ்ரீமத் வால்மீகராமாயண காலட்சேபஞ் செய்து வருகையில், ஆரணியகாண்டத்தில் ராவணன் தங்கையாகிய சூர்ப்பநகை மூக்கறுப்புண்டு, ஜனஸ்தானத்திலிருந்த கரதூஷணாதிய ரிடத்திற் போய் முறையிட்டதுகண்டு அவர்கள் மகா உக்கிரத்துடனே எண்ணிறந்த சேனைகளைக் கூட்டிக்கொண்டு படையெடுத்துவந்த சமயத்தில், சுவாமியானவர் தமக்கொருவருந் துணையின்றித் தனியே யமகிங்கரர்களுக் கொப்பாகிய அத்தனை அரக்கர்கள்மேலும் போர்க்குச் சென்றாரென்று சொல்லக்கேட்டு, ஆழ்வார் இராமசரித்திரத்தில் அதிக பிரேமையுள்ளவ ராகையால், வெகு காலத்திற்கு முன்பு நடந்த அந்தச் சரித்திரம் அன்றுதான் நடக்கிறதாக நினைத்துத் தமது திருமேனி பதைபதைக்க 'இஃதென்ன கொள்ளை! இளையபெருமா ளாயினுங் கூடப்

போகவில்லையா? அவர் இராகவனைவிட்டு எங்கேபோனார்?" என, பௌராணிகர் 'கோதாவரி தீரத்திற் பர்ணசாலையி லெழுந்தருளி யிருக்கும் பிராட்டியாருக்குக் காவலாயிருக் கும்படி பெரியபெருமாள் நியமிக்க, அந்நியமனப்படி அவ ரவ்விடத்தி லிருந்துவிட்டார்' என ஆழ்வார் 'ஆபத்காலத் திற் சக்ரவர்த்தி திருமகனுக்கு லட்சுமணரும் உதவிசெய் கிறதற் கில்லை, அன்றியும் வேறொரு உபபலமு மில்லை, ரதமுதலிய வாகனங்களு மில்லாமற் பாதசாரியாய்ப் போயிருக்கிறார், அவ்விராக்கதர்களோ கொடிய துஷ்டர் கள், இப்படிப் பலவிதத்திலுஞ் சங்கடமா யிருப்பதனால் கிளியை வளர்த்துப் பூனைவாயிற் கொடுப்பது போல, அந்த பாதகர்களிடத்தில் ரகுநாயகனை எப்படி காட்டிக்கொடுத்து விட்டிருக்கிறது; இந்நேரம் அவர்கள் அங்கே "அடித்தது ஆட்டம் பிடித்தது பெண்டா யிருக்குமே?" அத்தருணத் தில் நம்மாலேயான உதவியொன்றுஞ் செய்யாமற் சும்மா பார்த்துக்கொண் டிருக்கலாமா? "அண்டைவீட்டுச் சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி" என்பதாக நாம் உபேட்சை செய் வது தர்மமல்லவே? என்று அநுதபித்து, உக்கிராகாரமாய் உடனே தமது சேனைகளை அவர்கள்மேற் படையெடுத்துப் போம்படி ஆக்கியாபித்து, ரதகஜ துரக பதாதிகளாகிய சது ரங்கபலமும் ஜனஸ்தானத்தை நோக்கி முன்னேபோக, தாம் போர்க்கோலங்கொண்டு பின்னேபோக யத்தனித்தார். அத்தருணத்தில், சுவாமியானவர் நிர்ப்பயமாகப் பிரபல யுத் தஞ்செய்து சத்துருக்கள் அத்தனைபெயரையும் ஜயித்து ஜய சங்கம் முழங்கத் தேவர்கள் புஷ்பமாரி பொழியப் பர்ண சாலைக்கு மீண்டுவந்தா ரென்ற சந்தர்ப்பத்தை எடுத்துப் பிர சங்கிக்கக்கேட்டு, ஆழ்வார் கோபாவேசந் தணிந்து தெற்கு நோக்கிப்போன சேனைகளைத் திரும்பி வரும்படி நியமித்தார் என்று கூற, கஜபதி, "சேரர்பிரானுக்கு அப்பொழுது பக வத் சங்கமத்திற்குப் பிரிவு சம்பவிக்குமே யென்னும் பயம் விளைக்கத்தக்க பரம பக்தி தலையெடுத் திருக்கவேண்டும். அஃது அவருக்கும் "அன்பு பெறுகை யீரும்பே றெனக் கொன்றான்" என்று முன்பு சொல்லப்பட்ட பிரகலாதனுக்கு

மன்றி மற்றோருக்கு முண்டு" என்று மனம் நெகிழப் புளகாங்கமுற்றான்.

"சாதைக்குஞ் சடாயுவான தந்தைக்குந் தமிய ளான
சீதைக்குங் கூற்றங் காட்டித் தீர்ந்தில தொருவன் றீமை
பேதைப்பெண் பிறந்து பெற்ற தாயர்க்கும்பிழைப்பி லாத
காதற்றம் பியர்க்கு மூர்க்கு நாட்டிற்குங் காட்டிற் றன்றே."

என்ற மாயாசீதைப்படலப் பாடலைக்குறித்து, இந்திரஜித்து மாயாசீதையைத் துணித் தெறிந்துவிட்டு 'இதோ நான் அயோத்திக்குப்போய் அங்குள்ளவர்களையும் அதம் பண்ணுகிறேன்' என்று சொல்லிப் போக்குக்காட்டி நிகும்பலைக்குப் போய்விட்டதருணத்தில், ஸ்ரீராமர் அவன் மெய்யாகவே அயோத்திக்குப் போனதாகக் கேள்விப்பட்டு, ஐயோ! நான் வனத்திற் பிரவேசித்தபொழுது, ஒப்பற்ற மாபாவியாகிய என்னைப்பிடித்த சனியானது பிரதமத்திலே என்னை நாட்டிலிருந்து காட்டில் ஒட்டிவிட்டது; ஆயினும் அது பெரிதன்றென்று நினைத்திருந்தேன்; உடனே அடியை மிதித்தாற் போல என்னைப்பெற்ற சாட்சாத் பிதாவாகிய தசரத மகாராஜாவுக்கு முடிவை யுண்டாக்கிற்று; பின்பு தெய்வாதீனமாய் அந்த நிர்மானுஷிகமான காட்டில் எங்களுக்குத் துணைவந்திருந்த மெய்யன்புடைய பெரிய பிதாவாகிய ஜடாயுவுக்கு மரணத்தை விளைத்தது; அதன்பின்புதான் பிறந்ததும் புகுந்ததுமாகிய பெரிய கடல்போன்ற குடும்பத்தை என்பொருட்டுக் கைவிட்டு, ஆரைத்துறந்தாலும் புருஷனைத் துறக்கலாகாதென் றெண்ணி, நீயே கதியென்று நம்பி என்னுடனே கூடவந்து என் சரீர சாயைபோலப் பிரியாதிருந்த என் பிராணநாயகியாகிய சீதைக்கு மிருத்துவைக்கொண்டுவந்து விட்டது; அந்தப் பாழுஞ் சனியானது அம்மட்டிலேயாவது தொலைந்துபோமென்று பார்த்தால் அப்படியும் தொலையாமல் "ஒருவன்செய்த தீவினை அவன் காலைச்சுற்றி வேரையறுக்கு" மென்ற பழமொழிப்படி பேதைமைக் குணத்தையுடைய பெண்ணாய்ப் பிறந்து அருமையாகிய தவஞ்செய்து எம்மைப் பெற்ற தாய்மார்களுக்கும், எனக்குப் பின்பிறந்த

குறைவற்ற வாற்சல்யமுடைய பரத சத்துருக்னர்களாகிய என் தம்பிமார்களுக்கும், தாய்போல் என்னிடத்தில் அன்பு பாராட்டிய அயோத்தி மகாஜனங்களுக்கும் அவ்வயோத்தியைச் சூழ்ந்திருக்கும் கோசலதேயத்திலுள்ள பிரஜைகளுக்கும் நாசத்தை வருவித்ததே யென்றும்; என்னைப் பெற்ற பிதாவாகிய தசரதமகாராஜா எளிதில் இறக்கிறவரா? கல்லால் அடித்தாலும் அவருக்குச் சாவு வராதே? அப்படியிருந்தும் அவரை என் பிரிவாற்றுமையல்லவோ மாய்த்தது? ஜடாயுவானவர் சீதைக்காகப் பரிந்துபோய் எதிர்த்ததுபற்றிக் கோபம் மூண்டமையால் அவரை இராவணன் கொன்றான்; ஆதலால் இவ்விரண்டும் ஒருவாறுகவாவது ஒப்புக்கொள்ளத்தக்கவையா யிருக்கின்றன; இந்திரஜித்து சீதையைக் கொன்றது எந்த நிமித்தத்தால்? பெண்பிள்ளையாகிய அவள் ஆண்பிள்ளையாகிய அவனுக்கு என்ன தீங்கு செய்தாள்? அஃது ஒன்றுமில்லை; அப்படி இல்லாதிருந்தாலும், அவளை ராவணன் அபகரித்ததை முன்னிட்டு நாங்கள் அவன் மேற் படையெடுத்துப் போராடி ராட்சதர்களில் அநேகரை மாய்த்தாவது அதற்கு ஒரு நிமித்தமாக வைத்துக்கொள்ளப்படும்; நிரபராதிகளாயும் இது விஷயத்தில் எவ்வளவும் சம்பந்தப்படாதவர்களாயும் கண்காணுத சீமையிலிருக்கின்ற பரத சத்துருக்னர்கள் என்ன பொல்லாங்கு செய்தார்கள்? அவர்களையும், கபடமில்லாத தாய்மாரையும், யாதொன்றும் அறியாத ஊராரையும், நாட்டாரையும் சண்டாளன் கருவறுக்கப் போயிருக்கிறுனே, இதற்கு ஏதுவென்ன? நாஞெருவன் பிள்ளையாய்ப் பிறந்து செய்த தீமையே சகலமானவர்களும் அவதிப்படும்படி இந்தப் பிரமாதத்தை விளைத்தது; என்று எண்ணுத வெல்லாம் எண்ணிப் பிரலாபித்தார்" எனக் கம்பர் பிரசங்கிக்கக் கேட்டு, காந்தார தேசாதிபதி "இயற்கையிலேயே விருப்பு வெறுப்பு சுகம் துக்கம் பெருமை சிறுமை முதலாகிய பற்றென்றுமில்லாத நிர்மல ஸ்வரூபமாகிய பரப்பிரமமே இவ்வாறு துக்கித்தால் துக்கசமுத்திரத்திலேயே மூழ்கியிருக்கின்ற பிரபஞ்சத்தாரைப்பற்றி என்ன சொல்லுகிறது" என்று ஆராமைப்பட்டான்.

இந்திரஜித்து வதைப்படலத்தில், நிகும்பலையிலிருந்த வஞ்சகனாகிய இந்திரஜித்து இலக்குவனால் மாண்டபொழுது, அவன் தலையை அங்கதன் தூக்கிவந்து சுவாமி திருவடியிற் கிழிட, அநுமான் முதலானவர்களுடனே இளையபெருமாள் வந்து அவரைச் சேவித்து நிற்கையில்,

"கம்பமதமாக் களியானைக் காவற்சனகன் பெற்றெடுத்த [ன்
கொம்புமின் றென்பால்வந்து குறுகினளென் றுளங்குளிர்ந்தே
வம்புசெறிந்த மலர்க்கோயின் மறையோன்படைத்த மாநிலத்தில்
தம்பியுள்ளான் படைக்கஞ்சா னென்னுமாற்றந் தந்தனையால்."

என்ற பாடலைக்குறித்து, சுவாமியானவர் யமகாதகனாகிய அவ்விந்திரஜித்தைச் சுமித்திரை புத்திரன் கொன்றதைப் பற்றி அதிக சந்தோஷமடைந்து அவனை நோக்கித் 'தம்பி லட்சுமணா! கொடியவிஷம்போலும் பொல்லாதவனாகிய இந்திரஜித்து உயிரோடிருக்கிறவரையில் ராவணாதி ராட்சதர்களை நான் ஜயிக்கிறதும், சீதையைச் சிறை மீட்கிறதும் சொப்பனத்தில் இல்லை, அசாத்தியமென்றே நினைத்து ஏங்கியிருந்தேன்; அந்தப் பரமதுஷ்டனை மாய்த்து நீ செய்த சகாயத்தால் இனி ராவணாதியர்கள் எனக்கொரு விஷயமே யல்லர்; இந்நொடியிலேயே அவர்கள் குலமுழுதும் பற்றற்றுப் போம்படி நிர்மூலப்படுத்திவிடுவேன்; கம்பத்திற் கட்டப்பட்ட மதம்பொருந்திய செருக்கினையுடைய பெரிய பட்டவர்த்தன யானையை ஏறி நடாத்தும் புவன சம்ரட்சகனாகிய ஜனகமகாராஜன் தவஞ்செய்து பெற்றெடுத்த பூங்கொம்பு போன்ற அழகிய மேனியையுடைய சீதையும் சிறைநீங்கி இன்றைத்தினமே என் பக்கலில் வந்துசேர்ந்தா ளென்பதாக மனம் குளிர்ந்தேன்; இப்படிப்பட்ட பேருதவி உன்னையன்றி மற்றார் செய்வார்கள்? பரிமளம் பொருந்திய பத்மாலயத்தில் வாசஞ்செய்கின்ற பிரமன் படைத்த இவ்வுலகத்தில் "தம்பியுள்ளான் படைக்கஞ்சான்" என்று நெடுநாளாக வழங்கிவரும் பழமொழியைக் கைகண்ட பலனாக எனக்கு அநுபவப்படும்படி செய்தாயே' என்று சொன்னார் எனப் பிரசங்கித்தார்.

அதுகேட்டுக் கண்ணப்ப முதலியார் "தமையனுக்குத் தம்பி உதவி செய்வது அதிசயமா! சகஜந்தானே; அப்படியிருக்க, சுவாமி இளையபெருமாளைக்குறித்து அவ்வளவாக வியந்துரைத்தது என்னை?" என்று கேட்கக் கம்பர்,

"நேசரைக்கா ணுவிடத்து நெஞ்சார வேதுதித்தல்
ஆசானை யெவ்விடத்து மப்படியே—வாச
மனையாளைப் பஞ்சணையின் மைந்தர்தமை நெஞ்சில்
வினையாளை வேலைமுடி வில்"

இச்செய்யுளில், "வேறுபாடின்றிக் கலந்து சிநேகித்தவரை முகத்துக்கெதிரே புகழ்ந்து பேசினால், அவர்க்கது தமது நண்பன் தம்மைத் தன்னினின்றும் வேறுபிரித்ததாகத் தோன்றுமாதலால், அவரைக் காணாதவிடத்தே மனதாரப் புகழவேண்டும்; ஆசாரியன் தனக்குத் தெய்வமாதலால் சிஷன் முன்பின்னென்னும் விவஸ்தையில்லாமல் எவ்விடத்திலும் தான்கொண்ட குருபக்தி வெளிப்படும்படி நெஞ்சுருக ஸ்துதி செய்யவேண்டும்; தன்னுடன் வசிக்கின்ற மனையாளிடத்திற் கணவன் சமயாசமயம் பாராமல் இஷ்டம் பாராட்டினால் அவள் தனக்கமைந்து நடவாள் ஆதலால், தருணமறிந்து சயனஸ்தானத்தில் அவளைச் சந்தோஷிப்பிக்க வேண்டும்; புத்திரர்களிடத்திற் பிதா அவர்களறியும்படி வெளிப்படையாக அன்புசெலுத்தினால் செருக்குற்று ஒழுக்கம் தவறுவாராதலால் அவர்களது கல்வி அறிவு முதலியவற்றைக் குறித்து அவன் தனக்குள்ளேதானே மகிழ்ச்சி கூறவேண்டும்; போர்த்தொழில் புரியும் வீரனை அல்லது மற்றத்தொழில் செய்யும் வேலைக்காரனை யஜமானன் எந்நேரமும் சிலாகித்துப்பேசினால், அவ்வாறு சிலாகித்துப் பேசப்பட்டவன் தன்னைத் தலைவன் சமர்த்தனென்று கொண்டாடுவதாக எண்ணிக் கர்விப்பானாதலால், அவனுக்கிட்ட வேலையை முற்ற முடித்தபின்பு நீ நன்றாய்ச் செய்தாயென்று அவனை வியந்து சங்மானிக்கவேண்டும்; இங்ஙனம் புரிவதனால் மேற்கூறிய சிநேகனுக்கு வரவரநட்பும், ஆசாரியனுக்கு அருளும், மனைவிக்கு அமைந்து நடக்கையும், புத்தி

ரர்களுக்கு ஒழுக்கமும், வீரனுக்கு அல்லது ஏவல்செய்வோ னுக்கு ஊக்கமும் அதிகரிக்குமென்று சொல்லும்வண்ணம் போர்செய்யுமிடத்துப் படைவீரர்களுக்கு உற்சாக முண்டா கும்படி அவர்களைப் புகழ்ந்துரைப்பது தலைவனது கடமை யாதலால் அக்கடமையைச் செலுத்துதற்பொருட்டும், கிஷ் கிந்தாகாண்டத்தில், சுக்கிரீவன் வாலியைத் தமையனென்று மதியாமல் வலிதிற் போர்க்கழைத்தது கண்டு இளையபெரு மாள் சகியாமற் பெரியோர் சிறியோரென்னுந் தாரதம்மியம் பாராமற் சுக்கிரீவன் அதிக்கிரமிக்கிறனே இஃதென்னை அநி யாயமென்று சுவாமியிடத்தில் முறையிட்டபோது,

"அத்தாவிது கேளென வாரியன் கூறுவானிப்
பித்தாயவி லங்கி னொழுக்கினைப் பேச லாமோ
எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்க ளெல்லாம்
ஒத்தாநற்பர தன்பெரி துத்தம னாவ துண்டோ"

என்ற செய்யுளில், "சுவாமியானவர் லட்சுமணரை நோக்கி, 'அப்பா! இந்தப் பித்துப்பிடித்த மிருகங்களின் நடக்கை யைக்குறித்து ஒரு பொருளாக மதித்துப் பேசலாமா? இதுநிற்க, முற்காலத்தில் நடந்த ஒரு செய்திகேள்: சுந்தோ பசுந்தர்க ளென்ற அசுரேந்திரர் ஒரு தாய்வயற்றிற் பிறந்த வர்களா யிருந்தும், அவர்களுக்குள் அந்நியோந்நியமென்பது எள்ளளவுமின்றிப் பகைத்துச் சரீரத்துடன் பிறந்து கொல் கின்ற வியாதிபோல், ஒருவரை யொருவர் வியர்த்தமாக மடி த்து மாண்டுபோனர்கள்; உலகத்தில் எந்தத் தாய்வயிற்றி லும் பின்பிறந்தவர்களெல்லாம் வரன்முறை பிசகாமல் முன் பிறந்தவர்களுடைய மனதுக்கு ஒத்துநடந்தால், நம்முடைய பரதன் தமையன்சொற்கடவாதுநடக்கின்ற உத்தமனெனப் பெயர் எப்படிப்பெறுவான்' என்று அருளிச்செய்தபடி, இவ் விடத்திலும் தமையன் நியமனப்பிரகாரம் நடப்பவர்கள் பெ றும் ஏற்றத்தை வெளிப்படையாலும் நடவாதவர்கள் அடை யும் தாழ்வை அர்த்தாபத்தியாலும் வெளியிடுதற்பொருட் டுமே அவ்வாறு கூறியது" என்றார், அப்பொழுது அச்சபை யிலிருந்தவர்கள் "இவ்வரன்முறை கடவாமைக்குத் திருஷ்

டாந்தம் மேற்படி கண்ணப்பமுதலியாரிடத்திலும், அவர் தமையனாராகிய சடையப்பமுதலியாரிடத்திலும் தம்பியாகிய சராமமுதலியாரிடத்திலும் கண்டோம்" என்று அவர்களுக்குள்ள சகோதர வாற்சல்யத்தைக் குறித்து அதிசயித்துச் சந்தோஷித்தார்கள்.

களங்காண் படலத்தில் இலங்கையின் மேலைக்கோட்டைவாசலில் இராவணன் வந்து இளையபெருமாளுடனே போராடி அபஜயபட்டகாலத்தில் "இத்தனைசங்கடமும் இவனாலல்லவா நேரிட்டன" என்று மனமெரிந்து விபீஷணர் மேல் ஒருசக்தியைப் பிரயோகிக்க, சுக்கிரீவ மகாராஜா அதைத் தம்மார்பில் ஏற்றுக் கொள்ளும்படி அதற்கெதிரே போய் நிற்க, அதுகண்டு அங்கதன் "பிதாவுக்கு அபாயம் வரப்பார்ப்பது புத்திரனுக்கு அழகோ? 'சமயத்திற் கில்லா தபிள்ளை துக்கப்பட்டழ இருக்கிறதா?' என்று அதைத் தன் மார்பில் ஏற்கப்போக, அவனை விலக்கி ஆஞ்சனேயர் "அரசரைக் காட்டிக் கொடுப்பது அமைச்சனுக்கு தர்மமல்லவே" என்று தன்மார்பில் ஏற்கப்போக, இந்தப்படி படைத்தலைவர்களும் ஒருவர்பின் ஒருவராக இதை ஏற்கப் போனதை அறிந்து, "நீங்கள் ஆரும் இறக்கவேண்டுவதே யில்லை, அதை நான் கண்டிக்கிறேன், விலகியிருங்கள்" என்று உபாயமாகச்சொல்லி அனைவரையும் தடுத்துக் கடைசியில் அதை இலக்குவன் தன்மார்பில் ஏற்றுக்கொண்டு இறந்து, அநுமான் உதவியால் உயிர்பெற்றெழுந்து,அனைவருடனும் சுவாமியிடத்தில்வந்து அவரைச் சேவித்து நிற்கையில், விபீஷணாழ்வான் சுவாமிக்கு அஞ்சலிசெய்து "வைதேகிமணாளா! இராவணன் அடியேன்மேல் ஒரு சக்தியை விட்டெறிந்தான்; அது தப்பாமல் உயிரை மாய்க்குமென்பதை அறிந்து, அத்தருணத்தில் இளையபெருமாள் அதைத் தம் மார்பில் ஏற்றுக்கொண்டு பிராணனைக் கொடுத்தார்" என்று விண்ணப்பஞ் செய்தார். அப்பொழுது,

"புறவொன்றின் பொருட்டால் யாக்கை புண்ணுற வரிந்த புத்தேள்
அறவனு மின்னை டைய நிகர்க்கில னப்பா னின்ற

பிறவினி யுரைப்ப தென்னே பேரரு ளாள ரென்பார்
கறவையுங் கன்றும் போல்வார் தமர்க்கிடர் காண்பா ராயின்"

என்ற பாடலைக்குறித்து, சுவாமியானவர் இளையபெருமாள் மேற் சந்தோஷப்பட்டு, "அப்பா சுமித்திரை புத்திரா! துஷ்டாத்மனாகிய ராவணனால் நம்மைச் சார்ந்தவர்களுக்கு இப்படிப்பட்ட ஆபத்தும் சம்பவித்ததா? அத்தருணத்தில் நீசெய்தது நல்ல சகாயந்தான். அற்பஜெந்துவாகிய ஒரு புறுவினிமித்தம் தமது சரீரத்தைப் புண்படும்படி சித்திரவதை யாகச் சின்னபின்னமாய் அரிந்த தெய்வத்தன்மை பொருந்திய தர்மாத்மாவாகிய நமது பாட்டனார் சிபிச்சக்கிரவர்த்தியும் உனக்கு நிகராகமாட்டார் என்றால், இனி அப்பாலிருக்கின்ற மற்றவைகளைக் குறித்துச் சொல்லவேண்டிய தென்னே? ஆயினும் பரமகிருபாநிதிகளா யிருக்கின்றவர்கள் தஞ்சுற்றத்தார்க்கு யாதேனும் ஆபத் சம்பவிக்கக் காண்பாராயின் நமக்கென்ன வென்று உபேட்சையா யிருப்பார்களா? ஒரு துஷ்டமிருகத்தால் தன் கன்றுக்குத் துன்பம் நேரிடக் கண்டவிடத்து அதனை ஈன்ற தாய்ப்பசுவானது தன்னுயிர்க்கு அபாயம் வருமென்பதையும் பாராமல் அக்கணமே அம்மிருகத்தின்மேல் விழுந்து பாய்ந்து தன்கன்றைப் பாதுகாக்காமலிருக்குமா? அப்படிப்பட்ட பசுவுங் கன்றும்போல, அவர்கள் தாங்கள் பிராணசேதம் படுவதையும் நினையாமல் அவ்வாப்தர்களுடைய உபத்திரவத்தை எவ்விதத்திலும் நிவர்த்திப்பார்க ளல்லரோ? அதை யோசிக்குமிடத்தில் நீ செய்தது சகஜந்தான்; மேலும் இது நமது வமிசத்தார்க்குச் சுபாவதர்மமே அல்லது அதிசயமன்று" என்று அருளிச்செய்ததாகக் கம்பர் பிரசங்கித்தார்.

அதைக்கேட்ட அசுவபதி யென்னும் அரசன் "சிபிச்சக்ரவர்த்தி புறவினிமித்தம் சரீரத்தை அரிந்த சரித்திரம் சொல்லவேண்டும்" என, கம்பர், "பூர்வம் காட்டிலிருந்த புறுவொன்று சிபிச்சக்ரவர்த்தியைச் சரணமடைந்தது; அதற்கு அவர் 'அஞ்சேல்' என்று அபயப் பிரதானம் பண்ணினர். உடனே அதை எய்த வேடன் தொடர்ந்துவந்து,

'ஐயா! உம்மிடத்தில் அடைந்து பதுங்கிய புறாவைத் தூரத் திவிடும்' என்ன, அவர் 'இஃது என்னைச் சரணமடைந்தது பற்றி இதை நானுன்கையிற் காட்டிக்கொடுக்கக்கூடாது' என்ன, அவன் 'நீர் உலகாள்பவராகையால் யாவரையும் பொதுவாக வல்லவோ நோக்கவேண்டும்? அதைவிட்டு ஒருவரை இடுக்கிக்கொண்டு, ஒருவரை நடத்திக்கொண்டு போவதுபோல, புறவை ஆதரணைப் பண்ணிப் பசியால்வருந்தும் என்னை மாத்திரம் அநாதரணை பண்ணுவதுநீதியோ? என்ன, வேந்தன் 'நானுன்னை அநாதரணை பண்ணினதாக எண்ண வேண்டாம்; பசிக்குச் சாகமூலாதிகளில் எதையாவது புசித்தாலும் அது தணிந்து போகிறது; பறவை மாமிசம் வேண்டுமென்பதென்னை?' என, வேட்டன் நாங்கள் சாகமூலபலாதிகளைத் தின்றால் எங்கள் சரீரத்திற்குப் பலஞ்செய்யமாட்டா; மாமிசமே எங்களுக்கு முக்கிய ஆகாரமாயிருக்கிற தாகையால் எங்கள் சாதி சுபாவப்படி நான் உணவுக்காக எய்த புறாவை என் கையிலே கொடுத்துவிட வேண்டும்' என்ன சக்ரவர்த்தி 'அப்படியானால் என்னால் அபயப் பிரதானம் பண்ணப்பட்டு என் னடைக்கலத்தி லிருக்கின்ற இதை நீ விட்டு வேறெதையாகிலும் எய்து பிடித்துக்கொண்டு போ' என்ன, வேடன் 'வில்லும் அம்பும் என்கையிற் காணும்பொழுதே வனத்திலிருக்கிற பசு பட்சி மிருகங்க ளெல்லாம் பயந்து காததூரத்தில் தலைகாட்டாமல் ஓடி யொளிக்குமே யல்லாமல் எளிதில் அகப்படுவன வல்லவே' என்றான்; அரசன் 'அப்படியானால் இதற்கு ஈடாக ஆடு கோழிகள் வேண்டுமென்றாலும், திரவியமாவது ராச்சியமாவது வேண்டுமென்றாலுந் தருகிறேன்' என்று சொல்ல, வேடன் 'மண்டலாதிபதியாயிருக்கிற இவர் தமது ராஜாதிகாரத்தைக் கொண்டு நம்மை அச்சுறுத்தி ஓட்டிவிடாமல் இவ்வளவு சாந்தத்தோடே நமக்குப் பிரியவசனஞ் சொல்லுகிறாரே இவர் சொற்படியே நாம் கேட்போமென்று அவருக்கு இணங்கி உத்தரஞ் சொல்லாமல், காட்டிலே உழல்கிற வேடச்சாதிக்கு ராச்சியமேன்? திரவியமேன்? நான் எய்து காயம்பட்டிருக்கிற பறவையை எனக்குக் கொடுக்கிறதற்கு வழக்கென்னை? இது

பற்றி இதை நானுன்கையிற் காட்டிக்கொடுக்கக் கூடாது என்ன, அவன் 'நீர் உலகாள்பவராகையால் யாவரையும் பொதுவாக வல்லவோ நோக்கவேண்டும்? அதைவிட்டு ஒருவரை இடுக்கிக்கொண்டு, ஒருவரை நடத்திக்கொண்டு போவதுபோல, புருவை ஆதரணை பண்ணிப் பசியால்வருந்தும் என்னைமாத்திரம் அனாதரணைபண்ணுவது நீதியோ?' என்ன 'நானுன்னை அனாதரணை பண்ணினதாக எண்ண வேண்டாம்; பசிக்குச் சாக மூலாதிகளில் எதையாவது புசித்தாலும் அது தணிந்து போகிறது; பறவைமாமிசம் வேண்டுமென்பதென்னை?' என, வேடன் 'நாங்கள் சாகமூலபலாதிகளைத் தின்றால் எங்கள் சரீரத்திற்குப் பலஞ்செய்யமாட்டா; மாமிசமே எங்களுக்கு முக்கிய ஆகாரமாயிருக்கிறதாகையால் எங்கள் சாதி சுபாவப்படி நான் உணவுக்காக எய்த புருவை என் கையிலே கொடுத்துவிட வேண்டும்' என்ன சக்கிரவர்த்தி 'அப்படியானால் என்னால் அபயப் பிரதானம் பண்ணப்பட்டு என் னடைக்கலத்தி லிருக்கின்ற இதை நீ விட்டு வேறெதையாகிலும் எய்து பிடித்துக்கொண்டு போ' என்ன, வேடன் 'வில்லும் அம்பும் என்கையிற் காணும்பொழுதே வனத்திலிருக்கிற பசு பட்சி மிருகங்களெல்லாம் பயந்து காததூரத்தில் தலைகாட்டாமல் ஓடி யொளிக்குமே யல்லாமல் எளிதில் அகப்படுவன வல்லவே' என்றான்; அரசன் அப்படியானால் இதற்கு ஈடாக ஆடு கோழிகள் வேண்டுமென்றாலும் திரவியமாவது ராச்சியமாவது வேண்டுமென்றாலுந் தருகிறேன்' என்றுசொல்ல, வேடன் 'மண்டலாதிபதியாயிருக்கிற இவர் தமது ராஜாதிகாரத்தைக் கொண்டு நம்மை அச்சுறுத்தி ஓட்டிவிடாமல் இவ்வளவு சாந்தத்தோடே நமக்குப் பிரியவசனஞ் சொல்லுகிறாரே இவர் சொற்படியே நாம் கேட்போமென்று அவருக்கு இணங்கி உத்தரஞ் சொல்லாமல், காட்டிலே உழல்கிற வேடச்சாதிக்கு ராச்சியமேன்? திரவியமேன்? நான் எய்து காயம்பட்டிருக்கிற புருவை எனக்குக் கொடுக்கிறதற்கு வழக்கென்ன? இது தானா உமது ராஜதர்மம்?' என்றான், அரசன் அடைக்கல

மாக வந்தவர்களை ஆதரியாமற் கைவிடுவது தோஷமாகை யால் இந்த ஒன்றுதவிர வேறெதைக் கேட்டாலும் கொடுக்கத் தடையில்லை' என்ன, வனசரன் வெந்தகறியைத்தின்று விதிவந்தால் சாகிற எங்களுக்கு வேறென்ன வேண்டியது?' என்ன, கோமான் 'ஆடு, கோழி முதலானவைகளும் வேண்டாமென்கிறையே; பின்னை என்னதான் உனக்கு வேண்டியது' என்று கேட்க, கிராதன், 'நீர் அற்பஜெந்துவாகிய ஒரு புறாவின்மேல் இவ்வளவு ஜீவகாருண்ணியமுடையவரா யிருப்பதனால் உமது சரீரத்தில் இந்தக் கபோதத்தின் எடையளவுக்குச் சரியாக மாமிசம் அரிந்துகொடுத்தாற் சம்மதிப்பேன்' என்ன, வேந்தன், 'அப்படியே அரிந்தெடுத்துக் கொள்' என்று உடைவாளை உருவி அவன் கையிற்கொடுக்க, வேடன் 'நீரே அரிந்துகொடும்' என்றான். அப்பொழுது சக்ரவர்த்தி 'எவனுகிலுந் தன் சரீரத்தைத் தானே அறுக்கப் பொறுக்குமா வென்றும் 'அருமையாகப் போற்றிப் புனைந்த உடம்பைக் கூசாமல் அறுப்பது எப்படியென்றும் யோசியாமல் வலது தொடையின் தசையை அரிந்தெடுத்துத் துலைநாட்டி ஒருதட்டிற் புறாவையும் மறுதட்டில் அத்தசையையும் வைத்துத் தூக்கிப்பார்க்கக் குறைந்ததனால், மறுத்தொடைத் தசையையும் அரிந்துவைக்க அப்படியும் ஒவ்வாததனால் பின்பு இருதோளின் தசையையும் கொய்துவைக்க அதுவும் சரிப்படாமையால் அப்புறம் கண்டமுதலாக உடல் முழுதும் புண்ணுகி உதிரம் பெருகியோடக் கூறுகூறாகச் சேதித்துவைத்தும் புறாவின்தட்டு எழும்பாததுகண்டு பிறகு தாமே அத்துலைமீதேறினர், அவர் ஏறவே புறாவெடை குறையத் தசையிடை அதிகப்பட்டது. வேடன் "வீணுசைப்படுவானேன்? அதிகம் எனக்கு வேண்டாம்" என்று மறுக்க, ராஜா "துலையை விட்டிறங்கி மறுபடி தசையை மாத்திரம் தூக்கிப்பார்க்க அதுவும் அதிகப்பட்டிருக்க, வைத்த தசைகளையெல்லாம் எடுத்தெடுத்துச் சும்மாவைத்துவிட்டுக் கடைசியில் அறைச்சேருக்கும் குறைவான தசையைப் புறாவின் எடைக்குச் சரிவர நிறுத்துக்கொடுத்தும் மீந்த ஒரு பெரிய

கூடைகொண்ட தசையைப்பார்த்து "இவ்வளவு தசையும் உபயோகப் படாமற் போகிறதே என்றும், "அருமைத்திரு மேனி அநியாயமாக அறுபட்டுப் போயிற்றே" என்றும் இறையளவும் நினையாமல் "இத்தனையும் தெய்வச்செயலே" என்று நினைத்தார். அத்தருணத்தில் இந்திரனும் அக்கினியும் அவருக்குப் பிரசன்னமாகிச் "சிவகாருணியமுடைய உனது ஈகையை யாவருக்கும் வெளியிடுதற் பொருட்டு இந்திராக் கினிகளாகிய நாங்களிருவரும் வேடனும் புறவுமாகி வந்து உன்னைச் சோதித்தோம்; உன்னிடத்தில் அதுமாத்திரமன்று சாந்தம் நீதி தர்மசிந்தை முதலானவைகளும் நிலைபெற்றிருக் கின்றமை பற்றி எங்களுக்கு அதிக சந்தோஷமாயிற்று" என்று வியந்து அநேக வரங்களை அருளிச்செய்து போனார் கள்" என்றார். அசுவபதி முதலானவர்கள் அதிக சந்தோ ஷப்பட்டார்கள்.

இராவணன் வதைப்படலத்தில், "ஸ்ரீராகவனைக் கொல் லும்படி தசக்கிரீவன் விட்டெறிந்த அதியுக்கிரமாகிய சூலத் தைக்கண்டு தேவர்கள் முனிவர்களெல்லாம் "இது தசரதாத் மஜனை எவ்விதத்திலும் நாசஞ் செய்யும்; இனிச் சீதாபதி யைக் கண்ணிலே காணப் போகிறதேயில்லை" என்று அலறி யழாநிற்க, அதைத் தடுக்கும்படி ராமபத்திரன் பிரயோகித்த எவ்வகை அஸ்திர சஸ்திரங்களையும் பேதித்துக்கொண்டு அது சமீபித்தமாத்திரத்தில் அதை அவன் அதட்டி உங்கா ரத்தாற் பொடிப்பொடியாய்ப் போம்படிசெய்தபொழுது",

"சிவனோ வல்ல னான்முக னல்லன் றிருமாலாம்
அவனோ வல்லன் மெய்வர மெல்லா மடுகின்றான்
தவனோ வென்னிற் செய்து முடிக்குந் தரமல்லன்
இவனோ தானவ்வேத முதற்கா ரணமாவான்.

என்ற பாடலைக்குறித்து, "இராவணன் இதென்னை ஆச்சரி யம்? இந்த ராமன், நாம் நமது பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் கொய்து அக்கினியில் விறகாக இட்டு உதிரத்தை நெய்யாகச் சொரிந்து அகோரமான அரியதவஞ்செய்து பிர மருத்திராதியர்களாற் பெற்ற மெய்ம்மையாகிய அழியாத வர

ங்களையெல்லாம் பொருள் செய்யாமல் எளிதில் அழிக்கின்றான்; எப்படிப்பட்ட ஆயுதங்களையும் நொடிக்குள்ளே தொம்சஞ் செய்கின்றான்; இவ்விதத்தால் இவனைச் சங்காரக்கர்த்தாவாகிய சாட்சாது பரமசிவனென்று நினைப்போமென்றால் அவனுமல்லன்; சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமனென்று நிச்சயிப்போமென்றால் அவனுமல்லன், ரட்சக கர்த்தாவாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவென்று மதிப்போமென்றால்அவனுமல்லன், வனத்தில் தவஞ்செய்பவனென் றெண்ணுவோமென்றால், தவசியானவன் இப்படிப்பட்ட செய்தற்கரிய செயல்களையெல்லாஞ் செய்து முடிக்கத்தக்க தரமுடையவனாயிரான் ஆதலால் அவனுமல்லன்; ஆராய்ந்து பார்க்குமிடத்தில் நமது அக்கிரமம் சகிக்காமல் சர்வத்திற்கும் முதற்காரணம் என்று வேதபுருஷனால் நிருணயித்துச் சொல்லப்பட்ட அந்தப் பரமபுருஷந்தான் இந்த உருவெடுத்து வந்தான் என்று நிச்சயித்தான்" எனக் கம்பர் பிரசங்கித்தார்.

குலோத்துங்க சோழனுடைய மந்திரியானவர் "இராகவனைத் திருமூர்த்திகளில் ஒருவருமல்லனென்று ராவணன் என்ன காரணத்தாற் பூர்வபட்சம்பண்ணிக் கழித்தான்" என்று கேட்க, கம்பர் "சிவனாயிருந்தால் மான் மழு சதுர்புஜம் காளகண்டம் திரிநேத்திரம் இருக்கவேண்டுமே அவை இல்லாமையாலும், அன்றியும் ஈசன் தான் கொடுத்தவரத்தைத் தானே அழிக்கமாட்டானாகையாலும், பிரமனானால் நான்குமுகமும் எட்டுக்கண்களும் தண்ட கமண்டலங்களும் இருக்கவேண்டுமாகையாலும், மேலும் அவன் தனக்குப் பாட்டனும் புரோகிதனுமா யிருப்பதனால்விரோதஞ்செய்யானாகையாலும், விஷ்ணுவெனிற் சங்க சக்கர கட்க கோதண்டகதாயுதங்களைக் கையில் ஏந்திவர வேண்டு மல்லவோ? அவை இல்லையே ஆகையாலும், அவர்களெல்லாம் அல்லனென்று நிருணயித்தான்" என்றார்.

மேற்படி படலத்தில் "தசக்கிரீவன் மடிந்ததுகண்டு விபீஷணர் துக்கிக்கின்ற சமயத்தில்."

"போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத் தழுவியவர் பொரு மைக்கூறச், சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந் தம்மோயைத் தெய் வக்கற்பின், பேர்மகளைத் தழுவுவா னுயிர்கொடுத்துப் பழிகொண்ட பித்தாபின்னைப், பார்மகளைத் தழுவினையோ திசையானைக் கோடி றுத்த பரிதிமார்பால்."

என்ற பாடலைக்குறித்து, "பகைவரோடு எதிர்த்துப் போர் செய்து வென்று முற்காலத்தில் பெற்ற வெற்றியாகிய பெ ண்ணையும், எண்ணிறந்த சாஸ்திரங்களை கற்றுப் பெற்ற கல் வியாகிய பெண்ணையும் விருந்துசெல்வம் முதலானவைகள் காரணமாகப்பெற்ற கீர்த்தியாகிய பெண்ணையும் நெடுங்கா லமாகப் புணர்ந்து சுகமநுபவித்து, அவர்கள் நமது நாய கன் இப்பொழுது காமாதுரனாகி நெறிதவறிப் பரஸ்திரீகம னம் பண்ணத்தலைப்பட்டா னென்று மனதில் அஸூயை கொண்டு பிணங்கும்படி, பின்பு சிறப்புக்கெல்லாம் உற்பத்தி ஸ்தானமா யிருப்பவளை, ஸ்ரீமகா லட்சுமியின் அம்சமான வளை, பிரமாதி தேவர்களுக்கும் பெற்றதாயாய் விளங்குகின் றவளை, தெய்வீகமாகிய கற்பானது உருக்கொண்டுவந்த மகா பதிவிரதை யென்னுஞ் சீதையைத் தழுவும்பொருட் டுத் துராசைகொண்டு பெறுதற் கருமையான உயிரைக்கொ டுத்துப் பிரதிபலனாக எக்காலத்தும் நீங்காத பெரும்பழி யைத் தேடிக்கொண்ட மதிமயக்கமுடையவனாகிய ராவணா! நீ ராமபாணத்திற்கு இலக்காகித் தலைவேறுடல் வேறுப ட்டு விழுந்து, திக்கஜங்களின் கொம்புகள் ஒடிந்து பதிந்து, சூரியனைப்போலப் பிரகாசிக்கின்ற உன் மார்பினாற் பூமியா கிய பெண்ணைத் தழுவிக்கொண்டு கிடக்கின்றையோவெ ன்று பிரலாபித்தாள்" என்பதாகப் பிரசங்கித்தார்.

அதுகேட்டுச் சடையப்பமுதலியாருடைய தம்பி சரரா மமுதலியார் கம்பரைநோக்கி, "ராவணன் மார்பில் யானைக் கொம்புகள் பதிந்திருப்பது வாஸ்தவமே; அம்மார்பு சூரிய னைப்போலப் பிரகாசிக்கின்றதென்றது என்னவிதத்தால்? என்ன, கம்பர், "இராவணன் அஷ்டதிக்கஜங்களுடனே யுத் தஞ்செய்தகாலத்தில் ஐராவதமுதலாகிய அவ்வெட்டு யானை களும் அவனை மூட்டிக் கொம்புகளால் மார்பிலே குத்த, அவைகள் ஊடுருவி முறிந்து மேடும் பள்ளமுமா யிருந்தது

கண்டு, அதை அவன் மயனென்னும் தெய்வத் தச்சனுக்குக் காட்டி 'இதைப்பிடுங்கி எறிந்துவிடுகிறையா? என, மயன் 'பிடுங்கவேண்டுவதில்லை, வாள்கொண்டு அறுத்து, அரத்தினல் அராவி, ஒப்பமாக இழைத்து, மேலே விலையுயர்ந்த மாணிக்கக்கற்களை அழகாகப் பதித்தால், அது ஒரு விசித்திரமான மதாணிப்பதக்கந் தரித்ததுபோ லிருக்கும்' என்று சொல்லி, அப்படியே செய்தான். அது சூரியனைப்போல ஜொலிப்பதுபற்றி அங்ஙனஞ் சொல்லப்பட்டது'' என்றார்.

மீட்சிப்படலத்தில்,

''அஞ்சின னஞ்சின னையை யஞ்சினேன்
பஞ்சினின் மெல்லடிப் பதுமத் தாடன்மேல்
விஞ்சிய கோபத்தால் விளையு மீதெலாம்
தஞ்சமோ மறைமுதற் றலைவனே யென்றான்.''

என்றும்,

''பெய்யுமே மழைபுவி பிளப்ப தன்றியே
செய்யுமே பொறையற நெறியிற் செல்லுமே
உய்யுமே யுலகிவ ளுணர்வு சீறினல்
வைகுமே மலர்மிசை யயனு மாளுமே''

என்றுஞ் சொல்லப்பட்ட பாடல்களைக்குறித்து, பிராட்டியானவள் அக்கினிப் பிரவேசம் பண்ணினபொழுது அவளுடைய கற்பென்னும் நெருப்புத் தன்னைச்சுடத் தான் வெந்து நொந்தமையால், அவ்வக்கினி வந்து ஸ்ரீராகவனை நோக்கி, 'வேதத்தின் முதற்றலைவனாகிய ராமசந்திரா! நான் பயந்தேன், பயந்தேன் செம்பஞ்சுக் குழம்பூட்டிய மிருதுவான பாததாமரையையுடைய இந்தச் சீதையைத் தொடுவதற்காக மிகவும் பயந்தேன், கற்புக்கரசியாகிய இவள்மேல் உனக்கு உண்டாகிய கடுங்கோபத்தினல் விளைந்த இவ்விளைவுகளெல்லாம் எளிமையானவைகளோ? இவள் மனநொந்து சீற்றஞ் செய்வாளானல், உலகமெல்லாம் நிர்மூலமாய் விடுமேயல்லாமல் மழை பெய்யுமா? பூமி பிளந்துபோமே யல்லாமல் தன்னிடத்திலுள்ள அகில சராசரங்களையுந் தாங்கி நிற்குமா? பாவந்தலையெடுத்து நிற்குமேயல்லாமல் தர்மமானது நெறித

றாமற் செல்லுமா? பெரியோர்கள் தத்தம் உயிர்நிலை தேய்ந்து போவார்களே யல்லாமற் பிழைத்திருப்பார்களா? மூல தாமரையில் வசிக்கின்ற பிரமனும் தன் படைப்புத்தொழிலுடனே மாண்டுபோவானே யல்லாமல் உயிர்பெற் றிருப்பானோ? சகலமும் அடியோடே நாசமாய்ப் போய்விடாதா? இதென்ன விபரீதம்?' என்றும், மற்றும் பலவாறுகவும் முறையிடுகையில்,

"தோற்ற மென்பதொன் றனக்கிலை நின்கணே தோற்றம்
ஆற்றல் சான்முதற் பகுதிமற் றதனுளா மப்பால்
காற்றை முன்னுடைப் பூதங்க ளவைசென்று கடைக்கால்
வீற்று வீற்றற்று வீயுறு நீயென்றும் வினியாய்."

என்ற பாடலைக்குறித்து, "பிரமனானவன் சுவாமிக்கு முன்னே வெளிப்பட்டுவந்து, 'விஜய கோதண்டபாணியாகிய ராகவா! கேவலம் சஞ்சித ஆகாமிய பிராரப்த கர்மவசத்தனாய்ப் பலகாலும் பிறந்து பிறந்து உழலுகின்ற பந்த சமுசாரியைப்போல உன்னை நீ மதித்துப் பிரமிக்கின்றையோ? உனக்கு எக்காலத்திலும் உற்பத்தி யென்பதே இல்லையே, சகலமுந் தன்னிடத்திலே தோன்ற, தானொன்றிலுந் தோன்றாத மகா மகிமை பெற்ற மூலப்பிரகிருதியானது செம்பிற் களிம்புபோல அநாதியே உன்னிடத்தில் தோன்றி நிற்கின்றது; பின்பு அம்மூலப்பிரகிருதியிலிருந்து மகதத்துவந் தோன்றுகின்றது; மகதத்துவத்தினின்று அகங்காரதத்துவந் தோன்றுகின்றது; அதிலிருந்து சூட்சுமபூதமாகிய பஞ்சதன்மாத்திரை தோன்றுகின்றது; அதிலிருந்து ஸ்தூல பஞ்சபூதங்கள் தோன்றிப் பஞ்சீகரணப்பட்டுப் பிரபஞ்சத் தோற்றம் உண்டாகின்றது; காலமுடிவில் அனைத்துந் தோன்றியவண்ணமே ஒடுங்கி மாய்ந்துபோகின்றன; இவை இவ்வாறு சங்கோச விகாசப்பட்டு மாய்ந்துபோயும் நீமாத்திரம் எக்காலமும் மாயாதிருக்கின்றாய்" என்றும்,

"எனக்கு மெண்வகை யொருவற்கு மிமையவர்க் கிறைவன்
றனக்கும் பல்பெரு முனிவர்க்கு முயிருடன் றழீஇய
அனைத்தி னுக்குநீ யேபர மென்பதை யறிந்தார்
வினைத்தொ டர்க்குடை விட்டருந் துனைகின்று மீட்டார்."

என்பதைக் குறித்து, 'கர்மபந்தத்தைக் கழித்துத் தாரபுத்திராதி ஈஷணாத்திரயமாகிய அக்கினியினை யறுத்து நீக்கிய சான்றோர், எனக்கும் பார் நீர் தீ வளி வான் சூரியன் இந்து இயமானன் என்னும் அஷ்டமூர்த்தமாய் விளங்கிய சிவனுக்கும், தேவர்களுக் கிறைவனாகிய மகபதிக்கும், ராஜரிஷிகள் தேவரிஷிகள் பிரமரிஷிகளாகிய பெருமைபொருந்திய பலவகை ரிஷிகளுக்கும் உயிரோடுகூடிய மற்ற எல்லாவற்றிற்கும் நீயே பரத்துவமென்பதாகச் சுருதி ஸ்மிருதி இதிகாசபுராண முதலானவைகளும் சொல்வதை அநுபவமாக அறிந்திருக்கிறார்களே ? அப்படியிருக்க இப்படி நீ மயங்கவேண்டியது என்ன?' என்றும் மற்றும் அநேகவிதமாகவுஞ் சொல்லி ஸ்துதிசெய்கையில்,"

"துறக்குந் தன்மைய ரல்லனாற் றொல்லையெவ் வுலகும்
பிறக்கும் பொன்வயிற் றன்னையிப் பெய்வளை பிழைக்கில்
இறக்கும் பல்லுயி ராமனீ யிவடிறத் திகழ்ச்சி
மறக்குந் தன்மைய மென்றனன் வரதற்கு வரதன்."

என்ற பாடலைக்குறித்து, மேலானவர்களுக்கெல்லாம் மேலானவனாகிய பார்வதிபாகன் வந்து சுவாமியைநோக்கி 'ஐயா ரகுநாயகா! உன்னை ஆரென்று நினைத்திருக்கின்றாய்? நீ ஆதிமூர்த்தியாகிய ஸ்ரீமந் நாராயணனே; இந்தச் சனகராஜ குமாரியானவளோ, உன் மணிமார்பில் வீற்றிருக்கின்ற பெரிய பிராட்டியாகிய ஸ்ரீமகாலட்சுமியே யாதலால் புராதனமாகிய எவ்வகைப்பட்ட உலகங்களும் கருவுற்று உற்பவிக்கின்ற அழகிய திருவயிற்றையுடைய தாயாகிய இச்சீதையானவள் உன்னைப் பிரிந்திருக்குந் தன்மை யுடையாளல்லள்; புருஷகாரியாகிய இவள் உன்னைவிட்டு நீங்குவாளானால் பலவகைச் சீவகோடிகளும் மாண்டுபோம்: உனக்கு ஸ்ரீநிவாசனென்னும் பெயரும் மாறிப்போம்; மறுவற்ற மகோத்தமியாகிய இவள் விஷயத்தில் ஓரணுவளவேனுங் குற்றமென்பதைப் பாராட்டாமல்மறந்துவி டவேண்டும்' என்று சொல்லிப்போயினார்" எனக் கம்பர் பிரசங்கித்தபோது, பாண்டியன் "சர்வஞ்ஞனவனுக்குப் பிராட்டியின் குணநிசயந்தெரியாதா?

ஆஞ்சனேயர் தூதுபோய் வந்து சொல்லக்கேட்டது நான் ஞாபகமில்லையா? இப்படிச் சந்தேகிக்கவேண்டியது என்ன?" என்று கேட்க, கம்பர் "ஸ்ரீராகவன் வனப்பிரவேசம் பண்ணினபொழுது, தசரதன் கைகேயியல்லவோ இதற்குக் காரணமாயிருந்தாள், ஆதலால் அவள் என் மனைவியுமல்லள், அவள் வயிற்றிற்பிறந்த பரதன் என் புத்திரனுமல்லன் என்று வெறுத்துரைத்தது பற்றி, அவர் வரவேண்டுமென்றும், அவர் வாக்கினால் அவர்கள் மனைவியும் மைந்தனுமேயென்று சொல்லும்படி வரவேண்டுமென்றுங் கருதி, 'அவலை நினைந்து உரலை இடிப்பதுபோல' இவ்வாறு நடித்ததன்றி வேறல்ல" என்றார். பாண்டியன் முதலானவர்கள் 'எம்பெருமான் கபடநாடக சூத்திரதாரி யென்பது சத்தியமே' என்று ஆனந்தித்தார்கள்.

சுவாமி பிராட்டியாருடனே இலங்கையிலிருந்து புஷ்பகமேறித் திருவயோத்தியை நோக்கிப் பிரயாணப்பட்டுப் பரத்துவாசருடைய ஆச்சிரமத்தில் வந்திருந்து, பரதனுக்குச் செய்திதெரிவிக்கும்படி அனுப்பிய ஆஞ்சனேயர், அக்கினி குண்டத்தில் விழுயத்தனித்த பரதாழ்வானைக் கண்டு ஸ்ரீராமன் வந்தானென்று சொல்லிக் கணையாழியைக் கொடுத்தபொழுது,

"வேதியர் தமைத்தொழும் வேந்த ரைத்தொழும்
தாதியர் தமைத்தொழூந் தன்னை யேதொழும்
ஏதுமொன் றறிவிலா னிருக்கு நிற்குமால்
காதலென் றீதுமோர் கள்ளின் றேற்றமே."

என்ற பாடலைக்குறித்து, "தமையன் வந்த சந்தோஷப்பெருக்கினால் பரதன் அங்கிருந்த பிராமணோத்தமர்களைப் பார்த்து 'சுவாமிகளே! உங்கள் ஆசீர்வாத பலத்தினால் எங்கள் தமையன் க்ஷேமமாய் வந்தான்' என்று சொல்லி, அவர்களுக்குத் தண்டம் சமர்ப்பிப்பான், தன்னை வணங்குதற்குரிய அரசர்களை நோக்கி 'வேந்தர்களே! நீங்கள் நீதிதவறாது நடப்பதனால் எங்கள் அண்ணன் சத்துரு ஜயம்பண்ணி வந்தான்' என்று சொல்லி அவர்களையும் வணங்குவான், தங்கள் வீட்

டில் வேலைசெய்யும் பெண்களைக்கண்டு, 'அடி தாதிகளா! நீங்கள் புண்ணியஞ் செய்ததனால், என் தமையன் மீண்டு வந்தான்' என்று சொல்லி அவர்களையும் கும்பிடுவான், கடைசியில் தன்னைக்குறித்து 'அடா பரதா! நீ நல்ல அதிர்ஷ்டசாலியானமையால் உங்கள் அண்ணன் வந்துவிட்டான்' என்று சொல்லித் தன்னைத்தானே தொழுதுகொள்ளுவான், தமையனும் அவனைச் சார்ந்தவர்களும் வந்ததைப்பற்றியாவது கிருககிருத்தியத்தைக்குறித்தாவது ராச்சியத்தின் பொருட்டாவது இன்னது செய்யவேண்டுமென்பது ஒன்றுந்தெரியாதவனாயிருப்பான், அப்புறம் இப்புறம் அடிபெயராமல் எங்கே நின்றானோ அங்கேதானே திகைத்து நிற்பான், இப்படியெல்லாம் அவன் பரவசப்படும்படி சம்பவித்ததனால், இந்தச் சகோதர வாற்சல்யத்தாலுண்டாகிய களிப்புங் கள்ளுண்ட பாவனையாகவே இருக்கின்றது" என்று கம்பர் பிரசங்கிக்க, கொங்குதேசாதிபதி "பரதன் பிராமணர்களைத் தொழுதது விசேஷமே தோஷமல்ல, தன்னைப்பணியும் அரசர்களைத் தான் பணிந்ததோ தகாதசெய்கை, அதுவும் பெரிதல்ல ஒரு பரியாயமாய்; தாதியைத்தொழுதானென்றதுதான் வரம்பு கடந்ததாயிருக்கின்றது" என, கம்பர் 'அவன் சந்தோஷமாகிய சமுத்திரத்தில் மூழ்கிக் கரைகாணாதிருந்தமையால், தான் மெய்ம்மறந்து எதிரே கண்டவர்களையெல்லாம், இன்னாரினையரென்று தாரதம்மியம் பாராமற் றொழுதான்; தாரதம்மியம் பாராவிடினும் தாதிமார் தனக்கு வேறாயிருப்பவர்களாகையால் அவர்களைத் தொழுததும் ஆச்சரியமல்ல, வேறல்லாத தன்னையும் வேறாகக்கருதித் தொழுதுகொண்டதே அதிக ஆச்சரியம்" என்று சொல்லக்கேட்டு, யாவரும் மிகவும் அதிசயித்தார்கள்.

ஸ்ரீராமர் திருவயோத்திக்கு எழுந்தருளினபொழுது பரதனும் முதன் மந்திரியாகிய சுமந்திரனும், வசிஷ்டரால் மகுடாபிஷேகத்திற்குச் சுபதினங் குறிப்பித்து, வேண்டிய உபகரணங்கள் சகலமுஞ் சேகரித்துச் எல்லாத்தேசங்களுக்குஞ் செய்தி தெரிவித்து, அந்தந்த அரசர்களும் முனிவர்க

ளும் வந்து நிறைந்திருக்க, விபீஷணன் சுக்கிரீவன் ஜாம்பவந்தன் முதலானவர்களும் புடைசூழ, வானரப் படைத்தலைவர்களும் வானரவீரர்களும் நெருங்கி நிற்க, சமுத்திர தீர்த்தத்தோடு புண்ணியநதி தீர்த்தங்களைக்கொண்டு மங்களஸ்நானஞ் செய்வித்து, திவ்வியமாகிய பீதாம்பரம் உடுத்து, நவரத்ன பூஷணாந்தரித்து, பரிமள திரவியங்களும் புஷ்பமாலைகளுஞ் சாத்தி, உந்நதஸிம்மாஸநத்திற் சுவாமியை ஜானகி சமேதராக எழுந்தருளியிருக்கச்செய்த சமயத்தில்,

"அரியணை யனுமன் றாங்க வங்கத னுடைவாள் பற்றப்
பரதன்வெண் குடை பிடிக்க விருவர்கள் கவரி வீச
விரைசெறி கமலத் தாள்சேர் வெண்ணெய்மன் சடையன் றங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி."

என்ற பாடலைக்குறித்து, "ஆஞ்சநேயர் சிங்காசனத்தைத் தாங்க, அங்கதன் சுவாமியின் உடைவாளை ஏந்திநிற்க, பரத மகாராஜன் வெண்கொற்றக் குடை பிடிக்க, இலட்சுமணனும் சத்துருக்கனனும் சாமரை வீச, இலட்சுவாகு முதலான சூரியகுலத்து அரசர்களெல்லாம் பரம்பரையாய்ச் சிரசில் தாங்கி அரசாண்டு வந்த மாணிக்கமயமான மகுடத்தை அபிஷேகித்துப் பூஜித்து, வேதப்பிராமணர்கள் தொட்டு ஆசீர்வதிக்க, மங்கலச்சங்க முதலாகிய வாத்தியங்கள் கோஷிக்க, வாசனை தங்கிய கமலாசனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீமகாலட்சுமி வாசஞ்செய்கின்ற திருவெண்ணெய்நல்லூர் கிராமாதிபதியாகிய சடையப்ப முதலியாருடைய மரபில் அக்காலத்தில் தோன்றியிருந்த உத்தமர்களாகிய வேளாளர்கள் எடுத்துக்கொடுக்க, பிரமரிஷி சிரேஷ்டராகிய வசிஷ்டர் தமது கைகளால் வாங்கி, மந்திர வாக்கியங்களைச்சொல்லி, ஸ்ரீராகவனுடைய திருமுடியில் தரித்து மந்திராட்சதைகளை இறைத்தார்; அத்தருணத்தில் தேவர்கள் புஷ்பவருஷம் வருஷித்துத் தேவதுந்துபி முழங்கினார்கள்; யாகாக்கினி வலஞ்சுழித்தெழுந்தது; தர்மம் தழைத்தோங்கியது; மாதம் மும்மாரிபொழிய முப்போகம் விளையப் புலியும் பசுவும் வைரமில்லாமல் ஒருதுறையில் தண்ணீர்குடிக்க, வருணாச்சிரமதர்மம் வழுவா

மல் தெய்வபக்தி குன்றாமல் மநுநீதி கோடாமல் முறைமே செங்கோல் செலுத்தி, வைதேகி மனோகரன் அரசாண்டிருந் தான்" என்று கம்பர் பிரசங்கிக்கக்கேட்டு அந்தச்சபையி லிருந்தவர்கள் யாவரும் பிரயானந்த மடைந்தார்கள்.

பிறகு சோழராஜன் சித்திரத்தொழிலில் மிகவும் நிபுணனாகிய ஒரு சிற்பனைக்கொண்டு ஸ்ரீராமர் பட்டாபிஷேக மகோற்சவத்தை விசித்திரமாகத் தத்ஜாதீயமாய்ப் படத்தில் எழுதுவித்துத் தன்னரண்மனைக்குச் சமீபத்திற் பட்டாபிஷேக மண்டபமென்று ஒரு உன்னதமான மண்டபங் கட்டுவித்து அதைச் சுவர்க்கம்போலச் சிங்காரித்து, அதன் நடுவில் ஒரு பத்மராக பீடம் ஸ்தாபித்து, அதன்மேல் அந்தப் படத்தை நாட்டி, மலர்மாலை சூட்டி, விதிவத்தாக ஆராதித்து, கம்பராமாயண புஸ்தகத்தைப் படத்தின் அருகே வைத்து, கந்தபுஷ்பங்கள் சாத்தி, மந்திராட்சதையால் அருச்சித்து, தீபதூபங்காட்டி, பின்பு அதற்குச் சரிகை முகபடற் கௌசனையிட்டு, பொன்மயமாகிய சித்திரப்பல்லக்கில் வைத்து, சோடச உபசாரத்துடனே அதை முன்னே கொண்டு செல்ல, பின்னே கம்பர் கவிச்சக்கிரவர்த்திக்கு விலையுயர்ந்த பட்டாடைகளைத் தரித்து, சங்குசக்கரக் கடுக்கனும், நவரத்நகண்டியும், வஜ்ரப்பதக்கமும், முத்துமாலையும், தங்கக் காப்புங் கொலுசுமிட்டு, சந்தனபுஷ்ப தாம்பூலமுங் கொடுத்து, சப்த லட்சணமுடைய பட்டத்து யானைமேல் பொன்னம்பாரி வைத்து அதன் மீது அவரை ஏற்றி, மேளதாளம் முழங்கத் தன் மந்திரி பிரதானிகள் சாமரம்போடச் சிறப்பாகக் கிராம பிரதக்ஷிணம் பண்ணுவித்து, அவருக்குச் சத்திரம் சாமரம் திருச்சின்னம் முதலிய அநேக விருதுகளுங் கொடுத்து ஸ்துதிசெய்து, பிராமணர்களுக்குக் கோதான பூதானங்களும், மற்ற கவீசுரர்களுக்குப் பலவித வெகுமானங்களுஞ் செய்து, அரசர்கள் பிரபுக்கள் முதலானவர்களுக்குத் தக்கவாறு மரியாதைபண்ணி, அவரவர் இருப்பிடம் போய்ச் சேரும்படி விடைகொடுத்து அனுப்பிவித்தான். அவர்களுக்குள் சிற்சிலர் போம்பொழுது கம்பராமாயணத்

தைப் பார்த்து ஒவ்வொரு பிரதி எழுதுவித்துக்கொண்டு போனார்கள். ராமாயண பிரசங்கம் செய்தபொழுதுதான் கம்பரைப் பாண்டியராஜன் அதிக அந்நியோந்நியமாகச் சிநே கித்தான்; அதற்குமுன் அவ்வளவு நேசமில்லை; அன்றுமுதல் கொண்டு அவனிடத்திற்குக் கம்பர் அடிக்கடி போகவும் வரவும், அவன் சமஸ்தானத்திலேயே சிலகாலம் மருவியிருக்கவும், அவனால் வேண்டிய சகாயம் பெறவும் அவருக்கு இடமுண் டாயிற்று.

கம்பர் சீவந்தரா யிருந்தகாலத்தில் எப்பொழுதா வது எவ்விடத்திற் காயினும் போகவரச் சம்பவித்தால் முன் போலத் தனியே கால்நடையாய்ப் போகாமல், அன்று கரு ணாகர பாண்டியன் அபிமானித்துக் கொடுத்த தந்தப் பல் லக்கின்மேல் ஏறி, குலோத்துங்க சோழன் வியந்து கொடு த்த சுவேதசத்திரம் கவிக்க, சாமரம் வீச, திருச்சின்ன மூத, மற்றும் பற்பல விருதுகள் பிடிக்க, குடகதேசாதிபதி கொடுத்த யானைகளும், மாறுவாடி தேசத்தரசன் கொடுத்த ஒட்டகங்களும், சிந்துதேசத்திறைவன் கொடுத்த குதிரைக ளும், ஆந்திரதேசாதிபதி கொடுத்த கண்டவாள எருதுகளும் பெருங்கூட்டமாக ஒரு ராஜாவின் தண்டு வருவதுபோல் தம் மைச் சூழ்ந்துவரும்படி பிரயாணம் பண்ணுவதுண்டு. இந் தக்கூட்டம் போகிற வருகிற மார்க்கங்களில் இவைகளுக்கு வேண்டிய ஆகாரங்களை அங்கங்குள்ள சோலைகள் தோப்பு கள் கொல்லைகள் கழனிகளில் வேண்டியமட்டும் பெற்றுக் கொள்வதற்குத் தடையில்லை; அந்த நஷ்டத்தை வருஷவாரி யில் துரைத்தனத்தார் தங்களுக்கு வரும் மேல்வாரத்தில் “கம்பன் போனவழி கண்டு கழித்தது இவ்வளவு” வென்று கழித்துக் குடிகளுக்குக் கொடுப்பது பெருவழக்கமா யிருந் தது.

அந்நாளில் கம்பரையும் அவருடைய மாணாக்கரையும் அடுத்துப் பலபெயர்கள் மேற்படி ராமாயணத்திற்குச் சம்பிர தாயமாகவும் சாதுரியமாகவும் உரை கேட்டார்கள். அப்புறம் அப்பல பெயரையும் அடுத்துப் பற்பலர் பாடங்கேட்டார்

கள். இந்தப்படி அதன் பின்பும் காலக்கிரமத்தில் அநேகர் கர்ணபரம்பரையாக இராமாயணத்திற்கு உரைகேட்டு வந்தார்கள். கொஞ்சகாலத்திற்கு முன்பு அவ்வாறு கர்ண பரம்பரையாகப் பாடங்கேட்டுக் கிரமமாய்ப் போதிக்கத்தக்க வல்லமை பெற்றிருந்தவர்கள் ஆராரென்னில், தென்தேசத்தில் வசித்திருந்த பெத்த பெருமாள்பிள்ளை என்பவரும், சீகாழி அருணாசல கவிராயரும், மயிலைச் சீநிவாசப்பிள்ளையும், சேதுபதியின் வக்கிலாகிய சோமசுந்தரப்பிள்ளையும், தஞ்சாவூர் ஸமஸ்தான வித்வான் இராமசுவாமி கவிராயரும், தொல்காப்பிய வரதப்பமுதலியாரும், காலேஜ் திருவேங்கடாசல முதலியாரும், திருத்தணிகைச் சரவணப்பெருமாள் கவிராயரும், புதுவைக் குறள் வேங்கடாசல வுபாத்தியாயரும், காஞ்சிபுரம் அருணாசல தேசிகரின் பிதாவாகிய சண்முக கவிராயரும், திருநீர்மலைக் காளிங்கராய பிள்ளையும், மற்றும் சிற்சிலருமே. தற்காலத்திலும் அப்படிப்பட்ட சாமர்த்தியமுடைய சிலர் சென்னை ராஜதானி முதலான ஸ்தானங்களில் இருக்கின்றார்கள்.

சீகாழி அருணாசல கவிராயர் மணலிச் சின்னையாமுதலியார் வீட்டில் கம்பராமாயண பிரசங்கஞ் செய்து கொண்டிருந்தபொழுது, ஒருநாள் அம்முதலியார் கவிராயரை நோக்கி, "இன்றைக்குத் தமிழிலும் சமஸ்கிருதத்திலும் பூரண பாண்டித்தியமுள்ள பூம்பாவைக் குழந்தைமுதலியார் இவ்விடத்திற்கு வருகிறபடியினாலே பிரசங்கத்தை நிறுத்திவைத்தால் யுக்தமாயிருக்கும்" என்ன, கவிராயர் "அப்படிப்பட்ட மகா வித்வானுக்கு முன்பாகத்தான் ஆவசியகமாய்ப் பிரசங்கிக்க வேண்டும்" என்று அன்றைத்தினம் சுந்தரகாண்டத்தில் பொழிலிறுத்த படலத்தில் அசோக விருட்சம் இவ்விதமாக உற்பத்தியாயிற்றென்றும், அது நெருங்கிய பசுமையாகிய இலைகளை யுடைத்தாயிருப்பதென்றும், அதனால் மிகவும் குளிர்ச்சியைக் கொடுக்கின்றதென்றும், காலைமாலை முதலிய எந்த வேளையிலும் தன்னிழல் தன்னைக்காத்து நிற்கின்றதென்றும், அந்நிழலின்கண் வந்தவர்களுடைய சோகத்தைத் தீர்ப்பதெ

ன்றும், அக்காரணத்தால் அசோகமரமென்று பெயர்பெற்றதென்றும், ஸ்திரீகள் பாததாடனஞ் செய்யப் புஷ்பிப்பதென்றும், அம்மலர் மன்மத பாணத்தில் ஒன்றென்றும், அது மன்மதனாற் காமங்கொண்டவர்களுடைய கண்ணிற் பிரயோகிக்கப் படுவதென்றும், அதுபோய் அவர்களுக்கு வெப்பத்தை விளைப்பதென்றும், அதன் நிறம் அக்கினி போல்வதென்றும், அதன் தளிர் காய் கனிகளின் குணம் இன்ன தின்னதென்றும், அவ்விருட்சம் இக்காலத்தில் இல்லையென்றும், காணக்கிடையாத இவ்வசோகமென்று வேறொரு மரத்தை வழங்குகிறார்களென்றும், அசோகமரத்தின் கன்றுகளை ராவணன் ஒரு தீவிலிருந்து எடுப்பித்து வந்து தன்னாட்டில் வனமாக வளர்ப்பித்தானென்றும், அவ்வனத்தில்தான் சீதை சிறையிருந்தாளென்றும், பலவிதத்திலும் நன்றாய்ப் பூரித்துப் பிரசங்கித்தார். குழந்தை முதலியார் அப்பிரசங்கத்தைக் கேட்டு "நானிதுவரையில் இப்படிப் பிரசங்கித்தவர்களைக் கண்டதும் கேட்டதுமில்லை" என்று வியந்துரைத்ததாகச் சொல்வார்கள்.

கம்பர் இராமாயணம்பாடி அரங்கேற்றிய சரித்திரம்
முற்றிற்று.

---

## ஒட்டக்கூத்தர் ஈட்டியெழுபது பாடியது.

தந்துவாயர் என்னும் செங்குந்தர்கள் [கைக்கோளர்] தங்கள் மரபிற் பிரபலவித்துவானாயிருந்த ஒட்டக்கூத்தரிடத்தில், ஒருநாள் வந்து "ஐயா! கம்பர் வேளாளரைக் குறித்து ஏரெழுபதும், வன்னியரைக் குறித்துச் சிலையெழுபதும் பாடினார். பூர்வமே வைசியரைக் குறித்துச் சங்கத்தமிழாகிய சிந்தாமணி முதலிய பஞ்ச இலக்கியங்களுக்குள் ஒன்றான சிலப்பதிகாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது; அன்றியும் ஔவையானவள் பந்தன் என்னும் வணிகன்மேல் ஓரந்தாதியும், ஐவேல் அசதி என்னும் யாதவன்மேல் ஒரு கோவையும் பாடினாள்; கம்பர் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்

பமுதலியாரை ராமாயணமென்னும் மகாகாவியத்தில் ஆங் காங்கு எடுத்துரைத்தார்; இப்படிக்கெல்லாம் வைசியர் வேளாளர் வன்னியர் யாதவர் முதலானவர்கள்தத்தம் குலவளத்தைப் புலவர்கள் புகழ்ந்துரைக்கப் பாடல்பெற்றுச் சிறப்புற்றிருக்க, நமது சாதியார் பூஷணாதிகளை அணிவதற்குப் புண்ணியஞ் செய்யாத வறியவர்போல அச்சிறப்பின்றி யிருப்பது அழகோ? நமது மரபைக் குறித்துத் தாமாவது ஏதேனும் ஒரு பிரபந்தம் செய்யலாகாதா ?" என்ன, அவர் அது கேட்டு "நீங்கள் விரும்பிய விஷயம் நல்லதுதான்; பாமாலை சூட்டப் பெற்றவர்களைச் சாமானியராக நினைக்கவொண்ணாது; மனிதர்களுக்குட் சிலர் செத்தும் சாவாதவர்களும், அநேகர் இருந்தும் செத்தவர்களுமா யிருக்கிறார்கள்; அவர்களிற் செத்துஞ் சாவாதவர்கள் உதாரகுண முடையவர்களும், அதிசூரரும், வித்வஜனர்களும், வித்வான்கள் வாக்கினாற் பாடல்பெற்றவர்களும், பிறரிடத்தில் இரவாதாரும் முதலானவர்களே; இவர்கள் தமது பூதவுடம் பழிந்தும் புகழுடம் பழியாது வளர்தலால் செத்துஞ் சாவாதவர்களாவார்கள்; இருந்துஞ் செத்தவர்கள் வறியரும், தீர்க்கரோகஸ்தரும், கொண்டமனைவிக் கஞ்சி விருந்தோய்பாதவரும், கல்லாதமூடரும், இரப்பவர்க் கீயாதவரும், சுமையெடுத்துச் சீவிப்பவரும் முதலானவர்களே; இவர்கள் பூதவுடம் பழியப் புகழுடம்பு வளராமையால் இருந்துஞ் செத்தவர்களாவார்கள். புலவர்கள் வாக்கினாற் பாடல்பெற்றுச் செத்துஞ் சாவாதிருப்பவர்களும், பாடல்பெறாத மற்றவர்களும் உலகத்தில் மூவர்களாலும் மற்ற ஆழ்வார்களாலும் பாடல்பெற்ற திவ்விய ஸ்தலங்களும், அது பெறாத சாதாரண ஸ்தலங்களும் போலாவார்கள்; மேலும், புருஷசன்ம மெடுத்தவன் தத்துவ ஞானியாகவாவது வித்வானாகவாவது, மண்டலாதிபதியாகவாவது, தனவானாகவாவது, குணவானாகவாவது, கீர்த்திமானாகவாவது, தர்மவானாகவாவது, உதாரமுடையோனாகவாவது, சுத்தவீரனாகவாவது, அல்லது கவீசுரர்களாற் பாடல்பெற்றவனாகவாவது மகிமை யுற்றிரானாயிற் கௌரவமும் பகுத்தறிவுமில்லாத மிருகத்துக் கொப்பாவான், ஆகையாற்

பாடல்பெறவேண்டியது ஆவசியகமே; ஆயினும் நம்மைக் குறித்துப் பிறர் பாடுவதன்றோ தகுதி; நம்மை நாமே பாடிக் கொள்வது தகுதியா ? அவ்வாறு செய்தால், தன்னைத்தான் புகழ்ந்ததாக வல்லவோ முடியும் ? பார்ப்பவர்களும் கேட்பவர்களும் இஃதென்னை புதுமை ? வேளாளர் முதலானவர்கள் கம்பர் முதலியோராற் பாடல்பெற்றதைக் கண்டு இவர்கள் தங்களைத் தாங்களே பாடிக்கொண்டார்களே; இது 'புலியைப்பார்த்துப் பூனை சூடிக்கொண்டதுபோல' அல்லவா என்று பரிகாசம் பண்ணமாட்டார்களா ?'' என்றார்.

அதைக்கேட்ட செங்குந்தர்கள்,

''கற்ற வர்க்கு நலமி றைந்த கன்னி யர்க்கும் வண்மைகை
உற்ற வர்க்கும் வீர ரென்று யர்ந்த வர்க்கு முலகையாள்
கொற்ற வர்க்கு முண்மை யான கோதில்ஞான சரிதராம்
நற்ற வர்க்கு மொன்று சாதி நன்மை தீமை யில்லையே.''

என்றபடி, 'கற்றுணர்ந்த பூரண பண்டிதர்களுக்கும், பருவம் நிறைந்த கன்னிகைகளுக்கும், கொடையாளர்களுக்கும், புறங்கொடாத வீரர்களுக்கும், உலகாளும் அரசர்களுக்கும், மெய்ஞ்ஞானிகளுக்கும் சாதிபேதம் இல்லையென்பதனாலும், ''தன்னைப்புகழ்தலும் தகும்புலவோர்க்கே'' என்பதனாலும், ''சந்நியாசிக்கும் சாதியபிமானம் போகாது'' என்பதனாலும், நீர் நம்மைக்குறித்துப் பாடுவது யுக்தமே யல்லது அயுக்தமன்று' என்றார்கள். ஒட்டக்கூத்தர் ''உங்கள் இஷ்டப்படிக்குப் பாடினால் நமக்கு என்ன பரிசுகொடுப்பீர்கள்?'' என்று கேட்க, அவர்கள் 'உமக்கு வேண்டிய திரவியம் கொடுப்போம்' என்ன, இவர் நமக்குத் திரவியத்திற்கு என்ன குறைவு ? சோழராஜன் கொடுத்தது அளவிறந்த பாக்கிய மிருக்கிறது; ஆதலால் நீங்கள் திரவியங் கொடுக்க வேண்டியதில்லை; என, அவர்கள் 'பின்னை என்ன உமக்கு வேண்டியதே! அதைச்சொன்னால் தடையின்றி நடத்துவோம் ?' என்ன, இவர் ''ஒவ்வொரு பாடலுக்கு ஒவ்வொன்று விழுக்காடு எழுபது தலைச்சன் பிள்ளைத்தலைகளைப் பரிசாகக் கொடுத்தால் நமது ஆயுதமாகிய ஈட்டியைச்சுட்டி எழுபது பாட்டில் 'ஈட்டியெழுபது' என ஒரு பிரபந்தஞ் செய்கி

ளும்" என்று சொல்ல, அவர்கள் எக்காலத்தும் தங்கள் செவியிற் கேளாத பயங்கரமான அந்தச்சொல்லைக் கேட்டபொழுது திடுக்குற்று 'இஃதென்ன கோரம் "கூத்துப்பார்க்கப் போனவிடத்திற் பேய்பிடித்தது போலவும்" "பிள்ளைவரத்துக்குப்போனவள் புருஷனைப் பலிகொடுத்தது போலவும்" இருக்கிறதே? இவர் நம்மவரா யிருக்கிறாரென்றபாத்தியதையைப்பற்றிப் பாட்டுப்பாடவேண்டுமென்று சகசமாகக் கேட்டாற் கொஞ்சமாவது இரக்கமில்லாமலும் தாக்ஷிணியமில்லாமலும் பாடலொன்றுக்கு ஒரு தலைவீதமாக எழுபதுதலை கொடுக்கவேண்டுமென்றும், அவைகளும் தாய்க்குத் தலைப்பிள்ளையின் தலைகளா யிருக்கவேண்டுமென்றும் துணிந்து சொல்லுகிறாரே, இஃதென்ன விபரீதம்? எங்கேயாவது தலையுங் கொடுப்பார்களா? இவருக்குப் பாடவேண்டுமென்று மனதிருந்தால் இப்படிச் சொல்வாரா? பாடக்கூடாதென்ற எண்ணத்தைக்கொண்டல்லவோ "ஏடாகோடக்காரனுக்கு வழியெங்கேயெனில், போகிறவன் றலைமேலே" என்பார்போல அகடவிகடம் பேசுகிறார்; இதற்கு என்ன உத்தரஞ் சொல்லுகிறது?' என்று ஒன்றுந் தோன்றாமல் மரம் போல அசைவற்று மௌனமா யிருந்தார்கள்.

ஒட்டக்கூத்தர் "நாம் கேட்ட கேள்விக்கு நீங்கள் ஒன்றுஞ் சொல்லாமலிருக்கிறதென்னே?" என இவர்கள் 'ஐயா! "செல்வம் சொல்லுக்கஞ்சாது" என்பதற்குச் சரியாய்க் கேட்க உமக்கு நாக்கூசவில்லை, மறுமொழி சொல்ல எங்களுக்கு நாவெழவில்லை; என்செய்வோம்? நம்முடைய மரபின் மகிமை விளங்கும்படி பாடற் பாடவேண்டுமென்று நாங்கள் உம்மைப் பிரார்த்தித்தவிடத்தில் தலைகொடுக்கவேண்டுமென்கிறீர்; பாட்டுக்காகத் தலை கொடுத்தவர்கள் ஆர்? கேவலம் அசாத்தியத்திற் கொண்டு வந்து விட்டுவிட்டீரே' என்றார்கள். அதற்கு இவர் புன்சிரிப்புச் சிரித்து "என்னகாணும் ஆனைமேலேறுவேன், வீரமணி கட்டுவேன், அகப்பட்ட பெயர்களைத் தலையை உடைப்பேன்" என்கிற விளையாட்டுப் பிள்ளைகளுக்குள்ள தைரியமும், 'ஆராவது என்னைத் தூக்கி

மாத்திரம் பிடிப்பார்களானால் நான் பிணக்காடாக வெட்டு வேன்' என்ற முடவனுக்குள்ள வீரமுங் கூட உங்களுக்கில்லையே; ஆர் தலை கொடுப்பார்க ளென்றீர்களே; குமணராஜன் காட்டிற் போயிருக்கும்பொழுது, அவன் தம்பியாகிய அமணராஜன் மாச்சரியத்தால் 'என் தமையன் தலையைக் கொண்டு வருகிறவர்க்குக் கோடிபொன் கொடுக்கிறேன்' என்று சொன்ன சமயத்தில், ஒரு வித்வான் குமணன்மேற் கவிபாடிக் கொண்டுபோய்ப் பரிசுகேட்க, அவன் 'நான் செல்வமுடையவனா யிருந்த அக்காலத்தில் வரவில்லை, வறியவனாயிருக்கின்ற இக்காலத்தில் நீர் வறுமையினால் மெலிவுற்று வந்தடைந்தீர், ஆயினுமென்ன, என் தலையைக் கொய்துகொண்டுபோய் அமணனிடத்திற் கொடுத்து, அவன் அதற்காகக் குறித்த திரவியத்தை வாங்கி உமது வறுமையை நிவர்த்தி செய்து கொள்ளும்' என்னும் கருத்தை யுள்ளடக்கி,

"அந்தநாள் வந்திலை யருங்கவிப் புலவோய்
இந்தநாள் வந்தனை நொந்துநீ யடைந்தாய்
தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்து
விலைதனை மீட்டுன் வறுமைநோய் களையே."

என்று ஓர் கவிபாடி, தன் உடைவாளையும் அப்புலவன் கையிலெடுத்துக் கொடுக்கவில்லையா? ஒரு வணிகனுக்காகப் பழையனூரில் வேளாளர் எழுபது பெயர் தங்களுயிரைக் கொடுத்துச் சத்தியத்தை நிலைநிறுத்தவில்லையா? இந்தப் பிரதேசத்திலேயே கொஞ்சகாலத்திற்குமுன் ஓர் ஊரில் நிலையேரியில் அலையடிக்க, அதன் கரையின் ஒரு பக்கத்திற் கொஞ்சம் மண் கரைந்தோடினதை அருகிலிருந்த ஒருழவன் கண்டு இனி இரண்டொரு நிமிஷஞ் சும்மாவிருந்தால் கரையுடைந்துபோ மென்றும், அந்த இடத்தை மண்ணை வெட்டிப்போட்டு அடைத்துப் பலப்படுத்துவோமென்றால் அவ்வளவு சாவகாசத்திற்கு இடமில்லையாதலால் முதலுக்கே மோசம் வருமென்றும் நினைத்துப் பரிதபித்துத் தன்னுடன் உழவுத்தொழில் செய்துகொண்டிருந்தவனைப் பார்த்து, நீ இந்தத் தர்மசங்கடமான தருணத்தில்

முன்பின் யோசனைபண்ணுமல் என்னை வெட்டியெடுத்து அந்த உடைவாயிற் போட்டு அடை' என்றுசொல்ல அப்படியே மண்வெட்டியினுல் அவனை இருதுண்டாக வெட்டிப் போட்டு அடைக்கவில்லையா? உதாரபுருஷனுக்குப் பொருளும், சுத்தவீரனுக்குப் பிராணனும் திரணமாத்திரந்தானே; இஃது ஒரதிசயமா? தலைகொடுக்கிறதென்பது நம்முடைய குலத்தாருக்கு விஷயமே யல்ல; நம் முன்னோர்கள் உயிரை விடுவதற்கு அஞ்சாத அதிசூரர்களா யிருந்தார்களென்பதையும் நீங்கள் கேள்விப்படவில்லையா? புலியானது பூனையாய் விட்டதுபோல இப்படி அதைரியப்பட்டுப் பின்வாங்குவீர்களாகில் உங்களுக்குப் பாடல்வேண்டுமென்னும் இச்சை ஏன் உண்டாயிருக்கின்றது? அந்த எண்ணத்தை விட்டு விடுங்கள்" என, அவர்கள் 'நம்முடைய முன்னோர்கள் அதிசூரர்களா யிருந்தார்க ளென்றீரே எப்படி? என, ஒட்டக்கூத்தர் சொல்லுகிறார்:—

"கேளுங்கள் சுற்றத்தார்களே! பூர்வம் மிக்க கல்வியும், தக்க செல்வமும், சிவகாருணியமும், அழகும், ஆண்மையும், சற்சன சாவகாசமும், நீதி கோடாமையும், பொறுமையுமுடையவனுய் அரசாண்டிருந்த நீதிநெறிச் சோழன் காலத்தில் ஒரு விதத்திலும் குறையாத வல்லமையுடையான் என்னும் காரணத்தால் "வல்லான்" என்று பெயர் பெற்ற ஓர் வீரனிருந்தான். அவனே மற்றவர்களைப்போல நாடுகள் ஊர்களில் வசிக்கின்றவனல்லன். கம்பம் என்னும் கிராமத்தின் ஏரியைப்பார்க்கிலும் மிகவும் பெரிதாய் எக்காலத்திலும் வற்றுத சமுத்திரம்போல அதிக ஆழமாகிய ஓரேரி நடுவில், அடிமுதல் நுனிவரையில் ஒரே அளவாகத் திரண்டு ஜலத்துக்குமேல் நூறடியுயரம் நீண்டு ஆளேறக்கூடாமல் வழுவழுப்பா யிருக்கின்ற பிரமாண்டமான இருப்பு ஸ்தம்பங்களை நாட்டி, அந்த ஸ்தம்பங்களின்மேல் இருப்புத்தூலங் கிடத்தி, அதன்மேல் இருப்புக்கைகள் நிரைத்து, அவைகளின்மேல் இருப்புத்தகடு பரப்பி, அத்தகடுகளை இருப்பாணிகளால் தைத்து, அவ்விடத்தில் மகாமேருவும் இணை

யன் றெண்ணும்படி எக்காலமும் அழியாத அறியுந்நத மாகிய மூன்றடிக்கு உப்பரி சமைத்து, உப்பரிகையைச் சுற்றிப் பலவகையான காய் கனிகள் தேமலர்களைத் தருகின்ற செடி கொடி மரங்கள் நெருங்கியதாய், மயில்கள் குயில்கள் கிளிகள் பூவைகள் முதலிய பலவகைப் பறவைகளும் ஆடிப் பாடிக் கூவிக் கொஞ்சி விளையாடுவதாய், கோடைகாலத்தினும் தண்ணென்று நிழலார்ந்த ஓர் இளஞ்சோலையை உண்டாக்கி, அச்சோலைக்குச் சுத்திரத்தின் வழியாக அவ்வேரி நீர் பாய்ச்சி, அதை அபிவிர்த்தியாம்படி செய்து, தேவர்களுடைய சுவர்க்கம்போல விளங்குகின்ற உசிதமான அந்த ஸ்தானத்தில், அவன் தனக்கு வேண்டிய ஆடுகள் மாடுகள் பசுக்கள் கன்றுகளும் வஸ்திராபரணங்களும் வீட்டுத் தட்டு முட்டுகளும் சகலவித தானிய தவசங்களும் மற்றும் அளவிறந்த திரவியங்களும் குபேரனைப்போலக் குறைவில்லாமல் சேகரித்து வைத்துக்கொண்டு, எவ்வளவும் சத்துருபயமின்றி ஒருவருந் தனக்குச் சமானாதிக மில்லையென்னும்படி நெடுநாள் வாழ்ந்திருந்தான்.

அவனிடத்திற் * சரகேசரி சக்ரகேசரி என்ற இரண்டு புரவிகளும், ஒரு வஜ்ர வாளும், வஜ்ர தண்டமும், வஜ்ர கவசமு மிருந்தன. அவன் நாள்தோறும் இராக்காலத்தில் நல்ல நடுநேரத்தில் அந்தக் கவசத்தை உடலில் தரித்து, வஜ்ரவாளையும் கதையையும் கையிலேந்திச் சரகேசரி சக்ரகேசரிகளில் ஒன்றின்மேலேறி அதிவேகமா அதை ஆகாச மார்க்கத்திலேயே நடத்திக்கொண்டுபோய், அரசர்களுடையகோட்டை கொத்தளங்களையெல்லாம் அநாயசமாகத் தாண்டிச்சென்று

* சரகேசரி யென்பது கேசரமார்க்கத்தில் அம்புவிட்டாற்போல வேகமாய்ச் செல்வது; சக்ரகேசரி அம்மார்க்கத்தில் சக்கரம்போலச் சுழன்று செல்வது. வஜ்ரவாள் இரும்புமுதலிய லோகங்களையெல்லாந் துணித்தெறிவது. வஜ்ரகதை அதாவது தண்டம், கோட்டைகளின் கற்கதவு முதலானவைகளையும் உடைத்தெறிவது. வஜ்ர கவசம் அம்பு குண்டு முதலியவைகள் பட்டுருவாமல் அவைகள் பொடிப் பொடியாய்ப் போக உடலைக்காப்பது.

கதவுகளை அக்கதையினால் அடித்து உடைத்துத் தூள்தூளாக்கி உட்புகுந்து, எதிர்த்தவர்களை வஜ்ரவாளுக்கு இரைகொடுத்து, அவர்கள் பொருள்களையெல்லாங் கொள்ளையிட்டுச் சூறையாடி, ஸ்திரீகளையும் சிறைபிடித்துக்கொண்டு போவான். அவனுடைய உபத்திரவம் எப்படிப்பட்டவர்களுக்கும் எங்குந் தலைவைத்துப் படுக்கக்கூடாது. இவ்வாறு வெகு நாளாய் நடந்துவருகையில் மேற்சொல்லிய சோழராஜன் 'இந்த யமராட்சதனைப் பிடித்துச் சிறை செய்யலாமென்று பார்த்தால் அகப்படுகிறவனா யிருக்கவில்லையே; இவனுடன் ஆர் போராட வல்லவர்கள்? அம்புகள் குண்டுகள் முதலானவைகளைப் பிரயோகித்தாலும் பயன்படவில்லையே; இவனையும் ஜெயிக்கக்கூடுமா? இந்தப் பாதகன் ஏழரையாண்டுச் சனிபோலத் தோன்றினனே; இவனை அடக்கத்தக்க உபாயந்தா னென்னை, உங்களில் எவர்களாயினும் வல்லானை வெல்ல வல்லவர்களிருந்தாற் புறப்படுங்கள் பார்ப்போம்' என்று தன் சபையிலுள்ள சேனுவீரர்களை நோக்கி அதிக துக்கத்துடன் சொன்னான்.

அப்பொழுது அங்கிருந்த அதிரதர் முதலாகிய ரதவீரர் யானைவீரர் குதிரைவீரர் வில்வீரர் வாள்வீரர் வேல்வீரர்களும் குடர்குழம்பிச் சிங்கசொப்பனங்கண்ட யானைபோலக் கை கால் விதிர் விதிர்க்க, 'அடா அப்பா! வல்லானைவெல்ல வல்லவர்களும் உண்டா? கடல் முழுதுங் கவிழ்ந்து குடிக்கலாமா? வடவாக்கினியை வாய்நீரால் அவிக்கலாமா? மலையை மயிர்முனையால் தொளைக்கலாமா? அவன் பெயரைச் சொன்னாலும் அழுகபிள்ளையும் வாய்மூடுமே; அவன் வானத்தையும் வில்லாக வளைப்பான்; மணலையுங் கயிராகத் திரிப்பான். ஆதலால் அவனை வெல்வது அசாத்தியம். அசாத்தியம்! எங்களாலே முடியாது' என்று சொல்லி, "ஆற்காட்டிலே சண்டையானாற் சந்தமாமா, அடுப்பங்கரையில் ஒளித்திருப்போம் சந்தமாமா, வேலூரிலே சண்டையானாற் சந்தமாமா, வேலிப்புறத்தில் ஒளித்திருப்போம் சந்தமாமா" என்று அஞ்சி ஓடுகின்ற நபுஞ்சர்களைப்போலப் பின்னிட்

டார்கள். அத்தருணத்தில் நம்மவர்களாகிய செங்குந்தர்களிற் சூரன் முதலிய பதினெட்டுப்பெயர்கள் தங்கள் தலைவனாகிய அதிசூரன் என்பவனுடனே உக்கிரமாய் எழுந்து, 'காயமென்ன கற்கண்டா உயிரென்ன தித்திப்பா? ஆயினுஞ் சாவு நூறினுஞ்சாவு' என்று அட்டகாசஞ்செய்து, அந்த ராஜசபை கிடுகிடென்று அதிரச் சிங்கம்போலக் கர்ச்சித்து நின்று, அரசனை நோக்கி 'மகாப்பிரபு! நீரெவ்வளவும் அஞ்சவேண்டாம்; உம்முடைய தயையைத் தலைமேல் தாங்கிக்கொண்டு நாங்கள் போய் ஒருவாரத்திற்குள்ளே அவசியம் அந்தப் பொல்லானாகிய வல்லான் தலையைக் கொண்டுவருகிறோம். கொண்டுவராமற் போனால் தாய்தந்தையரைக் கொலைசெய்தவர்களும், சிநேக துரோகஞ் செய்தவர்களும் குருமொழி கடந்தவர்களும், நம்பியடுத்தவர்களைக் கைவிட்டவர்களும், உண்ணுஞ் சோற்றில் நஞ்சு கலந்தவர்களும், பெரியோரைத் தூஷித்தவர்களும், மனைவியைப் பிறர்பால் விடுத்துச் சீவனஞ் செய்பவர்களும் போகுங்கதியிற் போகக்கடவோம்' என்று பிரதிக்கினை செய்தார்கள். நீதிநெறிச் சோழன் சந்தோஷப்பட்டு 'அப்படியே அவனை வென்று வரக்கடவீர்கள்' என்று அவர்களுக்கு மரியாதைசெய்து உத்தரவு கொடுத்தனுப்ப, அப்பதினெட்டுப் பெயர்களும் புறப்பட்டுப்போய், இராத்திரியில் வல்லானுக்கு வாசஸ்தலமாகிய ஏரியருகிற் சேர்ந்து, 'அம்மம்மா! இதைப்பார்க்கவும் பயமாயிருக்கிறதே; அந்தச் சண்டாளன் மற்றவர்களைப் போல நாடுகள் ஊர்களில் வாசஞ்செய்யலாகாதா? அவ்விடங்களிலிருந்தால் தனக்கு அபாயம் வருமென்று நினைத்தானும், காடுகள் மலைகள் குகைகளிலாவது மறைவாய் வசிக்கலாமே; அங்குஞ் சேராமற் பாதாளத்தை ஊடுருவியிருக்கின்ற இந்த ஏரியைத் தேடிவந்து இதன் மத்தியில் அழிவில்லாத வீடு கட்டிக்கொண்டிருக்கிறானே; இவ்வேரியோ இலேசானதல்லவே; கொஞ்சங்குறைய நூறு புருஷபாகம் ஆழ்ந்திருக்கிறதே; இதில் எப்படி இறங்குவது?' என்றும், 'நீந்திச் செல்வோமென்றாலுங் கண்ணுக்கெட்டாத வெகுதூர விசாலமுடையதாகையாற் காலோய்ந்து

போமே?' என்றும் நினைத்து, அவ்விடத்திற் படவாவது தெப்பமாவது கிடைக்குமா?' என்று தேடியும் கிடையாமையாலும், தெப்பங் கட்டுகிறதற்குச் சமீபத்திற் கம்புகழிகளைக் காணாமையாலும் 'வேறென்ன செய்கிறது?' என்று திகைத்தார்கள்.

பிறகு 'ஆனதாகட்டும், எப்படியும் முன்வைத்த காலைப் பின்வைக்கலாகாது' என்று, தங்களில் எட்டுப்பெயர்களை வெட்டித் தெப்பமாகச் சேர்த்து, அவர்கள் தோள்களைத் துணித்துத் தெப்பமரத்தின் குறுக்குக்கழிகளாக இணைத்து, குடல்களைப் பிடுங்கிக் கயிறாகத்திரித்து இறுக்கித் தெப்பங்கட்டி ஏரிநீரிற் போட்டு மிதக்கப்பண்ணி, அப்பிணத் தெப்பத்தின்மேற் பத்துப்பெயரேறி நடத்திக் கொண்டுபோய் இருப்புக்கம்பத்தைக் கிட்டி அதன்மேல் தொத்தியேற, அஃது ஏறக்கூடாமல் வழுவழுக்கின்றது கண்டு அந்த வழுவழுப்பை மாற்றுகிறதற்கு ஏழுபெயர்களை வெட்டி அவர்கள் ரத்தத்தை வாரிக் கம்பத்தின்மேல் இறைத்தார்கள். ரத்தம் களிப்புடையதாகையால் அது கம்பத்தில் ஒட்டிக்கொண்டு அவ்வழுவழுப்பைச் சிறிது மாற்றினவளவில், மூன்று பெயர்கள் சர்க்குமரமேறுகிறவர்களைப் போலத் தன்தன் உத்தரீயத்தைக் கம்பத்தில் அடிக்கடி சுற்றி ஏணிப் பழுவின்மேற் கால்வைத் தேறுகிறதுபோல, அதன்மேல் அடிவைத்து லகுவா யேறிப்போய்ச் சூரன் அதிசூரனென்கிற இரண்டுபெயர் வல்லான் படுக்கையறையிற் புகுந்தார்கள். ஒருவன் குதிரைலாயத்திற்போனான். அவனைக் குதிரைகளிலொன்று கண்டு மருண்டு முன்னங்கால் பின்னங்கால்களிற் கட்டப்பட்ட அகாடி பிச்சாடிக் கயிறு தொடுத்திருந்த முளைகளைப் பிடுங்கிக்கொண்டு இடி இடித்ததுபோல உரக்கக் கனைத்து அங்கு மிங்கும் ஓடத் தலைப்பட்டது. அந்த அரவத்தால் அங்கே உடம்பு தெரியாமற் பிணம்போலக் கிடந்து தூங்கின குதிரைக்காரன் மருண்டு விழித்தெழுந்து பரபரப்பாக ஓடிப்போய்க் குதிரையைப் பிடித்துச் சமாளிக்கப்பண்ணித் திருப்பிக்கொண்டு வருவதறிந்து, லாயத்திலிருந்த நம்மவன் தன்னைக் குதிரைக்

காரன் கண்டாற் சந்தேகப்படுவானென்று அக்குதிரைக்குப் படுக்கைபோட்டிருந்த புல்லுக் குப்பையின் கீழேபோய்ப் பதுங்கி யிருந்தான். அவனிருப்பதை அறியாமற் குதிரைக் காரன் குதிரையைக் கொண்டுவந்து அவ்விடத்தில் நிறுத்தி, தூக்கயபக்கத்தில் முளையை அவன் முதுகின்மேல் வைத்து அழ அடித்துவிட்டுப் போய்ப் படுத்துக்கொண்டான். முளை இவன் முதுகில் தைத்து மார்பில் உருவினதனால் இறந்து போனான்.

முன்பு படுக்கை யறையிற்போன இருவரும் அங்கே அநேக சூரியர் உதயமானாற்போலச் சுடர்விட்டெரிகிற கிளை விளக்குத் தேர்விளக்குக் கால விளக்குகளையும், வரிசை வரிசையாகச் சுவர்முழுதும் நிறைந்திருக்கின்ற நிலைக்கண்ணாடி களையும், விதவிதமான சித்திரப் படங்களையும், வீணை தம்புரு மிருதங்கம் முதலாகிய பற்பல வாத்தியக் கருவிகளையும், இந்திர விமானம்போல சோடிக்கப் பட்டதாய் இலங்குகின்ற உந்நதமாகிய சப்பிரகோண மஞ்சத்தையும், அதன் மேற்பக்கத்தில் விசாலமா யிருக்கின்ற அழகான சரிகை விதானத்தையும், அதைச் சுற்றிக்கட்டிய பல வர்ண ஜாலர்களையும், முத்துக் குச்சுகளையும், நாற்புறத்திலும் அடிவரையில் தொங்க விடப்பட்டு உட்புறத்திலுள்ள விசித்திரங்களையெல்லாம் விசிதமாகத் தெளிந்த கண்ணாடிபோலக் காட்டுகின்ற மெல்லிதான ரவை சல்லாத் திரையையும், கட்டிலின்மேல் மயிர் அன்னத்தூவி பஞ்சு முதலியவற்றால் தைத்து இட்டிருக்கும் ஐந்தடுக்கு மெத்தைகளையும் அவைகளின்மேல் அகல விரித்திருக்கும் சலவைத் துப்பட்டியையும், அதன்மேற் போட்டிருக்கும் விலையுயர்ந்த முகமல் திண்டு தலையணைகளையும், கட்டிலைச்சுற்றி அணியணியாக நிறுத்தியிருக்கும் நானாவித சூத்திரப் பிரதிமைகளையும், அவைகளிற் சில சாமரை போடுவதையும், சில ஆலவட்டம் அசைப்பதையும், சில எக்காள மூதுவதையும், சில பேரிகை முழக்குவதையும், சில படை வீரர்போல நிரை நிரையாக வருவதையும், சில அவைகளுக்கெல்லாம் முன்னே தளகர்த்தர்போலக் குதிரையேறி வரு

வதையும், சில துப்பாக்கி முதலிய ஆயுதங்களைக் கொண்டு யுத்தபாவனை காண்பிப்பதையும், சில மத்தளங் கொட்டுவதையும், சில தாளம் போடுவதையும், சில வீணை வாசிப்பதையும், சில நடனஞ் செய்வதையும், அருகில் தங்கத் தாம்பாளங்களில் அடுக்கடுக்காய் வைத்திருக்கும் போளி, சுகி, லட்டு முதலான பலகாரங்களையும், பொற் சொம்புகளில் பசுவின் பாலைக் கறந்து கற்கண்டுபோட்டுக் காய்ச்சி நிரப்பி வைத்திருப்பதையும், மரகதத் தட்டுகளிற் சீவிய வாசனைப் பாக்குடனே விதவிதமாக மடித்துவைத்த வெற்றிலைச் சுருள்களையும், பவளவள்ளத்தில் வைத்திருக்கும் கர்ப்பூரம் சாதிக்காய் ஏலம் கிராம்புகளையும், வஜ்ரக் கரண்டகங்களில் நிறையத் திணித்து வைத்திருக்கும் முத்துச் சுண்ணாம்பையும், மாணிக்கக் கிண்ணத்தில் அத்தர் புனுகு ஜவ்வாது கலந்து குழைத்து வார்த்துவைத்திருக்கும் கலவைச் சந்தனக் குழம்பையும், நவரத்ன மய[illegible] செப்பில் நிரப்பி வைத்திருக்கும் விலையுயர்ந்த பன்னீரையும், வாயகன்ற தங்கத் தட்டுகளிற் சித்திர விசித்திரமாகத் தொடுத்து வைத்திருக்கும் பரிமளப் பூச்செண்டுகளையும், தலையாட்டுப் பக்கத்தில் அந்தக் கட்டிலின் கிட்டவைத்திருக்கும் கோமேதகத் தம்பலப் படிகத்தையும், அந்த மஞ்சத்தின்மேற் காஷ்மீரப் பொற்சரிகைப் பூஞ்சால்வையை நெடுகவிரித்துச் சொகுசாயப் போர்த்துக்கொண்டு போக தேவேந்திரனைப்போல வல்லான் படுத்திருக்கிறதையும், அவன் பக்கத்தில் இந்திராணி தேவிபோல அதிரூப சௌந்தரியமுடைய, ஒருபெண் திவ்வியமான வஸ்திராபரணங்களால் தன்னை அலங்கரித்துச் சுகந்த சந்தனாதி பரிமள திரவியங்களைத் தரித்து, வெகுதூரம் கமகமவென்று மணக்கின்ற மலர்மாலை சூடி ஒயிலாகச் சயனித் திருப்பதையும் பார்த்து அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள்.

மற்றும் அங்குள்ள அதிசயங்களையெல்லாம் நோக்கிக் கண்களித்து இந்தப் படுக்கையறை சமைத்திருக்கிற விசித்திரமும், இதைச் சோடித்திருக்கிற சோடிப்பும், எங்கே

யுண்டென்று தங்களுக்குள்ளே நினைத்து, வல்லானுக்குச் சமீபத்திற்போய் அவனை 'அடா மூண்டைமகனே! உனக்கு இவ்வளவு பாக்கியமும் எங்கிருந்து கிடைத்தது? நீ எத்தனையோ பெயர்களை நாள்தோறும் கண்கலக்கங் கொள்ளும்படி அடித்துப் பறித்து ஆரவாரங் கண்டவனல்லவா? இப்பொழுது ஒன்று மறியாதவன்போல அமைவாகக் கும்பகர்ணனைப்பார்க்கிலும் பெருந்தூக்கந் தூங்குகிறையே; உனக்கு வெட்கமில்லையா? நீ கெட்ட கேட்டுக்கு இத்தனைபோகமா? என்று வைது, 'இனித் தாமதிக்கலாகாது, தாமதித்தாற் பொழுது விடிந்துபோம், அப்புறம் இவனை ஆராலும் வெல்லமுடியாது' என்று அதிசூரன் வல்லான் மார்பின்மேற் பிரமராக்ஷசன்போற் கொப்பெனக் குதித்தேறி உட்கார்ந்து, இடது கையினால் அவன் கழுத்தை இறுக்கிப்பிடித்து, வலதுகையிலிருந்த வீரவாளைக் கழுத்திற் பூட்டி அறுக்கப்போனான்.

அச்சமயத்தில் ஒருவன் தன் கழுத்தை அறுக்கிறதாக வல்லான் கனாக்கண்டு பயந்து திடுக்கென விழித்துக்கொண்டு தன் மார்பின்மேல் எமனைப்போல ஏறி மண்டிபோட்டிருந்து கழுத்தை அறுக்க எத்தனித்தவனைக் கண்டு, 'நாமிப்பொழுது கண்ட சொப்பனமும் இதற்கு முன் எட்டுநாளாய்க் கண்டுவந்த துர்நிமித்தங்களும் தப்பாமற் பலித்தன; பாதாளபரியந்தம் ஆழ்ந்த கடல் நடுவில் திரிலோக பயங்கரனாகிய ராவணேசுரன் ஆச்சந்திரகாலம் அழிவில்லாத கோட்டை கட்டிக்கொண்டு நிர்ப்பயமாக வாழ்ந்ததுபோல, இந்த அகாதமான ஏரி நடுவில் அபேத்தியமான வீடு கட்டிக்கொண்டு, சத்துருக்களால் பிராணபய மில்லாமலிருந்த நம்மிடத்தில் வருவதற்குக் கொஞ்சமாவது அச்சமில்லாமல் ஓர் அடியெடுத்து வைக்கத்தான் யாராலே கூடும்? இவ்வளவு தைரியத்துடனே எல்லாத் தடைகளையும் பேதித்துக்கொண்டு வந்தபடியினாலே இவன் அசகாயசூரனா யிருக்கவேண்டும்; ஆதலால், இனி நாம் நமது உயிரின்மேல் ஆசை வைக்க வேண்டியதேயில்லை; ஏதோ நமக்கு இதுவரையில் ஜயகால

யிருந்ததனால் வெகுகாலம் அபாயமின்றி வாழ்ந்தோம்; அஃது இன்றைக்கோடே தொலைந்து போய்விட்டதாகவேண்டும்; "ஓடுகிற ஆறு எப்பொழுதும் ஓடிக்கொண்டேயிருக்குமா?" அஃதேது என்று தனக்குள்ளே நிச்சயித்துக் கழுத்தறுக்கத்துணிந்த அதிசூரனைத் தன் கண்களை மலரவிழித்து நோக்கி 'அப்பா! என் கழுத்தை அறுக்காதே; சற்றே பொறு பொறு; ஒரு வார்த்தைகேள்; என்னையேன் வீணாக வதைசெய்கிறாய்? நானிதுவரையில் ஒருவரும் எனக் கெதிரில்லையென்று கர்வித்திருந்தேன்; அந்தக் கர்வம் உன்னாலேயொழிந்துபோய் விட்டது; இவ்வளவு தூரம் வந்தமட்டும் இனி ஆலோசிக்க வேண்டியதென்ன? 'கட்டிலின்மேலேயியும் முறைபார்க்கிறதுண்டோ?' இன்றுமுதல் நான் உனக்குக் கீழமைந்து உன் சொற்படி கேட்கிறேன்; என் சொத்துக்களெல்லாம் உன்னுடையவைகளே; சந்தோஷமாகக் கைப்பற்றிக்கொள்; உன்னைத் தடுப்பவர் யாவருமில்லை; என்னைமாத்திரம் கொல்லாமல் விட்டுவிடு; நான் இந்தத் தீவில் நில்லாமலும், ஒருவருக்குந் தீங்குசெய்யாமலும், கண்காணாத தேசத்திற்போய் உன் பெயரைச்சொல்லிப் பிழைத்துப்போகிறேன்' என்றான்.

இவன் 'நீ சொல்லுகிறது சரிதான்; ஆயினும் சோழனிடத்தில் நான் உன் தலையைக் கொண்டுவருகிறேனென்று சபதஞ் செய்துவந்தேனே அதற்கென்ன செய்கிறது?' என்ன, வல்லான் 'அப்படியானால் என் தலைக்கு மாறாகப் பொய்த்தலையையும், என் வஜ்ர வாளையும், வஜ்ர கதையையும், வஜ்ர கவசத்தையும், சயகேசரி சந்திரகேசரி என்னும் இரண்டு புரவிகளையுங் கொடுக்கிறேன்; எனக் குண்டாயிருக்கிற உபபலமெல்லாம் பெரும்பாலும் இவைகளே; நீ இவைகளைக் கொண்டுபோய்க் காண்பிக்கலாம்; இனி நான் ஆரையும் அதிக்கிரமிக்கிறதேயில்லை' என்று சொல்லித் தன் வாளைத்தொட்டுப் பிரமாணிக்கஞ் செய்துகொடுத்து உடம்படிக்கை பண்ணினான். அதுகேட்டு அவனைக் கொல்லத் துணிந்த அதிசூரன் மனதிரங்கி 'நல்லது உன்னைக் கொன்று

நானடையும் சாம்பிராச்சியம் ஒன்றுமில்லை' என்றுசொல்லி அவன் கொடுத்த வஜ்ரவாள் முதலானவைகளைத் தன் வசம் பண்ணிக்கொண்டு, அவனைச் சும்மா எதேச்சையாய் இருக்க விட்டால் ஒருவேளை "பழைய குருடி கதவைத் திறடி." என்பதாகவந்து சம்பவிக்கவுங் கூடும்; எப்படி நம்புகிறது?' என்று சந்தேகித்து, அவன் கைக்கும் காலுக்கும் விலங்கு பூட்டிக் காவலில் வைத்து, அவனால் சிறைசெய்யப்பட்டவர்களையெல்லாஞ் சிறைநீக்கி அவரவர்களுடைய சுதேசம் போய்ச்சேர உத்தரவும் வழிச்செலவுக்குப் பணமுங் கொடுத்து அனுப்பிவிட்டு, அதிசூரன் சூரனை நோக்கி 'நாம் இப்பொழுது வல்லான் பொருட்டாக வல்லவோ இவ்விடத்திற்கு வரும்படி யிருந்தது; வந்தவிடத்திற் பிரதானமாகக் குறித்த காரியத்தைத் தெய்வ கடாட்சத்தால் முடித்துக் கொண்டோம்; இனி வரவேண்டிய அவசியம் நமக்கு ஒன்றுமில்லை யாதலால் இங்குள்ள அற்புதங்களையெல்லாம் எந்தக் காலத்தில் வந்து பார்க்கிறது? எப்படியும் ஒருமுறைவந்த நாம் முழுவதும் செவ்வையாய்ச் சுற்றிப் பார்த்துவிட்டுப் போகலாமே' என்ன, சூரன் 'என் கருத்தும் அப்படியே' என்றான்.

அப்பொழுது வல்லானுக்குக் குற்றேவல்செய்யும் பரிசாரகரில் இருவரை அழைத்துப் 'பந்தங் கொளுத்தி வாருங்கள்' என்ன, அவர்கள் பந்தத்தைக் கொளுத்திப் பிடித்து முன்னே வழிகாட்டிக் கொண்டுபோக, அவர்கள் பின்னே இவர்களிருவரும் தொடர்ந்துபோய் அந்த மெத்தையின் மூன்றடுக்குகளிலும் ஏறிப்பார்த்து, அதன் பக்கத்தில் இருக்கின்ற குதிரைலாயம்மாட்டுத்தொழுவம் படைப்பள்ளிமுதலானவைகளையும் புகுந்து நோக்கி, பின்பு மெத்தையைச் சுற்றியிருக்கின்ற சோலைக்குட் பிரவேசித்து, வல்லான் உலாவுகிறதற்கு ஒழுங்காகவும் விசாலமாகவும் சமைக்கப்பட்ட சாலைகளையும், அச்சாலைகளின் இருபக்கங்களிலும் வரிசை வரிசையாய் நாட்டியிருக்கின்ற தெங்கு கமுகு, வாழைகளையும், பல சாதிப் பூஞ்செடிகளையும், அவைகளைச் சுற்றிப் பொன் வெ

ள்ளி ரத்நங்களாற் கட்டப்பட்ட சிறுபாத்திகளையும், அப்பாத்திகளுக்கு நீலரத்நக் கால்வாய்களின் வழியே வந்து பெருகும்படி ஏரி நீர் பாய்ச்சுஞ் சூத்திரத்தையும், அங்கங்கே வட்டமாகவும் சதுரமாகவும் சமைக்கப்பட்டிருக்கின்ற சொர்ண மேடைகளையும், தெய்வரம்பைக்குச் சமானமாகிய ஸ்திரீகளுடனே வல்லான் ஜலக்கிரீடை செய்வதற்கு அதிக விசாலமாக அடியிற் பளிங்குக்கற் படுத்து, சுற்றிலும் மரகதக்கரை யோட்டி, வஜ்ரப்படி கட்டி, முத்துபோலத் தெளிவும் பால் போல மதுரமுமாகிய குளிர்ந்த நீர் நிறைந்திருக்கின்ற தாமரைப் பொய்கையையும், சோலையின் கீழ்ப்புறத்தில் தங்கச் சுவரெழுப்பி, வெள்ளித்தூண் நிறுத்தி, நிலப்பாவுக்கல் ஏற்றி பளிக்கொடுங்கை அமைத்து, சுவரின் ஒருபக்கத்திற் பாரத யுத்தமும், மற்றொரு பக்கத்தில் ராமராவண யுத்தமும், பின்னொரு பக்கத்திற் சிவனது அறுபத்துநான்கு திருவிளையாடலும், வேறொருபக்கத்திற் கிருஷ்ண லீலைகளுஞ் சிறப்பாகத் தீட்டியிருக்கின்ற அற்புதமான மண்டபத்தையும், அதன் மத்தியில் வல்லான் விநோதமாய் வீற்றிருக்கும்படி நவரத்நமயமாக உண்டாக்கப்பட்ட சிங்காசனத்தையும், அதனருகிலிருக்கும் பத்மராக பீடத்தையும், தந்த நாற்காலிகளையும், மற்றுமுள்ள பற்பல அதிசயங்களையும் தனித்தனி நோக்கி 'ஆ! ஆ! வல்லானாகிய பட்டிமகன் தான் வெகுகாலம் வாழ்கிறவனாக நினைத்துக்கொண்டு எத்தனையோ புதுமைகளை யெல்லாஞ் செய்வித்தானே, இஃது ஆச்சரியம் ஆச்சரியம்' என்று வியந்து அப்பால் நடந்துபோனார்கள்.

போகும்பொழுது நிரைநிரையாக மரக்கிளைகளில் பனங்காய்போலத் தூக்கப்பட்டிருக்கிற தலைகளைப் பார்த்துப் பிரமித்து 'இஃதென்ன அகோரம்?' என்று பந்தம் பிடிப்பவர்களைக் கேட்க, அவர்கள் 'இந்தக் கொடுமையை என்னவென்று வாய்விட்டுச் சொல்லுகிறது? இவைகள் மகாபாதகனாகிய வல்லானாலே கொல்லப்பட்ட அரசர்களுடைய தலைகள். அவர்களை வெட்டொன்றும் துண்டிரண்டுமாகத் துணித்து, முண்டங்களை இருந்த இடங்களிலேயே கிடந்தழிய விட்டு,

தலைகளை மாத்திரங் கொண்டுவந்து நாள்தோறும் இந்தப்படி தூக்கிவைக்கிறது அவனுடைய வழக்கம். பூர்வம் ராவணனால் தேவர்கள் முனிவர்களுக் குண்டான உபத்திரவம் ஸ்ரீராமரால் நிவாரணமானதுபோல, இக்காலத்தில் இவனால் ராஜாக்களுக்குண்டான சங்கடம் புண்ணியவான்களாகிய உங்களால் நிவாரணமாயிற்று. இதுவரையில் இந்த நீசனிடத்தில் நித்தியகண்டம் பூரணாயுசாகவே சேவகம் செய்துகொண்டு வந்த எங்களுக்கும் நல்லகாலம் வந்தது' என்றார்கள். அச்சொற்களையெல்லாம் அதிசூரனும் சூரனும் கேட்டுத் தலையசைத்து மூக்கின்மேல் விரல்வைத்து, 'கொடுமை! கொடுமை!' என்று சொல்லிக்கொண்டே அங்கிருந்து திரும்பி இலாயத்திற்கு வந்து, அதிசூரன் சக்ரகேசரிமேற் சூரனை ஏறச்சொல்லித் தான் சரகேசரிமேல் ஏறப்போனவிடத்தில் மூளையுருவி இறந்தவனைக் கண்டு, 'நாம் முன்னமே இன்னானைக்காணோமென்று தேடினோமே, ஹரி! ஹரி! இவன் கதி இப்படியா ஆயிற்று?' என்றெண்ணி, உடனே அப்புரவிமேலேறி இருவரும் அங்கிருந்து பிரயாணப்பட்டுப் பொழுது விடியும்பொழுது சோழனுடைய ஆசாரவாசலின் புறத்தில் வந்து, குதிரையை விட்டிறங்கி வல்லானை வென்ற அதிசூரன் வஜ்ரகவசத்தை மார்பிலே தரித்து, வஜ்ரவாளை வலதுகையிலேந்தி, வல்லான் பொய்த்தலையை இடதுகையிலே தாங்கி, சூரனென்பவன் வஜ்ரகதையைக் கையிற்பிடித்தவண்ணமாய்த் தன் அருகே வர அதியுக்கிரமாகிய வீராவேசத்துடனே ஆர்ப்பரித்து எட்டுத்திசையும் செவிடுபட ஜயசங்கம் முழக்கிக் கொண்டு ராஜசபையில் வந்து பிரவேசித்தான்.

அவனுடைய ஒரு கையிலிருக்கிற வீரவாள் ஜோதியின்னல் மின்னுவதுபோலக் கண்கூசும்படி தகதகென்று ஒளிவீச, மற்றொரு கையிலிருக்கிற வல்லான் பொய்த்தலையானது சாட்சாது அவன் நற்றலைபோலவே கண்கள் சுழல, கண்ணீர் பெருக, புருவம் நெரிய, மீசையும் உதடும் துடிக்க, முடிந்த சிகையானது இருசெவிப் புறத்திலுமிருக்கின்ற அழகான காகபட்சத்துடனே அவிழ்ந்து குலைந்து அலைய, நெற்றியி

லணிந்த திருநீறும் திலகமும் வீரபட்டமும் பிரகாசிக்க, கழுத்து அறுத்த பாவனையாகவே அதில் நின்று சரசரவென்று பச்சை ரத்தம் ஒழுக, கோரமாகக் காணும்படி அவன் திடுதிடென்று வருவது கண்டு, அச்சபையிலுள்ள அனைவரும் கிடுகிடென்று நடுங்கிப் பிரமைகொண்டு, சித்திரப் பிரதிமை போல நிலைபெயராமல் இருந்தவிடத்திலேயே சோர்ந்தார்கள். சோழராஜனும் அஞ்சி நெஞ்சு தளர்ந்து அதிசயித்து அவனைப்பார்த்து, 'போனவிடத்தில் நடந்த வர்த்தமானமென்ன ?' என்று கிரமமாகக் கேளாமல் அவசரப்பட்டு, 'மகா பிரபல வீரனாகிய இந்த வல்லான் தலையை நீ யெப்படிவெட்டினாய் ?' என்று கேட்டான். அவன் அதற்குப் பின்னையொன்றும் மறுமொழி சொல்லாமல், 'இதோ பார், இப்படித்தான்' என்று கையிலிருந்த கூரிய வாளைக்கொண்டு தன் தலையைத் தானே கறுக்கென்று வெட்டினான்; ஒரு வெட்டிலேயே தலையொருபக்கமும் உடல் ஒருபக்கமுமாக விழுந்தன. அதைக் கண்டவர்கள் பதைபதைத்துச் சிலர் 'அம்மம்மா ! இஃதென்ன தீரம் ?' என்றும், சிலர் 'இஃதென்னகோரம் ?' என்றும், சிலர் 'இஃது ஆர் செய்த பாவம்' என்றும், சிலர் 'இவனுடைய வீரமே வீரம்' என்றும், சிலர் 'படைக்கு ஒருவனென்பதை இவனிடத்தில் தான் கண்டோம்' என்றும், சிலர் 'இந்தப்புண்ணிய புருஷன் வல்லான் கொட்டத்தை அடக்கியது எவ்வளவு உபகாரம்' என்றும், சிலர் 'இவனின்னம் உயிரோடிருந்தால் வெகுநாளைக்குச் சத்துருபயமில்லாமலிருக்கலாமே' என்றும், சிலர் 'வல்லான்மேற் போருக்குப்போனவர்கள் இவனுடன் பதினெட்டுப்பெயரல்லவோ, இரண்டு பெயர் மாத்திரந்தானே மீண்டுவந்தார்கள்; மற்றைப் பதினாறுபெயர் எங்கேயிருக்கிறார்களோ ?' என்றும், சிலர் 'இருக்கிறதேது? அவர்கள் மாண்டுபோனதாகத் தான் காணப்படுகிறது' என்றும், சிலர் 'இதோ கையிலே கதைபிடித்திருக்கிறானே இவனும் இறந்துபோவானோ பிழைப்பானோ ?' என்றும், 'இவர்கள் வெற்றி பெற்றுவந்த சந்தோஷத்தைச் சிவனேயிருந்து அனுபவிக்கிறதற் கில்லாமற் போய்விட்டதே' என்றும் பலவிதமாகச் சொல்லிச் சொல்லிப் பிரலாபித்தார்கள்.

அப்பொழுது கதாயுதபாணியா யிருக்கின்ற சூரன் என்பவன், 'மற்ற பதினாறு பெயரும் இறந்தது வரவு செலவல்ல; வல்லானை வென்ற அதிசூரன் என்னும் சிங்கமும் மடிந்து போய் விட்டதே, நானிருந்து ஆரை ரட்சிக்கப்போகிறேன்? என் தலையைக் கதையால் மோதி உடைத்துக்கொண்டு நானும் மாண்டுபோகிறதே நலம்' என்று நிச்சயித்துக்கொண்டு அந்தக் கதையைத் தன் தலைக்கு நேராக உயர ஓங்கினான். பார்த்தவர்கள்யாவரும் 'இதென்ன கொடுமை? ஐயையோ! இவனும் வீணாக மாண்டுபோய்விடப் போகிறானே; இவனை வேண்டா மென்பதாகத் தடைசெய்வார் ஒருவருமில்லையா?' என்று அழுதார்கள். அத்தருணத்தில் தரையின்மேல் விழுந்து கிடக்கிற அதிசூரனுடைய தலையானது சூரனை அதட்டி 'அடா சூரா! பதறாதே, பதறாதே; பொறு, பொறு; பதறாத காரியம் சிதறாது; நான் சொல்லுகிறதைக் கேள்' என்று, யாவருக்குங் கேட்கும்படி சொல்லுகின்றது. 'நீவிருதாவாக இறப்பானேன்? என் சொற்படி செய்தால் நானும் பிழைப்பேன்; ஏரியினிடத்தில் வெட்டுண்டிறந்த பதினாறு பெயரும் பிழைப்பார்கள்; உனக்கும் பிராணநஷ்டமில்லை; எப்படியெனில், அருவம் நான்கு, உருவம் நான்கு, அருவுருவம் ஒன்றாகிய நவேந்திர பேதமாய் விளங்குகின்ற பரமசிவத்தின் வாமபாகத்தில் எழுந்தருளியிருக்கும் உமாதேவியினது திருவடிச் சிலம்பில் நின்றும் சிதறிய ஒன்பது மணிகளிற் பிரதிபலித்த அவளது சாயையாகிய ஒன்பது பெண்களின் புத்திரர்களான வீரதீரன் வீரசூரன் வீரகேசரி வீராந்தகன் வீரமாகேந்திரன் வீரமார்த்தாண்டன் வீரவாகு முதலிய நவவீரர்களுடைய வம்சஸ்தரான நமக்குத் தலைமையும் நமது குலதெய்வமுமாகிய முருகக்கடவுளைப் பிரார்த்திக்கவேண்டியது; பிரார்த்தித்தால் அவர் அநுக்கிரகிப்பார்; நம்மில் மரித்த பதினெழுவரும் பிழைப்பார்கள்' என்ன, அவனப்படியே குமாரயந்திரத்தை ஸ்தாபித்து, அதிற் குமாரசுவாமியின் மூலமந்திரமாகிய ஷடாக்ஷரத்தைப் பிரணவபீஜத்துடனே வரைந்து உருச்செபிக்க, அவரது கடாட்சத்தால் அனைவரும் உயிர்பெற் றெழுந்தார்கள்.

அதுகண்டு நீதிநெறிச்சோழன் தனக்குள் பரமசந்தோஷ்டியடைந்து, முன்பு தன் சபையிலிருந்து அவர்கள் வல்லானிடத்திற்குப் போனதுமுதல் திரும்பி வந்தது வரையில் நிகழ்ந்தவைகளை யெல்லாம் ஒளியாமற் சொல்லச்சொல்லிக் கேட்டு, நம்மவர்களை மிகவும் வியந்து, அவர்களுக்குப் பற்பல விருதுகளுங் கொடுத்துச் சகல வரிசைகளுஞ் செய்து உபசரிக்க, அவர்கள் உலகமெங்கும் புகழத்தக்க கீர்த்தி பெற்று வாழ்ந்தார்கள். அத்தன்மையருடைய மரபிலே தோன்றிய நீங்கள் தலைகொடுப்பதற்காக மயங்கலாமா?" என்று ஒட்டக்கூத்தர் சொல்ல, அவர்களுக்கு அதிக உற்சாகம் பிறந்தது. அவர்களெல்லாம் ஒருமனதாய்ச் சம்மதித்து, 'இனிக் காலதாமசமில்லாமற் பிரபந்தத்தை ஆரம்பிக்கலாம். உமது கட்டளைப்படி நாங்கள் நடந்துகொள்வோம்' என்றார்கள். இவர் "பிரபந்தத்தை ஆரம்பிக்கச் சொல்லுகிறீர்களே அஃதெப்படி? தகுதியான ஸ்தானத்திலிருந் தல்லவோ ஆரம்பிக்கவேண்டும்" என்றார். அவர்கள் 'ஸ்ரீரங்கத்தில் ஆயிரக்கால் மண்டபமிருக்கிறதே, அது வெகு ஜனங்கள் வசிக்கத்தக்க விசாலமுடைய தாதலால் தகுதியான ஸ்தானம் அதைவிட வேறில்லை; அந்த இடத்தில் அழகான பொற்பீடங்கொண்டுவந்து போடுகிறோம்; அதன் மேலிருந்து ஆரம்பிக்கலாம்' என்றார்கள். ஒட்டக்கூத்தர் "நாம் குறித்த ஸ்தானம் அது வல்ல, பின்பு உங்களுக்கே தெரியவரும்" என்றார். செங்குந்தர் 'அப்படியானால் உமது சித்தத்தின்படியே செய்வோம் நாங்கள் தலைகொடுப்பதற்கு எவ்வளவும் தடையில்லை' என்று சொல்லிச் சோழநாட்டிற் சோழகுலத்தரசருக்குப் பட்டந்தரிக்கும் உறையூர் முதலிய பிரதான நகரங்கள் ஐந்திலும் அவைகளின் சுற்றுப்புறத்திலுள்ள மற்றெந்த எந்த ஊர்களிலு மிருக்கின்ற தங்கள் சாதியார்களுக்கெல்லாம் இந்தச் சமாசாரத்தையும், தம்முன்னோர் சரித்திரத்தையும் விவரமாக எழுதி, 'பந்து ஜனங்களே! உங்களை நாங்கள் பலாத்காரம் பண்ணவில்லை, நம்முன்னோர்களின் பெயரையும் அவர்கள் வீரப்பிரதாபத்தையும்ஒளித்துப்போகாமல் பிரகாசிக்கப் பண்ணவேண்டு மென்னும் எண்ணமும் பட்ச

முழுமுடையவர்கள் எவர்களோ அவர்கள் மாத்திரம் இதற்கு உடன் படலாம் என்று குறித்தனுப்பினார்கள்.

அந்தச் செய்தி அங்கங்கிருக்கும் தறிகளுக்கெல்லாம் போயெட்டினபொழுது, நூல் நனைக்கிறவர்களும், பாவோடுகிறவர்களும், பாத் தோய்கிறவர்களும், பாப் புணைக்கிறவர்களும் தறிநெய்கிறவர்களுமாகிய செங்குந்தர்களெல்லாம் வைராக்கிய சித்தர்களாய், "எந்தக் கிராமத்திலாவது பிரமாலய தேவாலயங்களில் நடக்கும் சுவாமி கைங்கரியத்திற்கு ஆரேனும் விக்நந் தேடுவார்களானால் வீரமுஷ்டிகளாகிய சவான்களுமல்லவோ அந்தக்ஷணம் கோபுரத்தின்மேலேறி விழுந்தாவது, கத்தியாற் கழுத்தை வெட்டிக்கொண்டாவது, வயிற்றிலே குத்திக்கொண்டாவது இறந்துபோகிறார்கள். அதற்கேற்றபடி "உண்பான் தின்பான் சிவப்பிராமணன், குத்துக்கு நிற்பான் வீரமுஷ்டி" என்பதாக ஒரு பழமொழியுமிருக்கின்றதே" என்றும், "உலகத்தில் தங்கள் குலத்திற்குக் கீர்த்தியை வருவிக்கிறவர்களல்லவோ உத்தமர்கள்" என்றும் நினைத்து, வேறொன்றும் பேசாமல், உற்சாகத்துடனே தாம் தாமிருந்த இடங்களிலேயே தங்கள் தங்கள் தலைகளை இளநீர்க்காயுதிர்க்கிறதுபோல மிகவும் அலட்சியமாகக் கறுக்குக் கறுக்கென்று வெட்டியெறிந்தார்கள். அவர்கள் தத்தம் தொழில்களைச் செய்துகொண்டிருக்கும் பொழுதே சடிதியில் இந்தச் செய்திகேட்டுத் தலைகளைத் துணித்தெறிந்தபடியினாலே அந்தப்படியே சற்றுநேரமட்டும் அவர்கள் முண்டங்களிற் சில பாவோடிக்கொண்டும், சில பாப்புணைத்துக் கொண்டும், சில தறி நெய்துகொண்டு மிருந்து பிறகு தொட்டுத்தொட்டென்று அங்கங்கே விழுந்துவிட்டன.

ஒட்டக்கூத்தர் கேட்டது எழுபதுதலை மாத்திரமே. அறுபட்டதோ எழுபதல்ல, அநேகம் தலைகள். வெட்டுண்டவர்கள்தவிர மற்றவர் அத்தலைகளையெல்லாம் அந்தக்ஷணம் பெரிய பெரிய கூடைகளில் வாரியெடுத்து வண்டிமேல் ஏற்றி அடுக்கிக்கொண்டு வந்து, ஒட்டக்கூத்தருடைய தலை வாசலிலே குவித்தார்கள். அவர் "இவைகளை இங்கே போடவே

ண்டாம், சோழராஜாவின் ஆசாரவாசலண்டையிற் கொண்டு போய்ச்சேருங்கள்; நாமவ்விடத்திற்குவருகிறோம்" என்றார். அப்படியே கொண்டுபோய் உறையூரிற் சோழனுடைய அரசாட்சி மண்டபத்திற்கு எதிரே மலைபோலக் குவித்தார்கள். அவைகள் கோவைப்பழம்போலச் சிவந்த கண்களை உருட்டி மருள மருள விழிக்கிறதும், உதட்டைப் பிதுக்குகிறதும், வாயை ஆவென்று திறக்கிறதும், நரிபோலப் பல்லை யிளிக்கிறதும், பற்களை நறநறவென்று கடிக்கிறதும், கலகலவென்று சிரிக்கிறதும், பெருமூச் செறிகிறதும், கோடையிடி இடித்ததுபோலக் கொக்கரிக்கிறதும், அதட்டி ஆர்ப்பரிக்கிறதுமாய், ரத்தஜலம் பிரவாகிக்கக் கிடக்கிற கோரத்தைக் குலோத்துங்க சோழராஜன் வந்து பார்த்து, "அடடா ! இஃதென்ன கொள்ளை ? இதென்ன அநியாயம் ?" என்று கேட்க, செங்குந்தர்கள் தாங்கள் ஒட்டக்கூத்தரைப் பிரபந்தம் பாடவேண்டுமென்றும் பிரார்த்தித்ததும், அவர் பரிசு கேட்டதும், அதற்காகத் தலைகொடுத்ததும், விவரமாகச்சொல்லிக் கொண்டிருக்கையில், ஒட்டக்கூத்தரும் அவ்விடத்தில் வந்து சேர்ந்தார்.

அரசன் அவரை நோக்கி "ஐயா கூத்தரே! இஃதென்ன கூத்து ?" என்றான். அவர் "இந்தச்செங்குந்தர்கள் பாமாலை பெறவேண்டுமென்று நம்மைப் பிரார்த்தித்தார்கள், நாம் பாடினால் நமக்கென்ன பரிசு கொடுப்பீர்களென்றோம், இவர்கள் உமதிஷ்டப்படி செய்வோமென்றார்கள்; நீங்கள் நமதிஷ்டப்படி செய்கிறது மெய்யானால் பாட்டொன்றுக்கு ஒரு தலை விழுக்காடு பரிசுகொடுத்தால், எழுபது பாட்டில் ஒரு பிரபந்தஞ் செய்கிறோமென்றோம்; அதற்கு இவர்கள் சம்மதித்து அப்படியே செய்தார்கள்; நாமே இவர்களைப் பலாத்காரம் பண்ணவில்லை" என்றார்.

குலோத்துங்க சோழன், "ஐயா ! தலைகொடுக்கச்சொல்லிக் கேட்டீரே, அதனால் உமக்கு வரும் பயனென்ன ?" என, ஒட்டக்கூத்தர் "நமக்கு மற்றொன்றும் ஆகவேண்டியதில்லை, ஒன்று மாத்திரம் அவசியமா யிருக்கின்றது; அஃது

இன்னும் சற்றுநேரத்திற்குள்ளே பிரத்தியட்சமாகத் தெரிய வரலாம்'' என்றார். சோழராஜன் "நல்லது இவர்கள் அபீஷ்டப்படி பிரபந்தம் நிறைவேறியதா ?'' என்று கேட்க, "இனிமேல் தான் பாடவேண்டும்'' என்று சொல்லி, அந்தத் தலைகளைச் சரிந்து விழாமற் செவ்வையாய் அடுக்கும்படி செய்து, அவைகளை தமக்கு ஓராசனமாக அச் சிரச் சிங்காசனத்தின் மேல் ஒட்டக்கூத்தர் ஏறிப் பத்மாசநமிட்டு வீற்றிருந்து, இரு கைகளையும் தலையின்மேற் கூப்பி வாணியை வணங்கி, அவள் ஒரு கையிற் கமண்டலம், ஒரு கையிற் புஸ்தகம், ஒரு கையிற் படிகமாலை ஏந்தி, ஒரு கையில் சின்முத்திரை தரித்து, வெண்டாமரைப் புஷ்பாசனத்தில் எழுந்தருளி யிருக்கிற பாவனையாக, அவளுடைய திவ்விய ஸ்வரூபத்தை மனதிலே தியானித்து, அவள் திருநாமங்களைப் பலமுறையும் நாவினால் ஸ்துதிசெய்து, அவளநுக்கிரகத்தினால் அற்புதமாகவும், அதிசாதுர்யமாகவும், நவரசாலங்காரத்துடனே கேட்டவர்களெல்லாஞ் சிரக்கம்பம் கரக்கம்பஞ்செய்து வியக்கத்தக்கதாகவும், செங்குந்தரையும் அவர்களாயுதத்தையுஞ் சுட்டி வர்ணித்து, ஈட்டி யெழுபதென்னும் பிரபந்தத்தைப் பாடி முடித்தார்.

அந்தப் பிரபந்தத்தின் அந்தத்தில் "கலைவாணி! உனது கலைகளில் ஒன்றாகிய அறுபத்துநாலு கலைகளும் எங்கும் பிரசித்தமாய் விளங்கும்படி அவைகளுக்கெல்லாம் முதல்வியும் கண்கண்ட தெய்வமுமாகிய நீ சதுர்த்தச புவனங்களிலும் பிரமாதிபிபீலிகை பரியந்தம் எள்ளுக்கு எண்ணெய்போல் நிறைந்திருப்பதும், சமஸ்கிருதம் திராவிட முதலாகிய அஷ்டாதச பாஷைகளிலுமுள்ள பற்பல கல்விகளையும் கற்றுணர்ந்து கற்பனையுடனே ஆசு மதுரம் சித்திரம் வித்தாரமாகிய நால்வகைக் கவிகளும் பாட வல்லவர்களான வித்வஜனர்களை உறுதியாகப் பரிபாலிப்பதும், சகலலோக சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமதேவருடைய நாவிலிருப்பதுபோல அக்கவிஜனர்களுடைய நாவினிடத்தில் நீங்காமற் சதாகாலமும் நீ வீற்றிருந்து வாழ்வதும் சத்தியமாமல்லவோ? அதற்குத்

திருஷ்டாந்தமாகத் துவாபர யுகாந்தத்திற் பாணாசுரனென்பவன் தன்மேற் படையெடுத்துவந்த துவாரகாவாசனாகிய ஸ்ரீ கிருஷ்ணசுவாமியுடனே வில்லெடுத்துப் போருக்குப்போன சமயத்தில், அவர் சக்கிராயுதத்தைப் பிரயோகித்துக் கண்டதுண்டமாகச் சேதிக்க, அவனுடைய ஆயிரந் தோள்களும் அறுபட்டுக் குப்பல் குப்பலாக விழுந்துபோயும் நீ யவனது நாவினிடத்தில் எழுந்தருளியிருந்த மகத்துவ பலத்தினாலல்லவோ அவ்வசுரன் உயிர்தப்பிப் பிழைத்தான்? இப்படிக்கெல்லாம் நீ மகிமைவிளங்கிய கருணாநிதியாயிருப்பதனால் இப்பொழுது தலையையும் உயிரையும் தடையின்றிக் கொடுத்த உதாரகுணமுடைய உத்தம வீரர்களாகிய இந்தச் செங்குந்தர்கள் எனக்குப் பழியும் பாவமும் நேரிடாதபடி பெறுதற்கரிய உயிர்பெற்றெழுந்து தங்களைக்குறித்து நான் பாடிய ஈட்டி யெழுபதென்னும் பிரபந்தத்தைக் கேட்டுச் செவி களிக்கும்படி கிருபை செய்யவேண்டும்'' என்னும் கருத்துத்தோன்ற,

''கலைவாணி நீயுலகி லிருப்பதுவுங் கல்வியுணர் கவிவல்லோரை
நிலையாகப் புரப்பதுவு மவர்நாவில் வாழ்வதுவு நிச்சயமே யன்றோ
சிலைவாணனிருந்தா யிரம்புயங்க டுணிந்துமுயர் சீவனுற்றான்
தலையாவி கொடுத்திடுஞ் செங்குந்தருயிர் பெற்றிட நீதயை செய்வாயே''

என்ற பாடலைச் சொன்னார்.

சொன்னமாத்திரத்தில் வெட்டுண்டு விழுந்துகிடந்த தலைகளும் உடல்களும் காந்தமும் இரும்புபோல ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டன. காந்தத்திற்கு இரும்பை யிழுக்கும் ஆக்ருஷணசக்தியும், இரும்பிற்குக் காந்தத்திற் போயொட்டும் சந்தான சக்தியும் இயல்பாக உண்டானமையால் அவையிரண்டும் ஒட்டுகிறது ஆச்சரியமல்ல; அப்படிப்பட்ட சக்தியோ இவைகளுக்கில்லை. இல்லாதிருந்தும், கண்ட கண்ட இடங்களிலே தாறுமாறா யறுபட்டுக்கிடந்த உடல்களெல்லாம் அதனதன் தலைகளைத் தேடிவர, சோழராஜனுடைய ஆஸ்தான மண்டபத்திற்கு முன்பாகக் குவித்துக் கிடக்கப்பட்ட தலைகளெல்லாம் தன் தன் உடல்களை

நாடிச்சென்று வாணி கிருபையினால் ஒட்டிக்கொண்டமை யால், மாண்டவர்களெல்லாரும் உடனே அநாயாசமாக உயிர் பெற்றெழுந்து இடியிடித்தாற்போல உரக்கக் கனைத்துத் தோள்கொட்டித் தொடைதட்டி மீசை முறுக்கி நகைத்து "ஜெயம் ஜெயம்" என்று ஆர்ப்பரித்தார்கள்.

அதன்பின்பு அவர்கள் செய்துவரும் உபகாரத்தையும் உதார குணத்தையும் வெளியிட வேண்டுமென்று புலவர் பெருமான், "வல்லானுடைய உபத்திரவத்தால் அச்சுக்கெட்டுத் தச்சுமாறி நிலைகுலைந்த காலத்தில் இந்தத் * தந்துவாய ரென்னுஞ் செங்குந்தர்கள் அவனை உபாயத்தால் வென்று உலகத்தை நிலைபெறச் செய்தார்கள்" என்றும், "பூர்வகாலத் திலே லோகரட்சகனாகிய ஸ்ரீமகா விஷ்ணுவானவர் துரோபதையென்னும் ஒரு பெண்ணுக்குமாத்திரம் ஆடையளித்து மானங்காத்தார்; அந்த ஜகத்காரணனாகிய பரமாத்மாவினுடைய அகடிதகடநா சாமர்த்தியசத்திக்கு அஃது ஒருவிஷயமாகாது; இவர்கள் சகல தேசங்களிலும் பாலர்முதல் விருத்தர்வரையிலுள்ள ஸ்திரீ புருஷர்களாகிய நானாசாதியாரும் கேவலம் மிருகங்களைப்போல நிர்வாணமாயிருந்து பங்கப்படாமல் அவரவர்களுக்கேற்ற இழைபார்த்த வஸ்திரத்தை உற்பத்திபண்ணிக் கொடுத்து அபிமானங் காத்தார்கள்" என்றும், அவ்வஸ்திரத்தை வணிகருடைய கையிற்கொடுத்து "இவைகளை நீங்கள் விக்கிரயித்துப் பிழையுங்கள் என்று அவர்களுக்குச் சீவனோபாயம் கற்பித்தார்கள்" என்றும், "எத்திசையிலுமுள்ள புலவர்கள் பலரும்பாடியதமிழ்ப் பாமாலைகளுக்குப் பரிசாக அளவிறந்த திரவியங் கொடுத்தார்கள்" என்றும், "அவைகளெல்லாம் அதிசய மல்லவென்று நான்பாடிய ஈட்டி யெழுபதென்னும் பிரபந்தத்திற்குப் பெருவிலையாகத் தங்கள் தலையையும் கொடுத்தார்கள்" என்றும், "கடைசியிற் சாமானியனாகிய பொற்கொல்லனொருவன் தன்கையில் ஆனமட்டும் பரும்படியாகச்செய்த பொன்

* தந்துவாயர் நூலைக்கொண்டு வஸ்திரம் செய்கிறவர்; செங்குந்தர் - பகைவரது உதிரத்தாற் சிவந்த ஈட்டியை யுடையவர்.

ஞாபரணத்தைச் சமர்த்தனாகிய மற்றொருவன் தன் கைத்திறங் காட்டும்படி திருத்திச்செய்து, மணிபதித்துக் குந்தனமிழைத்துக் கொடுத்ததுபோல்; நெடுநாளாகச் சிறப்பின்றி வழங்கிவந்த கூத்தன் என்னும் எனது இயற்பெயரை அற்றதலையும் உடலும் ஒட்டப் பாடியகாரணம் புலப்பட ஒட்டக்கூத்தன் என்னும் விசேஷணத்தாற் சிறப்பித்துக் கொடுத்தார்கள்" என்னுங் கருத்தும் விளங்க,

"நிலைதந்தார் புவியினுக்கே யாவருக்கு மபிமான நிலைக்கத் தந்தார், கலைதந்தார் வணிகருக்குச் சேனைஞ்செய் திடவெஃறே கையிற் றந்தார், விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்த ரென்கவிக்கு விலையாகத்தான், தலைதந்தா ரெனக்கொட்டக் கூத்தனெனும் பெயரினையுந் தாந்தந் தாரே."

என்றபாடலைப் பாடினர்.

இவையனைத்தும் பிரத்தியட்சமாகக் கண்டு கேட்ட சோழனுடைய சபையாரும் அந்த நகரத்திலும் சுற்றுக்கிராமங்களிலுமுள்ள சகல வருணத்தாரும் "இது மகா மகிமையாயிருக்கிறது" என்று அதிசயித்துச் சந்தோஷப்பட்டார்கள். அப்பொழுது சோழராசன் தன் மந்திரி பிரதானிமார்களை நோக்கி "இஃதென்னை புதுமை?" என்று கேட்க, அவர்கள் "ஐயா ராஜேந்திரா! செங்குந்தர்கள் வேளாளர் முதலியோரைப்போலத் தாங்களும் பாமாலைபெற வேண்டுமென்று கூத்தரைப் பிரார்த்தித்தது சகஜமே; கூத்தர் மனந்துணிந்து அதற்காகத் தலைப்பரிசுகொடுக்க வேண்டுமென்றது தமக்குச் சிறப்புப்பெயருந் தங்கள் குலத்தாருக்கெல்லாஞ் சிறந்த பட்டமும் கிடைக்க வேண்டுமென்னும் அபிப்பிராயமே. அவர்கள் அஞ்சிப் பின்வாங்காமல் தலைகொடுத்தது சுத்தவீரத்தன்மையே. புலவர் பெருமான் பிரபந்தம் பாடி அவர்களை உயிர்ப்பித்ததைமாத்திரம் கேவலம் தெரியாதவர்கள் ஏதோ ஜாலவித்தையா யிருக்கின்றதென்பார்கள். சிலர் மந்திரபலத்தினால் இப்படி முடிந்ததென்பார்கள். புத்திமான்களுக்குள் சிலர் தலையும் உடலும் அறுபட்ட

அறுவாயும், ஒட்டின ஒட்டுவாயும் எவ்வளவும் தெரியாமல் தழும்புந் தோன்றும லிருப்பிதனுல், விசல்லியகரணி சந்தான கரணி சமானகரணி சஞ்சீவகரணி என்னும் பரமௌஷதங்கள் நான்கும் இவரிடத்தி லிருக்கவேண்டும்; அவைகளிற் சந்தான கரணியைக்கொண்டு அற்ற உறுப்புக்களை இணக்கி, விசல்லியகரணியைக் கொண்டு காயத்தை ஆற்றி, சமான கரணியைக்கொண்டு தழும்பு நீக்க, சஞ்சீவகரணியைக்கொண்டு உயிர்கொடுத்தா ரென்பார்கள். அவையெல்லாம் சரியல்ல, வாணி கடாட்சத்தினுலும் வித்வ சிரேஷ்டராகிய கூத்தருடைய வாக்கு விசேஷத்தினுலும், செங்குந்தருடைய விரதர்மத்தினுலும், சத்தியத்தினுலுமே இங்ஙனம் நிகழ்ந்தன? ஆதலால், இஃது அற்புதம்" என்று மந்திரிகள் நாமகளை வாழ்த்தி ஒட்டக்கூத்தரை ஸ்துதித்து, செங்குந்தரைப் புகழ்ந்து கொண்டாடினுர்கள். அதுகேட்டு சோழ ராஜன் "நீர் தலைகொடுக்கச் சொன்னீரே, அதனுல் உமக்குப் பிரயோசனம் என்ன" என்று கூத்தரை முன்பு நாம் கேட்டதற்கு இன்னும் சற்றுநேரத்திற்குள் தெரியுமென்று அவர் சொன்னது, மந்திரிமார்கள் சொன்னபடி தமக்கு ஒட்டக்கூத்தரென்ற பெயரும், தமது குலத்தாருக்கெல்லாம் சிரச் சிங்காசனுதிபதிக ளென்கின்ற பட்டமும் கிடைக்க வேண்டுமென்னும் எண்ணத்தைக் கொண்டுதான்" என்று நிச்சயித்து, அவ்வாறே அவருக்குக் கூத்தரென்ற பெயரை ஒட்டக்கூத்தரென்ற விசேஷணத்துடனே ஸ்தாபித்து, அவரை உள்ளிட்ட செங்குந்தர் யாவருக்கும் சிரச்சிங்காசனுதிபதிகளென்னும் பட்டமுங் கொடுத்து, பலவகை விருதுகளும், வரிசைகளும் வழங்கி, அதிகமரியாதையுஞ் செய்தான்.

ஒட்டக்கூத்தர் ஈட்டியெழுபதுபாடிய சரித்திரம் முற்றிற்று.

## ஒட்டக்கூத்தர் சோழனுக்குப் பெண் பேசிய சரித்திரம்.

பலவளங்களும் நிறைந்த சொர்க்கம்போன்ற உறையூரிலே நீதி தவறாமற்செங்கோல் செலுத்தி வாழ்ந்திருந்த குலோத்துங்க சோழராஜனுடைய பிதா கிரியாணைதனையிற் புத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்விக்க யத்தனித்து, புண்ணிய நதி தீர்த்தங்களைக்கொண்டு மங்களஸ்நானஞ் செய்வித்து, விலையுயர்ந்த பீதாம்பரமுடுத்து, மகரகுண்டல முதலாகிய சர்வாபரணங்களும் பரிமள புஷ்பமாலைகளுந் தரித்து, சிங்காசனத்தில் ஏற்றுவித்து, சந்திரவட்டக்குடை கவிக்க, கவரி வீச, மங்கலச்சங்க முதலிய பற்பல வாத்தியம் முழங்க, வேதப்பிராமணர் ஆசிகூற மகா சம்பிரமத்துடனே நவரத்ந மகுடஞ் சூட்டி, ராஜமுத்திரா மோதிரத்தை அவன்விரலில் அணிந்து செங்கோலைக் கையிற்கொடுத்து, அரசர் அமைச்சர் முதலானவர்களுக்கும் "இவனிட்டக் கட்டளைப்படி அனைவரும் நடக்கவேண்டும்" என்று ஆக்கியாபித்தான். அவர்களெல்லாம் பட்டத்தரசனாகிய குலோத்துங்க சோழனுக்குப் பாதகாணிக்கை வைத்து உபசரித்தார்கள். வித்வஜனர்கள் பாமாலை சூட்டினார்கள். அவர்கள் யாவருக்கும் முன்னே ஒட்டக்கூத்தர் அவனுக்கு க்ஷேமமுண்டாக ஒரு கவிபாடவேண்டும் என்று,

"ஆடுங்கடைமணிநாவசையாமலகிலமெங்கும்
நீடுங்குடையைத் தரித்தபிரான்"

எனக் கொஞ்சங் குறைய இரண்டடிவரையிற் பாடினது அறிந்து, அவ்வரசன் தனக்கு அவர் கல்விகற்பித்த ஆசிரியராகையால் தன்னைத் துதிசெய்வது தகாது, என்று நினைத்து அதற்குமேல்,

"இந்தநீணிலத்தில்
"பாடும்புலவர்புகழொட்டக்கூத்தன்பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துங்கசோழனென்றேயென்னைச்சொல்லுவரே'

என மற்றிரண்டடியும் தானேபாடி. அப்பாடலை பூர்த்தி செய்துவிட்டு, பிராமணர்களுக்கு அன்னதான முதலிய சோ

டச மகாதானமும், மன்னர் மந்திரிமார் முதலானவர்களுக்கு நாடு நகரம் யானை குதிரை முதலிய வரிசைகளும், கவிபாடிய புலவர்களுக்குச் சொர்ணம் வஸ்திரம் பூஷணமுதலிய பரிசும் தன்கையாற்கொடுத்து அவர்களை உபசரித்தான்.

பிறகு அவன் தந்தை அவனை அந்தப்புரத்திற்கு அழைத்துப்போய் அரசு நடத்தவேண்டிய முறைமையைக் குறித்துச் சொல்லவேண்டிய பாரதூரமான புத்திமதிகளைச் சாஸ்திரியமாகவும் லோகாசாரமாகவுஞ் சொல்லி, அநந்தரம் தன் சமஸ்தான வித்வானாகிய ஒட்டக்கூத்தனையும் பக்கத்தில் வைத்துக்கொண்டு புதல்வனைப்பார்த்து "அப்பா குலோத்துங்கா! இப்பொழுது உனக்கு மகுடாபிஷேகஞ் செய்வித்ததுபோல் விவாகமுஞ் செய்வித்து, அவ்விவாக மகோற்சவத்தைக் கண்களிக்கப் பார்க்கிறதற்கு நான் தவஞ்செய்யாமற் போனேன்; ஆயினும் உனக்கொன்று சொல்லுகிறேன் கேள்; எனக்குப் பிற்காலம் நீவேறெந்தவழியிலும் பிரவேசிக்கவேண்டாம்; நமது சூரியகுலத்திற்கும் சந்திரகுலத்திற்குமே தொன்று தொட்டுச் சம்பந்தம் நடந்துவருகிறது. அந்தமுறைமையைக் கைவிடாதே; பழங்கால் தூர்த்துப் புதுக்கால் வெட்டவேண்டாம்; பாண்டியன் மகளையே மணஞ்செய்துகொள்" என்று வற்புறுத்தி, ஒட்டக்கூத்தரைநோக்கி "என் மனோரதத்தை நிறைவேற்றுவது உமது தலைமேல் வீழ்ந்தபாரம்" என்று சொல்லித் தன் மகனை அவர் கையில் ஒப்பித்துப் பிறகு, "அதவாபுத்திர சந்நிதௌ" என்றபடி, தன் புத்திரன் தொடைமேல் தலையைவைத்துச் சயனித்தவண்ணமாய்ப் பிராணவியோகமானான்.

ஒட்டக்கூத்தர் அவ்வரசனுக்குச் செய்யவேண்டிய தகனசஞ்சயனாதி உரிமைக் கருமம் அனைத்தும் குலோத்துங்க சோழனைக் கொண்டு லோபமில்லாமற் கிரமமாக நடத்திச் சிலநாள் கழிந்தபின்பு அவனுக்குப் பெண்பேசப்போக யத்தனித்து, "நாள் செய்வது நல்லோர்செய்யார்" என்பதனால் தாம் நோக்கிப் போகுந் திசைக்குச் சூலம் யோகினி முதலிய தோஷமில்லாததாக ஒரு நன்னாட்குறித்து, அந்நாளில்

நினைத்துப் போகுங்காரியம் அநுகூலிப்பதற்கு முற்குறியாக நல்ல சகுனமாகும்படி அநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று தமது இஷ்டதெய்வத்தைப் பிரார்த்தித்து, சோழநாட்டிலிருந்து பாண்டிய தேசத்திற்குப் பிரயாணமாக முதல்முதல் அடியெடுத்து வைத்தார். வைத்தவுடனே வாயசம் வலமாயிற்று. அவர் "வாயசம் வலமானால் ஆயுசு விர்த்தியாகும்" என்றெண்ணி, அப்புறம் நடக்கையில் வலியன் இடமாயிற்று. அதைப்பார்த்து,

"வால்நீண்ட கரிக்குருவி வலமிருந்தே யிடஞ்சென்றால்
கால்நடையாய்ப் போனவர்கள் கனகதண்டி யேறுவரே."

என்பதை நினைத்து "உத்தமந்தான்" என்று அதற்கப்பாற் சிலதூரஞ் சென்றார். அங்கே காடை கட்டிற்று. அதைக்குறித்து "காடை கட்டினாற் பாடை கட்டும்" என்பதை யோசித்துப் பிரமைகொண்டிருக்கையில், உடனே கட்டுக்காடை இடமாயிற்று. அதைநோக்கி "கட்டுக்காடை யிடமானாற் குட்டிச்சுவரும் பொன்னாகு மல்லவா?" என்று மகிழ்ச்சிகூர்ந்து பத்தடி நடந்தார். அப்பொழுது செம்போத்து வலமாயிற்று. அவர் "செம்போத்து வலமானாற் சம்பத்துண்டாகும்" என்று மனம்பூரித்து அதைத் தாண்டிப்போகையில், கருடன் கட்டியதுகண்டு "இஃதென்னே?" என்று சற்றுநேரம் அவ்விடத்திலேயே திகைப்பூண்டு மிதித்தது போலத் திகைத்துநின்று "கட்டோடே போனாற் கனத்தோடே வரலாம்" என்பது ஞாபகத்திற்கு வந்தமையால் மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு கொஞ்சந் தூரம்போகையில், முன்பு கட்டின கருடன் இடமாயிற்று. அவர் "கட்டி இடமானால் வெட்டி யரசாளலாம்" என்றும், "வெண்டலைக்கருடன் சென்றிடமானால் எவர்கையிற் பொருளுந் தன் கையிற் சேரும்" என்றும், பெரியோர்கள் சொல்லுகிறார்களே, அதனாற் குறைவுவராதென்று கருதி விரைந்துசெல்லுகையில் விச்சுளி வலமாயிற்று. அதைப்பற்றி "விச்சுளி வலமானால் நிச்சயம் வாழ்வுண்டாம்" என்று நினைத்துப் "பிரதமத்தில் நாம் பிரார்த்தித்தவண்ணம் வலி

யன் விச்சுளி செய்போந்து மூன்றும் சௌவியம் (வலம்) ஆகவும், கருடன் கட்டுக்காடை இரண்டும் அபசௌவியம் (இடம்) ஆகவும் செல்லக்காணும்படி நமக்கு இந்தப் பஞ்ச சகுனமும் ஆனமையால் நினைத்தகாரியம் இனித் தடையின்றி முடியுமென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை" என்று, இடைவழியிலுள்ள, காடுமலை நாடுநகர் ஆறுகுளம் ஏரிமடுவெல்லாம் கடந்து, குடை கொடி யானை சேனைகளுடனே நான் மாடக்கூடலென்னும் மதுரைக்குச் சமீபமாய்ப் போகும்பொழுது, பாண்டியன் "ஆரோ பகையரசன் மதுரைமேற் படையெடுத்து வருகிறான்" என்று தக்ஷணம் போர்க்கோலங்கொண்டு போய் எதிர்த்து நிர்மூலமாக்கும்படி தனது சதுரங்கபலமும் பிரயாண சந்நத்தமாகப் பேரிகை அறைவித்தான். அந்த அடியிலே வில் கட்கம் சூலம் பாசம் முசலம் சக்கரம் தோமரமுதலிய ஆயுதபாணிகளாய், முடிகளோடு முடிகள் கழல்களோடு கழல்கள் நெருங்க, தேர்கள் யானைகள் குதிரைகளின் மேலும் பாதசாரிகளாயும் நால்வகைப் படைவீரரும் பெருவெள்ளம்போல எங்கெங்கும் வந்து நிறைந்து, எக்காளை பேய்க்காளை கொம்பு பம்பை தவுண்டை துந்துபி முதலிய வாத்திய முழங்க யுத்தத்திற்கு ஆரம்பித்தார்கள். அதற்குள்ளே சேவுகாரர் போய் விசாரித்து போர்க்குரிய சின்னங்கள் இல்லாமை கண்டு "ஒட்டக்கூத்தர் வருகிறார்" என்று தெரிந்துவந்து செய்தி அறிவிக்க, ராஜா சந்தோஷப்பட்டு மந்திரியை அனுப்பி அழைத்துவந்து அவருக்கு விடுதிவிட்டுப் போஜன தாம்பூலாதிகளும் கிருத கிரமமாய் நடப்பிக்கச் சொன்னான்.

அப்படியே அவர் அவ்விடத்திற்சேர்ந்து இரண்டொருநாள் சுகித்திருந்து சமயமறிந்து பாண்டியன் சமுகத்தை அணுகி மரியாதையோடு ராஜதரிசனஞ்செய்தார். அரசன் வித்வசிரேஷ்டராகிய ஒட்டக்கூத்தருக்கு ஆசனங் கொடுக்கச்சொல்லி யுபசரித்து "வந்தகாரியம் என்ன?" என, இவர் கன்னித்துறைவன் கேட்கும் கேள்விக்கு "கம்புக்குக் களை

வெட்டினதும் தம்பிக்கு பெண்கொண்டதுமாக", ராஜசேகரா! எங்கள் ராஜாதிராஜனாகிய குலோத்துங்க சோழமகாராஜாவின் பிதாவானவர் தமது தேகாவசானத்தில் நம்முடனே சுபச்செய்தியொன்று சொல்லியிருந்தார்; அதைத் தங்களுக்கு அறிவிக்கவும், தங்களைத் தரிசிக்கவும், வந்தோம்" என்றுசொல்லிப் பின்பு அக்கருத்தை வெளியிட்டார்.

பாண்டியன் அதிசயித்துக் குறுநகைசெய்து, "ஓ புலவர் பெருமானே! உங்கள் அரசனாகிய சோழன் பாண்டிய குலத்துப் பெண்ணைக் கொள்ளத்தக்க பாத்திரனா? எங்களிலும் அவனுக்குள்ள ஏற்றமென்ன? சொல்லும்" என, ஒட்டக்கூத்தர் "சோழராஜாக்கள் ஏறும் மல்லகதி முதலிய ஐங்கதிகளையுடைய கோரமென்று பெயர்பெற்ற பஞ்சகல்யாணியாகிய பட்டவர்த்தகப் புரவிக்குப் பாண்டியர் ஏறும் கனவட்டமென்ற அஸ்வம் சமானமாகுமா? மாரிகாலத்திலன்றிக் கோடைகாலத்திலும் கடல்போல எங்கும் பரவிப் பெருகிப் பாய்ந்து பொன் கொழித்து அலையெறிகின்ற அகண்ட காவிரியாற்றுக்கு வையையாற்றையோ நிகராகச் சொல்லுவது? சிவனது திருவுளத்துக்கு உவப்பாகச் சோழர்கள் அணியும் ஆத்திமாலைக்கு வேப்பமாலை நிகராகுமோ? உலகத்தைச் சூழ்ந்து கவிந்து சகலாத்மாக்களுடைய கட்புலனையும் மறைக்கின்ற அந்தகாரத்தைப்போக்கும் சூரியனுக்கு அச்சூரியன்முன் ஒளி மழுங்கிப்போகின்ற சந்திரன் ஒப்பாகுமா? அதுபோல மகா பிரசித்தமான சூரிய குலத்திற்குச் சந்திரகுலம் ஒப்பாகுமா? நிகரற்ற வீரமுடையவர்களுக்குள் அதிவீரனானவன் சோழனோ? பாண்டியனோ? வெற்றிபெற்ற சோழனது புலிக்கொடிக்குப் பாண்டியனது மீனக்கொடியோ இணையாவது? பொன்மாரிபெய்த மகிமைதங்கிய உறையூருக்குக் கொற்கைப்பதியோ உவமையாவது? பதின்மர் பாடப்பெற்ற திருவரங்கமுதலாகிய பற்பல விஷ்ணுஸ்தலங்களையும் ஐய்யாறுமுதலிய அநேக சிவஸ்தலங்களையும் தன்னகத்திற்கொண்டு எக்காலத்தும் க்ஷாமமென்பது

அனுக இடங்கொடாமற் சீவாதாரமாகிய நெல் முதலிய விளைவு குன்றாத வளப்ப மிருந்த சோழநாட்டுக்குப் பாண்டியநாடு சரியாமோ? என்னும்பொருளை உள்ளமைத்து அவ்வழியாற் சோழனுடைய பெருமை தோன்றும்படி,

"கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானே
கூறுவதுங் காவிரிக்கு வைகையோ வம்மானே
ஆருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானே
யாதித்த னுக்குநிக ரம்புலியோ வம்மானே
வீரர்க்குள் வீரனொரு மீனவனே வம்மானே
வெற்றிப்பு லிக்கொடிக்கு மீனமோ வம்மானே
ஊருக்கு றந்தைநிகர் கொற்கையோ வம்மானே
யொக்குமோ சோணாட்டுக்குப் பாண்டிநா டம்மானே."

என்றொரு பாடலைச் சொன்னார்.

அதுகேட்டு அங்கிருந்த பாண்டியன் சமஸ்தான வித்வானாகிய புகழேந்தி என்பவர் ஒட்டக்கூத்தரை நோக்கி, "முனிசிரேஷ்டராகிய அகஸ்தியர் திரவிடபாஷையைப் பிரவசனஞ்செய்தது தென்னாட்டிலுள்ள பொதியமலையி லிருந்தோ? சோழநாட்டிலுள்ள நேரிமலையி லிருந்தோ? சோமசுந்தரக்கடவுள் ஒப்புச் சொல்லுதற்கரிய அறுபத்துநாலு திருவிளையாடல்களைச் செய்தது மதுரையிலேயோ? உறையூரிலேயோ? ஸ்ரீ மகாலட்சுமி சமேதனாகிய நெடுமால் மீனாக அவதரித்ததன்றிப் புலியாக அவதரிக்கவில்லையே; ஆதலால், மீனக்கொடி தானே சிறந்தது; புலிக்கொடிக் கென்ன சிறப்பிருக்கின்றது? தேவர்கள் முனிவர்கள் சென்னி மேலேறும் பொன்னடியையுடைய சிவபெருமானது ஜடாமகுடத்தின் மேல் ஏறியிருக்கப்பெற்றது சூரியனோ? சந்திரன் தானே; அதனால் மேம்பட்டது சந்திரகுலமோ? சூரியகுலமோ? சமணரை வெல்லும்பொருட்டுத் திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் பதிகமெழுதியிட்ட ஏடானது எதிரேறிக் கரைசேர்ந்தது காவிரியிலேயோ? வையையிற்றானே; அதுபற்றி வையையாறல்லவோ மாட்சிமைப்பட்டது? பேயனுகாமல் அதற்குப் பெரும்பகையாகத் தோன்றி அதை விலக்குவது சோ

முனது ஆத்திமாலையோ? பாண்டியன் அணியும் வேப்பமாலை தானே; மதுரையை அழிக்கப் பொங்கிவந்த சமுத்திரம் அஞ்சி வந்து பணிந்தது சோழன் காலையோ? பாண்டியன் காலத்தானே" என்னுங் கருத்தை அடக்கி,

> ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளித்த தம்மானே
> யொப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானே
> திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானே
> சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானே
> கரைபெருதல் காவிரியோ வையையோ வம்மானே
> கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானே
> பரவைபணிந் ததுஞ்சோழன் பதந்தனையோ வம்மானே
> பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே."

என்ற பாடலைச்சொல்லி அவர் சொன்னதைக் கண்டிக்க, ஒட்டக்கூத்தர், "இவனோர் கொன்றைமாலைபோலக் குறுக்கே வந்து விழுந்து நாம் பேசினதற்கெல்லாம் பிரதிகூலமாகப் பேசத்தலைப்பட்டான்? இப்படி விளையுமென்பதற்குத்தானோ வருகிற வழியிலே கருடனும் காடையுங் கட்டின?" என்று சிந்தித்துச் சித்தங் கலங்கியிருந்தார்.

அவரப்படி யிருக்க, பாண்டியராஜன் தன் தந்தைவழி தாய் வழியிலுள்ள பந்துவர்க்கத்திற் பெரியோர் சிறியோர் அனைவரையும் வரவழைத்து, ஒட்டக்கூத்தர் சோழராஜனுக்குப் பெண்பேச வந்த செய்தியை அவர்களுக்குத் தெரிவித்து, "இந்த விஷயம் சுற்றத்தாருக்கு அசம்மதமாகச் செய்யத் தக்க தல்லவே; ஆகையால், அவனுக்குக் கொடுக்கலாமா? கொடுக்கலாகாதா? உங்கள் அபிப்பிராயமென்ன? இது ஆயிரங்காலத்துப் பயிர் ஆகையாலும் பெண்ணைப்பெற்றுப் பத்து வயத்துக்குமேல் வைத்திருப்பது பாவமென்பதனாலும் செவ்வையாகத் தீர்க்காலோசனை பண்ணித் தனித்தனி அவரவர் அபீஷ்டத்தை ஒளியாமல் வெளியிடவேண்டும்" என்று உசாவினான். அவ்வண்ணமே தங்களுக்குள் கலந்துபேசி அவர்களிற் சிலர் "அரசர்க்குரிய கல்வி செல்வ முதலியவைகளுள் சோழனைக் குறித்து என்னகுறை சொல்லுகிறது? யோசிக்குமிடத்தில் அவன் கல்வியிற் சாமானியனா? செல்வத்திலே

தான் குபேரனுக்குக் குறைந்தவனு ?" என்றூர்கள். சிலர் ஐம்பத்தாறு தேசத்தரசர்களுடைய படங்களுக்குள் சோழனுடைய படத்தை எடுத்து அதில் எழுதப்பட்டிருக்கின்ற அவனது உருவத்தை ஒருவர்க்கொருவர் காட்டி "சோழன் அழகிலே தானென்ன மன்மதனுக்குத் தாழ்ந்தவனே? பாருங்கள்; அவன் வட்டமாய் ஒளிபெற்றுப் பூரணசந்திரன் போலப் பரந்தமுகமும், தாமரைத்தளம்போலும் அழகாகக் கருணை சுரந்த கண்களும், மதனகோதண்டம்போல வளைந்து கறுத்த புருவமும், பவளம்போலச் செவந்தவாயும், விசயலட்சுமியின் அரங்கமணி மண்டபம்போல விசாலமாய் எடுத்த மார்பும், நெடிய மேருமலைபோலப் பருத்துயர்ந்த தோள்களும், ஆண்சிங்கம்போலப் பெருமிதமான நடையுமுடையவனல்லனே ?" என்றூர்கள். அதைக்கேட்ட சிலர் "கைநிறைந்த பொன்னில்லா விட்டாலும் கண்ணிறைந்த கணவனிருக்கவேண்டும்" என்பதனுல், நீங்கள் அழகைச்சொல்லவந்தது சரிதான்; ஆயினும் இரண்டு கண்ணுமில்லாத பிறவிக்குருடனுகிய திருதராஷ்டிர மகாராஜனுக்குப் பெண்கொடுத்தான் காந்தார தேசாதிபதி. அவன் அழகைப் பொருள்செய்யாமற் போனதென்னை? " என்றூர்கள். சிலர் "அழகிருந்தென்னபண்ணும்? அதிர்ஷ்ட மிருந்துண்ணும்" என்பதனுல் அவன் அதிர்ஷ்டத்தையே முக்கியமாய் நினைத்தவனுகவேண்டும் என்றூர்கள். சிலர் "அதுவும் பெரிதன்று, ராஜபுருஷர்களுக்கு ஆண்மையே பிரதானம்" என்றூர்கள். சிலர் அப்படியென்றல், பாஞ்சாலன் மகனுகிய ஆணும்பெண்ணுமல்லாத சிகண்டிக்குப் ஒருவன் பெண்கொடுத்தானே, அவன் அச்சிகண்டியினிடத்தில் என்ன சூரத்வைத்தைக் கண்டான் ?" என்றூர்கள். சிலர் "எதைப்பாராவிட்டாலும் "பாத்திரமறிந்து பிச்சையிடு கோத்திர மறிந்து பெண்ணைக்கொடு" என்பதனுல், குலங் கோத்திரமாத்திரம் தக்கதா தகாததா வென்று அவசியம் பார்க்கவேண்டும்" என்றூர்கள். சிலர் "இது நியாயந்தான்: ஆயினும் சோழனுடைய குலங் கோத்திரத்தைக் குறித்து விசாரிக்கிறது, கரும்பு கசக்கிறதோ தித்திக்கிறதோ வென்று கேட்கிறதுபோ லிருக்கிறது; அது

நமக்கு உள்ளங்கைநெல்லிக்கனிபோலத் தெரிந்ததுதானே" என்றார்கள். சிலர் "அப்படியென்றால் பழம் நழுவிப் பாலிலேவிழுந்தது போலத்தான்; அதற்கு ஆட்சேபமென்ன? சம்பிரமாய்க் கொடுக்கலாமே" என்றார்கள். இப்படிக்கெல்லாஞ் சொன்னமையால், அவரவர் அபிமதத்தை அறிந்து கொண்டு "வசிட்டர் வாக்கிற் பிரமரிஷியாவது" போலப் பந்துஜனங்களின் இஷ்டப்படியே பாண்டியன் தவஞ்செய்து பெற்ற தன் அருமைத் திருமகளைச் சோழனுக்குக்கொடுக்கச் சம்மதித்துப் புரோகிதர் முன்னிலையிற் பொருத்தமிதம் பார்த்து நிச்சிதார்த்தம் பண்ணி விவாகத்திற்கு நாள் வைத்து முகூர்த்தப்பத்திரிகை எழுதிக்கொடுத்து, "இந்தப் பத்திரிகையில் நிருணயித்ததினத்தில் உங்கள் ராஜா இவ்விடத்திற்கு வந்து சுகமாய்க் கலியாணம் பண்ணிக்கொண்டு போகலாம்" என்று சொன்னான்.

அப்பொழுது அந்தச் சபையிலிருந்தவர்களெல்லாம் "பூர்வம் திருப்பாற்கடலில் அவதரித்த ஸ்ரீமகாலட்சுமியைத் தேவர் கூட்டமெல்லாம் எனக்கெனக் கென்று இச்சித்தது போல, நமது வேந்தன் மகளை எத்தனையோ ராஜாக்கள் தனித்தனி இச்சித்துத் திருமணம் முடிப்பதற்கு நாளது வரையில் பகீரதப் பிரயத்தினம் பண்ணிவந்தார்களே, பண்ணியும் என்ன பிரயோசனமாயிற்று? சோழனுக்கென்று சங்கற்பப்பிராப்த மிருந்தபடியினாலே காற்றும் மழையுமாய் அதிசுலபத்தில் விவாகங் கூடிவிட்டது. எப்பொழுதும் 'ஒருவனுக்குத் தாரம் மற்றவனுக்குத் தாய்' என்பது சத்தியமல்லவா?" என்று சொல்லிச் சந்தோஷப்பட்டார்கள்.

ஒட்டக்கூத்தர் பாண்டியன் எழுதிக்கொடுத்த முகூர்த்தப் பத்திரிகையை வாங்கிவந்து சோழன்கையிற் கொடுத்துப் பாண்டியன் சபையில் நடந்த சமாசாரங்களையெல்லாஞ் சொன்னார். அவன் அந்த முகூர்த்த பத்திரிகையைப் பார்வையிட்டு மனங்களித்துத் தான் விவாகத்திற்குப்போய் மீண்டு வருமளவுந் தனக்குப் பிரதிநிதியாக ராஜாதிகாரம் பார்க்கும்படி ஒட்டக்கூத்தரைப் பட்டணத்தில் வைத்து

விட்டு, மந்திரி பிரதானிமார்களுடனும் தன் சுற்றத்தாருடனும் நால்வகைச் சேனைகளுடனும் மதுரைக்குப் போனபொழுது, பாண்டியன் எதிர்கொண்டு உபசரித்து, வாழை கமுகுகள் நாட்டி, முத்துமாலை புஷ்பமாலை தூக்கி, படங்கள் கண்ணாடிகள் நிரைத்து, இந்திரவிமானம் போலச் சோடிக்கப்பட்ட அழகிய மணப்பந்தலிலே உந்நதமாகிய மாணிக்கமேடையில் நவரத்நக் கோலமிட்டு, பூரண கலசங்கள் வைத்து, தீபங்கள் ஏற்றி, முளைபாலிகை அமைத்து, நடுவே மரகத பீடமிட்டு, திவ்விய தீர்த்தங்களால் ஸ்நானம் பண்ணுவித்து, விலையுயர்ந்த ஆடையாபரணங்களையும் கந்த சுகந்த புஷ்பாதிகளையுங்கொண்டு அலங்கரித்து மணக்கோலஞ் செய்வித்து அழைத்து வந்து, மாப்பிள்ளையையும் அவன் வலதுபுறத்திற் பெண்ணையும் மேற்படி பீடத்தின்மேல் இருக்கவைத்து, மங்கல வாத்திய முழங்க ஹோமம் வளர்த்து வேதப்பிராமணர்கள் மந்திர வாக்கியங்களைச் சொல்லி ஆசீர்வதிக்க சாஸ்திரோக்தமாகப் பாண்டியன் தன் மகள் கையை எடுத்துச் சோழன் கைமேல் வைத்துத் தாரைவார்த்துத் தத்தம்பண்ணிக் கன்னிகாதானமாகக் கொடுக்க, சோழன் அக்கினி சாட்சி அருந்ததி சாட்சியாக அவளைப் பாணிக்கிரகணம் பண்ணினன். மற்ற கிரியைகளெல்லாம் விதிப்பிரகாரம் சம்பூரணமாக நடக்க, ஆறுமாசபரியந்தம் தானம் தருமம் விருந்து ஆடல்பாடல் முதலான சகல விபவத்துடன் அதிக சம்பிரமமாய்க் கலியாணம் நடந்தது.

பிறகு பாண்டியன் பெண்ணுக்கு உசிதமான வஸ்திர பூஷணங்களையும், பொற்பெட்டி பொற்றட்டு பொற்கட்டில் பொற்றொட்டில் பொற்குடம் முதலானவைகளையும், யானை குதிரை காடி பல்லக்குகள் சீமை பூமிகள் மற்றும் அநேகம் பொருள்களுடனே தோழிமார் தாதிமார்களையுஞ் சீதனங் கொடுத்து, அந்தப்படியே தன் சமஸ்தான வித்வானாகிய புகழேந்தியையும் சீதனமாகக் கொடுத்தான். சோழன் ஒட்டக்கூத்தர் பெயருக்கு ஜாபிதா எழுதி அச்சாபிதாவில் மேற்படிச் சீதனத் தட்டு முட்டு முதலானவைகளை விவரணமாகச்

செப்பிச் சகலத்தையும் வரப்பார்த்துக் கொள்ளும்படி அனு ப்பினான்.

ஜாபிதாவைக் கொண்டுவந்து கொடுத்தமாத்திரத்தில் ஒட்டக்கூத்தர் எல்லாச் சாமான்களும் ஜாபிதாவின்படி தம் மிடத்தில் வந்துசேரப்பார்த்து ஒப்புவித்துக்கொண்டு, அத தை வைக்கவேண்டிய ஸ்தானங்களில் வைப்பித்துப் பின்பு 'ஒருவித்வானும் சீதனப்பொருளாக வந்திருக்கிறார்' என்று சொல்லக்கேட்டு அவரை வரவழைத்துப் பார்க்குமிடத்தில், தான் பெண்பேசப் போனபொழுது தன் கட்சிக்கு எதிர்க் கட்சியாய்ப் பேசின புகழேந்திப் புலவராயிருக்கக்கண்டு, "நல்லதாகட்டும் 'துள்ளினமாடு பொதிசுமக்கும்' என்றபடி இறுமாப்புடைய இவன் நமது வலையில் தெய்வகதியாக எளி தில் வந்து சிக்கினான்; இவனுடைய கொட்டத்தை அடக்க வேண்டுமே யல்லாமல், இவன் எவ்வளவாகத் துக்கித்தா லும் இனி விடலாகாது; எலி யழுது புலம்பினாலும் பூனைபிடி த்தது விடுமா?" என்று நினைத்து அவரை வித்வசிரேஷ்ட ரென்று மதியாமலும் சிறிதாவது அவரிடத்தில் இரக்க மில்லாமலும் சிறைச்சாலையில் வைப்பித்து, நாளொன்றுக்கு ஆழாக்கு அரிசியும் உழக்கு உப்புங் கொடுக்கும்படி உத்தரவுசெய்தான். புகழேந்திக்கு இங்ஙனம் சங்கடம் நேரி ட்டதனால் அவர் 'இது கர்மாநுசாரம்' என்றெண்ணி அச்சி றைச்சாலையின் பக்கத்து மார்க்கத்தில் தண்ணீர்க்குப்போ கிற ஸ்திரீகளைச் சாளரத்தின் வழியாய்ப்பார்த்து அவர்கள் காதுக்கு இனிமையாகவும், சுலபத்திற் பொருள் தெரியும் படியாகவும் பாரத சரித்திரத்தைச் சுருக்கி இக்காலத்தில் தெருக்களிற் சில எளிய சனங்கள் உடுக்கை தட்டிப்பாடிச் சீவனஞ் செய்துகொண்டிருக்கின்ற அல்லியரசிமாலை, பவள க்கொடிமாலை, புரந்தரன் களவுமாலை என்னும் செம்பாக மான பாடல்களாகப்பாட, அவைகளை அவர்கள் கேட்டுச் சந்தோஷப்பட்டுத் தங்கள் தங்கள் வீட்டிலிருந்து அரிசி காய் கறி புளி மிளகாய் முதலானவைகளுங் கொணர்ந்துவந்து கொடு ப்பார்கள். அவைகளிற் புகழேந்தியானவர் தாம் சமைத்து

ண்டு மீந்தவைகளைச் சிறைச்சாலைக் காவற் சேவகருக்குக் கொடுப்பார். அதனால் அச்சேவகர்கள் அவர்மேல் அதிக பட்சம்வைத்து அவரை மரியாதையாய் நடத்திவந்தார்கள்.

இப்படியிருக்கையில், சோழன் கலியாணம்நிறைவேறி னமாத்திரத்தில் தன்மனைவியை அழைத்துக்கொண்டு உறை யூரில் வந்து சேர்ந்து சுகமாய் வாழுநாளில், அடுத்த தைப் பொங்கலுக்கு மறுநாட் சாயங்காலம் அவன் மிக்க ஆடம்ப ரத்துடனே வீதியில் யானைமேற் பவனிவந்தான். சிறைச் சாலைத் தளத்தின்மேல் நின்று புகழேந்தி அவ்வேடிக்கை பார்த்தபொழுது, சோழன் அவரைத் தன்னருகிலிருக்கும் ஒட்டக்கூத்தருக்குக் காட்டி "இதோ மேன்மாடத்தில் நிற் கின்றாரே புகழேந்தி என்பவர் இவர் தமிழில் மகா சமர்த் தரல்லரா?" என்றான். அதற்கு ஒட்டக்கூத்தன் "வேங்கைப் புலிக்கு முன் மான் நிற்குமா? எரிகின்ற கடுநெருப்புக்கு முன் சாரமற்று உலர்ந்த வெட்டுக்காடு நிற்குமா? கடற்சுறு வுக்கு முன் மற்ற சிறுமீன் நிற்குமா? சூரியனுக்குமுன் பனி நிற்குமா? அந்தப்படிக் கல்வியில் எனக்குமுன் இவன் நிற்க மாட்டுவானோ?" என்னுங் கருத்துத்தோன்ற அவரை இகழ்ந்து,

"மானிற்கு மோவந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
கானிற்கு மோவவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனிற்கு மோவந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தானிற்கு மோவக் கதிரோ னுதயத்திற்றார் மன்னனே."

என்று ஒரு பாடலைச்சொல்ல, அதுகேட்டுப்புகழேந்தி "இவ ன் அவ்வளவு சமர்த்தனோ?" என்று சிரித்து ராஜாவைப்பார் த்து, "இந்தப்பாடலை வெட்டிப்பாடவோ? அல்லது ஒட்டிப் பாடவோ?" என்று கேட்க, அவன் "வெட்டிப்பாட வேண் ண்டாம் ஒட்டியே பாடும்" என்ன, அவர் "அந்த மான் முத லானவைகள் அவனே, புலி முதலானவைகள் நானே" எனப் பொருள் படும்படி,

"மானவ னானந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கானவ னானவ் வெரியுந் தழலுங் கனைகடலின்
மீனவ னாந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தானவ னானக் கதிரோனுதயமுந் தார்மன்னனே."

என்று அப்பாடலையே ஒட்டிப்பாடினர். பாடியும், அரசன் ஒட்டக்கூத்தனிடத்தில் வைத்த தாட்சணியத்தாற் புகழேந்தியைச் சிறைமீட்க வேண்டும் என்பதை நினையாமற் போனான்.

அதற்குச் சில காலத்திற்குமுன் ஒரு வித்வான் சோழன்மேல் பாட்டுப்பாடிவர, அரசன் அப்பாடலை வியந்து அவனுக்கு உசிதமான வெகுமதி செய்து கொடி குடை எக்காள முதலிய விருதுகளுங் கொடுக்கக்கண்டு, ஒட்டக்கூத்தன் பொறாமைகொண்டு சோழனைப்பார்த்து, "கிழக்குந் தெற்கு மேற்கு வடக்கென்னும் நான்கும், மேல் கீழிரண்டுமாகிய தசதிசைகளும் பதறிப் பயந்து நடுங்கிப்போக, நக்ஷத்திரங்களெல்லாம் பலபலவென்று உதிர்ந்து சிதறப் பகிரண்டத்தின் முகடுவரைக்கும் நீண்ட மந்தரகிரியாகிய மத்தைக்கொண்டு திருப்பாற் கடலைக்கடைந்து, தேவர்களுக்கு அமிர்தங் கொடுத்த ஸ்ரீ மகாவிஷ்ணுவின் அமிசமா யவதரித்துப் பூமண்டல முழுதும் அரசாளப்பெற்ற மானாபரணனாகிய ராஜசேகரா! பரமசிவன் பரிவுகூர்ந்து கொடுத்தருளிய முத்துப் பந்தலில் வசிக்கின்ற திருஞான சம்பந்தப் பிள்ளையார் பாடிய பாடலுக்கும், சூரபத்மன் முதலான அசுரர்களைக் கடிந்த சத்திவேலைத் தாங்கிய முருகக்கடவுள் பாடிய பாடலுக்கும், பொதியமலையில் எழுந்தருளியிருக்கும் முனிசிரேஷ்டராகிய அகஸ்த்தியர் பாடிய பாடலுக்கும், கொத்துகொத்தா யிருக்கின்ற சடையினையுடைய சிவபெருமான் பாடிய பாடலுக்கும், பத்மபீடத்தில் வீற்றிருக்கும் பிரமதேவன் பாடிய பாடலுக்குமே குடை கொடி காள முதலிய பல விருதுகளுங் கொடுக்கலாமே யல்லது, இந்த அற்பமாகிய தமிழ்ப்பாடலுக்கெல்லாம் ஏன் கொடுக்கவேண்டியது" என்னும் பொருள் தோன்ற,

"பத்துக்கொண் டனதிக்கும் பதறிப்போ யுலையப்
  பைம்பொற்று ரகைசிந்தப் பகிரண்டத் திடைநீள்
மத்துக்கொண் டெறிக்குந் திரையாழி நெடுமால்
  வடிவாகிப் புவிகைக்கொண் டருண்மானா பரணா

முத்தப்பர் தரினிற்கும் குருளைக்குஞ் சினவேன்
முருகர்க்கும் பொதியக்கோ முனிவர்க்குஞ் சடிலக்
கொத்தற்குங் பதுமக்கொந் தயனுக்கு மலதிக்
கூழைத்தண் டமிழ்க்கேன் கொடியுங்கா ளமுமே."

என்று ஒரு பாடலைச்சொல்லித் தடுத்து, அன்று முதலாகக் கவிபாடி வருபவர்களை யெல்லாம் பிடித்துச் சிறைச்சாலையில் அடைப்பித்து, தேவி கொலுவிருக்கின்ற நவராத்திரி காலத்திற் சிறைக்கூடத்திலிருந்து வெளிப்படுத்தி, அவர்களை இருவர் இருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு இறங்கி நிற்கத் தேவிக்கு முன்பாக நிறுத்தி, பிடாரிக்கு இரட்டைக்கடா வெட்டுவதுபோலச் சற்றும் இரக்கமில்லாமல் அவர்கள் தலைகளைப் பதைக்கப் பதைக்க வெட்டி வழக்கமாய்ப் பலிசெலுத்தி வருவதுண்டு. அதுபற்றி அந்த ஒட்டக்கூத்தனையும், ஒருவன் பாடும் பாட்டில் ஏதாவது குற்றங் கண்டவுடன் அவன் தலையில் நறுக்கென்று குட்டுவதுபற்றிப் பிள்ளைப்பாண்டியனையும், வாதுசெய்யும்பொழுது எதிரி தோற்றால் அவன் காதில் மாட்டிய துறட்டைப் பிடித்திழுத்துக் காதை ஒட்ட அறுப்பதுபற்றி வில்லிபுத்தூராழ்வானையுங் குறித்து,

"குட்டுதற்குப் பிள்ளைப்பாண் டியனே யில்லை
குறும்பியள வாக்காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்று முடிந்துதலை யிறங்கப்போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்த னில்லை
விளையாட்டாய்க் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ வறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே."

என்று முற்காலத்தார் பாடியுமிருக்கின்றனர். அது நிற்க, மேற்சொல்லிய வழக்கப்படி அவன் தற்காலத்திலும் செய்ய எத்தனித்துப் புலவர்களில் அநேகரைப் பிடித்துச் சிறைச்சாலையில் அடைத்துவைத்தான். அச்செய்தி சிறைச்சாலையிலிருக்கும் புகழேந்திப்புலவர் அறிந்து, "ஐயையோ, சண்டாளன்! பாவமென்பதும் பழியென்பதும் பாராமல் தன்னைப்

போன்ற புலவர்களை வெட்ட மனந்துணிந்தானே; இதை யென்னவென்று சொல்லுகிறது ?" என்று வியசனப்பட்டு, பிறகு அவர்களையெல்லாம் கொலைக்குத் தப்புவிக்க வேண்டுமென்று, அவர்களில் நல்ல புத்திமான்களாகக் குயவனொருவன், அம்பட்டனொருவன், கருமானொருவன், வேளாளனொருவன், வண்ணானொருவன், ஆக ஐந்துபேரைத் தெரிந்தெடுத்து, அவர்களுக்குச் சிறையிருப்பிலே தானே சம்பிரதாயத்துடனே இலக்கிய இலக்கணங்கள் பயிற்றுவித்து அதிக சமர்த்தர்களாம்படி செய்தார்.

அவர்களைவரும் அவரிடத்தில் முறையாகக் கல்விகற்று மிக்க திறமுடையவர்களா யிருக்கையில் நவராத்திரி சமீபித்தது. சோழராஜன் ஆகாசத்தை முட்டப் பச்சைப்பந்தல் போட்டுக் கமுகு வாழை முதலியவைகளைக் கொண்டு அலங்கரித்துத் திருவிளக்கேற்றித் தேவியைக் கலசத்தில் ஆவாகனம் பண்ணி ஒன்பதுநாள் கொலுநிறுத்திப் பூஜித்துவந்து, பத்தா நாளாகிய விஜயதசமியினன்று உத்வாசனம் பண்ணுவதற்குப்பலிகொடுக்கயத்தனித்தான். அத்தருணத்தில் அந்தத்தேவி சந்நிதிக்கு முன்னே இருபக்கத்திலும் இரண்டு நாற்காலி கொண்டுவந்து போடப்பட்டன. அவற்றுள் ஒன்றின்மேல் அரசனும், மற்றதன்மேல் ஒட்டக்கூத்தனும் கத்தியை உருவிக் கையிற் பிடித்தவண்ணமாய் எதிரெதிராக உட்கார்ந்தார்கள். ஒட்டக்கூத்தன் சிறைச்சாலைக் காவலதிகாரியை நோக்கி "அங்குள்ள படித்த கடாக்களைப் பிடித்துக்கொண்டுவா" என்று சொல்ல, அவன் விசனப்பட்டுக்கொண்டே சிறைச்சாலைக்குப்போய்க் கதவைத்திறந்து அதற்குள் அடக்கப்பட்டவர்களை "வெளியே வாருங்கள்" என்றான். கொஞ்சங்குறைய நூறுபெயர் வரையில் "இன்றைக்கு நமக்கு முடிவு சம்பவித்தது, இதற்கென்ன உபாயஞ்செய்கிறது ?" என்று கர்ப்பங்கலங்கிக் கண்ணீர் விட்டுக்கொண்டே வெளிப்பட்டார்கள். புகழேந்தியானவர் "இவர்களிற் பெரும்பான்மையோர் சொற்பக் கல்வியுடையவர்களா யிருப்பதனால் அந்தக் காலாந்தகன் கேட்கும் கடினமான கேள்விக்கு

உத்தரஞ் சொல்லத்தெரியாமல் விழிப்பார்களே, அது கண்டு அவன் அநியாயமாய்ப் பதைக்கத் துடிக்க வெட்டி யெறிவானே" என்று நினைத்து, அப்படிப்பட்டவர்களைப் பின்னே நிறுத்தித் தமயிடத்திற் சந்தேக விபரீதமறக் கல்வி பயின்ற வேவர்களையும் ஒருவர் பின் ஒருவராய் ஒட்டக்கூத்தனுக்கு முன்னே போகும்படி திட்டப்படுத்தி அனுப்பினார்.

அவரால் அனுப்பப்பட்டவர்களிற் குயவன் பிரதமத்திற்போய் நின்றான். அப்பொழுது ஒட்டக்கூத்தன் தன்னைப் பெரிய மதயானையாகவும் அவனை ஒரு சிறிய முயற்குட்டியாகவும் பாவித்துக்கொண்டு அவன் முகத்தைப் பார்த்து, 'மோனை எதுகை முதலிய தொடையும் தொடை விகற்பமுமுடைய வெண்பா, அகவற்பா, வஞ்சிப்பா என்ற பாடலும் தாழிசை, துறை, விருத்தம் என்ற இனமுமாகிய யாப்பினையுள்ளிட்ட இயல், இசை, நாடகமென மூவகைப்பட்ட தமிழாகிய மும்மதங்களைப் பொழிகின்ற இந்தக் கவியானைக்கு முன் அச்சமில்லாமல் வந்து எதிர்த்து நிற்கின்ற நீ ஆரடா?" என்பதற்கு,

"மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் தெதிர்த்தவ னாரடா?"

என்றான். அதற்குக் குயவன், "நான் கூனையுங் குடத்தையுங் குண்டுசட்டியையும் பானையையும் பண்ணுகின்ற குசப்பையல்" எனவும், சிலேடையால் "தற்புகழ்ச்சியாக யானையென்று சொல்லுகின்ற உன்னுடைய மதத்தை அடக்குகின்ற அங்குசப்பையல்" எனவும் சொல்லுவதற்கு,

"கூனையுங் குடமுங் குண்டு சட்டியும்
பானையும் வனையு மங்குசப் பையல்யான்."

என்றான். அதுகேட்டு ஒட்டக்கூத்தன் "இதிவன் நமக்கு வைரியாயேற்பட்டான்" என்று எண்ணி, நீதியில்லாமல் தலையை வெட்டலாகாதே, ஆதலால் அவனை ஒருபக்கத்திற் சும்மா நிறுத்திவைத்து, "மற்றொருவனை அழை" என்று சிறைக்கூடக்காவல் அதிகாரிக்குச் சொல்ல, புகழேந்திப்புலவர் அம்பட்டனை "போ" என்ன, இவன் இந்தக்கொலைபாத

கன் நம்மை என்ன இம்சைசெய்வானோ?" என்று நடுங்கிக் கொண்டே வந்து நின்றான்.

அவனுக்கு ஒருகண் பொட்டையா யிருக்கக்கண்டு ஒட்டக்கூத்தன் அவனை அலட்சியமாக "அடா! பொட்டைக் கண்ணா! என்னைக் கண்டவுடனே வல்லூறென்னும் பறவையைக்கண்ட கொக்குப்போலக் கைகால் உதறலெடுக்க மனவிசாரத்துடனே இங்கேவந்து நின்றையே, நீயார்?" என்பதற்கு,

"விண்பட்ட கொக்குவல் லூறுகண் டென்ன விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின் றாய்பொட்டை யாய்புகல்வாய்.

என்று பாதிப்பாடலைச் சொல்லி, "இதற்கு உத்தரமாக மற்ற பாதிப்பாட்டையுஞ் சொல்; நீ கவிபாடுந் திறத்தைப் பார்ப்போம்" என்றான். அதற்கு அம்பட்டன் "இவன் நம்மை என்னசெய்தாலுஞ் செய்யட்டும், 'தலைக்குமிஞ்சின ஆக்கினையும், கோவணத்துக்கு மிஞ்சின தரித்திரமுமில்லை' என்று தைரியங்கொண்டு "எனக்குக் கண்ணும் பொட்டை, நான் சாதியிலும் அம்பட்டன், ஆனாலும் பாவாணர்களுக்கு முன்னே சிறிதுஞ் சங்கையின்றிச் செம்பாகமான பற்பல சந்தங்களையுடைய தமிழ்ப்பாடல்களை யாவருந் திடுக்கிடச் செய்கின்ற நீயும் திடுக்கிடும்படி பாடுவேன்" என்பதற்கு,

"கண்பொட்டை யாயினு மம்பட்ட னன்கவி வாணர்முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே."

என்றான். அதுகேட்டு ஒட்டக்கூத்தன் "இவன் அம்பட்டக் கிருதைக் காண்பிக்கிறான்" என்று நினைத்து அவனை மறுபக்கத்தில் நிறுத்தி, வேறொருவனை அழைக்கச் சொன்னான். சிறைகூடத்திலுள்ள புகழேந்திசொற்படி சேவர்கள் கருமானைக்கொண்டுவந்து நிறுத்தினார்கள்.

ஒட்டக்கூத்தன் அவனை, முன்பு குயவனையும் அம்பட்டனையுங் கேட்டது போலக் கவிசொல்லிக் கேள்வி கேளாமல் வாய்மொழியாகத்தானே "நீ யார் மகன்? உன் பெயரென்ன? நீ பெற்ற மகிமை யெப்படிப்பட்டது? உன் குல

மெது? சொல்" என்றும், "தப்புப்பாட்டுப் பாடலாமா?" என்றுங் கேட்டான். அதற்கு அவன் "நான் செல்லப்பாசாரி குமாரன், என்பெயர் திருவேங்கடாசாரி, நான் செகத்குருவாயிருக்கிறவன், என்குலம் மனு மய சிற்பி துவஷ்ட விஸ்வ என்னும் ஐந்திற் கருமாரகுலம்; நான் குற்றமறப் பாடுகிற பாட்டைக் குறித்து 'வாய்புளித்ததோ மாங்காய் புளித்ததோ' என்பதாக வாய்க்கெளிதாக நீ குற்றங்கூற வந்தாய், இப்படி என் கவிதையைச்சுட்டி வீண்குற்றங் கூறுகிறவர்களை நான் சும்மா விடமாட்டேன், குறட்டைக்கொண்டு பதினாறு பல்லையும் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகையாளிகள் பார்த்துச் சிரிக்கும்படி அவர்கள் கண்ணுக்கெதிரே இரவும் பகலும் ஓய்வில்லாமற் கவியாகிய இருப்பாணிகளைக்கொண்டு வாயிற் கடாவுவேன்" என்ற கருத்துத் தோன்ற,

"செல்வன் புதல்வன் திருவேங் கடவன் செகத்குருவாம்
கொல்லன் கவியைக் குறைச்சொன்ன பேரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர் முன்னே
அல்லும் பகலு மடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே."

என்ற பாடலைச் சொன்னான். அதுகேட்டு ஒட்டக்கூத்தன் "தன்னைப் புகழாத கம்மாளனில்லை யென்பார்கள், அதற்கேற்றபடி இவன் தன்னைப்புகழ்ந்து பேசுகிறான்" என்றெண்ணி அவனை "அப்பாடி யில்" என்று நிறுத்தி, "பின்னொருவனைக் கொண்டுவா" என்றான். என்ற மாத்திரத்தில் வேளாளன் வந்து நின்றான்.

அவனை நோக்கி, ஒட்டக்கூத்தன் "பிரபல கவிஞர்களாகிய எங்களுக்கு முன்னே புன்கவிஞர்களாகிய நீங்களும் வித்வான்களென்று வெளிப்பட்டு, 'ஞானியாரடுந் திருக்கூத்தோடே நானுமாடுகிறேன்' என்பதாகக் கவிபாடுகிறீர்களே இஃதென்னை வெட்கக்கேடு?" என்றான். அதற்கு வேளாளன் "இந்தப் பஞ்சாசத்கோடி பூமண்டலத்தையும் ஒரு குடை நீழலில் அடக்கி ஏகாதிபத்தியமாய் அரசாளுகின்ற சக்கிரேசனைக்கண்டு மற்று ஐம்பத்தாறு தேசத்தரசர்கள், நாமெவ்வளவுபூமிக் குடையவர்கள்? இவனுக் கெதிர்த்தட்டாக 'கடா

இடுக்கில் புல்தின்னுகிறதுபோல' ஆளுகைசெய்வது தகுதி யல்லவே யென்று தந்தம் தேசங்களைக் கைவிட்டுக் கடலி லே போய்விழுந்து மாண்டுபோனார்களா?

"பூவிற்குத் தாமரை பொன்னுக்குச் சாம்புநதம்
ஆவிற் கருமுனியா யானைக் கோரம்பல்
தேவிற் றிருமாலெனச் சிறந்ததென்பவே
பாவிற்கு வள்ளுவர் வெண்பா"

என்றபடி,

ஒரு தடாகத்திலுள்ள புஷ்பங்களுக்குள் மிகச் சிறந்த தாயும், ஸ்ரீமகாலட்சுமிக்கு வாசஸ்தானமாயு மிருக்கின்ற தாமரை புஷ்பிக்கக்கண்டு அதனருகி லிருக்கும் அற்பமா கிய கொட்டியும் புஷ்பிக்காம லிருக்கின்றதா? அந்தப்படி எழுவகைத் தீவுகளையும்பரிபாலனம் பண்ணுகின்ற சோழ மகாராஜாவே! கவிசிரேஷ்டராகிய ஒட்டக்கூத்தரே! நீங்கள் சொற்றிட்பமும் பொருணுட்பமும் உடையதாகப் பாடுகி ன்ற பாடலைக்கண்டு எப்போதும் சொற்பமாகிய கவிகளைப் பாடுகின்ற புலவர்களெல்லாம் பயந்து பாடாமல் ஓடியொளி த்துப் போவார்களா? சொல்லுங்கள் என்னுங் கருத்தை யமைத்து,

"கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோகனகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்ன கவிபொட்டக் கூத்தனுங் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்க ளோதமிழ் பாடிய பாவலரே."

என்ற பாடலைச் சொல்லிப் பின்னுந் தனக்குள் சோழனு க்கு இவன் வித்தியாகுருவா யிருப்பதுபற்றி இவனை மிக வும் பெருமைப்படுத்தி, அவன் தன் சிங்காதனத்திற்கு மே லாக உயர்ந்த ஆசனத்தில்வைத்து இவனுடைய பாதத்தைத் தலைமேலே தாங்கிக்கொண்டிருக்கிற காரணத்தால் "சுப்பை யில் முளைத்தகொடி கூரைமே லேறினதுபோல்" இவன் தன்னை அதிக சிலாக்கியப்பட்டவனாக நினைத்துக்கொண்டு கர்வித்து, "அதிகாரிவீட்டுக் கோழிமுட்டை குடியானவன் வீட்டு அம்மியையும் உடைக்கும்" என்பதாக நம்மையெல்

னும் பொருள்செய்யாமற் கிரமத்தாழ்வாக நடத்துகிறு னென்றெண்ணி ஒட்டக்கூத்தனை நோக்கி, "உலகத்தில் எப்படிப்பட்டவர்களுக்குந் தங்குற்றம் தெரிகிறதேயில்லை; அதைக்குறித்து அரசனானவன் முன்பு தன்னிடத்திலுள்ள குற்றத்தைக் கண்டு அதனைப் பற்றறக்களைந்து, பின்பு பிறரிடத்திலுள்ள குற்றத்தைக் கண்டு களையவேண்டும். அப்படிச் செய்தால் அவனைச் சிறிதேனும் குற்றமென்பது அணுகாது. அவன் எப்பொழுதும் நீதிமானாயிருப்பானென்று சாஸ்திரமுஞ் சொல்லுகின்றதே, அதை நீங்கள் ஆராய்ந்தறிய வில்லையோ?" என்றார். அப்பொழுது அவன் கடுங்கோபங்கொண்டு பின்விளைவை உணராமல், "அடா! எங்களுக்கா சட்டக்கல்வி ஓதவந்தனையோ? நீசொல்லுகிறதை யோசிக்குமிடத்தில், 'முண்டையைப்பிடித்த கண்டமாலை முருங்கையையும் கூடப்பிடித்தது' என்பதுபோல நாங்களும் நற்பாட்டுப் பாடியிருக்கிறதாக வல்லவோ காணப்படுகின்றது; நல்லது எங்கள் பாட்டில நீ கண்டவழுவென்ன சொல்," என்று உறுக்கிக் கேட்டான். வேளாளன் "அடங்காதபாப்புக்கு ராஜா மூங்கிற் றடி" என்பதனால் இவன் குற்றத்தை இவனுக்கு எடுத்துக் காட்டினால்தான் இவனுடைய கொட்டம் அடங்கும் இல்லாவிட்டால் அடங்கமாட்டானென்று நினைத்து "ஐயா! நீர் முன்பு சோழமகாராஜாவின்மேற் பாடிய அண்டத்தாப்பரணியென்னும் பிரபந்தத்தில் இந்தப்பிரமாண்டத்தையே நகரமாகவும், பூமியைச் சுற்றியிருக்கின்ற சக்கிரவாளகிரியையே அகழாகவும், பூமி மத்தியிலுள்ள மகாமேருவையே கோட்டைக் கொடிக் கம்பமாகவும் ரூபகப்படுத்தி வருணித்திருக்கிறீரே, அகழானது புறத்தி லிருந்தாலல்லவோ கோட்டைக்கு உறுதி? அகத்தி லிருக்கிறதாகச் சொல்லப்பட் டிருக்கின்றதே அதனால் என்னபயன்? இது சரிதானா? சொல்லவேண்டுமானால் அண்டத்திற் கப்புறத்திலுள்ள பெரும்புறக் கடலைச் சொல்லலாமே, கம்பர் இராமாயணத்தில் நகரவருணனையில்,

"நேமிமால் வரைமதி லாக நீள்புறப்
பாமமா கடலகிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம்போலுமே"

என்ற செய்யுளிற் பெரும்புறக் கடலை அகழாகச் சொன்ன தையாவது பார்க்கவில்லையா? அல்லது கேட்கவுமில்லையா?" என்றான்.

அந்தமட்டில் அக்கினிதேவனுக்கு அபிஷேகம் பண்ணினதுபோல ஒட்டக்கூத்தன் முகங்கருகி அவனைப் பிடித்திருந்த அகங்காரமாகிய துஷ்டப்பேய் விட்டுத்தொலைந்தது. அப்புறம் அவன் "மற்றவர்களை அழைத்துக் கேட்டால் அவர்கள் ஏதேது சொல்வார்களோ" வென்ற அச்சத்தினால் நாவெழாமல் வாய்ப்பூட் டிடப்பட்டதுபோல ஒன்றும் பேசாமற் சிறிதுநேரம் சும்மாவிருந்து, பிறகு "இவர்களை நாம் சிறைப்படுத்தினது 'சர்ப்பனை விலைக்கு வாங்கினதுபோ லிருக்கிறது" என்றும் "நமது பெயரைக் கேட்டவர்களெல்லாம் இடியோசைகேட்ட சர்ப்பம்போல நடுங்குவார்களே, அப்படியிருக்க இவர்களுக்கு இத்தத்தைரியமும் இவ்வளவு வல்லமையும் ஆராலே உண்டாயின? அந்தப் புகழேந்தி யென்பவனாலேதான்; அவன் இப்படிப்பட்ட அற்பமனிதர்களைக் கொண்டு நம்மை அவமானப் படுத்தினனல்லவா? ஆகையால் அவனை அவன் உயிர்விடுமளவும் சிறைவிடச் செய்யவொண்ணாது, இவர்களையெல்லாம் வீணாகச் சிறைப்படுத்தி வைப்பதனால் நமக்குப் பிரயோஜனம் ஒன்றுமில்லை" என்று தனக்குள்ளே நிச்சயித்து, அவர்களைப்பார்த்து "நீங்கள் இனித்தடையில்லாமற் சுகமாய் உங்கள் தேசத்திற்குப்போகலாம் என்று புகழேந்தி ஒருவர்தவிர இதரமானவர்களையெல்லாம் அனுப்பிவிட்டான். அவர்களனைவரும் "இதுவரையில் நம்மைப் பிடித்திருந்த பாழ்ஞ்சனியானது புண்ணியாத்மாவாகிய புகழேந்திப்புலவராலே இன்றோடே நிவாரணமாயிற்று. நமக்காகச் சகாயப்பட்ட அவருக்கு வந்த விபத்து பகவானுடை அநுக்கிரகத்தாற் சூரியனைக்கண்ட பனிபோலச் சீக்கிரம் நிவர்த்தியாகவேண்டும்" என்று கடவுளை ஸ்துதி பண்ணிக்கொண்டு போனார்கள்.

புகழேந்திப்புலவர் யதாப்பிரகாரம் கிரகசாரம் போதாமையாற் சிறையிருப்பிலேயே இருந்தார். வெகுநாள் சென்

றும் அவரை விடுதலை செய்யவேண்டுமென்று அரசனுக்குப் புத்தி பிறக்கவில்லை. இப்படியிருக்கையில் அதை யரசனுடைய தேவி அறிந்து "நம்முடைய பிதாவின் சமஸ்தான வித்வானை ஒட்டக்கூத்தன் சிறைப்படுத்தி யிருக்கின்றான். அவனுடைய அபிமதப்படி நமது மகாராஜாவும் நெடுநாளாயும் அவரைச் சிறையிருப்பிலிருந்து விடுதலைசெய்யாம லிருக்கின்றார்; இஃதென்னகோரம்? கேள்விமுறையில்லையா?" என்று மனவருத்தப்பட்டுக்கொண்டிருந்து, ஒருநாள் சயந கிருகத்திற்கு ராஜாவரும் குறிப்பறிந்து "கலகம்பிறந்தால் நியாயம் பிறக்கும்" என்று அந்த வீட்டுவாசற் கதவைச் சாத்தித் தாழ்பூட்டி அரசனை உள்ளே பிரவேசிக்கவொட்டாமல் தடைசெய்தாள். அது கண்டு குலோத்துங்கன்,

"களப வண்டவிடு கலக கொண்டைகளின்
நிலவெ ழுந்துகனல் சொரியுமென்
றளக பந்திமிசை யளிகள் பந்ரிடு
மரிவை மீர் கடைகடிறமினோ."

என்றும்,

"குதளை வளவெனு மிளமுலைக்
துடியளை வளவெனு நுண்ணிடைக்
காதளை வளவெனு மதர்விழிக்
கடலமு தனையவர் திறமினோ."

என்றும் கலிங்கத்துப்பரணியில் சொல்லியவண்ணம் "கடை திறக்க வேண்டும்" என்று பற்பலவிதத்திலும் இதஞ்சொல் லியும் திறவாததனால் தொன்றுதொட்டு அரசர்களுக்குள் ராஜமகிஷிக்கு ஊடல் நிகழும்பொழுதெல்லாம் அவர்கள் புலவர்களைக்கொண்டு தணிப்பிக்கின்ற சம்பிரதாயப்படி ஒட்டக்கூத்தனை அழைத்துத் தன் பத்தினியின் ஊடலைத்தணித்துக் கதவைத் திறப்பிக்கும்படி அனுப்பினான்.

அவன்போய்,

"மாதர்க் கிதங்கவி வாணர்க்குச் சால வணக்கங்குரு
நாதர்க்கு நீதியொ டாசாரங் கல்வி நயந்தவர்க்குக்
கோதற்ற வாசகம் பொய்க்குப்பொய் கோளுக்குக்கோளறிவில்
ஆதற்கிரட்டிப் பழியுடை யோர்செய்யு மாண்மைகளே."

என்பதனால், இதமாய்ப் பேசவேண்டுமென்று நினையாமல் "தாமரைமலரில் வசிக்கின்ற தேன்போல் இனிக்கும் நயவசனத்தையுடைய இலக்குமிபோல்வாய்! நீ கதவைத் திறந்துவிடு; திறவாதிருந்தாலோ கோடையிடி இடித்ததுபோலப் பகைவர்நெஞ்சம் துணுக்குறும்படி புறங்கொடாமற் போர்செய்து வெல்கின்ற சுத்தவீரனும், உனது பிராணநாதனுமாகிய சோழராஜனென்னும் சூரியகுலத்தரசன் வாசல்தேடிவந்தால் அப்பொழுது சூரியனைக்காணுமல் முகுளித்த தாமரை அச்சூரியன் உதயமாகக் கண்டமாத்திரத்தில் தன்னியல்பாய் விகசிக்கிறதுபோல, உனக்கொருவரும் இதஞ்சொல்லாமலே தனக்குத்தானே விரல்களாகிய இதழ்களையுடைய உன் கையாகிய தாமரையானது திறந்துவிடப்போகின்றது, அதைக்குறித்து நானினியுன்னைப் பிரார்த்திக்கவேண்டிய நிமித்தமென்னை?" என்கின்ற கருத்தைக்கொண்டு,

"நானே யினியுன்னை வேண்டுவ தில்லை நளினமலர்த்
தேனே கபாடந் திறந்திடு வாய் திறவாவிடிலோ
வானே றனைய விரவிகு லாதிபன் வாசல்வந்தால்
தானே திறக்குநின் கையித ழாகிய தாமரையே."

என்று மிகவும் கடுமையான ஒரு பாடலைச் சொன்னமாத்திரத்தில், அந்த அசுணப்பறவையின் செவியிலேபறையறைந்ததுபோலக் கர்ணகடூரமா யிருந்ததுகண்டு, அவள் அதிககோபங்கொண்டு "ஊதுகிறசங்கு ஊதினுல் விடிகிறபொழுது விடிகிறது" என்பதாக எண்ணி "ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத்தாழ்ப்பாள்" என்று மற்றொரு தாழ்ப்பாள் போட்டாள்.

அதையறிந்து ஒட்டக்கூத்தன் ராணிக்குப் புகழேந்தியினிமித்தம் நம்மிடத்தில் வெறுப்புண்டாக்கி இப்படிச்செய்தமையால் "அன்பற்ற மாமியாருக்குக் கும்பிட்டாலுங் குற்றந்தான்" என்பதாக, "இனி நாம் என்ன சொன்னாலும் இதம் பிறக்கமாட்டாது" என்று அவ்விடத்தைவிட்டுச் சுவாமியிடத்தில் விசையாய்வந்து தாக்கின பந்தானது அங்கிருந்து அதைத்துத் திரும்பினதுபோலப் பேசாமல் திரும்

பிச் சோழனிடத்திற்கு வந்து, எழுதுகிற எழுத்தாணி குதறுகிறது கண்டு கூர்மழுங்கத் தீட்டுமளவில் அது இரட்டைக்கூர் பட்டாற்போல நான் பாடின பாட்டைக் கேட்டு "ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்" என்பதாகப் பின்னுமொரு தாழ்ப்பாள் போடச் சம்பவித்தது" என்று சொல்ல, குலோத்துங்கன் "நம்முடைய மனைவிக்கு ஊடல் நிகழ்ந்ததற்குக் காரணம் யாதென்று தெரியவில்லையே; அவளுக்கு நாமென்ன குறை செய்தோம்? அவளிஷ்டப்படிக்கெல்லாம் நடத்தித் தானே வருகிறோம். நமக்காகாதவர்கள் ஆரேனும் அவளுக்குத் துர்ப்போதனை செய்தார்களென்றுநினைப்போமானால் அப்படிப்பட்டவர் இங்கொருவருமில்லையே; அல்லது ஜன்மாந்திரத்தின் கர்மாநுபவத்தால் தான் அவள் குணம் பேதித்ததோ? இஃதென்னை தவக்குறை அபூர்வமாக ஒருவேளை நம்மிடத்தில் அவளுக்கு ஊடல் நிகழ்வது சகஜமே. அஃது ஆச்சரியமன்று; ஒட்டக்கூத்தனார் அவளுக்கு என்னகொடுமை செய்தார். அவர்மேற் சீற்றம் உதிப்பதற்கு ஏது என்ன?" என்று தனக்குள்ளே பலவிதத்திலும் தீர்க்காலோசனைபண்ணிப் பார்க்கும்பொழுது, "புகழேந்திப்புலவரை ஒட்டக்கூத்தர் சிறைப்படுத்தினமையால் அவர்மேல் அருவருப்பும், நாம் அவர்கருத்துக்கிணங்கிநின்று சிறைமீட்காமையால் நம்மேல் வெறுப்பும் விளைந்தன" என்று தெளிந்து, அந்தக்ஷணமே புகழேந்திப்புலவரைச் சிறைநீக்கி "ராக்கினி கோபத்தை ஆற்றி, அவளைச் சமாதானப் படுத்தும்" என்று ஏவினன்.

அவர் அந்தப்புரத்துக்குப் போய்த் தமது வரவை அரசிக்கு அறிவிக்க, அவள் அவருக்குத் தன் உயிர்த்தோழியைக்கொண்டு ஆசனங் கொடுக்கச்சொல்லி மரியாதைசெய்வித்தாள். அவர் அப்பொழுது ராஜமகிஷிக்குச் சீற்றமாறி மனவருத்தந் தணியும்பொருட்டு மிகக் குளிர்ச்சியும் மிருதுவும் மதுரமும் நயமுமாய்த் தோன்றும்படி "இருபிளவாகப் பகிர்ந்த மெல்லிய நூலின் ஒரு பிளவுபோன்று நுண்ணிதாகிய சிற்றிடையையும் பொற்குழைகளை ஏந்திய செவியைத்

தொடுகின்ற இணைவிழிகளையுமுடைய தெய்வப்பெண்போல் வாய் வானத்தினின்று பெய்யும் மழையினது வண்மை ஒரு கூறும். இவனது கைவண்மையோ அதற்கிருகூறுமென்று யாவரும் அதிசயிக்கத்தக்க மிக்க வள்ளற் றன்மையையும் அபிமானமாகிய ஆபரணத்தையுமுடைய சோழமகாராஜா உன்னுடைய வாசலைத் தேடிவந்தால் அவர்மே லென்ன குற்றமிருந்தாலும் அதையெல்லாம் பாராட்டுவது பெருமையா ? அவரை வாசலுக்குள் பிரவேசிக்கவொட்டாமல் தடுப்பதும் தர்மமா ? உன்னைப்போலும் உயர்குடியிற் பிறந்த கற்புக்கணிகலமாகிய உத்தம ஸ்திரீகள் தம்முயிர்போற் சிறந்த கணவர்கள் செய்த ஒருபிழை இருபிழைகளை க்ஷமிக்காமல் வன்மம் சாதிப்பார்களோ? * தண்ணீருமல்லவோ மூன்று பிழை பொறுக்கின்றது; நீ இவ்வொரு பிழை பொறுக்கலாகாதா ? 'குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை' என்று சொல்லப்படுகின்றதே, ஆதலால் இதைக் குறித்துச் சீற்றம் செய்யலாமா? 'தீராக்கோபம் போராய்முடியாதா?' இஃதென்னை உனக்குத் தெரியாதோ ? கடல்கொதித்தால் விளாவ நீரெங்கே ? உன் சித்தமிரங்கி நீகொண்ட கோபத்தை நீயே தணித்துக்கொள்ளவேண்டும்" என்னுங் கருத்தை உள்ளமைத்து,

"இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்தியபொற்
குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகைம் மானா பரணனின் வாசல்வந்தாற்
பிழையொன் றிரண்டு பொறாரோ குடியிற் பிறந்தவரே."

என்றொரு பாடலைச் சொன்னமாத்திரத்தில், படம் விரித்தாடுகின்ற பாம்பின்மேல் மாந்திரிகன் திருநீற்றை மந்திரித்துப் போட்டவுடனே அது படமொடுங்கி உக்கிரமாறினது போல ராஜமகிஷியின் கோபமானது தணிந்து சாந்தமாயிற்று. சோழமகாராஜன் அதுவறிந்து "படைமுகத்திலுமதிமுகம் வேண்டும் என்பதற் கிசையப் புகழேந்திப்புலவர்

* தண்ணீர் மூன்றுபிழை பொறுத்தலாவது, குளத்திலாவது கிணற்றிலாவது விழுந்து அமிழ்ந்தவனை அந்நீர்மூன்றுமுறை மேலே கிளம்பச்செய்தலேயாம்.

தன் தந்தை சமஸ்தானத்து வித்வானென்கின்ற தாட்சிணியத்தா லல்லவோ ராக்கினிக்கு நீங்காத ஊடல் நீங்கியது என்று அப்புலவர்மேல் மிகவும் சந்தோஷப்பட்டு அன்று முதல் ஒரு குறைவுமில்லாமல் அவரைப் பரிபாலித்துவந்தான்.

ஒட்டக்கூத்தர் பெண்பேசிய சரித்திரம் முற்றிற்று.

## புகழேந்திப்புலவர் நளவெண்பா பாடியது.

புகழேந்திப் புலவரைச் சிறைநீக்கிப் பரிபாலித்து வருமளவிற் குலோத்துங்க சோழராஜனும் மற்றும் சில பிரபுக்களும் அவர் மகாசாதுரியமுள்ள வித்வசிரோமணியா யிருப்பதனல் அவரைக்கொண்டு சமஸ்கிருத பாஷையிலுள்ள நளசரித்திரத்தைத் தமிழிற் சுருக்கிச் செய்விக்கவேண்டுமென் றெண்ணி ஒருநாள் அவருக்கு அச்செய்தியை அறிவிக்க அவர் "நல்லது அப்படியே செய்கிறோம்" என்று ஒப்புக்கொண்டு சொற்பொலிவு பொருட்பொலிவு போன்றி நவராசாலங்காரமுடையதாக, யாவரும் "கற்பனைக் களஞ்சியம்" என்று சொல்லும்படி அச்சரித்திரத்தை நானூறு வெண்பாக்களாற் பாடி முடித்துச் சோழராஜன் சபையில் அரங்கேற்றும்பொழுது, அதில் அந்திக்காலத்தை வருணிக்கத் தொடங்கி, "வெண்மையான குடமல்லிகை, யரும்பில் வண்டுமொய்த்துச் சங்கநாதஞ் செய்ய, நெடிய கருப்புவில்லை ஏந்திய மன்மதனெனுவன் தன் னுருத்தெரியாமல் மறைந்து ஸ்திரீ புருஷர்கள்மேற் புஷ்பபாணத்தைப் பிரயோகித்து அவர்களுக்குக் காமத்தை விளைக்க, மலரும் பருவத்தையுடைய முல்லைமாலையைத் தோளில் அணிந்து சிறிதுநேரம் நிகழ்வதாகிய மாலைப்பொழுதை முன் நடத்திக்கொண்டு அந்திப்பொழுதானது மெல்லென நடந்துவந்தது" என்னும் பொருளை அடக்கிய,

"மல்லிகையே வெண்சங்கா வண்டே தவான்கருப்பு
வில்லி கணையெறிந்து மெய்கரப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்லநடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது"

என்னும் பாடலைச்சொல்லி, ஒட்டக்கூத்தன் புகழேந்தியைக் குறித்துத் தனக்குள் அடிநாளே தோன்றி நாளுக்குநாள் வளர்ந்து முதிர்ந்த பகையினால், அச்செய்யுளின் கற்பனைக்குச் சந்தோஷப்படாமல், காக்கையானது சோலைகளிலிருக்கின்ற மதுரமாகிய கனிகளை விரும்பிப் புசியாமற் கடுங்கசப்பாகிய வேப்பம்பழத்தை விரும்புவதுபோலக் குற்றங்கூறவேண்டுமென்னும் விருப்பத்தையே பெரிதாகக்கொண்டு அவன் "இந்தப்பாட்டில் மல்லிகை யரும்பைச் சங்காகவும், வண்டை சங்காதஞ் செய்வோனாகவும் கற்பித்தது உசிதமே; ஆயினும், சங்கவாத்தியஞ் செய்வோர் அதன் பின்புறத்தை யல்லவோ வாயில்வைத்தூதுவார்கள்; அதற்கிசைய "சங்குச்சூத்தும் ஆண்டிவாயும்" எனப் பழமொழியு மிருக்கின்றதே; அந்தப்படி புஷ்பத்தின் அடிப்புறத்தில் வண்டுமொய்த்து ஊதுகிறதா யிருந்தால் தோஷம் சொல்லக்கூடாது, அவ்வழக்கம் வண்டுகளுக்கில்லையே, அதை நினையாமற் கற்பித்ததனால் இந்தக்கற்பனை குற்றத்திற் கிடமாயிருக்கிறது" என்றான். அத்தருணத்தில் அந்தச் சபையிலிருந்த கம்பர், "கட்டின வீட்டுக்குக் கல்லி சொல்லுகிறவர்களுக்கென்ன" வாய்க்குச் சுளுவுதானே, அப்படிச் சொல்லுகிறவர்கள் தாங்கள் கட்டிப் பார்த்தாலல்லவோ அந்தவருத்தம் அப்பொழுது தெரியவரும்; அதை நினையாமல் இந்த ஒட்டக்கூத்தன் புகழேந்திப்புலவர் விஷயத்தில் தனக்குள்ள விரோதத்தைமுன்னிட்டு, "அலைநினைத்து உரலையிடிப்பதுபோல்" நிர்த்தோஷமா யிருக்கிற கற்பனையின்மேல் தோஷாரோபணம் பண்ணவேண்டுமென்று கங்கணங் கட்டிக்கொண்டு துராட்சேபம் பண்ணுகிறான் என்றெண்ணி, "இப்படிப்பட்டவன் வாயைப் பொட்டென்று மூடும்படி நீர்விநயமாக உத்தரம் சொல்லவேண்டும்" என்று புகழேந்திப் புலவர்க்குக்

க்கண்ணைசைகை காட்ட, அதையறிந்து அவர் ஒட்டக்கூத்தனைப் பார்த்துச் "சங்குச்சூத்தும் ஆண்டி வாயுமென்று சொல்லவந்தீரோ, அது சகஜந்தான்; ஆனாலும் கள்ளுக்குடியனுக்கு வாயென்றும் சூத்தென்றுந் தெரியுமா? நீர்தான் சொல்லும்" என்று சமாதானஞ் சொல்பவர்போல் அவனைப் பரிகாசஞ் செய்ய, அதுகேட்டு அங்குள்ளவர்களெல்லாம் நகைத்துச் "சரிசரி" என்று மிகவுஞ் சந்தோஷப்பட்டார்கள்.

தமயந்தி விரகதாபப்படுகையிற் சந்திரன் காய்வது அவளுக்குச் சகிக்கக்கூடாமையால் அவள் தன் தோழிமாரை நோக்கி, "பொற்செப்புப் போன்ற இளமையாகிய ஸ்தனபாரத்தை உடையவர்களே! சந்திரனுடைய அதியுஷ்ணமாகிய சுவாலைப் பட்டல்லவோ ஆகாயத்தின் உடல்முழுதும் கொப்புளித்திருக்கின்றது; இவ்விதத்தாற் கொப்புளித்த ஆகாயத்தை நீங்கள் கண்ணினாற் கண்டறிந்தும் உங்களுடைய தேன் போன்ற இனிய சொற்கள் நிறைந்தவாயினால் நட்சத்திரங்கள் அடர்ந்திருக்கின்ற வானமென்று கூசாமற் பிரத்தியட்ச விரோதஞ் சொல்லுகின்றீர்களே, இஃது என்னை காரணமோ?" என்னும் கருத்தை யுள்ளமைத்துப் பாடிய,

> "செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
> கொப்புளங் கொண்ட குளிர்வானை—எப்பொழுதும்
> மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
> தேன்பொதிந்த வாயாற் றெரிந்து."

என்ற பாடலைச் சொல்லக்கேட்டு, ஒட்டக்கூத்தன் "நீர் நட்சத்திரங்கள் அடர்ந்திருக்கின்ற ஆகாயத்தைத் திங்கட்சுடர் பட்டுக் கொப்புளங்கொண்ட குளிர்வானென்றது அதிசயிக்கத் தக்கதுதான்; கொப்புளித்தால் அக்கொப்புளித்த இடத்திலிருந்து சீயாவது சிலைநீராவது வடியாதே." என்று குஜோத்தியமாய்க் கேட்க, புகழேந்தியானவர் அற்றப்பாட்டுக் கெதிர்ப்பாட்டாக, "சீ வடியவில்லை, சிலைநீர்வடிகின்றது, அது இரவில் வானத்தில் நின்று பெய்யும் பனிதான்" என்றார். பின்னும் அவன் சிற்சில சந்தர்ப்பங்களில் வீண்குற்றஞ் சொல்லி ஆட்சேபித்துவர, இவர் அப்போதப்போது

அதற்குத் தக்க சமாதானஞ் சொல்லி அவன் நாவை அடக்கிவருகையில், இவர்க்கே "இவனென்ன நமக்குப் பொல்லாத சனியனா யேற்பட்டு நம்மை யெப்பொழுதும் கைவழித்த மண்போல் எளிதாயெண்ணி நம்முடைய பாடலையும் அலக்ஷியம் பண்ணுகிறான்" என்று அவன்மேல் அதிக வெறுப்புப்பிறந்ததினால், "இவன் செத்தாலும் சள்ளையற்றிருக்கலாம்" என்றும், "பாபீ சதாயுஸ்" என்பதனால் "இந்த மாபாவிக்கும் மரணம்வருமா? வராதே" என்றும், தன்னைக் கொல்ல வந்த பசுவையும் தான்கொல்வது தர்மம்" என்பதனால், இவனை நாமே முடித்துவிட்டாலும் தோஷமில்லை' என்றும் தமக்குள்ளே யோசித்துக் கிருபைக்கடலாகிய தாம்சிவ காருண்ணியத்தையும் கைவிட்டுக் கொலைசெய்வதற்குத் துணிந்து காலம்பார்த்திருந்து, ஒருநாள் ராத்திரி ஒட்டக்கூத்தனுடைய படுக்கைவீட்டில் ஒருவர்க்குந் தெரியாமல் வந்து ஒளித்திருந்தார். அப்பொழுது ஒட்டக்கூத்தன் "நாம் ஆயுசுவரையில் தலைகீழாகத் தவஞ்செய்தாலும் நமக்குப் புகழேந்திப்போலப் பாடும் சக்திவரமாட்டாது; நம்முடைய வல்லமை இவ்வளவிருந்தும் சும்மா அவரை வாய்மிரட்டு மிரட்டிவருகிறோம்; இதனால் நமக்கென்ன மகிமை உண்டாகப் போகிறது?" என்று சலிப்புற்று, அந்த விசனத்தினால் ஊக்கமிழந்து உறக்கம்பிடித்துப் போஜனம் பண்ணாமற் கட்டிலின்மேற் படுத்துக்கொண்டிருந்தான். அத்தருணத்தில் அவன் மனைவி அவனைச் சாப்பிட எழுந்திருக்கச் சொல்லி எழுப்பினாள். அவன் "எனக் கிப்பொழுது சாப்பாடு வேண்டாம்" என்றான்; அவள் "சாதம் சாப்பிடாமற் போனாற் போகிறது, கொஞ்சம் பாலும் சர்க்கரையுமாவது கொண்டுவருகிறேன் சாப்பிடுங்கள்" என்றாள். அதற்கவன் "போடி பைத்தியகாரி நீ பாலல்ல, பழமல்ல, தேனல்ல, சீனியல்ல, அந்தப் புகழேந்திப்பாடிய நளவெண்பாவின்,

"கொங்கையிள நீராற் குளிர்ந்தவிளஞ் சொற்கரும்பாற்
பொங்கு சுழியாம் புனற்றடத்தில்—மங்கைதன்
கொய்தாம வாசக் குழனிழற்கீ ழாறேனோ
வெய்தாமக் காம விடாய்.

எனவும்,

இற்றது நெஞ்ச மெழுந்த திருங்காதல்
அற்றது மான மழிந்தது நாண் — மற்றினியுன்
வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான் வெங்காமத்
தீயுடைய நெஞ்சுடையான் றேர்ந்து.

எனவும்,

காதலியைக் காரிருளிற் கானகத்திற் கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ — நாதம்
அளிக்கின்ற வாழிவா யாங்கலவ னோடி
ஒளிக்கின்ற தென்றே னுரை."

எனவும், மற்றும் பலவகையாகவுஞ் சொல்லப்படும் கவிகளில் நாலைந்தைப் பிழிந்துதான் வார்த்தாலும் நான் சாப்பிடமாட்டேன்" என்றான்.

அந்தச்சொல்லைப் புகழேந்தி கேட்டு "இஃதென்ன புதுமை? இவன் சுபாவமே "உண்ணாவென்றாற் குத்தவருகிறது; இவனுக்கும் நமக்கும் எப்பொழுதும் வழுபொருத்தம்; நம்முடைய பாடலோ இவன் செவிக்கு நாராசம்போலிருக்கிறது; 'கன்னனுக்குங் குயவனுக்குஞ் சென்மப்பகை' என்பதுபோல நாளதுவரையில் நமக்கிவன் ஜென்மப்பகையாளியாயேற்பட்டு நாம்பாடிய நளவெண்பாவின்மேல் நிர்த்தாட்சிணியமாய்ப் பலபெயரும் அறியப் பகிரங்கமாகக் குற்றங் கூறிவந்து, இப்பொழுது அந்தரங்கத்தில் அதை வியந்து சிறப்பிக்கின்றானே; இது யதார்த்தமாயிருக்குமா? நாமிவ்விடத்தில் வந்து ஒளித்திருக்கிற அரவம் தெரிந்து நம்மைப் பரிகாசந்தான் பண்ணுகிறானோ!" என்று சந்தேகித்துக்கொண்டிருக்குமளவில், ஒட்டக்கூத்தன் பெண்சாதி மறுபடிவந்து அவனை "இராப்பட்டினி யிருப்பானேன்? உடம்பு சூடுகொண்டு போகாதோ? நாளைக்கும் விரததினமாயிருக்கிறதே; அதிகமாக வேண்டியதில்லை, ஏதாவது உங்களுக்கு இஷ்டமாயிருக்கிற சிற்றுண்டியில் ஒரு கொட்டைப் பாக்களவானாலும் பட்சிக்கலாகாதோ? எழுந்திருங்கள்" என்றாள். அதற்கு மவன் முன்சொன்னபடியே சொல்லி "புகமுடியுமளவா மழைபெய்தாலும் ஓட்டாங் கிளிஞ்சில்

கரையுமா" அடி நீ என்னசொன்னாலும் எனக்குச் சமாதானமாயிருக்கவில்லை, ஏன் என்னைத் தொந்தரவு செய்கிறாய்?" என்றான்; அதைப் புகழேந்திப் புலவர் செவிகுளிரக்கேட்டு, "இவன் சொல்லுகிறது அபத்தமல்ல, மெய்தான் நம்முடைய பாடலை வாயினாலேமாத்திரம் அவமதிப்பாய்ப் பேசினதேயொழிய, மனதிலே அப்படி நினைக்கவில்லை; சிறப்பாகவே மதித்துக்கொண்டிருக்கிறான்; இது தெரியாமல் நாம் அநியாயமாய் இவன்தலைமேலே கல்லைப்போட்டுக் கொல்ல நினைத்துப் பழிக்கும் பாவத்திற்கும் ஆளாக யத்தனித்தோமே; அப்படியே சம்பவித்தால், ஹரி ஹரி! இந்தத் தீவினையை எந்தக்காலத்தில் தொலைக்கப்போகிறோம்? அந்தமட்டில் இவனுடைய மனைவி சர்வோத்தமியாகையால் இவனும் மரணத்திற்குத் தப்பினான்; அவளும் வைதவியத்திற்குத் தப்பினாள். அந்த மகராசி இவனைப் போஜனம்பண்ணச்சொல்லி எழுப்பினதனால் நாமும் கொலைபாதகத்தோடு ராஜதண்டனைக்குத் தப்பினோம், பகை சாதிக்கவேண்டுமென்னும் எண்ணம் இவனுக்குள் இருந்தாலும் பெரிதன்று; சம்பிரதாய வழுவின்றிச் செவ்வையாய்க் கற்றுணர்ந்தவனாகையாற் புறத்திலே வியக்காவிடினும் அகத்திலே உள்ளூர நமது கல்வியின் அருமைபெருமைகளைத் தெரிந்து வியந்துகொண்டிருக்கிறான்; 'மனத்துக்கண்மாசில னாதலனைத்தற னாகுல நீரபிற' என்றபடி இவன் மனதில் தர்மநிலைத்திருக்கிறது" என்று மகிழ்ச்சிகூர்ந்து ஓடிவந்து ஒட்டக்கூத்தனை மார்பிறுகக் கட்டி யணைத்துப் புளகாங்கமானார்.

அவன் புகழேந்திப்புலவரைப் பார்த்து ஆச்சரியப்பட்டு 'இந்நேரத்தில் இவ்விடத்திற்கு நீர் வந்தகாரியம் என்ன?" என, இவர் "உமது தலைமேற் கல்லைப்போட்டு உம்மைக் கொல்லவந்தேன்" என்றுசொல்லி, அந்தக்கல்லையும் எடுத்துவந்து அவனுக்கு முன்பாக வைத்தார். அதுகண்டு அவன் 'எதுக்கு என்னைக் கொல்லவேண்டியது'? என்ன, இவர் நீர் எப்போதும் என் கவியைக்குறித்துக் குற்றஞ்சொல்லிக் கொண்டிருப்பதுபற்றி எனக்குக் கோபம் ஜெனித்ததை

யால் உம்மைக்கொல்லத் துணிந்தேன்?" என்ன, ஒட்டக்கூத்தன் "அப்படியானால் கொல்லாமல் ஓடிவந்து தழுவிக்கொண்டு சிரித்துச் சந்தோஷிப்பது என்ன நிமித்தத்தால்?" என, புகழேந்தியானவர் "முன்பு என்னிடத்துச் சற்றும் தயைதாட்சிணியமில்லாமல் என்னை அருஞ்சிறையில் வைத்ததையும் நான் யோசிக்கவில்லை; நீர் சொல்லும் சொற்கள் என்மனதைக் கொள்ளிகொண்டு சுடுவதுபோலச் சுட்டதனால் எனக்குச் சகிக்கக்கூடாமல் வெறுப்புத்தோன்றி அநியாயமாய்க் கொலைசெய்ய எத்தனித்தேன்; இப்பொழுது உமது கருத்தை நோக்குமிடத்தில் அந்த அப்படிப்பட்டதன்றென்று ஆடியிற் கண்டபொருள்போல நன்றாய் விளங்கினதினால் உம்மைக் கொல்லக் கையெழவில்லை, மனதும் துணியவில்லை" என்றார். அவன் தான் தன்மனைவியுடனே சொன்னதை மறந்து, இவரை "என்கருத்து உமக்கு எப்படித் தெரியவந்தது" என, இவர் அவன்மனைவி அவனைப் போஜனத்திற்கு எழுப்பினதையும், அவன் அதற்குச் சொன்ன உத்தரத்தையும், அதுகேட்டுத் தமக்கு இரக்கம் பிறந்ததையும் தாம் கொல்லாது விட்டதையும், ஆதியந்தமாகச் சொல்லிவிட்டுச் செலவு பெற்றுக்கொண்டு தமதிருப்பிடம் போய்ச்சேர்ந்தார்.

மறுநாள் இச்செய்தியைக் குலோத்துங்க சோழராஜன் அறிந்து ஒட்டக்கூத்தனையும் புகழேந்தியையும் அழைத்து "நீங்கள் சாமானியர்களல்லவோ; தமிழில் அகத்தியர், தொல்காப்பியர், முதலானவர்களாலும் உண்டாக்கப்பட்டுத் தொன்றுதொட்டு வழங்கிவரும் அரிய பெரிய நூல்களாகிய இலக்கணங்களையும், பாரகாவியமாகிய பாரத ராமாயண முதலிய இலக்கியங்களையும் வழுவறக் கற்றும் கேட்டும் ஆராய்ந்திருக்கின்ற வித்வசிரேஷ்டர்களாகையால் நீங்கள் அறியாததொன்றுண்டோ? அதனால் உங்களுக்கு நான் சொல்லத்தக்கது என்னவிருக்கின்றது? ஆயினும் குற்றமற்ற புராதனமாகிய நூற்கேள்வியையும் கூரிய அறிவினையுமுடைய புலவர் சிரோமணிகள் பலர்கூடி ஒருவர்க்கொருவர் விரோதமின்றித் தாம்தாம் பயின்ற சாஸ்திரங்க

ளில் நுட்பமாகிய விஷயங்களை எடுத்து உத்தேச லட்சண பரிட்சைகளால் வாதித்து அவற்றின் சாரத்தைக் கண்டுணர்ந்து சந்தோஷிக்கின்ற இன்பத்தைப் பார்க்கினும், வானத்தின்கண் தேவர்கள் வாசஞ்செய்யும் சுவர்க்கத்திற்சென்று அங்கனுபவிக்கும் இன்பமானது என்ன விசேஷம்? அப்படி விசேஷப்பட்டதா யிருக்குமானால் அதை நாம் சுருதி யுக்தி அநுபவங்களாற் காண்போமென்னுங் கருத்தை அமைத்து, நாலடி நானூற்றில் முனிவர்க ளருளிச்செய்த,

"தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ருறைவார் பதி."

என்ற செய்யுளின் தாற்பரியமென்ன நீங்க ளறியாததோ? அவ்வண்ணம் ஒருவரையொருவர் நேசித்து வித்யாவிஷயத்தைக் குறித்துச் சம்பாஷித்து ஆநந்திப்பதை விட்டு விபரீதமாய்ப் பகைக்கலாமா?

"பகையென்னும் பண்பி லதனை யொருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று."

என்றுஞ் சொல்லப் படுகின்றதே; மேலும் உங்களைப்போன்றவர்கள் கோபத்தைப் பாராட்டலாமா? கோபஞ் சண்டாளமல்லவா? கோபம் வந்து கிணற்றிலே விழுந்தாற் சந்தோஷம் வந்து எழுந்திருக்கலாகுமா? கூடாதே; ஆதலால், இதுவரையில் நடந்ததெல்லாம் போகட்டும்; இன்றுமுதல் என்மேல் தயைசெய்து நீங்கள் ஒருவர்க்கொருவர் விரோதமில்லாமல் ஒரு தாய் வயிற்றிற் பிறந்த சகோதரரைப்போல அந்நியோந்நியமாய் நேசித்து மனதொத்திருப்பதே அழகாம்" என்று சொல்லி இருவரையும் சமாதானப்படுத்திப் பின்பு அவர்களை நோக்கி, "நீங்கள் இந்நாட்டிலுள்ள திருவையாற்றை அடுத்த திருநெய்த்தானமென்னும் ஸ்தலத்தில் எழுந்தருளியிருக்கும் நெய்யாடி யீசரைக்குறித்து "நெய்த்தானத்தானைச் சேவித்தே" என்பது மகுடமாய் வரும்படி சந்தவிருத்தமாக ஆளுக்கு ஒவ்வொரு பாட்டுப்பாடுங்கள்" என்றான்.

ஒட்டக்கூத்தன் "நல்லது" என்று, விக்கல்கண்டு அஞ்சி நடுங்கி உடலைவிட்டு உயிரானது அப்புறப்பட்டுப் போய்விட்டால், அதற்கு முன்பு நக்முஞ் சதையும் போலப் பிரிவில்லாமற் பரிவுற்றிருந்த தாய் தந்தை பெண்டுபிள்ளை முதலிய சுற்றத்தாரெல்லாம் அருமையாகச் சீராட்டிப் பாராட்டிப் போற்றிவளர்த்த உடம்பைச் சுடலைக்குக்கொண்டுபோய்க் காஷ்டத்திலேற்றிச் சாம்பராக்கிவிட்டு அங்கொருவருந் தங்காமல் அந்தக்ஷணமே திரும்பித் தாமிருந்த ஊருக்குள் வந்துசேர்ந்து "செத்தவன் வாயிலே மண், இருந்தவன் வாயிலே சோறு" என்பதற்குச் சரியாய் உண்டுடுத்துச் சுகித்திருக்கின்றார்கள்; இப்படிப்பட்ட ஜனஸ்திதியி லிருக்கின்ற இக்காயத்தின்கண் இச்சைவைத்து இதைப்போஷிக்கும் நிமித்தம் பொருளைத்தேடிவந்து அறஞ்செய்யாமல் வீட்டிற் புதைத்து வைக்கின்றவர்களே! சைவசித்தாந்தப்படி ஆத்மாக்களின் இளைப்பொழித்தற் பொருட்டுச் சங்காரகிருத்தியஞ் செய்து சகல சராசரங்களும் மாய்ந்தொடுங்கிய மசானத்தின்கண் அஸ்திமாலை அசைந்தாடவும், பேய்கள் கூடியாடவும், ஜடாமகுடத்தி லிருக்கும் கங்கை அலையெறிந் தாடவும், வலது கையிலேந்திய மழுவானது சுவாலித்தாடவும், காதிலணிந்த சர்ப்பக்குழைகள் நெகிழ்ந்தாடவும் ஆடுகின்ற திருநெய்த் தானத்துப் பரமசிவனைத் தரிசித்து வணங்கி, நெறிவழாது நிற்கக்கடவீர்கள்" என்ற கருத்தை அமைத்து,

"விக்காவுக் * கா வித்தா விப்போய் விட்டானட்டார் சுட்டேர்
புக்கார், இக்காயத்தா சைப்பாடுற்றே யிற்றேடிப்போய் வைப்பீர்நிற்
பீர், அக்காடப்பேய் தொக்காடச்சூ ழப்பாடத்தி வெப்பாடப்பூண்,
நெக்காடக்கா னத்தாடப்போ நெய்த்தானத்தா னைச்சேவித்தே."

என்பதாக ஒருபாடற் பாடினார்.

புகழேந்திப்புலவர், "அகங்கார மமகாரங்களை மேற்கொண்டு பாசத்திரயமாகிய போராட்டத்தில் அகப்பட்டு ஒருவிதத்திலும் மரணத்தைக்கடக்கும் உபாயத்தைக் காணு

* ஆவித்தாவி என்றது சந்தத்தின்பொருட்டு வல்லொற்று விரிக்கப்பட்டது.

மல் யமனுக் கிரையாகும்படி இருப்பவர்களே! பிறகாகட்டுமென்று நினைத்து உங்கள் வாழ்நாளில் ஒரு கணப்பொழுதாயினும் வீணாகக் கழியும்படி வறிதே யிராமல் மூர்த்தி விரைந்து, மந்திரதந்திர வழுவாராமற் பூசைபுரிந்து பிரதட்சிணம் பண்ணி, கடல்போலும் வற்றாத நெடிய நீரோடைகளிலுள்ள பாளைமீன்கள் விசைகொண்டெழும்பி வானில் மேகமண்டலத்தை அளாவியிருக்கின்ற கமுக மரத்தில் தாவி யேறிப்போய்ப் பாக்குக்குலைகளை உதிர்த்து, அங்கிருந்து திரும்பி வயலில் விளைந்த நெல்லின் அடியில் விழுந்து துள்ளிக் குடித்து அந் நெற்கதிர்களைச் சிதறி, அவ்விடத்தைவிட்டெழுந்து அதனருகில் ஆலையாடிக் காய்ச்சப்படும் கரும்பின் இரசப்பாகிற்போய் உழவர்கள் வாய்க்கினிய உணவாம்படி விழுகின்ற வளப்பமிகுந்த திருநெய்த் தானத்தின் நெய்யாடிபிரானை நெஞ்சுற நினைந்து தலையுறவணங்கிப் பக்திசோராமல் நிற்கக் கடவீர்கள்" என்னும் பொருளை அடக்கி,

"தற்கோலிப்பூ சற்பாசத்தே தப்பாமற்சா கைக்கேகிற்பீ
முற்கோலிக்கோ லிப்பூசித்தே முட்டாமற்சே வித்தேகிற்பீர் [ய்
வற்றாநெட்டோ டைப்பாளைச்சேண் மைப்பூகத்தே றித்தாவிப்போ
நெற்றூறுற்றா லைப்பாகிற்சேர் நெய்த்தானத்தானைத் தியானித்தே."

என்றொரு பாட்டுப் பாடினார். அவ்விரண்டும் சொல் பொருள் கற்பனை கருத்து ஒன்றற்கொன்று உயர்வுதாழ்வில்லாமற் சிறந்திருக்கக்கண்டு சோழராஜன் மகிழ்ச்சிகூர்ந்து அவ்விருவர்க்கும் சம்மானம் பண்ணினான்.

பிறகு ஒருநாள் சோழமகாராசன் "முன்பு நாம் சிவபரமாக இரண்டு பாடற் பாடுவித்தோமே இப்பொழுது விஷ்ணுபரமாகவும் பாடுவிக்கவேண்டும்" என்று நினைத்து, ஒட்டக் கூத்தனையும் புகழேந்தியையும் நோக்கித் "திருக்குறுங்குடியில் நம்பியென்று நாமஞ் சாற்றிக்கொண்டெழுந்தருளியிருக்கும் பெருமாள்பேரில் இன்னாரிடம் இன்னதென வல்லோசையில் தலைக்கு ஒவ்வொருபாட்டு பாடுங்கள்" என்றான். என்றவுடனே ஒட்டக்கூத்தன் "ஐராவதம் புண்டரீகம் வாமனம் குமுதம் அஞ்சனம் புஷ்பதந்தம் சார்

வபௌமம் சுப்பிரதீபம் என்னும் பெயரினையுடைய அஷ்டதிக் கஜங்களும் திடுக்குற்றுத் துக்கித்து அலறி நிலைபெயர்ந்தோடக் கறுத்தகடலில் தைத்தருளும்படி பாணப்பிரயோகஞ் செய்த இராமபிரானாக அவதரித்த திருமாலுக்கு வாசஸ்தானமாவது, பருத்த மதுரமாகிய கரும்புமுதிர்ந்து கணு வெடித்து அதிலிருந்து முத்துக்கெறித்துக் சிறந்தவண்ணமா யிருக்கின்ற கொக்கின் வாயில் வந்துவிழ, அம்முத்தை அதுவிழுங்கி அடிக்கடி விக்கிக் கக்காநின்ற சோலைசூழ்ந்த திருக்குறுங்குடியென்ற திவ்விய தேசம்" என்னும்பொருளை அமைத்து,

"திக்குளெட் டெக்கயந் துக்கமுற் றுத்திடுக் கிட்டலற
மைக்கடற் குட்சரந் தைக்கவிட் டோர்க்கிட மாமதுரம்
இக்குமுற் றிக்கணுச் சற்றுவிட் டுத்தெறித் திட்டமுத்தைக்
கொக்குமொக்கிக்கக்கி விக்குமச் சோலைக் குறுங்குடியே."

என்ற செய்யுளையும், புகழேந்திப்புலவர், "மற்ற மந்திரங்கள் போலன்றிப் பிரணவசகிதமாய் ஏகாட்சரி திரியாட்சரி பஞ்சாட்சரி முதலியவைகளுமா யிருக்கின்ற அஷ்டாட்சரி யென்னும் மகிமைதங்கிய மூலமந்திரத்தை ஆசாரியன் அநுக்கிரகிக்கப் பெற்று, அதைத் தத்தங் கருத்திற் பதித்து அநவரதமும் நியமந்தவறாமல் அநுசந்தித்துத் தொழுது ஸ்தோத்திரஞ் செய்கின்ற பெரியோர்களுக்கு ஈடுமெடுப்பு மில்லாத பெருஞ்சிறப் புண்டாகத் தன் அழகிய திருவடியைப் பிரசாதிக்கின்ற வட்டமாகிய நெடிய சேஷசயனத்தில் யோகநித்திரைசெய்யும் நம்பி யெம்பெருமானுக்கு உறைவிட மாவது, சூற்கொண்ட சங்கினங்கள் வயலிலுள்ள தாமரைப் பொகுட்டில் தத்தித் தவழ்ந்தேறி முத்துக்களைப் பெறுகின்ற வளப்பமுடைய திருக்குறுங் குடியாகிய திவ்விய தேசமாம்" என்னும் கருத்தை யடக்கி,

"எட்டெழுத் தைக்கருத் திற்குறித் திட்டுநித் தம்பரவும்
சிட்டர்கட் குத்திருப் பொற்பதத் தைச்சிறக் கத்தரும
வட்டநெட் டைப்பணி மெத்தையத் தர்க்கிடம் வாரிசப்பொ
குட்டினத் தக்குலந் தத்திமுத் தீனுங் குறுங்குடியே"

என்றபாடலையும் பாடக்கேட்டு அரசன் இருவரும் பாண்டித்தியத்தில் உயர்வு தாழ்வின்றிச் சமானஸ்தர்களாயிருக்கிறார்களென்று சந்தோஷப்பட்டான்.

புகழேந்திப்புலவர் நளவெண்பா பாடியது முற்றிற்று.

---

## ஔவையார் சரித்திரம்.

தென்னாட்டிலே பாண்டியர்கள் செங்கோல் நடாத்திய மதுரைமா நகரிலே கடைச்சங்கமிருந்த காலத்திலே ஔவையார் என்னும் மாது சிரோமணி சோழதேசத்திலே உறையூர் என்னும் பட்டணத்தின் ஒரு சாவடியிலே ஆதியென்பவளுக்கும் பகவன் என்னும் ஓர் அந்தணனுக்கும் ஜேஷ்ட புத்திரியாகப் பிறந்தனர். அப்போது ஆதிபகவன் என்னும் தாய் தந்தையருக்குள் ஏற்பட்டிருந்த உறுதிமொழிப்படி பிறந்த குழந்தையைவிட்டு நீங்க மனமொழாது தாய் வருந்தியபோது அக்குழந்தை சொல்லியதாவது:—

"இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்னாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ."

தாய் வருத்தம் நீங்கி குழந்தையைவிட்டேகினள். பின்பு அடுத்த சேரியிலிருந்த பாணர்கள் அக்குழந்தையையெடுத்து வளர்க்க வளர்ந்து இயல்பாகவே சகல கலைகளையும் அறிந்து தமிழ்நாட்டிலே கல்வியிற் சிறந்த பெண்களுள் முதன்மை பெற்றிருந்தனர்.

ஔவையார் * ஜீவந்தரா யிருந்தகாலத்திற் கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்திப்புலவர் ஆகிய வித்வசிரோமணிகளிருந்தனர். அக்காலத்திற் கம்பர் ஒரு பாட்டிற்கு ஆயிரம்

---

* கம்பர்காலத்திருந்த ஔவையார் வேறென்றும், சங்கத்துக்காலத்திருந்த ஔவையார் வேறென்றுஞ் சொல்வர் நூல்களை நுண்ணிதி னாராய்ந்தோர்.—பதிப்பாசிரியர்.

பொன் பெற்றாலன்றி ஒருவர்மீதும் பாடுவதில்லை. ஔவையோ பசிக்கு ஒருகைக்கூழ் பெற்றால் ஒருபாடல் பாடுவாள். இதனால் ஔவைக்கு கூழுக்குப்பாடி என ஒருபெயர் வழங்கும்.

ஒருகாற் சோழநாட்டிலே சிலம்பி என்னு மொருதாசி கம்பருடைய வாக்கினாலே பாடல்பெற்றவர்கள் அதிக சம்பத் தடைகின்றனர் எனக்கேள்வியுற்று, கம்பரைநாடி 'என்மேல் ஒருபாட்டுப் பாடவேண்டும்' என்று வேண்டினள். அதற்குக் கம்பர் "ஆயிரம்பொன் தந்தாலொழிய நாம் கவி பாடுவதில்லை" என்று மறுத்துச் சொல்லினர். அதைக்கேட்டுத் தாசி தான் வருந்தித் தேடிவைத்திருந்த ஆபரணம் முதலிய சகல ஆஸ்திகளையும் விற்றுப் பொன்னாக்கி, அஃது ஐந்நூறு பொன்னாகக்கண்டு, அதனைக்கொண்டுபோய்க் கம்பர் கையிற் கொடுத்து, அவரை நோக்கி "ஐயா! புலவர் பெருமானே! இந்த ஐந்நூறு பொன்னையும் பெற்றுக்கொண்டு ஏழைமீது அன்புகூர்ந்து ஒரு பாட்டுப்பாடித் தரும்படி வேண்டுகின்றேன்" என்றனள். கம்பர் "நான் பாடுவது ஆயிரம் பொன்னுக்கு ஒரு பாட்டாகையால், நீ தந்த ஐந்நூறு பொன்னுக்கு அரைப்பாட்டுத்தான் பாடுவேன்" என்று சொல்லி,

"தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவ துஞ்சோழ மண்டலமே."

என அரைப்பாட்டுப்பாடி அவள் வீட்டுத் தெருவாயிலின் மேற்சுவரி லெழுதிவிட்டுப் போயினர். அது கண்டு தாசி, ஐயோ தெய்வமே! புதுவெள்ளம் வந்து பழைய வெள்ளத்தை யடித்துக்கொண்டு போனதுபோலவும், வயிற்றுப் பிள்ளையை நம்பிக் கைப்பிள்ளையை ஆற்றில் நழுவவிட்டது போலவும், நான் கையிலிருந்த காசையெல்லாம் போக்கி வறுமையை வாங்கிக்கொண்டேனே" என்று பரிதபித்து, கட்டத்துணிக்கும் உண்ணச் சோற்றுக்குமில்லாமல் துயருழந் திருந்தனள். அப்போது ஒரு நாள் ஔவையார் அதிக பசியால் வருந்தி அத்தாசியின் வீட்டுத்தெருவே வரும்

போது தாசியின் ஊழ்கூட்டுவித்தலால் அவள் வீட்டுத் தெருத்திண்ணையின்மேல் உட்கார்ந்து அங்கிருந்த தாசியை நோக்கி "மெத்த பசியாயிருக்கிறேன், கொஞ்சங் கூழுண்டு கொடுப்பாயா?" என்றனர். அதுகேட்டுத் தாசி சரியென்று உள்ளே நுழைந்து, தான் குடிப்பதற்காகக் கரைத்துவைத்திருந்த கூழைக்கொண்டுவந்து வார்த்து, ஔவைக்கு இளைப்புத் தீரும்படி யுபசரித்தாள். ஔவையார் கஞ்சி குடித்துக் களைதீர்ந்து உட்கார்ந்திருக்கையில், சுவரிலே யெழுதியிருந்த இரண்டடியை வாசித்துப்பார்த்து அருகேயிருந்த அத்தாசியை நோக்கி "அம்மே! ஈதென்னை?" எனத் தாசி அதன் விருத்தாந்தத்தைச் சொல்லக்கேட்டு ஔவையார் உடனே,

"பெண்ணாவாள்

"அம்பொற் சிலம்பி யரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு."

என அதனைத் தொடர்ந்தே மற்ற இரண்டடியையு மெழுதி அவ்வெண்பாவை முடித்தருளினார்.

இச்செய்யுள் எழுதி முடித்தவுடனே தாசி காலிற் செம்பொற் சிலம்பணியும்படியான செல்வவதி யாயினள்.

தான் ஐந்நூறு பொன் பெற்றுப் பாடி யேழையாகச் செய்த தாசியை, ஔவை கூழமுது பெற்றுப் பாடித்திரண்ட ஐஸ்வரிய முடையவளாகச் செய்தாள் எனக் கேள்வியுற்ற கம்பர் ஔவைமேல் அசூயைகொண்டு சிற்சில சந்தர்ப்பங்களில் வாதங்கள் செய்தனர்.

ஒருகாலத்தில் ஔவையைக் கம்பர் "அடீ" என்று சொல்ல விரும்பி ஆரைக்கீரைக்கும் ஔவைக்குஞ் சிலேடையாக,

"ஒரு காலடீ நாலிலைப் பந்தலடீ"

என்று சொல்லிப் பொருள் கேட்டபோது, ஔவையார் உத்தரவாக,

"எட்டேகா லட்சணமே யெமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே - முட்டமேற்

> கூரையில்லா வீடே குலராமன் றூதுவனே
> யாரையடா சொன்னா யடா."

என்றுபாடிக் கம்பர் கேட்கமுறும்படி செய்தனர். ஒருகாற் சோழமகாராஜன் தன் சபையில் இராமாயணத்திற் சில பாடல்களைக் கம்பர் பிரசங்கிக்கக்கேட்டு, சந்தோஷமடைந்தவனாய் "பாரகாவியம் பாடுவதிற் கம்பருக்கு நிகராவார் ஒருவருமில்லை" என்றும், "அவரை யார் வெல்ல வல்லவர்?" என்றுஞ் சொல்லி, அவர் பாடலை வியந்து பேசினன். அப்போது அச்சபையில் வந்திருந்த ஔவையார் இதனைப் பொறாராகி, கம்பருக்கு இயல்பாகவே அக்கருத்துண்டு என்றறிந்தவராதலால் அவரை எவ்விதத்திலாவது கொஞ்சம் இறக்கவேண்டும் என்கிற எண்ணத்தோடும் அடியில் வரும் பாடல்களைப் பாடினார்.

கம்பரைப்போல் பாரகாவியம் பாடுகிறவரில்லை என்றதற்கு,

> "வான்குருவி யின்கூடு வல்லவர்க்குத் தொல்கறையான்
> தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால் - யாம்பெரிதும்
> வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
> எல்லார்க்கு மொவ்வொன் றெளிது."

> "சித்திரமுங் கைப்பழக்கஞ் செந்தமிழு நாப்பழக்கம்
> வைத்ததொரு கல்வி மனப்பழக்கம் - நித்தம்
> நடையு நடைப்பழக்க நட்புந் தயையும்
> கொடையும் பிறவிக் குணம்."

கம்பரை யார் வெல்வார் என்றதற்கு,

> "காணாமல் வேணதெல்லாங் கத்தலாங் கற்றோர்முன்
> கோணாமல் வாய்திறக்கக் கூடாதே - நாணாமற்
> பேசுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்காற்
> கீச்சுக்கீச் சென்னுங் கிளி."

கம்பர் பாட்டை வியந்ததற்கு,

> "விரக ரிருவர் புகழ்ந்திடவே வேண்டும்
> விரனிறைய மோதிரங்கள் வேண்டும் - அரையதனிற்
> பஞ்சேனும் பட்டேனும் வேண்டு மவர்கவிதை
> நஞ்சேனும் வேம்பேனு நன்று."

இப்பாடலைக்கேட்டுச் சோழன் அதிசயித்து ஔவை யை இன்னாரென் றறியாதவனாய் "அம்மே நீ எந்தவூர்?" என்ன, ஔவையார்,

"காலெழுந்தே னெழுந்தேன் கடுகி வழிநடந்தேன்
யான்வந்த தூர மெளிதன்று - கூனன்
கருந்தேனுக் கண்ணாந்த காவிரிசூழ் நாடா
இருந்தேனுக் கெங்கே யிடம்."

என்று ஒரு பாட்டுப் பாடினர். அப்போது ஔவை கையி லிருந்த ஒரு சிறு முட்டையைப் பார்த்து "அம்முட்டை என்னை?" என, ஔவையார்,

"கூழைப் பலாத்தழைக்கப் பாடக் குறமகளும்
மூழைக் குழக்குத் தினைதந்தாள் - சோழாகேள்
உப்புக்கும் பாடிப் புளிக்கு மொருகவிதை
ஒப்பிக்கு மென்ற னுளம்."

என்று சொல்லி,

"நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினு நூற்சீலை
நாற்றிங்க ளாளுக்கு நைந்துவிடும் - மாற்றலரைப்
பொன்றப் பொருதடக்கைப் போர்வே லகளங்கா
என்றுங் கிழியாதென் பாட்டு."

என்றும் தம்பாடலைச் சிறப்பித்துப் பாடினார். அது கேட்டுச் சோழன் "மனிதர்களுக்குள் அழகாவது என்னை?" என்றும் "பொருளை எவ்வாறு செலவிடவேண்டும்" என்றும் கேட்ட கேள்விகளுக்கு விடைகளாக,

"சுரதந் தனிலிளைத்த தோகை சுகிர்த
விரதந் தனிலிளைத்த மேனி - நிரதம்
கொடுத்திளைத்த தாதா கொடுஞ்சமரிற் பட்ட
வடுத்தொளைத்த கல்லபிரா மம்."

என்றும்,

"நம்ப னடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
* பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம் - வம்புக்காம்
கொள்ளைக்காங் கள்ளுக்காங் கோவுக்காஞ் சாவுக்காம்
கள்ளர்க்காந் தீக்காகும் காண்."

* பம்பு - குனியம்.

என்று பாடியருளினர். இவைகளைக்கேட்டுச் சோழன் மகிழ்ந்தனன்.

உக்கிரப் பெருவழுதி என்னும் பாண்டியன் மதுரையில் அரசுசெய்து கொண்டிருக்குங் காலத்தில், திருவள்ளுவர், இடைக்காடர் * ஔவை முதலாயினாருடன் மதுரைக்குச் சென்று, தங்களை ஒப்பாருயர்ந்தா ரொருவருமில்லையென்று இறுமாப்புக்கொண்டிருந்த சங்கப்புலவரைக் கர்வபங்கஞ் செய்து, தாம்பாடிய திருக்குறளுக்குச் சிறப்புப்பாயிரம் பெறும்படி போனபோது, ஔவையார் அச்சங்கப்புலவர்களை நோக்கித் தன்னுடைய ஐந்துவிரல்களையுங் குவித்தும், மூடியும், கொஞ்சந்திறந்தும், சுட்டுவிரலொன்றை மாத்திரம் நீட்டியும், ஐந்துவிரல்களையும் அகலத்திறந்தும், இவ்வாறான சில குறிகளைக்காட்டி "இவற்றிற்குப் பொருளென்னை?" என்று வினவினர். அவர்கள் அவர் கருத்தறியாதவர்களாய்ச் சிற்றின்பவிஷயமாக,

"இவ்வளவு கண்ணுடையா ளிவ்வளவு சிற்றிடையாள்
இவ்வளவு போன்ற விளமுலையாள் – இவ்வளவா
நைந்த வுடலா னலமேவு மன்மதன்றன்
ஐந்துகணை யால்வாடி னள்."

எனவோர் வெண்பாப் பாடினர். இதுகேட்டு ஔவையார் "நீங்கள் சொல்வது சரியன்று" என்று அவர்கள் மனம்புழுங்கி வெட்கமுறும்படி,

"ஐய மிடுமி னறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவே னும்மன்ன மிட்டுண்மின் – தெய்வம்
ஒருவனே யென்று முணரவல் வீரேல்
அருவினைக ளைந்து மறும்."

என்னும் வெண்பாவால் தாம் எண்ணிய பொருளை வெளியிட்டார். ஔவையார் திருவள்ளுவநாயனாரினும் புத்திநுட்பமுள்ளவர். புருஷார்த்தங்கள் நான்கனுள் தர்மார்த்த காமமென்னும் மூன்றையும் திருவள்ளுவநாயனார் ௧௩௩0—குறள் வெண்பாக்களினாற் சொல்லியதைக் கேட்டருளி மோக்ஷத்தோடு புருஷார்த்தங்கள் நான்கையுஞ் சேர்த்து,

* இந்த ஔவையார் முதல் ஔவையாரென்ப.

"ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித் - தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு."

என்றும் வெண்பாவினால் விளக்கியருளினார்.

சங்கப்புலவர்கள் அத்திருக்குறளைச் சிறப்பித்துப் பாடியபோது அவருளொருவராகிய இடைக்காடர்,

"கடுகைத் தொளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்."

என்று பாடக்கேட்டு ஔவையார் "அப்படியன்று"

"அணுவைத் தொளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்."

என்றிருப்பதே நேர்" என்று அக்குறளைப் புகழ்ந்தனர்.

ஒருநாள் ஔவையார் வேற்றூருக்குப்போய்த் திரும்பும் மார்க்கத்திற் போதுபோனதால் இன்றைக்கு இங்கே இராவை நீத்துப்போவோமென்றுநினைத்து அவ்வூரி லிருந் தவர்களைப்பார்த்து, "ஐயா! படுத்துக்கொள்ள இங்கு இடங்கிடைக்குமோ?" என்ன, அவர்களுட் சிலர் "அம்மே! இந்தப்பட்டணத்துக்கு மேலண்டை ஒரு திருவாசற்சாவடி யிருக்கிறது, அதிற் படுக்க வேண்டியமட்டும் இடமிருக் கின்றது, ஆனால் ஒரு பிசாசு அதிலிருந்துகொண்டு படுக்க வருகின்றவர்களை யெல்லாம் அறைந்து போடுகிறது, ஆகையால் ஒருவரும் அதிலே செல்லப் பயப்படுகிறார்கள்" என்றனர். அதைக்கேட்டு ஔவையார் "பேயைப் பேயடிக் கப்போகிறதோ?" என்று சொல்லி, ஆங்கெய்திப் படுத்து நித்திரை போயினள். அந்நேரம் வெளியே போயிருந்த பொன்னுவேசம் வந்து ஔவையார் படுத்துக்கொண்டிருக் கிறதைக்கண்டு மிகவும் ஆங்காரத்துடனே சாமந்தோறும் "எற்றெற்று" என்று வந்து அறைந்துபோகிற வழக்கப்படி முதற்சாமத்தில் தம்மை அறைய வருகிறதைக்கண்டு ஔவையார் உறக்கம் நீங்கி விழித்துப்பார்த்து,

"வெண்பா விருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக் கையா லெழுதானைப் - பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளெஞ்
ஞெற்றோமற் றெற்றோமற் றெற்று."

என்று ஒரு வெண்பாப் பாடினர், அதனைக்கேட்டு அப்பேய் கல்வியறிவுடைய தாதலால் "எழுத்துவாசனை யில்லாத மூடனை இச்சித்த நம்முடைய பூர்வோத்தரத்தை யறிந்து சொன்ன இவள் தேவியே, இவளை யொன்றுஞ் செய்யக் கூடாது" என்று பயந்து அவ்விடம்விட்டு ஏகி இரண்டாஞ் சாமத்தில் மீண்டும் "எற்றெற்று" என்று வந்தது. அப்போது ஔவையார்,

"கருங்குளவி சூறைத்தூ றீச்சங் கனிபோல்
வருந்தினர்க்கொன் றீயாதான் வாழ்க்கை - அரும்பகலே
இச்சித் திருந்தபொருள் தாயத்தார் கொள்வரெஞ்
ஞெற்றோமற் றெற்றோமற் றெற்று."

என்று மற்றொரு வெண்பாப்பாடினர். அதை கேட்டவுடனே பேய் ஓடிப்போய் மூன்றாஞ் சாமத்தில் திரும்பவும் "எற்றெற்று" என்று வந்தது. அப்போது ஔவையார்,

"வான முளதான் மழையுளதான் மண்ணுலகில்
தான முளதாற் றயையுளதால் - ஆனபொழு
தெய்த்தோ மிளைத்தோமென் றேமாந் திருப்போரை
எற்றோமற் றெற்றோமற் றெற்று."

என்று மீண்டு மொரு வெண்பாப் பாடினர். இப்பாடலைக் கேட்டு அலகை யோடிப்போயிற்று. பின்பு நான்காஞ்சாமத்தில் முந்தியபடியே இரைந்துகொண்டுவர, ஔவையார்,

"எண்ணா யிரத்தாண்டு நீரிற் கிடந்தாலும்
உள்ளீரம் பற்றாக் கிடையேபோற் - பெண்ணாவா
பொற்றொடி மாதர் புணர்முலைமேற் சாராரை
எற்றோமற் றெற்றோமற் றெற்று."

என்று பாடிய வெண்பாவைக்கேட்டு அந்தப் பெண்ணாவேசம் ஒடுக்க மெய்தி ஔவையாரை வந்து வணங்க, ஔவையார் அதன்மேல் இரக்கமெய்தி அப்பேயுரு வடைந்திருந்த

இராஜபுத்திரியை நோக்கி, "உன் வரலா றென்னை" என, அப்பேய் தான் அவ்வூராள்வோன் புத்திரியாயிருந்தும் ஒரு நாள் உப்பரிகையின் மேற்றட்டிற் பந்தாடிக்கொண் டிருக்கையில், மாளிகையின் அடிவாரத்தில் வழிப்போக்கனாய் வந்து தங்கிய அழகனான இராஜகுமாரனைக் கண்டு, மோகமெய்தி, "நீர் ஊர்ச்சாவடியில் இன்றிரவில் இன்னவிடத்தில் வந்திருந்தால் நான் அங்கு வந்து உம்மைச் சேருவேன்" என்று தன் காதோலையில் நகத்தால் எழுதி அவன் முன் போட்டதும், அவன் கல்வியறிவில்லாதவனாதலால் அச்சாவடியிலிருந்த ஒரு குஷ்டரோகிக்குக் காட்ட, அந்தத் துஷ்டன் அவ்விளவலைப் பயமுறுத்தி ஊரைவிட்டோடிப்போகச் செய்து அவனுக்குக் குறித்தவிடத்தில் இவன் இருந்ததும் அதனை யறியாது அவனைத்தழுவி அசங்கியப்பட்டு உயிர் மாய்த்துக்கொண்டதும் விவரமாகச் சொல்லக்கேட்டு, "உனக்கு வேண்டியவரம் என்ன" என, அலகை, "நான் மீண்டும் மானுட ஜென்மம்பெற்று இச்சித்த புருஷனை யணைந்து பின்பு எம்பெருமான் றிருவடி சேரும்படி அனுக்கிரகஞ் செய்யவேண்டும்" என்று வேண்ட அப்போது இப்பெண்ணாவேசத்தைப் போலவே அச்சாவடியில் இராஜபுத்திரி தனக்காக உயிரிழந்தாளென்று கேள்வியுற்றுத் தானும் வந்து உயிர் நீத்த அவளாற் காதலிக்கத்த இராஜபுத்திரனும் ஆவேசமாய்க்கிடந்து நிகழ்ந்தவைகளைக் கேட்டுவந்து வணங்கு மௌவையார், அன்புகூர்ந்து பெண்ணாவேசத்தை நோக்கி, "நீ உறையூரிற் சென்று இராஜன் ஆலாத்திப் பெண்களுள் தலைமைபெற் றிருக்கும் மரகதவடிவிக்குப் பெண்ணாகப் பிறந்து, கற்பழியாமல் மேன்மைபெற்றிருந்து விரும்பிய புருடனையணைந்து சுகமடைவாயாக" என்று சொல்லிப் போக்கி, ஆணாவேசத்தை நோக்கி "நீ அவ்வூரிலே விறகு தலையனாகப் பிறந்திருந்து அவ் விராஜகுமாரத்தியை யடையக்கடவை" என்று † அருள்புரிந்து போயினர்.

† இதன் விருத்தாந்தம் மேல்வரும் தமிழறியும் பெருமான் கதையிற் காண்க.—பதிப்பாசிரியர்.

திருக்கோவலூரிலே பெண்ணை நதிக்குத் தென்கரையிற் குடிசை போட்டுக்கொண்டிருந்த பாரி என்னும் இடையன் வீட்டிற்கு ஔவையார் மழையில் நனைந்து நடுக்கிக்கொண்டுவர, அவ்வீட்டிலிருந்த கன்னிகைகளான அங்கவை, சங்கவை என்னும் பெண்கள் கண்டு ஔவைக்குத் தங்கள் கறுப்புச் சிற்றாடையைக் கொடுத்து நெருப்பிட்டுக் குளிர்காயச்செய்து முருங்கைக் கீரையை நெய்விட்டுச் சமைத்துக் கேழ்வரகு களியுடன் சாப்பிடச் செய்தனர்.

ஔவையார் உண்டு மகிழ்வெய்தி,

"வெய்தாய் நறுவிதாய் வேண்டளவுந் தின்பதாய்
நெய்தா னளாவி நிறம்பசந்த - பொய்யா
அடகென்று சொல்லி யமுதத்தை யிட்டார்
கடகஞ் செறிந்தகை யால்."

என்றுபாடி அவ்விடைப் பெண்கள் கொடுத்த நீலச் சிற்றாடையைச் சிறப்பித்து,

"பாரி பறித்த பறியும் பழையனூர்க்
காரி கொடுத்த களக்கொட்டும் - சேரமான்
வாரா யெனவழைத்த வாய்மையு மிம்மூன்றும்
நீலச்சிற் றாடைக்கு நேர்."

என்று ஒரு பாடல் பாடினர். இப்பாடலைப் பாடினவுடன் பாரி என்னும் இடையனுக்கு இராஜ செல்வத்திலும் மேம்பட்ட செல்வம் பெருகியது.

பின்பு ஔவையார் அக்கன்னிகைகளைத் தக்க வரனுக்கு மணம் புரிவிக்கவேண்டிக் கலியாணத்திற்கு வேண்டியவெல்லாஞ் சித்தஞ் செய்வித்து, விநாயகக்கடவுளை,

"ஒருகொம் பிருசெவி மும்மதத்து நால்வாய்க்
கரியுரிவைக் கங்காளன் காளாய்—பரிவுடனே
கண்ணுலவோலை கடிதெழுத வாராயேல்
தண்ணாண்மை தீர்ப்பன் சபித்து."

என்கிற வெண்பாப்பாடி வருவித்து அவர் கைப்படத்தாஞ் சொல்லியபடி அடியில் வருமாறு ஓலை எழுதுவித்துச் சேரன், சோழன், பாண்டியன் முதலான சகல அரசர்களுக்கும் அனுப்பினர்.

சேரனுக்குச்சீட்டு.

"சேரலர்கோன் சேரன் செழும்பூந் திருக்கோவல்
ஊரளவுந் தான்வருக வுட்காதே - பாரிமகள்
அங்கவையைக் கொள்ள வரசர் மனமிசைந்தார்
சங்கவையை யுங்கூடத் தான்."

சோழனுக்குச்சீட்டு.

"புகார்மன்னன் பொன்னிப் புனலுடன் சோழன்
தகாதென்று தானங்கிருந்து - நகாதே
கடிதின் வருக கடிக்கோவ லூர்க்கு
விடியப் பதினெட்டா நாள்."

பாண்டியனுக்குச்சீட்டு.

"வையைத் துறைவன் மதுரா புரித்தென்னன்
செய்யத் தகாதென்று தேப்பாதே - தையலர்க்கு
வேண்டுவன கொண்டு விடியவீ ரொன்பானாள்
ஈண்டு வருக விரைந்து."

அரசர்கள் இம்மணவோலை கண்டு கவீசுவரியான ஒளவையாரது வேண்டுகோளைத் தடுக்கவொண்ணாதெனக் கருதி, அதிக விநயத்துடனே சதுரங்க சேனைகளுஞ்சூழக் கலியாணத்திற்கு வந்தார்கள். விவாக முகூர்த்த மானவுடனே ஒளவையார் அவர்களுக்கு அதிக பிரிய வசனங்களைச் சொல்லிச் சந்தனபுஷ்ப தாம்பூலாதிகளால் தக்கபடி யுபசரித்து "அப்பன்மார்களே! நீவிரெல்லீரும் எப்படி இக்கிழவியை அருமை பெருமைப் படுத்தினீர்களோ அப்படியே இவ்வேழை இடும் அற்ப உணவை யுண்டுகளிக்கும்படி வேண்டுகிறேன்" என்று மிக்க பரிவுடன் கேட்டுக் கொண்டனர்.

அதற்கவர்கள் பரிகாசமாய் "நீர் உணவு செய்விப்பது உண்மையேயாயின் இப்போது நுங்கு தருவித்தாற் புசிப்போம்" என்றனர். அது நுங்குண்டாவதற்கு அகாலமான படியால் ஒளவையார் அவர்கள் மனோபீஷ்டத்தை நிறைவேற்றவேண்டி வெட்டி விறகா யுலர்ந்துகிடந்த சிலபனந் துண்டுகளை நோக்கி,

"திங்கட் குடையுடைச் சேரனுஞ் சோழனும் பாண்டியனும்
மங்கைக் கறுகிட வந்துநின் றார்மணப் பந்தலிலே

சங்கொக்க வெண்குருத் தீன்றுபச் சோலை சலசலத்து
நுங்குக்கண் முற்றி யடிக்கலை கறுத்து நுனிசிவந்து
பங்குக்கு மூன்று பழந்தர வேண்டும் பனந்துண்டமே."

என்று ஒரைந்தடிக் கலித்துறை பாடினர்.

உடனே கீழே விழுந்திருந்த அப்பனந்துண்டங்கள் குருத்துவிட்டு வளர்ந்து பச்சோலை சலசலவென் றசைய நுங்குக் குலைகளைத் தாங்கிக்கொண்டு நின்றன.

அதைக்கண்டு அரசர்கள் வெட்கமும் சந்தோஷமும் அடைய, அங்கு வந்திருந்த எல்லோரும் அளவிடற் கரிய ஆச்சரியத்தை யடைந்தார்கள்.

பின்பு பெண்ணை நதியைப் பால் நெய்யாகப் பெருகி வரும்படி,

"முத்தெறியும் பெண்ணை முதுநீ ரதுதவிர்ந்து
தத்திய நெய்பா றலைப்பெய்து - குத்திச்
செருமலைத்தெய் வீகன் றிருக்கோவ லூர்க்கு
வருமளவுங் கொண்டோடி வா."

என்றும், வருணனைப் பொன்மாரி பெய்யும்படி,

"கருணையா லிந்தக் கடலுலகங் காக்கும்
வருணனே மாமலையன் கோவல் - திருமணத்தில்
முன்மாரி பெய்யு முதுவா ரியைமாற்றிப்
பொன்மாரி யாகப் பொழி."

என்றும், பின்பு திருக்கோவலூரைச் சிறப்பித்துப்,

"பொன்மாரி பெய்யுமூர் பூம்பருத்தி யாடையாம்
அந்நாள் வயலரிசி யாகுமூர் - எந்நாளும்
தேங்குபுக ழேபடைத்த சேதிமா நாடதனில்
ஓங்குந் திருக்கோவ லூர்."

என்கிற செய்யுட்களையும் பாடினர்.

கலியாணத்தில் மேலேசொன்ன அங்கவைசங்கவையென்னும் பெண்களுக்கு இடையர் மரபின் வழக்கப்படி. ஆடு சீதனஞ் சேரனைக் கொடுக்கும்படிக் கேட்டபோது அவ்வரசன் பொன் ஆடு கொடுக்க அதை ஔவையார் வியந்து,

"இரப்பான் மணிமவுலிச் சேரமான் றன்னைச்
சுரப்பாடி யான்கேட்கப் பொன்னுடொன் - நீர்தான்
இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவர் தங்கொடையின் சீர்."

என்று ஒரு வெண்பாப் பாடிப் பின்பு சோழனையும் பாண்டியனையும் நோக்கி "நீவிர் இச்சித்திரியர்களுடன் சுகமாய் வாழக்கடவீர்கள்" என்று ஆசிர்வதித்து,

"ஆயன் பதியி லரன்பதிவந் தற்றளகம்
மாயனா துங்கருவி யானாலும் - தூயமணிக்
குன்றுபோல் வீறு குவிமுலையா டன்னுடனீர்
இன்றுபோ லென்று மிரும்."

என்று பாடியருளினார்.

ஒருகால் உறையூரிலே குலோத்துங்க சோழன் தன் சமஸ்தான வித்வானை ஒட்டக்கூத்தனும், பட்டமகிஷியுடன் பாண்டிநாட்டிலிருந்து ஸ்திரீ தனமாகவந்த புகழேந்திப் புலவரும் தொடர்ந்துவர, பாதசாரியாய் உலாவிவரும்போது வீதிகளிலொன்றில் ஒரு வீட்டுத் தெருத்திண்ணையில் இரண்டு கால்களையும்நீட்டிக்கொண்டுட்கார்ந்திருந்த ஔவையார்சோழனைக் கண்டவுடன் ஒரு காலை மடக்கிக்கொண்டனர்; அருகிற் புகழேந்திப்புலவர் இருக்கிறதைப் பார்த்தவுடனே மற்றக் காலையும் மடக்கிக்கொண்டனர்; அவர்களை அடுத்தாற்போல வந்த ஒட்டக்கூத்தனைக் கண்டவுடனே இரண்டு கால்களையும் நீட்டினர். இதனைக் கண்ணுற்ற ஒட்டக்கூத்தன் அவமானமும் சீற்றமு மூண்டவனாய் ஔவையாரை நோக்கி, "ஓ கிழவி! இவ்வாறு என்னை அவமதித்தது என்னை?" என, ஔவையார் "அரசன் கிரீடாதிபதியாதலால் அவனுக்கு ஒரு காலையும், புகழேந்திப்புலவர் ஒரு மகாவித்வானாகையால் அவருக்காக இரண்டு காலையும் மடக்கினேன்; நீயோ கல்வி நிறைவில்லா வீண்புலமைப்பாராட்டு மொரு மூடனாகையால் இரண்டு காலையும் நீட்டினேன்" என்று சொல்லி, "உண்மையாகவே நீயும் புகழேந்தியைப்போல் ஒரு சிறந்த வித்வானாயின் சோழனையும் அவனுட்டையுஞ் சிறப்பித்துச் சந்திரனுக்குப் பெயராகும் ஒரு பதத்தை யொரு பாவினீற்றடியில் மூன்றிடங்களில் பிரயோகப்படுத்திப் பாடு பார்ப்போம்" என்று சொன்னார். ஒட்டக்கூத்தன் அவ்வாறே தன் அரசனாகிய சோழனையே பாட்டுடைத் தலைவனாகக் கருதி நூற்றுயிரங் கற்றுறையில்,

"வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்துமழைத் துளியோ டிறங்குஞ் சோணாடா
கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா
பிள்ளை மதிகண் டப்பேதை பெரிய மதியு மிழந்தாளே."

என்று ஒரு பாட்டுப் பாடினர்.

இதைக்கேட்டு ஔவையார் ஒட்டக்கூத்தனை நோக்கி உன் பாவில் ஒரு மதி குறைந்ததே என்று சிலேடையாக,

"ஒட்டா ஒருமதி கெட்டாய்"

என்று கூறிப் பின்பு புகழேந்தியை நோக்கி "நீரு மவ்வண்ணமாகப் பாடக்கடவீர்?" என்றார். அவரும் நற்றுயிரங்கற் றுறையிலேயே,

"பங்கப் பழனத் துழுதுழவர் பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங்கிளநீர் தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா
கொங்கர்க் கமரா பதியளித்த கோவே ராச குலதிலகா [வேலே"
வெட்கட் பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்தப் பிறைக்கும் விழி

என்று ஒரு பாவில் மூன்றுபிறை வரும்படியாகப் பாடினர்.

இதனைக் கேட்டு ஒட்டக்கூத்தன் வெட்கி அன்றுமுதலாகக் கர்வ மடங்கி யிருந்தனன்.

தென்னாட்டிலே ஒருநாள் ஔவையார் அதிக பசியால் வருந்தி ஒரு சமுசாரி வீட்டுத் தெருத்திண்ணையில் மிகுந்த இளைப்போடு வந்திருந்தனர். அப்போது வெளியே வந்த வீட்டுக்காரனை ஔவையார் கண்டு, "அப்பா! எனக்கு மெத்தப்பசியா யிருப்பதால் உங்கள் வீட்டிலிருந்து கொஞ்சங் கூழாயினும் வார்த்தால் உண்டு பசியாறிப்போவேன்" என்றார். மிகவும் சாதுவான அவ் இல்லோன் அவருடைய பரிதாப வார்த்தைக் கிணங்கி, "பெண்ணின் குணமறிவேன் சம்பந்தி வாயறிவேன்" என்பதற்கேற்கத் தன் பெண்சாதிகுணத்தைத் தானறிந்தவனாகையால், ஔவையாரை வீட்டிற்குள் அழைத்துப் போகாமல் தெருத்திண்ணையிலேயே இருக்க வைத்துத் தான் மாத்திரம் உள்ளே நுழைந்து, பிடாரியைப் பெண்டாகக் கொண்ட மனையாளிடத்திற் சென்று, அவளுடைய உத்தரவின்பேரில் அருகே யிருந்து, அவளுக்குத் தன் பேரில் விசுவாசமுண்டாகும்படி யிச்சக வார்த்தைகளைச்

சொல்லி, மெல்ல முகந்துடைத்துத் தான் ஒரு பெண்போல அவனுக்குத் தலைசீவி, சிக்கறுத்து, பேன்பார்த்து, ஈருருவி, அதிக பயபக்தியுடனே எங்கே கோபித்துக் கொள்ளுகிறாளோவென அஞ்சி, சமயம் பார்த்து, மெய்நடுங்கி நாக்குக் குழற, மெல்ல உதடோடு உதடு அசைய "ஒரு பழுத்தக்கிழவி கொஞ்சங் கூழுக்கு வந்திருக்கிறாள்" என்றலும் "ஏனவாயனைக்கண்டாளாம் ஏணிப்பந்தம் பிடித்தாளாம்" என்கிறபடி தன் புருஷன் மேதகுணத்தைப்பார்த்துத் தீயில் விழுந்த நாகம் போலச் சீறிப் பூதம்போல ஆர்ப்பரித்து, "உன்பவிஷுக்கு விருந்து ஒருகேடா! உனக்குத் தொலைக்கிறதுமல்லாமல் ஊருக்குந் தொலைக்கவா!" என்று பேய்ப்பாட்டுக்களைப்பாடி, ஆசையெல்லாந் தீரவட்டித்து, கழுநீர்ப்பானையை யேந்தி வந்து அவன் தலையிலே அபிஷேகஞ்செய்து, திருவலகு [துடைப்பக்கட்டு] கொண்டு வெண்சாமரை வீசி, சுளகு [பழமுறம்] எடுத்து ஆலவட்டம் பரிமாறி, பரிவேட்டை விடுவது போல் அவனை வீட்டிற்குந் தெருவுக்குமாகத் துரத்தித் துரத்தி யடித்தாள்.

அப்போது வீட்டுத் தலைவன் பெண்டாட்டி கொண்டு திண்டாட்டப் படுவதைக் கண்டு ஔவையார் அதிக இரக்கமுற்று

"இருந்து முகந்திருத்தி ஈரொடுபேன் வாங்கி
விருந்துவந்த தென்று விளம்ப—வருந்திமிக
ஆடினாள் பாடினா ளாடிப் பழமுறத்தாற்
சாடினா ளோடோடத் தான்."

என்கிற செய்யுளைப் பாடினார்.

பிறகு கணவன் மிகவும் வேண்டிக்கொள்ள அவள் சற்று மனமிரங்கி அன்னமிட்டபோது,

"காணக்கண் கூசுதே கையெடுக்க நாணுதே
மாணொக்க வாய்திறக்க மாட்டாதே— வீணுக்கென்
என்பெல்லாம் பற்றி யெரிகின்ற தையையோ
அன்பில்லா ளிட்ட வமுது."

என்று பாடினார்.

பிறகு வந்து வணங்கிய அவள் கணவனை நோக்கி, அவன் இல்வாழ்க்கையை இகழ்ந்துபேசி, அவன் துறவு பூண்டொழுகும்படி வற்புறுத்துமாறு அடியில் வருஞ் செய்யுட்களைப் பாடியருளினர்.

"சண்டாளி சூர்ப்பநகை தாடகையைப் போல்வடிவு
கொண்டாளைப் பெண்டென்று கொண்டாயே - தொண்டா
செருப்படிதான் செல்லாவுன் செல்வமென்ன செல்வம்
நெருப்பிலே வீழ்ந்திடுதனேர்."

"பர்த்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி யிருக்கலாம் - சற்றேனும்
ஏறுமா றாக விருப்பளே யாமாயிற்
கூறாமற் சன்னியாசங் கொள்."

"ஏசி யிடலி னிடாமையே நன்றெதிரிற்
பேசுமனை யாளிற் பேய்நன்று - நேசமிலா
வங்கணத்தி னன்று வலியபகை வாழ்வில்லாச்
சங்கடத்திற் சாதலே நன்று."

ஒருநாள் சோழராசன் தன் சமஸ்தான வித்வான்களை யழைப்பித்து "நீங்கள் நாளைய வுதயத்துக்கு நாலுகோடிக்குப் பாடல்பாடி வரவேண்டும்" என்று ஆக்யாபித்தான். அதைக்கேட்ட அவ்வித்வான்கள் நாலு கோடிக்கு எங்ஙனம் பாடுவது? என ஒன்றுந் தோன்றாது அதிக வியாகூலத்துடனே அவரவர்கள் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். ஔவையார் அவ்வழியாய் வரும்போது அவர்கள் விசனமுற் றிருப்பதைக்கண்டு "என் முகம்வாடி ஏக்கமுற்றிருக்கின்றீர்கள்?" என்று கேட்க, அவர்கள் "அம்மணி! எங்களைச் சோழன் நாளைய வுதயத்திற்குள்ளே நாலுகோடிக்குப் பாடல்பாடி வரும்படி ஆக்யாபித்திருக்கிறான். இன்னும் ஒரு பாட்டுக் கூடும் வழியில்லை. ஆகலின் இன்று ராத்திரிக்குள் நாலுகோடி எவ்வண்ணம் பாடப் போகிறோமென்று திகைத்திருக்கிறோம்" என்றனர். அதைக்கேட்டு ஔவையார், "ஓ புலவீர்காள்! நீவிர் வருந்துத லொழிமின், இதோ ஒரு நொடியிற் பாடித்தருகிறேன்" என்று பின்வரும் பாடல்களைப் பாடிக் கொடுத்தனர்.

"மதியாதார் முற்ற மதித்தொருகாற் சென்று
மிதியாமை கோடி பெறும்."

"உண்ணீருண் ணீரென் றுபசரியார் தம்மனையில்
உண்ணாமை கோடி பெறும்."

"கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுதல் கோடி பெறும்."

"கோடானுகோடி கொடுப்பினுந் தன்னுடையநாக்
கோடாமை கோடி பெறும்."

என்கிற பாடல்களைக் கேட்டவுடனே வித்வான்கள் யாவரும் சூரியனைக்கண்ட தாமரைபோல் முகமலர்ந்து அப்பாடலைப் பெற்றுக்கொண்டுபோய் அரசன்முன் வைக்க, அரசன் மகிழ்வடைந்தனன்.

ஒருநாள் ஒளவையார் காடுகளும் மலைகளும் அடர்ந்த மார்க்கமாகப் போய்க்கொண் டிருக்கும்போது சுப்பிரமணியக்கடவுள் ஒளவையாரை யேமாற்றிப் பரிகாசஞ்செய்ய வெண்ணி ஓர் எருமைமேய்க்குஞ் சிறுவனைப்போல் உருவெய்தி ஒரு நாவன்மரத்தின்மீதேறிப் பழங்களைப் பறித்துத் தின்றுகொண் டிருப்பவர்போற் காட்டியருளினார். ஒளவையார் அந்த மரத்தடியில் வந்து ஆயாசத்தால் உட்கார்ந்து, மரத்தின்மேலிருக்கும் மாட்டுக்காரப் பையனைப் பார்த்து "அடா தம்பீ! எனக்கு மிகவும் ஆயாசமாக விருக்கிறபடியாற் கொஞ்சம் நாவற்பழம் பறித்துப்போடு" என்று வேண்டினள். அதற்கு அந்தப் பையனாகிய சுவாமி "ஓ கிழவியே! உனக்குச் சுடுகிற பழங்கள் வேண்டுமா? சுடாத பழங்கள் வேண்டுமா? சொல்" என்றார், ஒளவையார் ஆச்சரியப்பட்டு நாவற் பழத்திற் சுடுகிறபழமு மிருக்குமா என்றுலோசித்து ஒன்றுந் தோன்றாமையால் "அப்பா! சுடுகிற பழம் எனக்கு வேண்டுவதில்லை சுடாதபழமே வேண்டும்" என்றார். உடனே பையன் மரக்கிளைகளைக் கையால் பிடித்துக் குலுக்கிவிட்டான். அதிலிருந்து கனிந்த பழங்களும் கனியாத பழங்களும் கீழே யுதிர்ந்தன. அப்போது ஒளவையார் கனிந்தபழங்களிற் சிலவற்றைப் பொறுக்கிப்பார்த்து அவைகளில் தரையிலிருந்த மணல் ஒட்டிக்கொண் டிருக்கமையால் அதை வாயினால் ஊதினார். அதைப்பார்த்த மாட்டுக்காரப்பையன் "ஓ கிழவீ! சுடாதபழங்கேட்ட நீ இப்போது சுடுகிறபழத்தைத் தின்னப்போகிறையே, வாய்

வெந்துவிடப்போகிறது, நன்றாக ஊதி ஆறினபின்னர்ச் சாப்பிடு" என்றான். ஔவையார் அப்போது சுடாதபழங் காயென்று தெரிந்துகொண்டு 'இக்கருத்து முன்னமே நமக்குத் தெரியாமற் போயிற்றே' என்று வெட்கமுற்று,

"கருங்காலிக் கட்டைக்கு நாணாக்கோ டாலி
இருங்கதலித் தண்டுக்கு நாணும் - பெருங்கானிற்
காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்றோற்ற
தீரிரவு துஞ்சாதென் கண்."

என்று ஒரு வெண்பாப் பாடினர். இவ் வெண்பாவைக் கேட்டவுடனே மாட்டுக்காரப்பையனாயிருந்தசுப்பிரமணியக்கடவுளுக்கு ஔவையார்பால் அருண்மிகுந்து மரத்தை விட்டிறங்கித் தம்முடைய நிஜரூபமெய்தி அவர் கரங்களைப் பற்றிக்கொண்டு "நான் உம்முடன் விளையாடவந்ததேயன்றி இகழ்வதற்கன்று; உலகத்தில் உமக்குச் சமானமானவர்கள் யாரிருக்கிறார்கள்? ஆகையாற் சந்தோஷமாக இரும்" என்று சொல்லி, "உம்முடைய வாக்கால் உலோகோபகாரமாக முக்கிய நீதிகளைச் சுருக்கமாக வெளிப்படுத்த வேண்டுமென்று விரும்புகிறேன், ஆனதனால் அவைகளைச் சொல்லக்கடவை" என, ஔவையார் "அஃதென்னை?" என்று வினவ, சுப்பிரமணியக்கடவுள் "உலகத்திற் கொடியது, இனியது, பெரியது, அரியது இன்னின்னதென் றுரைக்கவேண்டும்" என்றனர். ஔவையார் அதுகேட்டு,

கொடியது.

"கொடியதுகேட்கி னெடியவெவ்வேலோய்
கொடிதுகொடிது வறுமைகொடிது
அதனினுங்கொடிது இளமையில்வறுமை
அதனினுங்கொடிது ஆற்றொணக்கொடுநோய்
அதனினுங்கொடிது அன்பிலாப்பெண்டிர்
அதனினுங்கொடிது இன்புறவவர்கையி லுண்பதுதானே."

இனியது.

"இனியதுகேட்கிற் றனிநெடுவேலோய்
இனிதுஇனிது ஏகாந்தமினிது
அதனினு மினிது ஆதியைத்தொழுதல்

அதனினுமினிது அறிவினர்ச்சேர்தல்
அதனினுமினிது அறிவுள்ளோரைக்
கனவிலுநனவிலுங் காண்பதுதானே.''

பெரியது.

''பெரியதுகேட்கி னெரிதவழ்வேலோய்
பெரிதுபெரிது புவனம்பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன்கரியமா லுந்தியில்வந்தோன்
கரியமாலோ அலைகடற்றுயின்றோன்
அலைகடல்குறுமுனி யங்கையிலடக்கம்
குறுமுனியோகல சத்திற்பிறந்தோன்
கலசமோபுவியிற் சிறுமண்
புவியோ அரவினுக் கொருதலைப்பாரம்
அரவோவுமையவள் சிறுவிரன்மோதிரம்
உமையோவிறைவர் பாகத்தொடுக்கம்
இறைவரோதொண்ட ருள்ளத்தொடுக்கம்
தொண்டர்தம்பெருமை சொல்லவும்பெரிதே.''

அரியது.

''அரியதுகேட்கின் வரிவடிவேலோய்
அரிதரிதுமானுட ராதலரிது
மானுடராயினுங் கூன்குருடுசெவிடு
பேடுநீங்கிப் பிறத்தலரிது
பேடுநீங்கிப் பிறந்தகாலையும்
ஞானமுங்கல்வியு நயத்தலரிது
ஞானமுங்கல்வியு நயந்தகாலையும்
தானமுந்தவமுந் தான்செயலரிது
தானமுந்தவமுந் தான்செய்வாராயின்
வானவர்நாடு வழிதிறந்திடுமே.''

என்று நான்கு அகவல்களைப்பாடி முடித்து,

''மூவாக்கோவையு மூவிளங்கோவையும்
பாடியவென்றன் பழுவல்வாயால்
என்னையும்பாடுக வென்றனையெக்கனம்
படுமியானுங் களிறுபடுசெங்களம்
கண்ணிற்காணீர் வெளிறுபடுநல்யாழ்
விருப்பமாய்க் கேளீர்

இலைவாய்ச்சிய சிளமுலைபுல்லீர்
புலவர்வாய்ச்சொற் புலம்பலுக்கிரங்கலீர்
உடையுடுண்ணலீர் கோடீர்கொள்ளீர்
ஒவாக்கானத் துயர்மரம்போலத்
தாவாக்கனியிற் றேன்றினீரே."

என்கிற அகவலைப் பாடக்கேட்டுச் சுப்பிரமணியர் மிகவுஞ் சந்தோஷமடைந்தவராய் ஔவையாரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மறைந்துபோய்விட்டனர்.

ஒருநாள் ஔவையார் விநாயகக்கடவுளின் பூஜை விரைவாகச்செய்ய, அக்கடவுள் "வழக்கப்படியன்றி விரைந்து பூஜைசெய்வது என்னை" என்று வினவ "சுவாமீ! சுந்தரமூர்த்தி நாயனரும் சேரமான்பெருமா ணாயனரும் ஆதியுலாவும் பொன்வண்ணத் தந்தாதியும் பாடி அவைகளை அரங்கேற்றும்படி கயிலாயத்துக்குச் செல்கின்றார்கள். என்னையும் அழைத்தார்கள்" என, விநாயகர் "அவர்கள் சேர்வதற்குமுன் உன்னைக் கயிலாயத்தில் விடுவேன், கிரமப்படி பூசைசெய்" என்று திருவாய் மலர்ந்தருளினர். அவ்வாறே சாவதானமாகப் பூசைசெய்து சீதக்களப என்று தொடங்கும் அகவல் பாடித் துதித்துப் பூஜையை முடித்தார். உடனே விநாயகக்கடவுள் விசுவரூபங்கொண்டு தமது துதிக்கையால் எடுத்துவிட ஔவையார் கயிலாயத்தையடைந்தனர். பின்பு வந்துசேர்ந்த அவ்விருவரும் ஔவையாரைக்கண்டு அதிசயப்பட்டு வினவியபோது,

"மதுர மொழிநல் லுமையாள் புதல்வன் மலர்ப்பதத்தை
முதிர நினையவல் லார்க்கரி தோமுகில் போன்முழங்கி
அதிர வருகின்ற யானையுந் தேரு மதன்பின்சென்ற
குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே."

என்றுபாடி விடைதந்தனர்.

ஒரூரில் ஒரு குறவனுக்கு இரண்டு மனைவியர்கள் இருந்தார்கள். அவர்களுள் இளையாளின்பேரிற் குறவன்மோகமுடையவனாகி யிருந்தான். ஒருநாள் குறவன் வேற்றூருக்குப் போய்வரவேண்டி மனைவியர்களைநோக்கி "நான் அன்பாக

வளர்க்கும் இப்பலாவை நீங்களிருவரும் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லிப்போயினான். அவன் போனபிறகு இளையாள் அம்மரத்தை வெட்டிவிட்டு குறவன் வந்தபோது மூத்தாள்மேல் பழிசுமத்தினள். நிரபராதியாகிய மூத்தாள் கணவன் என்ன செய்வானோவென்று ஏக்கிக்கொண்டிருந்தாள். ஔவையார் அப்போதங்கு தற்செயலாய்வந்து அவள் குறைகேட்டுப் "பயப்படாதே" என்று சொல்லிப் பலாத்தழைக்கும்படி,

"கூரியவா ளாற் குறைத்திட்ட வெண்பலா
ஓரிலையாய்க் கன்றா யுயர்மரமாய்ச்—சீரியதோர்
வண்டுபோற் கொட்டையாய் வண்காயாய்த் தின்பழமாய்
பண்டுபோ னிற்க பலா.

என்று பாடினமாத்திரத்திலே வெட்டுண்ட மரம் தளிர்த்துத் தழைத்தது.

மற்றொருகாலத்திற் பாண்டியன் அக்காலத்திலுள்ள சங்கப்புலவர் முதலிய சகல வித்வான்களுடைய கல்வித்திறத்தைப் பரீக்ஷிக்க எண்ணமுடையவனாய் மாற்றுயர்ந்த செம்பொன்னாற்செய்த நான்கு பருத்த கொலுசுகளில் தொங்குகின்ற ஓர் ஊஞ்சற்பலகையை யமைத்து அதன்மீது ஆசனமாகப் பொற்குவையிட்டு "இந்நான்கு கொலுசுகளும் அற்றுவிழும்படி இன்னதினத்தில் யாராயினும் பாடுவார்களாயின், அவருக்குத் தகுந்த மரியாதையுடன் இப்பொற்குவியலைப் பரிசாகக் கொடுப்போம்" எனச் சகல தேசங்களிலும் பறையறைவித்தான்.

இச்சங்கதி கேள்வியுற்ற வித்வசிரோமணிகள் யாவரும் மௌனிப்ப அஞ்சியிருந்தனர். அத்தருணத்தில் அவ்வழியாக வந்த ஔவையார் கேட்டு உள்ளே நுழைந்து பின்வருஞ் செய்யுட்களில் ஒவ்வொன்றைச் சொல்ல, ஒவ்வொரு சங்கிலியாக நான்குமற்று விழுந்தன.

"ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன் றாம்புலவர்
வார்த்தை பதினா யிரத்தொருவர் - பூத்தமலர்த்
தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொருவர்
உண்டாயி னுண்டென் றறு."

"நண்டாம லீவது தாளாண்மை தண்டி
அடுத்தக்கா லீவது வண்மை - அடுத்தடுத்துப்
பின்சென்றா லீவது காற்கூலி பின்சென்றும்
ஈயானைச் சம்போ லறு."

"உள்ள வழக்கிருக்க ஆரார் பொதுவிருக்கத்
தள்ளி வழக்கதனைத் தான்பேசி - எள்ளளவும்
கைக்கூலி தான்வாங்குங் காலறுவான் றன்கிளையும்
எச்சமறு மென்றா லறு."

"வழக்குடையா னிற்ப வலியானைக் கூடி
வழக்கை யழிவழக்குச் செய்தோன் - வழக்கிழந்தோன்
சுற்றமுந் தானுந் தொடர்ந்தழுத கண்ணீரால்
எச்சமறு மென்றா லறு."

பின்பு ஒருநாள் ஸ்திரீகளின் நடவடிக்கைகளை சிலர் இகழ்ந்து பேசிக்கொண்டிருப்பதைச் செவியுற்ற ஔவையார் அதனைப் பொறாராகி,

"நல்லார்க ளெல்லாரும் நல்லாரே தன்மையால்
வல்லாரற் கேடு படாராயின் - நல்லறி
வாண்மக்கட் பற்பலர்க்கே யுண்டாகும் பெண்டிரும்
மாண்பு கெடுக்கா விடின்."

என்றொரு பாடலைப்பாடி அவர்கள் வாயடங்கச் செய்தார்.

## பின்னும் ஔவையார் பற்பல சமயங்களிற் பாடிய தனிப்பாடல்கள்.

### வேளூர்ப்பூதன் விருந்திட்டதைப் புகழ்ந்து பாடியது.

"வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரெனவே புளித்த மோரும்—திறமுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்ந்துபரிந் திட்டசோ
றெல்லா வுலகும் பெறும்."

### கோரைக்காலிலிருக்கும் ஆழ்வான் கொடையை நிந்தித்துப் பாடியது.

"கரியாய்ப் பரியாகிக் காரெருமை தானாய்
எருதாய் முழப்புடவை யாகித்—திரிதிரியாய்த்
தேரைக்கால் பெற்றுமிகத் தேய்ந்துகா லோய்ந்ததே
கோரைக்கா லாழ்வான் கொடை."

### ஈகையில்லானைக் குறித்துப் பாடியவை.

"பாடல் பெறுனே பலர்மெய்ச்ச வாழானே
நாடறிய நன்மணங்க ணுடானே—சேடன்
இவன்வாழும் வாழ்க்கை யிருங்கடல்சூழ் பாரிற்
கவிழ்க்கெதன் மலர்க்கென்னே காண்."

"சுற்றுங் கருங்குளவி சூழ்த்து ராரியப்பேய்
எற்றுஞ் சுடுகா டிடிகரையின்—புற்றில்
வளர்ந்த மடற்பனைக்குள் வைத்ததே நெக்கும்
தளர்ந்தோர்க்கொன் றீயார் தனம்."

### முல்லான் என்பவனைப் புகழ்ந்துபாடியது.

"காலையி லொன்றுவர் கடும்பகலி லொன்றுவர்
மாலையி லொன்றுவர் மனிதரெலாம்—சாலவே
முல்லானைப் போல முகமுமக மும்மலர்ந்த
நல்லானைக் கண்டறியோ நாம்."

### பிரமனை நிந்தித்துப் பாடியது.

"அற்றதலை போக வறாததலை நான்கினையும்
பற்றித் திருகிப் பறியேனோ—வற்றும்
மரமனையா னுக்கிந்த மானை வகுத்த
பிரமனையான் காணப் பெறின்."

### அரசன் மந்திரியாக யாரை நியமிக்கவேண்டு மென்றபோது சொல்லியது.

"நூலெனிலோ கோல்சாயு நுந்தமரேல் வெஞ்சமரா
கோலெனிலோ வாங்கே குடிசாயும்—வேளாளன்
மந்திரியு மாவான் வழிக்குத் துணையாவான்
அந்த வரசே யரசு."

### சோமனென்னும் பிரபுவின்மேற் பாடியது.

"நிழலருமை வெய்யிலிலே நின்றறிமி னீசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழையதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்."

### பாண்டியன் கலியாணத்தில் விருந்துண்டபோது பாடியது.

"வண்டமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்
துண்ட பெருக்க முரைக்கக்கேள்—அண்டி
நெருக்குண்டேன் றள்ளுண்டேன் னீள்பசியி னாலே
சுருக்குண்டேன் சோறுண்டி லேன்."

லிக் கனியிற் பாதிப்பழம் பெற்று அதனை யுண்டு வெகு காலஞ் சீவித்திருந்தனர் என்று சொல்லுகின்றனர். இவ்வாறே அசதியென்னுங் கோகுல வரசன்மேல் ஒரு கோவை பாடிப் பல பரிசும் பெற்றனர். அக்கோவை சொன்னயம் பொருணயங்களால் மிகச் சிறந்ததெனச் சிற்சிலர் சொல்லுந் தனிக் கவிகளால் † தெரியவருகிறதே யன்றி அப்பிரபந்தம் முற்றும் இக்காலத்துக் கிடைக்கவில்லை.

---

† இதுவரையில் அகப்பட்டுள்ள செய்யுட்கள்:—

அற்றான் கியகரத் தைவே லசதி யணிவரைமேன்
முற்றா முகிழ்முலை யெவ்வாறு சென்றனள் முத்தமிழூற்
கற்றார் பிரிவுங்கல் லாதவ ரிட்டமுங் கைப்பொருள்க
ளற்றா ரிளமையும் போலே கொதிக்கு மருஞ்சுரமே. (க)

அருஞ்சஞ் சலங்கொண்ட வைவே லசதி யகல்வரையி
னிருஞ்சஞ் சலஞ்சொல்ல வேண்டுங்கொ லோவென தன்னைமொழி
தருஞ்சஞ் சலமுந் தனிவைத்துப் போனவர் சஞ்சமுலம்
பெருஞ்சஞ் சலங்கொண்டு யானிருந் தேனொரு பெண்பிறந்தே. (உ)

அலைகொண்ட வேற்கரத் தைவே லசதி யணிவரைமே
னிலைகொண்ட மங்கைதன் கொங்கைக்குத் தோற்றிள நீரினங்கள்
குலையுண் டடியுண் டுடன் கையினி லெற்றுண்டு குட்டுமுண்டு
விலையுண் டடியுண்டு கண்ணீர் ததும்பவும் வெட்டுண்டவே. (ங)

அழற்கட்டு கட்டிய வைவே லசதி யணிவரையின்
மழைக்கட்டு கட்டிய மாளிகை மேலொரு மங்கைநல்லா
ளுழக்கிட் டரிசியிட்டு முவ்வுழக் கிட்டரி நாழியிட்டு
குழற்கட் டவிழ்த்தூட னங்கனின் றேமயிர் கோதினளே. (ச)

அறங்காட் டியகரத் தைவே லசதி யகன்சிலம்பி
னிறங்காட்டுங் கஞ்சத் திருவனை யீர்முக நீண்டகுமிழ்த்
திறங்காட்டும் வேலுஞ் சிலையுங்கொல் யானையுந் தேருங்கொண்டு
புறங்காட்ட வந்தது மோசிலைக் காமன்றன் பூசலிலே. (ரு)

ஆலவட் டப்பிறை யைவே லசதி யணிவரைமே
னீலவட் டக்கண்க ணேரொக்கும் போதந்த நேரிழையாண்
மாலைவிட் டெச்சுற்றி வட்டமிட் டோடி வரவழைத்து
வேலைவிட் டுக்குத்தி வெட்டுவ ளாகில் விலக்கரிதே. (சா)

ஆரா யிரங்கொண்ட வைவே லசதி யகன் கிரியி
னீராட்டப் போகு நெறிதனியே யந்தி நேரத்திலே

ஔவையார் கிருகத்தாச்சிரமஞ் சிறந்ததென்று மற்றவர்களுக்குப் போதித்து வந்ததேயன்றித் தாம் ஆயுள்பரியந்தம் விவாகமில்லாமலே யிருந்தனர். இவர் உ௫0-வருஷங்களுக்கு அதிகமாகவே ஜீவித்திருந்ததாகச் சொல்லப்படுகின்றனர். அதனால் அவருடைய இயற்பெயர் மறைந்து முதியவள் என்கிற பொருளைத்தரும் ஔவை என்னுஞ் சிறப்புப்பெயர் வழங்கிவந்ததாக நினைக்கப்படுகின்றது.

ஔவையார் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை நல்வழி, கல்வியொழுக்கம், விநாயகரகவல், அருந்தமிழ்மாலை, தரிசனப்பத்து, ஞானக்குறள், பந்தனந்தாதி, அசதிக்கோவை, வைத்திய நிகண்டு முதலிய நூல்கள் செய்தருளினரென்ப.

மேற்கூறிய நூல்களுள் அகரவருக்க மாதியாகச் செய்யப்பட்டுள்ள ஆத்திசூடி, கொன்றைவேந்தன் என்னும் நீதிநூற்கள் சொல் நடையும், பொருள் விளக்கமும், வாக்கியச் சுருக்கமும் அமைந்திருத்தலாற் பிறதேயத்தார்களாலும் தத்தம் பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டுச் சிறப்படைகின்றன.

இக் கவிசாகரமாகிய ஔவையார் திருவாக்கினின்று தோன்றிய பல நூல்களும் தனிப்பாடல்களும் நீதி நிறைந்த அருள் வாக்கியங்களென்று யாவராலுஞ் சிரமேற்கொள்ளப்

சீரான குங்குமக் கொங்கையைக் காட்டிச் சிரித்தொருபெண்
போராள் பிடிபிடி யென்றே நிலாவும் புறப்பட்டதே. (எ)

ஆய்ப்பாடி யாயர்தம் மைவே லசதி யணிவரையில்
கோப்பா மிவளெழிற் கொங்கைக்குத் தோற்றிளக் கோடிரண்டுஞ்
சீப்பாய்ச் சிணுக்கரி யாய்ச்சிமி ழாய்ச்சின்ன மோதிரமாய்க்
காப்பாய்ச் சதுரங்க மாய்ப்பல்லக் காகிக் கடைப்பட்டவே. (அ)

ஆடுங் கடைமணி யைவே லசதி யணிவரைமே
லோடுங் கயற்கண்ணி யாடந்த வாசை நிகழ்த்தரிதாற்
கோடுங் குளமுங் குளத்தரு கேயிருக்குங் குன்றுகளுங்
காடுஞ் செடியு மவளாகத் தோன்றுமென் கண்களுக்கே. (௯)

படுகின்றன. "கல்வியிற் பெரியன் கம்பன்" என்னப்பட்ட கம்பன் முதலாகிய புலவர்களின் பாடல்கள் ஔவையார் பாக்களோடு ஒப்பு உயர்வு கூறப்படா; ஆகலான் ஔவையார் சாரதா சொரூபமே பூமிலாக சரஸ்வதியாக வந்து தோன்றினர் என்று சொல்லுகின்றனர்.

காஞ்சிபுரத்தை வியந்து பாடிய "வையகமெல்லாங் கழனி" என்கிற பாடலும் ஔவையார் பாடிய பாடல்களி லொன்று எனச் சிலர் சொல்லுகின்றனர்.

"வையக மெல்லாங் கழனியாய் வையகத்துட்
செய்யகமே நாற்றிசையின் றேயங்கள்—செய்யகத்துள்
வான்கரும்பே தொண்டை வளநாடு வான்கரும்பின்
சாறேயன் னாட்டின் றலையூர்கள் சாறட்ட
கட்டியே கச்சிப் புறமெல்லாங் கட்டியுட்
டானேற்ற மான சருக்கரை மாமணியே
யானேற்றான் கச்சி யகம்."

ஔவையார் சரித்திரம் முற்றிற்று.

# தமிழறியும் பெருமாள் கதை.

அளகாபுரி யென்றொருபட்டணமுண்டு. அதிலே அளகேஸ்வர னென்றொரு இராசன் இராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தான். அவனுக்கு ஏலங்குழலாள் என்றொரு குமாரத்தி பிறந்தாள். அவள் பன்னிரண்டு வயதிலே சகலகலையுங் கற்று வெகு ரூபலாவண்ணிய சவுந்திரியாய் மிகுந்த செல்வவதியாகி எழுநிலைமாடத்தின்மீ திருந்து கொண்டு தன்னுடைய தோழிமாரும் தானுமாக விளையாடிக் கொண்டிருந்தாள். இஃதிவ்வாறாக, பாடலீபுரத்திற் கதிபதியாயிருந்த பத்திரகிரி ராசாவுக்குச் சந்தனகுமார னென்றொரு பிள்ளையிருந்தது. அவனைப் பள்ளிக்குவைத்து மிக்க பிரயாசை யெடுத்துக்கொண்டும் சிறிதேனுங் கல்வியில் விருத்தியடையாதிருந்த தன் பிள்ளையைப் பார்த்து இப்படிக் கொத்த கல்வியற்ற மூடப்பிள்ளை யிருந்தென்ன போயென்ன வென்று மனஞ் சலித்துக்கொண்டான். அந்தப் பிள்

னாயும் நமக்கு எழுத்து வாசனை யில்லாதபடியினாலல்லவோ நம்முடைய தகப்பனார்கோபித்துக்கொண்டாரென்று மனக் கிலேசமுடையவனாய் ஊரைவிட்டுப் புறப்பட்டுத் தேசாந் தரம் சுற்றித் திரிந்து தேசங்களுடைய புதுமைகளும் பார் த்து ஒருவருஷந் தேசசஞ்சாரம் பண்ணியதன்பிறகு அள காபுரி பட்டணத்தில் வந்து அந்தப் பட்டணத்துப் புதுமை களும் பார்த்து இனி யப்பாலே போகவேண்டுமென்று புற ப்பட்டு ராஜவீதியில் வரும்போது இராஜமாளிகையை அண் ணாந்து பார்த்தான். அந்த மாளிகையின்மேரிமேலே பூரணச்சந் திரன் உதயமானதுபோன்று முகமலர்ச்சியுடன் பந்தடித்து க்கொண்டிருந்த இராஜகுமாரத்தியைக் கண்டான். அந்த இராஜகுமாரத்தியும் பாலசூரியப்பிரகாசமான இந்த இராஜ குமாரனைக்கண்டாள். கண்டவுடனே யிருவரும் ஒருவர் மீதி லொருவர்காதல் கொண்டார்கள்.

அப்போது ஒருவருக்கொருவர் பேசக்கூடாதபடியி னாலே தானும் இயற்கையறிவும் கல்வியறிவு முள்ளவளாகை யால் தனதுகாதோலையைவாங்கி கைநகத்தாலெழுதி அதனை அவன் முன்பு எறிந்தாள். அதில், "இந்தப்பட்டணத்திற்கு மேலண்டையில் மண்டூேட்டமென்றொரு திருவாசற்சாவடி யிருக்கிறது. அதிலே போயிரும். இராத்திரிக்கு நான் வரு கிறேன்" என்றெழுதியிருந்தது. அவன் அந்த ஓலையை எடு த்துக்கொண்டு தனக்கு எழுத்துவாசனை தெரியாதபடியி னாலே ஆர்கையிலேயாகிலும் கொடுத்துவாசிக்கச் சொல்லு வோமென்று புறப்பட்டுத் தன்னிச்சையால் அந்தத் திரு வாசற்சாவடியில் வந்தான். அதிலே யொரு குஷ்டரோகி யிருந்தான். அவனிடத்திற்குப்போய், உமக்கு எழுத்துவாச னைத் தெரியுமோ வென்றுகேட்க அவனும் எனக்கு எழுத்து வாசனை தெரியுமென்று சொன்னான். அந்த ஓலையை அவன் கையிலே கொடுத்து வாசிக்கச் சொன்னான். அந்த ஓலைக் குள் எழுதி யிருந்த விவரத்தை குஷ்டரோகி மனதிலே வைத்துக்கொண்டு அந்த ராஜகுமாரத்தியை தானனுபவிக்க வேண்டுமென்று நினைத்து, 'ஓ ராஜனே! இந்த அனியாய

மான பட்டணத்துக்கு ஏன் வந்தீர்! இந்தப்பட்டணத்துக்குள் என்ன பிழை புரிந்தீரோ தெரியாது. இந்தப்பட்டணத்து அரசன் உம்மைக் கண்டவிடத்திலே சிரச்சேதம் பண்ணச்சொல்லி காவலாளிகள் கையில் தனது முத்திரை மோதிரத்தைக் கொடுத்திருக்கிறான். அவர்களும் உம்மைத் தேடிக்கொண்டு திரிகிறார்களாம். ஆனபடியினாலே ராஜகுமாரத்தி உம்மை இந்நேரமே புறப்பட்டு ஓடிப்போகச்சொல்லி எழுதியிருக்கிறாள்' என்று சொன்னான். அந்த விசேஷத்தை இராஜகுமாரன் கேட்டு இது அநியாயமாயிருக்கின்றதே! நாம் என்ன பாவஞ் செய்தோமென்றவிடம்விட்டுப் புறப்பட்டுப் பயந்தோடிப்போனான். அதன் பிறகு குஷ்டரோகியுமெழுந்திருந்து ஒரு கிளிஞ்சலோட்டை யெடுத்துக்கொண்டு குளக்கரைக்குப்போய் உடம்பு குளித்து உடம்பிலேயிருக்கிற சொறி போகும்படியாகக் கிளிஞ்சலோட்டினாலே நன்றாகச் சுரண்டிப் பிறகு இலுப்பைப் புண்ணாக்கும் மஞ்சளும் போட்டுத் தேய்த்துக் குளித்து நன்றாகச் சுத்திபண்ணிக்கொண்டு தன்னுடைய கிழித்துணியைத் தோய்த்து உலர்த்திக்கொண்டு இருட்டினபிறகு அந்தச் சாவடியிலே வந்து ஒரு மூலையிலே படுத்துக்கொண்டிருந்தான். இராஜகுமாரத்தியும் அன்று ராத்திரி இராஜகுமாரனுக்குச் சாப்பாடும் அதற்கேற்ற பதார்த்தங்களும் கந்த கஸ்தூரி பரிமளாதிகளும் ஆடையாபரணங்களும் ஒரு பெட்டியில் வைத்துப்பெட்டியை மூடி முத்திரித்து அந்தப்பெட்டியை ஒரு தாதியை எடுத்துக்கொண்டுவரச்சொல்லி உப்பரிகையினின்றும் நூலேணிவிட்டிறங்கி யொருவரு மறியாமல் இருவரும் புறப்பட்டு அந்த திருவாசற் சாவடியிலேவந்து பார்க்குமளவில் மூலையிலே படுத்துக்கொண்டிருக்கிறவனைக் கண்டு பகல் நாம் கண்ட ராஜகுமாரனென்று ஆசையாகிய காமாந்தகாரத்தினாலே ஓடிவந்து மூலையிலேயிருக்கிற குஷ்டரோகியைக் கட்டிக்கொண்டாள். கட்டிக்கொண்டவுடனே அவனுடம்பு இவளுடம்பிலே பட்டமாத்திரத்தில் சீழும் இரத்தமும் துணியெல்லாம் நனைந்து அத்திப்பால் தோய்ந்ததுபோலவும் உடம்பிலே யிருக்கிற சொறிகள் பலாக்காய் முள்ளைக்

பிறந்ததுபோலவும் இருந்தது கண்டு இவன் சரியானபடியினாலே அவற்றைப் பொறுக்காமல் இவன்பகல் நாம் கண்ட ராஜகுமாரனல்ல. விதா கபடமாச்செகன்று தன்னுயிரை மாய்த்துக்கொண்டனன். அதைக்கூடவந்த தாதிகண்டு பயப்பட்டுக் கையும் காலும் நடுக்க யெடுத்துக்கொண்டு என்ன செய்யப்போகிறோம் தெய்வமே! இந்தச்சேதி இராஜா அறிந்தால் நீங்க ளிந்தநேரத்தில் இங்கே வந்தகாரியமென்னவென்று நம்மை ஆக்கினைப் பண்ணுவாரென்று மிகவும் பயந்து பெட்டியிலே போட்டுக்கொண்டு வந்த பதார்த்தங்களை யெல்லாம் குஷ்டரோகி முன்னே கொட்டிப் போட்டு அந்த பெட்டிக்குள்ளே பிணத்தை எடுத்துப்போட்டுக் கட்டிக்கொண்டு முன்பு வந்தவழியே நூலேணி மேலேறி உப்பரிக்கைக்குள்ளே போய் கட்டிலின்மீது பிணத்தை படுக்கவைத்துப் பிறகு அரசனிடம்போய், 'சுவாமி! என்னமோ தெரியாது. இருந்தாற்போலிருந்து தங்கள் குமாரத்தி மரித்துப்போனாள்' என்று சொன்னாள். அந்த விசேஷங்கேட்டு ராஜாவானவன் ஓடிவந்து பார்க்குமளவில் நிசமாய் மரித்திருப்பதைக் கண்டு என்னகாரணமோ விஷந்தின்றிற்றோ அல்லது பேய்பிசாசங்களதைக்கொன்றதோ என்று வெகுவாய் துக்கித்துக்கொண்டு பொழுதுவிடிந்த பிற்பாடு பெண்ணை தகனம்பண்ணச் செய்யுங்கடனெல்லாஞ் செய்துமுடித்து அதன்பிறகு பின்னையுஞ் சிலநாளைக்குப் பிற்பாடு முன்னாலே பயந்தோடிப்போன இராஜகுமாரன் இந்த ராஜகுமாரத்தி இறந்துபோன விசேஷங்கேட்டுக் கேள்விப்பட்டு அவனுக்கு அப்போது நினைவுவந்து நமக்காக இறந்தவள்போற் காணப்படுகிறது. குஷ்டரோகி மோசம்பண்ணிப் பயமுறுத்தினதை நானறியாம லோடிப்போனேனே யென்று மிகவும் விசாரப்பட்டு, அந்தப்பட்டணமே வந்து அன்றிராத்திரி சாவடியிற்போய் விஷத்தைவாங்கிக்கொண்டிருந்தான். பொழுது விடிந்தபிற்பாடு அங்கேயிருக்கிறபேர் செத்திருப்பவனைக் கண்டு, யாரோ வழிப்போக்கன் செத்துப்போனானென்று மசானத்திற் கட்டைகள் கொண்டுபோய்ப்போட்டு அந்தக் கன்னியைத் தகனம் பண்ணினவிடத்

திலேயே இவனையு மெடுத்துக்கொண்டுபோய்த் தகனம்ப ண்ணிப்போட்டார்கள்.

பிறகு இரண்டு ஆவேசமும் அந்தச்சாவடியிலே தங்கள் தங்கள் வினைப்பயன்படி ஒன்றோடொன்று சேராமல் ஆணா வேச மொரு மூலையிலிருக்கும், பெண்ணாவேசமானது அந்தச் சாவடியிலே ஒருத்தரையுஞ் சேர வொட்டாமல் பயமுறுத்தியி ருக்கும். ஆனபடியினாலே ஒருவரு மந்தச்சாவடியிலே வந்து சேரார்கள். இப்படி ஒருவருஷகாலமாக அந்தச் சாவடியில் சஞ்சரித்துக்கொண் டிருக்கிறபோது ஒருநாள் ஔவையார் எங்கேயோ போயிருந்து அந்தப் பட்டணத்துக்கு வந்தாள். வந்தபோது அஸ்தமித்தது. இன்றைக்கு இங்கு இராத்தங்கிப் போவோமென்று நினைத்து அவ்விடத்தி லிருந்தவர்களைப் பார்த்து இங்கே படுக்க இடங்கிடைக்குமோவென்று கேட் டாள். அதற்குஅவர்கள் இந்தப்பட்டணத்துக்கு மேலண்டை யாக ஒருசாவடியிருக்கிறது, அதிலேவேண்டியபேர் படுத்துக் கொள்ளலாம். ஆனால் அதிலே ஒருபிசாசியிருந்துக்கொண்டு அங்கே வந்தவர்களையெல்லாம்அடித்துப் போடுகிறது; ஆகை யினாலே ஒருவரு மதிலே சேரப்பயப்படுகிறார்கள் என்று சொன்னார்கள். ஔவையாரானவள், இந்த விசேஷங்கேட் டு, பேயை பேயடிக்கப்போகிறதோவென்று சொல்லி அச்சா வடியில் சென்று படுத்துக்கொண்டாள். அந்நேரம் ஆவேசம் அங்கே யிராமல் வெளியிற்போயிருந்தது. ஔவையார் படு த்துக் கொண்டிருக்கிறதைக்கண்டு மிகவும் ஆங்காரத்துட னே பெற்றெற் றென்று அறைய வருவதைக்கண்டு ஔவை யாரும் நித்திரை நீங்கி எழுந்து,

“வெண்பா விருகாலிற் கல்லானை வெள்ளோலைக்
கண்பார்க்கக் கையா லெழுதானை—பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளென்
றெற்றோமற் றெற்றோமற் றெற்று.”

என்னும் வெண்பாவைச் சொல்லக்கேட்டு அந்த ஆவேசம் கல்விகற்ற பேயானபடியினாலே இந்தக்கல்வியின் பொருளை யறிந்து கொண்டு நம்முடைய பூர்வோத்தரமெல்லா மறிந்

துசொன்னாள். இவள் தேவியேயென்று பயந்து புறப்பட்டு போய் இரண்டாஞ்சாமத்திலேயும் எற்றெற்றென்று வந்தது. அப்பொழுதும் ஒளவையார் கண்விழித்துக்கொண்டு,

"எண்ணாயிரத்தாண்டு நீரிற்கிடந்தாலும்
உள்ளீரம்பற்றாக்கிடையேபோற்—பெண்ணாவாய்
பொற்றொடிமாதர் புணர்முலைமேற்சாராரை
யெற்றோமற் றெற்றோமற் றெற்று"

என்றுசொன்னதைக் கேட்டு ஆவேசம் மீண்டும்போய் மூன்றாஞ்சாமத்திற்கு எற்றெற்றென்று வந்தது. அப்போதும் ஒளவையார் விழித்துப்பார்த்து,

"வானமுளதான் மழையுளதான் மண்ணுலகிற்
றானமுளதாற்றயையுளதால்- ஆனபொழு
தெய்த்தோமிளைத்தோமென்றே மாந்திருப்போரை
எற்றோமற் றெற்றோமற் றெற்று."

என்றுசொல்லக்கேட்டு மீண்டும்போய் நான்காஞ்சாமத்திலும் எற்றெற்றென்றுவந்தது. அப்போதும் ஒளவையார்,

"கருக்குளவிருரைத்து நீச்சங்கனிபோல்
வருந்தினர்க்கொன்றீயாதன் வாழ்க்கை- அரும்பகலே
இச்சித்திருந்த பொருள் தாயத்தார்கொள்வரென்
றெற்றோமற் றெற்றோமற் றெற்று."

என்றுசொன்னவுடனே இந்த நாலுசாமத்துக் கவியும்பார்த்துக்கொண்டு இந்த ஒளவையாருடைய அநுக்கிரகத்தினாலே கதிபெறலாமென்று பூர்வ இராஜகுமாரத்தியாகவடிவுகொண்டு ஒளவையார் பாதத்திலே சாஷ்டாங்கமாகதெண்டனிட்டுக் கைகட்டி வாய்பொத்தி நின்றபோது ஒளவையாரந்த ஆவேசத்தைப்பார்த்து இதின் வாய்ப்பிறப்பைக் கேட்கவேண்டுமென்று மனதி லெண்ணிக்கொண்டு நீயாரென்றுகேட்டபோதந்த ஆவேசமானது தனக்குற்ற கதியை ஆதியோடந்தமாய்ச் சொல்லிற்று.

அதைக்கேட்டு ஒளவையார் மிக்க பரிதாபப்பட்டு உனக்கென்ன வரம்வேண்டுமென்று கேட்க, அப்பெண்ணாவேசம், நான் மறுபடியும் ஜனனம் எடுத்து அந்த அரசிளங்குமர

னுக்கு மனைவியாகி சுகித்து வாழவேண்டும் என்றது. ஔவை யாரும் சந்தோஷமுற்று, நீதந் கொலை புரிந்து இறந்ததைக் கேள்வியுற்ற இராசகுமாரனும் உயிர் துறந்து ஆண் ஆவேச மகி இங்கேயே யிருக்கின்றனன் என்றனள். அப்போது அந்த ஆண் ஆவேசம் தன் பூர்வோத்தரத்தை அறிந்து சொன்னதற்கு வியந்து, அவ்வையார் முன், ராசகுமாரன் தான் தன்னுடைய வடிவத்தோடுவந்து ஔவையார் பாதத்திலே விழுந்து சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு நின்றான். அப்போது ஔவையார் பெண்ணாவேசத்தைப் பார்த்து இவனுக்குத் தானே நீ ஆசைப்பட்டதென்று கேட்க அது ஆமம்மாவென்று சொல்லிற்று. அதன் பிறகு அந்தப் பெண்ணாவேசத்தைப் பார்த்து ஔவையார் உனக்கு பிரமதேவன் விதித்தது ஐம்பது வயதுண்டு. அதிலே பன்னிரண்டுவயது கன்னியாயிருந்தாய். ஒரு வருஷம் ஆவேசமாயிருந்தாய். ஆகப்பதின்மூன்று வயது சென்றது, இன்ன முனக்கு ஆயுசு முப்பத்தேழு வருஷ மிருக்கின்றது. இதிலே உனக்கு இருபத்தைந்து வயதளவுங் கன்னிகழிய காரணமில்லை. ஆன படியினாலே தெற்கே உறையூரென்றொரு பட்டணமுண்டு. அதிலே கரிகாலசோழன் ராச்சியபரிபாலனம் பண்ணிக் கொண்டிருக்கிறான். அவனிடத்திலே ஆலாத்திப் பெண்கள் பன்னீராயிரம் பெண்களுக்கு முதல்வியான மரகதவடிவு என்றொரு பெண்ணுண்டு. அந்த மரகதவடிவு வயற்றிலே நீபோய் வெகு ரூபசவுந்தரியத்துடனே பிறக்கப்போகிறாய். நீ பிறந்தவுடனே பட்டணமெல்லாஞ் சண்பகப்பூ வாசனை பரிமளிக்கும்போது சோழராசன் மகள் அதிசயப்பட்டு உன்னைச் சண்பக வடிவி யென்று பெயரிடுவாள். அந்தப் பேரைக்கொண்டு வளருகிற நாளையிலே உன்னுடைய ரூபாதிசயத்தைக் கேள்வியுற்று சந்தோஷப்பட்டு சோழமகா ராசனுமவன் நீ பிறந்தபோது மற்றப் பெண்கள் வயிற்றிலும் குழந்தைகள் பிறந்ததுண்டோ வென்று விசாரிக்கும்போது பன்னீராயிரம் பெண்கள் வயிற்றிலும் பன்னீராயிரம்பெண் குழந்தைகள் பிறந்திருக்கிறதென்று சொல்லுவார்கள். அந்தப் பெண்களையு முன்னையு மெடுத்துகொண்டு வரச்சொல்லி லட்

சணக்காரரை யழைப்பித்து லட்சணம் பார்க்கச்சொல்லி யவர்கள் லட்சணம் பார்த்து நன்றாயிருக்கிறதென்று சொல்வார்கள். அப்போ துன்னைப்பெற்ற தாய் மரகத வடிவை யழைப்பித்து உன்னை நன்றாக வளர்க்கச்சொல்லி கட்டளையிட்டு உன்னை அஞ்சுவயதிலே பள்ளிக்குவைத்து சகலமான கல்வியையுங் கற்பித்து ஏழுவயதிலே ஆடல் பாடலுங் கற்பித்திருக்கிற நாளையில் பனிரண்டு வயதும் பக்குவமாய் வெகு ரூபவதியாயிருப்பாய். ஒரு நாளையதினத்தில் சோழராஜ னுன்னை யழைப்பித்து நீ கற்றிருக்கிற வித்தை ஆடல் பாடல்களெல்லாம் பார்ப்பான். தமிழ்பாஷையில் மிக்க தேர்ச்சியடைந்திருப்பாய். அதைக்கண்டு சோழமகாராஜன் சந்தோஷப்பட்டு "இவள் தமிழுக் குரியவளென்றும் இன்றுமுதற்கொண்டு சண்பகவடிவி யென்கிற பெயர் வேண்டாமென்று மாற்றித் தமிழறியும் பெருமாளென்று பெயர் கொடுப்பான். அப்போது சோழமகாராஜனுடனே சொல்லிக்கொள்வாய், ஐயாவே என்னுடன் கவிப்பிரசங்கம் பண்ணி என்னிலும் சிரேட்டமானவரைச் சேருவேன். ஆகாதபேர்களைத் தள்ளிவிடுவேன். எப்படிக்கொற்ற மன்னர் மண்டலீகர் வந்தாலும் வந்தவர்கள் கையில் முந்தி ஆயிரம் பொன் வாங்கிக்கொண்டு அதன் பிறகு ஒரு கவியைச் சொல்லி அந்தக் கவிக்குப் பொருள்சொல்ல வகையறியாவிட்டாலவனை அடித்து ஓட்டி விட்டு கன்னிகழியாமல் தடவைக்கோராயிரம் பொன் வாங்கிக்கொண்டு உண்டு சுகித்திருப்பேனென்று சொல்வாய். அப்போது இராஜாவுஞ் சந்தோஷப்பட்டு அப்படியே நீ கீர்த்தியடைந்திருந்தால் போதும்போதுமென்று சொல்லி அப்போதே உனக்கு வேறே அரண்மனைக்கு ஏழுமதிலு மறுபத்துநான்கு வாசல்வாசலுக்குவாசல் விநோதம்பண்ணி யிருக்கிற வாசலும் கற்றுச்சொல்லிப் பெண்களிருக்கிற வாசலும் சூத்திரப்பதுமையிருக்கிற வாசலும் புலியிருக்கிறவாசலுங் கரடியிருக்கிற வாசலும் யானையிருக்கிறவாசலும் குரங்கிருக்கிறவாசலும் கோட்டைநாயிருக்கிற வாசலும் கிணறிருக்கிறவாசலும் அந்தக் கிணற்றிலே யிறிந்தால் சூத்திரப்பலகை மேலே மூடிக்கொள்ளவும் அதுகட

ந்து அப்புறம்போனால் குங்குமச்சேறிருக்கிறவாசலும் அந்தக் குங்குமச்சேற்றைக் கடந்தவன் கால்கழுவ அழாக்கு பனிநீர் வெள்ளித்தட்டில் அக்கரையிலே வைத்திருக்கிறது ஞசித்திர மண்டபங்களும் பாரதம் இராமாயணம், அரிச்சந்திரன்கதை நளராஜன்கதை இப்படிக்கொத்த விசித்திரங்களெழுதியிருக்கிற மண்டபங்களும் நீராழிமண்டபமும் பளிங்குமாமண்டபமுந் தமிழறியுமண்டபமும் இயலறிமண்டபமும் இசையறிமண்டபமுங் கூத்துப்பார்க்கிறமண்டபமும் இவைகளெல்லாம் அமைப்பித்து இதற்கப்பால் தோழியுடனே சேவலைக் குத்துச்சண்டைக்குவிடுகிற வாசலும் ஆட்டுக்கடாக்களைப் பாய்ச்சலுக்குவிடுகிற வாசலும் நாடகசாலை வாசலும் அப்பால்நடுமத்தியிலே வெகு அலங்காரமான கச்சேரிமண்டபமும் அதன் மத்தியிலே களிற்றியானைத் தந்தக்கட்டிலும் பிடியானைத் தந்தக்கட்டிலும் தாங்குமஞ்சமாகச் சோடித்து அந்தக்கட்டிலைக் கால்மாடுதலைமாடு தெரியாதபாவனையாகப் போட்டுத் தலைமாட்டில் நிலைக்கண்ணாடியும் கால்மாட்டிலே சூத்திரப்பதுமைகளும் ஸ்தாபித்திருக்கும். அந்தக்கட்டிலின்மேலிற் கால்மாடு தலைமாடறிந்து படுத்துக்கொண்டால் அந்தப் பிரதிமைகளிலொன்று கால்பிடிக்கவும் ஒன்று கைபிடிக்கவும் ஒன்று விசிறியெடுத்து விசிறவும் சிறிது பாக்குவெற்றிலைமடித்துக்கொடுக்கவும் சிறிது தம்பலப்படிக மேந்தவும் இப்படி யனேகசாலம் பண்ணிக்கொண்டிருக்கும். ஒருவேளை வகையறியாமல்வந்து கால்மாட்டிலே தலைவைத்துப் படுத்துக்கொண்டால் அந்தச்சூத்திரப்பதுமைகளிலொன்று தலையை வளைத்துப்பிடிக்கும், ஒன்று மூத்திரப்பேயும், ஒன்று தலையைமழிக்கும், ஒன்று சாணியைக் கொண்டுவந்து தலைமீதில்வைக்கும், ஒன்று விளக்கேற்றிவைக்கும், இப்படி வேண்டிய விகடங்களெல்லாமுண்டு பண்ணும். உனக்குப் பச்சைப் பல்லக்குங் கட்டளையிட்டு நீ பிறக்கபோது பிறந்த பன்னீராயிரம் பெண்களையும் உனக்குச் சேவிக்கத்தக்கதாகத் கட்டளை பண்ணி ரதகஜதுரகபதாதிகளையு நியமித்து இவைகளெல்லாமுனக்குச் சரிசமானமாக விருக்கப்பட்ட தோழிமார்களில் இயலறியும் பெருமா

ளென்றும் இசையறியும் பெருமாளென்றும் இரண்டுபேரு ண்டு. அந்தத் தோழிமாரும் நீயுமாகப் பல்லக்கி லேறிக் கொண்டு ஆடல் பாடல் மேளதாளங்கள் முதலாகிய வெகு ஆடம்பரத்துடனே காலைப்போதிலும் நல்ல மத்தியானகால த்திலும் சாயங்காலத்திலும் இந்த மூன்று நேரமுஞ் சோழ மகாராஜன் கொலுவிற்குப்போய் ஆடல் பாடல் முதலியவை களைச்செய்து திரும்பும்படியாகக் கட்டளைசெய்து பகலுக்கு பிராத்திரிக்கும் பொழுதுபோகும்படியாகத் தரும கதை களைக் கேட்கவும் சகல வேதபுராணங்க ளெல்லாங் கேட்க வும் அதிதிகளுக்கு அன்னம் பரிமாறவும், ஆடையாபரணங் தரிக்கவும் சேஷிக்கை பார்க்கவும் பளிங்குமா மண்டபத்தில் ஒருசாமம் நித்திரைபண்ணவும் இப்படி சகலவித வாடம் பரங்களும் பொருந்தி யிருக்கத்தக்கதாகச் சோழராஜாவான வர் உண்டுபண்ணுவார்.

இந்தப்பிரகாரம் இந்த முப்பத்தெட்டு வயதளவும் நீ கன்னிகழியாமல் வெகு போகசாலியாயிருப்பாய். அந்தக்கா லத்தில் இந்தராஜகுமாரனும் அந்தப்பட்டணத்திலே ஒருவிற குதலையன் மனைவிவயிற்றிலே பிறந்து பெரியவனாகி விறகு விற்று வயிறு வளர்த்துக்கொண்டு திரிவான். இப்படியிருக் கிறகாலத்தில் ஒருநாளதிகாலையில் கடைத்தெருவில் விற குச் சுமையைச் சாத்திவைத்துவிட்டு அங்கே யுட்கார்ந்து கொண்டிருப்பான். அந்தச் சமயத்தில் நீ யுனது தோழிமா ர்களுடனே வெகு ஆடம்பரங்களோடு சோழமகாராஜன்கொ லுவுக்குப்போய் அங்கே ஆடல்பாடல்செய்து கொலுவை விட்டுத்திரும்பிநீ அரண்மனைக்குப் போகிறபோதுகடைத்தெ ருவின் வழியாகவருவாய். அப்போதிந்த விறகுதலையன் நீ வ ருகிற வேடிக்கையைப் பார்த்துக்கொண்டிருப்பான், நீயுமிவ னைப் பார்ப்பாய். அப்படி ஒருவர்க்கொருவர் பார்த்தவுடனே நீ, உன்பக்கத்திலிருந்த தோழிகளையழைத்து அந்தக்கடையி லிருக்கிறவனைப்பாருங்கள். பாசிப்பல்லும்பூதமுகமும் வெந் தவிட்டுக் கழிமரம்போலே காலுங்கையும் அரையிற்சுற்றிய கொடியும் அதிலேசொருகிய அரிவாளுமுடையவனாகவும் மி

ருக்கிறான். அப்படியுமொருவனுலகத்திலிருப்பானோ? இவ்வளவு லட்சணத்தோடிருக்கிறவனையும் ஒரு பெண்பிள்ளையுஞ் சேருவாளோவென்று கேட்பாய். அதற்குத் தமிழறியானவள் அம்மா அப்படியேன் சொல்லுகிறாய் ஊசியில்லவோ ஒருசரட்டைக் கோத்துக்கொண்டிருக்கிறது. ஆகலால் இவனுக்கும் உலகத்தில் ஒருத்தியிருப்பாளென்று சொல்லுவாள் அந்தவசனத்தைக் கேட்டு நீயுமிவனைப் பார்த்துக் காறியுமிழ்வாய், அதையந்தவிறகுத்தலையன் கண்டு ஸ்திரீசாதியான இவள் நம்மைப்பார்த்து காறியுமிழவேண்டியகாரணமென்ன? ஆண்பிள்ளை எப்படியிருந்தாலென்ன? நல்லதெப்படியாகிலும் ஆயிரம் பொன் சேகரித்து இவளுக்குக் கொண்டுபோய்க் கொடுத்து இவளை சேராமற்போவேனேயாகில் நான் ஆண்பிள்ளையாவேனோவென்று மனதில் பிரதிக்கினைசெய்துகொண்டு தன்வீட்டுக்குப்போய் அதற்குத்தகுந்த பேர்களுடனே தன்குறையைச்சொல்லி ஆயிரம்பொன்னுஞ் சவதரித்துக்கொண்டு உன்னரண்மனைக்கு வருவான், அப்படி வந்தவன் கையி லாயிரம் பொன்னையும் நீவாங்கிக்கொண்டு பிறகொரு கவியைச்சொல்லுவாய்; அந்தக்கவிக்குப் பொருளறியாமல் விழிப்பான். அப்போது அடித்து ஓட்டிவிடுவாய். அந்தப்பட்டணத்திலே அவனுக்குமுன்வந்து கையில் அகப்பட்டுப் போனபேரிருப்பார்களல்லவோ! அப்படிப்பட்டவர்களிடம்போய் முறையிடுவான். அதற்கவர்களடாபயித்தியக்காரா, நீ ஐயாயிரம் பொன்னல்ல பதினாயிரம் பொன்கொடுத்தாலும் உன்காரியமாகப்போகிறதில்லை. அவளுடன் கவிசொல்லி பிரசங்கம் பண்ணத்தக்கினவர்கள் இங்கொருவருமில்லை. அவளை வெல்லுதற்கு எவர்களாலுமுடியாது. ஆகையால் கவிசொல்விக்கல்வியல்லமையினால் செயித்தால்மாத்திரம் நீ நினைத்தகாரியம் முடியும். மற்றப்படிக்குக் காரியமாகப்போகிறதில்லை. நீயுஞ்சமர்த்தனானால் மதுரையிலே பாண்டியராஜாவினுடைய சங்கத்தார் நாற்பத்தொன்பது பெயரிருக்கிறார்கள். அவர்களிடத்திற்குப்போய் முறையிட்டுக்கொண்டால் அப்போதேதாவதொருவேளை அவர்கள்வந்து அவளுடன் தர்க்கஞ்செய்தால் செய்வார்களில்லாவிட்டால் இங்கேயாருமவளுக்கெதிரில்லை

ஆகையால் அவ்விடம்போம் பிள்ளாயென்று சொல்லுவார்கள். அப்போதந்த விறகுதலையனும் மதுரைக்குப்போய்ச் சங்கத்தாருடன் முறையிடுவான்.

அதுகேட்டு நற்கீரர்வந்து ராத்திரிப்போதெல்லா முன்னுடன் பிரதிவாதித் துன்னைத் தோற்கடித்துத் தமிழறியும் பெருமாளென்கிற பெயரை மாற்றிவைத்து அதன் பிறகு விறகுதலையனுக்கு உன்னை விவாகஞ் செய்துவைத்துப் போவார். அதற்குப் பின்னும் உனக்கு பன்னிரண்டு வயதாண்டு. அந்தப் பன்னிரண்டு வருஷமும் நீங்களிரண்டு பேருங்கூடி வாழ்ந்திருந்து அப்பால் நீங்கள் கதியடைந்து வாழ்வீர்கள் என்று ஔவையார் வரங்கொடுத்தாள். அதுகேட்டு இரண்டாவேசமும் சாஷ்டாங்கமாக தெண்டன் சமர்ப்பித்து ஔவையாரையனுக்கிரகம் பெற்றுக்கொண்டு போன பிறகு, அப்பால் ஔவையாருந் தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தாள்.

இப்பால் பெண்ணுவேசம் உறையூரில் உருத்திர கணிகையில் சிறப்புற் றெழுதும் மாரதவடிவி வயிற்றில் பிறந்தனள். ஆணுவேசமும் அந்தப்பட்டணத்தில் விறகுதலையன் வயிற்றிற் பிறந்தனன். இவனுக்குத் தமிழறிவாளென்று பெயருண்டாகி ஔவையார் வரங்கொடுத்தபடிக்கு முன்னர்க் கூறியபடி சோழமகாராஜன் முகாந்தரமாய்ச் சகல பிரதிஷ்டைகளு முண்டாயின. இப்படியாக விருக்கிற நாளில் ஒருநாள் பச்சைப்பல்லக்கின் மீதேறிக்கொண்டு பன்னிரண்டாயிரம் பெண்களுஞ் சேவித்துவரப் பகலிற் பந்தம் பிடிக்க வெண்சாமரம் வீச தோழிமார் இரண்டுபக்கத்திலும் தாவிக்கொண்டுவரக்கட்டியக்காரர்கட்டியங்கூறி யெச்சரிக்கைசொல்லப் பதினெட்டுமேளவாத்தியமு முழங்கத் தும்புரு, வீணை கின்னரி, சுரமண்டலம், இராவணாஸ்திரம், குடமுழா முதலிய பல்லிய முழங்க வெகு ரூபலாவண்ணியத்துடன் வாவிப்போலாங் கண்டு மூர்ச்சைபாய விழுந்திடவுஞ் சோழமகாராஜன் கொலுவிற்குச் சென்று அவர் திருமுகம்பெற்றுத் திரும்பி

வருகிறபோது அந்த விறகுதலையனைக் கடைவீதியிற் கண்டு அவனையும் ஒருபெண்பிள்ளை சேருவாளோவென்று காறியுமிழ்ந்தாள். அதை யந்த விறகுதலையன் கண்டு பளபளா, நன்றாயிருக்கின்றது! இவளோ சோழமகாராஜன் வீட்டு வெள்ளாட்டிப்பெண்! இவளெப்படி யிருந்தாலுந் தேவடியாள்தானே! நாம் ஆண்பிள்ளை யல்லவோ? நம்மைப் பார்த்து இவள் காறியுமிழ்ந்த காரணமென்ன? இவளுக்கித்தனை கெருவமெப்படி வந்தது? அவளுடைய காரியமென்னவென்று கோபித்துக்கொண்டு என்பங்கில் தெய்வமிராமற் போகிறதா! எப்படியும் ஆயிரம் பொன்னைச் சேகரித்துக்கொண்டு இவளிடம் போகாமற் போகிறேனோவென்று சபதங்கூறிக்கொண்டு தன்வீட்டுக்குப் போகாமல் நேராகப் புறப்பட்டுக் காட்டிற்போய் விறகு வெட்டிக்கொண்டு அந்தக் காட்டிலே யொருமாமரம் வருஷத்திற் கொருபழம் பழுக்கிறது. அந்தப் பழத்தை ஒரு ரிஷிவந்து அறுத்துச் சாப்பிடுவார். அப்படிக்கொத்த மாமரத்தின் கீழே இவ்விறகுதலையன் மெத்த வெயிலானபடியால் வந்து நிழலிலே படுத்துக்கொண்டிருந்தான். அப்போது அந்த மரத்தின் பழம் பழுத்திருந்தது. அந்தப் பழத்தைக் கண்டறுத்து வீட்டுக்குப் போகிறபோது சாப்பிடலாமென்று மடியில்வைத்துக் கொண்டிருந்தான். வெயில் தாழ்ந்தவுடன் எழுந்திருந்துபோய்ப் பின்னையும் விறகு வெட்டிக்கொண்டிருந்தான். அன்றைக்கு ரிஷி வந்து மாமரத்தைப் பார்த்துப் பழமில்லாததைக் கண்டு வருஷாவருஷந் தப்பாமலிருக்கிற பழ மிப்போ தில்லாமற் போவானேனென்று அங்ஙனே சுற்றிலும் பார்க்கிறபோது இந்த விறகுதலையன் சமீபத்தில் விறகு வெட்டுகிற சத்தங்கேட்டு அவனிடத்திற்போ யப்பா இந்த மாமரம் வருஷத்திற்கொரு பழம் பழுக்கும், நான் வந்து பழத்தை யறுத்துச் சாப்பிடுகிறது; பின்னை யொருவருந் தீண்டுகிறதில்லை. இப்போது அந்தப் பழத்தைக் காணோம். நீயேதாகிலுங் கண்டதுண்டோ வென்று கேட்க அந்த விறகு தலையனு மில்லையென்று சொன்னால் முநீஸ்வரர் சாபமிடப் போறாரென்று பயந்து, ஐயா! வெய்யிலுக்குப் போய் மரத்தின் கீழே யிருந்தேன். அப்போது நான் அந்தப்

பழத்தைக் கண்டறுத்து பிற்பாடு சாப்பிடலாமென்று படியில் வைத்துக்கொண்டிருக்கிறேன். இதோ பாருமென்று சொல்லிக்கொடுத்தான். அப்போது இந்த முனியுஞ் சந்தோஷப்பட்டு பழத்தைச் சாப்பிடாமல் வைத்துக்கொண்டிருந்து நாம் கேட்டவுடனே யில்லையென்று சொல்லாமல் கொடுத்தானல்லவா ? இவன் நல்லவன், இவனுக்கு ஒருவரங் கொடுப்போமென்று அவனை யழைத்து அங்கே நிற்கின்ற விருட்சங்களைக் காண்பித்து இந்த மரங்களனைத்து முனக்குச் சந்தனமரங்களாகக் கடவது. இவைகளை வெட்டிக்கொண்டு சென்று விற்றுக்கொள். இந்த மரங்களினாலே யுனக்குவேண்டிய ஐசுவரியம் வரும். மகாராஜனாக விருக்கப்போகிறாயென்று சொல்லிச் சென்றார். அதன் பிறகு அந்த விறகுதலையனும் அந்தச் சந்தனமரத்தை வெட்டிக் கட்டைகட்டையாகத் தறித்துச் சுமை கட்டிக்கொண்டு அந்தப்பட்டணத்திலுண்டான குடிபடைகள் துரைகள் மந்திரி பிரதானி பிராமணர் வர்த்தகர் மற்று முள்ளவர்களுக்கெல்லாம் வீட்டுக்கு வீடு தவிராமல் ஒருகட்டு விறகும் ஒரு சந்தனக்கட்டையுமாகப் போட்டு வருவான். முன்னாலே விறகு விற்று அன்றைக்கன்றைக்குக் கூலிவாங்கிக் கொண்டுபோய் வயிறுவளர்த்துக் கொண்டு திரிகிறவன் முன்பு செய்ததெல்லாம் போய் இப்போது தமிழறியும்பெருமாள் நிமித்தியமாகப்பொன்சேரவேண்டுமென்று கூலிவாங்காமல் பிச்சை யெடுத்து வயிறுவளர்த்துக்கொண்டு சும்மாய்ப் போவான். ஆராகிலும் விறகுகேட்டாலுங் கேளாவிட்டாலும் வலியக்கொண்டுபோய் வாசல்தோறுஞ் சந்தனக்கட்டையும் போட்டுவருவான். ஆராகிலுமழைத்து உனது கூலியை வாங்கிக்கொண்டு போவென்றால் எனக்கு வேண்டியபோது வாங்கிக்கொள்வேனென்று சொல்லிக்கொண்டு திரிந்தான். இப்படி யிருக்கிற நாளையிலே அந்தப்பட்டணத்துக்குப் பெரியசெட்டியார் வீட்டிலிருக்கிற வெள்ளாட்டியானவள் அன்றைக்குச் சந்தனக்கட்டையை விறகென்று நினைத்து அடுப்பிலே வைத்து எரியவிடும்போது அந்தப் பட்டணமெங்குஞ் சந்தனவாசனை கமகமவென்று பரிமளித்தது. செட்டியாரும் அதிசயப்பட்டு மனைக்கட

யிலிருந்து ஓடிவந்து தன் வீட்டின் மடப்பள்ளியறைக்குப் போய் அடுப்பிலேயென்னத்தைப்போட்டெரியவிட்டீர்களென்றும் சந்தனவாசனை வருவானேனென்றுங்கேட்க அதற்கு வெள்ளாட்டி சொன்னது:—நானுமென்று சொல்லுவேன், ஆரோ ஒருவன் வெட்டியான்போலே யிருக்கிறான். அவன் நாடோறும் ஒருசுமைவிறகு கொண்டுவந்து போட்டுப்போவான். அவையெல்லாம் ஒரு மூலையிலே யிருக்கின்றன. அதுகளிற் கருங்கட்டையாய் ஒரு கட்டையை யெடுத்து விறகென்று நினைத்து அடுப்பிலே வைத்தேன். இதுதான் விவரமென்றும் இதுவுமல்லாமல் இவன் முன்னாலே விறகு கொண்டுவந்துபோட்டு அன்றைக்கன்றைக் குண்டான கூலியை வாங்கிக்கொண்டு போகிறதுண்டு. இப்போது என்னவோதெரியாது கூலிவாங்காமல் விறகைமாத்திரம் போட்டுவிட்டு சும்மாய்ப் போகின்றான். நாங்க ளவனை யழைத்து கூலியைவாங்கிக்கொண்டு போவென்றால் எனக்குத் தேவையானபோது வாங்கிக்கொண்டு போகிறேன். உங்களுக்கென்னவென்று சொல்லி இப்படி கூலிவாங்காமல் ஒருமாதமும் நாற்பது நாளாகச் சும்மாப்போகின்றான், அதென்னவோ தெரியாதையவென்றுசொன்னாள். செட்டியார் இந்தவிசேஷத்தைக்கேட்டு விறகுவிற்றுக் கூலிவாங்கிச் சாப்பிடுகிறவன் கூலிவாங்காமற் சும்மாய்ப்போகிற காரணமென்னவோ தெரியாது! புதுமையாக விருக்கிறது! இதனைவிசாரித்து அறியவேண்டு மாதலால் நாளைக்கு நம்முடையவீட்டுக்கு விறகுகட்டிக்கொண்டு வந்தால் அவனைநம்மிடத்திற்கு அழைத்துக்கொண்டுவாவென்று சொல்லி அவன் முன் கொண்டுவந்த சந்தனக்கட்டையின் பாரத்தைப்பார்த்து சந்தோஷப்பட்டு மாளிகையிலே போயிருந்தார். மறுநாள் காலமேவந்து விறகுபோட்டுப் போகிறபோது செட்டியார்வீட்டுத் தாதிகண்டு அந்த விறகுதலையனை யழைத்துக் கொண்டுபோய்ச் செட்டியார் முன்புவிட்டாள். செட்டியாரும் விறகுதலையனைப் பார்த்து நீயார் பிள்ளாயென்று கேட்க, ஐயா நான்பரதேசி விறகுவிற்கிறவனென்று சொன்னான். விறகு விற்று வயிறுவளர்க்கிறவனானால் கூலிவாங்காமற் சும்மாய்ப் போகிறாய்! அதென்ன

சொல்லும் பிள்ளாயென்று கேட்டார். விறகுதலையனும், ஐயா, எனக்கொரு காரியமுண்டு. அந்தகாரியத்தை நீங்கள் செவ்வைப்படுத்திக் கொடுப்பீர்களென்று நம்பிகூலிவாங்காமல் சும்மாய்ப் போகிறேனென்றான். அந்தகாரிய மென்னவென்று கேட்டார். விறகுதலையன் அதைச் செட்டியாருடனே சொல்ல வெட்கப்பட்டிருந்தான். செட்டியார் நல்லவரானதால் இதை நாம் பாராமரிக்கலாகாதென்று மனதிலெண்ணிக்கொண்டு விறகுதலையனைக் கிட்ட அழைத்து பயப்படாமற் சொல்லும்பிள்ளாயென்றுகேட்க, அப்போதுவிறகுதலையன் சொல்லுவான், ஐயா நான் கடையிலே விறகுகளைச்சாத்தி வைத்துக்கொண் டிருக்கும்போது தமிழறியும்பெருமாள் தோழியாரும் தானுமாக வெகு உல்லாசத்துடனே சோழராஜாவினிடம்போய் கொலுமுகங்கண்டுதிரும்பிகடைத்தெருவழியாகத் தன்னரண்மனைக்குப் போகிறபோது வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தேனப்போது தமிழறியும்பெருமாள் என்னைப்பார்த்து இப்படிவேஷங்குலைந்திருக்கிறவனையும் ஒரு பெண்பிள்ளையானவள் சேர்வாளோவென்று தோழியைக் கேட்டாள். அதற்குத் தோழியானவள் அவனுக்கு மொருத்தி யுண்டாயிருப்பா ளென்றாள். அந்தவிசேஷத்தைக் கேட்டுத் தமிழறியும்பெருமா ளென்னைப் பார்த்துக் காறியுமிழ்ந்தாள். அதுகண்டு நானும் இவள்நம்மைப்பார்த்து எச்சில் உமிழவேண்டிய காரணமென்ன? நாம் ஆண்பிள்ளை எப்படி இருந்தாலென்ன? இப்படிக்கொத்தவளையே அனுபவிக்கவேண்டுமென்று நினைத்து பொன்னுக்கு வழியில்லாதபடியினாலே இந்தவேலை செய்துகொண்டிருக்கிறேன். ஐயா, என்றான். செட்டியாரந்த விசேஷத்தைக் கேட்டு குலுங்கக் குலுங்க நகைத்து இவனிருக்கிற வேஷமென்ன? அவளிருக்கிற போகமென்ன? தேசதேச ராஜாக்களெல்லாரும் வந்தடிபட்டுப் போகிறார்களே! இப்படிமுடுக்காயிருக்கிறவளிடம் இவன்போகிற விதமெப்படி! ஆனாலுமென்ன இவனுடைய அதிஷ்டானுகூல மெப்படியோ அது நமக்குத்தெரியாது. இதைநாம் ஏன் தடைசெய்ய வேண்டுமென்று மனதிலெண்ணிக்கொண்டு, நல்லது இங்கே யிரும்

பிள்ளாயென்று விறகுதலையனை மளிகையிலே வைத்துச்செட்டியார் தன்வீட்டுக்குப்போய் முன்போட்டிருந்த சந்தனக் கட்டைகளை யெல்லாம்பார்த்து அவைகளை விலைமதிக்கும்போது பதினாயிரம் பொன்னுக்கு அதிகமாக யிருந்தபடியினாலே சந்தோஷப்பட்டு விறகுதலையனை அழைப்பித்து இன்னும் எங்கே விறகுபோட்டிருக்கிறாயென்றுகேட்க வீட்டுக்குவீடு தப்பாமற் போட்டிருக்கிறேனென்றான். நல்லதென்று சொல்லிச்செட்டியாரும் இவன்கையிலே விறகு போட்டுக்கொண்டவர்களை யெல்லாமழைப்பித்து அவர்களோடு ஆலோசனைபண்ணிக்கொண்டு இந்த விறகுதலையனை ராஜவடிவாக வெகு ஆடம்பரத்துடனே அனுப்புவிக்க வேண்டுமென்று எல்லாரு மொன்றாகப்பேசிக்கொண்டு நாவிதனையழைப்பித்து, விறகுதலையனுக்குக்க்ஷவரம்செய்து சம்பங்கி எண்ணெயிட்டுத் தலைமுழுகப்பண்ணிக் கடுக்கன் மோதிரம், சரப்பளி, வெள்ளி அரைஞாண், மற்றுமுண்டான ஆபரணங்களும் பூட்டி,பச்சைவடம் தோவத்திகட்டி பாகை சாலுவை அங்கிசாரு, நடுக்கட்டு இவைகளெல்லாந் தரிப்பித்து திவ்வியமான போஜனமமைத்து களபகஸ்தூரி பரிமளாதிகளும் அணியப்பண்ணி, பாக்குவெற்றிலையுங்கொடுத்து, எக்காளம் மேளபேரிகை பூரிகை முதலானபதினெட்டுவகை மேளவாத்தியங்களு முழங்கும்படிசெய்வித்து விறகுதலையனை மன்மதவடிவாக்கி பச்சைப்பல்லக்கிலேவைத்து, ஆயிரம்பொன் முடிப்புகட்டித் தண்டிகையில்வைத்து இரதகஜதுரகபதாதிகள் புடைசூழ சில பெண்கள் முன் ஆடிக்கொண்டுவர அடைப்பக்காரன் வெற்றிலைச்சுருள்மடித்துக் கொடுத்துவர இப்படியாக வெகு ஆடம்பராலங்காரமாக்கிவைத்துப் பட்டணத்துப் பெரியசெட்டியாரும் மற்றுமுண்டானபேரும் இவனைப்பயணம்பண்ணி ஒ ராஜாவே தமிழறியும் பெருமாளிடத்திற்கு போய்வாருமென்று அனுப்புவித்தார்கள். அப்போது விறகுதலையனை இராஜாவுந்தமிழறியும் பெருமாளிடத்திற்குப் போகிறபோது மேளவாத்தியத்தொனி பட்டணமெங்கும் அதிர்ந்து போகத்தக்கதாக முழங்குவித்தான். அது கண்டு இதேதோதெரியாது எப்போதும் போலிருக்கவில்லை,

இன்றைக்கு மேளவாத்தியம் வெகுவா யடிப்பட்டு வருகிறது. இவன் எந்த தேசத்து ராஜாவோ தெரியாதென்று ஆச்சரியப்பட்டு தமிழறியும் பெருமாளுந் தோழியாரும் உப்பரிகையின் மேலேறிச் சிறிதுநேரம் பார்த்துக்கொண்டிருந்து, தாதிகள் மொண்ணைச்சிகள் கற்றுச்சொல்லிப் பெண்கள் இவர்களை அழைத்து என்னசொன்னாளென்றால், அந்த இராஜா நம்முடைய தலைவாசலிலே வந்திறங்கி விசுவாசங் கொடுத்தால் வாங்கிவாருங்களென்று சொல்லித் தானுந் தோழிமாருமாக உப்பரிகை விட்டிறங்கி தானிருக்குமிடமே போய்ச்சேர்ந்தார்கள். அதன்பிறகு விறகுதலையனை இராஜாவுந் ஜெயஜெயவென்று வெகு ஆடம்பரத்துடனே தமிழறியும் பெருமாளுடைய அரண்மனை வாசலிலே வந்திறங்கினான். சிறிதுநேரஞ்சென்றபிறகு தன்னோடு கூட வந்தவர்களையெல்லாம் அனுப்பிவிட்டுத் தானும் அடைப்பக்காரனுமாக விருந்தான். அதுகண்டு மொண்ணைச்சிகள் கற்றுச்சொல்லிகள் வந்து, இராசாவே நீர் எந்ததேசமென்றார்கள். அந்தவிறகுதலையனும் நாம்ராசாக்களல்லவே, இவளுடனே நமக்கு நன்றாய்ப் பேசவராதே, நாம் பேசினால் மோசம் வரப்போகிறதென்று பேசாமல் மவுனமாயிருந்தான். அதுகண்டு இதென்னமோ இவன்வாயைத்திறவாம லிருக்கிறானென்று பின்னையுந் தின்னைப்பார்த்து பழமொழியோ புதுமொழியோ வென்றார்கள். அதற்குஞ் சும்மாவிருந்தான், பின்னையும் நீர் என்ன நிறைகுடமோ குறைகுடமோ வென்றார்கள், அதற்குஞ் சும்மாவிருந்தான். பின்னையும் ஊமையோ செவிடோ வென்றார்கள். அதற்குஞ் சும்மாவிருந்தான். இந்தநான்கு விசேஷத்திற்கும் சும்மாவிருந்தபடியினாலே மொண்ணைச்சிகள் இவர் பேசாமலிருக்கிறதெல்லாம் தலைமையாயிருக்கிற தமிழறியும்பெருமாளுடனே பேசிக்கொள்வோம், இவர்களுடனே நமக்கென்ன பேச்சிருக்கிறதென்று எண்ணிக்கொண்டிருக்கிறானென்று நிச்சயித்துக்கொண்டார்கள். இவன் பேசவகையறியாமலிருக்கிறதை அறியாமல் அவளுடனே பேசிக்கொள்வோமென்றிருக்கிறானென்று நினைத்து சும்மாயிருந்தார்கள். பின்னுஞ் சற்றுநேரத்திற்குப்பிறகு இராசாவே நீர் எங்களுடனேபேசா

விட்டாற்போகிறது,இப்போ திங்கே யாருக்கு விசுவாசங்கொண்டு வந்தீரென்றார்கள். அதற்கு விறகுதலையன் வாயைத்திறந்து உங்கள் நாச்சியாருக்குக்கொண்டுவந்தேன். அவளுக்குப் பரியமென்ன வென்று கேட்டான். ஆயிரம்பொன் பரியமென்று சொன்னார்கள். நல்லதென்று தன்மடிகையி லிருந்த ஆயிரம்பொன்முடிப்பை யெடுத்துக்கொடுத்தான். அதைவாங்கிக்கொண்டு வந்து தமிழறியும் பெருமாள் முன்னேவைத்து தாங்கள் அவனைநான்கு வசனங்கேட்டதும் அதற்கொன்றுஞ் சொல்லாமல் மவுனமாயிருந்ததும், பிறகு கேட்ட வசனத்திற்குப் பொன்கொடுத்ததுஞ் சொன்னார்கள். அது கேட்டு இவன் மூடனென்றறிந்து தாதிகளை யழைப்பித்துப் பொன்னையெடுத்துக்கொண்டுபோய் பணநோட்டம் பார்க்கிறபெண்கையிற்கொடுத்து பார்வையிடுவித்துக் பொன்னைப் பொக்கிஷப்பெட்டியிலடக்கம் பண்ணுவித்து அந்த இராசாவைத் தெருத்திண்ணையி லிருக்கச்சொல்லி வாருங்களென்று சொல்லியனுப்பினாள். அப்படியேதாதிகள் பொன்னைப்பார்வையிடுவித்து பொக்கிஷப்பெட்டியிற் சேர்த்து இராசாவை தெருத் திண்ணையிலிருக்கச்சொல்லிப் போனார்கள். சிறிதுநேரஞ்சென்ற பிறகு அந்த இராசாவைக் கூத்துப்பார்க்கிற மண்டபத்திற் கழைத்துவரச் சொல்லியனுப்பினாள்.

அப்படியே அழைத்துவருகிறபோது விறகுதலையனை இராசாவும் இரண்டாங் கட்டைக்கடந்து இப்பால் வர அங்கே யிருக்கிற சித்திரங்களையும் மொண்ணச்சிகளையுங்கண்டு மோகித்துத் திகைத்துக் கண்ணிமையாமற் பார்த்துக் கொண்டிருந்தான். மறுநாள் பொழுதுவிடிந்தபின்பு அதை விட்டு அப்பாலே போகப்போகிறபோது அந்தத்தாதிகளோடிவந்து அடா மூடா மோசம் போனாயே பொழுது விடிந்து போயிற்றே, இனி யுனக்கப்புறம் போகச்செலவில்லை யென்று கடூரமாகப்பேசிப் பிடரியிலே குத்திப் பழமுறத்தாலடித்துக் குப்புறத்தள்ளி யோட்டி விட்டார்கள். விறகுதலையன் அந்த அடியைப்பட்டுக் கொண்டுபோய் என் கையிலே ஆயிரம் பொன்னை வாங்கிக்கொண்டு சும்மா அடி

த்து ஓட்டிவிட்டார்களென்று தெருவிலே கூவினன். அது கேட்டு மொண்ணச்சிகள் இதென்ன புதுமையாக விருக்கிறது. இன்றையவரையிலு மிப்படிக் கூவிப் புலம்பினபேரில்லை. இவனுரோ நாமறியோமென்று அவனைத் திரும்பவும் அழைப்பித்து கூவுகிறதென்னவென்று கேட்டார்கள். அதற்கு விறகுதலையன் சொல்லுவான். என்கையிலே பொன்னைவாங்கிக்கொண்டால் எனக்கு ஒப்பு சொல்லி யுடன் படத் தேவையில்லையே? சும்மாயடித்து ஓட்டி விட்டாற் பொருளிழந்த நான் கூவாமலென்ன செய்வேனென்றான். அதற்கு மொண்ணச்சிகள் சொன்னது:—உன்கையிலே பொன் வாங்கிக்கொண்டால் ஒப்புச்சொல்ல வேண்டியதுதான். ஆனாலுமென்ன? இப்போது நானுனக்கொரு கவி செல்லுகிறேன். அதற்குப் பயன் சொன்னல் அப்படியே யாகிறதென்று அவர்களில் ஒருத்தி ஒரு கவிசொன்னாள். அந்தக்கவி கேட்டு அதன் தாத்பரியமொன்றுந் தெரியாமற் பேய்போல விழித்துக் கொண்டிருந்தான். அதுகண்டு முன்னே யடித்ததுபொய். இப்போ யடிக்கிறது மெய்யென்று பழ முறத்தாலேயும் பழந் துடைப்பக்கட்டையாலும் மடித்துக் கழுதையின்மேலேற்றி ஊர்க்கோலங்காட்டி யோட்டிவிட்டார்கள். அந்த அடியைப்பட்டுக்கொண்ட விறகுதலையனும் பட்டணத்திலே போய் முன்னாலே தமிழறியும் பெருமாள்கையிலே அடிபட்டுத் தங்கள் தேசத்திற்குப்போக வெட்கப்பட்டுக்கொண்டிருக்கிற அந்த ராஜாக்களுடனே சொல்லி முறையிட்டான். அதை யவர்கள்கேட்டு அப்பா நாங்களுமவளிடத்திலிப்படிதான் அவமானப்பட்டு வந்திருக்கிறோம். எங்களுடனே நீயும் சொல்லி முறையிட்டால் ஆகவேண்டியதென்னவிருக்கிறது. அவளுக்காயிரம் பொன்னல்ல பதினையிரம்பொன் கொடுத்தாலும் பலனொன்றுமில்லை. அவளுடனே கவிசொல்லிப் பிரதி யுத்தரங்கொடுத்து அவளை செயித்தாற் காரியமாகும். இங்கே அம்மாத்திரம் கவிப்பிரசங்கம்பண்ணி அவளை ஜெயிக்கத்தக்க ஆண்பிள்ளைகள் இந்தக் கடல்சூழ்ந்த வுலகத்தி லொருவருமில்லை. ஆனபடியினால் மதுரையில் பாண்டியராசாவினிடத்திலே பிரசண்ட வித்துவாம்சராகிய

சங்கத்தார் சங்கப்பலகையின்பேரிலே நாற்பத் தொன்பது பேரிருக்கிறார்கள். அவர்களேகல்விக்குரியவர்கள். அவர்களுக்கு மிஞ்சினவர்களொருவரு மில்லையென்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இங்கே யிவளிப்படிப் பிரபலமாய்ப் பேரிட்டுக்கொண்டிருக்கிறதை யவர்களறியார்கள். நீ சமர்த்தனானால் லவர்களிடத்திற்குப்போய் உனது மனக்குறையை முறையிட்டுக்கொள்வாயேயாகி லப்போது அவர்கள் வந்து இவளைக் கெர்வபங்கஞ்செய்தாற் செய்யலாமே யல்லது மற்றொருத்தரால் முடியாது. இல்லாவிட்டால் அவளுக்கு இங்கேயாருமெதிரில்லை. நீ போகிறதானாற் சீக்கிரமாகப்புறப்பட்டு மதுரைக்குப் போம் பிள்ளாயென்றார்கள். விறகுதலையனும் அந்த விசேஷத்தைக்கேட்டு நான் பொன் தேடப்பட்ட அருமை யெனக்கல்லவோ தெரியும். அப்படி நான்வருத்தப்பட்டுத் தேடின பொன்னைக் கொடுத்துவிட்டுச் சும்மா போவேனோவென்று வெகு கோபமாய் உடனே புறப்பட்டு மதுரைக்குப்போனான். சங்கத்தாருக்குப் பாற்குடங்கள் கொண்டுபோனார்கள் சிலர். அதைக்கண்ட விறகுதலையன் ஒரு சுக்குமாந்தடியை யெடுத்துக் கையிலே பிடித்துக்கொண்டு குறுக்கேபோய் நீங்களாரடா? பாற்குடமேதடா? ஆருக்குக்கொண்டு போகிறீர்களடா? என்று மறித்தான். அதற்கு இடையர்கள் சங்கத்தாருக்குப் பாற்குடம்கொண்டு போகிறோ மென்றார்கள். அதுகேட்டு விறகுதலையனும் சங்கத்தாரோது பாற்குடங்கொண்டு போகிறதேதென்று பாற்குடங்களைத்தகைத்துப்போட்டான். அப்போது இடையர்பிரமித்து நின்று இவனாரோ தெரியாது. சங்கத்தாருக்கு இதுவரையில் பாற்குடம்போதல் தடைப்பட்டதில்லையே! பாண்டியரசர் முதலான பேர்களும் சங்கத்தாருக்கொருபோதும் எதிர்வார்த்தைசொல்லக் கூடாதே. அப்படிக்கொத்த சங்கத்தாரைச் சட்டைபண்ணமல் அவர்களுக்குப் போகிற பாற்குடத்தைத்தகர்த்தானென்று பயந்து உடனே அதிலொருவன் ஓட்டமாக வோடிப்போய்ச் சங்கத்தாரைக்கண்டு சுவாமி யெனக்கு யாதொன்றுந்தெரியாது. ஒருவன்வந்து தேவரீருக்குக் கொண்டுவருகிற பாற்குடங்களைத் தடுத்துப்போட்டா

னென்று சொல்லசங்கத்தாருமந்த விசேஷத்தைக் கேட்டுப் பிரமித்து, நமது காரியத்துக்குத் தடையுண்டோவென்றும் அவனைப்படிக்கொத்தனென்றும் 'சொல்லிச் சங்கத்தார் இரண்டொருத்தரெழுந்து வெளியிலேவந்து விறகுதலையனைக்கண்டு நீ யாரடா எங்களுக்குவருகிற பாற்குடங்களைத் தடுத்ததற் காரணமென்னடாவென்றார்கள். அதற்கு விறகுதலையன் சொன்னது:—உங்களுக்குசங்கத்தாரென்கிற பேரும் சங்கப்பலகையும் வித்தையாண்மையும் கூட விருக்கிறதோ! எள்ளளவுமில்லாத நீங்கள் எனக்கெம்மாத்திரமென்று தடுக்கீதனென்றான். அதுகேட்டு சங்கத்தாரும் இந்த விசேஷமெதினாலே சொன்னாய். அதனைத் தெரியச்சொல்லவேண்டுமென்றார்கள். அதற்கு விறகுதலையன் சிரித்து பெரியோர்களே, திரிசிரபுரத்தின் மேற்றிசையிலிராநின்ற உறையூர் பட்டணத்தையாளும் சோழராசன் வீட்டு வெள்ளாட்டிப்பெண் தமிழுக் குடையவள்தானே யல்லாமல் தனக்கொருவரும் நிகரில்லையென்று வேறேயரண்மனைக்கட்டிக்கொண்டு வெகு ஆடம்பரத்துடனே தன்வாசலிலே டால்கட்டிவைத்து தமிழறியும் பெருமாளென்று பேரிட்டுக்கொண்டு எந்தெந்த தேசத்து மண்டலாதிபர் வந்தாலும அவர்கள் கையிலே முந்திஆயிரம் பொன்வாங்கிக்கொண்டு ஒரு கவியைச் சொல்லி, அதற்குப் பொருள்கேட்டுப் பின்பு அந்தக்கவிக்குப்பொருள் தெரிந்து சொல்லாவிட்டாலவர்களை அவமரியாதைசெய்து ஓட்டிவிட்டு கன்னிகழியாமற் சுகித்துவாழ்ந்திருக்கிறாள். இப்படி பேர்பெற்ற ஓர் பெண்பிள்ளையிருக்க உங்களுக்குஞ் சங்கத்தாரென்கிற பேருமிருக்கத்தக்கதோ? சொல்லுங்களையாவென்றான். அதுகேட்டுச் சங்கத்தாரும் இது மகாநன்றாயிருக்கிறதே. நாங்கள் தமிழுக்குரியவர்களென்றும் எங்களுக் கிவ்வுலகத்தி லொருவருமெதிரில்லையென்றும் நாங்களெண்ணியிருக்க, ஒரு பெண்பிள்ளை இப்படிப் பேரிட்டுக் கொண்டிருக்கிறாளென்றால், இதென்ன ஆச்சரியம், அப்பாலெங்களுக்கென்ன பெருமையிருக்கின்றது! ஆயினும் இன்றையவரைக்கும் ஒருத்தராவது இவ்விதமாக வந்து சொன்னதேயில்லை, எங்களுடன் சொல்லி முறையிட்டதுமில்லை.

நாங்கள் கேள்விப்பட்டது மில்லை. இப்போது நீ முறையி ட்ட காரியமென்ன? உனக்கேதாகிலும் மனதில் குறையு ண்டோ? சொல்லுமென்றுகேட்டார்கள். அதற்கு விறகுத லையன் தான்கடைத்தெருவிலேயிருந்ததும் தமிழறியும்பெரு மாள்தன்னைப்பார்த்துக் காறியுமிழ்ந்ததும் அதற்காகவிறகுஞ் சந்தனக்கட்டைகளும் வீடுகள்தோறுங் கொண்டுவந்து போ ட்டதும் பட்டணத்துச் செட்டியார் தன்னை இராசவடிவா க்கி ஆயிரம்பொன்கொடுத்து வெகு ஆடம்பரத்துடனே அவளிடம் அனுப்பிவித்ததும் ஆயிரம் பொன்னையும்வாங்கிக் கொண்டு ஒரு கவியைச்சொல்லி அடித்து ஓட்டிவிட்டதும் முதலான விருத்தாந்தங்களைக் கிரமமாகச் சொல்லி, ஐயா, சங்கத்தார்களே! இதன்பொருட்டே நான்உங்களிடத்திற்கு வந்து விண்ணப்பம் பண்ணிக்கொண்டேன் என்றான். அது கேட்டுச் சங்கத்தாரும் இவன்பேச்சை நம்பிப் போகலாகா தென்று மனதில் நினைத்து மெய்யோ பொய்யோ விபரமாய றிய வேண்டுமென்று அந்த விறகுதலையனைக் தங்களிடத்தி லிருத்தி வைத்துக்கொண்டு பின்னை யொருமூடனையழைத்து அவன் கையிலே ஆயிரம்பொன்முடிப்புக் கட்டிக்கொடுத்து ஒரு கவியுமெழுதிக்கொடுத்தனுப்பிய விபரம்:—

மின்னே ரிடையாய் விலைபேசி வாங்குமது
பொன்னு யிரமுமே போதாதோ—எந்நாளும்
சற்றென்றிராதே சதுராகவாங்கியது
பொற்றொடிக்கும் போதும் புகழ்.

இந்தக்கவி சொல்லிக்கொடுத்து இதற்கென்ன சொல் லியனுப்புகிறாளோ பார்த்துக்கொள்வோமென்று மூடனைப் பிரயாணப்படுத்தி உறையூருக்குப்போய்த் தமிழறியும் பெரு மாளைக்கண்டறிந்து வரச்சொல்லி யனுப்பினார்கள். அப்ப டியேயவன் உறையூருக்குப் போய்த் தமிழறியும் பெருமாள் அரண்மனைவாசலிலே நின்றான். அப்போது பெண்ணரசிகள் கள்கண்டு எங்கேயிருந்துவந்தாயென்று கேட்க, மதுரையி லிருந்து சங்கத்தாரனுப்பிவிக்க வந்தேனென்றான், என்ன கொண்டு வந்தாயென்றார்கள். ஆயிரம் பொன்னும் ஒருகவி

யுங் கொண்டுவந்தே னென்றான். அந்தப்பொன்னையுங் கவியையும் வாங்கிக்கொண்டு போய்த்தமிழறியும் பெருமாள் முன்புவைத்து ஆரோ ஒருவன் மதுரையிலே சங்கத்தார்கொடுத்தனுப்பினதாகக் கொண்டுவந்து கொடுத்தானென்று சொன்னார்கள். அதுகேட்டுத்தமிழறியும் பெருமாளும் நல்லதென்று அந்தக் கவியைப்பார்த்து வாசித்துக் கொண்டு இந்தக்கவியிலேதன்னைச்சபித்தாளெழுதியனுப்பினார்களென்று வெகுகோபத்துடனே அந்தக்கவிக்கு மறுகவி யெழுதின விபரம்.

ஆடைபருத்தி தருமாகிலங்கொருத்தி
கோடிபருத்தி கொண்டென் செய்வாள் - மூடர்
கவித்திறமையுண்டாகிற் கற்றநூற்கொண்டு
சவிப்பரோசங்கத்தவர்.

என்று இந்தக்கவியுமெழுதி அந்த மூடனிடத்திற்கொடுத்துப்பொன்னையுங் கொடுத்தனிப்பினாள். அவன்மதுரைக்குப் போய்ச்சங்கத்தாரைக்கண்டு பொன்னையும் கவியையும் அவர்கள் முன்னேவைத்தான். சங்கத்தாரும் அந்தக்கவியைப்பார்த்து ஆ ஆ வெள்ளாட்டி தன்னைச் சொல்லிக்கொள்வதுவிட்டு நம்மையெல்லாரையும் மூடரென்று கவியெழுதியனுப்பினாள். அவளிடம்போய் கவிப்பிரசங்கம்பண்ணித்தோற்கச்செய்து அவளரண்மனையையு மிடிப்பித்துத் தமிழறியும்பெருமா ளென்கிற பெயரையுமாற்றிப்போட்டுவரவேண்டுமென்று வெகுகோபத்துடனே சங்கத்தார் நாற்பத்தொன்பதுபேரு மெழுந் திருந்தார்கள். அப்பொழுது நக்கீரர் ஒரு வசனஞ் சொல்லுகிறார். வாருங்கள் சங்கத்தாரே, நாமெல்லோரும் போய்க்கவிப்பிரசங்கம்பண்ணி வென்று வருகிறது நன்மை யல்ல, பார்த்தபேருக்கு நன்றாயிராது, ஒரு பெண்பிள்ளை நிமித்தியார்த்தம் நாற்பத்தொன்பது பேரும் போய் வென்று வந்தார்களா மென்றால் நகைப்புக்கிடமாம். அது எவ்வளவு ஈனத்துவம். அதனால் நமக்கியாதொரு பிரயோசனமுமில்லை. நீங்களெல்லோரும் இவ்விடத்திற்றானே யிருங்கள், நானொருவனுமேபோய் அவளுடனே வாதித்து

அவளைத்தோற்கச்செய்து தமிழறியும்பெருமாளென்கிற பெயரையும் மாற்றுவித்து இந்த விறகுதலையனுக்குத்தானே அவளைக்கலியாணம் பண்ணிவைத்து வருகிறேனென்றார். அதிலே சிறிதுபேர் தமிழறிவாளென்கிறபேர் பெற்றிருக்கிறதும் அவள்ஔவையார் வரப்பிரசாதத்தினால் ஆராலேயுஞ் செயிக்கக்கூடாமலிருக்கிறவளென்றும் நாம் காற்றுவிசேஷமாய்க் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனாலது ஏதோ எவ்விடமோ யென்னமோவென்று அசட்டைசெய்திருந்தோம். அது இப்போது மெய்யாகவிளைந்திருக்கிறது, அப்படி யவள் ஔவையார்கையிலே வரம்பெற்று ஆராலேயுமழிக்கப்படாமலிருக்கிறவளை நற்கீரரே நீர்போய் எப்படி செயித்துவருவீரெனக் கேட்டார்கள். அதற்கு நற்கீரர் உடனே நான்போய் அவளைச்செயித்துவாராமற் போவேனேயாகில் இன்னபடியென்று பிரதிக்கினை செய்துகொண்டவிபரம்.

சென்றுறையூர்புக்குச் சேயிழையைநான்கண்டு
வென்றுதமிழழித்து மீளேனேல்-மண்ணில்
விருந்திருக்கவுண்டவெறுவலியோடொப்பேன்
வருந்துவரோசங்கத்தவர்.

என்று சொல்லக்கேட்டுச் சங்கத்தார் அனைவருஞ் செவிகளைப்புதைத்துக்கொண்டு சிவசிவாவென்று சொல்லிப் பின்பு நல்லது அப்படியே போய்வாருமென்று அனுப்பினார்கள். அப்போது நற்கீரரும் விறகுதலையனை யழைத்துக்கொண்டு மதுரையைவிட்டுப் புறப்பட்டு உறையூருக்கு வருகிறபோது நடுவே காடர்ந்து அந்தகாரமாயிருந்தது. அந்தக் காட்டின்வழியாக வரும்போது ஒரு வடதாரி மரத்தின் மேலே வள்ளிக்கொடி படர்ந்திருந்தது. அதை யொரு வேடன் கண்டுமேலேயிருக்கிற சிக்குச்சிறகெல்லாம் அறுத்துப்போட்டுக்கட்டப்பாரையினாலே வள்ளிக்கிழங்கைப் பெயர்த்துக் கொண்டிருந்தான். அதை நற்கீரர்கண்டு ஒரு கவியாகப்பிணைத்துக்கொண்டு அவளுடனே தர்க்கம்பண்ணித் தீராதவிதத்திற்கு இதனை யவளுக்குத் தெரியாமற் கண்டசுத்திபாடித் தோற்கச்செய்வோ மென்று மனதி லெண்ணிக்கொண்டு

அப்பாலேபோகிறபோது விறகுதலையனை யழைத்து, வாரும் பிள்ளாய், அவளிருக்கு மரண்மனையின் கட்டுக்காவலென்ன? அங்கே யென்னென்ன அதிசயங்களுண்டாயிருக்கிறதோ அவைகளையெல்லாம் விபரமாயெனக்குத் தெரியச்சொல்லென்று கேட்டார். அதற்கு விறகுதலையன் சொல்லுவான்: ஐயா அவளிருக்கிற அரண்மனைக்கு ஏழுமதிலும் அறுபத்துநான்கு வாசலும் வாசலுக்கு வாசல் மொண்ணாச்சிகள் கற்றுச்சொல்லிகள் சூத்திரப்பதுமைகள் யானைகள் புலிகள் கரடிகள் குரங்குகள் வேட்டைநாய்கள் கிணறு குங்குமச்சேறு சித்திரமண்டபம் கச்சேரிமண்டபத்திற் களிற்றியானைத் தந்தக்கட்டிலும், பிடியானைத் தந்தக்கட்டிலும் போட்டிருக்குதாம். பின்னையுமென்னென்னவோ விருக்கிறதென்றுஞ் சொல்லுவார்கள். எனக்குச் சொல்லத்தெரியாது. எனக்குத்தெரிந்தமட்டும் அங்கேயிப்படிக்கொத்த விநோதங்களெல்லாமிருக்கின்றன ஐயா வென்றான். அதுகேட்டு நக்கீரர் இன்னமும் விநோதங்களனேக மிருக்கலாமென்று நினைத்துக்கொண்டு விறகுதலையனை யழைத்து எண்ணெய்ச்சீலை மூங்கிற்கழி, செம்பருத்திப்பூ, மல்லிகைப்பூ, காந்தக்கல், கட்டெறும்பு, அலவன், வாழைத்தண்டு, கருப்புக்கழை, எலுமிச்சம்பழம், இவைகளையெல்லாஞ் சேகரித்துக்கொண்டு வாவென்று அனுப்பினார். அப்படியே போய் அவைகளனைத்தையுஞ் சேகரித்துக்கொண்டுவந்தான். அதன்பிறகு இருவரும் புறப்பட்டுத் திரிசிராப்பள்ளிக்கு வந்து மேற்கு முகமாகத் திரும்பிப் பார்த்தார்கள். உறையூர் பட்டணத்திலே தமிழறியும் பெருமாளிருக்கிற உப்பரிகையின் மீதிலே செய்துவைத்திருக்கப்பட்ட பொற்குடந்தோன்றிற்று. அதைக்கண்டு நக்கீரரும் விறகுதலையனை யழைத்து அதோ பொற்குடந்தெரிகிறதே, அது எந்தவூர், எந்த கோபுரமென்று கேட்டார், அது அந்த வெள்ளாட்டி அரண்மனைக்குள்ளேயிருக்கிற உப்பரிகையின் மேலிலமைத்த பொற்குடமையாவென்றான். அது கேட்டு நக்கீரர் பிறகு தம்முடைய மனதில்,

இதுவோசிராப்பள்ளியிது வோவுறையூர்
இதுவோதமிழறிவாளெல்லை-யிதுவோ

இறைவளர்க்குந்தங்கமிவளெழிப்பதென்னே
குறைவறத்தான்வெல்லையென்குறித்து.

என்றுபிரசித்தினை பண்ணிக்கொண்டு அப்பால் உறையூர்ப்பட்டணத்திற்போய்ச்சேர்ந்தார்கள். அப்போது சாயங்காலவேளையாச்சுது. அதன்பிறகு நக்கீரதேவரும் விறகுதலையனை யோரிடத்திலே வைத்துத்தமதுபச்சைவடம், வஸ்திரம், பாகை, கடுக்கன் மோதிரம் மற்றுமுள்ள ஆபரணங்களையெல்லாம் விறகுதலையன் வசஞ்செய்து அவனையவ்விடத்திற்றானே யிருக்கச்சொல்லி யவன்கட்டி யிருந்தகரித்துணியை வாங்கித்தலையிலும் அரையிலுங்கட்டிக்கொண்டு இரண்டு கொடியைப்பிடுங்கி இடுப்பிலே சுற்றிக்கொண்டு அதிலே யொரு அரிவாளையுஞ்சொருகிக் கொண்டு இவ்விதமாக விறகுதலையனைப்போலவேஷம் பூண்டு அந்தமாற்றெல்லாம்படியிலேபடக்காய்வைத்து வாழைத்தண்டைச் சுமையாகக் கட்டித் தலைமேலேவைத்துக்கொண்டு தமிழறியும் பெருமாளிருக்கிற அரண்மனையைநோக்கிவருகிறபோது சூரியனஸ்தமிக்கிறசமயமாச்சுது. அந்தவேளையிலேநக்கீரதேவரும் வாழைத்தண்டை விறகாகக்கட்டிக்கொண்டு முதற்கட்டு வாசலிலே கற்றுச்சொல்லிப் பெண்களிருக்கிறதைக்கண்டு,

வெய்யோன்கதிரெரிப்ப வேர்க்கண்ணுள்பின்றொடரப்
பையவருமென்றற்பயனறியேன்-துய்ய
மலர்த்தடங்கண்வாய்ந்தமயிலனையீர்கொள்வீர்
விலைக்குவிறகுகோவிறகு.

என்று விலை கூறினசேதியைக்கற்றுச்சொல்லிப்பெண்கள் கேட்டு இதுவரையில் நம்முடைய நாச்சியாருக்கு எதிராளி யொருவன்வந்து கவிசொன்னதுமில்லையே, அந்தக்கவியைக் கற்றுக்கொண்டுபோய் நாம் அவனுக்குச் சொன்னதுமில்லையே, எவன் வந்தாலும் அவனுக்கு நம்முடைய நாச்சியார் கவிசொல்லிப்பொருளறியாதபோது அடித்து ஓட்டிவிடுகிறவழக்கமல்லவோ, இது ஏதோதெரியாது ஆச்சரியமாயிருக்கிறதென்று நினைத்து, இந்தக்கவியைக்கொண்டுபோய்த் தமிழறியும் பெருமாளுடனே, யாரோ ஒருவன் வாழைத்த

ண்டைக்கட்டித் தலைமேல் வைத்துக்கொண்டு, விறகென்று விலைகூறிக்கொண்டு இந்தக்கவியைச் சொன்னானென்று சொன்னார்கள். அதுகேட்டுத் தமிழறியும்பெருமாள்,

உள்ளீரம்பச்சை புகையுமெரியாது
கொள்ளீர்விறகென்று கூறினீர்-மெள்ள
வீணரேபோம்போம் வீணரேநீருந்
தாதரே சங்கத்தவர்.

என்றுசொல்ல இந்தக்கவியைக் கற்றுச்சொல்லிப் பெண்கள் கற்றுக்கொண்டு போய் விறகுதலையனுக்குச் சொன்னார்கள். அதைக்கேட்டு விறகுதலையனை நக்கீரர் இரண்டாங்கட்டுக்குள்ளே போய்ச்சொன்ன வெண்பா:—

சாலவுலர்ந்துண்டு சாலகத்தினூற்புகைபோம்
நீலவிழியாதர்க்கு நின்றெரியுங்-கோலக்
கலைக்குவலையல்குற்கனங் குழலீர்கொள்ளீர்
விலைக்குவிறகோ விறகு.

இந்தக்கவியைக்கற்றுக் கொண்டுபோய்த் தமிழறியும் பெருமாளுடனே சொன்னார்கள். அதைக்கேட்டு அவள் இவனைக்கொண்டாடிக்கொண்டு இவன் நல்ல வித்துவானுமாய் நல்ல இலட்சணமறித்தவனுமா யிருக்கிறான்.கவிவெகு நேர்த்தியாயிருக்கின்றது. இதை நாமிரட்டிக்கப்போகாது. இன்றுவரைக்குங் கன்னிகழியாமற்சிறேடியுண்டு கீர்த்தியடைந்திருந்தோம். இப்போதிவனென்னகாரணமாய் வந்தானோ தெரியாது. இவனம்மைச்சோதிக்கவந்தவனாகக் காணப்படுகிறது. ஆனாலென்ன? இவனுடைய சமர்த்தெல்லாம் பார்ப்போம். இந்தக்கட்டுகள் எல்லாம் கடக்கச்சே இடைநடுவிலே மோசம்போகாமல் வந்து நம்முடனே கவிப்பிரசங்கம் பண்ண நம்மிலும் வல்லவனாகவிருந்தா லப்படிக்கொத்தவனைக் கூடினால்தானென்ன? தோஷமில்லை யென்றெண்ணிக் கொண்டு மறுமொழியனுப்பினதாவது:—

பால்பாய வெட்டிப் பசுமை யுலர்ந்ததோ
கால்பட்டு வீழ்ந்துதைந்த கட்டினையோ-சாலப்
புகையுமோ வண்மை புகழ்ந்துரையாய் நீயும்
வகையாக வாசலிலே வந்து.

இந்தக்கவியைக்கொண்டுபோய் விறகு தலையனுக்குச் சொல்ல, அவ்விறகுதலையன் மூன்றாங்கட்டுக்குள்ளேபோய்ச் சொன்னதாவது:—

ஈரமுலர்ந்தேயெலும்புபோலேகாய்ந்து
சாலவெரியுமிது தையலே-மாலை
யிரவுவருமுன்னே யிகழாமலிந்த
விறகுதனைக்கொள்க விரைந்து.

இந்தக்கவியைக்கற்றுக்கொண்டு போய்த் தமிழறியும் பெருமாளுடனே சொல்ல அப்போதந்தத் தமிழறியும் பெருமாள் சொன்ன வெண்பா,

விறகோவிறகென்று மேன்மேலும் கூறும்
விறகுவிற்பான் றன்னருகின் மேவி - விறகு
விலைகேட்டு வாருமென்று மெல்லியலாள் கேட்டாள்
கலைவாய் தமிழறியால் காண்.

இந்தக்கவியைக் கற்றுக்கொண்டுபோய் விறகு தலையனுக்குச்சொல்ல, அதுகேட்டு விறகுதலையனை நற்கீரர் நான்காம் வாசல் கடந்து, ஐந்தாம் வாசலிலே சென்று சொன்னதாவது:—

கட்டுவிறகு விலைகன்னியரே கூறக்கேள்
வெட்டுவிறகுதனை வீரனு - ரிட்ட
நறைவார் குழன்மடவீர் நான்கொண்டு வந்த
விறகாயிரம் பொன்விலை.

என்று சொல்லிக்கொண்டு ஐந்தாம் வாசல் கடந்து, ஆறும் வாசனுக்குவர இந்தக்கவியைக் கற்றுச் சொல்லிகள் கற்றுக்கொண்டுபோய்த் தமிழறியும் பெருமாளுக்குச் சொல்ல இவன் நல்ல வித்துவானோவென்று பின்னையுஞ் சொன்னதாவது:—

பச்சைமுழுது மெரியாது பாரிடத்தில்
இச்சையிது வன்றோ வியம்பக்கேள் - நிச்சயமாய்
உள்ளவிலை சொல்லுமென வொத்ததெரிந்து வந்து
கிள்ளைகாள் சொல்வீர் கிளர்ந்து.

இந்தக் கவியைக் கற்றுச்சொல்லிகள் விறகு தலையனுக்குச்சொல்ல விறகுதலையனு மேழாம் வாசலில் வந்து சொன்ன வெண்பா:—

ஐந்நூற்றிரட்டிப் பொன்னப்புறமுஞ் சோறுகறி
யென்னூர்விறகு விலையிப்படியே - முன்னேநான்
சொன்னபடி யேயொழியச் சொல்லறியாப் பேதைகாள்
சின்னூ விடையாட்குச் செப்பு.

இந்தக் கவியைக் கற்றுச்சொல்லிகள் போய், தமிழறி யும்பெருமாளுக்குச்சொல்ல அதுகேட்டுத் தமிழறியும்பெரு மாளும் விசாரப்பட்டு வருகிறதெல்லாம் வரட்டும். பார்ப்போ மென்று கற்றுச்சொல்லிகள் கையிலே ஆயிரம் பொன்னும் நாழி அரிசியும், மிளகு, மிளகாய், காய், கறி முதலானவை களைக்கொடுத்து இவைகளை அந்த விறகு தலையன் கையிலே கொடுத்துஅவன்போடுகிறவிறகைபோட்டுவித்துக்கொண்டு, அவனை யனுப்பிவிடுங்களென்று சொல்ல, அப்படியே கற் றுச்சொல்லிப் பெண்கள் வந்து அந்த ஆயிரம் பொன்னையும் அரிசி முதலானவைகளையுங் கொடுத்து விறகு போடொன் ருர்கள். அவ்வாறே யவைகளை வாங்கிக்கொண்டு அவர்கள் சொன்னபடியே எட்டாம் வாசலிலே போட்டு அங்கே யிரு ந்துகொண்டு கற்றுச்சொல்லிப் பெண்களை யழைத்து மறு படியு மந்தப் பொன்னையும் அரிசி முதலானவைகளையுங்கொ டுத்து இந்தப் பொன்னை உங்கள் நாச்சியாருக்கு இராத்திரிக் குப் பரியமாகவைத்துக் கொள்ளச் சொல்லுங்கள். அந்த அரிசியைச் சமைத்து நமக்கு ராத்திரிக்குச் சாப்பாடுபண்ணி வைக்கச்சொல்லென்று, அதற்கொரு கவியுஞ்சொல்லி அனு ப்புவித்ததாவது,

தந்தபொன்னு முங்கள் தமிழறிவாட்கே பணயம்
இந்தவரிசிக்கிடு மசனம் - முந்துமெழு
பாகனையசொல்லீர் பகருமிந்தப் பாவையர்க்குப்
போகென்றுற் கூடாது போ.

என்று சொல்ல கற்றுச்சொல்லிப் பெண்கள் உடனே தமழறிவாளிடத்திற் போய் பொன்னையும் அரிசி முதலான சாமக்கிரியைகளைவைத்து அந்தக் கவியையுஞ்சொன்னூர்கள். அதுகேட்டு அவளிது வென்ன காரணமோ புதுமையாயிருக் கிறதென்று விசாரப்பட்டுச் சற்றுத் தெளிந்து பின்னும் சொ ல்லுவாள்:—அடிப்பெண்களே நீங்கள் பொன்னைக்கொண்டு

போய் நமதரண்மனைப் பொக்கிஷத்தில் சேர்த்துவிட்டு அந்த அரிசியைத் தொம்பரத்திற்போட்டுச் சமையற் செய்யுங்கள். அந்த விறகுதலையனை நமதரண்மனைப் புறத்திண்ணையி லிருக்கச்சொல்லுங்கள். அதற்கவ னென்ன சொல்லுகிறானோ அதை நீங்களொன்று மறியாதவர்கள் போலக் குறுக்கு நெடுக்குமாகத் திரிந்து கேட்டுக்கொண்டு அதிசீக்கிரத்தில் வாருங்களென்று சொல்லியனுப்பினாள். அப்படியே அவர்கள் பொன்னைப் பொக்கிஷத்திலே சேர்த்துப்போட்டு அரிசியைத் தொம்பரத்திலிட்டுச் சமைக்க வேலைக்காரர்களுக்கு உத்தரவு செய்துவிட்டு, விறகுதலையனிடத்திற் கதிக துரிதமாய் வந்து ஐயா நீ இந்தப் புறத்திண்ணையி லுட்கார்ந்திருமெனச் சொல்லி என்னசொல்லுகிறானோ யதை யறிவோமென்று யாதொன்று மறியாதவர்கள்போல குறுக்கு நெடுக்கு முலாவித் திரிந்து கொண்டிருந்தார்கள். அப்போது விறகு தலையனான நற்கீர தேவரும் தாதிகளுத்தரவின் படிக்குத் திண்ணை மீதிருக்க அந்தத் திண்ணைக்கெதிராக ஒருபுளியமரமும் பனைமரமும் ஓரிடத்தில் வளர்ந்து இரண்டுமொன்றாய்ப் பிணைத்துக்கொண்டிருந்தது. அது தருணஞ் சாயங்காலமான படியினாலே அந்த மரத்தின் மீதொரு கொக்கு வந்திறங்கி யிருந்தது. அந்தக் கொக்கை நற்கீரர் பார்த்துச் சொன்னதாவது:—

புளியிலரும்பனையிற் பொன்றலைக் கொக்கேகே
ளிளமையொழியா திருந்தீர் தளருவதேன்
எம்மைப்பிரிந்தவரோ யெம்மிலுந் தாரியரோ
உம்மைப் பிரிந்தாருரை.

என்று சொல்ல இந்தக்கவியைக் கற்றுச்சொல்லிகள் போய்த் தமிழறிவாளுக்குச் சொல்ல, அதுகேட்டுத் தமிழறிவாளும் விறகு தலையனான நற்கீரரை யந்தக்கட்டைக் கடந்து ஒன்பதாவது கட்டுக்குளழைத்துவரச் சொல்ல, அப்படியே இவர்களழைத்து வந்து விட்டார்கள். அந்தக் கட்டுக்குள் வந்து விறகு தலையனான நற்கீரர் சொன்னதாவது:—

ஊசிமுனையிலொளிர் முத்துக்கோத்ததுபோல்
வீசும்பனிவந்து மெய்குளிர - மூசு

மூலத்தடங்கண்மாதே மூழுவினையேற் கின்று
நிலைக்கடையோ நிச்சயித்தாய் நீ.

என்று சொல்லக்கேட்ட கற்றுச்சொல்லிப் பெண்கள் சவுக்கென்று போய்த் தங்க ளெசமானியாகிய தமிழறிவாளுக்குச்சொல்ல, அவள் கேட்டு, ஓ பெண்களே அந்த விறகுதலையனை இப்பா லழைத்து வந்து வைக்கோற் படுக்கைப் போட்டுக் கொடுங்களென்று சொன்னாள். அவர்களப்படியே பத்தாவது கட்டுக்குள்ளே யழைத்து வந்து வைக்கோற் படுக்கை கொடுக்க அந்த வைக்கோலின் பேரிலே யொரு கந்தையைப்போட்டுப் படுத்துக்கொண்டு விறகுதலையனான நக்கீரர் சொன்னதாவது:—

வைக்கோற்சயனத்தில் வாரிமுன் றானையின்மேல்
மெய்த்தோல் வருந்திக்கிட வுடம்பே - மொய்க்கு
மதுவொழுகு பூங்கொன்றை வார்சடையோ னிற்றைக்
கிதுவோ விதித்த தெமக்கு.

என்று சொன்ன கவியைக் கற்றுச்சொல்லிகள் கொண்டு போய்ப் பெண்கள் சிகாமணியாய் விளங்கும் தமது முத்தமிழறிவாளுக்குச்சொல்ல அவளது கேட்டு எனது அருமைத் தோழிகளே, நீங்களவனை இப்பாலழைத்துவந்து சிலேப்பாயும் வைக்கோற் றலையணையும் சேகரித்துக்கொடுங்களென்றாள். உடனே கற்றுச் சொல்லிகளப்படியே போட்டுக்கொடுத்தார்கள். விறகுதலையனான நக்கீரா பதினோராவது கட்டுக்குள்ளே வந்து, அந்தப்பாயின்மேற் சயனித்துக்கொண்டு சொன்னதாவது,

சரசரத்த பாயுந்தலையணை வைக்கோலும்
பரபரத் தமைச்சினிமார் பண்பும் - விரகுடனே
யிங்கிவர்கள் செய்யுமியல் புமிவர் நலமும்
நீங்காதென் னுஞ் சத்துணின்று.

என்று சொன்ன கவியை கற்றுச்சொல்லிகள் போய் மின்னற்கொடிபோன்ற இடையையும் பொற் கிண்ணம்போன்ற தனபாரங்களையும் விசேஷ கல்வித்திறமையுமுடைய தங்கள் தலைவியாகிய தமிழறிவாளுக்குச்சொல்ல அதுகேட்டு

அந்த விறகுதலையனைப் பன்னிரண்டாவது கட்டுக்குள்ளே யழைத்து வந்து ஒரு ஈச்சம்பாயும் தலையணையும் போட்டுக் கொடுங்களென்று சொன்னாள். அச்சொல்லைக் கற்றுச்சொல் லிகள் சிரமேற்கொண்டு அந்த விறகுதலையனுக்கு அப்படியே கொடுத்தார்கள். அப்பாலதன்பேரிலே விறகுதலையனான நற் கீரர் இருந்துகொண்டு சொன்னதாவது,

குடவன்கடிக்கக் குளிர்வாடைவீசக்
கிடவென்றிடத்தே கிடந்தேன்-மடநல்லார்
மென்குறங்கைத் தீண்ட விதியில்லை யாதலினு
லென்குறங்கை யான்றழுவினேன்.

என்று சொன்ன கவியைக் கற்றுச்சொல்லிகள் போய்த் தமது அரசியாகிய தமிழறிவாளுக்குச்சொல்ல, இவன் நல்ல வித்துவானே அற்பமானவனல்லன் என்று எண்ணிக்கொ ண்டு பதின்மூன்றாவது கட்டுக்குள் அழைத்துக்கொண்டு போயொரு நார்க்கட்டிலும் ஈச்சம்பாயும் தலையணையும் போ ட்டுக் கொடுத்து நம்மிடத்திலே சேவிக்கின்ற பெண்களிலே அதிக அழகுடனே ஆடும்பெருமாளைச்சிங்காரித்து அவனிட த்துக் கனுப்புங்களென்றாள். அப்படியே கட்டிலும் பாயும் போட்டுக்கொடுத்து அதன்பேரிலே விறகுதலையனை யிருக் கச்சொல்லி, அந்த அழகுடனும் பெருமாளையுஞ் சிங்காரி த்தனுப்பு வித்தார்கள். அவள் வந்து எதிரே நின்றாள். அவ ளைப்பார்த்து விறகுதலையனான நற்கீரர் சொன்னதாவது:—

தறிபோலுங் குண்டத்தாள் தானவளைப்போலே
நெறியாகவந்தென்மு னின்றாய் - சிறுபுலிதான்
நிரப்பசித்தாலுந் தின்னுப்புற் றின்னுமோ
நேரே முன்னில்லாதே நீ.

என்று சொன்ன கவியைக்கேட்டு அவள் தலையை யிறங் கிக்கொண்டுபோய்த் தமிழறிவாளுடனே சொல்லிக்கொண் டாள். அதுகேட்டுத் தமிழறிவாளும் பதினாலாவது கட்டுக் குள்ளே யழைத்துக்கொண்டுபோய் ஒரு கச்சுக் கட்டிலும் ஈச்சம்பாயும் போட்டுக்கொடுத்து நம்முடைய தாதிகளிலே இரதமோகினியைச் சிங்காரித்து அனுப்புங்களென்று சொன்

ளாள். அப்படியே கட்டிலும்போட்டுக் கொடுத்து அந்தப் பெண்ணையுஞ் சிங்காரித்து அனுப்புவித்தார்கள். அவள் வருகிறபோது விறகுதலையனிடத்தில் எரிந்துகொண்டிருந்த விளக்கிருண்டெரிந்தது. அதுகண்டிவள்போ யந்த விளக்கைக் கையாலே தூண்டி யெண்ணெயைத் தலையிலே தடவிக்கொண்டாள். அதை விறகுதலையனான நக்கீரதேவர் கண்டு இவள் இந்த வீட்டு வெள்ளாட்டி யென்றறிந்து, அவளைப்பார்த்துச் சொன்னதாவது:—

சுள்ளிவிறகு சுமைதலைய னானாலுந்
தெள்ளு தமிழறிவாள் சேரமே - யுள்ளஞ்
செழும்பாகினு மினியதேன் சொலாய் கூடேன்
தொழும்பா முன்னாத்தியுடன் சொல்.

என்று சொன்ன கவியைக்கேட்டு அவளும் வெட்கித் தலையை யிறங்கிக்கொண்டுபோய்த் தமிழறிவாளுடனே சொல்லிக் கஸ்திப்பட்டாள்; அதுகேட்டுப் பதினைந்தாவது கட்டுக்குள்ளே யழைத்துக்கொண்டு போய்க் கட்டில் தூங்கு மஞ்சத்தின்பேரில் மெத்தை தலையணையும் சினிப்பாயும் போட்டுக்கொடுத்து நம்முடைய தோழிப்பெண்களிலே மதன சேனைக்குத் தன்னுடைய வெண்சாமரையும் பொற்காளாஞ்சியும் பொன் மிதியடியும் பொற்பட்டாடையும் கொடுத்துச் சிங்காரித்து விறகுதலையனிடத்துக்கு அனுப்புவிக்கச்சொன்னாள். அவள் வந்துநின்றபோது அவளைப்பார்த்து விறகுதலையனான நக்கீரா சொன்னதாவது.

ஆடையுடையுமவள் காண்மிதியடியு
மூடியவளாகவந் தென்முன்னின்றாய் - மாடுபோற்
குண்டனைநான் சேர்வேனோ கோதையர் செய்திதனைக்
கண்டேன்கண் டேனேமின் காண்.

என்று சொன்ன கவியைக் கேட்டுத் தமிழறிவாளுடனே சொல்லி மிகவும் துக்கித்துக்கொண்டாள். அவள் துக்கத்தை மாற்றி யிவன் வந்த காரணமேதோ வென்று விசாரமிட்டுக் கற்றுச்சொல்லிப் பெண்களால் மொண்ணைச்சிகளை யழைத்து அந்தவிறகுதலையனைப்பதினாறுவது கட்டுக்குளழை

த்துக்கொண்டுபோய்த் தொம்பரத்திலே சமைத்திருந்த சாப்பாடு போடுங்களென்று சொல்ல அப்படியே யழைத்து ஒரு கல்லாவிலையைத் தைத்துப்போட்டு வெந்ததும் வேகாததும் கல்லு நெல்லுமாய்ச் சாப்பாடு கொண்டுவந்து வைத்தார்கள். அந்தச் சாப்பாட்டைப்பார்த்து இவர்கள் வீட்டிலே சாப்பிடாதவரானபடியினாலும் சிப்பாடிருக்கிற திட்டமும் பார்த்துச் சாப்பிடுகிற பாவனையாகச் சாதத்தின்மேல் கையை வைத்துக்கொண்டு விறகுதலையனை நற்கீரர் சொன்னதாவது:—

நெல்லான்மருத மணலுண்மையா னெய்த நீண்டகன்ற
கல்லாற்குறிஞ்சி மகரின் வெம்பாலைகலையின் முல்லை
வில்லாம் புருவத்தவேனெடுங் கண்ணிநன் மெல்லி நல்லாய்
சொல்லா நிலமெல்லாங் காட்டுவனீயிட்ட சோற்றிடத்தே.

என்று சொல்லி இதற்குப் பொருள் சொன்னது,

' கல்லொன்று நெல்லிரண்டு காணுமணன் மூன்றரிசி
கல்லையுட னஞ்சுவகை காட்டிலேன் - வின்னுதலாய்
வல்லபடி செய்த வகையெல்லா முங்களது
முல்லைநகை யாட்கு மொழி.

ஒன்று இரண்டு கவியுஞ் சொல்லிக்காட்டி அன்னத்தையுந் தள்ளிப்போட்டு அப்பாலே யிருந்தார். அதுகேட்டுக் கற்றுச் சொல்லிகள் போய்த் தமிழறிவாளுக்குச்சொன்னார்கள். தமிழறிவாளும் நல்லதென்று அந்த விறகுதலையனைக் கச்சேரி மண்டபத்துக்கு வரச்சொல்லி யழையுங்களென்ன, அப்படியே கற்றுச்சொல்லிகள் வந்து விறகுதலையனைக் கச்சேரி மண்டபத்துக்கு வாருமென்றழைத்தார்கள். நல்லதென்று விறகுதலையனை நற்கிர தேவர் கச்சேரி மண்டபத்துக்கு வருகிறபோது பதினேழாங் கட்டுக்குள்ளே சூஸ்திரப்பதுமைகள் இவரை அவமானம் பண்ணும் பொருட்டு எதிரே வந்ததுகண்டு தண்டாலடித்தார். அந்தச் சூஸ்திரப்பதுமைகளெல்லாம் கலைந்து விழுந்து போயின. அது கடந்து அப்பாலே பதினெட்டாம் வாசலிலே போகிறபோது இரண்டு பக்கத்திலும் புலிகள் சீறிவந்தன. அந்தப்புலிகள் முன் செம்பருத்

திப் பூவைப் போட்டார். அவைகளை மாமிசமென்றெடுத்துக் கொண்டு அப்பாலே போயின. அது கடந்து அப்பால் பத்தொன்பதாம் வாசலில் போகிறபோது இரண்டு பக்கங்களிலுங் கரடிகள் சீறிவந்தன. அப்போது காந்தக்கல்லைக் கற்றாணிமேலே தட்டினார். அதிலே நெருப்புப் பிறந்தது. அது கண்டு பயந்து அப்புற மோடிப்போயின, அது கடந்தப்பாலே இருபதாம் வாசலிற் போகிறபோது இரண்டு பக்கமும் யானைகள் கெர்ச்சித்து தும்பிக்கையை நீட்டிக்கொண்டெதிரே வந்தன. அவைகள் கையிலே கருப்பங்கழியைக் கொடுத்தார். அதைவாங்கிக்கொண்டு அப்பாலே போயின. அந்த வாசற்கடந்து அப்பாலே இருபத்தோராம் வாசலிலே போகிறபோது குரங்கு சீறிவந்தது. அதன் முன்னே கட்டெறும்பையும் நண்டையும் விட்டார். அதுகண்டு பயந்து அப்பாலே ஓடிப்போயிற்று. அந்த வாசற் கடந்து இருபத்திரண்டாம் வாசலிற் போகிறபோது வேட்டைநாய் சீறிவந்தது. அதன் முன்பு மல்லிகைப்பூவைப் போட்டார். அது சோறென்று முகந்துகொண்டிருந்தது. அது கடந்து இருபத்துமூன்றும் வாசலிற் போகும்போது அந்தக் கிணற்றிலே யிறங்கி அப்பாலே போவோமென்று இறங்கினால் சூஸ்திரப்பலகையானது மேலே மூடிக்கொள்ளு மென்றறிந்து அந்தக்கிணற்றிலொருகல்லைப்போட்டார். உடனே சூஸ்திரப் பலகைகிணற்றை மூடிக்கொண்டது. அந்தப்பலகையின் மேலேறி அப்புறம்போனார்; அந்தவாசற் கடந்து இருபத்துநான்காம் வாசலிற்போகும்போது அந்த வாசலிலே குங்குமச்சேறு இருந்தது. அப்போது எண்ணெய்ச் சீலையையெடுத்து காலிலே தடவிக்கொண்டு சேற்றைக் கடந்து போய்க்கரையேறி கொஞ்சநஞ்ச மங்கங்கேபட்டிருக்கிற சேறெல்லா மூங்கிற்பிளவாலே நன்றாய் வழித்துப்போட்டு அங்கேவெள்ளித் தட்டில் வைத்திருக்கிற அழுக்கு பனிநீரிலே காலைக்கழுவிக்கொண்டு மற்றபாதிபனிநீரையுந் தமது பிறகே சூழ்ந்துவருகிறதாதிகள் கையிற்கொடுத்து இந்தப் பனிநீரைக் கொண்டுபோய் உங்கள் நாச்சியார் தலையிலேயூற்றுங்க ளென்றுசொல்லி அந்தவாசற்கடந்து இருபத்தைந்தாம் வா

சலுக்கு வருகிறபோது அங்கே சித்திரமண்டபத்திற் பாரத ராமாயண மற்று முண்டான கதாப்பிரசங்கங்க ளெல்லா மெழுதியிருந்தன. அவைகளைப்பார்த்து நாயிங்கே வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்தால் பொழுதுவிடிந்து போகுமென்று நினைத்துச்சீக்கிரமாகப் போக பிறகேவருகிறமொண்ணைச்சிகள் விறகுதலையனைப்பார்த்து இந்தச்சித்திரங்களிருக்கிற விநோதங்களைப் பாரும்பாருமென்று சொன்னார்கள். அதற்குவிறகுதலையனை நறநீரர் சொன்னதாவது:—

கலைகாட்டுந்தோகைக்கருஞ்சக்கரத்தின்
வலைகாட்டியாயிரம்பொன்வாங்கிக்—கலை நெகிழாச்
சூத்திரமாய்த் தொடுங்குறி போலிருந்ததிந்தச்
சித்திரமுஞ்செய்யுஞ்செ.

என்று சொன்னகவியைக் கற்றுச்சொல்லிகள் போய்த்தமிழறிவாளுக்குச் சொல்லத் தமிழறிவாளுஞ்சந்தோஷப்பட்டுச் சீக்கிரமாக அவனையழைத்துவாருங்களென, அப்படியேயழைத்துவருகிறபோது இருபத்தாறும் வாசலிலே நீராழிமண்டப மிருந்தது. அதற்குமிதப்புமேபோட்டுக்கொண்டு பள்ளமறிந்து கரையேறிப்போனார். அதுகடந்து அப்பாற் போகிறபோது இருபத்தேழாம் வாசலிலேபளிங்குமாமண்டபத்திற் போகையில் அந்தமண்டபத்தின்மேலே செய்துவைத்திருக்கிற சித்திரங்களைப் பார்த்தால்கீழேகால்சறுக்கிவிழுவான். அப்படிவிழாமல் உபாயமாகக்கடந்துபோ யப்பால் இருபத்தெட்டாம் வாசலிலே தமிழறி மண்டபமுங்கடந்து இருபத்தொன்பதாம்வாசலிலே இயலறி மண்டபமுங்கடந்தப்பால் முப்பதாம்வாசலிலே இசையறிமண்டபமுங்கடந்தப்பால் முப்பத்தோராம்வாசலிலே கூத்துப்பார்க்கின்ற மண்டபத்திற் கோழிச்சேவற் சண்டையும் ஆட்டுக்கடா பாய்ச்சலும் இப்படியாக அனேகவிநோதங்களிருந்தன, அந்தமண்டபத்திலே கூத்தாடுகிறதும் மத்தளதாளம் போட்டுக்கொண்டு நாடகசாலைப்பெண்களும் கூத்தாடிகளும் இவருக்கெதிரேபுகழ்ச்சிபண்ணிக்கொண்டு ஆடவந்தார்கள். இந்தவேடிக்கையைப் பார்த்துக்கொண்டிருந்தால் பொழுதுவிடிந்துபோ

கும், ஆனபடியால் வந்தகாரியமாகவேண்டுமென்று அவர்களைப்பார்த்து உங்களாட்டமும் பாட்டமும் நானேபார்க்கிறவன். உங்கள்நாச்சியாரே பார்ப்பாளென்றுசொல்லி, அவர்களுக்குத் தியாகங்கொடுத்து அதுகடந்தப்பால்கச்சேரி மண்டபத்துக்குப் போகிறபோது தாதிகள்போய்த் தமிழறிவாளுடனே இந்த முப்பத்தொருவாசலுங்கடந்துவந்தானென்றுசொல்லக்கேட்டு தமிழறிவாளுஞ் சந்தோஷப்பட்டுஇத்தனைகட்டுக்காவலனைத்தையுங் கடந்துவந்தபோதே அவன் தேவனேயென்று அந்த மண்டபம்விட்டுத் தன்னரண்மனைக்குப் போனாள். நற்கீரரும் அந்தக்கச்சேரி மண்டபத்துக்கு வந்தார். அந்தமண்டபம் எப்படியிருக்கிறதென்றால் அறுபத்துநான்கு கால் பொற்றாணிருத்தி மண்டபம்சோடித்து அந்தமண்டபத்துக்கு நவரத்தினக் காலும் பட்டு பட்டாவளி சீனி சீனம்பரத்தினாலு மலங்கரித்து அதிலே மயில்களாடவும் குயில்கள் கூவவும்அன்னங்கள் நடந்து விளையாடவும் வண்டினம் பாடவும், பஞ்சவர்னக்கிளிகள் கொஞ்சிக்குலாவிப்பேசவும், தென்றல்வீசவும், மேற்கட்டு கட்டில் சூஸ்திரப்பிரமைகள் முப்பத்திரண்டு வகை மேளவாத்தியம்பண்ணவுஞ் சாம்பிராணி தூபமும் மல்லிகை முல்லை சாதிபுன்னை மருக்கொழுந்துஇப்படிக்கொத்தபரிமளதிரவியங்களுங் கமகமவென்று பரிமளித்துக் கொண்டிருக்க, இப்படிநானாவிதமான அலங்காரமாயிருக்கப்பட்ட கச்சேரிமண்டபத்தில் களிற்றியானைத்தந்தக்கட்டிலும் பிடியானைத்தந்தக்கட்டிலும் நவரத்தினகசிதமாகச் சோடித்து இரண்டுகட்டிலுஞ் சோடாகப் போட்டிருக்கிற இந்தப்புதுமை யெல்லாம் பார்த்து நற்கீரதேவர் அதிசயப்பட்டு இத்தனைக்குவல்லவளானபடியினாலேதான் இத்தனை ஆடம்பரவட்டணை அலங்காரவல்லமையினாலே தனக்கொருவரு மெதிரில்லை யென்று விருது கூறிக்கொண்டிருக்கிறாள். இவளை வெல்லுகிறது அருமையென்று விசாரப்பட்டு, ஆனாலென்ன நம்முடைய குருவாகியசுப்பிரமணியக்கடவுள் பாதாரவிந்தமே துணையென்று அந்தக்கட்டிலண்டைக்குவந்து கட்டிலைப்பார்த்து அதிசயப்பட்டு இந்தக்கட்டிலிரண்டையும்பெண்கட்டில் ஆண்கட்டிலென்று பிரி

த்தவிபாய்: தமது கையினாலே ஒருகட்டியிலே செருக்கியிருத்திப் பார்க்கத்தளர்ந்திருந்தது. இது பிடியானைத்தந்தக்கட்டில் பெண்கட்டிலாமென்றறிந்தும் அதுகால்மாடு தலைமாடு தெரியாமலிருந்தபடியினாலே அதனை அறியவேண்டித் தமது கையிலிருந்த எலுமிச்சம்பழத்தை யெடுத்து அந்தக்கட்டிலின நடுமையத்திலேவைத்தார்; அதூஉருண்டுபோய் கால்மாட்டில் நின்றது; அதுகண்டு கால்மாட்டிற் சூல்திரப்பிரதமைகளுந் தலைமாட்டிலே நிலைக்கண்ணாடியுமிருக்கிறது இலட்சணமாமென்றறிந்து கொண்டு அந்தக்கட்டிலின்பேரிலேறியொரு கந்தையைவிரித்துப்போட்டுப்படுத்துக் கொண்டார். கட்டிலிலேபிரதமைகள் கட்டியிருந்தபடியினாலே மேற்படி சூல்திரப்பிரதமைகளெல்லாங் கால்பிடிக்கவும் உடம்புபிடிக்கவும் மயில்விசிறியெடுத்து வீசவும், கண்ணாடியெடுத்துக்காட்டவும் வெண்சாமரையெடுத்து வீசவும் இப்படியாகப்பிரதமைகளெல்லாம் பணிவிடைசெய்யத்தக்கதாகவிறகுதலையனை நற்கிரதேவர்படுத்துக்கொண்டிருக்கிறதைக்கண்டு கற்றுச்சொல்லிகள் முதலானபேரும் ஆச்சரியப்பட்டு, தமிழறிவாளுடனே சொன்னார்கள். அவளுங்கேட்டு விசாரப்பட்டு பின்புமனந் தெளிந்துகொண்டு இவன் உத்தமனென்கிறதற்குச் சந்தேகமில்லை. இப்படிக்கொத்தவித்துவானைச் சேர்ந்தாலும் தோஷமில்லை. மோட்சமுண்டு; ஆனாலுமிவனுடையதிறமையை இன்னமும்பார்ப்போமென்று தன்னுடைய தோழியான இயலறியும் பெருமாளைவரவழைத்து அவளுக்குத் தன்னுடைய ஆபரணங்களையெல்லாம் பூட்டிச் சிங்காரித்து வெகு ஆடம்பரத்துடனேயனுப்பினாள். இவளுந்தமிழறிவாள் வடிவாகவந்து நின்றபோது இவளைப்பார்த்து இவள் தமிழறிவாளல்லவென்று தன்மனதிலெண்ணிக்கொண்டு விறகுதலையனானநற்கிரதேவர் சொன்னதாவது.

முத்துநகையுமுகிழ்முலையு மெஞ்ஞான
சத்திசிவம்போலத்தாதியரா—மெத்தெனவந்
தன்பருகாநெஞ்சத்தவரிருக்க நீர்வரவென்
பொன்சிலம்புச்சிற்றடியாய்போ.

இப்படியாகச்சொல்லக்கேட்டு இயலறிவாளும் நீரென்னை தூஷித்தாலும் பெரிதல்ல! வெகு மானமாய்ப் போவென்றீரே; அதுவேபோது மென்றுசொல்லிப்போய்த் தமிழறிவாளுடனே சொன்னாள்; அதுகேட்டுத் தமிழறிவாளும் இனிமேல் யாரையனுப்பினாலுமாகிறதில்லை; நாமேபோகவேண்டுமென்றுதாயான மரகதவடிவை அழைப்பித்துச்சொல்லுவாள்: விறகுதலையனிடத்திற்கு நாம் ஆரையனுப்பினாலும் அவர்களை தூஷணைசெய்து ஓட்டி விடுகிறானே! இனி நானே அவனிடத்திற்கு போகவேணுமேயென்றுகேட்க மரகதவடிவிசொல்லுவாள்; விறகுதலைய னவனேது அவனிடத்திற்கு நீ போகிறதேது! இதென்னமாயிருக்கிறது! நீ இதுவரைக்குந்தமிழறிவாளென்றுபேர்பெற்று உனக்காரு மெதிரில்லாமற்கீர்த்தி படைத்திருந்தாய். இப்போது வந்தவனுக்கு சிறுபெண்களை யழைத்து அவன் முன்னே கேளிக்கையாடச்சொல்லி வேடிக்கைப்பார்ப்பித்து பொழுதுவிடியப்பண்ணி இளிச்சவாய்ப்பித்தா மோசம்போனாயேயென்று அடித்தோட்டி விடுகிறதேயல்லாமல், அந்த விறகுதலையனைக்கூடவும் விதியோ மகளே, போகவேண்டாமென்றாள். அதுகேட்டுத் தமிழறிவாளுந் தாயான மரகதவடிவுக்குச் சொல்லுவாள், வந்தவன் எங்கேயாகிலும் மோசம்போனாலல்லவோ, அடித்து ஓட்டிவிடலாம்! நல்ல இலட்சணமறிந்தவனுமாய் மகத்தான வித்துவானுமாய்க்கட்டுக்குக் கட்டுக்குக்கவி சொல்லிக்கொண்டுவந்த வித்துவானை நம்முடையவாய்வலிமையினாலே அடித்து ஓட்டிவிட்டால் பூமியிலும் அபகீர்த்திக்கிடமாகும் இவனும் வசைகவி பாடிப்போடுவான். இதுகாரியமல்லவென்று தாயான மரகதவடிவுக்குத் தமிழறிவாள் சொல்லிக் காண்பித்ததாவது.

கல்லாவொருவன்றான் சேர்தலினுங் கற்றவனோ
டல்லற்படுவதழகன்றோ—சொல்லாய்
கரும்பிரசங்கைக்குமோகல்வியறிகோதாய்
விரும்புவரோவேம்பின்கனி.

என்றுசொல்லிக்காண்பித்தவுடனே தாயானமரகதவல்லிச் சம்மதித்து நல்லதுபோவென்று சொன்னாள். அதன்பிற

ரு தான்போய் மஞ்சனசாலை புகுந்து பச்சிலை பசுமஞ்ச ளரைத்து ஸ்நாநம்பண்ணி தான் பூண்டுகொண்டிருந்த ஆப ரணங்களெல்லாம் கழற்றிப்போட்டுக் கண்ணுக்கு மையிட் டுக்கொண்டு சந்தனம் பூசிக்கொண்டு நெற்றிக்குத் திரு நீறுங் கஸ்தூரிப் பொட்டு மிட்டுக்கொண்டு ஒரு வெள் ளைப் புடவை யுடுத்துக்கொண்டு தாதிகளிடப்பட்ட வுட மைகளிட்டுக்கொண்டு இன்னுந் தன்னையறியாம லிருக்கவே ண்டுமென்று முன்னாலே போய்வந்த இசையறியும் பெரு மாளைத்தானே முதலமையா யலங்காரம்பண்ணிக்கொண்டு திரும்பவும் வந்தாளே யிவள்தான் தமிழறிவாளென்று அவன் மனதிலெண்ணவேண்டுமென்று நினைத்து வெகு ஆடம்பரமாக மேளதாளங்களுடனே கட்டியக்காரிக ளெச் சரிக்கை சொல்ல இசையறியும் பெருமாளை முன்னே நடத் திக்கொண்டு தான் அவளுக்கு அடைப்பக்காரியைப்போல் பிற்கேநின்று வெற்றிலைமடித்து நீட்டி நீட்டிக்கொடுத்துக் கொண்டுவருகிறவளுடைய விலட்சணத்தைப் பார்த்தும் முகமிருக்கிற வொளியையும் பார்க்கிற பார்வையும் அவளு டைய ரூபாதிசயத்தையும் நடையினொடிப்பையும் பிடியில டங்கும் இடையையும் மூன்றாம்பிறைச் சந்திரனைப்போலே யிருக்கிற அவளுடைய முகத்தினழகையும் பார்த்து இவளே தமிழறிவாளாகவேண்டும், இவள் தன்னாபரணங்களையெல் லாங் கழற்றிப்போட்டு மாறுபாடாக வருகிறதுங் கபடமா யிருக்கிறதென்று தமிழறிவாளைப் பார்த்துத் தூஷணித்துப் பாடநாவெழாமல் விறகுதலையனை நக்கீரர் சொன்னதா வது.

கலித்துறை.

கருகவிழித்தவிழிக்கணையால்வெய்யகாமனையன்
றருகவிழித்தவிழியதுவோவிங்குவமையில்லாக்
குருகுபதத்திளங்கொங்கைமின்னாளிடங் கூடவின்று
பருகவிதித்திலனேவெய்யகாமப்பசிதனக்கே.

என்று சொன்னகவியைக்கேட்டுத்தமிழறிவாளும் இவ னம்மைப்பார்த்து அறிந்துகொண்டு இத்தனை யுவமையிட்டு ப்பாடினனென்று சந்தோஷப்பட்டு அதிசீக்கிரமாய்ப் பெட்

டையாளைத்தந்தக்கட்டிலென்கிற பெண்கட்டிலின்பேரில்முக ளையாகவந்து இசையறியும்பெருமாளை யுயரவைத்துத் தான் கீழேயிருந்துகொண்டு வெற்றிலை மடித்துக்கொடுத்துக்கொண்டிருந்தாள். அதுகண்டு விறகுதலையனை நக்கீரதேவரும் இப்படிகபடமார்க்கமாகவெற்றிலைமடித்துக்கொடுத்துக்கொண்டிருந்தால் எனக்குத்தெரியாதோவென்றுமனதிலெண்ணிக்கொண்டு வெற்றிலை மடித்துக்கொண்டிருக்கிறவள் கையிலே வெற்றிலை கொடுக்கப்போனார். அதைத் தமிழறிவாள் கண்டு அவன்நம்மையறிந்தல்லவோ நம்முடையகையில்வெற்றிலைப்பாக்குக்கொடுக்க வருகிறான் என்றெண்ணிக்கொண்டு அவர்முகத்தை யேறப்பார்த்துத் தமிழறியும்பெருமாள் சொல்லுவாள், நானொருகவிசொல்லுகிறேன்; அந்தக்கவிக்குப்பயன்சொன்னீராகி லும்முடையகையிலே வெற்றிலைபாக்குவாங்குவேன். இல்லாமற்போனால்வாங்குவதில்லையென்றுசொன்னாள். அதற்கு நற்கீரதேவர்சொல்லுவார் நீ சொல்லுகிறகவிக்குப்பயன் சொன்னால்சரி சொல்லாமற்போனால் உனக்கு ஆறுமாதம்ஊழியம்பண்ணுகிறேன். ஒருவேளைநீதோற்றால் என்னமாகிறதுசொல்லும் பெண்ணேயென்றார். அதற்குத் தமிழறிவாள் சொல்லுகிறாள், ஒருவேளைநான் தோற்றேனேயாகில் தேவரீர் சொன்னபடிக்குக் கேட்கிறேனென்றாள். அதுகேட்டு நற்கிரர் ஆனால் சொல்லுகிறகவியைச் சொல்லும் பெண்ணேயென்றார். அப்போது தமிழறிவாளுமிரண்டுகட்டிலுக்குநடுவே பூந்திரை யிடுவித்துத் தமிழறியும்பெருமாளென்கிற வேஷத்துக்குண்டான ஆபரணங்களையெல்லாம் பூட்டிக்கொண்டு பட்டுப்பட்டாவளியுடுத்தி அளகத்துக்குழலிலே யணிந்து கைக்குப்புனுகுசவ்வாதிட்டுக் கொங்கைக்கு குங்குமகஸ்தூரியணிந்து மார்புக்குக்கண்டசரம் முத்துமாலையணிந்து காதுக்குக்கொந்தளமணிந்து கைக்கு அஸ்தகடகமிட்டு காலுக்குச்சிலம்பணிந்து அரைக்கு ஒட்டியாணமணிந்து இசையறியும் பெருமாளை யரண்மனைக்கனுப்பிவிட்டுத் தான் கட்டிலின்மீதிருந்துகொண்டு ஆலவட்டம் வீச உபய வெண்சாமரை வீச, சர்வபூஷணாலங்கிர்தமாக இருந்துகொ

ண்டுவிறகுதலையனை நற்கீரதேவருடனே வாக்குவாதம்ப ண்ணினதாவது:—

ஐயஞ்சிருபத்தஞ்சேரீற்ரேவதான்பெறினும்
வெய்யமதனேந்துகணை மேல்வரினுந்—தையலாள்
கையஞ்சறியாதகாளை தோள்சேர்வளோ
மெய்யஞ்சறப்பெற்றமின்.

என்றுசொன்னகவிக்கு நற்கீரர்தன்னண்டையிலிருந்த அஞ்சறைப்பெட்டியைத் தட்டிக்காண்பிக்க அதற்குத்தமிழறி வாள் இதயூகிபாஷையைப்போ லிருக்கிறது. தெரியச்சொல் லவேண்டுமென்ன, நற்கீரர்பொருள்விடுத்தவிபரம்; ஐபஞ்சி ருபத்தஞ்சாவது, காடுபடுவதஞ்சு, நாடுபடுவதஞ்சு, நகர்படு வதஞ்சு, மலைபடுவதஞ்சு, இவைகளுக்குப்பயன்காடுபடுவத ஞ்சாவது; அரக்கஙளி செந்தேன் அணிமயிலின் பீலித்திருக்க ற்றநம்பியோடைந்து; நாடு படுவதஞ்சாவது: செந்நெற் சிறு பயறு சீராறுஞ் செவ்விளநீர் கன்னற்கதலியோ டைந்து. நகர்படுவதஞ்சாவது கண்ணுடிபித்தன் கருங்குரங்கு காட் டானை மண்ணுளுவேந்தனுடைந்து. மலைபடுவதஞ்சாவது, மாணிக்கம் பச்சைவைடூரியம்நீலம் ஆணிக்கனகமோடை ந்து. கணையஞ்சாவது முல்லையசோகு முழுநீலஞ்சூதப்பூ அல்லி முளரியோடைந்து. கையஞ்சாவது: எண்ணெழுத விலை கிள்ளல் பூத்தொடுத்தல் பண்ணமைந்த யாழினுடை ந்து. மெய்யஞ்சாவது கொட்டாவிநெட்டை குறுகுறுப்பை கூன்குறுடு தட்டிவிழுதலோடைந்து. இப்படிஎன்று நற்கீரர் பொருள்விடுத்தபின்பு பின்னுந் தமிழறிவாள் சொன்னதா வது.

பாய்ச்சிமறித்திடுவார்பாதமேநான்குடையார்
வாய்ச்சகனம்புகுந்துவாழ்ந்திருப்பார்—வீச்சிப்
படைவாணர்தங்களுக்குப்பாரின்மேற்காணு
அடைமாவுமல்லவது.

என்றுசொன்னதற்கு நற்கீரர்பொருள்சொன்னது.

கங்கைபலவைச்சடியிற்கால்களொருநான்குள தாம்
பைம்போர்க்களமேறிப்பாய்ச்சுதலா—லெம்பெரிய

மாவல்லநல்லமாக்காலேமாநிலமன்
பூவலருங்கோதாய்பொருள்.

என்றுபொருள் விடுத்துச்சொன்னபின்பு தமிழறிவாள் பின்னையுஞ் சொன்னது.

அங்காடிகொள்ளப்போயானைகண்டேன்
அணிநகரமன்றினிலேசேனைகண்டேன்
கொங்காளுமுத்தரசர்தம்மைக்கண்டேன்
கொடித்தேரும்பரிமாவுங்கூடக்கண்டேன்.
அங்கிருவரெதிர்நின்றுவெட்டக்கண்டேன்
அதுகண்டியான்றலையைத் தாழ்த்தலுற்றேன்
இங்கிதனையின்னதென்றியம்புவோர்க்கே
எதிரில்லையிப்புவிக்குளென்றவாறே.

இந்தக்கவிக்கு நக்கீரர் பொருள் சொன்னது.

எதிரரங்கமன்றிதனிலேறக்கண்டேன்
எழுதரியதோமாவுமனிதர்கண்டேன்
அதிரரங்கமாயிருவராடக்கண்டேன்
அவ்விருவரெதிர்நின்றுவெட்டக்கண்டேன்
சதுரங்கமிதுகாணும்வேறொன்றல்ல
தார்குழலேநீதலையைத்தாழ்த்தலேனோ
விதிரரங்கமுடையதொருமானேகேளாய்
வீணருக்கும்வேந்தருக்கும்வேலைதானே.

என்றுபொருள்விடுத்தபின்பு பின்னையுந் தமிழறிவாள் சொன்ன கவி.

அக்கரமுமெழுதவொண்ணாவாய்மையாளர்
ஆவின்பின்னேதிரிவாரதுவுமன்றி
சக்கரமும்வலம்புரியுந்தரித்தேநிற்பார்
தாமுரலிற்கட்டுண்டுதயங்காநிற்பார்
மிக்கதொருவடபுனைவர்வெண்ணெயாடி
வெற்றெடுத்துமற்பொருதுவேலைசூழ்வார்
திக்கெட்டும்புகழ்படைத்ததேவேகேளாய்
திருமாலுமல்லவிதுசெப்புவீரே.

இதற்கு நக்கீரர் பொருள் சொன்னதாவது.

குன்றுதமொழியுடையவாய்மையாளர்
கோவின்பின்திரியார்கோபாலரல்லர்

ஒன்றாகக்கடல்கடைந்துவெண்ணெயாடி
யுரலோடேகட்டுண்டுவுழலாநிற்பர்
மன்றாடிமலையெடுத்துமல்லும்போந்து
மற்பொருதிவெற்பெடுத்துக்கொக்கிப்பூண்பா
சென்றுடுமுறையூரிற்றேனேகேளாய்
திருமாலுமல்லவிதுசெக்குத்தானே.

என்றுபொருள்விடுத்தபின்பு பின்னையும் தமிழறிவாள் சொன்ன கவி.

படிமுழுதுந்தரித்தங்கேமன்றுள்ளாடிப்
பத்தருமுத்தருமங்கேபரிந்துநாடித்
நெடுமுடையநான்முகனுமரியுந்தேடித்
தேவரெல்லாம்போற்றரியதிங்கள்சூடி
வரமணியுமுலைமார்புவராங்கம்போலே
வடிவுடையதிருமேனிதழும்புபட்டும்
படிமுழுதுமாளுவிக்கும்வல்லர்தாமே
பரமனூர்தானுமல்லபகருவீரே.

இதற்கு நக்கீரர் பொருள் சொன்னதாவது.

வடிவுரையார்பிறையணிவார்வணிகரெல்லாம்
வழிபடுவார்நாடோறுமனிதர்காண
அடிபடுவார்திருமேனிதழும்புமேற்பார்
அம்மைலார்தகவரதுவுமன்றிக்
குடியினுடன்மன்னர்தங்கண்முன்னேநிற்பார்
கூற்றனெனவருபவரைமாற்றுவிப்பார்
படிமுழுதுமாளுவிக்கவல்லர்தாமே
பரமனூர்தானுமல்லபணத்திறனே.

என்று சொல்லப் பின்னும் தமிழறிவாள் சொன்னது.

கட்டியவண்கரையார்கால்பலவேயுடையார்
இட்டதோர்மடுத்தனிலேயெய்தியதாமரையும்
கொட்டியுநெய்தலுமேகூடமூளைத்திடுமே
யிட்டதமிழ்க்கரசேயேரியுமல்லவது.

இதற்கு நக்கீரர் பொருள் சொன்னதாவது.

கால்வழியேநூலோடிக்கரைகள்சேர்த்துக்
கற்பராப்பல்லிட்டுப்பஞ்சுவைத்துப்
பாவுதல்போல்நூல்தொடுத்துஇழைதிருத்திப்

பசுமையாயுடைதிட்டப்பிணையல்செய்து
பூவலரும்நெடிதுலகிற்கொட்டியிட்டுப்
பொருந்தியதாமரையும்பூத்தேநிற்பர்
வேல்பொருதுங்கண்ணுளேயேரியல்ல
மேகலையென்றேயிதனைவிளம்புவாரே.

என்றுசொல்லக் கேட்டுத் தமிழறிவாள் சொன்ன கவி.

கானகத்திருந்துபோந்துகைகளாற்குத்துமுண்டு
தானகக்கூடந்தன்னிற்றண்பனிநீருமாடி
மேனிலத்தவளங்கொண்டுவீதியில்வருவாரங்கே
ஆனையுமல்லகண்டீரறிந்திடீர்கவிஞர்கோவே.

என்று சொல்ல நற்கீரர் பொருள் சொன்னதாவது.

தானம்போற்கூடந்தன்னிற்றன்கையிற்குத்துமுண்டு
தேனுடன்பாலுநெய்யுஞ்செவிட்டநல்லமுதுசெய்யு
மாதுவேல்விழியினாளே மாநிலத்தோர்கட்கெல்லாம்
ஆனையுமல்லகண்டீரருங்கல்லைதானேயென்றார்.

என்று சொல்லப் பின்னும் தமிழறிவாள் சொன்னகவி.

அக்காடபோகக்கண்டாமிரண்டிலொன்றையுண்
டிக்காடவிடாயிரும்பாரை-யொக்கிடா
ஒன்றார்புரத்தைமுனிந்தா ரேயந்நாளில்
முன்றான்கிலொன்றுடையான்முன்.

என்றுசொல்ல விதற்குப்பாண்டியன் முன்னே நரியைப் பரியாக்கினதென்று நற்கீரர்பொருள் விடுத்தார், பின்பு தமிழறிவாள்மறுபடியுஞ்சொன்னதாவது கவி.

நீரிலானதுதானவைமூன்றுள
நெடியகானின்விலங்கொருமூன்றுள
ஊரிலாடவும்பாடவுங்கொட்டவு
மொன்றிலொருபேதையராமெனச்
சேரவாங்குதனுசுடன்கூடவே
தெற்குமாமுனிதன்னையுமாகவே
பாரின்மீதுஇயல்வல்லார்க்கிது
பன்னிரண்டுவெருஷம்பகருமே.

அதற்குநற்கீரர் பொருள்சொல்லுவார் நீரில்மூன்றாவது மகரம் மீனம் - கர்க்கடகம், கானில் மூன்றாவது மேஷம் - ரிஷபம் சிம்மம்; ஊரில், ஆடுவது துலாம், பாடுவது மிது

னம் கொட்டுவதுதேள், பேதையாவது கன்னி தனுசாவதுவில் தெற்கு முனியாவதுகும்பமெனச்சொல்லி தமிழறிவாளைப் பார்த்து நக்கீரர் சொல்லுவார், நீ சொன்ன கவிகளுக்கெல்லாம் நான் பயன் சொன்னேனே, இனி நாமொரு கவி சொல்லுகிறே னதற்கு நீ பொருள் சொல்லென்று தமிழறிவாளுக்கு நக்கீரர் சொன்னதாவது.

பஞ்சவர்கள்பேரும்வடிவுமவர்குணமும்
தஞ்சமுடனேயதனைச்சாற்றவே-நெஞ்செதிரே
பின்னவகையினடைவடைவேந்தனேயுஞ்
சொன்னார்புலவர்தொகுத்து,

இதற்குதமிழறிவாள் பொருள்சொன்னவிபரம் பஞ்சவர்கள்பேரானதுபிருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாசம் - வடிவாவது-மெய்,வாய், கண் மூக்கு, செவி, குணமாவது-சத்தம்-பரிசம்-ரூபம்-ரசம்-கந்தம்-உணர்வாவது காண்டல் கேட்டல், உண்ணல், உடுத்தல், உயிர்த்தலென்று சொன்னாள். பின்னையும் நக்கீரர் சொன்ன கவி.

படிதனையிறுகப்பற்றிப்பருநிலமதிரக்குத்தி
யுடல்தனையன்றுபாய்ச்சியங்கையும்புக்கிநின்று
கொடிபலசூழ்தலாலுங்குமுறியே வளைத்தலாலும்
வடிவுடைமாதேகேளாய்மதகரியல்லகண்டீர்

என்றுசொல்லத்தமிழறிவாள்பொருள்சொன்னது.

காற்றில்விளைவாகுந்தாரணியின்மீதினிலே
மாற்றவரைவெல்லவகையுளதே-சேற்றூடும்
ஆற்றுமையாலிந்தவம்மவிற்றூன்கவிழ்க்கும்
ஊற்றூலேகாணீரிருந்து

என்றுசொல்லித்தமிழறிவாள் விறகுதலையனைநக்கீரரைப் பார்த்துச் சொன்னதாவது.

மன்னுகலைக்குரியவல்லீரேயாமாகிற்
பன்னும்விறகுதலைப்பாவலரே-யின்னமுநீ [ள்
சொல்லுதியோவென்றுரைப்பசொல்லுவேன்சொல்லுமென்று
வல்லமையாற்செந்தமிழின்மான்.

என்றுசொல்லினவுடனே நக்கீரர் சொன்னதாவது கவி.

ஞாலமிகுத்திருக்குநல்லகரியமேனி
நானிலத்திலறியாததேசமில்லை

காலுமுண்டுகோசினியில்நடக்கமாட்டார்
கருதரியசிறகுமில்லைபறந்தேபோவார்
சிலமுடன்மைந்தரையும்பெறுவார்கண்டீர்
சினேகிதர்வந்தடுப்பார்கள்சேரவொட்டார்
ஆலமுண்டகண்டத்தாரருளினாலே
ஆராய்ந்தேயிப்பொருளையறிந்திடாயே.

என்றுசொல்லத்தமிழறிவாள் பொருள்சொன்ன கவி.

தேங்குபாலிலுப்பைபுன்னைவடவாலத்தி
செய்யமாதளைகொய்யாதின்றேசாலத்
தாங்கிலரிக்கோபுரங்கள்சாலைசோலை
சாளரங்குதிருக்கோயிற்றறுகுவிக்கும்
ஆங்கிலணிபணியாகவினங்களோடும்
அணிதோப்புக்காவணங்களடுத்துவாழும்
மாங்கனிக்குத்தூக்கித்தலைகீழாய்நிற்கும்
வவ்வாலென்றிதன்பேரைவகுக்கலாமே.

என்று சொல்லிப் பின்னு நற்கீரர் சொன்ன கவி.

படைதனிற்சென்றவையருளத்தொலைத்துநேரே
பாவலரையறுக்கவென்றுபடையேயீடும்
குடமுடையபெரிதானகுதிரையேறும்
கோட்டைகொள்ளுங் கொக்கரிக்குங்கொள்ளையாடும்
அடலுருவவேலெறிந்தபகையைத்தீர்க்கும்
ஆராளிபுவியாளுமாற்றானல்ல
விடைமிகுத்தசிவனருளாற்றெறிந்துநன்றாய்
விமரிசையாயிக்கவியைவிளம்புவாயே.

என்றுசொல்லத்தமிழறிவாள்பொருள்சொன்ன கவி.

செந்திருக்கம்பூச்சூடிக்கனலுமேந்தித்
திருக்கரத்தில்மானுமொருமழுவுமேந்தி
விந்தைதனையிடப்பாகந்தனிலேவைத்து
விமலரதுதிருமகனார்விபரத்தோடு
கந்தருக்குமுன்பிறந்த தங்கைமைந்தன்
கரிகரியாம்விகடவிடதடக்கமலபாதன்
தந்திமுகனேறுபெருச்சாளியென்றே
தாரணியிலவர்குலங்கள்சாற்றலாமே.

என்றுதமிழறிவாள்சொன்னபின்பு நற்கீரர்சொன்னகவி.

சிற்றுடை யுடுத்திருக்குஞ்சிறுமியல்ல
சிறந்தகவனூலணிந்திருக்கமறையோனல்ல

ஒத்தேமெய்யெண்ணெயிடும்வணிகனல்ல
வொண்கழுத்தில்மணியுடையாரிடபமல்ல
சித்தாரப்புரமெரித்தார்முன்னேநிற்பார்
சிறந்தமணிவிடைக்குதவாத்தியரல்லர்
பொற்பாதம்பூண்டிருக்குந்திருமாலல்ல
பூவையேயிக்கதையைப்புகலுவாயே.

என்றுசொல்லத்தமிழறிவாள் பொருள்சொன்னதாவது.

மந்தாரம்பிச்சைமுல்லையறுகுறுங்கை
மதியுடனேகொன்றதும்பைமலருஞ்சூடி
யெந்தாயம்பிகையாளையிடத்திலேந்தும்
ஈசரதுதிருக்கோயின்முன்னேநிற்கும்
கொந்தாருமலராடையணிந்துகொண்டு
குவலயமென்றிருவிழாக்கொள்ளுங்கண்டீர்
ஐந்தானகாரியமுமறிந்தகோவே
யரியகொடிக்கம்பமென்றேயறையலாமே.

என்றுதமிழறிவாள்சொல்லவிறகுதலையனை நற்கீரர்,

இந்தப்பிரசங்கத்திலே பொழுது விடிந்துபோகுமென் றெண்ணிக்கொண்டு அந்தத்தமிழறிவாளைப் பார்த்துச் சொன்னதாவது.

ஆய்ந்தசயனத்திலாயிழையேயன்றியே
போந்தவணிகிடக்கப்போகுமா-வாய்ந்த
முன்னான்குமுலையுமுழுமதியுமன்றியே
யென்னான்குமென்செய்வேன்யான்.

என்றுவிறகுதலையனை நற்கீரர் சொல்லக்கேட்டுத் தமிழறிவாளுக்கு மன்மத விகார முண்டாகி திரையைவாங் கிப் போட்டு விறகுதலையனைப் பார்த்தாள். பார்த்தபோது அந்தவிறகுதலையனை நற்கீரர்பின்னுந் தமிழறிவாளைப்பார் த்துச்சொல்லியதாவது.

என்னைவிறகுதலையனெனவேயிகழ்ந்தாய்
மின்னிடையும்பெற்றதொருமெல்லிநல்லாய்-மன்னவருள்
தோராவழகுடையான்றேரினின்மேலேயணைந்து
சேராதவாறுதனைச்செப்பு.

என்று நற்கீரர்சொல்லக்கேட்டுத் தமிழறியும்பெருமா ள் அதிகசந்தோஷமாய் மன்மதவிகாரம்பொறுக்கப் போகா

மல் எழுந்திருந்துவந்து தன்னைக் கூடச்சொல்லி விறகுதலையனான நற்கிரதேவரைக் கட்டிக்கொண்டு சொன்னதாவது.

கையிருக்கக்காடகெறியிருக்கக்காதலுன்
மெய்யிருக்கக்கண்டம்விழிபருக-மொய்குழலாள்
பாகுஞ்சுவையும்பசுந்தேனுமுப்பழம்போ
லாகமுறக்கூடென்றாளாங்கு.

இப்படிச்சொல்லிக்கட்டிக்கொண்டவுடனே நற்கிரதேவரும்விசாரப்பட்டு நாமிவளைக்கூடினால் சங்கப்பலகையும் பொறாது. நான்குயுகமா யிருக்கப்பட்ட நாமிப்போதிந்தக் காரியம் பண்ணினோமேயாகில் சங்கத்தாரும் நகைப்பார்கள். ஆகாசவாணிபூமிதேவியும்நகைப்பார்கள். உலகத்திலே அபகீர்த்தி யுண்டாகும். இவைகளுமன்றி விறகுதலையனுக்கல்லவோ கட்டிவைக்கிறேனென்று பிரதிக்கினைபண்ணிக் கொண்டு வந்தது, அப்படியிருக்க நாமிவளைக்கூடுகிறது நீதியல்லவென்று ஒடினமனத்தைத்திருப்பித் தமிழறிவாள் தம்மைக் கட்டிகொண்டகையைக் கவியினால்விடுவிக்க வேண்டுமென்றுஎண்ணிச் சொல்லுவார்.

ஒருவனொருத்தியாயூரில்லாவூர்புக்
கிருவர்க்கங்கிருவரையும்பெற்றான்-இருவரிலே
மூத்தானைக்கொன்றான்பகைவற்காதியிட்டான்
றாதைவருமளவுந்தான்.

என்றுசொன்ன மாத்திரத்திலே தமிழறிவாள் கட்டிக்கொண்டிருந்ததையைவிட்டுக் கட்டிலைவிட்டிறங்கி அப்பாலேபோய்ச்சுற்றிலும் பனிநீரிறைத்து மயில்விசிறியையெடுத்துக்கொண்டு அந்தவிசிறிக்குப்பனிநீரிரைத்தெளித்து நற்கிரருக்கெதிரேநின்று விசிறிக்கொண்டு அவர்சொன்னகவிக்குப் பொருள் சொன்னவிபரம், ஒருவனொருத்தியாவது சூரியனுக்கு ரதசாரதியாகிய அருணனென்பவன் ஒருநாள் சூரியனைப் பார்த்துநான்தேவலோகம்பார்த்துவருகிறேனென்று சூரியனிடத்திலே விடைபெற்றுக்கொண்டு முப்பத்துமுக்கோடிதேவர்கள் நாற்பத்தெண்ணாயிர ரிஷிகள்புடைசூழ மேனகை, ரம்பை, ஊர்வசியென்று சொல்லப்பட்ட தேவக

ன்னிகைகள்நடனஞ் செய்யக்கொலுவாயிருக்கிற தேவேந்திரன் சபைக்கு ஒருபெண் வடிவாய்வேஷங்கொண்டு அருணன்போனான், அப்போது இந்தப்பெண்ணைக்கண்டு தேவேந்திரன் மோகித்துக்கூடினான். அந்நேரமே ஒருபிள்ளைபிறந்தது. அந்தப்பிள்ளையையெடுத்துக்கொண்டு திரும்பவும் அருணன்சூரியனிடத்திற்குவந்தான். சூரியன் அவனைப்பார்த்து இந்தப்பிள்ளை யுனக்கேதென்றான். நான்ஸ்திரீவேஷங்கொண்டு தெய்வலோகத்திலே தேவேந்திரன் சபைக்குப்போயிருந்தேன். அங்கேதேவேந்திரன் என்னைக்கண்டு மோகித்துக்கூடினான். அப்போதுபிறந்தது இந்தப்பிள்ளையென்றுசொன்னான். அந்தவிசேஷங்கேட்டு சூரியன் அருணனைப்பார்த்து அந்த ரூபத்தைநான் பார்க்கவேண்டுமென்றான். நல்லதென்றுசொல்லி முன்னெடுத்திருந்த ஸ்திரீரூபத்தை யெடுத்தான். அதுகண்டு சூரியனுமோகித்துக்கூடினான். அப்போது ஒருபிள்ளைபிறந்தது. அந்தஇரண்டுபிள்ளைகளிலே மூத்தபிள்ளை வாலி. இளையபிள்ளை சுக்கிரீவன். இந்தவாலியைக்கொன்றவர் இராமர்; இராமருக்குப் பகையாளி இராவணன் நகராகிய இலங்கைப்பட்டணத்தைத் தீயிட்டவன் அனுமான். அந்த அனுமாருக்குத் தகப்பன் வாயு. அந்தவாயுவாகிறது காற்று. நான் கட்டிக்கொண்டது இருக்கமாயிருக்கிறதென்று அந்தக் காற்று வருந்தனினு நில்லென்று சொன்னீரென்று தமிழறிவாள் சொல்லிக்கொண்டிருக்கிற வேளையில் ஒரு கெளளி சொல்லிற்று. அதை நற்கீரர் ஆண்டுபார்த்து நன்றாயிருக்கிறது. நாம் வந்த காரியம் செயமாகுமென் றெண்ணிக்கொண்டிருக்கிறபோது தமிழறிவாளும்அந்த கெவுளியை யாண்டு பார்க்குமளவில் அது தனக்கு மரணஞ் சொல்லுகிறதென் றறிந்துகொண்டு நற்கீரரைப் பார்த்து அந்த கெவுளி என்ன சொல்லுகிறதென்று கேட்டாள். அதற்கு நற்கீரர் இனியொரு க்ஷணநேரத்திலே சாவுசொல்லுகிறதென்று சொனனார், அதுகேட்டுத் தமிழறிவாளு மப்படி பிராப்தியிருந்தால் தப்புகிறதில்லை. உமக்கு அந்த கெவுளி என்ன சொன்னாலென்ன ? நீர் சொல்லுகிற கதையை சொல்லுமென்றாள்.

அதுகேட்டு நக்கீரர் சொல்லுவார் நல்லது நாமொரு கவி சொல்லுகிறேன், அந்தக் கவிக்குப் பொருள் சொல்ல வல்லையோவென்றார். அதற்குத் தமிழறிவாளும் நீரத்தனை வல்லவரோவென்றாள். ஆனாலென்ன நான் தோற்பேனேயாகில் என் குடுமியும் பூணூலுமறுத்துப்போட் டென்வீட்டிலே வெள்ளாட்டிப்பையலாயிருந்துகொண்டு உனக்கேவல் பணிவிடை செய்கிறேன். நீ தோற்றால் அதற்கென்ன சொல்லுகிறாயென்று கேட்க நான் தோற்றேனேயாகில் என் அரண்மனையுமிடிப்பித்துத் தமிழறிவாளென்கிற பெயரையு மாற்றிப்போட்டு என் தலையையுஞ் சிரைப்பித்து கழுதையின்மேலேற்றி ஊர்கோலங்காட்டி யோட்டிவிடுமென்றாள். அதற்கு நக்கீரர் சொன்னது நீ தோற்றதேயுண்டானால் எனக்கிஷ்டமானவனெவனோ எந்த நீசனுக்காகிலும் உன்னைக் கட்டிவைப்பேனென்றார். நல்லதுஅப்படியே யாகட்டுமென்றாள். அப்போது நக்கீரதேவர் இலக்கண காவியங்களினாலே வெல்லக்கூடாதென்று நினைத்துத் தாம் வருகிறபோது காட்டுவழியிற் கண்டதை ஒரு வெண்பாவாகப் பிணைத்துக்கொண்டு கண்டசுத்தியாகச் சொன்னதாவது.

> நச்சுத்தே ரேறி நடுக்காட்டில் வேடுவச்சி
> பச்சைக் கொடியாட நின்றாளே-இச்சித்தே
> மேலவனங் கவர்ந்து மின்சொண்டு போகின்ற
> மூலபலன் கண்டாய் மொழி.

என்று சொன்னமாத்திரத்திலே இந்தக் கவியைக் கேட்டுத் தமிழறிவாளுந் தான்கற்ற பஞ்சலட்சணத்திலு மற்றுமுண்டான நூல்வழியெல்லா மாராய்ந்து பார்த்து ஒன்றுந் தெரியாதபடியினாலே விசாரப்பட்டு இத்தனைகாலந் தமிழறியும்பெருமாளென்று பேர்பெற்று யாருமெதிரில்லாமல் கீர்த்தி யடைந்திருந்தோம். இந்த வெண்பாவுக்குப் பொருள் தெரியாமற் போச்சுதென்றால் தமிழறியும்பெருமாள் தோற்றாளென்று உலகத்திலே இகழ்ச்சியாகச் சொல்லிக்கொள்ளுவார்களேயென்று வெகு கிலேசத்துடனே நக்கீரரைப் பார்த்துத் தனக்கு ஒன்றுந் தெரியாதபடியினாலே மொத்தார்த்தமாகச் சொன்னதாவது,

உண்டிகொடுத்தார்க் குயிர்கொடுத்தாரென்றது
வுண்டார்குழலாள் மகிழ்வன்றி - உண்டி
உண்டாருஞ் செத்தாரு முண்டிருந்தாருண்டீர்
உண்டானரகம் புகார்.

என்றுசொல்லிக் காண்பித்து நிலைக்கண்ணாடியையுடைத்து அந்த ஒட்டினால் தனதுவயிற்றைக் கிழித்துக்கொண்டு சீவனைவிட்டாள். பொழுதுவிடிந்து நற்கிரதேவருந் தமிழறிவாளைமுடிவைத்து அவள்போகிற கள்ளவழியைக்கண்டுபிடித்து அந்தவழியாகப் புறப்பட்டுப்போய் விறகுதலைய னிடத்திற்குவந்து தம்முடைய வேஷத்தைநீக்கிப் பச்சைவடம் வேஷ்டிதலைப்பாகை கட்டிக்கொண்டு கடுக்கன் மோதிரமிட்டுக்கொண்டு விறகுதலையனை எப்போதும்போல விறகுதலையனுக்குண்டான வேஷம்போட்டு அங்கேயிருக்கச்சொல்லி நக்கீரர்பாதக்குறடு போட்டுக்கொண்டு நடந்துபோய்ச் சோழராசனைக்கண்டு அட்சதைக் கொடுத்து ஆசிர்வாதம்பண்ணி அந்தச்சோழராசன் இருக்கச்சொன்ன இடத்திலேயிருந்தார். இப்பால் மரகதவடிவியென்பவளிராத்திரிமகள் விறகுதலையன்பக்கனுக்குப் போனவ ளின்ன மெழுந்திருந்துவரவில்லையென்று தன்தோழிமாருந் தானுமாக அந்தப் படுக்கையறைவீட்டுக்குப்போய்ப் பார்க்கிறபோது தமிழறிவாள் மரித்துக்கிடக்கிறதுகண்டு அடித்து அலறிவிழுந்து எழுந்திருந்து இப்படிக்கொத்தமகளை எந்தப்பிறப்பிலே காணப்போகிறேனென்று வெகுதுக்கத்துடனே தன்மகளைப்பார்த்துச் சொன்னதாவது.

நற்கீரர்சொற்கவிக்கு நாடவிடமன்றிலே
பொற்கொடியாட் சூத்திரங்கள் போதாமற் - சிற்றிடையாள்
கண்ணாடியாலுயிரைப் போக்கினாள் காரிகையும்
பண்ணாள் தமிழறிவாள் பார்.

என்று சொல்லி மரகதவடிவியுந் தோழிமாருங்கற்றுச்சொல்லிப்பெண்கள் மற்றுமுண்டான பேரனைவரும் புறப்பட்டுக் கூச்சலிட்டுக் கொண்டுபோய்ச் சோழராசாவின் முன்னேவந்து முறையிட்டார்கள். அப்போது சோழராசனும்

வெருவாய்வியாகூலப்பட்டு மரகதவடிவியை யழைத்து, வந்தவனார் போனவனார், நடந்தவிவரமெப்படி யென்றுகேட்க, மரகதவடிவி சொல்லுவாள்: சுவாமி! அதுவோதெரியாது; வெட்டியான்போலே யிருந்தது; அவன் வாழைத்தண்டைத்தனது தலைமேலே வைத்துக்கொண்டு விறகுவிலைகூறிகவிசொல்லிக்கொண்டுவந்தான். அவன் இராத்திரி யெல்லாமகளுடனே பிரதிவாதித்துக்கொண்டிருந்தான். நாங்களும் சிறிதுநேரம் விழித்துக்கொண்டிருந்தோம். பிற்பாடு அவரவர் அங்கங்கே படுத்துக்கொண்டு நித்திரைபோனோம். பிற்பாடு என்ன நடந்ததோ ஏதுநடந்ததோ? அவன்சொன்ன கவிக்குப்பொருள் தெரியாமற்றான் போச்சுதோ? ஏதோதான்றங்காணக்கூடாது மாண்டுபோனாளென்று சொன்னாள். அது கேட்டு சோழராசன் மிகவும் விசனப்பட்டுச் சொல்லுவான்:—முன்னே தங்களுடைய வம்சத்திலே ஒரு புறாவுக்காகத் தன்னுயிரை யீந்தனும் ஒருமாயக் கன்றுக்காகக் குமாரனை வண்டியி லரைந்தனுமாக இப்படியிருக்கப்பட்ட சோழராசன் வமிசத்திலே இப்படிக்கொத்த பழிவந்தால் நானேது செய்வேனென்று மிகவும் வியாகூலமாய் அந்த சபையைப் பார்த்துச் சோழராசன் சொன்னதாவது:—

முற்பழிக்கொன்றுருயிரையன்று முறைவருவா
கற்பகத்தேரூர்ந்த பழிக்காகாதே - சொற்பகரு
மைப்பழிக்குங் கூந்தலனைமுலையாள் தன்னுடைய
விட்பழிக்கு மென்செய்வேன் யான்.

சோழராசன் இவ்வாறு சொல்லிப் பின்னையும் விசாரிக்குமளவில் அந்தச்சபையிலிருக்கிற நக்கீரரைக்கண்டு அவர் வசனிக்கப்பட்ட வசனத்தை நிதானித்துக்கேட்டு இராத்திரி வந்துபிரசங்கம்பண்ணினவன் இவரேயென்றறிந்துகொண்டு மரகதவடிவி சோழராசனைப் பார்த்துச் சொன்னதாவது:—

கையாற்கொடையான் கதலிவிறகுவிற்பான்
பொய்யானு மெய்ந்நூற் பொருள்காண்பான் - மெய்யாக
மையாரும் வேற்கண்மடமானை யன்னவனே
யையமகோவென்றுளவள்.

என்று சொல்லக்கேட்டு நற்கீரதேவர் சோழராசனைப் பார்த்துச் சொன்னதாவது,

பொய்யாதமுத்தமிழின் பொற்கொடிக்கு சூழ்ந்தகொலை
கொய்யாபதுமாலைக் கொற்றவனே - மெய்யாக
மையாரும் வேற்கண் படமானை மன்னவனே
கையாரக்கொல்லலேன் காண்.

என்று சொல்லக்கேட்டுச் சோழராசனும் நற்கீரரைப் பார்த்து நீர் யாரென்றுகேட்க அதற்கு நக்கீரருஞ் சோழராசனைப் பார்த்துச் சொன்னதாவது.

நாலாயிரத்துத் தொளாயிரமாஞ் சங்கத்தின்
மேலான நக்கீரரெம் பெயர்தான் - வேலால்
உளைந்தபுருவுக்காக வுன்சதையைநேரா
யளைந்தேயறிந்தவனேயாம்.

இப்படிச் சொன்ன நற்கீரரைப்பார்த்துச் சோழராசன் சொன்னதாவது.

உறவற்றூர் போலிவ்வுறையூர்க்குப் புக்கிப்
பொறையறைகாணும் பூதலத்தி - லறையும்
நறைகமழு நக்கீரராறைக்க விந்த
விறகுவிற் தேனோ விளம்பு.

என்றுசொன்ன சோழனைப்பார்த்து நக்கீரர் சொன்னதாவது.

கூறுவார் கூறும்பரிசே குறைவறிபான்
வீறுமென்னென்று விடவறியாள் - மாதுடனே
ஏச்சுவாரேச்சும் எளிதாகுமன்றியிலே
விசுவாசம் வாங்காதென்மின்.

என்றுநக்கீரர் சொல்ல இராசாவினுடைய மந்திரி நக்கீரரைப் பார்த்துச் சொன்னதாவது.

பூவேசிலடறிப்பார் பூணேசிலபடுவர்
பாலேயடிதலையின் பண்பாகுஞ் - சாவே
மதுரங்கள் வண்டுண்ணும் மாவேவடிவாம்
இதுதவிர வண்டோவியம்பு.

அப்படி மந்திரி சொல்லவே நக்கீரதேவர்க்குமகாகோபம்வந்து இவனோ நம்மைப் பார்த்துச் சொல்லுகிறவனே

ன்று அப்போது சோழராசனுக்கும் அற்புதவாய்வுவுண்டு. அந்தவாயுவை மந்திரவுற்சாடனம்பண்ணி அந்த மந்திரிமேரிலே குதிக்கவிட்டார். அதுகண்டு மந்திரியும் வெட்கித் தலையிறங்கிக்கொண்டான். அதைச் சோழராஜன் பார்த்துப் பயந்து, எழுந்திருந்து, நக்கீரரை நமஸ்கரித் தும்முடைய மகிமையைப் பார்க்கத்தக்கவர்யாவரென்று அவரைத் தழுவிக்கொண்டு நல்லவார்த்தைகளைச் சொல்லித் தேவரீரனுக்கிரகத்தினலே தமிழறிவாளை எழுப்பி இரக்ஷிக்கவேண்டுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டான். அப்பொழுது நற்கீரர் சந்தோஷப்பட்டு அவளை எடுத்துவரச் சொல்லென்ருர். அப்படியே போய்த் தமிழறிவாளை எடுத்து ஒரு கட்டிலின்பேரிலே போட்டுக்கொண்டுவந்து நற்கீரர் முன்னேவைத்தார்கள். பட்டணத்தி லுண்டான சகல ஜனங்களும் வந்து புதுமையாகப் பார்த்துக்கொண்டிருக்கிற சமயத்திலே நற்கீரதேவருந் தமது கமண்டலத்தால் சலங் கொண்டுவந்து அபிமந்திரித்துக் தமிழறிவாள்பேரிலே இறைத்துச் சொன்னதாவது.

வீருயிவளுக்கு மிக்கோரும் வேந்தனுக்கும்
மாருநாம் வந்தவாரறிய - கூருய்
விழுந்தணி முள்ளடக்கி வெள்ளெலும்பு மொன்ரு
யெழுந்திருக்க வேண்டுமினி.

என்று சொன்னவுடனே வயிறு பீறுண்டு சரிந்து விழுந்திருந்த நிணமுனைத்துமுள்ளடங்கி ஒன்ருகப்பொருந்தித்தைக் கொண்டிருந்து நீங்கினவள்போலத் தமிழறிவாள்விழித்துப்பார்த் தந்தக்கவிக்குப் பயன்சொல்லிக் கொண்டெழுந்திருந்தாள். பயன்சொன்ன விபரம் பாரைபாரை என்றெழுந்தாள். அதற்கு நாக்கீரதேவர்சொன்ன விபரம் பூரைபூரையென்ருர். அதன் பிறகு அந்தச்சபையைப் பார்த்து வெட்கித் தலையை யிறங்கிக்கொண்டு நின்ருள். நின்றவளைப்பார்த்து நற்கீரர் சொன்னதாவது.

சிறந்ததமிழின்றிறமறியமாட்டாமல்
இறந்தனையோ வுன்றனைக்கொன்ருயே - அறிந்து
செந்தமிழின் சோழனுக்குச் சேரவந்து நின்றுதொழுஞ்
சொந்தமுன்ஞெச்சியுடன் சொல்.

என்று நற்கீரதேவர் சொல்ல தமிழறிவாள் சோழராச னைப் பார்த்துச் சொன்னதாவது,

நாளுேபழியடைந்தேன் நாடீரென்றுவுரைண
தேனார்கமலத் திசைமுகனார் - தானே
தலையோட்டிலுள்ளபடி தப்புமோசொல்லீர்
கலையோட்டிடுமா முனியேகாண்.

என்று தமிழறிவாள் சொல்லச் சோழராசன் அந்தவச னத்தைக்கேட்டுச் சந்தோஷிக்கத் திரும்பவும் தமிழறிவாள் சொல்வாள். தமிழுக்கு அகஸ்தியனும் வடமொழிக்குப் புலத்தியனுமிவர்களுடைய கல்வியை அறியும்போது என்னையேயொழியமற்றொருவருமில்லையென்றிருக்கவேண்டாம். கல்வி பதிகங்கண்டு பிரமனானவர் சரஸ்வதியை நாவிலே தரித்துக்கொண்டார். விஷ்ணுவானவர் மார்பிலேதரித்துக்கொண்டார். ஈஸ்வரன் சங்கத்தின் கீழேயிருக்கிறார் என்றுசொல்ல சோழராசன் சந்தோஷப்பட்டுத் தமிழறியும் பெருமாளைக் கையைபிடித்துக்கொண்டு நர்க்கீரர்கையிலேகொடுத்து இவளை நான்பெற்ற பெண்ணாக வளர்த்தேன். இந்தப்பெண்ணை தேவரீர் கலியாணம்பண்ணிக்கொள்ளும், உமக்குவேண்டிய ராச்சியமும் விட்டு போதுமான திரவியமுங் கொடுக்கிறேனென்று சொன்னான். அந்த விசேஷங்கேட்டு நற்கீரர் சோழராசனைப் பார்த்து சொன்னதாவது:—

ஆறோர்கடமை யடைவுடனேகொண்டுமிக
வீறுயுலகாளும் வேந்தனே - கூறு
யெனக்கிவளுமேமகள் காணென்றன் மருமகன்
றனக்குறிய ளாவாளினிதான்.

என்று சொல்லக்கேட்டுச் சோழராசன் ஏனையா மகளென்கிறீர். அப்படிச் சொல்லவேண்டாம். இவளைக் கலியாணம் பண்ணிக்கொள்ளுமென அதற்கு நற்கீரர் சொல்லுவார்:— இப்போது செத்தவளைத் திரும்பவும் எழுப்பினோமே! ஆனபடியினாலே நமக்கு மகளல்லவோ, இதுவுமல்லாமல் நம்முடையமருமகன் ஒருபையனிருக்கிறான். அவனுக்கு இவளைக்கட்டிவைக்க வேணுமென்று வெகு பிரயாசைப்பட்டு இ

த்திரியெல்லா மிவளுடனே தர்க்கித்தோமென்றார். அது கேட்டுச் சோழராசன் சந்தோஷப்பட்டுத் தேவரீர் மருமக னுக்குக்கொடுக்கநாங்களெத்தனை புண்ணியம்பண்ணினோம். அப்படியேமருமகனையழைப்பியுமையாவென்றான். அதுகேட்டு நற்கிரதேவர் அங்கேயிருந்தபடியேதானே அடாவிறகுதலையா இங்கே வாடாவென்று கூப்பிட்டழைத்தார். அந்த விசேஷங்கேட்டு விறகுதலையன் பாசிப்பல்லும் பூதமுகமும் வெந்தவிட்டுக்கழிமரம்போல காலுங்கையும் அரையிற் சுற்றிய கொடியும், அதிலே சொரிகிப் அறிவாளும் இவ்விதமான கோலத்துடனே வந்து நின்றான். அப்போது தமிழறிவாளும் பார்த்து முன்னாலே நாம் இவனைக் கடைத்தெருவிற்கண்டுகாறியுமிழ்ந்தோமே அவன்தான்வந்தான். என்ன அதிசயமென்று வெட்கித் தலையிறங்கிக்கொண்டு வெகுவாய் மனதுசஞ்சலமா யிருந்தாள். சோழராசன்கண்டு மிகவும் வியாகூலத்துடனே நற்கிரரைப்பார்த்து சுவாமி இவளிருந்த இருப்பும் இவள் நடவடிக்கையும் வெகுபிரகாசமாய்க் கீர்த்தியடைந்திருந்ததும் இராச்சியமுழுது மறியுமே. அப்படிக்கொத்தவளை யிப்படிக்கொத்தவனுக்குக் கட்டுவிக்கிறோமென்றா லதற்குநான் சொல்லப்போகிறதென்னவிருக்கிறது. தேவரீர் சித்தத்துக்குச் சரியானபடி செய்துகொள்ளுங்களென்றான். அப்போது தமிழறியும்பெருமாளும் நற்கிரர் பாதத்திலே சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு கைகட்டிநின்றுகொண்டு சொன்னதாவது.

பாதம்பணிந்தேன் பழையதமிழ் முனியே
ஏதுமறியேனினி யுரையேன் - பேதையேன்
செய்தபிழைபொறுத்துத் திருவுளத்துக் கேற்கச்
செய்துவித்துக் கொள்ளுமினி.

என்று சொல்லிச் சிந்தை வியாகூலமாய் நொந்துகொண்டிருந்த தமிழறிவாளுஞ் சோழமகாராசனையும் பார்த்து நற்கிரதேவர் முற்பிறப்பு உணர்த்தியவிபரம்:—கேளுஞ் சோழராசாவே, முன் சென்மத்திலே இந்தத் தமிழறிவாள் ராசகுமாரத்தி, இந்த விறகுதலையனும் ராசகுமாரன் இவர்களிரண்டுபேரும் மனமொன்றியபின் சாவடியிலே இவனை

இருக்கச்சொல்லி ஓலை எழுதிப்போட்டதும் அங்கே இவள் இவனை வந்து கூடுவதற்கில்லாமல் இரண்டுபேருஞ் சீவனைப் போக்கிக்கொண்டு ஆவேசமாயிருந்ததும் ஒளவையார் கையிலே வரம்பெற்றதும் பிற்பாடு இவள்வந்து மரகதவடிவி வயிற்றிலே பிறந்து தமிழறிவாளானதும் இராஜகுமாரன் போய் விறகுதலையன் வயிற்றிலே பிறந்ததும் பூர்வம் இவளுக்கு பிரம சிருஷ்டிப்பு ஐம்பது வயது அதிலே பன்னிரண்டு வயது கன்னிகழியாதிருந்ததும் ஒருவருஷம் ஆவேசமாயிருந்ததும் அப்பால் இப்போது இருபத்தைந்து வயது கன்னிகழியாதிருந்ததும் இந்தப் பிறப்பிலே அந்த பன்னிரண்டு வருஷமும் அந்த ராசகுமாரனுடனே கூடிவாழத்தக்கதாக நற்கீரர்வந்து ஒரு இராத்திரியெல்லாம் இவளுடனே ருகதாப்பிரசங்கம்பண்ணி செயிப்பாரென்று ஒளவையார் சொல்லிப்போனதும் இவைகளையெல்லாம் ஆதியோடந்தமாய்த தெரியத்தக்கதாகமுற்பிறப்புணர்த்திச்சொல்லிக்காண்பித்து அப்போது ஒளவையார் என்பேரைக் குறித்துச் சொல்லிப் போனபடியினாலே நாம் வந்து பூர்த்திசெய்தோமென்றார். அப்போது சோழராசனும் தமிழறிவாளும் மரகதவடிவியும் நற்கீரரை நமஸ்கரித்து தேவரீர் சித்தத்திற்குச் சரியானபடி செய்துகொள்ளுமென்றார்கள். அப்போது நற்கீரதேவருந் தமிழறிவாளைப் பார்த்துச் சொன்னதாவது.

ஊருமுறையூரே ஒண்டியாங்கன்னிகை நின்
பேருந்தமிழறிவாள் பேராமோ - நேரா
யுனைவிரும்புவானை யுன்றெய்வந்தந்த
மனையிடத்துப் போயிருந்து வாழ்.

என்றுசொல்லிக்காண்பித்து அந்நேரமே பச்சைபந்தல் போடுவித்து நல்ல முகூர்த்தவேளையிலே அந்த விறகுதலையனுக்குத் தமிழறிவாளைக்கலியாணம் பண்ணிவைத்துச்சோழராசனைக்கொண்டு இவர்களிருப்பதற்கு உப்பரிகையும் ஊருமிடுத்து பூஷண வகைகளும் கொடுப்பித்து, நீங்களிரண்டுபேருஞ் சுகமாகவாழ்ந்து, ஒளவையார் அநுக்கிரகப்படிக்குச் சிவனுடைய பாதாரவிந்தஞ் சேரக்கடவீர். உங்களரண்

மனைக்குப் போயிருந்து வாழக்கடவீர்களென்று ஆசீர்வதித்து அனுப்புவிக்க இவர்களிரண்டுபேரும் நக்கீரர் பாதத்திலே சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம்பண்ணி பிறகு தங்களரண்மனைக்குப் போனார்கள். நக்கீரருக்குச் சோழராசன் பச்சைப்பல்லக்குமுதலியவைகள்கொடுத்து நமஸ்கரித்து நக்கீரதேவரை மதுரைக்கு அனுப்புவித்தான். நக்கீரதேவருஞ் சோழராசன் கையில் விடைபெற்றுக்கொண்டு மதுரைக்கு வருகிறபோது பாண்டியராசாவும் சங்கத்தாரும் எதிர்கொண்டுவந்து சந்தோஷப்பட்டு நக்கீரதேவரை அழைமாதுக்கொண்டுபோனார்கள். நக்கீரதேவரும் உறையூருக்குப் வானாய்த் தமிழறிவானை வென்ற விபரமெல்லாம் சவிஸ்தாரவிற்கூச் சொன்னார். அதுகேட்டுப் பாண்டிராசன் மகாசந்தோஷத்தையடைந்து நக்கீரதேவருக்கு வேண்டிய வெகுமானம் கொடுத்தான். சங்கத்தாரும் சந்தோஷத்தை யடைந்தார்கள். நக்கீரதேவருஞ் சங்கத்தாருடனே கூடிச் சங்கப்பலகையின்மீ தெழுந்தருளியிருந்தார். இப்பால் தமிழறிவாளும் ஔவையார் அனுக்கிரகப்படி இருபத்தைந்து வயதளவுங் கன்னிகழியாமலிருந்து பின்பு நக்கீரதேவர் அருளினால் பூர்வோத்தரமறிந்து பன்னிரண்டுவருஷம் வரைக்குஞ் சகலசம்பத்தையும் சவுக்கியமாய் அதிகசந்தோஷத்துடனே அனுபவித்துக்கொண்டிருந்து பிறகு இருவரும் மோட்சத்தை யடைந்தார்கள்.

தமிழறியும் பெருமாள்கதை முற்றிற்று.

---

## காளமேகப்புலவர் சரித்திரம்.

திருக்குடந்தையிற் பிறந்துவளர்ந்தவடமனுகிய பிராமணனொருவன் ஸ்ரீரங்கத்திற் பெருமாள்கோயிற் சுயம்பாகிப் பரிசாரகஞ் செய்துகொண் டிருக்கையில், திருவானைக்காவிலுள்ள சம்புகேசுவரர்கோயில் தாசி ஒருத்தி மோகனங்கியென்னும் பெயரையுடையவள் அதிக அழகும் ஆடல்

பாடல்களில் திறமுமுடையவளா யிருந்ததனால், இவன் அவளுடைய மோகவலையிற்சிக்கித்தனக்குஅவள் இணங்கும்பொருட்டுப் பெருமாள் பிரசாதமுதலானவைகளும் அவளுக்குக் கொண்டுபோய்க் கொடுத்து அவளோடு சம்பந்தப்பட்டிருந்தான். அப்படி யிருக்குமளவில் மார்கழிமாசத்திற் சம்புகேசுரர் சந்நிதியில், மேற்படி தாசிக்குத் திருவெம்பாவை பாடும் முறைவந்தபொழுது, "உங்கையிற் பிள்ளை" என்னும் பாடலைப் பாடுகையில் இதில் "எங்கொங்கை நின்னன்பரல்லார்தோள்சேரற்க" என்றதொடரை அவள்வாயினாற்சொல்லித் தலைகுனிந்து கொண்டதைப்பார்த்து அவளுடனே கூடவிருந்த மற்றத்தாசிகளெல்லாம் புன்சிரிப்புச்சிரித்துத் தங்களுக்குள்ளே "இவள் சிவன்கோயில் தாசியாயிருந்தும் பெருமாள்கோயில் சுயம்பாகியுடனே சம்பந்தப்படுகிறாளே இஃதென்னை? 'படிக்கிறது திருவாசகம் இடிக்கிறது சிவன்கோயில்" என்பதாக வாயினாற் பேசுகிறதொன்று நடக்கிறதொன்றாயிருக்கிறதே" என்று அவளைப்பரிகாசம் பண்ணினார்கள். அஃது அவளுக்கு மார்பில்தைத்து முதுகில் உருவினதுபோல் வருத்தத்தை விளைத்ததனால், அன்றிரவு அவ்வைஷ்ணவன் வருந்தருணத்தில் தெருக்கதவைச்சாத்தி "உள்ளே வரவேண்டாம்" என்று தடுக்க, அவன் வாசலுக்குவெளியே நின்றபடி "என்னநிமித்தத்தால் இன்றைக்கு என்னைத்தடைச்செய்கிறாய்? என, மோகனாங்கி, "நீ விஷ்ணு அடியான், நான் சிவனடியாள், ஆகையால் உன்சம்பந்தம் எனக்குத்தகாது" என, அவன் 'அந்தாமரையன்னமே! நின்னை யான் அகற்றுற்றுவனோ' என்றபடி "உன்னை நான் ஒருபொழுதாயினும் விட்டுப் பிரிந்திருக்கச் சகிப்பேனோ! சகிக்கமாட்டேனாதலால் உன் தலைவாசலிலேயே நான் என்பிராணனை விட்டுவிடுகிறேன்" என்றான். இவள் 'இஃதேது பழிவந்து சம்பவிக்கிறதாயிருக்கிறதே" என்று நினைத்து, நல்லது நான் வேண்டுமென்பது உனக்கு அவசிகமாயிருந்தால் நீ சிவதீட்சை பண்ணிக்கொண்டு சைவனானால் உன்னிஷ்டப்படி நடக்கிறேன்" என்று சொல்ல, அவன் காமப்பேய்கொண்டவ

ணுகையால் "பெண்கள்பால் வைத்தநேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்" என்றவிதமாய் அவளுறவைக் கைவிடமாட்டாமல், "நீ சொன்னவண்ணம் சைவசமயத்தை அனுசரிக்கிறேன்" என்று ஸ்ரீரங்கத்தைவிட்டுச் சம்புகேசுரத்திற்கு வந்து சிவதீட்சைப் பண்ணிக்கொண்டு அகிலாண்டவல்லி கோயிற் பரிசாரகனாகி தனக்கு அவ்விடத்தில் வரும் வரும்படிகளில் அவளுக்குக் கொடுத்து மீந்ததைத் தன்சீவனத்திற்கு வைத்து அனுபவித்துக்கொண்டு வந்தான்.

அந்நாளிற்சம்புகேசுவரத்தில் ஒருசிவப்பிராமணன் தனக்கு "வித்தையிற்பூரணபாண்டித்தியம் உண்டாகவேண்டும்" என்று நியமத்துடனே திரிபுரைசக்கரம் ஸ்தாபித்து அதில் அத்தேவதைக்குரிய மந்திர பீஜாட்சரத்தைப் பிரணவசகிதமாய் வரைந்து உருச்செபித்து நெடுநாளாக உபாசித்துக்கொண்டிருந்தான்; ஓரிராத்திரி நடுச்சாமத்தில் அகிலாண்டநாயகி அழகான ஒரு சிறுபெண்போல் வடிவெடுத்து வெள்ளைவஸ்திரம் உடுத்து வாய்நிறையத்தாம்பூலப் தரித்துக்கொண்டு உபாசகன் கண்ணுக்கெதிரேசென்று உன்வாயைத் திற" என்று அந்தத் தாம்பூலத்தை அவன்வாயிலே உமிழப் போமளவில், அவன் நிர்ப்பாக்கியனாகையால் அவளை மகாதேவியென்றறியாமல் "ஆரடி! எச்சிற்றம்பலத்தை என்வாயிலே துப்பவருகிறாய்? உனக்குப் பைத்தியம் பிடித்ததோ? அப்புறம் எட்ட நில்லடி," என்று கடிந்துரைத்தான். அம்மட்டில் அவனைவிட்டுத் திரும்பிவருகையில், மோகனாங்கி அன்றிராத்திரி கோயிற்குடவரிசைக்கு வந்திருந்ததறிந்து பரிசாரகன் அவளுடனே "நீ வீட்டுக்குப் போம்பொழுது என்னை வந்துஅழை நாமிருவரும் கூடிப்போவோம்" என்று அங்கொரு மண்டபத்திற் படுத்திருக்க, மோகனாங்கி குடவரிசையானபின்பு பரிசாரகனைத் தேடிக் காணாமல் தான்மாத்திரம் வீட்டுக்குப் போய்விட்டாள். ஸ்தானிகர் முதலானவர்களும் கோயிற் குச்சுப்போட்டுக்கொண்டு தங்கள் தங்கள் இருப்பிடத்திற்குப் போனார்கள்; பரிசாரகன் விழித்துக் கொண்டு மோகனாங்கியைக்காணாமையாலும், கோயிற்கதவு

பூட்டப்பட்டிருந்ததனால் தான் வெளிப்படக்கூடாமையாலும் இருந்த ஸ்தானத்தில்தானே நித்திரைபிடியாமல் எண்ணமி ட்டுக்கொண்டிருந்தான். அவனை மேற்சொல்லியதேவிபார்த்து வாயைத்திறக்கச்சொல்லித் தன் வாயிலிருந்த பாக்குத் தம்பலத்தைஉமிழ்ந்து "இதைத்தின்றுவிடு" என்ன, அவன் மோகநாங்கி என்று நினைத்து அவளிஷ்டப்படி நடவாமற் போனால் அவளுக்குக் கோபமுளும், பிறகு தன் முகத்தைப் பார்க்கமாட்டாளென்பதாலும், தான் பூர்வஜன்மத்திற்செய்த புண்ணியத்தாலுந் தடுக்காமல் உட்கொண்டான். அம்மை அவனுக்கு அன்றுமுதல் காளமேகமானது அமோகமாய் மழைபொழிவதுபோலத் தமிழில் ஆசுமுதலாகச் சொல்லப்படும் நால்வகைக்கவிகளும் அசுவதாட்டியாய் பாடும் சக்தி உண்டாகவும், அந்நாற்கவிகளிலும் ஆராயினும் ஒருவர் எந்தச்சொல்லாவது பொருளாவது அடியாவது தொடையாவது எடுத்துக்கொடுத்து இன்ன அலங்காரத்தில் இப்படித் தொடங்கி இப்படி முடிக்கவேண்டுமென்ற மாத்திரத்தில் மயங்கி இடர்ப்படாமல் அப்படியே விரைந்து பாடுகின்ற ஆசுகவித்திறம் விசேஷமாகச்சித்திக்கவும், அக்காரணத்தாற் காளமேகக்கவி யென்னும் பெயர் லோகபிரசித்தமாக வாய்க்கவும் அனுக்கிரகித்து மறைந்து போனாள்.

அவள்போன அடியிலேதானே அவனுக்குக் கடல் மடை திறந்தாற்போலக்கவிபாடத்தக்க பிரபலமான வாக்குண்டாயிற்று. அதனால் அவன் இப்பொழுது நமக்குப் பிரசன்னமானவள் அகிலாண்டவல்லிதான் என்று உணர்ந்து அந்த மகாதேவியை ஸ்தௌத்தியம்பண்ணி முதல் முதல் "திருவானைக்கா உலா" என ஒரு பிரபந்தம்பாடிப் பின்பு, சோழ நாடு பாண்டிநாடு சேரநாடு முதலான பலநாடுகளுக்கும் போய் அங்கங்குள்ள பிரதானமாகிய தெய்வஸ்தலங்களைத் தரிசித்து அந்தந்த மூர்த்திகள்மேல் ஸ்துதியாகவும், நிந்தாஸ்துதியாகவும், மற்றும் அநேகவிதமாகவும் பற்பலபாடல்கள் பாடி வரும்பொழுது, சுதை, கல், மரம், உலோகம் முதலானவைகள் சிற்பனால் உருப்படுத்தப்பட்டபின் அவ்வற்றிற்

குரிய இயற்பெயர்மாறி வெவ்வேறுசிறப்புப்பெயர் உண்டா ஞற்போல அகிலாண்டேசுவரி வரப்பிரசாதத்தால் முன்புள் ளபரிசாரகனென்னும் பெயர்மாறி, யாவரும் காளமேகப்புல வர் காளமேகப்புலவர் என்றுசொல்லும்படி மேன்மையாகிய பெயர் எத்திசையிலும் வழங்கத்தலைப்பட்டது. அக்காலத் தில் அவர் தரிசித்த ஸ்தலங்களிற் சில வருமாறு.

திருச்செங்காட்டில் உத்தராபதீசரைத் தரிசித்து, "எப் பொழுதும் ஒழுக்கத்துடனே நாட்டின் நடுவில் வாழ்ந்திருக் கும் நாதனே ! நீரிப்பொழுது இந்தச் செங்காட்டில்வந்து ஒளித்துக்கொண்டிருந்தால் முன்பு யமனையும் மன்மதனையும் சிறுத்தொண்டர் பிள்ளையையும் கொலைசெய்த பழியானது உம்மைவிட்டு நீங்கிப்போய்விடுமோ ?" என்னுங் கருத்தை யமைத்து நிந்தாஸ்துதியாகப்பாடிய,

"காலனையுங் காமனையுங் காட்டுசிறுத் தொண்டர் தரும்
பாலனையுங் கொன்றபழி போமோ - சீலமுடன்
நாட்டிலே வாழ்ந்திருக்கு நாதரே நீர்திருச்செங்
காட்டிலே வந்திருந்தக் கால்".

என்பதும், வைகாசிமாதத்திற் காஞ்சீபுரத்தில் வரதராஜர் கருடோற்சவங் கண்டு சேவிக்குமளவில் சுவர்ண சகிதமா கிய கருடனுடைய தேஜஸையும், அத்தவாகத்தின்மேல் எழு ந்தருளும் பெருமாளது திவ்வியமங்கள விக்கிரக விலட்சண த்தையும், அவ்வுற்சவ வைபவத்தையும் வியந்து நிந்தாஸ்து தியாகப் பாடிய,

"பெருமாளு நல்ல பெருமா ளவர்தம்
திருநாளு நல்ல திருநாள் - பெருமாள்
இருந்திடத்திற் சும்மா விராமையினா லையோ
பருந்தெடுத்துப் போகிறதே பார்".

என்பதும், மற்றும் அப்பெருமாள் குதிரைமேல் எழுந் தருளும் பரிவேட்டை யுற்சவஞ் சேவிக்கும்பொழுது, பரமாத்மா சீவாத்மாக்களுக்குள்ள நவவித சம்பந்தங்களில் ஒன்றாகிய பர்த்துரு பாரியா சம்பந்தத்தை உலகத்தாருக்கு வெளியிடவேண்டுமென்று கருதிப் புலவர் பெருமாளை வர் தம்மை யொரு பெண்ணாகப் பாவித்து, அப்பெண்

சான்றோர் வணங்குகின்ற தேவர்களுக்கெல்லாம் முதன்மை யாகிய தேவனும் அத்திகிரியென்னும் மலையினை உடையவனு மாகிய வரதப்பெருமான், புரவிமேலேறித் திருவீதியிலெழுந் தருளி வரக்கண்டு மால்கொண்டு, தனக்கு அரையிலுடுத்த கலை சோர்ந்து காலின்கண் விழுந்ததென்று இரங்குவதாகப் பொருள் அமைத்துப் பாடிய,

"எட்டொருமா வெண்காணி யீரேயிருந்தகலை
பட்டொருமா நால்வாயிற் பாய்ந்ததே—கிட்டார்தொழும்
சேனைத்தேவன் திருவத்தி யூருடையான்
பரிவேறி வீதிவரக்கண்டு."

என்பதும், ஏகாம்பரநாதரைத் தரிசிக்கையில் அங்குள்ள சில பிராமணர்கள் அவரை அலட்சியமாக எண்ணி இவன் கவி பாடும் திறத்தை அறிவோமென்று, இக்காலத்தில் ஆறு அற்புத மிருக்கின்றன. அவைகளை ஒருவெண்பாவிற் பொருத்தி முடித்துத் தரவேண்டுமென, அவர் அவையெவையென, அவர்கள் நாரகோட்டக்கரை, செவ்விலிமேட்டுப் பாகற் காய், பருத்திக்குளநீர், செப்புவாசற்காற்று, கம்பத்தடியிற்றவ வை, கருப்பூரப்பாய்ச்சலென்னும் இவைகளேயென்றுசொல்ல, அவர், முதலிலே அப்பாவென்பதும், பின்னே யார்க்கு மினிதென்பதும் சேர்த்து, நீங்கள் இப்பொழுது சொன்ன படி சொல்லுங்கள் வெண்பாவாய் முடிந்திருக்கிறதென, அவர்கள் அப்படியே சொல்லிப்பார்த்து அதிசயித்த,

"அப்பா நாரகோட் டக்கரை செவ்விலிமேட்
டுப்பாகற் காய்ப்பருத் திக்குளநீர்—செப்புவா
சற்காற்றுக் கம்பத் தடியிற் றவங்கருப்பூ
ரப்பாய்ச்சல் யார்க்கு மினிது."

என்பதும், பின்னும் அவர்கள், முக்கால், அரை, கால், அரைக்கால், இருமா, மாகாணி, ஒருமா, கீழரை என்னும் இவ்வெட்டிலக்கமும் வரும்படி இந்த ஏகாம்பர நாதர்மேல் ஒருவெண்பாப் பாடவேண்டு" என்ன, அப்படியே அத்தொ கைகள் வரத்தக்கதாக, அவர் "என் வாக்கே, தடியூன்றிப் பிருங்கிரிஷிபோல் மூன்றுகாலால் நடவாததற்கு முன் உயிர்

நரையாததற்குமுன், யமனைக் கண்டு உயிர் நடுங்காததற்கு முன், விக்கலெழ இரும்பாததற்குமுன், பெரிய மசானபூமிக் குப் போகாததற்குமுன், கச்சிப்பதியில் ஒருமாமரத்தினடிழ் எழுந்தருளி யிருக்கின்றவரை இளமைப்பருவமுள்ள இப் பொழுதே ஸ்துதிசெய்" என்னும் கருத்தை யமைத்துப் பாடிய,

"மூக்காலுக் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்
அக்கா லரைக்கால்கண் டஞ்சாமுன்—விக்கி
இருமாமுன் மாகாணிக் கேகாமுன் கச்சி
ஒருமாவின் கீழரையின் றோது."

என்பதும், தில்லையிற் பரமசிவனுடைய பிட்சாடன உச்சவம் நரிசிக்கையில், அவ்வுச்சவத்தில் முழக்கும் காளமுதலிய வாத்திய வோசையைக் கேட்டு, சுவாமிக்கு முன்னே அலங் கரித்துச் செலுத்திவரும் யானை முதலியவைகளையும், சுவாமி முடிமேற் கவிக்கின்ற குடையும், பிடிக்கின்ற கொடியும், அசைக்கின்ற சாமரமுமாகிய ராஜாங்கத்திற்குரிய மற்ற சின் னங்களையும் பார்த்து, "விஷசர்ப்பத்தை ஆபரணமாகப் பூண் ட தில்லை நாயகரே! தேவரீர் பிச்சையெடுத் துண்ணப் புறப் பட்டும், உமக்கு இந்த ஆடம்பரமெல்லாம் ஏன்? 'பிச்சைக் காரனுக்கேது கொட்டு முழக்கு' என்ற பழமொழியுங் கே டடதில்லையோ வென்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"நச்சரவம் பூண்டதில்லை நாதரே தேவரீர்
பிச்சையெடுத் துண்ணப் புறப்பட்டும்—உச்சிதமாம்
காளமேன் குஞ்சரமேன் கார்க்கடல்போ லேமுழங்கும்
மேளமேன் ராசாங்கமேன்."

என்பதும், மற்றும் "தென்புலியூரில் வசிக்கின்ற ஐயனே! நீ இப்படி ஏழையாயிருந்தால், 'ஏழையைக்கண்டால் மோழை யும்பாயும்' என்ற பழமொழிப்படி, உன் இளக்காரத்தைக் கண்டு கொண்ட பெண்டாட்டியானவள் வலாற்காரமாய்த் தலைமே லேறுளா? ஒருவன் செருப்பாற் புடைக்கானு? ஒருவன் வாயிலே வந்தபடி ஏசானு?" ஒருவன் வில்முறிய மண்டைமேல் போடாளு என்னும் கருத்தை யமைத்துப் பாடிய,

"தாண்டி யொருத்தி தலையின்மே லேறுனோ
பூண்டசெருப்பா லொருவன் போடானே—மீண்டொருவன்
வையானே வின்முறிய மூட்டானே தென்புலியூர்
ஐயா நீ யேழையா றல்."

என்பதும், பின்னும், "மேகமண்டலத்தை அளாவிய சோலை சூழ்ந்த திருப்புலியூரில் எழுந்தருளி யிருக்கின்ற அம்பலவாணரே! கல்லாலெறிந்த சாக்கிய நாயனாரும், வில்லால் மண்டையிளக்கச்சாடிய விஜயனும், செருப்பாற் கனக்கப்புடைத்த கண்ணப்ப நாயனாரும், முதுகில் தழும்பெழப் பிரம்பாலடித்த பாண்டியனுமாகிய இவர்களெல்லாரும் நல்லவர்களென்று திருவுள மிரங்கி இவர்களுக்குக் கிருபைபாலித்ததும், உம்மை நிந்தையொன்றுஞ் சொல்லாமற் புஷ்பங்களைக்கொண்டு அர்ச்சித்த மன்மதனைக் கொலைசெய்ததும் என்ன நிமித்தத்தாற் சொல்லவேண்டும்?" என்னுங் கருத்தை அடக்கிப் பாடிய,

"செல்லாரும் பொழில்சூழும் புலியூரம் பலவாண தேவனாரே,
கல்லாலும் வில்லாலும் செருப்பாலும் பிரம்பாலுங் கடிந்துசாடும், எல்
லாரு நல்லவரென்றிரங்கியரு ளீந்ததென்ன விகழ்ச்சி யொன்றும்,
சொல்லாமன் மலரைக்கொண் டெறிந்தவனைக் கொன்ற தென்ன
சொல்லு வீரே."

என்பதும், நடேசரைத் தரிசிக்கையில், "திருவோடு கையிலேந்துகின்ற அம்பலவாணரானவர் தில்லைக் கோவிந்தனென்னும் ஆயர் தலைவனிருக்க, மற்றும் பல ஆயர்கள் இரவும் பகலும் மாறுமற் காத்திருக்கத் தில்லைவனத்திற் புகுந்து ஆட்டைக் களவெடுத்தது என்னவுபாயம்?" எனவும், "தில்லைக் கோவிந்தராஜப்பெருமாள் சயனத் திருக்கோலங்கொண்டிருக்கவும், மற்றும் பலதேவர்கள் இரவும்பகலும் அகலாது நடன தரிசனத்திற்குக் காத்திருக்கவும் திருச்சிற்றம்பலவாணரானவர் தில்லையம்பலத்திற் பிரவேசித்து நடனஞ்செய்வதற்குத் திருவடியைத் தூக்கியது என்ன உபாயம்" எனவும் சிலேடையாகப் பொருளமைத்துப் பாடிய,

"கொங்குலவுந் தென்றில்லைக் கோவிந்தக் கோனிருக்கக்
கங்குல்பக லண்டர்பலர் காத்திருக்கச்—செங்கையிலே

ஓடெடுத்த வம்பலவ ரோங்குதில்லை யுட்புகுந்தே
ஆடெடுத்த தென்ன வுபாயம்."

என்பதும், அன்றியும், "தில்லைப்பதியில்வாழும்சிவபிரானே! ஊர்களிலுள்ள ஆட்டுக்குச் சாதாரணமாக நாலுகாலிருக்கின்றன. உன்னுடைய ஆட்டுக்கு மாத்திரம் இரண்டேகாலிருக்கின்றன; இரண்டுகாலிருந்தாலும், இவ்வாட்டின்மேல் வெகுகாலமாகக் கண்வைத்திருக்கின்ற அந்தப் புலியானது இந்த ஆட்டை விட்டுப்போமோ சொல்" என்னும் கருத்தையமைத்துப் பாடிய,

"நாட்டுக்கு ளாட்டுக்கு நாலுகா லையாநின்
ஆட்டுக் கிரண்டுகா லானாலும்—நாட்டமுள்ள
சீர்மேவு தில்லைச் சிவனேயிவ் வாட்டைவிட்டுப்
போமோசொல் லாயப் புலி."

என்பதும், தில்லை மூவாயிரவரிற் சிலர் "நடேசர் கையிலேந்திய மானனது அவர் திருமுகத்திற்கு நேராகத் தன்முகத்தையும், முன்னங்கால்களையும் மேலேதூக்கி நிற்பதற்குக் காரணம் கற்பித்து ஒருவெண்பாப் பாடவேண்டும்" என்ன, அவர் "அன்னப்பறவைகள் வயல்களிற் சஞ்சரித்துத் தாமரைமலர்களில் தங்குகின்ற தில்லைப்பதியில் எழுந்தருளிய நடேசனது கைக்கமலத்திலிருக்கும் மான் கன்றானது, அவ்விறைவனது பொன்போலும் சிவந்த நிறத்தையுடைய அழகிய ஜடாமகுடத்தில் அணிந்த அறுகம் புல்லைமேய்ந்து, அங்குள்ள கங்காஜலத்தைக் குடிக்கும்படி தன்மனதில் இச்சையானது அதிகரிக்க அங்ஙனம் தாவிப் பாய்கின்றது" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"பொன்னஞ் சடையறுகம் புல்லுக்கும் பூம்புனற்கும்
தன்னெஞ் சுவகையுறத் தாவுமே—அன்னங்கள்
செய்க்கமலத் துற்றுலவுந் தில்லை நடராஜன்
கைக்கமலத் துற்றமான் கன்று."

என்பதும், மற்று மவர்கள் "அத்தலத்திலுள்ள ஞானசபை, கனகசபை, நர்த்தசபை, ஆனந்தக்கூபம், திருமூலட்டானம்,

* புலி - வியாக்கிரபாதர். நட்டு - நடனம்.

பேரம்பலம், பஞ்சாவரணம், நாற்கோபுரம், பொற்கம்பம், மண்டபம், சிவகங்கை இவைகளை ஒருவெண்பாவாக அமைக்கவேண்டும்" என்ன, புலவர் சிரோமணியானவர் "நான் வேறே அமைக்கவும் வேண்டுமோ? இப்பொழுது சொன்னவைகளைச் சொன்னமுறைப்படி நீங்களே சீர்களை வகுத்து இசைத்துப்பார்த்தால் வெண்பாவாய் முடிந்திருக்கலாம்" என்ன, அவர்கள் அவர் சொற்படி செய்து அவ்வாறே அமைந்திருக்கக் கண்ட,

"ஞான சபைக் கனகசபை நர்த்தசபை
ஆனந்தக் கூடந் திருமூலட்—டானம்பே
ரம்பலம் பஞ்சா வரணநாற் கோபுரம்பொற்
கம்பமண்ட பஞ்சிவகங்கை."

என்பதும், சிவகாமவல்லியைத் தரிசித்தபொழுது, "மாட்டுக்கோன் தங்கையானவள் மடமதுரையை விட்டுத் தில்லைவனத்திற்குவந்து ஆட்டுக்கோனொருவனுக்குப் பெண்டாகி வாழ்க்கைப்பட்டு, வெளிப்பட்டோடுகின்ற குட்டிகளைப் பட்டிக்குள் மறித்துக் கொண்டுவந்து விடுவதற்கு ஒரு பிள்ளையையும் பெற்றுச் சிற்றிடைச்சி யாய்விட்டாள்,' என் செவியே! நீ இந்தச் செய்தியைக் கேள்விப்பட வில்லையோ? என் கண்ணே! நீயாயினும் இதைப் பார்ப்பாயாக" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"* மாட்டுக்கோன் றங்கை மதுரைவிட்டுத் தில்லைவனத்
† தாட்டுக்கோ னுக்குப்பெண் டாயினள்—கேட்டிலையோ
‡ குட்டி மறிக்க ¶ வொரு கோட்டா னையும்பெற்றாள்
|| கட்டுமணிச் சிற்றிடைச்சி காண்."

என்பதும், திருக்கழுக்குன்றத்தில் வேதகிரீசரைத் தரிசிக்குமளவில், "பெருமைதங்கிய திருக்கழுக்குன்றத்தில் வசிக்

---

* மாட்டுக்கோன் - கண்ணபிரான்.
† ஆட்டுக்கோன் - நடராசன். ‡ குட்டி மறித்தல் விநாயகரை வணங்கும் அடியார்கள் தத்தம் தலையில் முன்பு நேராகக் குட்டிப் பின்பு கையை மறித்துக் குட்டிக் கொள்வது. ¶ ஒருகோட்டானை - ஒற்றைக்கொம்புள்ள யானைமுகக் கடவுள். || கட்டுமணிச் சிற்றிடைச்சி - மணிமேகலைகட்டிய சிறிய மருங்குலுடையாள்.

கும் சிவனாரே! நீர் ஆதிதொடங்கி வெகுகாலமாக அவல மான அல்லற் பிழைப்பே பிழைத்துவிட்டீர்; பகைவராகிய முப்புரத்தாரை நேரிலே கண்டவிடத்தில் வில்லைக் கையிற் பிடித்து அம்பினால் எய்து வீழ்த்தமாட்டாமல், உம்முடைய வீரம் கூத்தாடிச் சிலம்பம்போல வியர்த்தமாம்படி பல்லைவி ளித்துக்கொண்டீரே? இவ்வளவுதானா உமது படைத்தி றம்?'' என்னும் பொருளை அமைத்துப்பாடிய,

"சொல்லிற் பெரிய கழுக்குன்ற ரேதொல்லை நாண்முதலா
அல்லற் பிழைப்பே பிழைத்துவிட் டீர்முப் புரத்தவரை
வில்லைப் பிடித்தெய்ய மாட்டாம லேரந்த வேளையிலே
பல்லைக் காட்டிவிட் டீரிதுதானும் படைத்திறமே.''

என்பதும், ஸ்ரீமுஷ்டமென்னுந் திவ்வியதேசத்திற் பூவராக சுவாமியைச் சேவிக்கும்பொழுது, "வயல்வாளைகள் எழும்பி வரப்பில் வளர்கின்ற கமுகமரங்களில் மோதி, அவைகளி லுள்ள பூம்பாளைகள் தெருமுழுதுஞ் சிதறும்படி தாவிப்பாய் கின்ற வளப்பமுடைய திருமுட்டமென்ற ஊரிற் பன்றிக்கு மார்பில் கொம்பு முளைத்திருப்பதாக ஓரதிசயத்தை நான் கண்டேன்,'' என்னுங் கருத்தை யமைத்துப்பாடிய,

"தெருமுட்டப் பாளை சிதறவளர் பூகத்
தருமுட்டச் செய்வாளை தாவும்—திருமுட்டத்
தூரிலே கண்டே னொருபுதுமை * பன்றிக்கு
மாரிலே கொம்பான வாறு.''

என்பதும், மற்றும் "திருமுட்டமென்ற திருப்பதியி லெழுந் தருளிய பூவராக மூர்த்தியே! இடது காரத்திற் பாஞ்ச சந் நியத்தை ஏந்திய பெருமானே! உனது தாமரை போன்ற திருவடியை நாங்கள் மர்க்கட நியாயமாக ஆசிரயிக்கத் திற மையின்றி அநாதிதொட் டிதுபரியந்தம் அஞ்ஞானத்தில் அமிழ்ந்து கிடந்தோம்; ஆதலால் எமக்கு வரக்கடவதாகிய கிலேசமெல்லாம் உனது நிரேதுக் கிருபையினால் மார்ச்சால

* பன்றிக்கு மார்பிலே கொம்புமுளைத்திருப்ப தென்பது ஸ்ரீம காவிஷ்ணுவானவர் பூவராகமூர்த்தியாகிப் பூங்கொம்புபோன்ற பூமி ப்பிராட்டியை எடுத்து மார்போ டணைத்துவைத்துக் கொண்டிருப் பது.

நியாயமாக ஒழித் தாளும்படிக்கு நீர் எம்மெதிரே வருவாயாக" என்னும் பொருளை யடக்கிப்பாடிய,

"முட்டத்துப் பன்றி முளரித் திருப்பதத்தைக்
கிட்டத்துப் பன்றிக் கிடந்தோமே—தொட்ட
மருங்கிலே சங்கெடுக்க மாலே யெமக்கு
வருங்கிலே சங்கெடுக்க வா."

என்பதும், திருவாலங்குடியில் தக்ஷிணாமூர்த்தியைத் தரிசிக்கையில் "வடவிருக்ஷத்தின் அடியில் வசிப்பவனை அமிர்தமர்த்தநஞ் செய்தகாலத்திற் சுராசுரர்கள் அஞ்சியோடும்படி பாற்கடலில் தோன்றிய, ஆலகாலமென்னும் விஷத்தை அவர்கள் உச்சீவிக்கும் பொருட்டு அமுது செய்தருளினவனை விஷபானம் பண்ணமாட்டானென்று ஆர்தாம் வாய்கூசாமற் சொல்லுவார்? அந்தக் கொடிய விஷத்தை அவன் பானம் பண்ணாமல் நமக்கென்னவென்று உபேக்ஷித் திருப்பானாகில் உலகத்தாரெல்லாம் ஒருமிக்க மண்ணின்மேல் மாண்டு போக மாட்டார்களா?" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"ஆலங் குடியானை யாலால முண்டானை
ஆலங் குடியானென் றார்சொன்னார்—ஆலம்
குடியானே யாயிற் குவலயத்தோ ரெல்லாம்
மடியாரோ மண்மீ திலே."

என்பதும், மாயூரத்திற் சுவாமி தரிசனம் செய்கையில், "தமதன்பர்கள் விரும்பினவைகளை யெல்லாம் வரையாது கொடுக்கும் உதாரகுண முடையவரென்று சொல்லப்படும் மாயூரநாதருக்கு எத்தனைகாலம் கைகொண்டமட்டும் வாரிவாரி இறைத்தாலும் மாளாத இருப்பாக மலையளவான வெள்ளியும், மலையளவான பொன்னு மிருக்கவும், மேலும் தெளிந்த அறிவினையுடைய உமாதேவி யானவள் எப்பொழுதும் பக்கத்தில்வந்து 'உமக்கொரு குறைவுமில்லை' பயப்படவேண்டாம் பயப்பட வேண்டாமென்று கையமைத்து அபயதானம் பண்ணிக்கொண் டிருக்கவும், அவர் ஏன் விஷத்தை யுண்டார்? நமக்கு எவ்வளவு பொருளிருந்தாலும் 'இன்று

தின்றாற் குன்றும்மாளும்' என்பது பற்றியோ? அல்லது நமது சொத்தெல்லாம் நம்மட்டிலன்றி எல்லார் கொள்ளையாய்ப் போய்விடுகிறதே யென்பது பற்றியோ? என்று நினைப்பீரோவென்றால் அப்படியெல்லா மல்ல, தம்மைநோக்கி முறையிட்ட தேவர்களை ரட்சிக்கும்பொருட்டே விஷபானம் பண்ணினார்" என்னுங் கருத்தை அமைத்துப் பாடிய,

"வன்னா லெனும்பெரிய மாயூர நாதருக்கு
வெள்ளிமலை பொன்மலையு மேயிருக்கத்—தென்றமையாள்
அஞ்சலஞ்ச லென்றுநின் றண்டையிலே தானிருக்க
நஞ்சுதனை யேனருந்தி னார்."

என்பதும், வைத்தீசுரன் கோயிலிற் சுவாமி தரிசனஞ் செய்கையில், " இந்தப் புள்ளிருக்கு வேளூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே ! முன்னாளில் மன்மதனை எரித்த அக்கினி உன் கண்ணி லிருக்கின்றது; தாருகாவனத்து ருஷிகள் உன்னைக் கொல்லவிடுத்த அக்கினி உன்கையிலிருக்கின்றது ; திரிபுரத்தைத் தகித்த அக்கினி உன் புன்சிரிப்பி லிருக்கின்றது; உனக்கு அழலாடியென வழங்குங் காரணப் பெயருக்கேற்றபடி உன் திருமேனி முழுதும் அக்கினி சூழ்ந்திருக்கின்றது; இவ்வாறு அக்கினிமயமா யிருக்கின்ற உன்னை இந்தப் பெண்ணானவள் அச்சமின்றிச் சேர்ந்து எப்படி வேவாம லிருக்கின்றாள்? இவளுக்கு அக்கினி ஸ்தம்பன வித்தை ஏதாவது தெரிந்திருக்கிறதோ ? அதனால் அவ்வக்கினியை உஷ்ணிக்கவொட்டாமல் அடக்கிவைத் திருக்கின்றாளோ ? எனக்குத் தெரியச் சொல்வாயாக" என்னுங் கருத்தை அமைத்துப் பாடிய,

"தீத்தானுன் கண்ணிலே தீத்தானுன் கையிலே
தீத்தானு முன்புன் சிரிப்பிலே—தீத்தானுன்
மெய்யெலாம் புள்ளிருக்கு வேளூரா வுன்னையிந்தத்
* தையலா ளெப்படிச்சேர்ந் தாள்."

என்பதும், திருவாரூரில் ஒரு விசேஷகாலத்திற் கோயிலுக்குப் போனபொழுது, அத்தருணத்திற் குருக்கள்மார்

* தையலாள் - தையல் நாயகி.

தியாகருக்கு வச்சிரபதக்கம் சமர்ப்பித்துச் சாத்தும்படி பண்ணிக்கொண்டிருந்ததனூற் சுவாமியைத் தரிசிப்பதற்குச் சற்றுச் சாவகாசப் பட்டதுகண்டு, அவர் "அன்னப்பறவைகள் வசிக்கும் வயல்கள் சூழ்ந்த திருவாரூரில் வாழும் தியாகேசருக்கு முற்காலத்தில் ஒப்பற்ற சிறுத்தொண்டர் புத்திரனைக் கொன்றும், மனுநீதிகண்ட சோழனுடைய பிள்ளையைக்கொன்றும், பராக்கிரமமுடைய மன்மதனைக் கொன்றும் வைரமானது விட்டுப் போகாமல் இன்ன மிருக்குமோ?" என்று பாடத்திரத்தில் அந்த வச்சிரமாலை பழுதென்று அறுந்து விழுந்தது. அதுகண்டிருந்த அவர்கள் "இவர் மகாத்மா" என்று உள் நடுங்கிவந்து உபசரிக்க, இரண்டு துண்டாய் அறுந்து விழுந்த அவ்வச்சிரமாலை மறுபடி ஒன்றாய்ப் பிறந்தது போலாகும்படி, முன்பு "இன்னம் வயிரமிருக்குமோ" என்று பாடினதைப் பின்பு "இன்னம் வயிரமிருக்குமே" என்று திருப்பி யமைத்துப் பாடிய,

"அன்ன வயல்சூழு மாரூர்த் தியாகனூர்க்
கின்னம் வயிர மிருக்குமோ [மிருக்குமே]—முன்னமொரு
தொண்டர்மக னைக்கொன்றுஞ் சோழர்மக னைக்கொன்றும்
சண்டமத னைக்கொன்றுந் தான்."

என்பதும், மற்றும், திருவாரூரிற் பிரமோச்சவ தரிசனஞ் செய்கையில், "செம்மையாகிய கமலைப்பதியில் வாழ்கின்ற தியாகனுமே! உமது மைத்துனரானவர் தமக்கு ஒரு பாடாயினு மில்லாதிருந்தும், காரடமல்ல கண்கட்டு வித்தையுமல்ல, யதார்த்தமாகவே பூமி முழுவதும் உழுது பயிர் செய்து உண்டு சுகித்திருக்கின்றார்; உமக்கு ஒரு வெள்ளை யாடிருந்தும் உழுது உண்ணத் திறமையில்லாமல் விஷத்தை யுண்டீர்; அன்றியும் நீர் பெற்ற பிள்ளை இரண்டுக்கும், அப் பிள்ளைகளின் தாய்க்கும் ஜீவனார்த்தத்திற்கு இரண்டு படி நெல்லுக்கு வழியில்லாமற் பிச்சையெடுத்தீர்; உமது பண்டோலையில்வளவிலிருக்க, இப்பொழுது உமக்கு உச்சவக் கொண்டாட்டமும் உண்டாயிற்றே?" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"ஒருமாடு மில்லாமன் * மைத்துனனார்
† புவிமுதும் முழுதே ‡ யுண்டார்
கரைமாடொன் றுமக்கிருந்து முழுதுண்ண
மாட்டாமனஞ்சை யுண்டீர்
இருநாழி நெல்லுக்கா விரண்டுபிள்ளைக்
குந்தாய்க்கு மிரந்தீரின்று
திருநாளு மாயிற்றே செங் * கமலைப்
பதிவாழுந் தியாகனாரே."

என்பதும், பின்னும், வீதியில் தியாகராஜர் எழுந்தருளி நடனஞ்செய்யக் கண்டு தரிசிக்கையில், "திருமேனி முழுதும் புஷ்பமணமும் புழுகுமணமும் வீசுகிற தியாகேசருக்குக் கையிலே பணமிருந்தால் அம்மா அவரைச் சும்மா இருக்க வொட்டுமோ? 'பணமென்னசெய்யும்? பத்துவகைசெய்யும்' என்றபடி அந்தப் பணக்கொழுப்பு மூலையிலிருந்தவரை முற்றத்தி லிழுத்துவிட்டு ஆட்டிப் புடைத்தால் அவரென்ன செய்வார்? நாணமின்றித் திருவாரூர் வீதியிலே பகிரங்கமாக வந்து நின்று தம்முடைய இஷ்டர்களெல்லாம் பார்த்து நகைக்கத் தலைவிரிகோலமாகக் குதித்துக் கூத்தாடமாட்டாரா?" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"ஆடாரோ பின்னையவ ரன்பரெலாம் பார்த்திருக்க
நீடாரூர் வீதியிலே நின்றுதாம்—தோடாரும்
மெய்க்கே பரிமளங்கள் வீசுந் தியாகேசர்
கைக்கே † பணமிருந்தக் கால்."

என்பதும், மேலும் "சுவாமி யுமக்கு உண்கிற சோறு வெல்லமாய்விட்டதனால், ஊரூருலகுமறியப் பிச்சைச் சோற்றுக்காக எங்கெங்கும் ஓடி உழன்று திரிந்தீர்; உம்மைப்பற்றி விசாரித்துப் பார்க்குமிடத்தில், நீர் நிலையாயிருப்பதற்குச் சுவாதீனப்பட்டதாக ஓரூராயினு மில்லை; இப்பொழுது இருக்கின்ற ஊரும் ஒற்றியா யிருக்கின்றது; அன்றியும் உமது

* மைத்துனர் - திருமால்; † புவிமுழுதும் உழுதது - அத்திருமால் வராகமூர்த்தியாகிப் பூமியை அடிவரையில் தோண்டியது; உண்டது - மகாப்பிரளய காலத்தில் உலகமெல்லாம் எடுத்து விழுங்கியது.

* கமலைப்பதி - திருவாரூர் † பணம் - சர்ப்பகங்கணம்.

இயற்கையான ஊரும் பேரும் உருவமும், இப்படிப்பட்டவைகளென்று யாவராலும் அறியப்படாதவைகளா யிருக்கின்றன; அங்ஙனமாயினும், 'தரித்திரப்பட்டிமகன் தனபால செட்டி' என்றுபெயர் பெற்றதுபோலத் தியாகராஜர் என்று பெரியபெயர் ஒன்றுமாத்திரம் வைத்துக் கொண்டார். இனி நீர் ஆரூரி லிருப்பீர்? அங்குமிங்குஞ் சும்மா அலையாமல் பொதுஸ்தானத்திற்போய் விடும்" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"பாரூ ரறியப் பலிக்குழன் றீர்பற்றிப் பார்க்கிலுமக்
கோரூரு மில்லை யிருக்கவென் றாலுள்ள ஆரு * மொற்றி
பேரூ ரறியா தியாகரென் றேபெரும் பேருங் கொண்டீர்
† ஆரூரி லேயிருப் பீரினிப் போய்விடு மம்பலத்தே."

என்பதும், திருவண்ணாமலையில் அருணாசலேசுரரைத் தரிசிக்கையில் "கறிசமைத்த சட்டியிற் பாதி யுறைப்பிருக்க, அச்சட்டியிலிட்டு அள்ளிய அகப்பையிற் பாதி யுறைப்பிருக்க, எதிரேபோட்ட இலையிற் பரிமாறினபடி பாதி யுறைப்பிருக்கப் பிராமணவேடங் கொண்டுவந்து நடித்த சோமேசரானவர் அந்நாளிற் சிராளாவென்று அழைக்க பொழுது, அப்பிள்ளை கலகலவென்று சிரித்தவண்ணமாக எழுந்தெதிரே ஓடிவந்தது என்ன அற்புதம்? என் மனமே! நீ சொல்" என்னுங் கருத்தை அமைத்துப் பாடிய,

"சட்டியிலே பாதியந்தச் சட்டுவத்தி லேபாதி
இட்டவிலை யிற்பாதி யிட்டிருக்கத்— திட்டமுடன்
ஆடிவந்த சோமேச ரன்றழைத்த போதுபிள்ளை
ஓடிவந்த தென்னே யுரை."

என்பதும், மற்றும், உண்ணாமுலை நாயகிகோயில் ஸ்தானிகனாகிய சம்பந்தாண்டான் என்பவன் மயிர்வினைஞனிடத்தில் தன் தலைமழுங்க முண்டிதமாகச் சௌளம் பண்ணிக்கொள்ளுஞ் சமயத்திற் காளமேகப்புலவரைக் கண்டு மரியாதையில்லாமல் வித்தியா கர்வத்தினால் "இந்த ஸ்தலத்தின் பெயரும், என்பெயரும், நான் செய்வித்துக்கொள்

* ஒற்றி - திருவொற்றியூர்; † ஆரூர் - திருவாரூர்.

னும் சௌனகர்மமும் ஒரு வெண்பாவில் வரும்படி 'மன்' என்றெடுத்து 'மலுக்கு' என்று முடிக்கவேண்டும்," என்று சொன்னான். சொன்னமாத்திரத்தில், அவர் இவன் தன்னை பொருபொருளாக மதித்துப் பாடச்சொன்னமையால் இவனைப் பரிகசிப்பதே தகுதி என்று நினைத்து அவன் சௌளம் பண்ணிக்கொள்வதற்கு நிமித்தமுங் கற்பித்துப் பாடிய,

"மன்னு மருணகிரி வாழ்சம்பந் தாண்டாற்குப்
பன்னுதலைச் சௌளம் பண்ணுவதேன்—மின்னின்
இளைத்த விடையாத நிவன்குடுமி பற்றி
வளைத்திழுத்துக் குட்டாம லுக்கு."

என்பதும், ஒருகாலத்தில் ஸ்ரீரங்கத்தார்க்கும் சம்புகேசுரத்தார்க்கும் சமயதுவேஷமுண்டாகி இருதிறத்தாரும் கலகப்பட்டுக்கொண்டிருக்கையில், அவர்களைச் சமாதானப்படுத்தும்பொருட்டுக் காளமேகப்புலவர், "சீரங்கத்தாரும் திருவானைக்காவாரும் 'எங்கள் மதம் உயர்ந்தது' உங்கள் மதம் தாழ்ந்தது, எங்கள் தெய்வம் பெரியது, உங்கள் தெய்வம் சிறியது, என்று ஓயாமல், யானைசேனைகளைக்கொண்டு ஆயுதச்சண்டை செய்வார்போல, வியர்த்தமாய் வாக்குச்சண்டை செய்வானேன்? சைவம் வைஷ்ணவமாகிய இவ்விருசமயக் கொள்கையும் 'ஏகமேவா பரப்பிரமம்' என்னும் அத்வைதம்போலன்றி, ஆத்மா பரமாத்மா இரண்டு முண்டென்றும்; அவ்விரண்டும் ஒன்றற்கொன்று சமத்துவமுடையன வல்லவென்றும், அவ் விரண்டனுள் பரமாத்மா ஆண்டானென்றும், ஜீவாத்மா அதற்கு அடிமையென்றுஞ் சொல்லப்படும் விசிஷ்டாத்வைதமாய்க் கரதலாமலகம்போல விளங்கி நிற்கையால், இஃதென்ன ஆச்சரியம்? இந்தவிவரம் தெரியாதா? இதுபற்றி இனி ஒருவர்க்கொருவர் ஆரவாரங்கள் பேசவேண்டாம்" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"சீரங்கத் தாருந் திருவானைக் காவாரும்
போரங்க மாகப் பொருவதேன்—ஓரங்கள்
வேண்டா தென்ன விவரந் தெரியாதா
* ஆண்டானுந் தாதனுமா னால்."

* ஆண்டானுந் தாதனுமானா லென்பதை ஆண்டியுந் தாதனுமானாலெனச் சிலர் சொல்வர், அது சரியன்று.

என்பதும், மதுரையிற் சுவாமி தரிசனஞ் செய்கையில், அங்குள்ள சிவப்பிராமணர்கள் அவரைப் பார்த்துச் சோமசுந்தரக்கடவுள் சந்நிதிக்கெதிரே கட்டிய கூட்டிலிருந்து கின்னரி வாசிக்கிறதுபோலக் கூவுகின்ற கிளியைச் சுட்டிக் காட்டி, "கின்னரிவாசிக்குங்கிளி என்பது ஈற்றடியாகவர, அதற்கேற்க ஈற்றயலடியைத் திரித்து இந்தச் சொக்கநாதர் விஷயத்தில் ஒருவெண்பாப் பாடவேண்டும்" என, புலவர் "அக்காலத்தில் திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரமூர்த்தியென்னும் இம்மூவரும் பாடிய தேவாரப்பாடல்களைத் திருவுளமுவந்தருளினனென்று சொல்லும் பான்மையையுடைய பரமசிவன், நான்மாடக்கூடலில் அறுபத்துநான்கு திருவிளையாடலைச் செய்தான் என்றும், தனது பரமசாமர்த்தியத்தை விளக்கிக் காட்டிய நரியாகிய பரிக்கு மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, இடபகதியாகிய ஐவகை நடையினைக் கற்பித்தான் என்றும், கிளியானதுகின்னரிவாசியாநின்றது" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"ஆடல்புரிந் தானென்று மந்நாளி லேமூவர்
பாடலுவந் தானென்ற பான்மையான் - கூடலிலே
நன்னரி வாசிக்கு நடைபயிற்றி னானென்றுங்
கின்னரி வாசிக்குங் கிளி."

என்பதும், மற்றும் "பெண்களே! நீங்க ளிவ்வதிசயித்தைப் பார்த்தீர்களா? இந்த மதுரையி லெழுந்தருளிய கடம்பவனநாதரானவர் எப்போதும் பெண்ணைத்தலைமேலேசுமந்துதிரிகின்ற பைத்தியம் பிடித்தவர்; அன்றியும் எட்டுத்திக்குக்கும் சிலாக்கியமாயிருக்கின்ற தங்கை மேலே நெருப்பை வாரியிட்டார்; அக்காளை நிறுத்தி அவள்மே லேறினார், ஆதலாற் பித்தர்க்குந் தங்குணம் நாலினும் செம்மை என்பது மெய்ப்பட்டிருக்கின்றது" என்னுங் கருத்தையமைத்துப் பாடிய,

"கண்டீரோ பெண்காள் கடம்பவனத் தீசனார்
* பெண்டீர் தமைச்சுமந்த பித்தனார் - எண்டிசைக்கும்
மிக்கான † தங்கைக்கு மேலே நெருப்பையிட்டார்
‡ அக்காளை யேறினா ராம்."

---

* பெண்டீர்தமை சுமந்தது-கங்கையைத் தாங்கினது; † தங்கை மேல் நெருப்பிட்டது-தமது கையில் மழுவேந்தினது; ‡ அக்காளை யேறியது-அந்த இடபத்தின்மே லேறினது.

என்பதும், அங்ஙனம் கண்ணம்மையைத் தரிசிக்கும்பொழுது "இந்த உலகத்தில் நான் நல்ல புதுமையொன்று கண்டேன்; அதைச் சொல்லவா? சொல்லவா? சொல்லவா? சொன்னாற் பெண்பாவமாகிறதே, 'ஆணுக்கு அவக்கேடு செய்தாலும் பெண்ணுக்குப் பிழைசொல்லலாகாதே,' ஆதலால் அடக்க வேண்டுமல்லவோ? எப்படிச் சொல்லுகிறதென்றால் 'மலிந்தாற் கடைக்குவரும்' என்பதனாலும், 'அள்ளாது குறையாது இல்லாது பிறவாது' என்பதனாலும், அடக்குவதனாற் பயனில்லை, சொல்லத்தான் வேண்டும்; அஃதென்னையெனிற் செல்வம் நிறைந்த மதுரைப்பதியிலுள்ள மீனாட்சியானவள் 'அரைக்காசுக்குப் போனமானம் ஆயிரம் பொன் கொடுத்தாலும் வராது' என்பதையு மெண்ணாமற் பேதைமைக் குணத்தால் பாண்டியனிடத்திற் குதிரை விற்க வந்தவனைச் சேர்ந்து ஒரு யானைக்கன்றைப் பெற்றாள்" என்பதுதான் என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

> "நல்லதொருபுதுமை நானிலத்திற் கண்டேன்
> சொல்லவா சொல்லவா சொல்லவா - செல்வ
> மதுரை விக்கி னேசுரனை மாதுமையாள் பெற்றாள்
> * குதிரைவிற்க வந்தவனைக் கொண்டு."

என்பதும், ஒருகாலத்தில் தமக்கு வியாதி கண்டு அது மணிமந்திர ஔஷதங்களால் நிவர்த்தியாகாமையால் வைத்தீசுரன் கோயில் மண்ணை எடுத்து இது வினைதீர்த்தான் மருந்தென்று உட்கொண்டவுடனே பரிகாரமாகு மென்பதை உணர்ந்து அத்தலத்திற்கு வந்து அவ்வாறு செய்து சௌக்கியமடைந்தபொழுது, காளமேகப்புலவர் "தொண்டர்களுக்குப் பகுத்திட்டு அவர்களுடன் தாமு மொருவராயிருந்து விருந்துண்டருளிய புள்ளிருக்குவேளூரில் வசிக்கும் எமது நாதரானவர் உலகத்திற் பிறபல வைத்தியரா யேற்பட்டிருந்து, எவர்களுக்கும் கண்ட வியாதிகளையெல்லாம் நாள்தோறும் தப்பாமல் தீர்த்து வருகின்றார்; பார்த்தீர்களா! அதற்காக அவர் கொடுக்கும் மருந்தை ஆராய்ந்து பார்த்தால் அஃதென்னை

* குதிரை விற்க வந்தவன் - சொக்கநாதன்.

கட்டுச் சரக்கா? காட்டுச் சரக்கா? கடைச்சரக்கா? அது வொன்றுமல்ல; சுத்த மண்தான்; ஆனாலும் அவருக்குக் கைவாசி யுண்டு போலக்காணகிறது" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

'மண்டலத்தி லுளோம் வயித்தியராய்த் தாமிருந்து
கண்டவினை தீர்க்கின்றார் கண்டீரோ - * தொண்டர்
விருந்தைப்பார்த் துண்டருளும் வேளூரெங் நாதர்
மருந்தைப்பார்த் தாற்சுத்த மண்."

என்பதும், திருநள்ளாறுயென்னும் ஸ்தலத்திற் சிவதரிசனஞ் செய்யப் போனவிடத்தில், கிறமான சங்கீதப்பயிற்சியும் சரீர வளமுமில்லாத ஒரு தேவடியாள் தம்புரு மீட்டிக்குரலெடுத்துப்பாடக் கேட்டபொழுது, அது கர்ண கடூரமாய்ச் சகிக்கக்கூடாம லிருந்ததனிமித்தம் தமக்கு வெறுப்புண்டாகி, "யாவரும்வாழ்த்தா நின்றநாகைப்பதியிலிருக்கும் அழகுள்ள தேவடியாளானவள் தன் பாழ்குரலை யெடுத்துப் பாடினாள்; பாடக்கேட்டவுடன் நேற்றுக் கழுதையைக் காணாமல் ஊரெங்குந் தேடி யலைந்துகொண்டிருந்த வண்ணானவன் என் கழுதையைக் கண்டேன் கண்டேனென்று சந்தோஷத்தோடே கட்டியிழுத்துப் போம்படி வைக்கோற் பழுதைக் கையிலெடுத்துக்கொண்டு சீக்கிரமாக ஓடி வந்தான் பார்' என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"வாழ்த்து திரு † நாகை வாகான தேவடியாள்
பாழ்த்த குரலெடுத்துப் பாடினாள் - நேற்றுக்
கழுதைகெட்ட வண்ணான்கண் டேன்கண்டே னென்று
பழுதையெடுத் தோடிவந்தான் பார்."

என்பதும், திருவிடை மருதூரென்ற ஸ்தலத்திற் சிவதரிசனஞ் செய்யுமளவிற் "குளிர்ச்சி தங்கிய தேன்பொருந்திய

* தொண்டர் விருந்தைப்பார்த் துண்டலாவது 'ஐயா றதனிற்சைவனாகியும்' என்றபடி, திருவையாற்றில் மகோற்சவத்தின் ஐந்தாம் நாள் சுவாமி தமது சந்நிதியில் நிவேதிக்கப்படும் திருப்பாவாடையமுதை மற்ற சைவர்களுடன் தாமுமொரு சைவனாயிருந்து புசுத்துண்பது.

† நாகை - நாகபட்டணம்.

சோலைசூழ்ந்த மருதூரி லெழுந்தருளி யிருப்பவரே! அந்த நாளிற் கண்ணப்பநாயனார் தமது வாயில் வைத்துத் தின்று சுவைபார்த்தூட்டிய மாமிசமைச்சி முதலிய கறியும், சிறுத்தொண்ட நாயனார் அன்பினாற் பாகமாகச் சமைத்திட்ட பிள்ளைக்கறியும் உமக்குப் போதாதோ? உமது வயிறென்ன சாலோ? சமுத்திரமோ? நீர் பன்றிக் குட்டியையும் எதுக்கு நெருப்பிலிட்டுத் தீத்தீர்? சொல்லுவீராக" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"கண்ண னிடுங்கறியுங் காட்டுசிறுத் தொண்டரன்பிற்
பண்ணுசிறு வன்கறியும் பற்றாதோ - சண்ணிய
மட்டியையுஞ் சோலை மருதீசரே ‡ பன்றிக்
குட்டியையேன் றீத்தீர் குறித்து."

என்பதும், திருத்துருத்தியென்னும் ஸ்தலத்திற்சுவாமியைத் தரிசிக்கையில் அவ்விடத்திலுள்ள குருக்கள்மார் "எங்கள் பரமசிவனுடைய ஆபரணத்தை விசேஷித்து ஒரு வெண்பாப் பாடவேண்டும்" என்ன, இவர் "மலர்க்காவினிடங்களிலும் வயலிடங்களிலும் முத்துக்களார்ந்த திருத்துருத்தி என்கின்ற பெரிய நகரத்தில் வசிக்கும் பொய்மையில்லாத சத்திய ஸ்வரூபராகிய சிவபிரானவர், தமது திருமேனியில் அணியும் பூஷணமோ பிரசண்ட மாருதத்தையும் பட்சணம் பண்ணும், பாற்கடலைக் கடையக் கயிறுமாகும், திருமாலுண்ட பூமியையும் தன் தலையிலேந்தி வாழாநிற்கும்" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"காலயிலும் வேலை கடையக் கயிறாகும்
மாலயிலும் பூமுடித்து வாழுமே - சோலைநெறி
செய்யிலா ரம்பையிலுஞ் செந்துருத்தி மாநகர்வாழ்
பொய்யிலா மெய்யரிடும் பூண்."

என்பதும், மற்றும் "புங்கங்கொம்பங்கிங் கொன்பது - புளியங்கொம் பங்கிங்கொன்பது-வெட்டிநறுக்கிய வெள்வேலங் கொம் பங்கிக்கொன்பது - என்னும் இவைகளை ஒரு வெண்

‡ பன்றிக்குட்டியைத் தீத்தது - ஏன வுருவெடுத்த திருமாலின் மகனாகிய மன்மதனை நெற்றிக்கண்ணினால் எரித்தது.

பாவில் அடக்கிப் பாடவேண்டும்" என, இவர், "எங்கள் மடத்துக்கு எரிகரும்பு கொள்வது என்பதை முதலில் எழுவாயாகச் சேர்த்து நீங்கள் சொன்னவாறே சொல்லிப்பாருங்கள் வெண்பாவாய் முடிந்திருக்கின்றது" என்ன, அவர்கள் அந்தப்படி சொல்லிக் கண்ட,

"எங்கண் மடத்துக் கெரிகரும்பு கொள்வதுபுஞ்
சங்கொம்பங் கிங்கொன் பதுபுளி - யங்கொம்பங்
கிங்கொன் பதுவெட் டிநறுங் கியவெள்வே
லங்கொம்பங் கிங்கொன் பது."

என்பதும், சதுர்த்தி புண்ணியகாலத்தில் விக்கினேசுரர் மூஷிகவாகனரூடராய் வீதியிலெழுந்தருளிவரக்கண்டு தரிசிக்கையில், "கர்ண்மத முதலிய மும்மதங்களையுடைய வலிமை மிகுந்த பெரிய மலைபோலும் யானையை அற்பஜெந்துவாகிய ஓர் எலியானது இழுத்துக்கொண்டு போகின்றதே; ஐயோ! இதைக்குறித்துக் கேள்வி முறையில்லையோ? சிவனுடைய மழுவும் விஷ்ணுவினது சக்கிரமும்; பிரமனது தண்டமும் எங்கே போயின? அவைகளை ஆர்பறித்துக்கொண்டு போனார்கள்?" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"மூப்பான் மழுவு முராரிதிருச் சக்கரமும்
பார்ப்பான் கதையும் பறிபோச்சோ - வாய்ப்பார்
வலிமிகுத்த மும்மதத்து வாரணத்தை யையோ
எலியிழுத்துப் போகின்ற தே."

என்பதும், ஷஷ்டியிற் சுப்பிரமணியரானவர் தமது வலப்பக்கத்திற் சிவபெருமானும், அவர் பக்கத்தில் உமாதேவியும், இடது பக்கத்தில் திருமாலும், அவர் பக்கத்தில் விநாயகமூர்த்தியும் வரிசையாய் வரும்படி, மகா சம்பிரமத்துடனே வீதியில் எழுந்தருளக் கண்டு தரிசித்த பொழுது, "தகப்பன் இரந்துண்டு சீவிப்பவன், தன்னைப்பெற்ற தாய் மலைநீலி, தாயுடன் பிறந்த மாமன் உறியிலுள்ள வெண்ணெய் திருடி, சப்பைக்காலையுடைய அண்ணன் பெருவயிறன், இச்செய்தி பறைசாற்றியதுபோல லோகபிரசித்தமாயிருக்க, இந்த ஆறுமுகக்கடவுளுக்கு இவ்விடத்தில் இஃதென்னை பெருமை?" என்னும் பொருளை யமைத்துப் பாடிய,

"தப்ப னிரந்துண் ணியாத்தான் மலைவில்
ஒப்பரிய மாம னுறிதிருடி - சூட்பைக்கால்
அண்ணன் பெருவயிற னாறுமுகத் தானுக்கிங்
கெண்ணும் பெருமை எவை."

என்பதும், ஒரு சிவஸ்தலத்திற் சுவாமி வீதிப்புறப்பாடாகி வரக்கண்டு தரிசிக்கும்பொழுது, அவ்விடத்திற் சிலர் "இந்தப் புறப்பாட்டைக் குறித்து ஒன்பது சாதிப்பெயர் வருவதாக ஒரு கலித்துறை பாடவேண்டும்" என, இவர் "சரஸ்வதி நாயகன் வாழ்த்துதல் செய்ய, இடபம் சுமக்க, வைரவமூர்த்தியும் சுப்பிரமணியக் கடவுளும் இந்திராணி கணவனும் போற்றுதல் செய்ய, பாற்கடற் பள்ளிகொள்ளும் திருமால் யாவர்க்கு முன்னே செல்ல, தித்திப்பாகிய விளைந்த கருப்பு வில்லையுடைய காமதேவன் தாழ்ந்து வணங்க, பெருமை தங்கிய மான்றோலை யுடுத்து, ஜடாமகுட தாரியாகிய எங்கும் தட்டாத சிவபெருமான் வீதிப்புறப்பாடா யெழுந்தருளியது அதிக விநோதமா யிருக்கிறது" என்னுங் கருத்தை அமைத்து, மேற்படியார் சொன்ன வண்ணம் அவ்வொன்பது சாதிப்பெயரும் வரும்படி சிலேடையாகப் பாடிய,

"வாணியன் வாழ்த்திட வண்ணான் சுமக்க வடுகன்செட்டி
சேணியன் போற்றத் திரைப்பள்ளி முன்செல்லத் தீங்கரும்பின்
* கோணியன் றாழக் கருமான் றுகிலினைக் கொண்டுடுத்து
வேணிய னாகிய தட்டான் புறப்பட்ட வேடிக்கையே."

என்பதும், ஓரூரிற் சர்க்கார் உத்தியோகஸ்தனாகிய விகடராமைய னென்னும் மாத்துவ பிராமண னொருவன் அப்பொழுதே விழுந்து சாகிறதாய் மிகவும் மெலிந்து திடுக்குத் திடுக்கென்று தெனாலிராமன் வளர்த்த குதிரைபோலிருக்கின்ற ஒரு நாட்டுத்தட்டைப் பிடித்து அதன் முதுகிற் சமுக்காளச் சேணம் வைத்து, "விழியிலே கண்ட குதிரைக்கு வைக்கோற் புரி கடிவாளம்" என்ற பழமொழிப்படி கயிற்றுக் கடிவாளம் போட்டு, அக்கடிவாளத்தை இடது கையிற் பிடித்து, வலது கையிற் புளிய மலார் கொண்டு அடித்து, இரண்டு கால்களி

* கோணியன் - சணற்பையன்.

னும் வயிற்றிலடிக்கு நடக்க நடவாதது கண்டு, தன் அதிகாரத்தின் கீழிருக்கின்றவர்களைப் பார்த்து "இதை நடத்திக்கொண்டு போங்கள்" என்று உத்தரவுசெய்ய, அவர்களிற் சிலர் முன்புறத்தில் வந்து கடிவாளத்தைத் தொட்டிழுக்க, சிலர் பின்புறத்திலிருந்து தெட்டித்தள்ள, அப்படியும் அது விசையாய் நடவாமல் மெள்ள மெள்ள அடிமேலடிவைத்துப் போவதைக்காளமேகப்புலவர்பார்த்தும் "எப்போது வாய் ஒயாமல் வேதாத்தியயனம் பண்ணுகின்ற விகடராமையனென்பவன் ஏறிச் செலுத்தும் குதிரையானது, கடிவாளத்தைத்தொட்டு முன்பக்கத்தில் மூன்று பெயர் வலித்துக்கொண்டுபோக, பின்பக்கத்திலிருந்து இரண்டு பெயர் கையினல் தெட்டித்தள்ள அந்தமட்டில் ஒரு மாதத்திற்குக் காதவழிக்குக் குறையாமல் விரைந்துபோகின்றது" எனப் பரிகாசமாகப் பொருளமைத்துப் பாடிய;

"முன்னே கடிவாள மூன்றுபேர் தொட்டிழுக்கப்
பின்னே யிருந்திரண்டு பேர்தள்ள - எந்நேரம்
வேதம்போம் வாயன் விகடரா மன்குதிரை
மாதப்போங் காத வழி."

என்பதும், சித்திரை மாதத்தில் ஒருருக்குப் பிரயாணம் பண்ணிப் போகையில் வழிநடுவில் உள்ள திருச்செங்காட்டுச் சத்திரத்தில் ஒருநா ளிராத்தங்கி யிருக்கும்பொழுது, காற்று வீசாமல் தமக்கு அதிக வெப்பமாயிருந்தது கண்டு காளமேகப்புலவர், "பக்த சிரோமணியாகிய சிறுத்தொண்டரே! நீர் நமக்காக அரிந்து கறி சமைத்த பிள்ளையை நம்முடனே கூட உண்ணுதற்கு அழைத்துவாருமென்று சொல்லி, அப்பிள்ளையின் வரவை எதிர் பார்த்திருந்த சிவபெருமானுடைய திருச்செங்காடென்ற இந்த ஸ்தலத்தில் இஃதென்னே ஆச்சரியம்! காசிக்கங்கையைக் கமண்டலத்தில் முகந்து கையிலேந்திய அகஸ்திய முனிவனுடைய பொதியமலையிலிருந்து உண்டாகும் தென்றற் காற்றை, ஒற்றைக் கொம்பினை யேந்திய விநாயகமூர்த்தியின் பிதாவாகிய பரமசிவன் பூஷணமாகப் பூண்ட சர்ப்பந்தான் இப்பொழுது உணவாக உட்கொண்டு

விட்டதோ, எப்பொழுதும் இயங்குகின்ற காரணத்தாற் சதா கதியென்று பெயர்பெற்ற காற்று இயங்காத தென்னமாயம்?" என்னுங் கருத்தை யமைத்துப் பாடிய,

"அம்பேந்து கையா னவன்பதியி * லைம்மாவைக்
கொம்பேந்தி தந்தைபணி கொண்டதோ - அன்பா
அரிந்த மகவை யழையென்று சொல்லி
இருந்தவன்றன் செங்காட்டி லே."

என்பதுமாக இந்தப்படி காளமேகப்புலவர் நவ நவமாகக் கருத்தமைத்துக் கவிபாடி வித்வதரிசனஞ் செய்துவருகையில், திருமலைராயன் பட்டணத்திற் கல்வியில் மிகச் சிறந்தவரென்று அவ்வரசன் வியந்து கொடுத்த தண்டிகைப் பரிசுபெற்ற புலவர்கள் அறுபத்து நால்வரும், அவர்களுக்குத் தலைவராகிய அதிமதுரகவி யென்பவரும் தம்மில் தங்களுக்குச் சமானம் ஒருவருமில்லையென்று அகங்கரித்து, உலகத்திலுள்ள மற்றப் புலவர்களையெல்லாம் மதியாமற் பலவாறாக நிந்தித்து அவமானப்படுத்தி வருகிறார்களென்றும், அதற்குத் திருமலைராயனும் உடன்பட்டிருக்கிறனென்றும் கேள்விப்பட்டு, 'வித்வான்களா யிருப்பவர்கள் ஆராயினுமென்ன, அப்படிப் பட்டவர்களை அவமதிக்கலாமா? அவர்களை இகழ்ந்தது நம்மை இகழ்ந்ததல்லவா? பூர்வம் ஒட்டக்கூத்தனென்பவன், "கற்றது கையளவு கல்லாததுலகளவு' என்றெண்ணாமல், தானே வித்தையில் அதிகனென்று மமதைகொண்டு நெஞ்சிரக்கமின்றிப் புலவர்களைச் சிரச்சேதம் பண்ணி வந்தது கண்டு அக்காலத்திற் புகழேந்திப் புலவரானவர் அவனுக்குத்தக்கபடி கர்வபிராயச்சித்தஞ் செய்வித்து அநேகரைக் கொலைக்குத் தப்புவித்து ரட்சித்துப் புண்ணியந் தேடிக்கொண்டார்; அந்தப்படி இந்தக் காலத்தில் திருமலைராயன் சமஸ்தானத்தி லிருக்கும் வித்வான்கள் நான் நானென்று இறுமாப்புற்று "நக்குகிறநாய் செக்கென்றும் சிவலிங்க மென்றும் அறியாததுபோல்" நல்லார் பொல்லாரென்று அறியாமலும் "அடிக்கும் அருமை உடைக்கிற

* ஐம்மா-கால், இஃது இவ்விடத்துக் காற்றினையுணர்த்தி நின்றது.

நாய்க்குத் தெரியாததுபோல்" பாடிய அருமை தெரியாமலும் பிரசண்ட கவிகளையெல்லாம் பறித்துக்கொண்டிருக்கிறார்கள், இவர்களுடைய அகந்தையை நான் போய் அவசியம் அழிக்கவேண்டும், என்று பிரதிக்கினையுடனே ஒருநாள் அவ்விடத்திற்குப் போகயத்தனப்படுகிற சமயத்தில், அவரை மோகனாங்கி யென்னுந் தாசி கண்டு, "திருமலைராயன் பட்டணத்துத் துறைமுகத்தில் விசேஷமாய் முத்துக் குளிக்கிறதாகவும், அம்முத்து மற்ற துறைகளில் குளிக்கப்படுகிற முத்துக்களிலும் மிகச் சிறந்ததாகவும், திருமலைராயனே அந்த வியாபாரஞ் செய்வதாகவுஞ் சொல்லுகிறார்கள், ஆகையால் அங்கேபோய்த் திரும்பி வரும்பொழுது மறவாமல் எனக்கு மார்பிலணியுங் கச்சுக்கு முத்து வாங்கிவர வேண்டும்" என்றாள். அதுகேட்டு "நல்லது அப்படியே ஆகட்டும்" என்று சொல்லி, அவளிடத்திற் செலவுபெற்றுக் கொண்டு புறப்பட்டு அப்பட்டணத்துக் கடைவீதியில் வந்தார்.

இவருக்கெதிரே மேற்சொல்லிய அதிமதுரகவி என்பவன் தனக்குப் பின்னும் முன்னும் இருபக்கங்களிலும் அறுபத்துநாலு தண்டிகைப் புலவர்களும் வரிசை வரிசையாக நெருங்கிச் சூழ்ந்துவர, அவர்கள் நடுவில் நீலமலை போன்று உரல்போலப் பருத்த கால்களும், பனைபோல நீண்ட துதிக்கையும், ஆலவட்டம்போலப் பரந்த செவிகளும், பிறைபோல வளைந்த கொம்புகளும், மலைச்சிகரம் போல உன்னதமாகிய மஸ்தகமும், சாய்மரைபோல அசைகின்ற வாலும் முளைத்து எழுந்து நடப்பதுபோல நடக்கின்ற மதயானைமேல் நவரத்நமயமாகிய தவிசிட்டு ஏறி, துஜம் சத்திரம் சாமரமுதலிய விருதுகள் பிடிக்க, கட்டியங்கூற, அதிக ஆடம்பரத்துடனே ராஜசமுகத்தை நாடிவருவதுகண்டு, தாம் அப்பால் விலகிப்போகாமல் அப்புலவர்கள் ஏறிவரும் தண்டிகைக்கணைகளின் மத்தியில் வந்து நிற்க, அதுகண்டு கட்டியக்காரன் தண்டிகைக்குட்பட்டவர்கள் எப்படிப்பட்டவர்களாயினும் அவர்கள் தங்கள் வாயி

னால் அதிமதுரகவி யென்பவனுக்குரிய விருதைச்சொல்வது நெடுநாளைய வழக்கமா யிருப்பதனால் அவன் வழக்கப்படி, இவர் மார்பிலே தன்கையிலிருந்த யானைத்தோற் பட்டையால் தட்டி "அதிமதுரகவிராய சிங்கம்பராக் என்று சொல்" என்றான். இவர் "இழவுக்கு வந்தவர்களையெல்லாந் தாலியறுக்கச்சொன்னால் அறுப்பார்களா?" அதுபோலத் தெருவிலே போகிறவர் வருகிறவர்களையெல்லாம் இவன் பெருமையைச் சொல்லச்சொன்னாற் சொல்வார்களா? ஆயினும் இவன்பெற்ற பெருமைதா னென்ன? 'துடைப்பக்கட்டுக்குப் பட்டுக்குச்சுக் கட்டியதுபோல' 'அதிமதுர கவிராய சிங்கம்' என்று பெயர் வைத்துக்கொண்டு விருதுகூறி வருகிறானே, இவன் பாடும் பாட்டென்ன அத்தனை மதுரமானதா? தன்னைச் சிங்கமென்று சொல்வதைப்பற்றிக் கொஞ்சமாவது இவனுக்கு மனங்கூச வில்லையே, இவன் எத்தனை வித்வான்களைச் செயித்தான்? இவையெல்லாம் வீண்புகழ்ச்சிதானே, இப்படிப்பட்டவன் வெட்கித் தலையிறக்கங் கொள்ளும்படி இவனைப் பரிகாசிப்பதே யுக்தம் என்று நினைத்துக் கட்டியங் கூறுவோனை நோக்கி, "அதிமதுரம் அதிமதுரமென்று உலகமெல்லாம் அறியும்படி பறைசாற்றினதுபோலப் பலமுறையும் எடுத்துச்சொல்லி இவனை மதுரந்தோன்றஸ்துதிசெய்கின்றாயே, இவனிடத்திலுள்ள புதுமை என்னை? இப்படிச் சொல்வதைப்பார்க்கிலும், காட்டிலுண்டாகிய சரக்கு, காரமில்லாத சரக்கு, தனியே பிரயோகிக்காமல் வேறுசரக்குக்களுடனே கூட்டிப் பிரயோகிக்கப்படும் சரக்காகிய மலைக்குன்றிமணிவேரை உலகத்தார் தொன்றுதொட்டு அதிமதுரமென்று வழங்குவது சகசமாதலால், நீ அதைக்குறித்துச் சொல்" என்னுங் கருத்தை அமைத்து,

"அதிமதுர வென்றே யகில மறியத்
துதிமதுர மாயெடுத்துச் சொல்லும்—புதுமையென்ன
காட்டுச் சரக்குலகிற் காரமில் லாச்சரக்குக்
கூட்டுச் சரக்கதனைக் கூறு."

என்றொரு பாடலைச் சொல்லி ஏளனம் பண்ணினார்.

அந்த அதிமதுரகவி யென்பவனைத் தூக்கிப்போட்டா ற்போ லிருந்ததனால், அவன் ஆச்சரியப்பட்டு "சிறிதாவது பயமில்லாமல் இவ்வளவு தைரியத்துடனே பகிரங்கமாக நம் மைப் பரிகசிக்கின்றானே, இவன்யார்?" என்று அறியும்படி தான் ராஜசமுகத்திற்குப் போய்ச் சேர்ந்தமாத்திரத்திற் சேர்வைக்காரனொருவனை அனுப்பி "இவ்விடத்தில் ஒரு பிராமணனிருக்கிறான், அவனுடைய பெயரென்ன? அவன் எங்கிருப்பவன்? என்று விசாரித்துவா" எனச் சொன்னான். சேர்வைக்காரன் நேரிலேவந்து விசாரித்தபொழுது, காள மேகப்புலவர் என் பேர் ஊர் முதலானவைகளை வாய்ச் சொல்லாகச்சொன்னால் நான் சொன்னபடி நீ போய்ச் சொல்வது பிரயாசம், விவரமாய் ஏட்டில் என் கைப்பட எழுதிக் கொடுக்கிறேன்" என்பதாகச்சொல்லி,

"தூதைந்து நாழிகையி லாறுநா ழிகைதனிற்
சொற்சந்த மாலை சொல்லத்
துகளிலா வந்தாதி யேழுநா ழிகைதனிற்
றொகைபட விரித்துரைக்கப்
பாதஞ்செய் மடல்கோவை பத்துநா ழிகைதனிற்
பரணியொரு நாள் முழுதுமே
பாரகா வியமெலா மோரிரு தினத்திலே
பகரக் கொடி கட்டினேன்
சீதஞ்செ யுந்திங்கண் மரபினா னீடுபுகழ்
செய்யதிரு மலைராயன்முன்
சீறுமா றாகவே தாறுமா றுகள்சொல்
திருட்டுக் கவிப் புலவரைக்
காதங் கறுத்துச் சவுக்கிட் டடித்துக்
கதுப்பிற் புடைத்து வெற்றிக்
கல்லணையி னொடுகொடிய கடிவாள மிட்டேறு
கவிகாள மேக நானே."

எனத் தாம் ஆசுகவி பாடுந் திறத்தைச் சிறப்பித்தும், தமது பெயரை வெளிப்படையாகச் செப்பியும், திருமலைராயன் சமஸ்தானத்து வித்துவாகள் செய்யும் அக்கிரமத்தைக் குறிப்பித்து அவர்களை இகழ்ந்தும் ஒரு சீட்டுக்கவி எழுதி அதைச் சுருட்டிச் செந்திரிகம் போட்டு, "இதைக் கொண்டுபோய்க் கொடு" என்று கொடுத்தனுப்பினார்.

அதிமதுரகவிராயன் முதலானவர்கள் அதை வாங்கி வாசித்து, “இதை எழுதினவன் காளமேகமென்பவனு? பாம்புக்கும் பல்லிலும், தேளுக்கு வாலிலும் ஏகதேசமாக விஷமிருக்கு மென்பார்கள்; இவனுக்கு உடல் முழுதும் விஷமயமாயிருக்கிறது; ஆதலால், இவன் பொல்லாத துஷ்டனென்றும், அகங்காரமே கால் கை முதலிய உறுப்புக்களாய் உருவெடுத்து வந்தவனென்றும், கண்டவர்கள் மேலெல்லாம் வம்புந் தும்புமாக வசைபாடுகிறவனென்றும், இவனுடைய சமாசாரம் முன்னமே நமக்குக் கேள்வி தானே, அப்படியிருக்க இப்பொழுது நம்மையும் அவர்களைப்போல இலேசாக நினைத்துக்கொண்டு கொஞ்சமாவது மதிப்பில்லாமல் வாய்க்கு வந்தபடியெல்லாந் தூஷித்துச் சீட்டுக்கவி எழுதினான், பார்த்தையா! இப்படிப் பாட்டையெல்லாம் சும்மா விடப்போமா? ‘கொட்டினாற்றேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சி’ யல்லவா? ஆதலால், இவனைச் சிலிர்க்கச்சிலிர்க்க வைத்து பயபங்கப்படுத்தித் தக்க சிக்ஷை செய்வித்தாலொழிய இவன் அடங்கமாட்டான்” என்று தங்கள் அரசனுடனும் ஆலோசித்து, நாலு பேர் சேவகர்களை விடுத்து “அந்தக் காளமேகமென்பவன் எங்கேயாவது ஓடியொளித்துப் போகப்போகிறான்? இந்த நொடிக்குள்ளே கைப்பிடியாகப் பிடித்துவந்து ஒப்பிக்கவேண்டும்” என்ன, அந்நால்வரும் போய்ப் பெரும்புலிகள்போல் அவரைச் சுற்றிக்கொண்டு “நீ சும்மா வருகிறாயா? உன்னைப் பிடித்துக் கட்டிக்கொண்டுபோக வேண்டுமா?” என்றார்கள். புலவர் “நீங்களார்? என்னை எங்கே அழைக்கிறீர்கள்? என்ன, அவர்கள் “நாங்கள் திருமலைராயன் சேவகர்கள்; அவரிடத்திற்குத்தான் உன்னை அழைக்கிறோம்” என்ன, இவர் “அங்கு எதுக்காக வரச்சொல்லுகிறீர்கள்? என்ன, சேவகர் “நீ எங்கள் ராஜசமஸ்தானத்து வித்வான்களைத் தூஷித்ததே அதற்காகத்தான்” என்ன, இவர் “பின்னை யொன்றுஞ் செய்யவில்லையே, இதற்குத் தானோ பிடிக்கிறதுங் கட்டுகிறதும்? என்னைத் தொடவேண்டாம், தூரநில்லுங்கள்; நானே வருகிறேன்” என்று, கடையில் எழுமிச்சம்பழமொ

ன்று வாங்கிக் கையில் வைத்துக்கொண்டு ராஜசமுகத்தை நோக்கி வருகிறார்.

இதற்குள் அவ்விடத்தில் அதிமதுரகவி யென்பவன் அறிந்தானாய் தன்னடிமைக் காரரையும் பார்த்துக் "காளமேக மென்பவன் இவ்விடத்திற்கு வந்தால் அவன் அரசனருகிற் கிட்டிச் செல்லாதபடி நீங்களெல்லாரும் நெருங்கி உட்கார்ந்து உங்களாசனத்தை விட்டெழுந்திராம லிருங்கள்" என்று திட்டஞ்செய்து, பின்பு ராஜாவை நோக்கி "அந்த வம்பனைத் தாங்கள் வாவென் றுபசரியாமலும், அவனுக்கு ஆசனங்கொடாமலும், சம்மானஞ் செய்யாமலு மிருக்கவேண்டும்" என்று சொல்லி எச்சரிக்கையா யிருந்தான். அப்படி யிருக்கையிற் புலவர் பெருமான் வந்துபார்த்து "நாம் உட்பிரவேசிக்கக் கூடாமல் இங்கே ஏதோ மித்திரபேதம் நடந்திருக்கிறது என்று நினைத்துக்கொண்டு, தாம உட்செல்லாமல் ஆஸ்தான வாசலண்டையி லிருந்தபடியே இதற்கேற்ற உபாயமொன்று செய்யவேண்டும்" என்று ஒரு சுலோகஞ் சொல்லி அரசனை ஆசீர்வதித்து அந்த எலுமிச்சம்பழத்தை அவனுக்கெதிரே நீட்டினார். பிராமணர்கள் ஆசீர்வாதம் பண்ணி அட்சதையாவது புஷ்பமாவது பழமாவது கொடுக்க வந்தால் வாங்காமலிருப்பது விதியல்லவே, அது பற்றி அவன் தன் கையை நீட்டினான். நீட்டிய கையில் இந்த எலுமிச்சம் பழம் போய்ச் சேரவேண்டுமே அதனால் யாவரும் விலகி வழிவிட்டார்கள்; காளமேகப்புலவர் தாராளமாக அச்சபைநடுவே சென்று அதை மன்னன்கையிற் கொடுக்க, அவன் வேண்டாம் என்று சொல்லாமல் வாங்கிக்கொண்டதன்றி, அவருக்கு ஆசனங் கொடுக்கவும், உட்காரும் என்று சொல்லவுமில்லை. அது தெரிந்து ஜம்புகேசுரத்தின் திசையை நோக்கி மானசீகமாக ஸ்ரீ அகிலாண்டவல்லி விமானத்தைத் தரிசித்து, சாரதையைத் தியானித்து,

"வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள் —வெள்ளை
அரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனத்துவைத்த தாய்"

38

என்பதை முதற்கொண்ட முப்பது வெண்பாவிற் "சரஸ்வதி மாலை" என ஒரு பிரபந்தம் பாடினார். பாடினமாத்திரத்தில் வாணி கடாட்சத்தால் திருமலைராயனிருந்த ஆசனம் ஒருபுறத்தில் வளர்ந்து இடங்கொடுக்க, அதில் அவர் அவனுடன் சமாநஸ்கந்தமாக வீற்றிருந்தார்.

இவ்விதமாக ராஜசிங்காசனம் வளர்ந்து இடங்கொடுக்க, அவர் அதன்மேலேறி உட்கார்ந்த தருணத்தில் அவர்களெல்லாம் "இஃதென்னை! மந்திரமோ? மாயமோ? அல்லது கண்கட்டு வித்தையோ?" என்று பிரமிப்புடனே பார்க்கையில், புலவர்பெருமான் அந்தப் புலவர்களை "என்னை வைத்தகண் வாங்காமல் ஊடுருவப் பார்க்கிறீர்களே, நீங்களார்? தெரியச்சொல்ல வேண்டும்" என்று கேட்க, அவர்கள் "நாங்கள் இந்தச் சமஸ்தானத்தி லிருக்கும் கவிராஜர்கள்" என்று உத்தரஞ்சொல்ல, இவர் கவிராஜ ரென்பதற்குத் [illegible]ரங்கரசரென இடக்கராகப் பொருள்கொண்டு, குலுகுலுவென்று நகைத்து, அவர்களை உல்லங்கனம் பண்ணும்படி, ஓ! ஓ! புவியரசர்களாற் புகழப்படும் புலவர்களே! நீங்களாரென்று உங்களைக் கேட்டாற் கவிராஜர்களென்கிறீர்களே, கவிராஜர்களாயிருந்தால் உங்கள் ஜாதி சுபாவப்படி வாலிருக்க வேண்டுமே, அஃதெங்கே? வாலில்லாமையால் நீங்கள் வாலில்லாத குரங்குகளென் றல்லவோ சொல்லப்படுவீர்கள்? அப்படித்தா னென்று ஒப்புக்கொண்டாலும், நீண்டு வளர்ந்து வலிபெற்ற நகமிருக்கவேண்டுமே, அஃதெங்கே? அல்லாமலும் நாலுகா லிருக்கவேண்டுமே, அவை எங்கே? காலாகக் கையைப் பாவித்துக் கொள்ளலாமென்றாலும், பீளைசார்ந்த கண்ணிருக்கவேண்டுமே, அஃதெங்கே? சொல்லுங்கள்" என்னுங் கருத்தினை உள்ளமைத்து,

"வாலெங்கே நீண்டெழுந்த வல்லுகிரெங் கேநாலு
காலெங்கே யூன்வடிந்த கண்ணெங்கே—சாலப்
புவிராயர் போற்றும் புலவீர்கா ளீங்கள்
கவிராய ரென்றிருந்தக் கால்."

என்றொரு வெண்பாப் பாடினார். இதிற் குரங்குகளென்று இழித்துரைத்தாலும், அவர்களைப்போலத் தாமும் புலவ

ராகையால் அந்தச் சுஜாதி யபிமானம் போகாமற் "புவிரா யர்போற்றும் புலவீர்காள்?" என்று சிறப்பித்தார்.

அதை யவர்கள் அவ்விதமாக நினையாமல் இவன் எட்டிக் குடுமியைப்பிடித்து இறங்கிக் காலைப் பிடிக்கிறவன் போல, இந்தப் பாட்டிலே நம்மையெல்லாங் குரங்குகளென்று பிரத்தியட்சத்திலேயே நிந்தித்து, அதனோடுகூடக் கொஞ்சம் முகஸ்துதியாகப் 'புவிராயர் போற்றும் புலவீர்காள்' என்றான். முன்பு சீட்டுக்கவியிலும் தூஷித்திருக்கிறான், இவனுடைய நெஞ்சுத்துணிவுதான் என்னே? என்று சிந்தித்துப் பிறகு அவரை நோக்கி, "இந்தச் சமஸ்தானத்தில் வெகுகாலமாய்ப் பெயர்பெற் றிருக்கின்ற எங்களை இன்றுவந்து முனைந்த நீ ஆரென்று கேட்கிறையே, நீயார்? சொல்," என்று கேட்டார்கள். இவர் "நாம் காளமேகம் என அறியீர்களா?" என்ன, அவர்கள் "நீ காளமேகமா? நல்லது, காளமேகமென்பது கறுத்த மேக மாதலாற் பொழியவேண்டுமே" என்ன, இவர் "பொழியத்தான் வந்தது" என்ன, அவர்கள் "எப்படிப் பொழியவந்தது" என்ன, புலவர் சிரோமணி, "கழியினிடத்திற் செல்லுங் கடல்நீரானது உப்புமயமா யிருப்பதென்று அதை ஒழித்து, சாஸ்திரமாகிய கடலில் அதன் சாரமாகிய நீரை முகந்து, அருவியாறு வழிந்தோடுகின்ற தமிழ்பிறந்த பொதியமலையிற் காலூன்றி, கடுமையாகிய கவிகளைப் பாடுகின்ற புலவர்கள் மனத்தின் கண்ணே பயஞ்செனிக்க இடித்து, அவர்கள் காதுகள் செவிடுபடக் குமிறி, கண்கூசமின்னி, கவியாகிய மழைபொழியும்படி காளமேகமானது புறப்பட்டது" என்னுங் கருத்தை அமைத்து,

> "கழியுங் கியகட லுப்பென்று நன்னூற் கடலின்மொண்டு
> வழியும் பொதிய வரையினிற் கால்வைத்து வன்கவிதை
> மொழியும் புலவர் மனத்தே யிடித்து முழங்கிமின்னிப்
> பொழியும் படிக்குக் கவிகாள மேகம் புறப்பட்டதே."

என்றொரு பாடல் பாடக்கேட்டு, அதிமதுரகவி யென்பவன் அதிக ஆச்சரியங்கொண்டு அவரை முன்னிட்டு, "வெள்ளைக்

கவி பாடித்திரிகின்ற காளமேகமே! மூச்சுவிடுவதற்குமுன்னே முந்நூறு அல்லது நானூறு பாடல் பாடப்போகாதா? மூச்சுவிட் டாச்சுதென்றால் ஐந்நூறு பாடல்வரையிலும் ஆகாதா? இதற் கித்தனை பேச்சென்ன? சும்மா ஆடம்பரமாக உன்னுடைய கள்ளக் கவிக்கடையைப் பரப்பினை டாய்; அந்த மட்டிலே உன்கடையைக் கட்டு" என்னுங் கருத்துத்தோன்ற,

"மூச்சுவிடு முன்னமே முந்நூறு நானூறும்
ஆச்சென்ற லைந்நூறு மாகாதோ—பேச்சென்ன
வெள்ளைக் கவிகாள மேகமே யுன்னுடைய
கள்ளக் கவிக்கடையைக் கட்டு."

என்றொரு பாடலைச்சொல்லி அவன் தன்பெருமையை வெளியிட்டுக் கவிசிரேஷ்டராகிய இவரை இழிவுசெய்த பொழுது, இவர் " நீ மூச்சுவிடுகிறதற்குமுன்னே முந்நூறு நானூறு பாடல்வரையிலும், ஆச்சென்றால் ஐந்நூறுபாடல் வரையிலும் பாடுகிறதாகச் சொன்னையே, இதோராச்சரியமா? நான் சொல்வதைக்கேள்; வாயைத் திறவாததற்குமுன் னெழுநூறு எண்ணூறு பாட்டளவிலும், ஒருமுறை வாயைத் திறந்து மூடினால் ஆயிரம்பாட்டளவிலும் ஆகாதா? பாடுகிறதற்கு ஒரு நிமித்தமு மில்லாதகாலத்திற் சும்மாவிருந்தா லிருப்பேன்; அவசியமுண்டாய்ப் பாட ஏற்பட்டேனானால், யானைத்துதிக்கைபோலப் பெரிய தாரைகளாக வருஷிக்கும் மேகம் நான் என்று நினை பிள்ளாய்" என்னுங் கருத்தை யமைத்து,

" * இம்மென்னு முன்னே யெழுநூறு மெண்ணூறும்
† அம்மென்றா லாயிரம்பாட் டாகாதா—சும்மா
இருந்தா லிருப்பே னெழுந்தேனே யாயிற்
பெருங்காள மேகம் பிளாய்."

என்பதாக ஒரு கவிபாடித் தமது வல்லமையைக் குறிப்பித்தார்.

---

* இம்மெனல்-வாய்திறவாமையையும், † அம்மெனல்-வாய்திறந்து மூடுகையையும் உணர்த்திய குறிப்புச் சொற்கள்.

அதை அதிமதுரகவி கேட்டு, 'தூக்கி நிறுத்தடா பிணைக்காடாய் வெட்டுகிறேன்' என்பவனைப்போல் வெகுசாமர்த்தியமாகப் பேசுகிறானே, இவன் சொல்வது மெய்யாயிருக்குமா, அஃதேது? "ஆராத்தாள் செத்தாலும் பொழுதுவிடிந்தால் தெரியும்" என்பதுபோல, இன்னுஞ் சற்றுநேரத்திற்குள்ளே பொய் மெய் எல்லாம் பட்டப்பகலாய்த் தெரியவருகிறது என்று நினைத்துக் காளமேகப்புலவரை நோக்கி, "கூரம்பாயினும் வீரியம் பேசேல்" என்பதை அறியாமல், நீ இவ்வளவு வீரம் பேசுகிறாயே, அரிகண்டம் பாடிப்பார்ப்போம்" என்றான். இவர் "அரிகண்டமாவது என்னை?" என அவன் "கழுத்திற் கத்தி கட்டிக்கொண்டு எதிரி கொடுக்குஞ் சமிஸ்யைக்கு இணங்கப் பாடுவது தான்; அப்படிப்பாடுமிடத்தில் ஏதாவது தவறினால் அந்தக் கத்தியினாலேயே வெட்டுண்ணவேண்டி வரும்" என்ன, அதற்கு இவர் கைகொட்டிச் சிரித்து "இதுதானா அரிகண்டம் என்பது, இத்தனை சுலபமானதை ஒரு விஷயமாகத் தேடிச்சொல்லவந்தையே இதிலென்ன அருமையிருக்கிறது? இது நிற்க, யமகண்டம் பாடுகிறதல்லவோ மகா பிரயாசம்; அதைக் குறித்துப் பேசுவதுதான் கௌரவம்" என்று சொல்ல, அவன் "யமகண்டமென்றும் ஒன்றிருக்கிறதா? அஃது எப்படிப்பட்டது?" என்ன, இவர் "பூமியிற் பதினாறடி நீளம் பதினாறடி அகலம், பதினாறடி ஆழமாக, சதுரத்திற்குச் சதுரம் ஒரு பெரிய குழிவெட்டி, அதன் நான்கு மூலையிலும் பதினாறடி இருப்புக்கம்பங்கள் நாட்டி, கம்பத்தின்மேல் நாலுபக்கத்திலும் இரும்பினால் நாலுசட்டமும், நடுவே பொருசட்டமும் போட்டு, நடுச்சட்டத்தில் உறிகட்டி, குழிக்குட் பருத்த புளியங்கட்டைகளை நெருங்க அடுக்கி, கட்டைக்குள் நெருப்பு மூட்டி, அது கனன்றெழுந்து சுவாலித்து எரிந்துகொண்டிருக்க, அந்நெருப்பில் ஓர் ஆளுயரமான இருப்புக் கொப்பறை வைத்து, கொப்பறை நிறைய எண்ணெய்விட்டு அதில் அரக்கு, மெழுகு, குங்கிலியம், கந்தகம், சாம்பராணிகளை நிரப்பி, அவை நன்றாய்க்காய்ந்து உருகிக் கொதித்துக்

கொண்டிருக்க, நான்கு யானைகளைப் பாகர்கள் மதமேற்றிக் கொண்டுவந்து கம்பத்திற்கு ஒவ்வொன்றாக மலைகளைப் போல நிறுத்திவைத்திருக்க, பின்புறத்தில் வளையம்வைத்து வளையத்திற் சங்கிலிகோத்து நடத்த எழுகினும் கூர்மையாகச் சமைத்துப் பளபளவென்று மின்னும்படி சாணைபிடித்த எட்டுக்கத்திகளைக் கழுத்தில் நாலும், அரையில் நாலுமாகக் கட்டிக்கொண்டு, கத்திகளின் புறத்திலுள்ள சங்கிலிகளை மேற்படியானைகளின் துதிக்கையிற் கொடுத்து வைத்து, தான் கொப்பறைக்கு நேராகத் தொங்குகின்ற உறிநடுவில் ஏறியிருந்து, எவரெவர் என்ன என்ன சமிஞை கொடுத்தாலும் அவைகளை அந்நொடியிலே தானே தடையின்றிக் குறித்த கருத்தின்படி இசைத்துப் பாடவேண்டியது. அவ்வாறு பாடும் பொழுது எள்ளளவாவது வழுவுமாறுஞ் சமிஞை கொடுத்தவர்கள் யானைமேலிருக்கும் பாகர்களுக்குக்கண் சைகை காட்ட, அவர்கள் யானைகளை மஸ்தகத்தில் அங்குசத்தாற் குத்தி அதட்ட, அவைகள் தமது தும்பிக்கையிற் கொடுக்கப்பட்டிருக்குஞ் சங்கிலிகளை விசையாயிழுக்க, இழுத்தவுடனே புலவன் கழுத்தும் அரையும் கத்திகளாற் கண்டிக்கப்பட்டு, தலையொருதுண்டமும், அரைமுதற் காலளவும் ஒருதுண்டமுமாகி, எண்ணெய்க் கொப்பறையில் விழுந்து மாண்டுபோகிறது, இப்படிப்பட்டதுதான் யமகண்டம்" என்றார்.

காளமேகப் புலவர் இவ்வண்ணஞ் சொல்லக்கேட்ட மாத்திரத்தில், அதி மதுரகவி மனந் திடுக்குற்று, அடா அப்பா! யமகண்டமென்பது இப்படிப்பட்ட கோரமானதா? இஃது உள்ளபடி யமகண்டத்திற்கு ஒப்பா யிருப்பதனாலே தான் இதற்கு இப்பெயர் கொடுக்கப்பட்டதாகக் காண்கின்றது. இவ்வாறு செய்ய ஆராலேயாகும்? அசாத்தியம்! அசாத்தியம்! என்று தனக்குள்ளே எண்ணி அதிசயித்து; பின்பு புலவர்பெருமானைப் பார்த்து "நீ சொன்ன யமகண்டம் தகுதியானதுதான்; ஆயினும் சும்மா வாயினாலே டம்பமாகச் சொல்வதனால் என்ன பிரயோசனம்? "மாடுதிரு

ப்பினவ னல்லவோ அர்ச்சுனன்" அதுபோல, சொன்னபடி செய்வதன்றோ கௌரவம்? ஆகையால் செய் பார்ப்போம்" என்றான். இவர் "சபாக ஆடவிட்டு நாடகம் பார்க்கிறது போல என்னைச் செய்யச்சொல்லிப் பார்க்கிறதென்னை? நீ முதல் முதல் இந்த விஷயத்தை எடுத்துப் பேசினதனாலும் வெகுநாளாக யாவரு மறிய நடுத்தெருவிலே "அதிமதுரகவி ராய சிங்கம் பராக்" என்று விருது கூறிக்கொண்டு வருகிற படியினாலும், செய்யவேண்டிய கடமை உன்னுடையதே; அப் படியிருக்கக் 'குரங்கு குட்டிக் கையைக் கொய்க்கிறது போல' என்மேலே சார்த்தி என்னைத் தூண்டிவிட்டு நீ தப் பித்துக்கொள்ளப் பார்ப்பது சரியோ? இது விருது கூறி வந்துசெடியில் நுழைகிறதுபோ லாகுமல்லவோ?" என்றார்.

அத்தருணத்தில் அதிமதுரகவியும் அறுபத்துநாலு தண் டிகைப் புலவரும் திருமலைராயன் முன்னிலையில் ஒரு சேரக் கூடி, "இவன் எதிரிகளை மதியாத துன்மார்க்கனாயிருக்கிற படியினாலே, தந்திரமாக இவனையே அந்த யமகண்டத்தில் மாட்டி இவனுடைய கொழுப்பை அடக்கவேண்டும்" என்று தங்களுக்குள் ஆலோசித்துக்கொண்டு, "அப்படிச் செய்ய வேண்டுமென்று எங்களுக்கு அவசியமில்லை, நீயே உன்னை அதிகசமர்த்தனென்று பெருமைப்படுத்தியும், எங்களை யிழி த்துச் சீட்டுக்கவிபாடி யனுப்பினதனாலும், நாங்கள் கருவாக அரிகண்டம் பாடச்சொன்னால், கிணற்றுக்குத் தப்பித் தீயி லே பாய்ந்ததுபோல அதை விலக்கி உன் வாயினாலேயே யம கண்டம் பாடுகிறதைக் குறித்துப் பேசினதனாலும், நீ தான் அந்தப்படிச் செய்யவேண்டும்" என்றார்கள்.

அவர்கள் அப்படிச் சொல்லக்கேட்டுப் புலவர் சிகா மணியானவர், "கல்வித்திறமும் கவி சாதுரியமு மில்லாத இவர்களை யமகண்டம் பாடச்சொல்லுகிறது, வீரமில்லாத பேடியைப் போருக் கழைக்கிறதுபோ லல்லாமல் வேறன்று; அதனால் அதை நாமே செய்துகாட்டி இவர்கள் இறுமாப்பை அடக்கவேண்டும்" என்று நிச்சயித்துக்கொண்டு, "நீங்கள் வருத்தப்படவேண்டாம், தலைகீழாகக் கரணம்போட்டாலும்

இவ்விது உங்களால் ஆகத்தக்கதன்று; நானே செய்கிறேன் பாருங்கள்" என்று உடன்பட்டார். அவர் உடன்பட்ட மாத்திரத்தில் அவர்கள் "இனித் தாமதிக்கலாகாது" என்று யமகண்டத்தைக்குறித்து அவர் சொன்னபடி வேலைளர்களைக்கொண்டு ராஜாவின் சபாமண்டபத்திற்கு நேரிலே குழிவெட்டித் தழல்மூட்டி எண்ணெய்க் கொப்பறை வைத்துக் குழிக்கு நாற்றிசையிலும் இருப்புக் கம்பம் நாட்டிக் கம்பத்தின்மேற் சட்டம்போட்டு நடுச்சட்டத்திற் கொப்பறைக்குமேலே உறி கட்டிப் பாகர்களால் யானைகளை மதமேற்றிக் கொண்டுவந்து கம்பத்திற்கு ஒவ்வொன்றாக நிறுத்தும்படி செய்தார்கள். புலவர்பெருமான் கழுத்திற்கும் அரைக்கும் கத்தி கட்டிக்கொண்டு கத்திகளின் பின்னுள்ள வளையங்களிற் கோத்திருக்குஞ் சங்கிலிகளை யானைகளின் கையிற் கொடுத்துவிட்டுத் தாம் உறியின்மேலேறி முகமலர்ச்சியுடனே மண்டலித்திருந்து, திருமலைராயனுடைய அனுமதி பெற்றுக்கொண்டு அதிமதுரகவி முதலானவர்களை நோக்கி, "இனி நீங்கள் காலதாமதஞ் செய்யாமல் உங்களிஷ்டப்படிக்குக் கொடுக்கவேண்டிய சமிசைகளை தடையின்றித் தாராளமாகக் கொடுக்கலாம்" என்ன, அவர்கள் இவருடைய தைரியத்தையும் முகவிலாசத்தையும் உறியேறிப் பயமின்றிக் கம்பீரமாக வீற்றிருப்பதையுங் கண்டு, "அம்மம்மா! இவனுடைய தைரியந்தான் எப்படிப்பட்டது!" என்று ஆச்சரியப்பட்டு, "நாமிதை முற்ற முடியப் பார்க்கவேண்டும்" என்று யாவரும் சமீபத்தில் வந்திருந்து, அவரவர் வெவ்வேறே மிகவும் அருமையாக ஆராய்ந்து தேடி யெடுத்துத் தங்களிஷ்டப்படிக் கெல்லாம் நாநாவிதமான சமிசைகள் கொடுக்க, அவைகளெல்லாவற்றையும் அகிலாண்ட நாயகி அனுக்கிரகத்தாற் பொருள் செய்யாமலும், எவ்வளவேனும் இடர்ப்படாமலும் அநாயாசமாக அவர்கள் கொண்ட கருத்துக் கிணங்கும்படிச் சித்திர விசித்திரமாய் நல்ல நயந்தோன்ற அதகதற்குத் தக்க அலங்காரங்களும் அமைத்து விரைவாகப் பாடினார்.

## அதிமதுரகவியும், அறுபத்துநாலு தண்டிகைப் புலவர்களும் தனித்தனி கொடுத்த சமிசைகளும், காளமேகப்புலவர் பாடிய பாடல்களும்.

பிரதமத்தில் அதிமதுரகவி, "திருமாலவதாரம் பத்தும் ஒரு வெண்பாவில் அடக்கிப் பாடவேண்டும்" என்ன, புலவர் பெருமான் "இதற்கு ஒரு வெண்பாவும் வேண்டுமோ! நான் பாதிவெண்பாவிற் பாடுவேன்" என்று பாடிய செய்யுள்.

"மெய்ச்சுதிரு வேங்கடவா வெண்பாவிற் பாதியிலென்
இச்சையிலுன் சன்ம மியம்பவா—மச்சாகூர்
மாகோலா சிங்காவா மாராமா ராமாரா
மாகோபா லாமாகா வா."

(இதன்பொருள்)—"தேவரும் முனிவரும் யாவரும் மெச்சுகின்ற திருவேங்கடத்தில் வீற்றிருக்கின்ற பெருமானே! அடியேன் அபீஷ்டப்படி பாதி வெண்பாவில் உனது திருவவதாரம் பத்தும் இசைத்துக் கூறும்பொருட்டு நீ என் முன் எழுந்தருளக் கடவாய்" என்று முற்பாதியில் திருவேங்கடமுடையானைப் பிரார்த்தித்து, தாம் பிரார்த்தித்த வண்ணம் பெருமாள் கடாட்ச விசேஷத்தால் அப்பத்தவதார மூர்த்திகளும் தமக்குப் பிரசன்னமாகக் கண்டு, பிற்பாதியில் "மச்சா, கூர்மா, வராகா, நரசிங்கா, வாமனா, பரசுராமா, ரகுராமா, பாலராமா, கிருஷ்ணா, கற்கி" என்று அவ்வவர் திருநாமங்களைத் தனித்தனியே குறித்து அழைத்தாரென்பதாம். "இச்செய்யுளுக்கு, மெய்ச்சுகின்ற திருவேங்கடத்தானே! பாதி வெண்பாவில் என்னிஷ்டப்படி, மச்சா, கூர்மா, வராகா, நரசிங்கா, வாமனா, பரசுராமா, தசரதராமா, பலராமா, கிருஷ்ணா, கற்கியென்று உன் திருவவதாரத்தைச் சொல்லும்படி வா" என்று பொருள் கூறுவாருமுண்டு.

அறுபத்துநாலு புலவர்களில் ஒருவர் "இராசிகளின் பெயரும் முறையும் தொகையும் அடைமொழியில்லாமல் ஒரு வெண்பாவில் அமைத்துப் பாடவேண்டும்" என்ன, முதலிற் 'பகருங்கால்' எனவும், இறுதியில் 'வசையறு மிரா

சிளைப்’ எனவும், சேர்த்துக்கொண்டு அவ்வாறே பாடிய செய்யுள்.

"பகருங்கான் மேட * மிட பமிதுனக் கர்க்க
டகஞ்சிங்கங் கன்னி துலாம்விர்ச்—சிகந்த
னுசுமகரங் கும்பமீ னம்பன்னி ரண்டும்
வசையறும் ராசி வளம்."

என்பதாம்.

ஒருவர், "மும்மூர்த்திகள் பெயர், அவர்கள் தின்னுங் கறி, உண்ணும் உணவு, ஏந்தும் ஆயுதம், பூணும் பூஷணம், ஏறும் வாகனம், வசிக்குமிடங்களை ஒரு வெண்பாவில் அடக்கிப் பாடவேண்டும்" என்ன, அப்படியே பாடியசெய்யுள்,

"சிறுவ னளையயறு செந்நெற் கடுகு
மறிதிகிரி நண்டு மணிநூல்—பொறியரவம்
வெற்றேறு புள்ளன்னம் வேதனரன் மாலுக்குக்
கற்றாழம் பூவை கறி."

(இ-ள்.) பிரமன் சிவன் விஷ்ணு என்னும் மூவர்க்கும், பயறு - பிள்ளை - வெண்ணெய் - கறி; செந்நெல்-விஷயம் - பூமி - உணவு; தண்டம் - மான் - சக்கரம் - ஆயுதம்; உபவீதம் — சர்ப்பம் - கௌஸ்துபம் - பூஷணம்; அன்னம் - ரிஷபம் — கருடன் - வாகனம்; தாமரை - கைலை - பாற்கடல் - வசிக்குமிடம்; என்பதாம்.

ஒருவர் "சமேபதி மலைகுலுங்கினதாக ஒரு வெண்பாப் பாடவேண்டும்" என்ன, "மலைமாத்திரமா? உலகமுழுதும் குலுங்கியதாகப் பாடுகிறேன்" என்று பாடிய செய்யுள்.

"வாரணங்க ளெட்டு மகமேரு வுங்கடலும்
தாரணியு நின்று சலித்தனவால்—நாரணனைப்
பண்வா யிடைச்சி பருமத்தி னாலடித்த
புண்வாயி லீமொய்த்த போது."

(இ-ள்.) ஸ்ரீமந்நாராயணன் கண்ணபிரானாக அவதரித்திருக்கையில், ஆயர்பாடியில் வெண்ணெய் திருடினானென்று அவனை இராகம் போன்ற சொல்லினையுடைய அசோதைப்

* "இடபம் மிதுனம்" என்பதில் மகரவொற்று விரித்தல் விகாரம்.

பிராட்டி பருக்க மத்துக்கொண்டு அடிக்க புண்ணில் சயானது மெய்த்தபொழுது, அருவுருப்புண்டாகி அவன் அருமைத் திருமேனி அசைய, சராசரமுழுதும் திருவுதரத்திற்குள் அசையாது வைத்து அவனாற் பாதுகாக்கப்படும் உலகமும், அதிலுள்ள அஷ்டதிக்கு யானைகளும், மகாமேருவும், சப்த சாகரங்களும் அசைந்தன, என்பதாம்.

ஒருவர், "குடத்திலே கங்கை யடங்கும் என்பதாகப் பாடவேண்டும்" என்ன, அவ்வாறே பாடிய செய்யுள்.

"விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும்—பெண்ணை
இடத்திலே வைத்த விறைவர் சடாம *
குடத்திலே கங்கையடங் கும்."

(இ-ள்.) கங்காநதியானது அகன்ற வானத்திற்குள்ளும் அடங்காமல், மகாமேரு முதலாகிய மலைகளுக்குள்ளும் அடங்காமல், பூமிக்குள்ளும் அடங்காமல், எங்கும் சம்பூரணமாகப் பொங்கிப் பெருகிவந்தாலும், உமாதேவியை இடது பாகத்தில் வைத்தருளிய பரமசிவனுடைய ஜடாமகுடத்தில் அடங்கி நிற்கும் என்பதாம்.

ஒருவர் "ஒன்று முதற் பதினெட்டெண்களை முறையே அடைசொல் லில்லாமல் ஒரு வெண்பாவில் அடக்கிப் பாடவேண்டும்" என்ன, அப்படியே அடக்கிப் பாடிய செய்யுள்.

"ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறு வேழெட்டு
ஒன்பது பத்துப் பதினொன்—றுபன்னி
ரண்டுபதின் மூன்றுபதி னான்குபதி னைந்துபதி
னாறுபதி னேழ்பதினெட் டு."

ஒருவர், முதற்சங்கத்தின் தொகையும், இடைச்சங்கத்தின் தொகையும், கடைச்சங்கத்தின் தொகையும் ஒருவெண்பாவில் அடக்கி, அம்மூன்று சங்கத்தார்க்கும், அறுபத்து

* மகுடத்திலே கங்கை யடங்குமென்பதன் முதலெழுத்தாகிய மகரத்தைப் பிரித்து மூன்றும் அடியின் இறுதியிற் சேர்த்து, குடத்திலே கங்கை யடங்குமென்பதைச் சமிசைக் கேற்க நான்காமடியிற் பொருத்தி முடித்தார்.

நாலு திருவிளையாடலுக்கும் கர்த்தன் மதுரையிற் சொக்கன் என்பது பாணிலேயாய் ஈற்றடியில் வரும்படி முடிக்கவேண்டும் என்ன, அவ்வண்ணமே முடித்த செய்யுள்.

"நாலாநா லாயிரநா னூற்றுநாற் பத்தொன்பான்
பாலாநா னூற்றுநாற் பத்தொன்பான்—மேலாநாற்
பத்தொன்பான் சங்கமறு பத்துநா லாடலுக்கும்
கர்த்தன் மதுரையிற்சொக் கன்."

ஒருவர், "கடல் நடுவிற் செந்தூ ளெழும்பினதாகப் பாடவேண்டும்" என்ன, அப்படியே கருத்துக் கற்பித்துப் பாடிய செய்யுள்.

"சுத்தபாற் கடலி னடுவினிற் றூளி தோன்றிய வதிசய மறை கேள், மத்தகக் கரியை யுரித்தவன் மீது மதன்பொரு தழித்திடு மாற்றம், வித்தகக் காலை செவியுறக் கேட்டாள் விழுந்து நொந்தயர்ந்தழு தேங்கி, கைத்தல மலரான் மார்புறப் புடைத்தா ளெழுந்தது கலவையின் செந்தூள்."

(இ-ள்.) மகிமையில்லாத திருப்பாற்கடலின் நடுவிற் செந்தூளெழும்பிய அதிசயத்தைச் சொல்லுகிறேன் கேள், தாருகாவனத்து முனிவர்கள் விடுத்த மஸ்தகத்தையுடைய யானையின் தோலையுரித்துப் போர்த்த சிவகுரான்மேற் படையெடுத்துப் போர்செய்து மன்மதனாகிய பிள்ளை இறந்த செய்தி. அவனுடைய தாயாகிய சாதுரியமுடைய ஸ்ரீமகாலட்சுமி செவியில் வந்து புகும்படி கேட்டு, அவள் கீழேவிழுந்து மனம் நொந்து அழுது மலர்போன்ற தன் இருகைகளையும் உயர எடுத்து மார்பில் தாக்கும்படி அடித்துக்கொண்டாள், அதனால் அம்மார்பில் அப்பியிருந்த குங்குமக்கலவைச் செந்தூளானது எழுந்து பரந்தது என்பதாம். (சுத்தப் பாற்கடலென்பது சுத்த பாற்கடலெனச் செய்யுள் விகாரமாயிற்று.)

பிறவாநெறி காட்டியார் என்னும் பெயருடையவர், "பெருங்காற்று மழைகாட்டும் பெருநட்புப் பகைகாட்டும் என்று ஒரு வெண்பாப் பாடவேண்டும்" என, அங்ஙனமே அவரைக் கடிந்து பாடிய செய்யுள்.

"நீரே பிறவா நெறிகாட்டி யாரெமக்கு
நீரே சமிசை நிலையிட்டீர்—நீரேயிவ்
விளக்கமேன் செய்தீர் விங்கடுங்காற் றும்மழைகாட்
டுங்கடுநட் புப்பகைகாட் டும்."

(இ-ள்.) பிறவாநெறி காட்டி யாரென்று யாவராலுஞ் சிறப்பித்துச் சொல்லப்படும் பிரபலமான பெயர்பெற்றவர் நீர்தாமோ? எமக்கு இப்படிப்பட்ட சமிசைகொடுக்கத் தலைப்பட்டவர் நீர்தாமோ? எதுக்காக நீரிந்த விங்களஞ் செய்ய வேற்பட்டீர்? அந்தமட்டிற் போனாலும் விட்டுவிடும், கடுங்காற் றும்மழை காட்டும் கடுநட்புப் பகைகாட்டும்' என்பதாம்.

ஒருவர்,"ஆமணக்குக்கும் யானைக்கும் உவமைதோன்ற ஒருபாடற் பாடவேண்டும்" என்ன, அங்ஙனமே சிலேஷித்துப்பாடிய செய்யுள்.

"முத்திருக்குங் கொம்பசைக்கு மூரித்தண் டேந்திவரும்
கொத்திருக்கு நேரே குலைசாய்க்கும்—எத்திசைக்கும்
தேமணக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆமணக்கு மால்யானை யாம்."

(இ - ள்.) எந்தத்திசைகளிலும் இனிமையாகப் பரிமளிக்கின்ற மலர்ச்சோலைசூழ்ந்த திருமலைராயனுடைய வெற்பகத்தில் ஆமணக்கு முத்துடைத்தா யிருக்கும், கொம்பசையாநிற்கும், நெரிகின்ற தண்டேந்தி வளரும், காய்கள் கொத்துக் கொத்தா யிருக்கும், நேர்மையாகிய குலைகள் சாய்ந்திருக்கும் ஆதலாலும், யானை தன்னகத்தில் முத்திருக்கும், கொம்பினை அசைக்கும், வலிபெற்ற இருப்புலக்கையைத் துதிக்கையில் ஏந்திவரும், மஸ்தகத்திற் பாகன் அங்குசத்தாற்குத்தும் குத்துடைத்தாயிருக்கும், பகைவர் கூட்டத்தை இரித்தோட்டும் ஆதலாலும், இவ்விரண்டும் ஒன்றனையொன்று ஒக்கும், என்பதாம்.

ஒருவர், "வைக்கோலுக்கும் யானைக்கும் ஒப்புமை தோன்றப் பாடவேண்டும்" என்ன, அவ்வாறே சிலேஷித்துப் பாடிய செய்யுள்.

"வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும்—சீருற்ற
செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில்
வைக்கோலு மால்யானை யாம்."

(இ - ள்.) சிறப்புப் பொருந்திய அழகிய சிவந்தமேனியையுடைய திருமலைராயனது வெற்பகத்தில் வைக்கோல் உழவர்களாற் கற்றை கற்றையாக வாரியெடுத்துக் களத்தில் அடிக்கப்படும், பிறகு அங்கிருந்து கொண்டுவந்து கோட்டையாகக் கட்டிச் சேர்க்கப்படும், அன்றியும் போர்போடப்பட்டுச் சிறந்து பொலிந்திருக்கும் ஆதலாலும், யானை பகைஞர்களை வாரி யுத்தகளத்தில் அடிக்கும், யுத்தத்தில் வெற்றி சிறந்து பொலிவு பெற்றிருக்கும், பின்பு திரும்பி வந்து கோட்டைக்குட் பிரவேசிக்கும் ஆதலாலும், இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று ஒப்பாகும் என்பதாம்.

ஒருவர், "பாம்புக்கும் எள்ளுக்கும் ஒப்பிட்டுப் பாடவேண்டும்" என்ன, சிலேஷித்துப் பாடியசெய்யுள்.

"ஆடிக் குடத்தடையு மாடும்போ தேயிரையும்
மூடித் திறக்கின் முகங்காட்டும்—ஓடிமண்டை
பற்றிப் பரபரெனும் பாரிற்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம் பெள்ளெனவே யோது."

(இ - ள்.) பாம்பு படமெடுத்தாடிக் குடத்திற்குள் அடைந்திருக்கும், ஆடும் பொழுதே சீத்கார பூத்காரம்பண்ணும், பெட்டிக்குள் அல்லது மேற்படி குடத்துக்குள் இட்டு மூடித்திறந்தால் தலையை நீட்டிக்காட்டும், கடித்தவுடனே அதன் விஷமானது மண்டையில் ஓடிப் பற்றிப் பரபரவென்று நமை யுண்டாகும், அதற்குப் பிளவாகிய நாக்குமிருக்கும் ஆதலாலும், செக்காடி அதன் சாரமாகிய தைலம்குடத்திற் சேர்க்கப்படும், செக்காடும்பொழுதோ இரைச்சலிடும், குடத்திற்பெய்து மூடிவைத்து நுரையடங்கினபின்பு திறந்துபார்த்தால் அத்தைலம் பார்த்தவர்களுடைய முகச்சாயையைத் தனக்குள்ளே காட்டும், அஃது உச்சியில் வார்க்கப்படுமானாற் பரவியோடி மண்டையிற் பற்றிப் பரபரென ஊற

லெடுக்கும், பிண்ணாக்கு முண்டாயிருக்கும் ஆதலாலும், இவ்விரண்டும் ஒன்றினையொன்று ஒக்குமென்று சொல்லுக என்பதாம். (இதில் நிலமும் அதன் தைலமும் ஒற்றுமை பற்றி அபேதமாகச் சொல்லப்பட்டன.)

ஒருவர், "பாம்புக்கும் எலுமிச்சம்பழத்துக்கும் உவமை கற்பித்துப் பாடவேண்டும்" என்ன, சிலேஷித்துப் பாடிய செய்யுள்.

"பெரியவிட மேசேரும் பித்தர்முடி யேறும்
அரியுண்ணு மூப்புமே லாடும்—எரிகுணமாம்
தேம்பொழியுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்புமெலு மிச்சம் பழம்."

(இ - ள்.) தேனைச்சொரிகின்ற சோலைசூழ்ந்த திருமலைராயனுடைய வெற்பகத்தில், பாம்பு மிக்க விஷம்பொருந்தியிருக்கும், பரமசிவனுடைய திருமுடிமே லேறிக் குடைகவித்தாற்போலப் படம் விரித்திருக்கும், காற்றை உட்கொள்ளும், அதனால் உடலுப்பும், மேலெழுந் தாடாநிற்கும், கோபித்துச் சீறுங் குணமுடையதாம் அதலாலும், எலுமிச்சம்பழம் ராஜசமுக முதலாகிய பெரிய இடங்களில் உபசாரார்த்தமாய்ப் போய்ச்சேரும், பித்தங் கொண்டவர்களுக்கு அப்பித்தம் இறங்க அவர்கள் தலையிற் சாறுபிழிந்து ஏற்றப்படும், ஊறுகாய்க்காகக் கருவியால் அரியப்படும், மேலே உப்பிட்டுக் குலுக்கப்படும், இரணத்தில் அதன் சாரம்பட்டால் எரிகின்ற குணமுடையதாம். ஆதலாலும் அவ்விரண்டும் தமக்குள் ஒன்றோடொன்று ஒப்பாகும் என்பதாம்.

ஒருவர், "மலைக்கும சந்திரனுக்கும உவமானமாகச் சிலேஷித்துப் பாடவேண்டும்" என்ன பாடிய செய்யுள்.

"நிலவாய் விளங்குதலா னீள்வான் படிந்து
சிலபோ துலாவுதலாற் சென்று—தலைமேல்
உதித்து வரலா லுயர்மா மலையை
மதிக்குநிக ராக வழுத்து."

(இ - ள்.) மலை பூமியின்கண் விளங்குதலாலும், மேகங்கள் சிலகாலம் தன்னிடத்தில் வந்து படிந்து உலாவப்படு

தலாலும், சிகரங்கள் மேலே தோன்றிவருதலாலும், சந்திரன் நிலவினையுடைத்தாய்ப் பிரகாசிப்பதனாலும், நீண்டவானத்தின்கட் படிந்து சிலபொழுது உலாவுதலாலும், அஸ்தமித்து மறுபடி தலைமேல் உதித்து வருதலாலும் ஒன்றையொன்று ஒத்ததாகச் சொல்லலாம் என்பதாம்.

ஒருவர், "தேங்காய்க்கும் நாய்க்கும் சமத்துவங் கற்பித்துச் சிலேஷித்துப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"ஓடு மிருக்குமத னுள்வாய் வெளுத்திருக்கும்
நாடுங் குலைதனக்கு நாணாது—சேடியே
தீங்காய தில்லாத் திருமலைரா யன்வரையில்
தேங்காயு நாயுந் தெரி."

(இ - ள்.) தீமையென்பது நாடுதலில்லாத திருமலைராயனுடைய வெற்பகத்தில், தேங்காயானது நாரேயன்றி ஓடுமுடைத்தா யிருக்கும், உடைத்துப் பார்த்தால் அதனுட்புறம் வெளுத்திருக்கும், ஒருகுலைக்குப் பத்துப்பதினைந்துக்கு மேற்பட்டிருக்குமன்றி அது தாங்குமோ தாங்காதோவென்று அஞ்சிக் குறைந்திராது ஆதலாலும், நாய் சிலநேரம் இங்கும் அங்கும் ஓடித்திரியும், சிலநேரம் இருந்தவிடத்திலேயே இருக்கும், அதனுள்வாயோ வெளுத்திருக்கும், ஆரேனும் புதியவர் வரக்கண்டால் அவரை உற்றுப்பார்க்கும், பார்த்துப் பின்பு குலைக்க ஆரம்பிக்கும், அப்படிக் குலைப்பதில் வெட்கப்பட மாட்டாது ஆதலாலும் இவ்விரண்டும் ஒக்கும் என்று அறிவாயாக என்பதாம். [சேடி-மகடூஉ முன்னிலை.]

ஒருவர், "மீனுக்கும் பேனுக்கும் உவமையாகச் சிலேஷித்துப் பாடவேண்டும்" என்னப் பாடிய செய்யுள்,

"மன்னீரி லேபிறக்கு மற்றலையி லேமேயும்
பின்னீச்சிற் குத்தும் பெருமையால்—சொன்னேன்கேள்
தேனுந்து சோலைத் திருமலைரா யன்வரையில்
மீனும்பே னுஞ்சரியா மே."

(இ - ள்.) மீன் பெருமைதங்கிய நீரிடத்தில் உற்பத்தியாகும், உற்பத்தி யானபின்பு அந் நீர்த்திரையிலேயே மேய்ச்

றுகொண் டிருக்கும், அப்படி மேயுமிடத்தில் ஏதாவது அரவங்கண்டாற் கண்டவுடன் பின்புறத்தில் குத்துவதுபோல நீந்திக்கொண்டே பேசும் பெருமை யுடைத்தாம் ஆதலாலும், பேன் ஈரிலிருந்து மிகுதியாகப் பிறக்கும், உரம் பெற்ற தலையினிடத்தில் மேயும், பின்பு பல்லைக் கடித்துக்கொண்டு பெண்டுகளால் ஈசசென்று குத்தப்படும் ஆதலாலும், இவ்விரண்டும் சரியொத்தது என்பதாம். [ஈச்சு என்பது ஒலிக்குறிப்பு.]

ஒருவர், "ஆட்டுக்குதிரைக்கும் காவிரி யாற்றுக்கும் ஒப்புமை கற்பித்துச் சிலேடையாகப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"ஓடுஞ் சுழிசுத்த முண்டாகுந் துன்னலரைச்
சாடும் பரிவாய்த் தலைசாய்க்கும்—நாடறியத்
தேடுபுக ழாளன் றிருமலைரா யன்வரையில்
ஆடுபரி காவிரியா றும்."

(இ - ள்.) தேசமெல்லாம் அறியத் தேடிய புகழினையுடைய திருமலைராயனது வெற்பகத்தில் ஆட்டக் குதிரை விசைகொண்டு ஓடாநிற்கும், சுத்தமான சுழியுள்ளதாயிருக்கும், விரோதிகளை முறிய வடிக்கும், காண்பவருக்கு விருப்பமுண்டாகத் தலைவளைத்து நடக்கும் ஆதலாலும், காவிரியாறு நீர்பெருகியோடும், ஓடும்பொழுது அந்நீர் சுழித்தலையுடைத்தாயிருக்கும், தன்னிலே தோய்ந்தவர்களைப் பாவனமாக்கும் பரிசுத்த முள்ளதாம், நெருங்கிய மலர்களை அலைத்துச்சாடும், குதிரை வடிவுவாய்ந்த அலைகளைமடக்கி யெறியும் ஆதலாலும், இவ்விரண்டும் தம்மில் ஒப்பாம் என்பதாம்.

ஒருவர், "கீரைப்பாத்திக்கும் ஏறுகுதிரைக்கும் ஒப்புமைத்துச் சிலேடையாகப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"கட்டி யடிக்கையாற் கான்மாறிப் பாய்கையால்
வெட்டி மறிக்கின்ற மேன்மையால்—முட்டப்போய்
மாறத் திருப்புகையால் வண்கீரைப் பாத்தியுடன்
ஏறப் பரியாகு மே."

(இ - ள்.) கிரைப்பாத்தி நிலங்கொத்திக் கட்டிகளை மண்வெட்டியால் அடித்துடைத்தலாலும், ஒரு வாய்க்காலி லிருந்து மறுவாய்க்காலினால் நீர்மாறிப் பாய்தலாலும், சதுரஞ் சதுரமாக வெட்டித் தடுத்தலாலும், நேரேபோய்க் கடைமடையில் முட்ட அதுகண்டு அங்கிருந்து பக்கமடையில் திருப்பிமாறத் திரும்புதலாலும், ஏறுகுதிரைகட்டிக் * கொட்படிக்கப் படுதலாலும், கால் மாறிமாறி எழும்பிப் பாய்தலாலும், தன்மேலேறிய வீரன் சத்துருக்களைவெட்டி மடிக்கத்தக்க மேன்மையுடைத்தா மாதலாலும், போகவேண்டிய இடமுழுதும் போய் மீளத் திரும்புதலாலும் இவ்விரண்டும் ஒன்றனை யொன்று ஒப்பாம் என்பதாம்.

ஒருவர், "ஆட்டுக்கும் குதிரைக்கும் சிலேஷையாகப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"கொம்பிலையே தீனிதின்னுங் கொண்டதன்மேல் வெட்டுதலால்
அம்புவியி னன்னடைய தாதலால்—உம்பர்களும்
தேடுநற் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆடுங் குதிரையுநே ராம்,"

(இ - ள்.) தேவர்களும் தேடிவருகின்ற ரம்மியமான சோலைசூழ்ந்த திருமலைராயன் வெற்பகத்தில் ஆடு கொம்புகளி லிருக்கின்ற தழைகளை இரையாகத் தின்னுதலாலும், பணத்துக்குக்கொண்டு அதன்பின்பு வெட்டப்படுதலாலும், பூமியில் ஆயர்களுக்கு நல்ல செல்வமா யிருத்தலாலும், குதிரை கொம்பில்லா திருப்பதனாலும், தீனிதின்னுதலாலும், போர்செய்யும் வீரன் அதன்மே லேறியிருந்து பகைஞரை வெட்டுதலாலும், சரகதி மயூரகதியாகிய நல்ல நடையினை யுடையதாதலாலும், இவ்விரண்டும் ஒன்றனை யொன்று ஒக்கும் என்பதாம்.

ஒருவர், "துப்பாக்கிக்கும் ஓலைச்சுருளுக்கும் சமத்துவங் கற்பித்துப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

---

* கொட்படித்தல் - குதிரையைத் திருத்தும்பொழுது அஃது உடனே திரும்பப் பழகுதற்குக் கழுத்திற் கயிறுகட்டிச் சாட்டைகொண்டு சுற்றிச்சுற்றி அடித்தல்.

"ஆணி வரையுறலா லானகுறிப் பேதரலால்
தோணக் கருமருந்து தோய்த்திடலால்—நீணிலத்தில்
செப்பார்க் குதவாத் திருமலைரா யன்வரையில்
துப்பாக்கி யோலைச் சுருள்."

(இ - ள்.) நெடிய பூமியில் தன்பேரைச்சொல்லி ஸ்துதிசெய்யாத பகைஞருக்கு உதவி செய்யாத திருமலைராயனுடைய வெற்பகத்தில் துப்பாக்கி தன்னிடத்திற் சலாகையைக் கொண்டிருப்பதனாலும், சுடுவோன்குறித்த குறிதவறுதலாலும், குறையாமற் கழுத்த மருந் திடப்படுதலாலும், ஓலைச்சுருள் எழுத்தாணிகொண்டு எழுதப்படுதலாலும், தன்கண் ணெழுதிய விஷயக்குறிப்பைப் பிறருக்குத் தெரிவித்தலாலும், மை பூசப்படுதலாலும், இவ்விரண்டும் சமானமாகும் என்பதாம். (தோன்றவென்பது தோணவென மருவியது.)

ஒருவர், "வானவில்லுக்கும், விஷ்ணுவுக்கும், வெற்றிலைக்கும், முப்பொருட் சிலேடையாக ஒரு வெண்பாப் பாட வேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"நீரி லுளதா னிறம்பச்சை யாற்றிருவால்
பாரிற் பகைதீர்க்கும் பான்மையால்—சாருமனுப்
பல்வினையை மாற்றுதலால் பாரீர் பெருவான
வில்விண்டு நேர்வெற் றிலை."

(இ - ள்.) வானவில் நீர்கொண்டமேகத்தில் தோன்றியிருப்பதனாலும், பச்சைநிறம் உண்டாதலாலும், அழகுடைத்தாதலாலும், மழைக்குறிகளிலொன்றாய்ப் பூமியிற் கோடையென்னும் பகையைத் தீர்ப்பதனாலும், மனிதர்களுடைய பலவகைப்பட்ட தொழில்களையும் மாற்றுதலினாலும், விஷ்ணு மகாபிரளயத்தின் மத்தியில் தங்குவதனாலும், ஸாமளவர்ணமா யிருப்பதனாலும், இலக்குமியையுடையதனாலும், உலகத்தில் தேவர்கள் முனிவர்களுடைய பகையை ஒழிக்கும் பான்மையினாலும், தன்னை ஆசிரயித்த மநுக்களின் சஞ்சித ஆகாமிய பிராரப்த கருமங்களை நிவர்த்திப்பதனாலும், வெற்றிலை நீர்க்கால்களி லிருப்பதனாலும்,

பச்சென்ற நிறமுடையதனாலும், மங்களகர மாதலாலும், ஒருவரை யொருவர் பகைத்திருந்தால் அப் பகையை நிவர்த்திக்கின்ற தன்மையினாலும், மக்களது தந்தரோகத்தைத் தீர்ப்பதனாலும், இம்மூன்றும் ஒப்புமை யுடையன என்பதாம்.

ஒருவர் "பூசனிக்காய்க்கும் ஈசனுக்கும் ஒப்பமைத்துப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"அடிநந்தி சேர்தலா லாகம் வெளுத்துக்
கொடியு மொருபக்கங் கொண்டு—வடிவுடைய
மாசுணத்தைப் பூண்டு வளைத்தழும்பு பெற்றதனால்
பூசனிக்கா யீசனெனப் போற்று."

(இ - ள்.) பூசனிக்காய் அடியிற் காம்பு சேர்ந்திருப்பதனாலும், உடல்வெளுத்து ஒருபக்கத்திற் கொடியையுங் கொண்டு, அழகினையுடைய வெண்சுண்ணத்தை மேற்புறத்திற் பூண்டு, வளைவாகிய தழும்பு பெற்றிருப்பதனாலும், ஈசன் அடியில் ரிஷபம் சேர்ந்திருப்பதனாலும், விபூதி தாரணத்தால் திருமேனி வெளுத்து, பார்வதியையும் ஒரு பக்கத்தில் வைத்துக்கொண்டு அழகுடைய சர்ப்பாபரணத்தைப் பூண்டு, உமையவளுடைய வளைத்தழும்பு பெற்றிருப்பதனாலும் ஒப்பென்று சொல்லுக என்பதாம்.

ஒருவர் "ஐந்து டுகரம் வரக் கும்பேசர் விஷயமாகப் பாடவேண்டும்" என, நிறனிறைப் பொருள்கோளாகப் பாடிய செய்யுள்,

"ஓகாமா வீதோ டுடுடுடுடு நேரொக்க
நாகார் குடந்தை நகர்க்கிறைவர்—வாகாய்
எடுப்பர் நடம்புரிவ ரேறுவ ரன்பர்க்குக்
கொடுப்ப ரணிவர் குழைக்கு."

(இ - ள்.) இளமரங்கள் அடர்ந்த சோலைசூழ்ந்த திருக்குடந்தைக் கிறைவராகிய கும்பேசர், ஓ, கா, மா, வீ, தோ என்னும் இவ் வைந்தெழுத்துடனே, டு, டு, டு, டு, டு, என்னும் இவ்வைந்தெழுத்துந் தனித்தனி பொருந்த அவை ஓடு, காடு, மாடு, வீடு, தோடு என்றாதலால், அவற்றுள்

முறையே ஒன்றை அழகாகக் கையில் எடுப்பர், ஒன்றில் நடனஞ்செய்வர், ஒன்றின்மேல் ஏறுவர், ஒன்றைத் தம் மன்பர்க்குக் கொடுப்பர், ஒன்றைச் செவியில் அணிவர் என்பதாம். [தோடு - காதாபரணம்.]

ஒருவர் "பச்சைவடம் பாகு சேலை சோமன் என்னும் இந்நான்கு வஸ்திரபேதமும் வரும்படி ஒரு வெண்பாப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்,

"மாயன் றுயின்றதுவு மாமலராள் சொல்லதுவும்
ஏய குருந்திற்கொண் டேறியதும்—தூயை
இடப்பாகன் சென்னியின்மே லேறியதும் பச்சை
வடம்பாகு சேலைசோ மன்."

(இ - ள்.) நெடுமால் மகாப்பிரளயத்தில் திருக்கண் வளர்ந்தருளியதும் (பச்சைவடம்), தாமரை யாசனத்தை யுடைய இலக்குமியின் சொல்லும் (பாகு), கண்ணபிரான் கோபிகளை நாணச்செய்யும்பொருட்டுக் கவர்ந்துகொண்டு போய்க் குருந்தமரத்திலேறி ஒளித்துவைத்திருந்ததும் (சேலை), மலைமகளை இடப்பாகத்திலுடைய சிவபெருமானது திருமுடியில் ஏறியிருப்பதும் (சோமன்), முறையே பச்சை வடம் பாகு சேலை சோமன் என்பதாம். [பச்சைவடம் - ஆலிலை, சோமன் - சந்திரன்.]

ஒருவர் "பொன்னுவரையிலை காய் பூ என்று பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்,

"உடுத்ததுவு மேய்த்ததுவு மும்பர்கோன் றன்னால்
எடுத்ததுவும் பள்ளிக் கிசையப்—படுத்ததுவும்
அந்நா ளெறிந்ததுவு மன்பி னிரந்ததுவும்
பொன்னு வரையிலைகாய் பூ."

(இ - ள்.) ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் ஆடையாக உடுத்ததும் (பொன்), கிருஷ்ணாவதாரத்தில் மேய்த்ததும் (ஆ), இந்திரன் கல்மழை பொழிவித்ததினிமித்தம் குடையாக எடுத்ததும் (வரை), சயனத்திற் கிசையப் படுத்ததும் (இலை), அக்காலத்திற் கன்றுகொண் டெறிந்ததும் (காய்),

அன்பினால் பலிச்சக்ரவர்த்தியி னிடத்தில் இரந்ததும் (பூ), முறையே பொன்னுவரை யிலை காய் பூ என்பதாம். [வரை- மலை, பூ - பூமி.]

கச்சிக்காவலனென்னும் ஒருவர் "செங்கழுநீர்க் கிழங்கு என்று பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்,

"வாதமண ரேறியது மாயன் றுயின்றதுவும்
ஆதிதடுத் தாட்கொண்ட வவ்வுருவும்—சீதரனூர்
தாள்கொண் டளந்ததுவு தண்கச்சிக் காவலா
கேள்செங் கழுநீர்க் கிழங்கு."

(இ - ள்.) சாந்தகுணத்தையுடைய கச்சிக்காவலனே கேட்கக் கடவாய்! சம்பந்தமூர்த்திகளுடனே வாதுசெய்த சமணர்களேறியதும் (செங்கழு), நாராயணன் பள்ளிகொண்டதும் (நீர்), பரமசிவன் சுந்தரமூர்த்திகளைத் தடுத்தாட்கொள்ளும் பொருட்டு எடுத்த உருவும் (கிழம்), விஷ்ணுவானவர் திருவடியால் அளந்ததுவும் (கு), முறையே செங்கழுநீர் கிழங்கு என்பதாம்.

ஒருவர் "நா, நீ, நூ, நே என்று பாடவேண்டும்" என்னப் பாடிய செய்யுள்,

"அரையின் முடியி லணிமார்பி னெஞ்சில்
தெரிவை யிடத்தமர்ந்தான் சேவை—புரையறவே
மானூர் விழியீர் மலரணவொற் றீருரும்
ஆனலாம் நாநீநூ நே."

(இ - ள்.) ம், ல், ர், ண் என்னும் இந்நான்கு ஒற்றும், நா, நீ, நூ, நே என்னும் இந்நான்கிற்கும் தலைதடுமாற்றமாய் இறுதியாக, நாண், நீர், நூல், நேம் எனவருமாயின், உமாதேவி யிடப்பாகத்தி லெழுந்தருளிய சிவபிரானது அரையிலும், முடியிலும், மார்பிலும், கழுத்திலும் முறையே சேர்க்கப்படுவனவாகும், என்பதாம். [நேம் - விஷம்.]

ஒருவர் "கணபதிக்கும் முருகனுக்கும் சிவனுக்கும் சிலேடையாக ஒரு வெண்பாப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்

"சென்னிமுக மாறுளதாற் சேர்தருமுன் னாலுகையால்
இந்நிலத்திற் கோடொன் றிருக்கையால்—மன்னுகுளக்
கண்ணுறுத லானுந் தணப்தியுஞ் செவ்வேளும்
எண்ணரனு நேராவ ரே."

(இ - ள்.) விநாயகன் முகம் மாறுபட் டிருப்பதனு லும், முன்னே தொங்குகின்ற துதிக்கையினாலும், ஒரு கொ ம்பினை யுடைத்தா யிருப்பதனாலும், வெல்லத்தின்கண் ஆவி ர்ப்பவித்தலினாலும், முருகன் ஆறுமுகத்துட னிருப்பதனு லும், நெருங்கிய பன்னிரண்டு கைகளினாலும், இந்தப் பூமி யில் ஒப்பற்ற திருச்செங்கோட்டி லிருப்பதனாலும், நிலைபெ ற்ற சரவணப் பொய்கையில் அவதரித்தலினாலும், சிவன் திருமுடியிற் கங்கையிருப்பதனாலும், முன்னே சேர்ந்திருக் கின்ற நான்கு கைகளினாலும், இவ்வுலகத்திற் கயிலைமலையி லிருப்பதனாலும், நெற்றிக்கண்ணைப் பொருந்துதலாலும் இம்மூவருந் தம்முள் ஒருவரை ஒருவர் ஒப்பாவார் என்ப தாம்.

ஒருவர் "தை மாசி பங்குனி மாதம் என்று பாடவேண் டும்" எனப் பாடிய செய்யுள்.

"பாணற்குச் சொல்லுவதும் பைம்புனலை மூடுவதும்
தாணுவுரித் ததுவுஞ் சக்கரத்தோன்—ஊணதுவும்,
எம்மானை யெய்துவது மீசனிடத் துஞ்சிரத்தும்
தைம்மாசி பங்குனிமா தம்."

(இ - ள்.). தையற்காரனுக்குச் செய்யென்று சொல்வ தும் (தை), சலத்தை மறைத்துக்கொண் டிருப்பதும் (மாசு), சிவன் அடர்த்து உரித்ததும் (இபம்), விஷ்ணுவுக்கு உணவாயிருப்பதும் (கு), எங்கள் பெண்ணைச்சேர்வதும் (நீ), பரமசிவன் இடப்பாகத்தில் வைத்ததும் (மாது), முடி யில் தரித்ததும் (அம்) முறையே தை மாசி பங்குனி மாதம், என்பதாம். [நீ என்பது - நி எனக் குறுக்கலாயிற்று.]

ஒருவர் "ஒருபாடல் செருப்பென்றெடுத்து விளக்கு மாறென்று முடிக்கவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"செருப்புக்கு வீரர்களைச் சென்றுழக்கும் வேலன்
பொருப்புக்கு நாயகனைப் புல்ல—மருப்புக்குத்
தண்டேன் பொழிந்ததிருத் தாமரைமேல் வீற்றிருக்கும்
வண்டே விளக்குமா றே."

(இ - ள்.) புத்தகளத்திற் போய்ப்புகுந்து வீரர் கூட்டத்தைக் கலக்கிச் சிதறவடிக்கின்ற வேலாயுதத்தையேந்திய குறிஞ்சித் தலைவனாகிய முருகக்கடவுளை யான் ஆலிங்கனஞ்செய்ய, வாசனைபொருந்திக் குளிர்ச்சி தங்கிய தேனைச் சொரிகின்ற அழகிய தாமரைமலரின்மேல் வீற்றிருக்கின்ற வண்டு தான் வழிகாட்டாதிற்கு மென்பதாம். இக்கருத்து ஒருபெண் முருகவேளைத் தழுவக் கருதி வண்டைத் தூதுவிடக் குறித்ததாக அமைக்கப்பட்டது என்பதாம்.

ஒருவர் "பாம்புக்கும் வாழைப்பழத்துக்கும் சமானந் தோன்றப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்,

"நஞ்சிருக்குந் தோலுரிக்கு நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டான் மீளாதே—விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம்."

(இ - ள்.) மிகுதியாகப் பூந்தேன் பாய்கின்ற சோலைசூழ்ந்த திருமலைராயனுடைய வெற்பகத்தில், பாம்பு விஷமுடைத்தாயிருக்கும்; காயசித்திபெற்றோர் சட்டை கழற்றுவதுபோலப் பருவமறிந்து தோலுரிக்கும்; கடவுள் முடியின்மேலிருக்கும்; கொடிய கோபத்தினாலே அதன் பற்பட்டால் இறந்தவுயிர் திரும்பமாட்டாது ஆதலாலும், வாழைப்பழம் நைந்திருக்கும்; தோலுரிக்கப்படும்; கடவுள் திருமுடிமேல் பஞ்சாமிர்தத்தோடு கூட்டி அபிஷேகிக்கப்படும்; கறியாகவாவது மற்றெவ்வகையாக வாவது புசிப்பவர்களுடைய பல்லினிடத்திற் பட்டாற் பின்பு திரும்பமாட்டாது, ஆதலால் இவ்விரண்டும் ஒப்பாம், என்பதாம்.

ஒருவர் "கண்ணாடிக்கும் அரசனுக்கும் ஒப்பமைத்துப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"யாவருக்கும் ரஞ்சனைசெய் தியாவருக்கு மவ்வவராய்ப்
பாவனையாய்த் திகலப் பார்த்தலால்—எவும்
எதிரியைத்தன் னுள்ளாக்கி யேற்ற ரசத்தால்
சதிருறலா லாடியர சாம்."

(இ - ள்.) கண்ணாடி எல்லார்க்கும் விருப்பத்தை யுண்டாக்கி, எல்லார்க்கும் அவரவரைப்போலப் பாவனையாய்

முகத்தழுக்கு நீங்கத் திருத்தமாகப் பார்க்கப் படுதலாலும், எதிர்ப்பட்டவனது சாயையைத் தனக்குள்ளே கொள்ளத் தக்கதாக ரசம் பூசப்பட்டுச் சுதிர்பெற் றிருப்பதனாலும், அரசன் தன் கோலின்கீழ் வாழ்வார் யாவருக்குஞ் சந்தோஷமாகிய செய்கையைச் செய்து, யாவருக்கும் அவரவர் நிலைமைக்கேற்கத் தன்னைப் பாவித்துத் திமையகலப் பார்ப்பதனாலும், தன்மேற் போருக்கு வருகின்ற பகைஞனைச் சாமோபாயத்தால் தன் வசப்படுத்திச் சிங்கார முதலிய நவரசத்தைக்கொண்டு மகிமை பெற்றிருப்பதனாலும் ஒப்பாம், என்பதாம்.

ஒருவர் "சிவனைக் குறித்து நீறுவாய் நெருப்பாவாய் கூறுவாய் கொழுந்துவாய் நட்டமாவாய் நஞ்சாவாய் என்று ஒரு வெண்பாப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்,

"நீறுவாய் நெற்றி நெருப்பாவா யங்கமிரு
கூறுவாய் மேனி கொழுந்துவாய்—மாறாத
நட்டமா வாய்சோறு நஞ்சாவாய் நாயேனை
இட்டமாய்க் காப்பா யினி."

(இ-ள்.) நெற்றியின்கண் திருநீறுடைத்தா யிருப்பாய்; அங்கம் அக்கினிமயமா யிருப்பாய்; திருமேனி இரண்டு கூறாயிருப்பாய்; அன்றியும் எரிந்துகொண் டிருப்பாய்; எக்காலமு மொழியாத திருநட முடைத்தா யிருப்பாய்; நஞ்சை உணவாகக்கொள்ளுவாய்; உனது குணாதிசயம் பகிர்முகத்தில் இப்படியிருப்பினும் அந்தர்முகத்திலுள்ள கிருபையினால் நாய்போன்ற அடியேனை இஷ்டமாக ரட்சித்தல் வேண்டும், என்பதாம்.

ஒருவர் "அடிப்பது மத்தாலே யழ என்பதை ஈற்றடியாகக்கொண்டு அயலடியும் அதுபோலத் திரித்து ஒரு வெண்பாப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"வண்ணங் கரியனென்றும் வாய்தேவ நாழியென்றும்
கண்ணனிவ னென்றுங் கருதாமல்—மண்ணை
அடிப்பதுமத் தாலே யளந்தானை யாய்ச்சி
அடிப்பதுமத் தாலே யழ."

(இ – ள்.) உலகமுழுவதும் திருவடித் தாமரையினலளந்த பரமவிராட்டுவை இவன் கார்போலுங் கரியநிறத்தையுடையவனென்றும், சகலவேதங்களும் பரிமளிக்கின்ற திருவாயினை யுடையவ னென்றும், யாவர் கண்ணினிடத்திலுமிருப்பவனென்றும் நினையாமல் அசோதைப் பிராட்டியானவள் மத்தினலேயா அழும்படி அடிக்கிறது? அவன் முகவுல்லாச மாம்படி பூவும் புனலும் பெய்து பூசிக்கவேண்டுமல்லவோ? என்பதாம்.

ஒருவர் "திருமலைராயனுடைய வாளைக் குறித்துப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்,

"செற்றலரை வென்ற திருமலைரா யன்கரத்தில்
வெற்றிபுரி யும்வாளே வீரவாள்—மற்றையவாள்
போவாள் வருவாள் புகுவாள் புறப்படுவாள்
ஆவாளி வாளவா ளாம்."

என்பதாம்.

ஒருவர் "சிவனுக்கும், சுப்பிரமணியனுக்கும், விநாயகனுக்கும், விஷ்ணுவுக்கும், சிவனடியாருக்கும் தனித்தனி ஆறுதலை யுண்டென்று ஒரு வெண்பாப் பாடவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

"சங்கரற்கு மாறுதலை சண்முகற்கு மாறுதலை
ஐங்கரற்கு மாறுதலை யானவே—சங்கைப்
பிடித்தோற்கு மாறுதலை பித்தனர் பாதம்
படித்தோர்க்கு மாறுதலை பார்."

(இ - ள்.) பரமசிவனுக்குத் திருமுடியிற் கங்கையும், சுப்பிரமணியனுக்கு ஆறு சிரமும், விநாயகனுக்கு மாறுசிரசும், விஷ்ணுவுக்குப் பிரளயமாகிய உறைவிடமும், சிவனுடைய திருவடியைத் துதிசெய்பவர்களுக்கு மனவருத்தந் தணிதலு முண்டென்று நீ காண்பாயாக, என்பதாம்.

ஒருவர் "சிவனை முக்கண்ண னென்பதற்கு வேறு காரணந்தோன்ற ஒரு வெண்பாப் பாடவேண்டும்" எனப்பாடிய செய்யுள்,

"முக்கண்ண னென்றரனை முன்னோர் மொழிந்திடுவார்
அக்கண்ணற் குள்ள தரைக்கண்ணே—தொக்க

உமையாள்சண் ணொன்றரைமற் றூன்வேடன் கண்ணொன்
றமையுமித னாலென் றறி."

(இ - ள்.) சான்றோர் சிவபிரானை சோமசூரி யாக்கினி என்னும் மூன்றுகண் ணுடையானென்று பிரசித்தமாகச் சொல்வார்கள்; அப்படிச்சொல்வது எதனாலெனில், அச்சிவனுக்கு இயற்கையாயுள்ளது அரைக்கண் மாத்திரமே; அதனோடு வாமபாகத்தில் அர்த்த நாரியாய் எழுந்தருளிய உமாதேவியின் கண்ணொன்றரையும் அக்காலத்தில் ஊன்படைத்த கண்ணப்ப நாயனாரென்னும் வேடன் தன்முகத்தில் நின்றும் களைந்து சாத்திய கண்ணொன்றுஞ் சேர்ந்து மூன்றாயிருக்கின்ற இவ்வித காரணத்தினாலேதா னென்று அறிக, என்பதாம்.

ஒருவர் "கஞ்சிகுடியென்று சிலேடையாக ஏகாம்பரநாதர்மேல் ஒரு வெண்பாப் பாடவேண்டும்" என "அதற்கு மேலும் விசேஷமாகப் பாடுவோம்" என்று பாடிய செய்யுள்,

"நேற்றிரா வந்தொருவ னித்திரையிற் கைபிடித்தான்
வேற்றூரா னென்று விடாயென்றேன்—ஆற்றியே
கஞ்சிகுடி யென்றான் களித்தின்று போவென்றேன்
வஞ்சியரே சென்றான் மறைந்து." *

(இ - ள்.) கொடிபோலும் இடையினையுடைய சேடிகளே! நேற்றிராத்திரி நித்திரைசெய்யுஞ் சமயத்தில் ஒருவன் வந்து என்கையைப் பிடித்தான், நான் அவன் ஆரோ அயலூரானென்று ஐயமுற்றுப் பிடித்த கையை விடென்பதற்கு விடாயென்றேன், அவன் என்னைத் தணியச்செய்து அதற்கு உத்தரமாக நீ விடாய்கொண் டிருப்பதினால் அது தணியக் கஞ்சிகுடி யென்பதுபோலக் கஞ்சிகுடி யென்றான், என்றவுடன் காஞ்சிப்பதியில் வசிக்கும் ஏகாம்பர நாதனென்று நான் தெளிந்து இப்பொழுது என்னைச் சேர்ந்து சுகித்துப் போவென்பது குறிப்பாகத் தோன்றும் படிக் களித் தின்று போவென்றேன், அதுகேட்டு அவன் தான் கஞ்சிகுடி யென்ற

* இது இவர் பாடிய பாட்டென்பதற்கு ஒருப்படார் சிலர்.

தற்குப் பரிகாசமாகத் தன்னை நான் களித்தின்று போவெ ன்று சொன்னேனென்றே, அல்லது மற்றியாது காரணத்தி னாலோ உடனே மாயமாய் மறைந்துபோயவிட்டான்; இஃதெ ன்னை ஆச்சரியம், என்பதாம்.

மேலும் "ஒருவர் கத்திக்கும் பாலுக்கும் சிலேஷித்துப் பாடவேண்டும்" என்ன, "இந்தக் கேள்விக்கும் ஒரு பாடற் பாட வேண்டுமோ?" என்று வாய்மொழியாகச்சொன்ன உத் தரம்,

"காய்த்துத் தோய்த்துக் கடை."

(இ - ள்) கத்தியை உலையிற்காய்ச்சித் துவையல்செய்து கடைச்சற் பிடியென்றும், பாலை அடுப்பிற் காய்ச்சிப் பிரை குத்தித் தோய்த்து மத்தினாற் கடையென்றும், என்பதாம்.

ஒருவர், "என்னை யிடுக்கடி, பாயைச் சுருட்டடி யேகடி யம்பலத்தே என்பதைக் கட்டளைக் கலித்துறையாகப் பாட வேண்டும்" எனப்பாடிய செய்யுள்,

"நடக்கட விற்றுள்ளி கொள்வோ மதனைநற் சங்கரனார்
அடற்புலிக் குட்டிக் களித்தன ராமது கேட்டுநெஞ்சில்
நடுக்கவ்வக் குற்றது கைகா லெழாநளி னத்தியென்னை
இடுக்கடி பாயைச் சுருட்டடி யேகடி யம்பலத்தே."

என்பதாம்.

ஒருவர், "கரி என்று எடுத்து உமி என்று முடிக்கவே ண்டும்" எனப் பாடிய செய்யுள்,

* "கரிக்காய் பொரித்தாள்கன் னிக்காயைத் தீய்த்தாள்
பரிக்காயைப் பச்சடியாய்ப் பண்ணாள்—உருக்கமுள்ள
அப்பைக்காய் நெய்துவட்ட லாக்கினா ளத்தைமகள்
உப்புக்காண் சீசீ யுமி,"

என்பதாம்.

ஒருவர், கொட்டைப்பாக்கு என்றெடுத்து களிப்பாக்கு என்று முடிக்கவேண்டும்" எனப் பாடிய செய்யுள்.

---

* கரிக்காய் - அத்திக்காய், கன்னிக்காய் - வாழைக்காய், பரிக் காய் - மாங்காய், பைக்காய் - கத்தரிக்காய்.

"கொட்டைப் † பாக்குமொருகண் கூடைப்பாக் கும்மடியில்
பிட்டைப்பார்க் கும்பாகம் பெண்பாக்கும்—முட்ட நெஞ்சே
ஆரணனு நாரணனு மாதிமறை யுந்தேடும்
காரணனைக் கண்டுகளிப் பாக்கு."

என்பதாம்.

ஒருவர் "சிட்டுக்குருவிக்கும் சிவனுக்கும் சிலேடித்துப் பாடவேண்டும்" என்ன, "இதற்கும் ஒரு பாடலா?" என்று வாய்மொழியாகச் சொன்ன உத்தரம்.

"பிறப்பிறப்பிலை".

(இ - ள்.) சிட்டுக் குருவிக்குப் பிறப்பு இறப்பிலை என்றும், சிவனுக்குப் பிறப்பு இறப்பு இல்லையென்றுமாம், என்பதாம்.

இவ்வாறு அவர்கள் கொடுத்த சமிசைகளுக்கெல்லாங் காளமேகப்புலவர் யமகண்டத்தின் உயிமேல் விருந்தபடி அகிலாண்டநாயகி அநுக்கிரகத்தாற் பெரும்பாலும் பாடல்களாகவும் சிறுபான்மை வாய்மொழியாகவும் உத்தரஞ் சொன்ன நயன்றிச் சிறிதாவது தவறிப்போதென்று நினைக்கவும், அது பற்றி அவர்கள் உபத்திரவப்படுத்த எத்தனிக்கவும் இடங் கொடாமற் சாதித்துப் பின்பு உறியை விட்டிறங்கினார். அவ் வதிசயத்தைப் பிரத்தியட்சமாகக் கண்டும், திருமலைராயனாவது அதிமதுரகவியாவது அறுபத்துநாலு தண்டிகைப் புலவர்களாவது 'இவர் சாரதா விக்கிரகமாக அவதரித்த மகாத்துமா' என்று நினையாமலும், சம்மானம் பண்ணாமலும், பொறாமை மேற்கொண்டு அவரை உபேட்சித்தனர். அதனாற் புலவர் சிரோமணியாகிய காளமேகக் கவிக்கு மனமெரிந்து சகிக்கக்கூடாமல் மண்மாரி பொழிந்து திருமலைராயன் பட்டணம் அழியும்படி வசை பாடிய செய்யுள்,

"கோளரிருக்குமூர் கோள்சுரவு கற்றவூர்
காளைகளாய் நின்று கதறுமூர்—நாளையே
விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து
மண்மாரி பெய்கவிந்த வான்."

† பார்க்கும் என்பது பாக்கும் என மருவியது.

"செய்யாத செய்த திருமலேரா யன்வரையில்
அய்யா வரனே யரைநொடியில்—வெய்யதழற்
கண்மாரி யான்மதனைக் கட்டழித்தாற் போற்றீயோர்
மண்மாரி யாலழிய வாட்டு."

என்பதாம். பின்பு புலவர் பெருமானுனவர் "மதியாதார் வாசலே மிதியாதிருப்பது கோடி" என்பதை நினைந்து, இனித் திருமலேராயன் பட்டணத்தைத் திரும்பியும் பார்க்கலாகாதென்ற வைராக்கியத்தினல், முத்துவாங்கி வரும்படி போகணுங்கி சொன்ன சொல்லேயும் பொருள் செய்யாமல், அந்தக்ஷணமே அவ்விடத்தில் நின்று நீங்கி முன்போலவே ஸ்தல யாத்திரை பண்ணிக்கொண்டு போகையில், கும்பகோணத்தில் சமாராதனையில் சாப்பிடும்போது தனக்கெதிரிலிருந்துண்ணுஞ் சோழியப் பிராமணனெருவன் குடுமி அவிழ்ந்து இலேயில் விழுந்தது; அவன் அதை யெடுத்து உதறினன் அப்போதெச்சிற்சாதம் காளமேகப்புலவர் இலேயில் விழ, அது கண்டு வெகுண்டு பாடிய செய்யுள்,

"சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா புலேயா—திருக்குடந்தைக்
கோட்டானே நாயே குரங்கே யுனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்."

என்பதாம். நாகைப்பட்டணம் காத்தான் வருணகுலாதித்தன் சத்திரத்திற் காளமேகப்புலவர் போஜனஞ் செய்து போம்படி பசியுடன் வெகுநாழிகை பரியந்தங் காத்திருந்து சாப்பிட்டபோது பாடிய நிந்தையும், காத்தான் வேண்டுகோளுக்கிரங்கி அதையே துதியாகவும் பாடியது.

"கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்றன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதி லரிசிவரும்—குத்தி
உலேயிலிட வூரடங்கு மோரகப்பை யன்னம்
இலேயிலிட வெள்ளி யெழும்."

(இ - ள்) நிந்தையாக சத்திக்கின்ற கடல்சூழ்ந்த நாகைப்பட்டணத்திலிருக்கும் காத்தான் வருணகுலாதித்தன் சத்திரத்தில் உண்ண வருகிறவர்களுக்கு சூரியாஸ்தமன காலத்திற் [பொழுது போனபோது] சமைக்க அரிசி வந்து சேரும்;

அதைக்குத்திச் சுத்திசெய்து சமையல் செய்யுமுன் சனங்கள் சத்தம் அடங்கி யுறங்கும், [நடுராத்திரியாகும்]; அப்படிச் சமைத்தசோற்றில் ஓர் அகப்பை சாதம்கொண்டுவந்து உண்போர் இலையில் பரிமாறுவதற்கு முன்னம் சுக்கிரோதயமாம் [பொழுதுவிடியும் என்றபடி].

துதியாக க்ஷாமகாலத்தில் அரிசி வந்துகொண்டே இருக்கும், அதனை சுத்திசெய்து சமைக்கச்சமைக்க ஊரிலுள்ளார் உண்டு திருப்தி யடைவார்கள்; சமைத்து இலையிலிடப்படும் ஓர் அகப்பை அன்னத்தைக் கண்டமாத்திரத்திற் சுக்கிரனும் இதன் வெண்மைக்கு முன் தனது பிரகாசம் எவ்வளவென்று வெட்கி யோடிப்போவான், என்பதாம்.

ஒருநாள் ஒருத்தியின் பிள்ளை காளமேகப்புலவரைக் கண்டு பயந்து அழுதுகொண்டு தாயாருக்குச்சொல்ல அவள் "அடகொடுப்பான்" என்று வைததற்குப் பொறுது அவர் பாடிய வசையால் அப்பிள்ளை யிறந்துபோக, அவள் புருஷன் வேண்டுகோளுக் கிரங்கி மறுபடி அந்தப்பிள்ளை பிழைக்கும்படி பாடிய செய்யுள்.

"என்னைக் கொடுத்தா லிரக்கமுனக் குண்டாமோ
வன்னக் கமலமுக வல்லியே—துன்னுமறக்
காட்டானைக் கோட்டுமுலைக் காரிகையே நீ பெற்ற
கோட்டானைத் தானே கொடு."

ஒருகால் ஸ்ரீரங்கத்து வைணவர் "பெருமாள் உலகத்தையுண்டபோது சிவன் எங்கே யிருந்தார்" என்றதற்குச் சொல்லிய செய்யுள்,

"அருந்திறு னண்டமெலா மன்றமரா லீசன்
இருந்தபடி யேதென் றியம்பப்—பொருந்திப்
பருங்கவளம் யானைகொளப் பாகனதன் மீதே
இருந்தபடி யீசனிருந் தான்."

மேற்படி வைணவர் விநாயகருக்கு நாமமிட்டு "பரம் விஷ்ணுவே என்று இப்பிள்ளையார் நாமம் போட்டுக்கொண்டார்" என்றபோது பாடிய செய்யுள்,

"தந்தை பிறந்திறவாத் தன்மையினாற் றன்மாமன்
வந்து பிறந்திறக்கும் வண்மையினால்—முந்தொருநாள்
வீணிக்கு வேளை யெரித்தான் மகன்மாமன்
காணிக்கு வந்திருந்தான் காண்."

ஒருநாளில் திருக்கலியாண மஹோற்சவங் கண்டருளி வந்தவர்களுக்கு மங்களம் உண்டாகும்படி சேவைசெய்யிட்ட போது "சிவபெருமானும் விஷ்ணுபகவானுங்காக்க." என்று ஆசீர்வதித்த சிலேடை வெண்பா.

"சாரங்க பாணியருஞ் சக்கரத்தர் கஞ்சனைமுன்
ஓரங்கங் கொய்த வுகிர்வாளர்—பாரெங்கும்
ஏத்திடுமை யாக ரிலிதா யிவருமைக்
காத்திடுவ ரெப்போதுங் காண்."

(இ – ள்.) சிவபரமாக—மானேந்திய கரத்தையுடையவரும், பஞ்சாக்ஷர சொரூபியும், முன்னொருகாலத்திற் பிரமன் சிரசொன்றைக் கிள்ளியெறிந்தபோது தமது நகங்களை யே வாளாகக் கொண்டவரும், உலகமெல்லாம் போற்றும் உமாதேவியை ஆகத்தி லுடையவரும் ஆகிய சிவபெருமானும்,

விஷ்ணுபரமாய்—சாரங்கம் என்னும் வில்லைக் கையிற் பிடித்திருப்பவரும், அழகிய சக்ராயுதந் தரித்தவரும், கம்சனுடைய அங்கத்தை வெட்டிய கூரியவாளை யுடையவரும், உலகெலாம் போற்றும் நீலமேனியரும் ஆகிய விட்டுணு மூர்த்தியும் உங்களை எப்போதும், அருள் மிகுந்து காத்திடுவர், என்பதாம்.

பின்பு திருவாரூரில் வந்துசேர்ந்து சிலநாள் வசித்திருக்கையில், ஒருநாள் தியாகரைத் தரிசிக்கும்படி கோயிலுக்குப் போன வேறொரு வித்வான் சுவாமிமேல் சிலேடையாக ஒரு பாடற் பாடவேண்டுமென்று நினைத்து.

"*நாணென்று நஞ்சிருக்கு நற்சாபம் †கற்சாபம்."

என முதலடிமாத்திரம் தொடங்கி, அப்புறம் அமைக்க அவருக்குக் கருத்துத் தோன்றாமையால் அதை அந்தக்கோயில் மதிற்புறத்தில் எழுதிப்போய் மறுநாள் வந்து பார்க்குமளவில், அதன்கீழ்,

"‡பாணந்தான் மண்டின்ற பாணமே—தாணுவே
சீராரூர் மேவுஞ் சிவனே நீ யெட்டியோ
நேரார் புரமெரித்த நேர்."

* நாண் நஞ்சிருக்கு மென்றது - விஷம்பொருந்திய பாம்பென்றும், † கற்சாபம் - மேரு வில்லென்றும், ‡ மண்தின்றபாணம் - பூமியையுண்ட விஷ்ணுவென்றுமாம்.

என்று மற்ற மூன்றடியும் முடித்தெழுதி யிருக்கக்கண்டு விசாரித்து, காளமேகப் புலவரால் அது முற்றுப்பெற்றதென்று கேள்விப்பட்டு, அவர் கவிபாடுந் திறத்தைக் குறித்து அவ்வித்வான் அதிசயித்து அதிக சந்தோஷப்பட்டார்.

இப்பாடலின் பொருள்: அக்கினிஸ்தம்பமாய் விளங்கியிருப்பவனே! சிறப்புப்பொருந்திய திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே! திரிபுர தகனஞ்செய்த காலத்தில் உன் கையிலேந்திய வில்நாரியோ நைந்திருந்தது, அவ் வில்லோ வளைக்கப்படாத கல்லாயிருந்தது, அம்போ மண் தின்னப்பட்டிருந்தது, இப்படி உனக்குக் கிடைத்த யுத்தாயுதமெல்லாம் ஒன்றுக்கும் உதவாமற் கேவலம் அவலமானவைகளா யிருக்க, சத்துருக்களுடைய நகரத்தை நீ எரித்தவென்பது எப்படியோ? யோசிக்கு மிடத்திற் சிரிப்பா யிருக்கின்றது, என்பதாம்.

அதன்பின்பு வெகுநாள் கழித்துக் காளமேகப் புலவர் பிராண வியோகமாய் அவர் சரீரம் மசானத்திற் காஷ்டத்தின்மேல் வைக்கப்பட்டு எரிந்துகொண் டிருக்கையில், மேற்படி வித்வான் அச்செய்திகேட்டு அம் மயானத்திற் சென்று பிரேதாக்கினி கொழுந்துவிட் டெழுந்து ஆகாயமளாவி எரிவது கண்டு மனங்கலங்கி,

> "ஆசுகவி மாரி யகில வுலகமெலாம்
> வீசு கவிகாள மேகமே—பூசுரா
> விண்கொண்ட செந்தழலாய் வேகின்ற தேயையோ
> மண்டின்ற பாணமென்ற வாய்."

என ஒரு வெண்பாப்பாடி வியசனப்பட்டார். இந்தப் பாடலும், "நாணென்றனஞ்சிருக்கு நற்சாபங் கற்சாபம்" என்கிறதும் இரட்டைப் புலவர்களாற் பாடப்பட்டனவென்று சிலர் சொல்வார்கள். அப்படிச் சொல்வது யுக்திக்கும் அனுபவத்திற்கும் விரோதமா யிருக்கின்றது.

இன்னும் காளமேகப் புலவர்பாடிய பாடல்களும் பல வுண்டு. அவைகளுட் சில இடக்கர்களையும் கொடிய வசை முதலியவைகளையும் இருப்பது பற்றி இங்கு விடப்பட்டன, அவைகளைத் தனிப்பாடற்றிரட்டில் விரிவாய்க் காணலாம்.

காளமேகப்புலவர் சரித்திரம் முற்றிற்று.

பரமார்த்தனென்னும்

# அவிவேகபூரணகுருகதை.

## முதலாவது ஆற்றைக்கடந்தது.

அவிவேக பூரணகுருவென்று ஒரு ஆசாரியரிருந்தார்; அவர் ஏவிய ஊழியம் செய்யும்படி மட்டி, மடையன, பேதை, மிலேச்சன், மூடன் என்று பெயர்பெற்ற சீஷர்கள் ஐந்துபேர் அவர் மடத்திலிருந்தார்கள். இந்தச் சீஷரும், குருவும் ஆகிய ஆறுபேரும் ஒருநாள் மற்ற சீஷர்களை விசாரிக்கும்படி, காலையிலெழுந்து சுற்றுக் கிராமங்களுக்குக் கால்நடையாய் நடந்துபோனார்கள். போய்த் திரும்புமளவில், வழி நடுவிலிருக்கிற ஓராற்றங்கரையில் மூன்றுஞ் சாமத்துக்கு வந்துசேர்ந்து, நதியைப்பார்த்து, அதிலிறங்கப் பயந்து, இதுமிகவும பொல்லாத மோசமுடையது. ஆகையால் இது விழித்திருக்கும் வேளையில் இதைக் கடந்துபோகக் கூடாதென்று குருவானவர், "ஆறு நித்திரை செய்கிறதோ விழித்திருக்கிறதோ, சோதித்துப்பார்" என்று மிலேச்சனை ஏவினார். அவன் குருவார்த்தையைச் சிரசின்மேற்கொண்டு, அப்போது புகைச்சுருட்டுப் பற்றவைக்கும்படி தன்கையில் எடுத்த கொள்ளிக்கட்டையைக் கொண்டுபோய், தான் ஆற்றில் இறங்காமல் தூரநின்று நீட்டித் தண்ணீரிலே தோய்த்தவுடனே தண்ணீர் சுறீரென்று புகைந்ததுகண்டு, மிலேச்சன் பதறித் தவறிக் கீழேவிழுந்து பதைத்து உதைத்துக்கொண்டு, மெல்லென எழுந்து நடுங்கிப் பயந்து அலறி உளறி அழுதுகொண்டு ஓடிவந்து, "ஐயா, ஐயா, நதியைக் கடக்கிறதற்கு இது தருணமல்ல. அது விழித்திக்கொண்டிருக்கிறது. நான் தொட்டவுடனே நஞ்சுள்ள நாகம்போலச் சீறிக்கொதித்துக் கோபித்து இரைந்து புகைந்து எழுந்து பாய்ந்து என்னைக் கொல்லவந்தது. அதன் உக்கிரத்துக்கு இலக்காகாமல் தங்கள் பாதகிருபையினாலும், என்னைப் பெற்றவள் செய்த தவத்தினாலும் தப்பி நான் உயிர்பிழைத்து மீண்டுவந்தது மிகவும் அதி

சயம்" என்றான். அதைக்கேட்டு குருவானவர் திடுக்குற்று மூர்ச்சித்துப் பின்பு தெளிந்து "அப்பா தெய்வசங்கற்பத்தை ஆராயக்கூடும் ஆறு கீண்ணுறங்குகிற வரைக்கும் சற்றுநேரம் காத்திருப்போம்" என்று அவரும் சீஷரும் நதியின் பக்கத்தில் உருத்தெரியாமல் இருள்சூழ்ந்த ஒரு பூஞ்சோலையில் தங்கியிருந்தார்கள். அங்கே பொழுது போக்கும்படி அந்த ஆற்றின் விசேஷங்கள் பலவற்றையுங் குறித்துத் தனித்தனியே அவனவன் சொல்லிவருமளவில், மட்டியென்னும் சீஷன் சொன்னதாவது,

சுவாமீ! இந்த நதியின் தந்திரத்தையும், மோசத்தையும் குரூரத்தையுங் குறித்து என் பாட்டனார் பலமுறையுஞ் சொல்ல நான் நன்றாய்க் கேட்டிருக்கிறேன்; என் பாட்டனார் பெரிய வியாபாரியா யிருந்தவர்; அவர் ஒரு நாள் உப்புப்பொதி ஏற்றின இரண்டு கழுதைகளைத் தாமும் தமது கூட்டாளியுமாக ஓட்டிக்கொண்டு நடு ஆற்றில் இறங்கி வருகையில், கோடைகாலமா யிருந்ததனால், வெப்பந்தணிய அரையளவாய் ஓடுகிற குளிர்ந்த தண்ணீரிலே, தாங்களுங் குளித்துக் கழுதைகளையும் நிறுத்திக் குளிப்பாட்டினார்கள்; பிறகு அக்கரைக்குப்போய்ப் பார்த்தபொழுது, ஊசியினால் உறுதியாய்ச் சந்தில்லாமல் தைத்திருந்த கோணிப்பையின் வாய் சற்றுந் திறவாமலிருக்க, அதற்குள்ளிருந்த உப்பையெல்லாம் ஆறானது "தோலிருக்கச் சுளைவிழுங்கிபோல" உபாயமாய்த் திருடித் தின்றுவிட்டதைக் கண்டார்கள்; கண்டு, 'ஆ! ஆ! இந்த ஆறு உப்பைக் கொள்ளையடித்துத் தின்ற மதத்தினாலல்லவா எங்களை விழுங்காமல் விட்டுவிட்டது, உப்புப் போனாற் போகிறது அந்தமட்டில் நல்லசகாயஞ் செய்ததே, இதுவே பெரிய நன்மை' என்று நினைத்து அவர்கள் சந்தோஷப்பட்டார்கள்" என்பதே.

இப்படிப் பேசிக்கொண் டிருக்கையில், அங்கே ஒருவன் குதிரையேறி வருவதைக் கண்டார்கள். ஆற்றில் ஒரு ஜாணளவு உயரந் தண்ணீர் ஓடிவருவதைக் குறித்துச் சற்றும் அஞ்சாமலும் அவன் குதிரைமே லிருந்தபடி கூசாம

னும் சரசரவென்று கடுகிவந்தான். அதைக் கண்டு இவர்கள், "அடடா! எங்கள் குருவுக்கும் குதிரையிருந்தால் அவரும் அவரைச்சார்ந்த நாங்களும், அச்சமில்லாமல் ஆற்றிலிறங் கலாமே; அஃது இல்லாததனாலல்லவா இப்படித் தியங்கி யிருக்க வேண்டிவந்தது: இனி எப்படியாகிலும் ஒருகுதிரை வாங்கவேண்டும்" என்று தங்களுக்குள் நிச்சயித்துக்கொ ண்டு குருவினிடத்தில் அதைக்குறித்து விண்ணப்பஞ் செய் தார்கள். அவர் "இந்தச் செய்தியைப் பற்றிப் பின்பு பேசு வோம்" என்று சொல்லி "இப்பொழுது பொழுது சாய்ந்து அஸ்தமனகாலம் சமீபித்ததனால் மடத்திற்குப் போகவேண் டுமே, ஆதலால் ஆற்றின் நித்திரையைச் சோதியுங்கள்" என் று சிஷர்களுக்குச் சொன்னார்.

அப்படியே கொள்ளிக்கட்டையை மடையன் கொண்டு போய்த் தண்ணீருக்குள்ளே தோய்த்துச் சோதிக்கு மிடத் தில், அந்தக் கொள்ளியிற் பற்றிய நெருப்பு முன்னமே அவி ந்துபோனதனால் ஆற்றிற் சிறிதும் புகை கிளம்பாததுகண்டு, அவன் மிகவுங் களிகூர்ந்து ஓடிவந்து "இதுதான் நல்ல சம யம்! நல்ல சமயம்!! இப்படிப்பட்ட சமயம் இனிக்கிட்டாது, வாயைத் திறவாமற் சப்தியாமல் தாமதியாமற் சுறுக்காய் எழுந்து வாருங்கள் வாருங்கள், ஆற்றுக்கு நல்ல நித்திரை வேளையா யிருக்கிறது; இப்பொழுது எவ்வளவும் பயப்பட வும் பின்னிடவும்வேண்டியதில்லை" என்றான். இந்த நற்செய் தியை மடையன் சொல்லிக் கூப்பிட எல்லாருந் திடீரென்று எழுந்து கிமாவென்றுமற் பத்திரமாக ஒருவரை யொருவர் சேர்த்துக் கட்டிக்கொண்டு ஆற்றில் இறங்கி, அலைகள் முத லாய்ச் சப்தியாதபடி மெதுவாய்க் காலைத்தூக்கி ஒவ்வொரு அடியாகத் தண்ணீர்க்குள்வைத்து ஊன்றிப் பின்பு பெயர்த் திட்டு நெஞ்சுதுணுக்கென்று பதைபதைக்க இலகுவாகத் தாண்டித்தாண்டி நதியைக்கடந்துபோய்க் கரை ஏறினார்கள்.

அவர்கள் கரையேறினவுடனே முன்பு பட்ட சங்கடத் துக்குத் தக்கதாக அதிகமகிழ்ச்சிகொண்டு தலை கால் தெரி யாமல் துள்ளியாடிக்கொண் டிருக்கும்பொழுது, மூடனை

வன் "நாமெல்லோரும் அபாயமில்லாமல் வந்து சேர்ந்தோமா? எண்ணிப் பார்ப்போம்" என்று தன்னை மாத்திரங் கூட்டாமல் மற்றவர்களை எண்ணினான். எண்ணினவிடத்தில் ஐவரிருக்கக் கண்டு, "அப்பப்பா! ஐயையோ! இஃதென்ன பேரிழவு? ஒருவன் ஆற்றோடே போய் விட்டான்; ஐந்துபேர் மாத்திரந்தா னிருக்கிறோமே" என்று குருவைப்பார்த்துத் தேம்பித்தேம்பி அழுதான். அவனை "அழவேண்டாம்" என்று கையமர்த்தி, எல்லாரையும் வரிசையாய் நிறுத்தி, ஒருகால் இருகால் மூக்காலும் அவரவரைத் தனித்தனியே தமது விரலை நீட்டிச் சுட்டிச்சுட்டித் தாமே எண்ணிக் கணக்குப் பார்த்தார். அப்படி எண்ணும்பொழுதெல்லாம் அவர் தம்மை நீக்கிக் கணக்கேற்றி, "ஆமப்பா நீ சொன்னபடி மெய்யாகவே ஐந்துபேர் மாத்திரந்தான் இருக்கிறோம் என்று சொல்லிக் குருமூர்த்தியும் விசனப்பட்டார். அவ்வாறே அவனவன் தன்னைவிட்டு ஒழிந்தவர்களை மாத்திரம் எண்ணி எண்ணி ஆறாம்பேரைக் காணாமையால், ஆறுபேரில் ஒருவனைச் சந்தேகமில்லாமல் ஆறு விழுங்கிவிட்டதென்றே அவர்களுக்குள்ளே நிச்சயமாயிற்று. பிறகு குருவும் அவர்களும் அலறியழுது, கூகூவென்று கூச்சலிட்டு நதியைப்பார்த்துக் கண்ணீர் சொரும்படி, "ஓ பாவியாறே! துரோகி யாறே! பரமசண்டாள நதியே! கொடும்புலிபோலுங் கடுங்கொலையாளா! மண்ணிலும் விண்ணிலும் வாழும் சராசரங்களெல்லாம் வாழ்த்தி வணங்கும்படி, தவமனைத்துந் திரண்டு ஒருவடிவந் தாங்கி வந்து பலமொழித்தருளும் பரமார்த்த குருநாதருடைய உத்தம சிஷனை ஒரு நொடிப்பொழுதிற் குத்திரகுணத்தாற் கொலைகொண்டாயே! எள்ளளவாயினும் இரக்கமில்லாமற் கிழங்குபோல் விழுங்கி விட்டாயே! அஞ்சுதலென்பது கொஞ்சமுமின்றி வாழைப்பழம்போல் விழுங்கி விட்டாயே! உன் மனம் உருகாத இரும்போ? கல்லோ? நீ பெண்ணுடன் ஆணுடன் பிறக்கவுமில்லையோ? நன்றிகெட்ட நாசகாலா நீயும் உலகத்தில் நிலைத்திருப்பாயா? அண்டத்தளவும் அலையெறிவாயா? கடல்போல் முழங்கிக் கரைபுரள்வாயா? குளிர்

வெண்முத்தங் கொழித்திடுவாயா? இனி நீ உண்ணீர்வற்றி, ஊற்றுக்கண் அடைபட்டு, பள்ளந்தூர்ந்து, வெள்ளமாறி, உள்ளம் வெதும்பி, உருவுதோன்றுமல்; பாழாய்ப்போவாய்" என்று ஆற்றைச் சபித்துப் பின்னும் பித்துப்பிடித்தாற்போலத் தாறுமாறாக வைதுகொண்டிருந்தார்கள். அந்நேரமட்டும் ஆறுகொண்டு போனவனைத் தங்களுக்குள் இன்னுனென்று தங்கள் மவுட்டியத்தினுல் ஒருவனும் அறியவில்லை. அவன் எவனென்று விசாரிக்கவுமில்லை. அத்தறுவாயிற் புத்திமானுகிய வழிப்போக்கன் ஒருவன் அவ்விடத்தில் வந்து இவர்கள் பரிதபிக்கிறதைப் பார்த்து, "ஏனையா துக்கப்படுகிறீர்கள்? உங்களுக்கு என்ன குறை சம்பவித்தது? சொல்லுங்கள்" என்று கேட்க, அவர்கள் நடந்த சமாசாரத்தைச் சவிஸ்தாரமாகச் சொல்ல, அவன் இவர்கள் மூடத்தனத்தை அறிந்துகொண்டு, அடா அப்பா! இது மகா பிரயாசமான காரியம், என்னுலன்றி மற்றொருவராலே முடியாது; நான் மந்திரவித்தையிலே வெகு சமர்த்தன்; அதர்வண வேதம் நான் பார்த்துப் பிச்சையிட்டவர்களுக் குண்டு. எனக்கு யட்சணி, யோகினி, குட்டிச்சாத்தான் முதலானவைகளும் வசியப்பட்டிருக்கின்றன; அவைகள் நான் சொன்னபடி ஆடுகின்றன; எனக்கு நீங்கள் நல்ல வெகுமதி செய்தால் ஆற்றேடே போனவனை அரைக்கணத்தில் அழைப்பிக்கிறேன்; அப்பொழுது என் சக்தியைப் பாருங்கள்" என்றான். அதற்குக் குருவானவர் அதிக சந்தோஷப்பட்டு, "அப்பா! நாங்கள் திக்குக்கெட்டுத் தடுமாறும் வேளையிலே மகாராஜன் எங்கள் குலதெய்வம்போல எங்கிருந்து வந்தாயோ தெரியாது; ஆனுலும் நீ இப்பொழுது செய்ய ஏற்பட்ட பெரிய உதவிக்கு எளியவர்களாகிய நாங்கள் ஈடாக உனக்கு என்ன செய்யப்போகிறோம் உன் குருவுக்குப் புண்ணியமாய்ப் போகிறது எப்படியாவது மனது பெரிதுபண்ணிக் காணுமற் போனவனை அழைப்பித்துக்கொடுத்தாற் செய்யாமற் செய்த உதவியா யிருக்கும்; எங்களுக்கு வழிச்செலவுக்கு நாற்பத்தஞ்சுபணம் மூந்தானையில் முடிந்து வைத்துக்கொண்டிருக்கிறோம், அதை உன்கை

யில் வேண்டுமானால் கொடுத்து விடுகிறோம், தயவுசெய்ய வேண்டும்” என்றார்.

அவன் “அப்படியே ஆகட்டும்” என்று தன் கையிலே ந்திய வச்சிர வுலக்கைபோலப் பருத்து நீண்ட இருப்புப் பூண் கட்டப்பட்ட தடியை அவர்களுக்குக் காட்டி, “நான் சொன்ன மந்திரவித்தை இதிலேதானிருக்கிறது; நீங்கள் வரிசையாய் நின்று முகத்தைச் சுளிக்காமல் சந்தோஷமாக ஒரு பிரார்த்தனை செலுத்துதல்போலக் கும்பிட்டுக்குனிந்து இந்தத்தடியால் முதுகில் ஆளுக்கு ஒரு அடிபட்டுக்கொண்டு உடனே அவனவன் தன் தன் பேரைச்சொல்லி எண்ணிக் கொண்டு வந்தால், ஆறுபேரும் இவ்விடத்தில் இப்பொழுதே பிரத்தியட்சமாக வந்திருக்கச் செய்வேன்” என்றான். அவர்கள் “நல்லது” என்று சம்மதித்தார்கள்.

மந்திர வித்தைக்காரன் அவர்களை வரிசையாக நிறுத்தி அந்தத் தடியால் ஓங்கித் தன்கை கூசாமல் முதல் முதல் குருவின் நடுமுதுகைப்பார்த்து மிகவும் உறமாக ஓர் அடிபோட்டான்; அவர் “அப்பாடா போதும் போதும், நான்தான் பரமார்த்த குரு” என்றார். இவன் “ஒன்று” என்றான். இந்தப் படியே எல்லாரையும் ஒவ்வொரு அடியடிக்க, அவர்களில் ஒருவன் “நான் மடையன்” என்றும், ஒருவன் “நான் மட்டி” என்றும், ஒருவன் “நான்மூடன்” என்றும், ஒருவன் “நான் மிலேச்சன்” என்றும், ஒருவன் “நான் மூர்க்கன்” என்றும் வெவ்வேறாகத் தங்கள் பெயர்களைச் சொல்லவும், இவன் கணக்கேற்றவும், அப்பொழுது ஆறுபெயரில் ஒருவனும் குறையாம லிருக்கக்கண்டு, “சரிசரி” என்று ஒத்துக்கொண்டார்கள். பின்பு அவ்வாறுவரும் ஆச்சரியப்பட்டு மாயவித்தைக் காரனாகிய வழிப்போக்கனை மெய்ச்சித் துதித்துச் சொன்னபடி அவனுக்குப் பணத்தை அவிழ்த்துக் கொடுத்து விட்டுப் போனார்கள்.

## இரண்டாவது

## குதிரைமுட்டை வாங்கியது.

பரமார்த்த குருவும் ஐந்து சீஷர்களும், மடத்துக்குச் சென்ற பின்பு ஆற்றிலே தாங்கள் பட்ட அவதியைப் பலகா

னுஞ் சொல்லிச் சொல்லி விசனப்பட்டார்கள். அப்பொழுது மடத்தைப் பெருக்கிக் கொண்டிருந்த ஒருகண் குருட்டுக் கிழவி நடந்தவைகளையெல்லாம் விவரமாய்க் கேட்டுக் கை கொட்டி நகைத்து "நீங்கள் ஆற்றைத்தாண்டி வந்தவுடனே உங்களை எண்ணிக் கணக்கேற்றின வகையிலே மோசம் வந்தது; தன்னையாகிலும் வேறொருவனை யாகிலும் தப்பவிட்டெண்ணினாற் கணக்குத் தப்புந்தான்; ஆனாலும் போனது போகட்டும்; இனி வேறெந்தச் சமயத்திலாவது இப்படிப் பட்ட மோசச் சங்கடம் வாராதபடிக்கு உங்களுக்குச் சகாயமாகச் சுளுவாய் நானொரு உபாயஞ் சொல்லுகிறேன்; காட்டிலே முட்டை முட்டையாய்க் கிடக்கிற காலி மாட்டுச் சாணத்தைப் பொறுக்கி எடுத்துவந்து நன்றாய்ப் பிசைந்து கூட்டி நிலத்திலே அடைபோலத்தட்டி எல்லாரும் சக்கரம் போல அதைச் சுற்றியிருந்து நுனிமூக்கு சாணத்திற் படக் குனிந்து அழுத்தி நிமிர்ந்து பிறகு சாணியில் பதிந்திருக்கிற குழிகளை எண்ணினால் கணக்குத் தப்பாமல் இத்தனை பேரென்று வெகு சுளுவா யறியலாமே; கேளுங்கள் அறுபது எழுபது வருஷத்துக்கு முன்னே பத்துப் பெண்டுகள் கூடினவிடத்தில் தாங்கள் கணக்கேற்றின வகை இதுவே, இதறியாமல் ஏன் வீணாய்ப் பிரயாசப் பட்டீர்கள்?" என்றாள்.

அவர்கள் "இது நல்ல உபாயந்தான்; பணத்துக்குஞ் செலவில்லை; நமக்குள் ஒருவனுக்குந் தோன்றாமற் போயிற்று" என்று பின்பு குருவுடனே "எல்லாக் காரியத்துக்கும் ஒரு குதிரை வாங்கினால் உத்தமம்; ஐயா! எப்படியாகிலும் உமக்குக் குதிரை சம்பாதித்துக் கொடுக்கவேண்டுமென்று எங்களுக்கு இஷ்டமாயிருக்கிறது" என்பதாகச் சகலருஞ் சொல்ல, குரு "ஒரு குதிரை விலை எவ்வளவா யிருக்கும்?" என அவர்கள் "நூறுபொன் அல்லது ஐம்பது பொன்னிற் குறையாது" என்று சொல்லக் கேட்டபொழுது, "அம்மாத்திரத்துக்கு அவகாசமில்லை" என்று குருவானவர்சொன்னார். இந்தப்படி இவர்கள் பலநாளும் ஆலோசனை செய்துகொண்டிருக்கையில் மேயவிட்ட கறவைப்பசு ஒருநாள் பொழுது

சாயுஞ் சமயத்தில் வீட்டுக்கு வாராததைக்கண்டு ஊரிலெங்கும்போய்த் தேடினார்கள்; தேடின விடத்திலும் அகப்படாததனால் மறுநாள் மட்டி என்பவன் கிராமாந்தரங்களிலே தேடப்போனான்.

மூன்று நாள்மட்டுந்தேடி எங்குங்காணாமல் மடத்துக்கு வந்து குருவை நோக்கி, "ஐயா! பசுவைக்காணோம், ஆகிலும் அது பெரிதன்று, சொற்பவிலையில் நமக்குக் குதிரை யகப்பட்டது" என்று சந்தோஷமாய்ச் சொன்னான். "அதெப்படி ?" என்று குருவும் ஆசையோடே கேட்க, "காணாமற்போன கறவைப் பசுவைத்தேட ஊருக்கப்பா வனத்துக்கு வனம் கொல்லைக்குக்கொல்லை போய் எல்லாஞ் சோதித்து வருகையில்; தேவரீருடைய கடாக்ஷ விசேஷத்தால் ஒரு பெரிய ஏரிகரைச்சார்பிலே நாலைந்து கோளிகைக் குதிரை [பெட்டைக்கழுதை] கள் மேயவும் கிடக்கவுங் கண்டேன்; அருகே போகப்போக நான் எந்தநாளுங் காணாதவைகளும் இருகையாலுந் தழுவப்படாதவைகளுமாகிய குதிரைமுட்டைகளைக் கண்டு இவைகளென்ன குதிரைமுட்டைகளோ அல்லவோ வென்று சந்தேகப்பட்டு அங்கே வந்த ஒருவனைக்கேட்க, அவன் குதிரைமுட்டைகளே யென்றும், ஒவ்வொன்றின் விலை அதிகமில்லை நாலைந்துபொன் மாத்திரந்தான் என்றும் எனக்குச் சொன்னான்; ஐயா ! இது நல்ல சமயம்; சுலபத்திலே சாதிக்குதிரைகள் கிடைக்கின்றன, அவைகள் நாமெப்படி வளர்க்கின்றோமோ எப்படிப்பழக்குகின்றோமோ அப்படிக்கெல்லாம் எளிதாய் இணங்கத்தக்கவைகளாகும்" என்று மட்டி சொல்ல, எல்லாருக்கும் அதுவே சம்மதியாகி அவனோடே மடையன் என்பவனைக் கூட்டிக் கையில் ஐந்துபொன் கொடுத்துத் தாமதியாமல் உடனே பிரயாணப்படுத்தி அனுப்பினார்கள்.

சொன்னபடி மட்டியும் மடையனும் குதிரைமுட்டை வாங்கப் புறப்பட்டுப் போயினபிறகு, இங்கே மூடனென்பவன் தன்மனதில் ஒரு சந்தேகத்தை நினைத்துக்கொண்டு வந்து மூர்க்கனையும் மிலேச்சனையும் குருவையும் பார்த்து,

"கேட்டீர்களா! ஒரு சமாசாரம், மட்டி மடையன் இருவரும் போயிருக்கிறதனால் அவசியம் தடையில்லாமல் நல்லசாதிக் குதிரைமுட்டை வருமென்று வைத்துக்கொள்ளுவோம், வந்தால் அடைகாத்த பிறகல்லவோ முட்டை பரிபவிக்கும்? பரிபவித்த பின்பல்லவோ குதிரைக்குட்டியைக் காணக்கூடும்? ஆனாலும் ஆர் அடைகாக்கிறது? அப்பா! எனக்கு ஒன்றுந்தோன்றவில்லை, அம்முட்டை இருகையாலுந் தழுவக்கூடாத அத்தனை பெரிதாய் இருக்கிறதென்றானே; பத்துப் பதினைந்து கோழிகளை வைத்தாலும் போதாது; அவைகள் நிற்கவு மாட்டா. அப்புறம் இதற்குப் போம்வழியென்ன? சொல்லுங்கள் என்றான். என்ற சொல்லைக்கேட்டு, எல்லோரும் மிகவும் விழிப்பாட்டமாய் ஒருவரொருவனைப் பார்த்து வகை தெரியாமல் வாய்விட்டுப் பேசாமல் இருந்தார்கள். வெகுநேரஞ் சென்றபின்பு குருவானவர் "நமக்குள்ளே ஆராகிலுமொருவன் அடைகாத்தாலொழிய வேறே வழிகாணோமே" என்று எதிரே இருந்த மூவரையும் தனித்தனியே கேட்க, அவரவர் ஒவ்வொரு போக்குச்சொல்லத் தலைப்பட்டார்கள். முதலாவது, மூடன் "தினந்தினம் ஆற்றுக்குப்போய் வேண்டிய தீர்த்தமெல்லாங் கொண்டுவரவும், காட்டுக்குப்போய் வேண்டிய எரிகரும்பு சம்பாதித்துக் கொடுக்கவும் எனக்கு உத்தியோகமாயிருக்க நான் அடைகாக்கக் கூடுமோ" என்றான். இரண்டாவது, மூர்க்கன் "நான் இரவும் பகலுமாகப் பின்வாங்காமல் மடைப்பள்ளியில் பத்துப்பேருக்குச்சோறாக்கவும், நாலுவிதக் கறிகளைச் சமைக்கவும், அதிசயமானபலகாரங்கள் பண்ணவும், வெந்நீர் வைக்கவும், அடுப்பண்டையிலே கிடந்துழைத்துக்கொண்டு சாகிறேனல்லவோ, ஆதலால் அடைகாக்கிறதற்கு என்னாலாகுமா? என்றான். மூன்றாவது, மிலேச்சன் "விடியுமுன் எழுந்திருந்து ஆற்றுக்குப்போய்த் தந்ததாவனம் பண்ணி, வாய்கொப்புளித்து முகங்கழுவிச்சுத்திசெய்து கிரமத்தோடே சந்தியா அநுஷ்டானம் முடித்துக் கொண்ட பிறகு, நந்தன வனங்களிற் புகுந்து நாளரும்புக் கொய்து விந்தை விந்தையாய்த் தொடுத்து விக்கிரகங்களுக்

குச் சாத்திரத் தாபதிபங் காட்டித் தேவாராதனை புரிதற்கு வேண்டிய உதவிசெய்வது என் காரியமா யிருக்கிறதனால், நான் அடைகாக்கிறது எப்படி ?', என்றான்.

அதற்குக் குருவானவர் "இதெல்லாம் உள்ளது தானே போன மற்றிரண்டு பேர்களாலேயும் ஆகாது; அவர்களில் மடையனுக்கு இங்கே வருகிறவர்கள் போகிறவர்களை விசாரிக்கவும், அவர்கள் சொல்லும் உத்தரத்துக்கு மறுஉத்தரங் கொடுக்கவும், பலபேருங் கொண்டுவரும் வழக்குகளைக் கேட்டுத் தீர்க்கவும், எந்நேரமும் முடியாத வேலையாயிருக்கிறது, கடைசியிலே மட்டி என்பவன் எதற்காவது ஏவினசமயத்தில் கடைக்குச் சந்தைக்குப் பேட்டைக்குப் போகிறவனல்லவா ? ஆகையால் உங்களுக்குள் ஒருவருக்கும் ஒழிவில்லை. நான் மாத்திரந்தான் இங்கே சும்மா விருக்கிறேன். அதனால் நான் அந்த முட்டையை மடியிலே வைத்துக்கொண்டு கையாலே தழுவிப் போர்வையாலே மூடி மார்போடணைத்து அன்போடு பேணிக் கண்ணுங் கருத்தும் இடைவிடாது அதனிடத்தில் ஊன்றி நிற்கப் பத்திரமாய் அடைகாக்கிறதைவிட எனக்கு வேறே வேலையென்ன ? முட்டை பரிபவப்பட்டுக் குதிரையைக் கண்டடைந்தால் அதுவேபோதும்! படத்தக்க ப்ரயாசமெல்லாம் பார்க்ககூடாது" என்றார்.

இந்த ஆலோசனை யெல்லாம் மடத்திலே நடக்கும்போது இராத்திரி மூன்றாஞ் சாமத்தில் சந்திரோதயத்தோடு புறப்பட்ட மட்டியும், மடையனும் இரண்டரைக் காதவழிக்கப்பால் முன்கண்டு குறித்த அடையாளமான இடத்துக்குப்போய், சாம்பற் பூசனிக்காய் திரளாய்க் காய்த்துக்கிடந்த ஏரிகரையைக் கிட்டினார்கள். கிட்டிக் கண்டு மிகவுங் களிகூர்ந்து, அங்கிருந்த குடியானவன் அருகிற் சென்று, "அப்பா? இந்தக் குதிரை முட்டைகளில் எங்களுக்கு ஒரு முட்டை அவசியம் கிரயத்துக்குத் தரவேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டார்கள். அவன் இவர்கள் மூடத்தனத்தைக் கண்டுகொண்டு, "ஓ! ஓ! இந்த உத்தமஜாதிக் குதிரைமுட்டையை நீங்கள் விலைகொடுத்து வாங்கத் தக்கவர்

களா? இது வெகுவிலை பெற்றதாகும்" என்று சொல்ல, "போமையாபோம், இதற்கு ஐந்துபொன்தானே உள்ள விலை, நாங்களென்ன அறியோமா? எங்களுக்குத் தெரியாதது போல நீர் ஏன் சும்மா உயர்த்தி உயர்த்திப் பாடுகிறீர்? கைம்மேலே இதோ இந்த ஐந்து பொன்னையும் வாங்கிக் கொண்டு நல்ல முட்டையாய் ஒன்று தாருமையா" என்றார்கள். அதற்கந்தப் பயிரிடுங் குடியானவன், நீங்கள் நல்ல கிரகஸ்தரென்று தெரியவருகிறது, உங்கள் சற்குணத்தைப் பற்றி இந்த விலைக்குக் கொடுக்கச் சம்மதிக்கிறேன், நல்லது உங்களுக்குச் சரிப்போன ஒரு முட்டையைத் தெரிந்தெடுத்துக்கொண்டு போங்கள், இவ்வளவு மலிவாய் வாங்கின விலையைமாத்திரம் ஒருவரிடத்திலும் வெளியிடாதிருங்கள்" என்றான். "அதைப்பற்றி எங்களுக்காக வேண்டியதென்ன? அப்படியே வெளிப்படுத்தவில்லை" என்று அவர்கள் இருவரும் தங்கள் மனதுக் கேற்றபடி எல்லாவற்றிலும் பெரியதாக ஒரு காயைத் தேடித் தெரிந்தெடுத்துக்கொண்டு, மறுநாள் அதிகாலமே புலபுலவென்று பொழுது விடியுமுன் சிற்றிருட்டிலேதானே எழுந்து மட்டிதலைமேல் முட்டையை எடுத்துப் பதனமாய்வைத்து வழிகாட்டிக்கொண்டு முன்னே போகையில், மட்டி காணாது கண்டதாக அதிசயித்துச் சொல்லத்தொடங்கினான்.

"ஆ! ஆ! பெரியோர்கள் எல்லாம் தவப்பலத்தாற் கைகூடுமென்பார்கள்; அதற் கத்தாட்சி இப்பொழுது பிரத்தியட்சமாகக் கண்டோம்; நம்முடைய குருநாதர் செய்து வருகிற தபோபலம் இதுதான்; நூறுபொன் நூற்றைம்பது பொன் பெறத்தக்க ஜாதிக்குதிரையை மாயப்பொடிதூவிப் பறித்துக்கொண்டு போகிறதுபோல, நாம் எத்தனை சுலபமாக ஐந்து பொன்னுக்கு வாங்கிக்கொண்டு வருகிறோம் பார்" என்றான். அதற்கு மடையன் "இதிலே ஆலோசனையேன்? 'பண்ணிய பயிரிற் புண்ணியந்தெரியும்' என்று சொல்வதை நீ கேட்கவில்லையோ? நமது குருவானவர் உள்ளபடியே புண்ணியாத்மா வென்பது அவருக்கு இப்பொழு

தாகிடைத்த இந்தக் குதிரையி னாள்வீஷ்டிய உள்ளங்கை நெல்லிக் கனிபோலத் தெரிகிறது; இன்னுமொரு திர்ஷ்டா ந்தம்; என் தகப்பன் தான் பரமயோக்கிய னென்பதும், யோகசாலி யென்பதும், தனக்கு நான் கிருஷ்ணா விக்கிரகம் போலப் பிள்ளையாய்ப் பிறந்ததனாலல்லவோ தெளிவாகக் கண்டு பெருமகிழ்ச்சி கூர்ந்தான்" என்றுசொல்ல, மட்டி "அதைக் குறிக்குரு சந்தேகமா? வினையொன்று போடச் சுரையொன்று காய்க்குமா? அமணைக்கு விதைத்தால் ஆச்சா முளைக்குமா? நல்வினை நன்மையைத்தான் தரும், தீவினை தீமையைத்தான் தரும்" என்றான்.

இப்படி ஆநந்தத்துடன் பேசிக்கொண்டே வெகுதூரம் நடந்து பின்பு இடைக்குவழியிற் போகும்போது அவ்வழியோரத்திற் சாய்ந்திருந்த ஒரு மரத்தின்கொம்பு குறுக்கே பட்டு மட்டி தலையிலிருந்த சாம்பற் பூஷணிக்காய் தவறிக் கீழே நெருங்கிய புதரின்மேல் விழுந்து அதின் நடுவிற்கிடந்த கல்லின்மேல் விசையாய்த் தாக்கித் தகர்ந்துடைந்தது. அப்போ தந்தப் புதரிலே பதுங்கியிருந்த முயல் அதிர்ந்தெழுந்தோடியது. அதுகண்டு "இதோ முட்டைக்குள்ளிருந்த குட்டிப்பரி ஓடுகிறது" என்று அபயமிட்டுக்கொண்டு இருவரும் அதைப் பற்றிப்பிடிக்கப் பின்தொடர்ந்தார்கள். இவர்கள் காடுஞ் செடியும் மேடும் பள்ளமும் கல்லுங் கரடும் முள்ளும் முருடும் பாராமல் ஓடவே, உடுத்த வஸ்திரம் செடிகளிலே மாட்டிக் கிழிந்து கயிறு கயிறாய்த்தொங்க, முட்கள் முதுகைக் கிழிக்க, கற்கள் காலிலுறுத்த, உடம்பெல்லாங் காயம்பட, உதிரம் பீரிட்டுப்பாய, ஊற்றிருந்து பெருகுவது போல வேர்வை வடிய, நெஞ்சு பதைக்க, காதடைக்க, நாக் குவறள, தாகமதிகரிக்க, குடல் குழம்ப, இரைப்பெடுக்க, பெருமூச்சுவாங்க ஓடியும் முசல் அகப்படாமல் அவர்கள் தவித்துத் தடுக்கி விழுந்தார்கள். இதற்குள்ளாக முசல் கண்ணிற் காணக்கூடாமல் மறைந்து வெகு தூரத்தில் ஓடிப் போய்விட்டது. அவர்களும் இளைப்பைப் பாராமல் எழுந்து கல்லும் முள்ளுந் தைத்த காலால் நொண்டி நொண்டி வெயி

விலே நடந்து அங்கங்கே தேடிச் சலித்துப்போய் அன்றைக்கெல்லாம் பசியுடன் பட்டினிகிடந்து அஸ்தமித்த பின்பு மடத்துக்குச் சென்றார்கள்.

மடத்துவாசலில் நுழையும்போது "அடஅப்பா! அட அப்பா!" என்று கூவி, வாயிலேமோதியடித்துக்கொண்டு கீழே விழுந்தார்கள். உள்ளே இருந்தவர்கள் துணுக்குற்று ஓடிவந்து கைதூக்கி யெடுத்து, "என்ன அபாயம் வந்தது?" என்றுகேட்க, நடந்த வர்த்தமானமெல்லாம் இருவரும் விவரமாய்ச் சொன்னபிறகு, மட்டியென்பவன் தனக்குள்ளே அதிசயித்து மற்றவர்களுடனே, "ஐயா! நான் பிறந்த நாள் முதல் இன்றையவரையில் ஒருக்காலும் இத்தனை வேகக் குதிரையைக் கண்டதேயில்லை, இது கறுப்புப் பாய்ந்த சாம்பல் நிறமாய் உயரத்திலும் பருமனிலும் முசலை ஒத்ததாய், ஒருமுழ நீளமாய், இன்னம் முட்டைக்குள் கிடக்கும் குட்டியாயிருந்தாலும், இருசெவியும் விரித்துக்கொண்டு இரண்டிறக்கை நீளமுடைய குறுவாலைத் தூக்கி, நிலத்திலே மார்புபட நாலுகாலையும் விரித்து நீட்டி ஓடின சுறுக்கும் வேகமும் சொல்லவும் நினைக்கவுங் கூடாது" என்றான். அதைக்கேட்டு இவர்களெல்லாம் அங்கலாய்த்துக் கொண்டிருக்க குருவானவர் அவர்களை அமர்த்திக் "கூண்டோடே போச்சுது குளிருங் காய்ச்சலும்" என்றதுபோல, ஐந்துபொன் போனதன்றி, அதனோடு குதிரைக் குட்டியும் போய்விட்டதே அது காவலைதான். சிறுகுட்டியா யிருக்கும்பொழுதே இப்படிக் கடுமையாய் ஓட்டம் பிடித்தது, இனிமேல் வளர்ந்து பெரியதாகிறபோது எப்படிப் பறக்கமாட்டாது? அச்சமில்லாமல் அத்தனைத் திடச்சித்தமாய் அதன்மேல் ஆர் ஏறியிருக்கப் போகிறார்கள்? அப்பா! நான் கிழவனுக்கும், அப்படிப்பட்ட வாயுவேகக் குதிரை பணச் செலவில்லாமற் சும்மா இலவசத்தில் வந்தாலும் தீர எனக்கு வேண்டாம் என்றார்.

## மூன்றாவது

## வாடகை மாடேறிப்போனது.

பலநாள் சென்றபின்பு தூரபயணம் போகும்படி அவசரமுண்டாயிற்று, சீஷர்கள் அவ்வளவுதூரம் நம்முடைய

குருவானவர் கால் நடையாகப் போகமுடியாது, அதிக பிர யாசமாம் என்று ஒரு மோழைமாடு வாடகைக்கு அமர்த் திக்கொண்டு வந்தார்கள். அதற்கு வாடகை நாளொன்றுக்கு மூன்றுபணம் கொடுக்கத் தீர்த்துப் பல அலுவலினாலே விடி ந்ததன்மேல் ஒரு சாமங் கடந்தபின் குருவும் சீஷர்களும் பயணம் புறப்பட்டுப் போனார்கள். கடுவேனிலென்னுங் கோடைகால மாகையால், அவர்கள் நடக்க நடக்கக் கொள் ளிகொண்டு சுடுகிறதுபோலச் சுள்ளு சுள்ளென வெயிலெறி க்க, மரம் மட்டு, குளம் குட்டை இல்லாமையால் உண் ணீரும் ஒதுங்க நிழலுங்கிடையாத வெட்டவெளியாகிய பாலை நிலத்தில் அகப்பட்டுக் கொண்டார்கள். அப்படியே போகப் போக அதிகாரமும் கடூரமுமான வெயிலின் வெப்பம் பொ றுமல் பசிய இளங்கீரைத் தண்டுபோலக் கிழக் குருக்கள் துவண்டு கீழேவிழுந் தலைப்பட்டார். அதைக்கண்டு சீஷர்கள் மாட்டை நிறுத்தி அவரை இறக்கி அவர் வெப்பத்தை ஆற் றுதற்கு நிழல் எங்குமில்லாமையால் நிறுத்தப்பட்ட மாட் டின் நிழலிலே தரையில் துணியை விரித்துப்போட்டுக் கிட த்தி விசிறியில்லாததினால் வஸ்திரத்தினாலே விசிறிக்கொண் டிருந்தார்கள். அவருக்கு அதிலே கொஞ்சம் ஆறுதலான பிறகு குளிர்ந்தகாற்றுவீச, மறுபடியும் மாட்டின்மேலேற்றி மெள்ள மெள்ள நடத்திக்கொண்டுபோய்ப் பொழுதுபோகு முன்னே ஒரு சிற்றூரிற் சென்று இறங்கினார்கள். அங்கே ஒரு சிறிய வீட்டின் நடையிற்போ யிருக்கும்படி வாசலுக் குள் நுழைந்தவுடனே மாட்டுக்காரனுக்கு மூன்று பணத் தை எடுத்துக் கொடுத்தார்கள். அஃது அவன் "போதாது" என்றான். இஃதென்னே, முன் உன்னோடேபேசிச் சம்மதித்த நாட்கூலி மூன்றுபணந்தா னல்லவோ?" என்று அவர்கள் சொல்ல, அவன் மறுத்து "மாடு வாகனமா யேறிப்போவ தற்காக உதவினதற்கு இந்தக்கூலி பொருந்தினது சரிதான், பிறகு நடுவழியில் வெயிலுக்குக் குடையாக உதவினதற்குக் கூலிகொடுக்க • வேண்டாமா?" என்று கூச்சற்போட, "இஃது அநியாயம், அநியாயம்" என்று அவர்கள் கோபித்

னுக் கடூரமாய்ப் பேச, அப்புறம் மாட்டுக்காரனுக்கும் அவர்
களுக்கும் சண்டையாய்ப் பெரிய ஆரவார முண்டானதனால்
ஊரார் அறிந்து ஆண் பெண் பெரியோர் சிறியோ ரெல்லா
ரும் ஒரு கூட்டமாகக் கூடி மொய்த்து வந்தார்கள். அவர்க
ளில் நியாயக்கார னொருவன் சந்தடியை விலக்கிவந்து கூச்
சலை யடக்கி, இருதிறத்தார் வழக்கையும் விசாரித்து, "நல்
லது நான் சொல்லுகிற தீர்ப்புக் குள்ளாவீர்களோ, உங்கள்
சம்மதியென்ன? சொல்லுங்கள்" என்று கேட்டுப் பின்பு
சொல்லத் தொடங்கினான்.

"நான்தான் சிலநாளுக்குமுன் தூரதேசத்துக்குப்
பிரயாணமாய்ப் போகையில் நடுவழியிலே ஒரு ராத்திரி
ஓரூரில் ஒரு பெரிய விடுதியில் தங்கினேன்; அங்கே வந்
தவர்களுக்கெல்லாம் வசிக்கும் இடம் குடக்கூலிக்கு விடு
வதன்றிச் சாப்பிடுகிறதற்கு வேண்டிய சோறு கறி முத
லானவைகளுங் கிரயத்துக்குக் கொடுப்பார்கள்; ஆகை
யால் 'உனக்கு ஏதாவது வேண்டுமா?' என்று அவர்கள்
என்னைக் கேட்டபொழுது, எனக்குச் செலவுக்குப் பண
மில்லாமையால் 'நான் கட்டுச்சோறு கட்டிக்கொண்டு வந்
திருக்கிறேன், வேறொன்றும் தேவையில்லை' என்றேன்;
அத்தருணத்தில் அங்கு வந்த மற்றவர்களுக்கு ஒரு பெரிய
ஆட்டுத் தொடையை இருப்புச் சலாகையிற் கோத்து
நெய்தடவித் தணலின்மேல் காட்டிப் பக்குவமாய்ச் சுழற்
றிச் சுட்டார்கள்; அது சிவக்க வேக வேக அதிற்பூசிய
நெய் உருகி நெருப்பில் துளித்துப் புகையத் தலைப்பட்
டது; அப்பொழுது அதின் வாசனை அதிக ரம்மியமான
பரிமளமா யிருந்தது; நான் கொண்டுவந்த கட்டுச்சாதத்
தை அந்த மணத்தோடே சாப்பிடுகிறது நல்லதென்று
நினைத்து அதை அப்படியே சற்றுநேரஞ் சுழற்றிக்கொண்
டிருக்கும்படி உத்தரவு கேட்டேன்; அவ்வாறே சுழற்றிக்
கொண்டிருக்க, நான் சாதத்தை அவிழ்த் தெடுத்துச் சீலை
யோடே ஒரு கையால் அந்தப் புகையின்மேற் பிடித்து,
மற்றொருகையால் சீக்கிரமாய் அள்ளியள்ளி அவ்வாசனை

யிலேயே இன்பமாய் சாப்பிட்டேன்; பிறகு போகவேண்டுமென் றிருக்கையில் விடுதிக்காரன் வாசனை முகர்ந்ததற்காகக் கூலிகேட்டான், நான் 'அதற்கேதுகூலி' என்றேன்; அவன் 'கொடுக்கவேண்டும்' என்றான், நான் 'கொடுக்கிறதில்லை' என்று எழுந்து நடந்தேன். அவன் 'நீ கொடாமற் போகக்கூடாது' என்று ஆணையிட்டுத் தடுத்தான்; இந்தப்படி இருவரும் வழக்கிட்டு அந்த ஊர் அதிகாரியண்டைக்குப் பிராதுக்குப் போனோம்; அவனோ பூரணபண்டிதன்; சகல சாஸ்திர நிபுணன்; அதிக புத்திமான்; மகா சமர்த்தன்; மிகவும் நியாயசூட்சுமந் தெரிந்தவன்; அந்த மகானுபாவன் பண்ணின நியாயத்தீர்ப்புக் கேளுங்கள்; 'கறிதின்றதற்கு விலை பணமுமாகும், இதுதான் தீர்ப்பு' என்று, விடுதிக்காரனை அருகே அழைத்துப் பணம் நிறைந்த பையை எடுத்து அவன் மூக்கிலே அழுந்த உரைத்துத் தேய்த்தான்; அவனும் 'மூக்குப்போயிற்று, ஐயோ! மூக்குப்போயிற்று! இந்தமட்டில் வந்த கூலி போதும் போதும்' என்றான். பார்த்தீர்களோ இதுவே நல்ல நியாயமும் உத்தம நீதியுமாம் அல்லவா? இந்தத் தீர்ப்புத் தான் உங்களுக்கும்; எப்படியென்றால், மாடேறி வந்ததற்குக் கூலிபணமும், மாட்டின் நிழலில் இருந்ததற்குக் கூலி பணத்தின் நிழலும் போதுமானவை, ஆகிலும் மாட்டு நிழற்கூலிக்கு இப்போது அஸ்தமித்ததினால் பணநிழல் அகப்படாது, அதற்குப் பதிலாகப் பணசத்தத்தை ஒத்துக்கொள்'' என்று சொல்லி, அவனைச் சிக்கெனப் பிடித்துப் பணப்பையைதூக்கி அவன் காதிலே உரமாகத் தாக்கும்படி அதனால் மோதியடித்துப் 'பணச்சத்தங் கேட்டையா? என்றான்; அவனும் ''ஆமையா ஆமையா கேட்டேன் கேட்டேன், காது நோகிறது, போதும் கூலி, போதும், அப்பா! உனக்குப் புண்ணியமாய்ப் போகிறது, என்னை விட்டுவிடு'' என்றான். அந்தச் சமயத்தில் அவனைப் பார்த்துக் குருவும் '' மாடெனக்குப் போதும்; இந்தச் சஞ்சலம் இனி ஆகாது; நீ மாட்டை ஓட்டிக்கொண்டுபோ,

இன்னுங் கொஞ்சத் தூரந்தான்பயணம் போகவேண்டும்; காலமே மெள்ள மெள்ள நடந்து போகிறேன்" என்று அவனைப்போகச் சொல்லிப் பின்பு நியாயக்காரனைப் பார்த்து, ஐயா! நீர் எங்கள் வழக்கைப் பாரபட்ச மில்லாமல் என்னுக்காய் பிளந்தாற்போலச் சரியாய் தீர்த்தீர் என்று அவனைப் புகழ்ந்து ஆசீர்வதித்தனுப்பினர்.

நாலிகாவது

## குதிரைப்பிடிக்கத் தூண்டில்போட்டது.

மறுநாள் குருவும் சிஷரும் வெயிலுக்குப் பயந்து கோழி கூவினவுடனே எழுந்து ஆயத்தஞ்செய்து புறப்பட்டார்கள். தளர்ந்த நடையாய் நடந்து போகிறதினாலே காதவழிகூட இன்னங் கடக்காததற்குள்ளே வெயிலேறின தைக் கண்டு ஒரு குளிர்ச்சியான சோலையி லிறங்கினர்கள். அங்கே இளைப்பாறிக்கொண் டிருக்கையில் மிலேச்சன் என்பவன் மலையாதைக்குப் போய்ச் சமீபமா யிருந்த ஏரியிற் கால் கழுவப் போனன்.

கரையின்மேல் ஐயனர் கோயிலிருந்தது. அதிலே ஆரோ ஐயன ரப்பனைக்குறித்துப் பிரார்த்தனை செய்து மண்ணினுற் புதிதாய்ப் பண்ணிச் சுட்டு வர்ணந்தீர்ந்த ஒரு பெரிய குதிரையைக் கொண்டுவந்து செலுத்தி யிருந்தார்கள். அந்த மண்குதிரையின் நிழல் ஏரிநிறையத் தெளிந்திருந்ததண்ணீரிற் காணப்பட்டது. அதை ஏரியிற்காலலம்பப் போன மிலேச்சன் கண்டு தண்ணீர்க்குள்ளே குதிரை நிற்கிறதென்று நினைத்து அதிசயப்பட்டு, பின்பு கரையிலே நிற்கும் மண்குதிரைக்குச் சரியொத்த நிறமும் உயரமும் பருமனும் சாயலுமா யிருக்கக் கண்டதினால் தண்ணீரிலே தோன்றினது அதன் நிழலா யிருக்கவேண்டுமென்று சமுசயப்பட்டான்.

சமுசயப்பட்டாலும், அப்போது அடித்த காற்றினல் தண்ணீரசைய, அதிலே காணப்பட்ட குதிரை நிழலும்

அசையத் தலைப்பட்டது. அதைப்பார்த்துக் கரைமேலிருக்கும் குதிரையைப் பார்க்கும்பொழுது அஃது அசைவொன்று மில்லாதிருந்ததனால், நீருக்குள் நிற்கும் குதிரை வேறென்றும் உயிருள்ள தென்றும் நிச்சயம் பண்ணினான். பின்னும் அவன் அதை ஓட்டுகிறதற்கு எத்தனப்பட்டு,வாயினால் கூச்சல்போட்டுக் கல்லைக்கொண் டெறிந்தான். எறிந்தமாத்திரத்தில் தண்ணீர் அதிகமாயாடி அலைந்தெழும்பக் குதிரையும் தலையெடுத்துக் காலுதறி உடல்நொடித்துத் துள்ளினதாக இவன் கண்ணுக்குத் தோன்றினதனாற் பயந்து, "காலும் அலைப்பாமல் மற்றவர்களிடத்தில் ஓடிவந்து தான் கண்டதை யெல்லாஞ் சொன்னான்.

அந்தப் புதுமையைக் கேட்டு எல்லோரும் திடீரென் றெழுந்து ஓடிப்போய் ஏரிக்குட் சுற்றிப் பார்க்குமிடத்தில் மிலேச்சன் சொன்னது மெய்யென்று நம்பிக்கொண்டு, "'தண்ணீரிலிறங்கினால் தவளைகடிக்கும்' என்பவர்கள்போல, அவர்கள் ஏரிநீரி லிறங்கப் பயந்து, இறங்காமல் அதற்குள்ளிருக்கிற குதிரையைப் பிடிக்கும்படிக்கு ஆலோசனை பண்ணத் தொடங்கினார்கள். அவர்களில் ஒருவன் "கொள்ளைக் கண்டால் வாயைத் திறக்கிறது குதிரைக்குச் சுபாவமாகையால், கொள்ளை வேவித்துவைத்தால் அந்த வாசனையைக் கண்டு அதைக் குதிரை தின்னுகிறதற்கு மேலேவரும், அப்பொழுது பிடித்துக்கொள்ளலாம்" என்றான்; மற்றொருவன் 'பசுமையா யிருக்கிற ஒருபிடி அறுகம் புல்லைப் பிடுங்கிக் கொண்டு போய்த் தண்ணீர்க்குமேலே காட்டினால் குதிரை அதைத்தின்னத் தாவியெழும்பும், அந்நேரத்திற் பற்றிக் கொள்ளலாம்" என்றான்; பின்னொருவன் "பெட்டைக்குதிரை கனைக்கிறதுபோலக் கரைமேலிருந்தபடி கனைத்தாற் குதிரை காமவெறிகொண்டுமேலே கிளம்பும், அந்தச் சமயத்தில் தப்பாமல் கைவசப்படுத்திக் கொள்ளலாம்" என்றான். இன்னுமொருவன் "எருமைபோய் ஏரியில் விழுந்தால் தவளை தானே குதித்தோடு மென்பதனால், எருமைக்கடாவை ஓட்டிக்கொண்டுபோய்த் தண்ணீரில் விட்டால் அது

நாலுபக்கமும் ஓடியாடிக் குதிக்கும், அந்த உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் குதிரை கரையேறிவரும், அத்தருண த்தில் வருத்தமில்லாமற் பிடித்துக்கொள்ளலாம்" என்றான்; இப்படி நாலுபேருஞ் சொன்ன உபாயங்களெல்லாந் தனக் குச் சம்மதியாததனால் பிலேச்சன் "சரியன்று" என்று மறு த்து "நானொரு உபாயஞ் சொல்லுகிறேன் கேளுங்கள், தூண்டில் போட்டு மீன் பிடிக்கிறதுபோல இதையும் பிடித் துக்கரைமே லிழுக்கவேண்டும்" என்றான். அதற்கு அவர்க ளெல்லாம் "ஆம், ஆம், இது நல்ல உபாயந்தான்" என்று உடன்பட்டார்கள்.

தங்களுக்குள் ஒருவன் வைத்திருந்த கருக்கரிவாளைத் தூண்டில் முள்ளாகவும், வழியில் உண்ணுகிறதற்குத் தாங் கள் கொண்டுவந்த கட்டுச்சாதத்தைத் தூண்டிலின் இரை யாகவும், குருவானவர் கட்டியிருந்த தலைப்பாகையைத் தூண்டிற் கயிறாகவும், அவர் கையிலே பிடிக்கிற ரிஷப வுருச் செய்துவைத்த பித்தளைப் பூண்கட்டிய தடியைத் தூண்டிற் கோலாகவும் ஆயத்தப்படுத்தி, எப்படியாவது, நினைத்தகாரியத்தை முடிக்கவேண்டுமென்று தீர்மானித்து, அப்படியே கட்டுச்சோற்று மூட்டையைக் கருக்கரிவாளின் முனையிலேகோத்து, அடியிலே தலைப்பாகையைக்கட்டி, அதைத் தடியிலே சுற்றி முடிந்து, தண்ணீர்க்குள் குதிரை காண்கிற இடத்தில் எறிந்தார்கள். அது தொப்பென்று விழுந்து விசையோடு மிகவுந் தண்ணீர் ததும்பினதினால், அங்கே தோன்றின குதிரையும் துள்ளி யெழுந்து நெளிந் துக் குதித்துக் கிளம்பினதுபோலக் கண்டதனால் எல்லோ ரும் பயந்தோடினார்கள்.

மூண்டாசியைத் தொடுத்த தடியைப் பிடித்திருந்த ஒருவன்மாத்திரம் அதைக் கைவிட்டோடாமல் நின்றான். ஏரியின் அலையடங்கினபின்பு அதிலுள்ள பெரியமீன்கள் மெ ள்ளமெள்ள அணுகிக் கட்டுச்சாதமூட்டையைக் கடித்திழு த்த சாடையைக்கண்டு, கைச்சைகை செய்து மற்றவர்களை

அழைத்துக் "குதிரை இதோ இப்பொழுதுதான் இரையைக் கடிக்கிறது" என்றான். சற்றுநேரம் போனபிறகு தலைப்பாகையை இழுக்கச் சீலையுஞ் சாகமும் போனதனால் பாகையுடனே கட்டின கருக்கரிவாளானது அங்கே முளைத்திருந்த எரிக்கோரையில் மாட்டிக் கொண்டது. அவன் அது குதிரைவாயில் மாட்டிக்கொண்டதாக நினைத்துக் குதிரைவாயில் தூண்டில் மாட்டினபோதே குதிரை நம்முடையதாய் விட்டதென்று சந்தோஷமாய்க்கூப்பிட, அனைவருங் கூடிவந்து தலைப்பாகையைப் பிடித்திழுக்கப் பாகை பழையதாகையால் அற்றுப்போய் விட்டது. எல்லாரும் ஒருமிக்க மல்லாக்காய்க் கீழே விழுந்தார்கள்.

இப்படி யவர்கள் விழுந்த தறுவாயில் ஒரு கிரகஸ்தன் வந்து "இஃதென்னை?" என்று கேட்க, எல்லாவற்றையும் ஒழுங்குபடச் சொன்னார்கள். அதுகேட்டு அவன் இவர்கள் மவுட்டியத்தைக்கண்டு கரைமேலே இருந்த குதிரையை வஸ்திரத்தினாலே மறைக்க நீருட் குதிரை மறைந்தது. அதை அவர்களுக்குக் காட்டி அந்த மயக்கத்தை நீக்கினான்.

அப்போ தவர்கள் தங்கள் குருவை அவனுக்குக் காட்டி "ஐயா! எங்கள் குருசுவாமியார் தளர்ந்த வயதாகையால் வழிப்போவதற்குக் குதிரை ஆவசியகமாயிருக்கிறது, அது கொள்ளுதற்குப் போதுமான பணமில்லாததனாலே சுளுவிலே அதின் முட்டைவாங்கினேம்; அது சேதமாய்விட்டது; பின்பு வாடகை மாடுவைத்து அதனிமித்தம் வெகுவாகச் சஞ்சலப் பட்டோம்; இப்பொழுது இப்படியாயிற்று" என்று எல்லாம் விவரமா யவனுக்குச் சொன்னார்கள். அவன் இவர்கள் கபடமறியாத நல்ல மனிதர்களென்று கண்டு, மனதிரங்கி "என்னிடத்தில் ஒரு நொண்டிக் கிழக்குதிரை உண்டு, அது உங்கள் வழிப்பயணத்துக்கு உதவும், அதற்காக நீங்கள் பணங் காசு கொடுக்கவேண்டியதில்லை, நான் இலவசமாகத் தருகிறேன், என்னூருக்கு வாருங்கள்" என்று அழைத்துக்கொண்டு போனான்.

ஐந்தாவது

## குதிரை யேறிப்போனது.

அந்த மனிதன் திரவியஸ்தனல்லாத ஏழையானாலும் தர்மிஷ்டனானகையால் அவர்களைச் சொன்னபடியே சமீபத்திலிருந்த தன்னூருக்கு அழைத்துக்கொண்டுபோய், அன்றிராத்திரி அவர்களுக்கு நெய் பால் தயிர் முதலானவைகள் குறைவில்லாமல் போசனம் விசாரித்துச் சாப்பிட்ட பிறகு, வெற்றிலை பாக்குப் புகையிலை முதலானவைகளுஞ் சம்பிரமமாய்க் கொடுத்தான்.

மறுநாட் காலமே அவன் கொல்லை வெளியில் மேய்ந்துகொண்டிருந்த நாட்டுக் கட்டாகிய ஒரு குதிரையைப் பிடித்துக்கொண்டு வந்து குருவுக்கு முன்பாக விட்டு, அதை யவருக்குக் காணிக்கையாகக் கொடுத்தான். கொடுத்த குதிரையோ வயதுசென்ற கிழமும் ஒருகண் பொட்டையும், ஒரு காது முளியும், முன்காலில் ஒருகால் நொண்டியும், பின்கால் முட்டிக்காலுமான குரூபமாய் அந்தக் கிழக்குருவுக்குத்தக்க வாகனமா யிருந்தது, எப்படி யிருந்தாலும் குதிரை பணச் செலவில்லாமல் இலவசத்தில் அகப்பட்டதே யென்று எல்லாரும் அதிக மகிழ்ச்சி கூர்ந்தார்கள். மட்டி குதிரையைச் சுற்றிவந்து தடவியும், மடையன் அதன் நொண்டிக்காலைப் பிடித்திழுத்து முறுக்கியும், மூடன் மொட்டைவாலைப்பற்றி உருவியும், மூர்க்கன் நொள்ளைக்கண்ணைத் துடைத்தும், மிலேச்சன் பசும்புல்லைக் கொண்டுவந்து வாயிலே கொடுத்தும் இவ்விதமாக அதை மிகவும்பாராட்டிக்கொண்டிருந்தார்கள். அதற்குமேல் குதிரை முஸ்திப்புத் தேடத்தலைப்பட்டார்கள். குதிரை கொடுத்தவன் பீற்றலாயிருந்த ஒரு பழஞ்சேணத்தைக் கொடுத்தான். அதிற் குதிரைவாலின் கீழ் மாட்டப்படும் பின்தட்டு வாரில்லாததனாற் பாலைக்கொடியைத் திரித்துக் கட்டினார்கள். அப்படியே கடிவாளத்துக்கு வாரில்லாமையால், "வழியிலே கண்ட குதிரைக்கு வைக்கோற்புரிகடிவாளம்" என்ற பழமொழிப்படி பழுதையை முடிந்துவைத்

தார்கள். தங்கப்பட்டையும் இறுக்குவாரும் சம்பாதிக்கவெகு பிரயாசப்பட்டும் கிடையாததனால் மடத்துக்குச் சமீபத்திலிருந்த பேட்டைக்குப்போய் அவ்விரண்டுக்கு முன்கால் பின்கால்களிற் கட்டுகிற அசாடி பிசாடிக் கயிறுகளும் வாங்கிக் கொண்டு வந்தார்கள். இப்படி முஸ்திப்பெல்லாம் அமைத்த பின்பு, குதிரை சவாரி பண்ணுகிறதற்குச் சோதிஷ முறைப்படி வாராஞ்சலையைத் தள்ளி அமிர்தயோகமான சுபமுகூர்த்தம் ஒன்று நிருணயம் பண்ணினார்கள்; அந்நேரத்தில் 'ஊர் கூடிச் செக்குத் தள்ளுகிறதுபோல' ஊரெல்லாம் வந்து கூடிப் பேரிகைச்சலிட்டு வாழ்த்திப் பரமார்த்த குருவை முதல் முதற் குதிரைமேல் ஏற்றிவைத்தார்கள். அப்பொழுது,

> "முன்னே கடிவாள மூன்றுபேர் தொட்டிழுக்கப்
> பின்னே யிருந்திரண்டு பேர்தள்ள - வந்நேரம்
> வேதம்போம் வாயான் விகடரா மன்குதிரை
> மாதம்போங் காத வழி."

என்கிறபடியே ஐந்து சிஷர்களில் ஒருவன் முன்புறத்திலிருந்து கடிவாளத்தைப் பிடித்திழுக்க, ஒருவன் பின்புறத்திலிருந்து வாலைப்பிடித்து முறுக்கி அதட்டியோட்ட, இருவர் பக்கங்களிலிருந்து குருவின் கால்களைக் கைகொடுத்துத் தாங்க, ஒருவன் முன்னே "பரமார்த்தகுரு வருகிறார் பராக்கு எச்சரிக்கை" என்று கட்டியங் கூறிப் பராபரி பண்ணக் கிழக்குருவானவர் மகா சம்பிரமத்துடனே குதிரை சவாரி பண்ணினார்.

இந்தப் பஞ்சதாளக் குதிரையின்மேல் உல்லாசமாக உடல் பூரிக்க வெகுதூரம் போனபிறகு நடுவழியில் வழிச்சாரி ஆயக்கார னொருவன் கண்டு ஓடிவந்து மறித்தான். இவர்கள் ஏன் மறிக்கிறாய்?" என்றார்கள். அவன் "குதிரைக்கு ஐந்துபணம் ஆயங் கொடுக்கவேண்டும், அது கொடாமற் போகக்கூடாது" என்றான்.

அதற் கிவர்கள் "இஃதென்ன புதுமை? குருவேறின குதிரைக்கும் ஆயமுண்டா? வியாபார சம்பந்தமா? உத்தியோக சம்பந்தமா? அவையெல்லாமல்லவே, எங்கள் குரு

முதிர்ந்த வயதாய்ச் சரீரந் தளர்ந்திருக்கிறதனாற் கால்நடையாய் நடக்கமாட்டாததைக் கண்டு ஒரு புண்ணியவான் தர்மத்துக்குக் கொடுத்த குதிரையாக்குமிது, இதற்கு ரூபம் வாங்கினதை நாங்கள் எங்குங் கண்டதில்லை, ஆனாலும் அநியாயம்" என்று அவர்கள் கூச்சல்போட, அவன் "அநியாயமோ நியாயமோ எனக்கொன்றுந் தெரியாது, பணத்தைக்கொடுத்து விட்டுத் தான் போகவேண்டும்" என்று மத்தியான மட்டும் மறியலில் வைத்து "விடமாட்டேன்" என்றதனால், தப்பிப்போக வேறே வழிகாணாமல் "நாம் கொடாக்கண்டராயிருந்தாலும், இவன் விடாக்கண்டனா யிருக்கிறானே, ஐயோ! வீண்தண்ட மிது" என்று ஐந்துபணங் கொடுத்தார்கள். அவன் விட்டுவிட்டான்.

குரு, "குதிரையில்லாவிட்டால் இந்தச் சஞ்சலம் வரமாட்டாதல்லவா" என்று மிகவும் தம்மைத்தாமே வெறுத்துக் கொண்டு, பின்பு இளைப்பாறும்படி சீஷர்களுடனே கிட்டவிருந்த சாவடிக்குப்போனார். அங்கே எதிர்ப்பட்ட ஒரு கிரகஸ்தனோடே குருவானவர் தாமே வலுவில் முறையிட்டுக் கொள்ளத் தொடங்கினார். "அப்பா! நான் பிறந்த நாள் தொட்டு இதுவரையில் ஒருகாலும் குதிரையேறினதில்லை; 'ஒரு நாளுஞ் சிரியாதவன் திருநாளிற் சிரித்தான்' என்பதுபோல, இன்றைக்குத்தான் முதல் முதற் குதிரையேறி வந்தேன், வந்தவிடத்தில் இந்த அநியாயம் நடந்தது, இப்படி நீதியில்லாமல் வழிபறிக்கிற கள்ளனைப்போலே நிஷ்டூரமாய்ச் சம்பாதிக்கிற பணம் ஆருக்காவது நன்மையாயிருக்குமா? என் வயிறெரிய வாங்கின பணம் அவனுக்குச்செறிக்குமா? நெருப்பாய் மூளாதா?" என்றார். அது கேட்டு அவன், "ஐயா பெரியவரே! இது காலத்தின் சுபாவம்; இந்நாளிற் பணமே குரு; பணமே தெய்வம்; 'பணமென்றால் பிணமும் வாயைத் திறக்கும்' என்பது முன்பு கேட்டோம்; இப்போது 'பணம் பந்தியிலே குலங் குப்பையிலே' என்பதற்குச் சரியாய்ப்பணத்தைவிட வேறே உறவும் சிநேகமுமில்லையாக்கும்' என்றான். இதற்கேற்கக் குருவும், "அப்பா! இந்தக்காலத்திலே கஷ்ட

த்தில் அரைக்காசு கிடக்கக்கண்டாலும் அந்த நாக்காலே நக்கியெடுக்கக் கூசார்கள்" என்று சொன்னார். அவனும், "சந்தேகமா? அப்படி நக்கியெடுக்கும்பொழுது அந்த அவர்களுக்கு நாறாதையா? இதற்கு ஓர் அத்தாட்சி கேளும்" என்று சொல்லுகிறான்.

ஓர் இராஜா பணத்தாசையினாலே தன் சீமையில் ஒருபொழுதும் இல்லாத வரியெல்லாம் ஏற்படுத்தினைத்து அதன்பின்பு மூத்திரவரியும் வைத்தான். இந்த அவன் மகனுக்குச் சம்மதியாமல் "குடிகளிடத்தில் இந்த நாறுகிற வரிகேட்டு வாங்குகிறது லச்சைக்கேடாயிருக்கிறது" என்று தகப்பனுக்குச் சொல்ல, இராஜா மகனுக்கு அப்பொழுது மறுமொழி சொல்லாமலிருந்து பலநாள் போகவைத்து வரிப்பணம் பொக்கசம் நிறையச் சேர்ந்தபின், மகனை இராஜா அழைப்பித்து, அந்தப்பணத்தை முகரச்சொல்லி "நாறுகிறதோ?" என்று கேட்டான்; மகன் வேறொன்றும் நினையாமல் "நாறவில்லை, மணக்கிறது" என்றான்; இராஜா "இது மூத்திரவரிப் பணமாகும்" என்றான்; கேட்டபேரோ பணம் வந்தாற்போதும்" அந்த எப்படி வந்தாலும் பாரமன்று ஐயா" என்றான்.

இவ்வாறு பலபேச்சுக்கள் பேசிக்கொண்டிருந்து பொழுது போக்கினபின் சாயங்காலத்தில் மீளவும் குதிரையேறிப்போய் ஒரு பட்டிக்காட்டிலே தங்கினார்கள். அன்றிராத்திரி குதிரையைக் கட்டாமல் மேயவிட்டுக் காலமே பயணத்துக்குத் தேடினவிடத்தில் அகப்படாமையால், மூர்க்கன் வீட்டுக்குவீடு நுழைந்து பார்க்கையில், அதை ஒருவன் தன்வளைவில் கட்டிவைத்திருந்தான். இவன் அதைவிடச் சொன்னவிடத்தில் அவன் "இராத்திரி முப்பது நாழிகையும் என் பயிரில் மேய்ந்தது; எனக்கு வெகு சேதமாயிற்று; அதனாற் பரிச்சேதம் விடமாட்டேன்" என்றான். அதைக்குறித்து அடுத்த ஊர் நாட்டாணைபோய் நயபயமாய்ச் சொல்லி அமர்த்தியும் அவன் "பயிர்ச்சேதங் கொடுத்தால்தான் நான் குதிரையைவிடச் சம்மதிப்பேன்" என்றான். நாலுபேருங்

கூடிக் குதிரைமேய்ந்த கொல்லையைப் பார்த்து மதித்தது மேய்ந்ததெல்லாம் மதித்துப் பத்துப்பணத்துச் சேதம் எட்டுப்பணத்துச் சேதம் உண்டென்று சொல்லக் கடைசியிலே தீர்ந்தபடிக்கு நாலுபணத்தை வாங்கிக்கொண்டு குதிரையை விட்டுவிட்டான்.

குருவோவென்றால் வெருவாய்ச் சலித்துக் கொண்டு "நமக்கு இந்தக்குதிரை என்னத்துக்கு? இது வந்ததனாலே பணச்செலவுகளெத்தனை? சஞ்சலங்களெத்தனை? சங்கைக்கேடுகளெத்தனை? இவைகளெல்லாம் நமது மகிமைக்குத் தகாவப்பா" என்று கால் நடையாய்ப் போகத் துணிந்தார். அதற்குச் சிஷர்கள்; "ஆ! ஆ! அது சரியன்று" என்றும், "கால் நடை நடக்க உம்மாலாகாது" என்றும், சொல்லிக் கொண்டிருக்க, அவ்விடத்தில் ஒரு வள்ளுவப் பண்டாரம் இவையெல்லாங் கேட்டுக் கிட்டவந்து, கவலைப்படவேண்டாமையா" என்றான். மேலுமவன் "இந்தக் கஷ்ட நஷ்டங்களெல்லாம் குதிரையைப் பிடித்த தோஷத்தினால் வந்ததாக்கும், செலவோடே செலவாக எனக்கைந்து பணங்கொடுத்தால், நான் கிரகசாந்தி செய்து அந்தத் தோஷத்தை நிவர்த்தியாக்கி விடுகிறேன்" என்றான். இவர்கள் செலவுக்காக அஞ்சிப்பார்ப்பது காரியமன்றென்று நினைத்துப் பணங்கொடுக்கச் சம்மதித்துத் தோஷத்தைக் கழிக்கச் சொன்னார்கள்.

அப்பொழுது அந்த வள்ளுவன் 'இவர்கள் நமது வலையிற் சிக்கினார்கள், ஆகையால் இவர்களைச் சந்தேகமில்லாமல் நாம் ஏய்க்கலாம்' என்று நிச்சயித்துப் பணத்தை முன்னே கொடுக்கச் சொல்லிக் கழற்றிக் கொண்டு, அவர்கள் கண்ணுக்கு முன்பாகப் பலவித தாட்டோட்டமான சடங்குகளைச்செய்து, நாலுவிதப் பச்சிலைகளையும் பறித்து அபிமந்திரித்து எறிகிறதுபோலக் குதிரைமேல் எறிந்து, உரக்கப் பேசாமல் மெதுவாய் மிணமிணவென்ற சப்தமாக "ஆ ஊ ஐயும் கிலியும் சௌவும் ஓம் சுவாகா" என்று அநேகமுறை உச்சரித்து, மும்முறை குதிரையைப் பிரதக்ஷிணம் வந்து, வால்முதல் தலைபரியந்தம் அதைத் தடவி, அதன் ஒற்றைக்

காதைக் கையினாற் பிடித்துக் கொண்டு "இந்தக் காதிலே யாக்கும் தோஷமெல்லாம் தங்கியிருக்கிறது, இப்படிப்பட்ட தோஷத்தைக் கழிக்கத்தான் அந்நாளில் அந்தக் காதை யறுத்தார்கள், இப்பொழுது இந்தக் காதையும் அறுத்துப் போட்டால் இந்நாளில் வந்த தோஷமும் அற்றுப்போம்" என்றான். உடனே வெட்டரிவாளை நீட்டிக்கொண்டு அந்த ஒரு காதையுந் திடமென்று அறுத்துத் தோஷந் தொடராத படி தூரக் கொண்டுபோய் ஆழக் குழிதோண்டிப் புதைத்து மேலே மண்போட்டுக் குழிசெப்பனிட்டு வந்தார்கள். இதி லே அன்றெல்லாம் சென்றதனால் மறுநாட்காலமே வெகு தொந்தரவுபட்டு மடத்துக்குச் சென்றார்கள்.

ஆறாவது

பிராமணன் ஜோசியம் சொன்னது.

மடத்துக்குப் போனபிறகு குருவானவர் வெகுவாய் விசனப்பட்டார். 'நமக்குக் கிடைத்த குதிரை குருடமான குதிரையா யிருந்தும் பணச்செலவில்லாமல் வந்ததென்ப தனால் கொஞ்சஞ் சந்தோஷமாயிற்று என்றாலும், இக்குதி ரையினால் வழியில் அனுபவித்த சங்கடங்களை யெல்லாம் நினைக்க நினைக்கத் தீராத மனக்கிலேச முண்டாகின்றது. தெய்வச்செயல் இப்படியும் இருக்கிறதல்லவா?" என்று சிந் தித்துக் குருவானவர் சிஷர்களைத் தமது சந்நிதானத்திற் கூட்டிவைத்துக்கொண்டு ஞானவிஷயத்தைப்பற்றிப் பேசத் தொடங்கினார்:—

"தம்பிமாரே! வரவர இந்தப் பிரபஞ்ச வாழ்வைப் பார்க்குமிடத்தில் முயற்கொம்பு போலவும், கானற் ஜலம் போலவும் சூனியமா யிருக்கின்றதென்று காண்கிறேன்; தீமைகலவாத நன்மையும், கசப்புக் கலவாத இனிப்பும், துக்கங் கலவாத சந்தோஷமும் இங்கே கிடைக்கமாட்டா. ஐயோ! விலைகொடுத்து வாங்காமல் உபகாரமாய்க் குதிரை வந்ததென்று நாம் மிகவும் மகிழ்ந்தோ மல்லவோ, அன்று தானே இந்தப் பாக்கியத்துடனே தொடர்ந்துவந்த கிலே

சங்களையுங் கண்டூர்களே; ஒரு துளித்தேனை நக்குகிறதற்காக அத்தனை கசப்பும் விழுங்கவேண்டுமோ? நெல்லுக்கும் உமியிருக்கிறது, எவ்வகைக் கனிகளுக்கும் தோலும் கொட்டையுமுண்டு. இவையெல்லாம் இயல்புதான், ஆகிலும் நான் ஒருதினத்தில் அனுபவித்த பொல்லாப்போ மிகவும் அதிகம் குதிரை ஏறுகிறதற்கு எனக்கு அதிர்ஷ்ட மில்லையாக்கும், விதிக்கெதிராய் நடக்க என்னால் கூடுமா? கூடாதே! ஆதலால், இனி அந்தக் குதிரையை அதுவந்த இடத்திற்குத்திருப்பி அனுப்பிவிடுகிறதே காரியம்" என்றார். அதற்குச் சீஷர்களெல்லாரும் "ஆகா அப்படிச் சொல்ல வேண்டாமையா; அஃதென்னை நீர்கொண்ட குதிரையோ? இரண்டில் ஒன்றுமன்றே; தெய்வாதீனமாய்த் தானுகவந்த குதிரையன்றோ? நாம் இதைத் திரும்ப அனுப்பினால் திருவுளத்துக்கு மறுவுளயாக நடக்கிறதாகுமே; ஆதலால் இஃது அதிக தோஷமாய் முடியாதா? குதிரையைப் பிடித்திருந்த தோஷத்தை அந்த வள்ளுவன் கழித்தபிறகு அஞ்சத்தக்கது என்ன விருக்கின்றது? ஒன்றுமில்லையே" என்றார்கள்.

இவைகளுடனே இன்னமும் பல நியாயங்களை அவர்கள் விரிவாகச்சொல்ல, குருவும் மனந்தேறி "நீங்கள் சொன்னபடி யாகட்டும்" என்றார். "ஆனாலும் அன்றுவந்த மோசம்போல இனி வராதபடிக்கு, இராமாறு குதிரையை மேயவிடவொண்ணாது, வீட்டிலேதானே கட்டுவிக்கவேண்டும், அதற்கான இடமுங் காணோமே" என்றார். அப்போது மூர்க்கனென்பவன் "இதற்காக ஆலோசனை என்ன? இந்தக்ஷணத்திலே நான்போய் ஆலங்கொம்புகளை வெட்டிக்கொண்டுவந்து நமமுடைய மடத்துக்கு ஒருமூலையிலே நேர்த்தியான லாயமொன்று பண்ணிப் பதித்ததுபோலக் கட்டுகிறேன்" என்றான்.

என்றவுடன் புறப்பட்டுப்போய் வழியோரத்தி லிருந்த பிரமாண்டமான கொடியாலின்மேலேறிநின்று செழிப்பாயுயர்ந்து வளர்ந்து ஒழுங்காயிருந்த கிளையைக் கோடரியி

ஞல் வெட்டத் தொடங்கினுன். ஆனுலும் இவன் நுனிப்பக்கத்திருந்து அடிப்பக்கத்தில் வெட்டுகிறதைக் கண்டு வழிப்போக்கனுகவந்த ஒரு பிராமணன், "தம்பி, அப்படி நிற்கவேண்டாம், கிளையோடே நீயும் விழப்போகிறுய்" என்றுன். அதற்கவன் "இந்தத் துர்ச்சகுனமான வார்த்தையை எனக்கு நீ சொல்லவந்தாயோ" என்று அரையிற் செருகி வைத்திருந்த வெட்டரிவாளால் பிராமணன்மேல் எறிந்தான். அவனும் இந்த முரடன் "பட்டறியட்டு மென்று விலகித் தப்பிப் போய்விட்டான். மூர்க்கனே வென்றுல், முன்னின்றபடி பின்னும் நின்று வெட்டினதினுல் அரைவாசிக் கதிகமாக மரம் அறுப்புண்டு மளமள வென்று முறிந்துவிழத் தானும் அதனேடே விழுந்தான். "அம்மம்மா! இங்குவந்த அந்தப் பிராமணன் பிரபலமான சாஸ்திரி, மகாபுரோகிதன், அவன் சொன்னபடிக்கு ஆயிற்று" என்று, பிராமணனைப் பின்பற்றிக் கூவிக்கொண் டோடினுன். சடுதியில் இவன் கிட்ட ஓடிவருகிறதைப் பிராமணன் கண்டு, 'இந்தப் புத்தியில்லாத மிருகம் என்னசெய்யுமோ வென்று அஞ்சி நின்றுன். மூர்க்கன் வந்து ஒரு கும்பிடுபோட்டு, ஐயா நீர் பிரபலசாஸ்திரி, இன்னமொரு ஆரூடம் எனக்குச் சொல்லவேண்டும், நான் பரமார்த்தகுருவின் சீஷனுக்கும், அவர்மேல் எனக்கு பட்சமுண்டா யிருக்கின்றது, அவருக்குத் தளர்ந்தவயதா யிருக்கிறபடியினலே அவர் கொஞ்சநாளுக்குட் சாவாரென்று நான் பயந்திருக்கிறேன், இப்பொழுது நீரெனக்காறுதலாக அவருக்கு முடிவுகாலம் எப்பொழுதுவரும்? அதற்குமுன் காணப்படும் அடையாள மென்ன? சற்றே தயவுசெய்து சொல்லவேண்டும்" என்றுன். பிராமணன் தப்புவித்துக் கொள்ளப் பலவிதப் போக்குச் சொல்லியும் அவன் கேளாததனுலும் விடாததனுலும் கடைசியிலே "ஆசனசீதம் சீவன் நாசம்" என்றுன். இவன் "அஃதென்னே ஐயா! அதற்கு அர்த்தஞ் சொல்லவேண்டும்" என்று அலட்டிக்கேட்க, "உன் குருக்களுக்கு இருப்பிடம் என்றைக்குக் குளிர்ந்து காண்கின்றதோ அஃது அன்றைக்குச் சாவு கிட்டினதென்பதற்கு

அடையாளம் ஏன்று அறிந்துகொள்" என்பதாகப் பிராமணன் சொன்னான்.

மூர்க்கனும் நமஸ்காரஞ் செய்துவிட்டுப்போய் வெட்டின இளையை மடத்துக் கிழுத்துக்கொண்டு வந்து நடந்த செய்தியெல்லாம் விவரமாய்ச் சொன்னான். குருக்கள் இதைக்கேட்டு மிகவும் விசாரப்பட்டு "ஜோசியஞ் சொன்ன பிராமணன் மகாசாஸ்திரி யல்லவென்று சொல்லக்கூடாது. உனக்கவன் சொன்னபடியெல்லாம் உடனே பிரத்தியட்சமாயிற்றே, ஆதலால் எனக்கு அவன் சொல்லியனுப்பின ஜோசியமும் தப்பமாட்டாது, 'ஆசனசீதஞ் சீவன் நாசம்' என்பது நல்ல யுக்தியும் அனுபவமுமான வசனந்தான், இனி எச்சரிக்கையா யிருக்கவேண்டு மாக்கும், ஒருகாலும் கால் சுத்திசெய்யக் கூடாது, அதன்மேல் ஆண்டவன் விட்டபடியாகிறது என்றார்.

ஏழாவது

## குரு குதிரைமேலிருந்து விழுந்தது.

சொன்ன எச்சரிக்கையோடு நெடுநாளிருந்து பின்பு சிமா மூலங்களுக்குப் போய்வந்தால் சிஷர்கள்கையிற் பணம் பறியுமேயொழிய மடத்திலிருந்தால் அது வர அறியாதென்று அதைப்பற்றி ஊருக்கூர் சுற்றித் திரியக் குருவும் சிஷர்களும் புறப்பட்டார்கள்.

எங்கும்போய்ச் சுற்றிக்கொண்டு ஒருநாள் அவர்கள் மடத்துக்குத் திரும்பி வருகையில், குருக்கள் அசைந் தசைந்து குதிரைமேல் ஊசலாடிக்கொண்டு வரும்பொழுது கீழேதொங்கின ஒரு மரக்கொம்புபட, அவர் தலைப்பாகை பின் பக்கத்தில் விழுந்தது. அதைச் சிஷர்கள் எடுத்தார்களென் றெண்ணிக்கொண்டு ஒன்றும் பேசாமல் சும்மாவெகு தூரஞ் சென்றபின்பு அவர் "தலைப்பாகை எங்கே தாருங்கள்" என்று கேட்டார்; "அஃது அங்கே விழுந்தவிடத்திலே கிடக்கும்" என்று அவர்கள் சொல்ல, அவர் கோபித்துக்கொண்டு "விழுந்த வற்றையெல்லாம் எடுக்கத் தேவை

யில்லையோ? நான் சொல்லவேண்டுமோ?" என்றார். அந்த மட்டில் மடையன் அப்படியே அங்கே ஓடிப்போய் விழுந்த பாகையை எடுத்துக்கொண்டு வருகையில், அதற்குமுன் பெய்தமழையில் செழிப்பாய் வளர்ந்திருந்த புல்லை மேய்ந்து அன்றிராத்திரி குதிரை கழிந்த இளகலாகிய லத்தியை அந்தத் தலைப்பாகையில் வந்திக்கொண்டுவந்து பக்தியுடனே குருவின் கையில் ஒப்பித்தான்.

அப்பொழுது அவர் "சீசீ" என்று வெகுவாய்க் கோபித்தார். அதற்கு எல்லாருங்கூடி, "இல்லேதையா! விழுகிறவை சகலத்தையும் எடுக்கச்சொல்லி முன் கற்பித்தீரல்லவோ, குருவார்த்தை கடக்கலாகாதென்று கற்பித்தபடி செய்தால் இப்பொழுது நீர் ஆயாசப்படுவானேன்?" என்றார்கள். குருவோ "அப்படியன்றே, எடுக்கத் தகுவதும் தகாதது முண்டு; எதையும் பகுத்தறிந்து நடக்கவேண்டும்" என்றார். "நாங்கள் அம்மாத்திரத்திற்குத் தக்க மனுஷரல்ல. எடுக்கவேண்டியதை மாத்திரம் இன்னதென்பதாக வேறே எழுதித் தரவேண்டும்" என்று சொன்னார்கள். அவரும் எழுதிக்கொடுத்தார்.

அப்புறம் போகையில் ஈரமாயிருந்த வழுக்குநிலத்தில் தளர்ந்த நடையாய்ப்போகிற நொண்டிக்காற் குதிரை சறுக்கி விழுந்தது. அத்தருணத்தில் அதன்மேலிருந்த குருவும் தவறி, அருகேயிருந்த குழியில் தலை கீழும் கால் மேலுமாக விழுந்து, ஒரு கால் அங்கபடியில் மாட்டிக்கொண்டு எழுந்திருக்கக் கூடாமல் கோவென்றலறி, "அன்பான சிஷர்களே, என்னை யெடுக்கவாருங்கள்" என்று கூப்பிட்டார்; சிஷரும் ஓடிச் சமீபலென்று வந்து குருமுன்னே அவர் எழுதித்தந்த ஜாபிதாவை யெடுத்துஒருவனை வாசிக்கச்சொன்னார்கள்; அதிலே "விழுந்த தலைப்பாகை எடுக்கவும், விழுந்தவேஷ்டி உத்தரீய மெடுக்கவும், விழுந்த சட்டை குட்டை உள்ளாடைகளை யெடுக்கவும் வேண்டும்" என்று அவன் வாசித்தபடியே ஒவ்வொன்றாக எல்லாவற்றையும் குருவினிடத்திலிருந்து கழ

ற்றி எடுத்து அப்புறம் வைக்க, குருக்கள்மாத்திரம் நிருவாணமாய் அங்கே கிடந்தார்.

அவரிப்படிக் குழியிற்கிடந்து தம்மையும் எடுக்கச் சொல்லி எவ்வளவு கெஞ்சினாலும், எவ்வளவு சகித்துக் கொண்டாலும், எவ்வளவு கடுஞ்சொற் சொன்னாலும், சீஷர்கள் "இதுவும் முன்னமேதானே ஜாபிதாவில் எழுதாததனாலே நாங்கள் எடுக்கமாட்டோம்" என்று ஒரே பிடிவாதமாகச் சாதித்தார்கள். மேலும் அவர்கள் "ஐயா குரு சிரோமணியே! எடுக்கவில்லையென்று வீணாக எங்கள்மேல் கோபிக்கிறீரே; நல்லது உம்மையும் எடுக்கும்படி எழுதின தெங்கே காட்டும் பார்ப்போம்? எழுதினபடி செய்வோமேயொழிய, எழுதாததை 'அப்படித் தடிக்கு மிஞ்சின மிடா' வைப்போல வரம்புகடந்து ஒருபோதுஞ் செய்யச் சம்மதியோம்" என்றார்கள். அவரும் இவர்கள் சாதனையைக் கண்டு தப்பும்வழி வேறொன்றும் காணாமையால் ஓலையும் எழுத்தாணியும் வாங்கிக் கிடந்தவிடத்திலேதானே "நான் விழுந்தாலும் எடுக்கக்கடவீர்கள்" என்று கைகால் நடுக்கிக்கொண்டே எழுதிக் கொடுத்தார்.

எழுதினதைக்கண்டு சீஷர்களும் ஒருமிக்கப்போய் அவரை எடுத்தார்கள். அவர் விழுந்த குழியிற் சேறிருந்தபடியால் குருவுடம்பெல்லாஞ் சேறுபட்டு அழுக்கான தென்று சமீபத்திலிருந்த தண்ணீரிலே குளிப்பாட்டினார்கள். பின்பு பழயபடியே உடுப்பெல்லா முடுத்திக் குதிரைமேலேற்றி மடத்துக்குக் கொண்டுபோய் விட்டார்கள்.

## எட்டாவது

## குருவைச் சேமித்தது.

குருவானவர் குழியில் விழுந்து எழுந்திருக்கக் கூடாமற் கிடந்த சமயத்திற் சீஷர்கள் மிகவும் அஞ்சிப் பதறினதனால் அந்தப் பிராமணன் முன்பு சொல்லியிருந்த ஜோசியத்தின்மேல் ஒருவருக்கும் ஞாபகமில்லாமற் போயிற்று. திரும்பக் குதிரையேறின பிறகு இருப்பிடங் குளிர்ந்ததென்று

கண்டு குருநாதரே விசாரப்பட்டார். ஆகிலும் மடத்துக்குப் போய்ச் சேருமளவும் ஒன்றுஞ் சொல்லாதே போனார்.

தளர்ந்த வயதாகிய காலத்தில் விழுந்த அதிர்ச்சியினால் அன்றிரவில் நித்திரை கொள்ளாமல் மருண்டு புரண்டு கொண்டிருந்து, அவர் பிராமணன் சொன்ன ஜோசியம் அடிக்கடி நினைவிலே தோன்ற வெகுவாய்ச் சஞ்சலப்பட்டார். குதிரையிலிருந்து குழியில் விழுந்ததனால் உடம்பதிர்ந்து இப்படி ஆராட்டப் படுகிறதென்று நினையாமல் ஆசனங்குளிர்ந்து சாங்காலங் கிட்டினதினாலாக்கும் இவை யெல்லாம் சம்பவித்ததென்று நிச்சயம் பண்ணிக்கொண்டார். இந்த நினைவோடு அன்றிராத்திரி முழுதும் தமக்குள்ளே பயந்து பதறி ஒரு நிமிஷமும் கண்மூடாமற் பெருமூச்சுவிட்டு மனந் தத்தளித்ததனால் விடியற்காலத்தில் சீஷர்களை அழைப்பித்தார்.

அவர்களும் வந்துபார்க்க அவருடைய கண் குழி விழுந்து பஞ்சடைந்ததாகவும், முகமெல்லாம் வற்றிச் சுருங்கி வெளுத்துச் சாயல் மாறினதாகவும், வாயுதடு உலர்ந்து நாவில் ஈரமில்லாமல் வார்த்தை குழறவும், பிரமை கொண்டது போல உற்று உற்றுப்பார்க்கவும், மேல்சுவாசம் வாங்கவுங் கண்டு மிகவும் பயந்தார்கள்.

அப்பொழுது அவர் பெருமூச்செறிந்து, "தம்பிமாரே! எனக்கு மரணாவஸ்தையானது நெருங்கிவிட்டது, இனி ஆத்மா பிரிந்து கடத்தினின்று மெழும்பிப் போகும்போலக் காண்கிறது, நீங்கள் எனக்குச் சமாதிக் குழியொன்று வகுத்து அதில் என்னைவைத்துச் சவத்தைச் சேமிக்கிறதுபோல சேமஞ் செய்துவிடுங்கள்" என்றார். "அஃதென்னையா!" என்று அவர்கள் சரீரம் பதறிக்கேட்க, "ஓ ஓ! இஃதென்னை ஆசனசீதம் சீவன் நாசமென்றதை மறந்து போனீர்களோ என்று சொல்லிப் பின்னுங் குருவானவர் சொல்வார் "நேற்று நான் விழுந்த குழியிலே நீருஞ் சேறும் மிகுதியா யிருந்த படியினாலே எனக்கு இருப்பிடத்தில் ஈரந்தாங்கியது; ஆனா

லும் அப்பொழுது உண்டான ஆபத்திலே அஃது எனக்குத் தோன்றாமற் போயிற்று; பிறகு அதிகமாய் இருப்பிடங்குளிர்ந்ததுங் கண்டேன், பிராமணன் சொன்ன சாஸ்திரத்தையும் நினைத்தேன், இராத்திரி முழுதும் உடம்புவலியும் ஆராட்டமுங்கண்டு சற்றும் நித்திரையில்லாததினால் சாவுக் கிட்டினதென்று நன்றாய் அறிந்துகொண்டேன், இனி வேறு யோசனை வேண்டுவதில்லை, சீக்கிரமாய்ச் சமாதிச்சேமத்துக்கு ஆயத்தம் பண்ணுங்கள்" என்றார்.

அதைக்கேட்டு அவர்களும் அந்தத் துர்க்குறியை நினைத்து அஞ்சினார்கள், அச்சத்தை வெளியிடாது உள்ளே யடக்கிக்கொண்டு நானாவிதமாகக் குருவின் மனந்தேறும்படி ஆறுதலும் தேறுதலுமான பல பல வார்த்தைகளைச் சொன்னார்கள். என்ன சொல்லியும் அவருக்கு மனக்கிலேசம் மாறவில்லையென்று தெரிந்துகொண்டு, முன்பு அந்த ஊர்ச்சகுன சாஸ்திர காரனாயிருந்த அசேதனமூர்த்தி மகன் அசங்கதன் என்பவனால் தங்கள் குருவைப்பிடித்த சனியை நீக்கி அவர் மனதைத் தேறச் செய்யவேண்டுமென்று அவனைப்போ யழைத்தார்கள்.

அசங்கதன் நடந்த வரலாறுகளையெல்லாம் விவரமாய்க் கேட்ட பிறகு வந்து குருவைப்பார்த்து, "உமக்குச் சம்பவித்த குறையென்ன? வந்தநோவென்ன? மனவிசாரமென்ன? மாறாத கிலேசமென்ன? என் குருவே! என்னையனே! என்பிதாவே! சொல்லும்" என்று கண்ணீர் சோர வாயிதழ்துடிக்க, முகம் வெயர்க்கக் கேட்டான். அதற்கெல்லாம் "ஆசனசீதம் சீவன் நாசம்" என்கிற வசனமேயொழிய வேறொரு மறு உத்தரமும் குருவானவர் சொன்னவரல்லர். அப்போதவன் "நல்லது, ஆசனசீதம் உமக்குச்சீவன் நாசமென்று பிராமணன் சொன்னானே, நானும் அவன் ஆசனை வ்ஷணம் அவனுக்கு நாசமாகப் பண்ணுகிறேன், அந்தப்பிராமணனை எனக்குக் காட்டுங்கள்; அவனுக்கு உலக்கைப்பூசை பண்ணி அவனால் வந்த தோஷமெல்லாம் அடியோடத் தீர்த்

துப்போடுவேன்; அவனைக்காட்டும், சீக்கிரமாய்க் காட்டும்" என்றான்.

"உலக்கைப்பூனை யென்று ஒரு பூனையுண்டோ? ஒரு நாளும் அப்படிப்பட்ட பூனையைக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லையே, அஃதாவதெப்படிப்பட்டது? சொல்" என்று குருவானவர் கேட்டார். அதற்கு அசங்கதன் மறுமொழி சொல்லத்தொடங்கினான். "இவ்வகைப்பூனை உட்சமயம் புறச்சமயங்களிலும் காணக்கிடையாத பூனையாக்கும், ஞாபகமாய்க் கேட்கக்கடவீர்."

"ஒரூரில் ஒரு செட்டியிருந்தான்; அவன் அதிக சிவபக்திக்காரன்; அநுதினமும் பண்டாரங்களுக்கு அசனம் இடவேண்டுமென்னும் ஆசையினால், அவர்களை எங்கே கண்டாலும் 'சுவாமி சுவாமி! அடியேனுடைய சிறு குடிசையிற் பிட்சைபண்ணும்படி எழுந்தருளவேண்டும்' என்று அழைப்பான். அவனுக்கு மக்களில்லை; கொண்ட மனைவியோ வென்றால், நித்தமும் பண்டாரங்களுக்குச் சோறாக்குவதிலும் கறியாக்குவதிலும் பரிமாறுவதிலும் வெகு வருத்தப்படுவதனால் புருஷன் செய்கிறது அவளுக்குப் பொருந்தவில்லை. ஆயினும் இதைக்குறித்துப் புருஷனுக்கு வதாவது வெறுப்பாகச்சொன்னால் அவன் மனம் பொறுக்கமாட்டாதென்று அவளறிந்து ஓர் உபாயமெடுத்தாள்."

"ஒருநாள் அந்தச்செட்டி தான் கடையிலிருந்து அவ்விடத்தில் வரக்கண்ட பண்டாரத்தை அழைத்து 'என் வீட்டில் இன்றைக்குப் பிட்சை பண்ணவேண்டுமையா' என்றான். அவனும் சம்மதித்ததனால் 'இப்போது கடையிலே வேலையாயிருக்கிறேன், நீர் என் வீட்டுக்குப்போய் என் மனைவியைக் கண்டு இந்தச் செய்திசொல்லி நான் வருமளவும் எங்கும் போகாமல் அங்கே தானே தங்கியிரும்' என்றான். பண்டாரம் சந்தோஷமாய்ப் போய்ச் செட்டி சொன்னதை அவன் மனையாட்டியோடே சொன்னான். அதற்கவள் இவனொருகாலும் இங்கே வாராதவனுக்குமென்று கண்டுகொண்டு, 'ஐயா!

மெத்த நல்லது, நீரிங்கே தானே யிரும்' என்று வீட்டுத் திண்ணைமேலே பாயைக்கொண்டு வந்து விரித்தாள்."

"பிறகு உடனே வீட்டு முற்றத்தை நன்றாய்ப் பெருக்கி எங்குஞ் சாணத்தைக்கரைத்துத் தெளித்துத் திற்றி மெழுகித் தன் கால் கைகளையுஞ் சுத்திசெய்து ஆசாரத்தோடே நெல்லுக் குத்துகிற உலக்கையைக் கையிலெடுத்துக்கொண்டாள். பிறகு அதில் நிறையச் சாம்பலைத் தடவித் தானும் அதைப் பூசிக்கொண்டு, நடுவாசலில் உலக்கையைக் கிடத்தி அதற்கு எதிரே மூன்று முறை சாஷ்டாங்கமாக விழுந்து வாயைத்திறந்து உரக்கப்பேசாமல் மந்திரஞ் செபிப்பது போல மிணமிண வென்றாள். என்றதன் பின்பு உலக்கையைச் சாம்பல் போகும்படி துடைத்து முன்னே அதைத் இருந்த இடத்திலே தானே வைத்தாள். இவையெல்லாம் உற்றுப்பார்த்துக்கொண்டிருந்த பண்டாரம் வெகுவாக ஆச்சரியப்பட்டு 'இந்நாள் மட்டும் நான் எங்குங்காணாத அதிசயத்தை இப்போது இங்கே கண்டேன், இது என்ன பூசை யம்மா?' என்று கேட்டான். அதற்கவள் 'ஐயா! இது எங்கள் குலதெய்வத்தின் விசேஷ பூசையாகும், இனிமேல் நீரும் நன்றா யறியப்போகிறீர்,' என்று, வீட்டுக்குள் நுழைந்து போகையில் 'இது உன் தலைமேலே தான் வந்து விடியும்' என்று அமர்ந்த சத்தமாய்த் தன்னிலே தான் சொல்லிக்கொள்வது போலச் சொல்லிக்கொண்டு போனாள். அப்படி ரகசியத்தைச் சொன்னாலும் அது அவனுக்குக் கேள்வியாக வேண்டுமென்று அவள் விரும்பினபடியே அந்தச்சொல் பண்டாரத்தின் காதிலே விழுந்தது. அப்போது அவன் 'நான் தெய்வாதீனமாய்த் தப்பிப்பிழைத்தேன்' என்று எண்ணிக்கொண்டு, செட்டிச்சி வீட்டில் நுழைந்தவுடனே சத்தப்படாமல் எழுந்து லகுவாய்த் தப்பிப்போய்விட்டான்."

"அவன் போன அடியிலே செட்டி வந்து 'நானனுப்பின பண்டாரம் எங்கே யடி?' என்று கேட்க, அவளும் 'நல்ல பண்டாரத்தை யல்லவோ இந்த விசை யனுப்பினீர், அவர் வந்தவுடனே உலக்கையைத் தரச்சொல்லிக் கேட்டார், அத

ற்கு நானிப்போது செட்டியார் வருவார், அவருக்குதவில்லா மற் கொடுக்கப்படாது, சற்றே இருமென்று இதோ பாயை யும் விரித்துப்போட்டிடன் பாரும், அவர் கேட்கமாட்டாமல் உடனே கோபித்துக்கொண்டு போய்விட்டார்' என்றாள், அது கேட்டுச் செட்டி 'அடி அப்படியன்றே, பண்டாரங்கள் என்ன கேட்டாலுங் கொடுக்கிறது எனக்குச் சம்மதிதானே நீ யறியாயா ?' என்று சொல்லி, உலக்கையைக் கையிலெடு த்துக்கொண்டு பண்டாரத்தைத் தேடி அதைக் கொடுக்கும் படி தெருவிலேபோனான்."

"பண்டாரமும் நடக்குங் காரியத்தை முற்ற முடியக் காணும்பொருட்டு ஒரு தெரு முடுக்கில் ஒதுங்கியிருந்து, உலக்கையோடே செட்டி வருவதைக் கண்டபோது, இலை தேது இவன் என் தலைமேலே பூசைமுடிக்க வருகிறானே ?' என்று பயந்து ஓட்டமெடுத்தான், செட்டியும் அது கண்டு 'பண்டாரமே ! பண்டாரமே !' என்று அவனைப் பின்தொடர் ந்தோட, அவன் அதிக விசையாய் ஓட ஓடக் கடைசியில் செட்டிக்கு முதிர்ந்த வயதும் பெருத்த தொந்தியுமானதி னால், இரைப்பெடுத்து ஓடமாட்டாமற் கால்சலித்து அம்மட் டிலே நின்று வீட்டுக்குத் திரும்பி விட்டான். இதுதான் உல க்கைப்பூசை. இந்தப் பூசையை நான் உமக்குச் சோசியஞ் சொன்ன அந்தப் பிராமணன் முதுகின்மேலே முடித்தால் ஆசனோஷ்ணமாகி அவனுக்கே யல்லாமல் உமக்கு நாசம் வா ராதையா" என்றான்.

அதற்குப் பரமார்த்த குருவும் சிரித்து "உன்னை அசங் கதனென்று சொல்வது நியாயமே, நீ எப்போதும் சரச பரி காசங்களை செய்துவருகிறாய்" என்றார். அவனும் குருக்கள் சிரித்ததாகக்கண்டு பரிகாசத்தைவிட்டு மீண்டுஞ் சொல்லத் தொடங்கினான். "ஐயா ! பிராமணன் சொன்ன வசனம் உண்மை தான்; அதற்கு அர்த்தத்தை நன்றா யாராய்ந்தறிய வேண்டியது; இருப்பிடத்திற் குளிர்மை கண்டால் சாவுக் கடையாளமென்றது சரியே; ஆயினும், வேறுகாரணமில்லா மல் ஆசனங் குளிர்ந்துபோனால் தான் அவன் சொன்னபடி

யாகும்; நீர் தண்ணீரிலேயும் சேற்றிலேயும் விழுந்தீர், அத னாலே இருப்பிடங் குளிர்ந்தது மெத்த அதிசயமோ? அப் போது குளிராதே யிருந்தால் தான் அதிசயமாகும்; இப் போது இந்த வீண்கவலையை விட்டுவிடும்; இனிமேற் சேற் றில் உட்காராமலும், தண்ணீரிலே விழாமலும், மற்றொரு காரணமில்லாமலும் ஆசனஞ் சீதங்கண்டால் அத்தருணத்தில் ஜீவன்நாசம் கிட்டினதென்று நினைக்கலாம்; இஃது ஒழிய மற் றதெல்லாம் அபத்தமையா" என்றான். அசங்கதன் சொன் னது குருவின் மனதிலே தைத்து நியாயம்போலத் தோன்றி ற்று; ஆதலாற் சற்றுத் தேறியெழுந்து சாப்பிடவும் அங் கங்கே திரியவும் தலைப்பட்டார்.

இப்படிச் சிலநாட் போனபிறகு ஒருநாள் இராத்திரி நடுச்சாமத்திற்கு மேற் கனமழை ஒரு பாட்டமாய்ப் பெய் தது. அப்பொழுது குருவின் படுக்கைமேலே அவரிருப்பிட த்திற்கு நேரே அடுத்தாற்போல மோட்டு நீரொழுக்கு விழு ந்தது. அஃது அதிக தூக்கத்தினால் அவருக்குத் தெரியாதே போயிற்று. மழையும் மழையொழுக்கும் ஒழிந்த பின்பு குரு க்கள் மெய்ம்மறந்த நித்திரையோடே புரண்டு தமது இருப் பிடத்தில் ஈரம் உறைக்கத் தூங்கிக்கிடந்தார். அப்படித் தாக் கின குளிர்மையினாலே திடீரென விழித்து மிகவும் இருப்பி டங் குளிர்ந்ததாகக் கண்டு குளிர்மை பிறக்க இப்போது வே றொரு காரணமு மில்லையே ஆகையால் தமக்கினிச் சாங்கா லம் வந்ததென்று நிச்சயித்தார்.

வந்த குளிர்ச்சிக்குச் சீஷர்களும் வேறுமுகாந்தரங் காணாமையால் படுக்கையின் குளிர்மை முதலாய்க் குருவினி ருப்பிடச் சீதத்தினால் வந்ததென்று நினைத்து முன் பிராம ணன் சொன்ன ஜோசியத்தின் கருத்து நிறைவேறுங் காலம் இதுதானென்று நிச்சயித்தார்கள். குருவைக் காண வந்த சஜாதிமனுஷரும் இவர்களோடொத்த புத்திமான்களாகை யால் அவர்களும் அவ்வாறே பேச, சொன்னதை யெல்லாம் குரு ஒத்துக்கொண்டு தம்மைக் குறித்துக்கேட்டவர்கள் யாவருக்கும் "ஆசனசீதம் ஜீவன் நாசம்" என்பதையொழிய வேறே மறுமொழி உச்சரியாதிருந்தார்.

நாளுக்கு நாள் இவர் இவ்விதமாக அடைந்த மிகுந்த மனக்கவலையும் சரீர பலவீனமும் தாங்கமாட்டாமல் ஒரு நாள் அதிக சோகமுடியக்கிடந்தார். அப்பொழுது எல்லாரும் கா கூவென்று கூச்சலிட்டுத் தலைமேற்கைவைத்துக்கொண்டு "ஐயையோ! எங்கள் ஆண்டவர் மாண்டாரே மடிந்துபோனாரே" என்று அலறி அழுது சவச்சேமச் சடங்காரம்பஞ்செய்து குளிப்பாட்டத் தொடங்கினார்கள்.

மடத்திலிருந்த பெரிய தொட்டி நிறையத் தண்ணீர் விட்டுக் குருவை உள்ளபடி பிரேதமென்றெண்ணி எடுத்து அதிலே போட்டு அமுக்கிச் சுற்றிப் பத்துப்பேர் கூடியிருந்து ஒருமிக்கத் தேய்த்துக் கழுவினார்கள். கழுவும்போது அவருக்கு மயக்கம் தெளிந்தாலும் தண்ணீருக்குள்ளே மூச்சுவிடமாட்டாமலும் கையையும் காலையும் அவர்கள் பிடித்து அமுக்குகிறதினால் அந்த மடையர்கள் கையிலகப்பட்டுப் பரமார்த்த குரு அநியாயமாய்ச் செத்தார்.

அதன் பின்பு அனைவரும் பெருங்கூட்டங்கூடி அவரை அலங்கரித்துப் பூந்தேர்கட்டி அதற்குள் அவரை முடித்து வைத்து, சம்பிரமமாகச் சங்கு தாரை முழங்க எடுத்துக் கொண்டு முன்னும் பின்னும் இருபக்கமும் சீஷர்கள் நெருங்கிவந்து "ஆசனசீதம் சிவன் நாசம்" என்று ஆடிக்கொண்டுபோய்ச் சமாதிக்கு குழிதோண்டி அதில் வைத்து அடக்கஞ்செய்தார்கள்.

பரமார்த்தனென்னும் அவிவேக பூரணகுருகதை முற்றிற்று.

---

## ஏகம்பவாணன் சரித்திரம்.

நிலவளம் நீர்வளம்பொருந்திய தென்தேசத்திலே வசித்திருந்த வேளாள குலதிலகனாகிய வாணனென்பவன் ஆயிரம் ஏர்வைத்து விவசாயம் செய்து வெகுதிரவியம் சம்பாதித்துச் சீமானாய் வாழ்ந்திருக்கும் நாளில் அந்தப் பிரபுவுக்கு ஒரு ஆண்பிள்ளை பிறந்தது. அக்குழந்தைக்குச் சாதகம்

கணிக்க வேண்டுமென்று ஜோதிஷர் களுக்குச் சொல்ல, அவர்கள் தற்கால கிரகநிலையைப் பார்க்குமளவில், ஐந்திற் சூரியனிருக்க, அவனைச் சனிபார்ப்பதனுற் பிதிருகண்டமும், நாலிற் சந்திரனிருக்க அவனைச் சுக்கிரன் பார்ப்பதனுல் மாதிருகண்டமுமா யிருப்பதை அறிந்து, அவர்கள் இதை எப்படி முதலியாருக்கு அறிவிப்பதென்று மயங்கி வியசனமுற்றிருந்து பிறகு சாஸ்திரத்துக்குத் தோஷஞ் சம்பவியாம லிருக்கும் பொருட்டு அதனை ஒருவாறு குறிப்பித்தார்கள். விவேக கோசரமுடைய அந்த முதலியார் உள்ளதை நீங்கள் மறைப்பானேன். எதுவும் ஊழின்படி நடக்கிறது, மாதிரு பிதிருகளின் நிரியாண காலத்தைமாத்திரம் திட்டமாய் அறிவிக்க வேண்டுமென்ன, அவர்கள் உள்ளவண்ணம் தெரிவித்த சமயத்தில், அவர் உலகத்திற் சாதகம் விதித்தபடியே நடக்கின்றதா? இதை நம்புவது எப்படி?" என்ன, சோதிஷர்கள் "வாத துர்ப்பலமே யொழியச் சமய துர்ப்பலமில்லை என்பார்களே, அதுபோலச் சோதிஷர்கள் செவ்வையாய் ஆராயாமையால் ஒருவேளை தவறிப்போனுலும் போகலாம், சாஸ்திரம் தவறமாட்டாது; இதற்குத் திருஷ்டாந்தம் ஒன்றுண்டு" என்ன, அவர் "அஃதெப்படி" என, சோதிஷர்கள் சொல்லத் தொடங்கினுர்கள்:—

"பூர்வம் ஒரு வேந்தனுடைய சமஸ்தானத்திற் சோதிஷத்திற் பிரபல பாண்டித்திய முடையவர் ஒருவரிருந்தார். அவருக்குச் சமானமாகப் பிரகஸ்பதியைத் தான் சொல்ல வேண்டும். சிருஷ்டிகாலந் தொடங்கிக் கிழக்கு மேற்கா உதயமாகி அஸ்தமிக்குஞ் சந்திர சூரியர் தெற்குவடக்காக மாறி உதித் தொடங்கினுலும் அவரெழுதுஞ் சாதகம் ஒரு பொழுதும் மாறுபடுகிறதே யில்லை. அப்படிப் பட்டவருக்கு அருமையாக ஒரு பெண்குழந்தை பிறந்தது; அதற்கு அவர் சாதகம் கணித்துப் பலாபலத்தைப் பார்க்கும்பொழுது, விவாகமாகி ருதுசாந்தி செய்யப்பட்ட தக்ஷணமே அந்தப்பெண் வைதவியத்தை அடையுமென் றிருந்ததனுல், அச்சோதிஷர் 'நமது குழந்தைக்கு இந்தக் கதியானுல் நாமெப்படிச் சகித்

இருப்பது!" என்று துக்கசாகரத்தில் மூழ்கி, பிறகு அப்பெண்ணை நாளொரு மேனியும் பொழுதொரு வடிவுமாக வளர்க்க வளர்ந்து கொண்டிருக்கையில், மேற்படி செய்தியெங்கும் பிரசித்தமானதால் அவள் பிரவிடையாகு மளவும் அவளை விவாகஞ்செய்வா ரில்லாதது கண்டு சோதிஷர் "ஐயோ! பிராமண சாதியிற் பெண்களுக்குச் சிறுவயதிலே தானே விவாகம் நடக்கிறது சம்பிரதாயமாமாயிருக்க, நம்முடைய பெண் பருவமுடையவளாகியும் பாணிக்கிரகண மாகாமலிருப்பது நாம் ஜன்மாந்தரத்திற் செய்த தவக்குறையோ? செலவெல்லாம் நாமே இறுத்துக் கன்னிகாதானமாகக் கொடுத்தாலுங் கொள்ளமாட்டோ மென்கிறார்களே; பெண்ணைப்பெற்றுக் கலியாணஞ் செய்விக்காமற் சும்மா வைத்திருப்பது தர்மமன்றே; என்ன செய்யலாம்?" என்று அல்லும் பகலும் இதுவே சிந்தையா யிருந்தார். ஒருதினம் உத்தரதேசத்துப் பிரமசாரிப் பிராமணன் ஒருவன் இவர் கிருகத்திற்குப் 'பவதி பிக்ஷாந் தேகி' என்று உபாதனத்திற்கு வர, இவர் அவனைப்பார்த்து "இங்கே ஒரு பெண்ணிருக்கிறாள், அவளைப் பதினாயிரம் வராகன் ஸ்திதிவைத்து, பதினாயிரம் வராகன் விலைமதிக்கத்தக்க பூஷணமிட்டு ஒரு பெரிய வீடுங் கட்டிக்கொடுத்து உனக்கு விவாகஞ் செய்விக்கிறேன், சம்மதிதானா?" என்ன, அவனுக்குஞ் செய்தி தெரியாததனாலும் எளியவனாதலாலும் "பணமென்றாற் பிணமும் வாயைத் திறக்கும்" என்ற பழமொழிப்படி அவன் பணத்திற்கு ஆசைப்பட்டு உடன்பட்டான். தம்பெண்ணை இவனுக்குத் தத்தம்பண்ணிச் சம்பிரமயாக ஏழுநாள் வரைக்குங் கலியாணச்சடங்கு செய்வித்து எட்டாநாள் ருதுசாந்தி நடப்பித்தார்.

அந்தப் பிராமணன் சயனகிருகத்தில் அன்றிரவு அப்பெண்ணுடன் கூடிச் சுகம் அனுபவித்தான். பின்பு உடனே அவனுக்கு வயிற்றைக் கலக்கினமையால் அவன் "மலோபாதைக்குப் போய்வருகிறேன்" என்று தன் மனைவியுடன் சொல்ல, அவள் மேற்படி சங்கதி தெரிந்தவளாகையால்

தூரத்திற் போகவிட லாகாதென்று தங்கள் கொல்லையிற்
றானே சீக்கிரமாய்ப் போய்வரச் சொன்னாள். அவன் அப்ப
டியே போய் மலவிசர்ச்சனம் பண்ணி அக் கொல்லைக்கு அப்
புறத்திலுள்ள மடுவிற் போய்ச் சௌசம் முடித்துக்கொண்டு
திரும்புகையில், அதிலிருந்த ஒரு முதலை அவன் காலைக் கவ்
விப்பிடித்தது, அப்பொழுது பிராமணன் "நீ என்னை விட்டு
விடு" என்ன, முதலை "எனக்குப் பசியா யிருக்கிறதனால்
விடமாட்டேன்" என்ன, அவன் "அப்படியானால் நல்லது
தான், ஆயினும் புதிதாக மணஞ் செய்யப்பட்ட என் பெண்
சாதிக்கு ஒரு சொற் சொல்ல வேண்டியிருக்கிறது, அதைக்
குறித்து நான் போய் ஐந்து நிமிஷத்திற்குள்ளே வருகி
றேன்" என்றான். அது "நீ போனால் மறுபடி வரமாட்டாய்"
என, வேதியன் "நீ என்ன பிரமாணிக்கம் பண்ணச்சொன்
னாலும் பண்ணுகிறேன்" என, முதலையானது "நீ சொன்ன
சொல் தவறினால் 'தீபம் அணைந்துபோன சமயத்திற் போஜ
னஞ் செய்தவன் போகின்ற கதியிற் போகிறேன்,' என்று
பிரமாணிக்கம் பண்ணினால் விடுவேன்" என, இவன் அங்
கப்படிச் சத்தியஞ் செய்து கொடுத்துத் தன் மனைவி யிடத்
திற்குவந்து அச்செய்தியைச் சொல்ல, அவள் பலவிதத்தி
லுந் தடுத்துங்கேட்காமல் திரும்பிவந்து முதலையை அழை
த்து "என்னை விழுங்கி உன் பசியைத் தீர்த்துக்கொள்" என
றான். அது அதிக ஆசையுடனே அவனை விழுங்குந் தருணத்
தில் அவன் பெண்சாதி விளக்கை வற்றி ஒரு பாத்திரத்தில்
மறைத்துப் புருஷன் பின்னே தெரியாமற் கொண்டுபோய்,
முதலைக்கு வெளிச்சந் தெரியும்படி காட்டி அந்த க்ஷணமே
பொட்டென்று அணைத்து விட்டாள். அதுகண்டு முதலை
"ஹரிகரி! இஃதென்னை பாவம்" என்று பிராமணன் காலை
விட்டுவிட்டது. இவன் "நீ என்னை யேன் விழுங்காமல்விட்டு
விட்டாய்" என, அது "சத்தியமென்பது உனக்குமாத்திரந்
தானா? எனக்கில்லையா? நானினி யுன்னைத்தீண்டமாட்டேன்,
சுகமாய்ப்போ" என்றது. மறுபடி இவனென்ன சொல்லியுங்
கேளாமல் அதுவும் இவனும் வாதாடிக்கொண் டிருக்கை
யில், பிராமணத்தி கணவன் கையைப்பிடித்து இழுத்துக்
கொண்டு வீட்டுக்குப் போய்விட்டாள்.

பொழுது விடிவதற்கு முன்னே பந்துக்கள் "சோதிஷர் மாப்பிள்ளை இறந்துபோயிருப்பான், பிரேதத்தை மசானத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்க வேண்டும்" என்று அவருடைய வீட்டுத் தெருவாசலில் வந்து கூட்டங் கூடியிருந்தார்கள். சோதிஷரோ பெண்ணையும் பிள்ளையையும் ராத்திரி சயன கிருகத்தில் விடுத்த மாத்திரத்திற் சுடுகாட்டிற் காஷ்டம் அடுக்குவித்து, பிணத்திற்கு உடுக்கக் கோடிவஸ்திரம் பாடை முதலானவைகளும் சாக்கிரதை செய்வித்திருந்து, காலையில் எழுந்து கதவைத்தட்டி மகளைக் கூவி "அம்மா! உன்நாயகனுடைய க்ஷேமம் என்ன?" என, அவள் கதவைத் திறந்தாள். மருமகன் சிறிதும் வாட்டமின்றி உயிரோடிருக்கப் பார்த்து நடந்த செய்தியை விசாரித்தறிந்து ஆச்சரியப்பட்டு, "ஓ! ஓ! சாஸ்திரம் பொய்த்துப் போய்விட்டது. ஆகையால் இனிச் சோதிஷசாஸ்திரத்தை நம்புதற்கோ இடமில்லை, என் மாப்பிள்ளைக்கு அடுக்கிய காஷ்டத்தில் இப்புஸ்தகங்களை யெல்லாம் வைத்து நெருப்பிட்டுக் கொளுத்திப் போடுகிறேன்" என்று நிச்சயித்து, அவைகளை யெல்லாம் மேற்படி பாடைமேல் சுடலைக்கு எடுப்பித்துக் கொண்டுபோய்க் கட்டைமேல் வைத்துக் கொளுத்தப்போகிற சமயத்திற் பிரகஸ்பதி பகவான் ஒரு பிராமணப் பிள்ளையாக வடிவுகொண்டு எதிரேவந்து, "கட்டைமேல் வைக்கப்பட்டிருக்கிறதே இஃதென்னை?" என்று கேட்க, சாஸ்திரி "சோதிஷ புஸ்தகம்" என்று சொல்ல, "இதைக் கொளுத்தவேண்டிய நிமித்தம் என்ன?" என, "என் புத்திரியின் சாதகம் பொய்த்துப் போனதால் இதிற் பயனில்லையென்று கொளுத்த யத்தனித்தேன்" என்ன, பிரகஸ்பதி "சாஸ்திரம் எக்காலத்தும் பொய்யாது, அஃது இருக்கட்டும், இப்பொழுது பிரகஸ்பதி எங்கிருக்கிறார்? சொல்லும் பார்ப்போம்" என, சோதிஷர் தற்கால லக்னத்தைச் சோதித்துப் பார்க்குமிடத்தில் மற்றெங்கு மில்லை என்றும், தம்முடனே பேசுகிறவரே அப்பிரகஸ்பதி என்றும் அறிந்து ஐயமுற்றிருக்க, பிராமண வடிவாகி வந்த பிரகஸ்பதி

பின்னும் அவனைநோக்கி "உமது புத்திரி உற்பத்தியான காலத்திற் பிரகஸ்பதி இருந்த சமயமென்ன?" என, அவர் கண்ணை மூடிக்கொண்டிருந்தார்?" என, தேவகுருவானவர், "கண்ணைமூடினது மெய்யே ஆயினும், சிசு உற்பத்தி அப்பொழுதன்று, மூடித் திறந்த மாத்திரத்தி லாகையால் உமது குமாரத்திக்கு வைதவியம் வருவதற்குக் காரணமில்லை" என்று தெளிய உரைத்துத் தமது நிஜஸ்வரூபத்தையுங் காட்டிப் பின்பு அந்தர்த்தானமாய் விட்டார்" என்று சொன்னார்கள், அதுகேட்டு வாணமுதலியார் "அப்படியா! அன்றெழுதினவன் இனி அழித்தெழுதப் போகிறதில்லையே, வருகிறது வரட்டும்" என்று நினைத்திருந்தார்.

சிலநாளில் அவர்கள் தெரிவித்தபடியே ஜாதகனுடைய தாய் காலஞ்சென்று போனாள். அதை யறிந்தவுடனே வாணமுதலியார் தமக்கு மரணஞ் சமீபித்திருப்பதையும், பிற்காலம் குழந்தைக்கு ஆதரவில்லாததையும் நிச்சயித் துணர்ந்து, தம்மிடத்தில் நெடுநாளாய்ப் பண்ணையாளாக விருந்து, அகமும் புறமும் ஒத்து நடந்த உண்மையுள்ள உத்தமனாகிய ஏகன்சாம்பா னிடத்தில் அந்தக் குழந்தையையும் சொத்துக்களையும் ஒப்பித்து, அவன் முகத்தைப் பார்த்துக் கொல்லையிற் பூமிக்குள் அளவிறந்த திரவியம் புதைத்து வைத்திருக்கிறேன், அதையும் நீயே கைக்கொண்டு இப்பிள்ளையையும் உன் பிள்ளையாக வளர்த்துக்கொள்" என்று சொல்லிவிட்டுத் தேகவியோகமானார்.

அப்பண்ணைக்காரன் தனது ஆண்டை சொற்படியே அவருக்குச் செய்யவேண்டிய உற்றுரிமை முதலிய கிரியைகளையெல்லாம் அக்குழந்தையைக் கொண்டு குறைவில்லாமல் நடப்பித்து, வேளாளர்குலத்தில் நல்ல சம்பிரதாயஸ்தராகிய ஒருவரைக்கொண்டு அப்பிள்ளைக்கு வேண்டிய உணவு முதலியவைகளை ஊட்டி வளர்ப்பித்து, ஐந்துவயதிற் பிரபல வித்துவானாகிய கம்பரிடத்தில் விடுத்துக் கல்வி பயிற்றுவித்து, அவன் பூரணபாண்டித்திய முடையவனான காலத்தில், அப்பிள்ளையின் மரபில் தகுதியான பெண்ணைத் தேடி

விவாகமுஞ் செய்வித்து, தன் னெசமானனுடைய சொத்துக்களில் அரைக்காசளவுந் தான் இச்சியாமல் முழுமையும் யசமானன் பிள்ளைக்கு ஒப்பித்து புதையலிருக்கும் இடத்தையுங் காண்பித்து, "இதையும் நீயே யனுபவித்துக்கொள், எனக்கு ஒன்றும் வேண்டுவதில்லை" என்றான்.

அப்பிள்ளை பண்ணையாள் காட்டிய இடத்திலுள்ளதிலேகூத பதனத்தை வெட்டியெடுக்கப்போன சமயத்தில் அதைப் பூதங்காத்திருந்ததனால், வெட்டினவன் மூக்கிலும் வாயிலும் உதிரம் பெருக அவன் கீழேவிழுந்து மூர்ச்சையடைந்தான். மேலுங் கருங்குளவி செங்குளவிகள் புறப்பட்டு அருகிலே ஒருவரையும் அணுகவொட்டாமல் துரத்தத் தலைப்பட்டன. அதனால் "இதற்கென்ன செய்வது?" என்று மனமுருகியிருக்கையில், இன்றிராத்திரி பிள்ளையின் சொப்பனத்தில் அப்பூதம் வந்து "நான் அநேககாலமாகக் கண்ணை இமைகாப்பதுபோல இடைவிடாது பாதுகாத்திருந்த ஏழுகோடி திரவியத்தை எளிதாக நீ கைப்பற்றிக் கொள்வதெப்படி? எனக்குத் திருப்தியுண்டாகத் தயை உண்மை பக்தி முதலிய நற்குணங்களையுடைய ஒரு புருஷனைப் பலிகொடுத்தால் இந்தத் திரவியத்தைக் கொடுப்பதுமன்றி 'நானும் உனக்குக் கைவசமாகி உன் தொண்டுபோல எப்பொழுதும் நீ காலாலிட்ட வேலையைக் கையாற் செய்து வருகிறேன்" என்றது. அவன் விழித்துக்கொண்டு ஏகன் சாம்பானை யழைத்துத் தான் கண்ட கனவை அவனுக்கு அறிவிக்க, சாம்பன் "அந்தப் பூதத்திற்கு ஒரு நரபலி கொடுத்தால் ஏழுகோடி திரவியம் அகப்படுமென்பதற்குச் சந்தேகமில்லை, அதைக்குறித்து அவசியம் முயற்சி செய்யத்தான வேண்டும்" என, துஅது கேட்டுப் பிள்ளையாண்டான் "யாரைப் பலிகொடுக்கிறது?" என்று யோசிக்குமிடத்திற் பண்ணையாள், "யோசனையென்ன? தடையில்லாமல் என்னைப் பலிகொடுக்கிறதுதானே" என்றான். அப்பிள்ளை "சிவ! சிவ!! பெற்ற தகப்பனைப் பார்க்கிலும் என்னிடத்தில் அதிக பிரீதியுள்ளவனாகி, என்னை வளர்த்து எனக்குச் சகல யோக்கியதையு முண்டா

கும்படி மிகவும் பாடுபட்ட உன்னையா பலிகொடுக்கிறது? இது நன்றாயிருக்கிறது! எனக்கிப்பொழுது உள்ள திரவியமே போதும்; நானந்தச் சோலிக்கே போகிறதில்லை" என்றான். ஏகன் இம்மொழிதன்னை! எத்தனைநாளிருந்தாலும் ஒருநாளிறக்கத்தானே வேண்டும், எப்படிப்பட்டவர்களுஞ் சாகாதிருக்கமாட்டார்களோ? மண்ணிலே முளைத்த பூண்டு மண்ணுக்கே இரையாமல்லவா? நானிருந்து ஆரை ரக்ஷிக்கப்போகிறேன்? இறந்தேனானால் யசமானுக்கு ஏழுகோடி நிதி கிடைக்கிறதே' என்று நினைத்து, அன்றிராத்திரி ஒருவருக்குந் தெரியாமற் புதையலிருக்கிற இடத்திற் போய்க் கழுத்தை அறுத்துக்கொண்டு பூதத்திற்குப் பலியானான்.

அந்தக்ஷணமே பூதம் வாணமுதலியார் பிள்ளையின் சொப்பனத்திற் போய் "உங்கள் பண்ணைக்காரன் எனக்கு இப்பொழுது பலியாய் விட்டான். இனி நீ வந்து உங்கள் பிதா புதைத்துவைத்த ஏழுகோடி திரவியத்தையும் கைப்பற்றிக்கொள், நானுமுனக்குச் சொன்னசொல் தவறாமல் இன்றுமுதல் தொண்டுசெய்கிறேன்" என்றது. அவன் விழித்தெழுந்திருந்து அந்த இரவில் திரவியம் புதைக்கப்பட்ட இடத்திற் போய், ஏகன்சாம்பான் கழுத்தறுபட்டுக்கிடக்கிற அலங்கோலத்தைக் கண்ணிறாற் பார்த்து மனம் பதைக்க, அவனுக்காகக் கண்ணீர் விட்டழுது மெய்சோர்ந்து, பின்பு அவனைச் சிறப்பாக எடுத்துத் தகனம் பண்ணிச் சஞ்சயனம் அந்தியகர்ம முதலானவைகளும் தன்கையினாலேயே செய்து முடித்து, அவன் செய்த நன்றியை மறவாதிருப்பதற்காக அவன் பெயரை முதலிலும், கம்பர் தனக்காசிரியராகையால் அவர் பெயரை இடையிலும், வாணன் தன்னைப் பெற்றவனாதலால் அவன் பெயரைக் கடையிலுஞ் சேர்த்து அம்மூன்றும் ஒருமிக்கத் தனக்கொரு பெயராகவழங்கவேண்டுமென்று * 'ஏககம்பவாணன்' எனத் தான் பெயரிட்டுக்கொண்டு, அந்தப் புதையலை வெட்டியெடுத்துத் தன் வீட்டிற் சேர்ப்பித்துத் தன் தந்தையினும் அதிக தனிகனுமாய் சகல

* பின்பு அப்பெயர் ஏகம்பவாணனென மருவிற்று.

ராஜாக்களும் மதிக்கத்தக்க மகாப்பிரபுவாயும் கீர்த்திபெற் றிருக்குங்காலத்தில், சேர சோழ பாண்டியர் மூவரும் ஒரு தினம்ஏகம்பவாணமுதலியாரைக்காணவேண்டுமென்று அவர் வீட்டுக்கு வந்து "முதலியார் எங்கே?" என்று உள்ளே ஆளனுப்பிவிசாரிக்க, அவர் மனைவி "கழனிக்குப்போயிருக்கிறார்" என்று உத்தரஞ்சொல்ல, இவர்கள் அது கேட்டு முதலியார் "முடிநடப் போயிருக்கிறாரோ?" என்று அவர் குலத்தொழிலைக் குறிப்பித்து ஏளனமாகச் சொல்லுவது கண்டு, அவர் மனைவிக்கு அது சகியாமையால், அவள் "நமது முதலியார் முடிநடுவது மெய்தான், ஆயினும் அவர் இந்தச் சொற்பமாகிய நாற்றுமுடியா நடுவார்? சேர சோழ பாண்டியர்களாகிய மூவேந்தருடைய முடிகளைப் பறித்தெடுத்து, அவர்கள் சேனைகளைக் கண்ட துண்டமாக்கி, யுத்தகளமாகிய கழனியில் அவற்றை யெருவாக இட்டு, அது நிறையச் சிவந்த ரத்தமாகிய நீரைத்தேக்கி தாம் ஏறும் பட்டவர்த்தன யானையாகிய பகட்டை விடுத்து அதன் காலால் மிதிப்பித்துக் குழைசேறுக்கி, அச்சேற்றில் வரிசையாக நட்டு, வெற்றியாகிய வேளாண்மைசெய்து வருகிறார்" என்ற கருத்துக்கேற்க,

> "சேனை தழையாக்கிச் செங்குருதி நீர்தேக்கி
> ஆனை மிதித்த வடிச்சேற்றில்—மானபிரான்
> மாவேந்த னேகம்ப வாணன் பறித்துநட்டான்
> மூவேந்தர் தங்கண் முடி"

என்றொரு பாடலை எழுதிப் போக்கினாள். அப்பாடலை அவர்கள் படித்துப் பார்த்து, "அடா! இவன் இப்படிப்பட்ட ரணசூரனென்று நாமறியாமற் போனோமே; நல்லதாகட்டும்" என்று இறுமாப்புடனே போய்விட்டார்கள்.

அவர்கள் போனமாத்திரத்தில் முதலியார் வீட்டுக்கு வந்து மேற்படி செய்தியைக் கேள்விப்பட்டு இவர்கள் கர்வத்தை அடக்கவேண்டுமென்று தம்மிடத்திலுள்ள பூதத்தை அனுப்பி "முன்னே சேரனைத் தூக்கிவா!" என்றார். அது சேரன் படுத்து நித்திரை பண்ணும்பொழுது கட்டிலோடே தூக்கிவந்து எதிரேவிட்டது; அவனைச் சிலநாள் வரையிற் சிறைக்கூடத்தில் அடைத்து வைக்க, அவன் "நம்முடைய

வாய்க்கொழுப்பாலல்லவா இப்படி வந்து விடிந்தது" என்று மனஸ்தாபப்பட்டு, முதலியாருக்கு வருஷந்தோறும் இவ்வளவு திரவியம் பகுதி கட்டுகிறேனென்று ஒரு தொகை குறித்து உடன்படிக்கை செய்து, இதமாக அவரிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு தன் தேசத்திற்போய்ச் சேர்ந்தான். அவன் போனபிறகு சோழனிடத்திற்குப் பூதத்தை யேவிப் பிடித்துவரச் செய்து, அவனையும் அவ்வாறு உடம்படிக்கை பண்ணச்சொல்லிச் சிறை நிவர்த்தியாக்கி அனுப்பிவிட்டு, கடைசியிற் "பாண்டியனைக் கொண்டுவா!" என்று பூதத்திற்கு உத்தரவு பண்ணினார். "பாண்டியன் பேய்க்கு விரோதமாகிய வேப்பமாலை தரிப்பவனாதலால், அவனிடத்தில் அது போகப் பயந்து பின்னிடுவதைக் கண்டு, கம்பர் வீட்டுக்குப்போய் இச்செய்தியை அவரிடத்திற் சொல்லி, "இதற்கென்ன உபாயஞ் செய்யலாம்?" என்ன, கம்பர் "பிடியானையைக்கொண்டு களிற்றியானையை வசப்படுத்துவதுபோல, ஸ்திரீகளைக்கொண்டு அவனை மயக்கி அந்த வேப்பமாலையைக் கிரகித்து வரும்படிசெய்தால், அப்பால் உமது எண்ணஞ் சித்திக்கும்" என்று தமது வீட்டில் வேலை செய்கின்ற வெள்ளாட்டிகளில் நாலு பெயரை அழைத்து "நீங்கள் முதலியார் சொன்னவண்ணஞ் செய்யுங்கள்" என்று ஏவினார். ஏகம்பவாணமுதலியார் அந்நால்வர்க்கும் விலையுயர்ந்த வஸ்திரம் ஆபரணம் புஷ்பம் பரிமளதிரவிய முதலியவைகளைக் கொண்டு நன்றாக அலங்காரம் பண்ணுவித்து "நீங்கள் பாண்டியனிடத்திற்சென்று அவனுக்கு உங்கள் சாமர்த்தியத்தைக் காட்டி, நான் கொண்ட கருத்து முற்றும்படி எவ்விதத்திலாவது என் மூக்கை முன்னுக்குக் கொண்டுவரவேண்டும்" என்று அனுப்பினார். அவர்கள் நாலுபெயரும் ரம்பை மேனகை ஊர்வசி திலோத்தமை என்னும் நால்வரைப் போலப் பாண்டியன் சமுகத்திற்குப்போய் மயிலாடுவதுபோல நடமாடியும், குயில் கூவுவதுபோல இசைபாடியும், அவனைப் பிரமிக்கப் பண்ணினார்கள்.

மீனத்துவசனாகிய பாண்டியன் ஆனந்த பரவசமாய் அவர்களுக்கு முத்துமாலை மோகனமாலை முதலாகிய அநேக

பூஷணங்கள் வெகுமானஞ் செய்தான்; அவர்கள் அரசனை நோக்கி "ஓ மகாப்பிரபு! நீ ரெங்களுக்குப் பரிசுகொடுக்கும் பொழுது எங்களைக்கேட்டு எங்கள் அபீஷ்டப்படியல்லவோ செய்யவேண்டும்? அப்படிச் செய்யவில்லையே" என்றார்கள். பாண்டியன் அவர்கள் கருத்தை அறியாமையால் "நீங்கள் சொல்லுவது சரிதான், உங்களிஷ்டப்படியே செய்கிறேன், சொல்லுங்கள்" என்றான், இவர்களில் ஒருத்தி "மகாராஜனே! என் பெண் நீர் கொடுத்த முத்துமாலை மோகனமாலை மேல் ஆசைகொண்டவ ளல்லள், உமது தோளிலணிகின்ற வேப்பமாலை மேல்தான் ஆசைகொண் டிருக்கிறாள், ஆகையால் அதை அவளுக்குக் கொடுக்கவேண்டும்" என்று குறிப்பித்து,

"மாப்பைந்தார்க் கல்லமுத்து வன்னத்தார்க் கல்லவென்பெண்
வேப்பந்தார்க் காசைகொண்டு விட்டாளே—பூப்பைந்தார்
சேர்ந்திருக்கு நெல்வேலிச் சிவிலிமா றாதமிழை
ஆய்ந்திருக்கும் வீரமாறா"

என ஒரு கவி பாடினாள். அவன் அதுகேட்டு 'வேப்பமாலை யை எப்படிக் கொடுத்துவிடுகிறது?' என்று நினைத்து ஒன்றும் அவட்கு உத்தரஞ் சொல்லாம லிருந்தான். மற்றொருத்தி அந்தக் கருத்தைக்கொண்டே,

"தென்னவா மீனவா சிவிலிமா றாதுரை
மன்னவா பாண்டி வளநாடா—முன்னம்
சுரும்புக்குத் தாரளித்த தூய்யதமிழ் நாடா
கரும்புக்கு வேம்பிலே கண்"

என் றொருபாடலைப் பாடினாள். அதற்கும் மறுமொழி சொல்லவில்லை. பின்னொருத்தி அந்த நோக்கத்தினாலேயே,

"வேம்பா கிலுமினிய சொல்லுக்கு நீமிலைந்த
வேம்பா கிலுமுதவ வேண்டாவோ—மீன்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாண் மான்"

என்றொரு பாட்டைச் சொன்னாள். அதற்கும் வாய்திறவாமல் மௌனமா யிருந்தான். அதன் பிறகொருத்தி அப்பெண்கள் மூவரையும் பார்த்துக் "கேளுங்கள்! சகோதரிகளே! பாண்டியமகாராஜா இந்தச் சொற்பமாகிய வேப்பமாலையைக்

கொடுக்கமாட்டார் என்று நினைக்கவேண்டாம், இவராலே வஞ்சனையில்லை, ஆற்றூரில் அரசு செலுத்துகின்ற ஏகம்பவாண முதலியாரிடத்திலுள்ள பூதம்வந்து தம்மைப் பிடிக்குமென்னும் அச்சத்தினாலேதான் கொடாமலிருக்கின்றார், இதை அறியாமல் நீங்கள் ஏன் வீணாயிவரை அலட்டுகிறீர்கள்? இவர்மேல் தோஷஞ்சொல்லுகிறது சரியன்று" என்று அவன் மனதிற்குத் தக்கதாக,

"இலகு புகழாறை யேகம்ப வாணன்
அலகை வரும்வருமென் றஞ்சி—உலகறிய
வானவர்கோன் சென்னிமேல் வண்கை வளையெறிந்த
மீனவர்கோ னல்கிடான் வேம்பு"

என்ற பாடலைச் சொன்னாள்.

அதுகேட்டு, அவன் "நம்மை இவள் கேலி செய்கிறாள்" என்று வெட்கப்பட்டு "இனி எது சம்பவித்தாலுஞ் சம்பவிக்கட்டும், மானம் போனபிறகு பிராணனிருந்து பிரயோசனமென்ன? உலோபியென்று மாத்திரம் பெயரெடுக்கலாகாது; கர்ணராஜன் அவன் தேடிய புண்ணியத்தையுமல்லவோ தானம் பண்ணினான்" என்று நினைத்து, அந்த நொடியில் தான் தரித்திருந்த வேப்பமாலையைக் கழற்றிக் கொடுத்துவிட்டான். அவர்கள் அவனுயிரைக் கொண்டுபோவதுபோல் வாங்கிப்போய் முதலியாரிடத்திற் கொடுத்தார்கள். அவர் அதைப் பெட்டியிற் பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு அந்தப் பெண்களுக்கு உசிதமான வெகுமதி செய்தனுப்பிவிட்டு பூதத்தை அழைத்து "வேப்பமாலையைத்தொட்டல்லவோ பாண்டியனைத் தீண்டக்கூடாதென் றிருந்தாய், இப்பொழுது அவன் சிகை என் கையிற் சிக்கிக்கொண்டது, இனி நீ பயமில்லாமற்போய் அவனைப் பிடித்தபிடியிற் கொண்டுவா" என்றார். இவர் சொன்னது சொல்லாததற்கு முன்னே அது சங்கையின்றிச் சென்று தூக்கிவந்துவிட்டது. ஏகம்பவாண முதலியார் காலுக்குங் கைக்கும் விலங்கிட்டுப் பாண்டியராஜனை அருஞ்சிறையில் வைத்தார். அவன் முதலியாருக்கு ஏதேதோ பிரிய வசனங்களைச் சொல்லியும் பிரமாணிக்கங்கள் பண்ணியும் அவர் தன்னை விடாமையால், அவன் தன் மனையாளுக்குச் செய்தி அனுப்பி, "அந்தச் சிறை விடுவிக்

கும்படி ஏகம்பவாணை முதலியாரை நீயாவது இரந்து கேட்க வேண்டும்" என்ன, அவள் ஏகம்பவாணனுடைய ஔதாரியத்தைச் சிறப்பிக்கத் தொடங்கி அதன் வழியாய் அவன் பராக்கிரமத்தைக் குறிப்பித்து,

"என்சிவிகை யென்சிவிகை யென்கவச மென்றுவசம்
என்கரியீ தென்பரியீ தென்பரே—மன்கவன
மாவேந்த னேகம்ப வாணன் பரிசுபெறும்
பாவேந்த ரைவேந்தர் பார்த்து"

என்றொரு பாட்டுப்பாடி யனுப்பினாள். அதை யவர் படித்துப்பார்த்து அதில் 'மிக்க வேகத்தையுடைய பரிமாவை நடாத்துகின்ற நகுலராஜனையொத்த ஏகம்பவாண முதலியாரைப் பாடி அவரிடத்தில் யானை குதிரை குடை கொடி முதலாகிய பலவகைப்பட்ட பரிசுபெற்று வருகின்ற கவிஜனர்களை அதற்கு முன்பு அம்முதலியாருடனே யெதிர்த்துத் தோற்றுத் தத்தம் விருதுமுதலானவைகளை இழந்த அரசர்கள் பார்த்து, இந்தப் புலவர் பிடித்துக்கொண்டு போகின்ற குடை நான் பிடித்திருந்தது, அவரேறிய தண்டிகை நானேறியது, இவர் தரித்த கவசம் நான் தரித்தது, இவரேந்திய துஜம் நான் கைக்கொண்டிருந்தது; இவர் ஊர்ந்துவரும் யானை என்னுடைய யானை, இவர் ஆரோகணித்த புரவி என்னுடைய புரவி என்று சொல்லி அனுதபிப்பார்கள்' என்னும் பொருள் தோன்றக்கண்டு அதிசயித்துச் சீற்றமாறிச் சந்தோஷத்துடனே பாண்டியனை உடன்படிக்கை செய்யச்சொல்லிச் சிறை விடுவித்து, அன்றுதொட்டு அவ்வுடன்படிக்கையின்படி அவனும் மற்றை அரசர்களும் தமக்குப் பிரதிவருஷமுந் தவறாமற் பகுதி கட்டிவந்தனர்.

ஒரு புலவன் கவிபாடிப் பரிசுபெற்று வருகையில் அவனை இசைப்புலவனொருவன் கண்டு அரசனென்று ஐயுற்று, "தேர் யானை புரவி முதலிய சதுரங்கக் கூட்டங்களைத் திறைப் பொருளாகப் பெற்றுவருகின்ற வேந்தர் சிகாமணியே! உனது தேசம் யாது? உனது நாமம் யாது? தெரியச் சொல்லவேண்டும்" என்று வினவ, அப்புலவன் இவனை நோக்கி, "வீணையைக் கையிற்கொண்டு வாசிக்கின்ற பாணரே யாரும் வாரும், இந்தச் செய்தியைக் கேளும், நானரசனல்

லேன்; நீரும் நானும் கல்வியால் ஒத்தகுலத்தினரே, மகத நாட்டிற்குத் தலைவனும், தென்னாற்றாரைப் பரிபாலிப்பவனு மாகிய ஏகம்பவாணபூபதி மனமகிழ்ச்சி கூர்ந்து கொடுத்த அனேக வரிசைகள் பெற்று வருகின்ற புலவன்தான்; நீரும் இப்படிப்பட்ட பரிசு பெற்றுவரலாம், அவரிடத்திற் சீக்கிர மாகப்போம்; அப்பிரபு வசிக்கும் சந்திரகாந்தக்கற்படுத்த முற்றங்களிலும் முத்துப்பதித்த சிகரங்களையுடைய மாட மாளிகை கூடகோபுரங்களி னிடத்திலும் ஆத்திமர மிருக் கின்றது; உயர்ந்த வேப்பமர மிருக்கின்றது; வளர்ந்த பனை மரமிருக்கின்றது; அதனருகில் அரசமர மிருக்கின்றது; அரசமரத்தைச் சுமந்த சில அத்திமர மிருக்கின்றன; இவை தாம் அந்த ஸ்தானத்தை அறியத்தக்க அடையாளங்கள்" என ஒரு ஆற்றுப்படையாகப் பொருளமைத்து,

"தேரு லாப்புரவி வார ணத்தொகுதி
திறைகொ ணர்ந்துவரு மன்னரின்
தேச மேறுனது நாம மேதுபுகல்
செங்கை யாழ்தடவு பாணரே
வாரு மொத்தகுடி நீரு நானுமக
தேசதென் றுறைநகர் காவலன்
வாண பூபதிம கிழ்ந்த ளித்தவெகு
வரிசை பெற்றுவரு புலவன்யான்
நீரு மிப்பரிசு பெற்று மீண்டுவர
லாகு மேகுமவன் முன்றில்வாய்
நித்தி லச்சிகர மாட மாளிகை
நெருங்கு கோபுர மருங்கெலாம்
* ஆரு நிற்குமுயர் † வேம்பு நிற்கும்வளர்
‡ பனையு நிற்குமத னருகிலே
|| அரசு நிற்கு § மர சைச்சு மந்தசில
வத்தி நிற்குமடை யாளமே."

என்பது முதலாகப் பற்பல புலவர்கள் உசிதமான பாடல் கள் பாடிப் பாமாலை சூட்டவும் அவரதிக பிரபலமாக வாழ்ந் திருந்தார்.

ஏகம்பவாணன் சரித்திரம் முற்றிற்று.

* ஆர் - ஆத்திமாலை புனைந்தசோழன். † வேம்பு - வேப்பமாலை யணிந்த பாண்டியன். ‡ பனை - பனைமாலைபூண்ட சேரன். || அரசு - மற்ற ராஜாக்கள். § அரசைச் சுமந்த அத்தி - ராஜாக்களைத் தாங்கிய யானைகள்.

## அநுபந்தம் I.

விநோதரசமஞ்சரியின்

# விஷய அகராதி.



# அநுபந்தம் II.

---

## விநோதரசமஞ்சரியில்
## மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கும் செய்யுட்களின்
# முதற்குறிப்பகராதி.